# ஒரு குடும்பம் சிதைகிறது

(கன்னட நாவல்)

எஸ். எல். பைரப்பா

தமிழாக்கம் :

எச். வி. சுப்ரமணியம்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

புது டில்லி

# முன்னுரை

ஆழ்ந்து, ஆராய்ந்து கூறுவதாயிருந்தால், கன்னட நெடுங்கதை (நாவல்) உலகப் பாரம்பரியத்தின் வித்து இந்த நூற்றாண்டின் துவக்கத்தில் அமைந்துவிட்டதென்று கூறலாம். அந்த வித்திலிருந்து வளர்ந்து, செழித்தோங்கிய கிளையாக இன்று நம்மிடையே இருப்பவர் திரு. களகநாதர் ஒருவர்தான். இதிகாச கால விஷயங்களை, தற்போதைய மாறுபட்ட காலப்போக்குக்கு ஏற்றவாறு அவர் எடுத்துரைக்கிறார். கன்னட நெடுங்கதை உலகின் திறனாய்வுக் கூடத்துக்கு அடிக்கல் நாட்டியவர் அவர். கன்னட நெடுங்கதைகளைப் படித்துச் சுவை கண்ட பல்வேறு மொழிகளிலுள்ள வாசகர்வட்டத்திற்கு நம்பிக்கையூட்டும் ஒளிக் கதிராக விளங்குபவர் அவர். அவரது நடையைப் பின்பற்றி முற்போக்குப் பாணி, புதிய நடை, அழகு நடை எனப் பல்வேறு பாணிகள் கன்னடக் கதையுலகில் கிளைத்து நிற்கின்றன. ஆயினும் இரு முக்கிய விஷயங்களை நாம் கவனிக்க வேண்டும். முதலாவதாக, புதிய இலக்கியம் படைப்போரைத் தவிர ஏனையோர் மரபை ஒத்த பாணியில் தம் கருத்துக்களை வெளிப்படுத்தியே மன நிறைவு பெற்றனர். இரண்டாவதாக, மேற் கூறியவருடன் ஒன்று படாமல் தனித்து ஒதுங்கி நின்ற நெடுங்கதையாசிரியர்கள் உயர்ந்தவர்களாகத் தோன்றினர். திரு. பைரப்பா அவர்களின் நெடுங்கதைகளைப் பற்றிக் கூறும்போது இது மேலும் முக்கியத்துவம் பெறுகிறது. நம் மாபெரும் நெடுங்கதையாசிரியர்களான திரு. கோடா சிவராம் காரந்த் அவர்களும், டாக்டர் எஸ். எல். பைரப்பா அவர்களும் எப்பொழுதுமே ஏனைய எழுத்தாளர் கூட்டத்தினின்றும் விலகி நின்று, வாழ்க்கையினைக் கதைக் கண்ணோட்டத்துடன் நோக்கி, கதை படைக்கும் பணியில் முனைந்து ஈடுபட்டுள்ளனர்.

புதிய பாணி, உத்தி, கருத்து, லட்சியம் ஆகியவைகளுக்குக் கட்டுப்பட்டுத் தம் கற்பனைத் திறனைப் பலி கொடுக்கும் எழுத்தாளர்கள் இருந்தபோதிலும், வாழ்க்கையை அலசி, ஆராய்ந்து எழுதும் எழுத்தாளர்களும் இருக்கத்தான் செய்கின்றனர். நமது பெரும் நெடுங்கதையாசிரியர்களில் ஒருவராய் விளங்கும் திரு. ஸ்ரீரங்கா அவர்கள் கன்னட மொழியில் முதல் உளவியல் நெடுங்கதையை அளித்திருக்கிறார். திரு. தேவுடு அவர்கள் தம்

அனுபவங்களுக்கு ஊன், இரத்தம் ஆகியவற்றால் உருக்கொடுத்து, உயிரூட்டிப் பாத்திரங்களைப் படைப்பதில் வல்லவராய்த் திகழ்கின்றார். திரு. சதுரங்கா அவர்கள் தன் 'சர்வ மங்களா' நெடுங்கதை வாயிலாக வாழ்க்கையின் துன்பக் காட்சியைச் சிறப்பாக சித்திரிக்கிறார். இவை அனைத்திற்கும் சிகரம் வைத்தாற்போல் திரு. குவெம்பு அவர்கள் 'கானூரு சுப்பம்ம ஹெக்கடதி' 'மலெகளல்லி மதுமகளு' ஆகியவைகளின் மூலம் நெடுங்கதைகளில் ஒரு புதிய சாதனை புரிந்திருக்கிறார்.

திரு. ராவ்பகதூர் அவர்கள் தம் 'கிராமாயணம்' வாயிலாக ஒரு கிராமத்தை உயிர்த் துடிப்புள்ள படைப்பாக மாற்றி, ஒரு தனி மனிதனுக்கு உள்ளத்தை உருக்கும் சோக முடிவை அளித்து, நம்மை நெகிழச் செய்து விட்டார். ஆனால், ஒரு மறைபொருளான விஷயம் என்னவெனில், எழுத்தாளர்கள் அனைவருமே வாழ்க்கையினைக் கதைக் கண்ணோட்டத்துடன் நோக்குவதில்லை. மேலும், அவர்களுடைய எண்ணத்தை உணர்ந்து கொள்ள கதை ஒரு கருவியாக அமைவதில்லை. இவர்களில் பெரும்பாலோர் இலக்கியத்தின் வேறு துறைகளில் தம் திறனை வெளிப்படுத்தி உள்ளனர். அண்மைக் காலத்தில் கன்னட மொழியில் பெரிதும் விவாதத்துக்குரியதாக இருந்த டாக்டர் சங்கர் மொகாசி புணேகர் அவர்களுடைய 'கங்கவ்வா கங்காமாயி' (அவர் புனைந்துள்ள ஒரே நூல் இது), மற்றும் டாக்டர் யூ. ஆர். அனந்தமூர்த்தி அவர்களின் 'சம்ஸ்காரா' ஆகியவை இதைப் போன்ற வேறு துறைத் திருப்பத்தின் விளைவே ஆகும். கன்னட நெடுங்கதை உலகின் இந்தப் பின்னணியில், திரு. பைரப்பா அவர்களின் சாதனையை ஆராயும்போது தன் இலட்சியங்களுக்கும், அனுபவங்களுக்கும் எண்ணங்களுக்கும் நெடுங்கதை ஒன்றையே சிறந்த கருவியாகப் பயன்படுத்திக்கொண்டு சமூகத்தின் அனைத்து மட்டத்திலுள்ள மக்களின் மனதையும் தம் கருத்து தொடுமாறு செய்வதில் திரு. காரந்த் அவர்களுக்குப் பிறகு இவர் ஒருவரே வல்லவராய்த் திகழ்கிறார்.

அண்மைக் காலத்தில் கன்னட மொழியில் நெடுங்கதைகள் பெருமளவு வெளிவந்த போதிலும் திரு. பைரப்பாவைப் போன்ற சமூகத்தின் எல்லா மட்டத்தினரையும் தொடக் கூடிய, தொட்டு உணரச் செய்யக்கூடிய மற்றொரு நெடுங்கதையாசிரியர் நம்மிடையே இல்லை. முன்னேற்ற மடைந்து வரும் நமது பாரத நாட்டின் எல்லாப் பிரச்சினைகளையும் படம் பிடிக்கக்கூடிய திறன் நெடுங்கதைத் துறைக்கு மட்டுமே இருப்பதால், அதைப் புனையும் எழுத்தாளனின் பொறுப்பு அதிகரித்துக் கொண்டே செல்கிறது.

திரு. பைரப்பா அவர்கள் உயிர்த்துடிப்புள்ள படைப்பாற்றல் பெற்றுள்ளவராதலால், பழமையிலிருந்து விலகி புதுமையை ஏற்றுக்கொள்ளும்போது விளையும் சிக்கல்கள், மனப் போராட்டம், மனக்குழப்பம் ஆகியவையே அவருடைய கதைகளின் கருவாக அமைந்துள்ளன. **'தர்மஸ்ரீ'** அன்புப் பிணைப்புக்குக் கட்டுப்பட்டு, கிறித்தவனாக மதமாற்றமடையும் ஒரு இளைஞனின் மனப் போராட்டத்தை விவரிக்கிறது. இந்து இளைஞன் ஒருவன் மத மாற்றத்தின்பால் அவன் கொண்டுள்ள உறுதியான கொள்கைகளுக்கு இரையாவதையும், பின்னர் கொள்கையில் தளர்ச்சி அடைவதையும் இக்கதை வரவேற்கத்தக்க, நல்ல விஷயமாக சித்திரித்த போதிலும் இதன் நோக்கம் மத மாற்றம் அன்று.

**'தூர சரீதரு'** அறிவு மட்டத்தின் ஏற்றத்தாழ்வால் விளையும் நிலையை விளக்க முயன்றாலும், இது கருத்தளவிலேயே இருந்து விடுகிறது. நெடுங்கதையின் பெரும் பகுதி இரண்டு பாத்திரங்களின் சர்ச்சையாக அமைந்து விட்டது. ஆனால் இந்தச் சர்ச்சை பாத்திரங்களுக்கு உயிரூட்டுவதாக இல்லை.

**'வம்சவிருட்சா'** திரு. பைரப்பா அவர்களின் சிறப்பான படைப்பு. சமூகத்தில் மாற்றம் ஏற்படும் காலகட்டத்தில் தோன்றக்கூடிய எல்லா பிரச்னைகளையும் படம் பிடிப்பதைப்போன்று அமைந்துள்ள இந்த நெடுங்கதை, காத்யாயினியின் சோக முடிவை விளக்குவதில் பெரும் வெற்றி பெற்றுள்ளது. சாத்விகத்தின் உருவாய் அமைந்துள்ள ஸ்ரோத்ரி அவர்கள் நெடுங்கதையை முழுக்க ஆட்கொண்டாலும், நவீன முற்போக்கு நங்கையாய் விளங்கும் காத்யாயினி, விதவையாகிவிட்டபோதிலும், மறுமணம் புரிந்து அவருக்கு இணையாக விளங்குகிறாள். சனாதன தர்மத்தையும், புதுமைப் போக்கையும், இவ்வளவு தெளிவாக சிந்தனைக்' குழப்பமின்றி எடுத்துரைக்கும் நெடுங்கதை இதுவரை கன்னட மொழியில் வெளி வந்ததில்லை. இவ்விரண்டு போக்குகளும் நம்பிக்கைக்குரியனவாகத் தோன்றும்படி பாத்திரங்களின் மூலம், அவர்களின் சோக முடிவின் மூலம் சித்திரித்துள்ள திரு. பைரப்பா அவர்கள் கன்னட மொழிக்கு உண்மையாகவே இந்த நாவல் மூலம் ஒரு பொருள் செறிந்த நூலை அளித்திருக்கிறார். (இந்த நூல் பொதுமக்களின் பாராட்டையும், குடியரசுத் தலைவரின் பரிசையும் பெற்ற திரைப்படமாக வெளிவந்து திரு. பைரப்பா அவர்களின் புகழ் அனைத்திந்திய அளவில் பரவுமாறு செய்தது என்பதை நாம் இங்கு நினைவு கூறலாம்).

**"ஜலபாத"** இல்லற வாழ்க்கையின் நெருக்கமான பிணைப்பை மிக அழகாக எடுத்துக் காட்டுகிறது. அளவுக்கு மீறிய விஞ்

ஞானக் கண்ணோட்டம் இல்லற வாழ்க்கையைக் கெடுத்து விடுவதில் வெற்றி பெறுகிறது. குழந்தை உருவாவதைத் தடுக்கும் கலைஞனின் செயற்கை முறைகள் அவனது கலை வளர்ச்சிக்குச் சாவு மணி அடிக்கின்றன. இந்த நூலில் இடம் பெற்றுள்ள கலைஞனும் அவனுக்கு இணையாக அமைந்துள்ள மருத்துவனும் பம்பாய்ப் பின்னணியில் உருப்பெறுகின்றனர். எனவே இந்த நூலில் உள்ள பந்த பாசத்தின் காரணமாக இது 'தூர சரிதரு' நூலைக் காட்டிலும் சிறப்படைகிறது.

மேற்கூறிய முதல் கட்ட நாவல்களைக் காட்டிலும் மாறுபட்டதாக அமைந்துள்ள படைப்பு "நாயி நெரளு". மறுபிறவியை மூலக்கருவாகக் கொண்ட இந்தப் படைப்பு கன்னட நாவல் உலகிற்குப் புதுமையானதாகும். இதன் ஆசிரியரே கூறியிருப்பது போல் இக்கதை ஒன்றுக்கொன்று முரண்பட்ட இரண்டு சிந்தனை உலகங்களில் நடைபெறுகிறது. 'நாயி நெரளு' நூலைப் படித்தபிறகு கதை நமது மனதில் படிந்திருக்கிறதேயொழிய, பாத்திரங்கள் நம் மனதில் நிற்பதில்லை. இந்த நூலில் இடம் பெற்றுள்ள 'ஜோகையா', "கிருக பங்கா" நாவலில் இடம் பெற்றுள்ள முக்கியப்பாத்திரமான மாதேவய்யாவை நமக்கு நினைவூட்டுகிறான். இப்படைப்பிலும் பழைய நம்பிக்கை, புதிய விஞ்ஞானக் கண்ணோட்டம் ஆகியவை கருப்பொருளாக அமைந்திருப்பது மட்டுமல்லாமல் இந்தக் கருப்பொருளே திரு. பைரப்பாவின் மற்ற நாவல்களோடு இந்த நூலையும் பிணைக்கிறது. இந்தக் கருப்பொருளே 'தப்பலியு நீனாதெ மகனே' நாவலில் பெரும் பிரச்சினையாக அமைந்துள்ளது. வெளித்தோற்றத்தில் பசுக்களைப் பற்றிய கதையாகத் தோற்றமளித்தாலும் நாவல் வளரும்பொழுது, நம் நாட்டு கிராமங்களின் வாழ்க்கை அமைப்பை எடுத்தாராய்கிறது. இடையர் இனத்தைச் சேர்ந்த ஒரு சிறுவன் வெளிநாடு சென்று திரும்பியவுடன், மூட நம்பிக்கைகளை எதிர்த்துப் போராடுகிறான். அவனுக்குத் துணையாக நிற்பவள் அவனது அமெரிக்க மனைவி. இறுதியில் மனைவி திரும்பவும் அமெரிக்காவுக்குச் செல்ல வேண்டுமா என்னும் பிரச்சினை எழும் வரை கதை வளர்கிறது. இவை எல்லாவற்றையும் விட முக்கியமாக, கால்நடைகளின் மேய்ச்சல் நிலத்தை வயல்களாக மாற்றி, உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்னும் அரசாங்க முடிவு, கிராம வாழ்க்கையில் ஏற்படுத்தும் விளைவு, புதியவற்றை ஏற்றுக் கொள்ள முடியாமலும், பழையவற்றைக் கைவிட முடியாமலும் தவிக்கும் காளிங்கன், சாத்வீகனாக இருப்பினும் புதியவற்றை ஏற்றுக்கொள்ள விரும்பும் வெங்கட்ராமன்-இவர்கள் அனைவருமே ஆற்றல் மிக்க பாத்திரங்

களாக உருவாக்கப்பட்டிருப்பதால் திரு. பைரப்பாவின் அடிப் படைப் பிரச்சினை (புதுமைக்கும் பழமைக்குமிடையே உள்ள போராட்டம்) நமது கிராமியச் சூழ்நிலையில் புதிய உருவத்தைப் பெறுகிறது. கிராம வாழ்க்கை பற்றிய திரு. பைரப்பாவின் நுட்பமான அறிவு இந்த நாவலில் வெளிப்படுகிறது.

திரு. பைரப்பாவின் நெடுங்கதைகளில் **'மத தான'** ஒரு திருப்பத்தைக் காட்டுகிறது. இந் நூலில் முதன் முறையாக அரசியல் விஷயம் கருப்பொருளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. மக்களின் நன்மதிப்பைப் பெற்ற மருத்துவன் ஒருவன் அரசியலில் பங்கு பெறுவதால் ஏற்படும் மோசமான விளைவை இதில் காண் கிறோம். குறிப்பாக, அறிவாளிகளின் சிந்தனைக்கும் அப்பாற்பட்ட கபட நாடகங்கள் இன்றைய அரசியலில் நடைபெறுகின்றன என்பதை **'மத தான'** மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. இதே கருப்பொருள் திரு. பைரப்பாவின் அண்மையில் புகழ் பெற்ற **'தாடு'** நெடுங்கதையில் விரிவாக இடம் பெற்றுள்ளது.

இதுவரை வெளிவந்துள்ள திரு. பைரப்பா அவர்களின் நெடுங்கதைகள் அனைத்துமே சாத்வீகத்தை ஒப்புக்கொள்ளக் கூடிய பாராட்டக்கூடிய முறையிலும், அல்லது பிரச்னைகளைக் கொள்கை அடிப்படையில் நோக்கக்கூடிய முறையிலும் அமைந் துள்ளன. ஆனால் ***'கிருக பங்கா'** இந்தப் போக்கிலிருந்து முற்றி லும் மாறுபட்டிருப்பது மட்டுமல்லாமல், இதுவரை நெடுங்கதை யாசிரியர்கள் ஏற்றுக்கொண்ட சில லட்சியங்களை அல்லது கொள்கைகளை எதிர்த்துச் சவால் விடுப்பதாகவும் உள்ளது. 1920-லிருந்து 1940-'45 வரை உள்ள கால கூட்டத்தில் இக் கதை திப்டூர், சென்னராயப்பட்டணம் தாலூகா அடங்கிய வட்டாரத்தில் நடைபெறுகிறது. 'கிருக பங்கா'வின் முதலாவது அத்தியாயமே கணக்குப்பிள்ளை ராமண்ணாவின் குடும்பக் காட்சி யுடன் துவங்குகிறது. கங்கம்மா ஒரு விதவை. அவள் சற்றும் பண்பாடற்றவள். அவளுடைய நாவிலிருந்து கிளம்பும் சொற் களே அக் குடும்பத்தின் அவல நிலைக்கு முக்கிய காரணமாக அமைகின்றன. அவளுடைய பிள்ளைகளான சென்னிகராயன், அப்பண்ணய்யா ஆகிய இருவரும் மாறுபட்ட இயல்புடையவர் கள். சென்னிகராயன் ஒரு முட்டாள். ஆனால் மிகுந்த தன் னலக்காரன். மனைவி, மக்களைப் பற்றிய சிந்தனை இல்லாதவன். மனைவியை அடக்கியாள விரும்பினாலும், அவன் ஒரு கோழை. அவனுடைய மனைவி நஞ்சம்மா அப்பண்ணய்யாவின மனைவியைப்

---

* இக்கதையின் கன்னட மூல நாவல் 'கிருக பங்கா'

போல் எதிர்த்து நடந்திருந்தால் அவனது நடத்தை மாறியிருக்குமோ என்று நாம் நினைக்குமளவு வடிகட்டிய முட்டாள். நஞ்சம்மா, கோபம் வாய்ந்த கண்டி ஜோசியருக்குப் பிறந்திருந்தாலும், மிக்க பொறுமைசாலி. இரண்டு குடும்பங்களின் கௌரவத்தையும் அவள் காப்பாற்றுகிறாள். ஆனால் அவளது வாழ்க்கையே சோகமயமானது. தாலி கட்டிய கணவன் எழுத்தறிவில்லாத ஓர் மட்டி. மாமியார் இதயமற்றவள். நஞ்சம்மா இந்நரகத்தைச் சொர்க்கமாக மாற்ற மிகவும் முயற்சி செய்கிறாள். ஆனால் அவளது போராட்டம் தோல்வியடைகிறது. திருமணமான மகள், புத்திசாலியான மகன் ஆகிய இருவரும் ஒரே நாளில் பிளேக் நோய்க்கு இரையாகிறார்கள். அவளது இந்தத் துன்பங்கள் அவளுடைய சாவில் முடிவடைகின்றன.

இந்தக் கால கட்டத்தின் மிகச் சிறப்பான நெடுங்கதையாக விளங்கும் **'வம்ச விருட்ச'** வில் இடம் பெறும் ஸ்ரோத்ரியையும், 'கிருக பங்கா' வில் இடம் பெறும் கண்டி ஜோசியரையும் ஒப்பிடலாம். கண்டி ஜோசியர் ஒரு வகையில் ஆண்டவனை எதிர்ப்பவர். ஏனென்றால் அவர் மந்திரம், ஏவல், பில்லி சூனியம் ஆகியவற்றில் கைதேர்ந்தவர். ஆனால் கண்டி ஜோசியர் இழிவானவர் அல்லர். ஆண்டவனை எதிர்ப்பவனாக இருந்தாலும், நல்ல இயல்புடைய மனிதனாக விளங்கும் ஒருவனை (கண்டி ஜோசியர்) திரு. பைரப்பா இந் நூலில் விவரிக்கின்றார். அதைப் போன்றே இக் கதையில் உள்ள மாதேவய்யா ஆசாரம் பார்க்கக்கூடிய, பழைய மத நம்பிக்கைகளில் திளைத்த மனிதர் அல்லர். தன் சாதிக்காரன் அல்லாத ஒரு சிறுவனுக்காகத் தன் வயது முதிர்ந்த காலத்திலும் பாடுபடுகிறார். அறிவாளிகள் உள்ள சாதி எனப் பெயர் பெற்ற பிராம்மண சாதியிலும் சென்னிகராயரைப் போன்ற முட்டாள்கள் உள்ளனர் என்பதை இந்தக் கதை எடுத்துரைக்கின்றது. இந்த நெடுங்கதையில் திரு. பைரப்பாவின் ஏனைய படைப்புகளில் உள்ளதைப் போல் பழமைக்கும், புதுமைக்குமிடையே கொள்கைப் போராட்டமில்லை. இதில் பாத்திரப் படைப்புகளே முக்கிய இடம் பெறுகின்றனர். இவ்வாறாக இந் நூலில் கதையின் நாயகனான விசுவனின் தாய் நஞ்சம்மா மாபெரும் வீரப் பெண்மணியாக விளங்குகிறாள். அடக்கம், கருணை ஆகிய இரண்டையும் பெற்றுள்ள இப் பாத்திரத்தின் மூலம் திரு. பைரப்பா அவர்கள் நம் கிராம வாழ்க்கையிலிருந்து ஒரு மாபெரும் காவியப் பாத்திரத்தை உருவாக்கியிருக்கிறார்.

இந்த நெடுங்கதையின் இறுதியில் இடம் பெற்றுள்ள பிளேக் வாழ்க்கையில் எஞ்சியிருப்பவற்றையும் அடித்துச் செல்லும் அழிவுச் சக்தியாக அமைந்துள்ளது. ஆனால் இச் சக்தியும் கதை

முழுவதும் பரவியுள்ள சோகத்தைக் காட்டிலும் குறைவானதாக இல்லை. கதைக்காக ஒரு வாழ்க்கையை உருவாக்குவதற்குப் பதிலாக, நடைமுறை வாழ்க்கையின் ஒரு சிறு பகுதியை யதார்த்தக் கண்ணோட்டத்துடன் அணுகியுள்ளார். இந்த நெடுங் கதை திரு. பைரப்பாவின் கதைகளில் உள்ள ஒரு முக்கியமான தன்மையைப் புலப்படுத்துகின்றது. (இந் நூலாசிரியர் கிராம வாழ்க்கையைப் பற்றி விவரிக்கத் துவங்கி, மிக எளிதாக, வெற்றி கரமாக அதை முடிக்கின்றார்).

வாழ்க்கையின் ஒரு சிறு பகுதியைத் தெளிவாக விளக்கு வதற்கு "**கிருக பங்கா**"வின் நடையே ஒரு காரணம். இந்த நெடுங் கதை கன்னட நெடுங்கதைப் பாரம்பரியத்தின் எல்லா சிறப்பான அம்சங்களையும் கொண்டுள்ளது. குறிப்பாக கிராம வாழ்க்கை யின் நடைமுறை விளக்கத்திற்குத் தேவையான கிராமிய மொழி இதில் கையாளப்பட்டுள்ளது. '**கிருக பங்கா**'வை '**கிராமாயணத் துடன்**' ஒப்பிட்டுப் பார்த்தால் திரு. பைரப்பா அவர்கள் தந் திருக்கும் முடிவுக்கும் திரு. ராவ்பகதூர் அவர்கள் பின்பற்றி யுள்ள சோக முடிவுக்குமிடையே உள்ள வேறுபாடு புலப்படும். ஒரு கிராமத்தின் துயரை நாட்டின் துயரமாக விவரிக்கிறது '**கிராமாயணம்**'. மேலும், '**கிராமாயணம்**' ஒரு கிராமத்தின் வீழ்ச்சியை விளக்கும் ஒரு கதையாகவும் உள்ளது. ஆனால் "**கிருக பங்கா**" நஞ்சம்மா என்ற பெண்ணின் போராட்டத்தைப் பற்றிக் கூறும் கதையாக அமைகிறது. ஒரு தனி நபரின் போராட்டம் தோல்வி பெறுவதன் மூலம் அவளுடைய சுற்றுப் புறத்தில் இருக்கும் பரிவு, கல் நெஞ்சம், மூர்க்கத்தனம், அடாவடித்தனம் ஆகியவை தெளிவாகின்றன. திரு. பைரப்பா தனி நபரின் அவலத்தை வருணிக்கிறார். ஆனால் திரு. ராவ் பகதூர் ஒரு சமூகத்தின் அவலத்தைக் காட்டுகிறார்.

"**கிருக பங்கா**" கதையில் நமக்குப் புலப்படும் நாவலாசிரியரின் ஒதுங்கி நின்று நோக்கும் ஆற்றல் அற்புதமானது. உயிர்களைப் படைக்கும் கடவுள் தன் படைப்புகளை வெளியிலிருந்து ஒதுங்கி நின்று நோக்குவதுபோல் கலைஞனும் தன் படைப்புகளை நோக்க வேண்டியுள்ளது. அதைப் போன்ற ஒரு கலைப்படைப்புத்தான் "**கிருக பங்கா**".

''இந்த நெடுங்கதை எந்த ஒரு பிரச்சினையையும் தனிப்பட்ட முறையில் குறித்தது அன்று. வாழ்க்கையினை நடைமுறையில் உள்ளபடியே காணும் முயற்சிதான் இது''- என்று திரு. பைரப்பா அவர்கள் இந்நூலின் முன்னுரையில் கூறி இருக்கிறார். இம் முயற்சியில் திரு. பைரப்பா அவர்கள் பெருமளவு வெற்றி பெற்

றிருக்கிறூர். "கிருக பங்கா" விற்குப் பின் வெளிவந்த "நிராகரண" மற்றும் 'கிரகண' ஆகிய நெடுங்கதைகளில் 'கிரகண' வலிமை வாய்ந்தது அல்ல. சாமியார் ஒருவர் திருமணம் செய்து கொள்ள முடிவு செய்வதால் ஒரு கிராமத்தில் ஏற்படும் அமளியை விவரிக் கிறது. திருமணம் செய்து கொள்வது என்பது ஒரு ஆரோக்கிய மான முடிவு என்று ஏற்றுக் கொள்ளப்பட்டமையால், இம்முடிவு சாமியாரை மறைத்திருந்த கிரகணத்தை விலக்கியது என்னும் பொருளில் அந்த நூலுக்கு 'கிரகண' என்று பெயர் இடப்பட் டிருக்கிறது. ஆனுல் தன் துறவறத்தைக் கைவிடும்போது அந்தச் சாமியாரின் உள்ளத்தில் எழும் உள்ளக் கிளர்ச்சியை அந்த நூல் வலிவான முறையில் எடுத்துக் காட்டவில்லை.

'நிராகரண' மனிதர்களிடையே நெருங்கிய தொடர்பையும், ஒதுங்கி இருக்கும் நிலையையும் விளக்கும் நூல். நரஹரி என்பவன் தன் மனைவியின் இறப்புக்குப் பின்னர் குழந்தைகளை சுவீகாரம் கொடுத்து விட்டு எல்லாவற்றிலிருந்தும் ஒதுங்கி அமைதியை நாடிச் செல்வதே இந்தக் கதையின் கருப்பொருள். இந்தக் கதை திரு. காரந்த் அவர்களின் 'அளிதமேலே' என்னும் படைப்பை அவ்வப்பொழுது நினைவூட்டுகிறது. மொத்தமாகப் பார்க்கும் போது இவ்விரண்டு நெடுங்கதைகளும் பாசப்பிணைப்புக் கண் ணோட்டத்திலோ அல்லது கதைக்கான கருப்பொருள் கண்ணோட் டத்திலோ கன்னட இலக்கியத்தில் மாபெரும் விளைவை ஏற் படுத்தவில்லை.

திரு. பைரப்பா அவர்களின் அண்மையில் வெளிவந்த 'தாடு' (Dhatu) என்னும் பெருநாவல் திரு. பைரப்பாவை, திரு. காரந்த்தை அடுத்துள்ள ஒரு மாபெரும் நெடுங்கதையாசிரியர் என்று வெளிப்படுத்தியதோடல்லாமல், கன்னடத் திறனுய்வு வட்டத்திலிருந்து மிகுந்த அளவில் விமர்சனத்தையும் பெற்று வருகிறது (இந்த நூல் 1975-ம் ஆண்டுக்கான சாகித்திய அகாடமி பரிசு பெற்றுள்ளது.) சாதி, வகுப்பு முதலியவைகளால் சமூகத்தில் பெரும் கொந்தளிப்பு உருவாகியிருக்கும் தற்சமயத் தில் இந்த வேறுபாடுகள் எவ்வாறு உருப் பெற்றன என்பதை இந்நூல் விருப்பு வெறுப்பின்றி ஒதுங்கி நின்று ஆராய்கிறது. புரட்சியைப் பற்றிய நெடுங்கதையை எழுதலாம். புரட்சியை உருவாக்குகின்ற நெடுங்கதையையும் படைக்கலாம். 'தாடு' இரண்டாவது வகையைச் சேர்ந்தது.

ஆனுல் இந்த இலக்கியத்தின் சிறந்த பண்பு யாதெனில் புரட்சியைத் தோற்றுவிப்பதை மட்டுமே நூலின் குறிக்கோளாகக் கொண்டு பாத்திரப் படைப்புகளைச் சீர்குலைக்கவில்லை. சாதிப்

பழக்க வழக்கம் கூட இக்கதையின் பிரிக்க முடியாத உறுப்பாக அமைந்துள்ளது. வேறு சாதிக்காரனைத் திருமணம் செய்து கொண்டதன் விளைவாய் இக்கதையின் நாயகி, தன் சாதிக்காரர் களால் நடத்தப்படும் கல்லூரியில், தான் பெற்றிருந்த வேலையை இழக்க நேரிடுகிறது. அரிசனங்களைக் கோவிலுக்குள் அனுமதிக்கக் கூடாது என்று வாதிடும் அமைச்சர் மேலகிரி கவுடனின் தகப்பன் பெரிய கவுடன், அரிசனங்களின் நுழைவுக்குப் பிறகு கோவிலைப் பசு மூத்திரம், சாணி முதலியனவற்றால் சுத்தம் செய்கிறான். பிராமணர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்கள் எனத் தங்களைக் காட்டிக் கொள்ளும் கவுடர்கள், பிராமணர்களைக் காட்டிலும் அதிக ஆசார சீலர்களாகி விடுகிறார்கள். காந்தீய நெறியைச் சேர்ந்த பெட்டய்யா, பிராமணர் வெங்கடரமணய்யாவைத் தீண்டக் கூடாது என்னும் சமூக வழக்கம் ஆகிய இந்த முரண் பட்ட விஷயங்களை ஆசிரியர் நிர்த்தாட்சண்யமாக வெளிப்படுத்தி யிருப்பதால் இந்த விஷயங்கள் நூலில் இடம் பெறும் பொழு தெல்லாம், அற்புதமான கட்டங்கள் உருவாகின்றன.

அறிவு பூர்வமான நெடுங்கதைகளின் மூலமே பாத்திரங்களின் உள் மனதைக் கவரலாம், என்னும் கருத்துக்கு 'தாடு' ஒரு சவாலாக அமைந்துள்ளது. இங்கு பயன்படுத்தப்படும் உத்தி முழு வெற்றியை அளிக்காவிட்டாலும், வெவ்வேறு கண்ணோட் டத்தில் ஒரு பிரச்சினையை நோக்கமுடியும் என்னும் முயற்சிக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும் போது மிகவும் முக்கியத் துவம் வாய்ந்ததாகும். நிகழ்காலப் பிரச்சினையை எடுத்தியம்பும் பணி எப்போதுமே கடினமானதுதான் மேலும் அது எழுத்தாள னுக்கு ஒரு சவாலாகவே விளங்கும். அதற்கு வாழ்க்கையின் உண்மையான அனுபவங்களும், உற்று நோக்கி உணர்ந்து கொள்ளும் ஆற்றலும் அடிப்படைத் தேவைகளாய் விளங்குகின் றன. இந்த இரண்டு விஷயங்களுக்கும் சான்றாக நெடுங்கதை யின் எல்லாப் பகுதிகளும் உருப்பெற்றிருப்பதால் 'தாடு' கன்னட நெடுங்கதை உலகில் ஒரு நிரந்தர இடத்தைப் பெறுகிறது.

**மாதவ குல்கர்ணி**

மைசூர்

# ஒன்று

## 1

மைசூர் சமஸ்தானத்தின் தும்கூர் ஜில்லாவில் உள்ள திப்டூர் தாலூகாவைச் சேர்ந்த கம்பனகெரே பிர்க்கா ராமஸந்திர கிராமத்தின் கணக்குப் பிள்ளை ராமண்ணா இறந்த பிறகு அவரது வீட்டில் இருந்தவர்கள் அவருடைய மனைவி கங்கம்மாவும் அவருடைய இரண்டு பிள்ளைகள் சென்னிகராயனும் அப்பண்ணய்யாவும்தான். ராமண்ணா இறந்து அப்போது ஆறு வருடங்களாகி விட்டன. அதாவது விஸ்வேஸ்வரய்யா திவான் பகதூர் பட்டம் பெற்றபோது அவர் இந்த உலகத்தை விட்டு மறைந்தார். அப்போது அவர் மனைவி கங்கம்மாவிற்கு இருபத்தைந்து வயது. மூத்தவன் சென்னிகராயனுக்கு ஒன்பது வயது. இளையவன் அப்பண்ணய்யாவுக்கு ஏழு வயது. ராமண்ணா இறந்ததிலிருந்து அவருடைய பரம்பரை கணக்குப்பிள்ளை வேலையை கிராம மணியக்காரர் கங்கே கவுடருடைய மைத்துனன் சிவலிங்கே கவுடன் பார்த்து வந்தான். இன்னும் மூன்று வருடங்களில் பதினெட்டு வயதாகி மேஜர் ஆனதும் சென்னிகராயன், தன்னுடைய அப்பாவின் வேலையை ஏற்றுக் கொள்ள வேண்டும். கணக்குப்பிள்ளை உத்தியோகம் பார்ப்பதென்றால் இலேசா? அதற்கு சரியான படிப்பு வேண்டும். [1]ஜைமினியைப் புரிந்து கொள்ளும் அளவுக்கு வந்தால் சுவாதீனம், வசூல், விளைச்சல், ஜனத்தொகை கணக்குவழக்குகள் தெரியும். கிராமத்தின் [2]கூலிமடத்து ஆசிரியர் சாதாளிக்கரை சென்னகேசவய்யாவிடம் சென்னிகராயன் கல்வி கற்று வருகிறான்.

---

1. **ஜைமினி:** கன்னட மொழியில் மகாபாரதம் இயற்றியவர். இங்கு அவரது நூலைக் குறிக்கிறது.

2. **கூலிமடம்:** கதை நடந்த காலத்தில் கிராமத்து மடத்தில் கல்வி கற்பிப்பது வழக்கம்.

இரண்டாவது மகன் அப்பண்ணய்யாவுக்கு பதின்மூன்று வயதாகியும் மடத்துக்குப் போகவில்லை. மணலின் மேல் "ஸ்ரீ ஓம்" என்று எழுதிப் பழக ஆரம்பிக்கவில்லை. "அப்பண்ணு, மடத்துக்குப் போறியா இல்லையா?" என்று ஒரு நாள் தாய் கோபத்துடன் கேட்டாள். "போகாவிட்டா உனக்கென்னடி கழுதைமுண்டை"- மகன் சீறினன். "ஏண்டா என்னை முண்டைன்னு சொல்றே? உன் வம்சமே அழிஞ்சு போகுதா இல்லையா பாருடா, தேவடியா மகனே?" என்று சபித்தாள் தாய். "உன் வம்சம்தான் அழிஞ்சு போகும்" என்று மகன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே வெளியிலிருந்து [3]தண்ணீர்க்கார முத்தன் வந்தான். "என்னைக் கழுதைமுண்டைன்னு சொல்றன். இந்தக் கம்மநாட்டிப் பயலைப் பிடித்துக் கொண்டு போய் சென்னகேசவய்யாவிடம் உட்கார்த்தி விட்டு வாடா, முத்தா" என்று கங்கம்மா உத்தரவிட்டாள். அதைக் கேட்டவுடனேயே அப்பண்ணய்யா வெளியே ஓடிப் போனன். ஆனல் முத்தன் பெரிய ஆள். பத்தே எட்டில் போய் அவனுடைய சிண்டைப் பிடித்து, "அய்யய்யோ" என்று அவன் கத்தியதைப் பொருட்படுத்தாமல் இழுத்து வந்து கங்கம்மாவின் முன்பு அவனை நிறுத்தினன். "இந்த தேவடியா மகனை ரெண்டு உதைத்து இழுத்துக் கொண்டு போ"—என்று அவள் கட்டளை யிட்டாள். ஆனல் பிராமணப் பையனை எப்படி உதைப்பது? அப்படி செய்தால் கால் புழுத்துப் போகும் என்பது முத்தனுக்குத் தெரியாதா? அவன் அப்பண்ணய்யாவின் தோளைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனன்.

சிறியவன் போன பிறகு கங்கம்மாவுடைய பார்வை வீட்டிலிருந்த பெரிய மகன் மீது திரும்பியது. "டேய், சென்னி ஹொன்னவள்ளிக்குப் போய் சீதாராமையாவிடம் கணக்குப் படின்னு எத்தனை தடவை அடிச்சுக்கிறது? நாளைக்குப் போறியா? இல்லே தடி எடுத்து உன்னை ரெண்டு தட்டு தட்டவா?" "என் விவகாரத்துக்கு வந்தா அம்பட்டன் ருத்ரனைக் கூட்டி வந்து உன் தலையை மொட்டையடிக்கிறேன்" – தூண் மறைவிலிருந்த பெரிய மகன் உறுமினன். "உன் அப்பன் செத்துப் போன போதே என் தலையை மொட்டை அடிச்சாச்சு. பெத்த அம்மாவை இப்படிச் சொன்னு உன் நாக்குப் புழுத்துப் போகும் முண்டைப் பயலே".

ஹொன்னவள்ளி, ராமஸந்திர கிராமத்திலிருந்து பதினெட்டு மைல் தூரத்திலுள்ள கிராமம். இரண்டும் ஒரே தாலூக்காவைச் சேர்ந்தவையென்றலும் பிர்க்கா வேறு, வேறு. ராமஸந்திர, கம்பனகெரே பிர்க்காவிலிருந்தாலும் ஹொன்னவள்ளி முக்கிய

---

3. தண்ணீர்க்காரன்: வயலில் நீர் பாய்ச்சுவது போன்று எடுபிடி வேலை செய்பவன்.

மான இடம். முன்பு தாலூகாபீஸ் இருந்த இடம். ஹொன்னவள்ளி தாலூகாவானதிலிருந்து சீதாராமையா கஸ்பா கணக்குப்பிள்ளை யாக இருக்கிறுர். கணக்கு வழக்கில் கெட்டிக்காரர் மட்டுமல்ல, அதிகாரிகளையே ஆட்டி வைப்பார். அவரிடம் கணக்குப் படித்த எவனும் கணக்குப்பிள்ளைத் தொழிலை ஜமாய்த்து விடலாம். இப்படித்தான் அரிசிகெரே, கண்டசி, ஜாவகல்லு முதலிய ஊர் மணியக்காரர், கணக்குப்பிள்ளைகள் சொல்லிக் கொண்டிருந்தனர். ஆனால் சீதாராமையாவின் கீழ் பாடுபட்டுப் படிப்பது என்றால் சாதாரணமல்ல. பாராவுக்குத் தலைப்பெழுதி சிவப்பு மையில் கோடு போடுவதைத் தெரிந்து கொள்வதற்குள்ளாக அவருடைய ரூல்தடியால் நூறு அடி வாங்க வேண்டும். ஆயிரம் உளி அடி விழாமல் சிலை எப்படி வரும்? என்று வாத்தியாரைப் போல அவரும் சொல்கிறுர்.

இந்தப் பையன்களின் போக்கைப் பார்த்து கங்கம்மாவின் மனம் குமுறியது. அழுகை வருவது போல் ஆகி கண்களில் உள்ள நீரைத் துடைத்துக் கொண்டாள். ''அக்கம்பக்கத்து வீட்டுப் பசங்க அம்மாவைக் கண்டா எப்படிப் பதறுது? இந்த முண்டங் களுக்கு வரக்கூடாத ரோகம் என்ன வந்திருக்கு? என் தலையெழுத்து'' என்று ஒருமுறை அழுதாள். எழுந்து நேராக சமையலறைக்குள் சென்று இரும்புத்துண்டை அடுப்புக்குள் வைத்தாள். மதியத்துக்கு மேல் மூன்று மணியாகி விட்டதால் அடுப்பில் தணல் இருக்கவில்லை. எரிந்து போன தேங்காய் மட்டை சாம்பலாகும் நிலைக்கு வந்திருந்தது. அம்மா தனக்கு சூடு போடு வதற்குத்தான் இரும்புத்துண்டை சூடாக்குகிறுள் என்பது பதினைந்து வயது மகனுக்குத் தெரிந்தது. அவன் ஒரு முறை ''கழுதைமுண்டை, மொட்டைமுண்டை,'' என்று ஒரே மூச்சில் கத்தி விட்டு வீட்டை விட்டு வெளியே ஓடிப் போனுன். இனிமேல் அவனைப் பிடிப்பது முடியாது என்று கங்கம்மாவுக்குத் தெரியும். ஆனால், அவள் தன்னுடைய தோல்வியை ஒப்புக் கொள்ள மாட்டாள். ''இந்தக் கம்மனுட்டிப் பயல்களை ஒரு கட்டுக்குள் எப்படிக் கொண்டு வருவது'' என்று யோசித்துக் கொண்டே உட்கார்ந்திருந்தாள். இரும்புத் துண்டு அடங்கிப் போன தணலுக்குள்ளேயே சிறிது சிறிதாகச் சூடேறிக் கொண்டு இருந்தது.

திருமணமாகி கங்கம்மா அந்த வீட்டுக்கு வந்த போது பதின்மூன்று வயதுப் பெண். கணவனுக்கு நாற்பத்தைந்து வயது. முதல் மனைவிக்கு இரண்டு குழந்தைகள் பிறந்து இறந்து விட்டன. கடைசியில் அவளும் இறந்தாள். முதல் தாரம் கங்கம்மா

பக்கத்துப் பெண்தான் – அதாவது ஜாவகல்லு கிராமத்தைச் சேர்ந்தவள். அந்தத் தொடர்பினால்தான் ராமண்ணாவுக்கு கங்கம்மாவைக் கொடுத்தார்கள். ராமஸந்திர கிராமத்தையும் சேர்த்து மூன்று கிராமத்துக் கணக்குப்பிள்ளை வேலை. ஆறு ஏக்கர் நன்செய் வயல், எட்டு ஏக்கர் புன்செய் பூமி, முன்னூறு தென்னைமரம், வீட்டில் பாத்திரம் பண்டம், தங்கம் வெள்ளி— இத்தனை உள்ள அவருக்கு யார்தான் பெண் கொடுத்திருக்க மாட்டார்கள்? முதலில் இருந்தே ராமண்ணா சாதுவான ஆள் என்று ஊர்க்காரர்கள் சொல்கிறார்கள். பசுவைப் போல சாது. இளங்கன்றைப் போல சாது. ஆனால் கங்கம்மா பெண்புலி— என்று ஜனங்கள் சொல்வதுண்டு. இது காதில் விழுந்தபோது, ''இந்த ஜனங்களை செருப்பால் அடிக்க வேணும்'' என்று அவள் சொல்வதுண்டு. ஆனால் இந்த—''மொட்டச்சிப் பிள்ளைகளுக்கு புத்தி வர வைக்க வேணும், இல்லாவிட்டா நான் ஜாவகல்லுப் பெண்ணே அல்ல. இந்த இரும்புத்துண்டு இங்கேயே இருந்து சூடாகட்டும். சாயங்காலம் பலகாரம் சாப்பிட எப்படியும் வர வேணுமே! அப்போது கால் மேலே, கன்றுக் குட்டிக்கு இழுத்தாற் போல் ரெண்டு இழுக்கிறேன். கன்றுக் குட்டிக்கு சூடு இழுக்கா விட்டா எங்கே சொன்ன பேச்சு கேக்குது? மாட்டுக்கார பேலூரான் சூடு போடாவிட்டா மாட்டுக்கு ஜன்னி வரும்னு சொல்றான். அதெல்லாம் பொய். சொன்ன பேச்சு கேக்க வேணும். இல்லாவிட்டா சூடு இழுக்கலாம்'' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டே சூடான இரும்புத்துண்டு பிடியை தன்னுடைய சிவப்பு முந்தானையால் ஒரு முறை புரட்டி மறுபடியும் சூடான தணலில் தள்ளினாள்.

அதற்குள் வீட்டின் ஓட்டு மேலே யாரோ மெதுவாக திருட்டுத்தனமாக நடப்பது போல் தோன்றியது. 'இந்தப் பட்டப் பகலில் திருட்டுப் பயலுக ஏன் வர்றானுக? குரங்கு திம்மண்ணன் வந்திருப்பான். தோட்டத்து இளநீரை விட்டு ஊருக்குள் வர தைரியம் வந்திட்டதா? இந்த முண்டச்சிப் பயலுக்கு'—என்று யோசித்துக் கொண்டிருக்கும் போதே காலடிகள் அவளுடைய தலைக்கு நேராக வருவது போலத் தோன்றியது.

''உன் வீடு பாழாய்ப் போகட்டும்'' என்று சொல்வதற்கு வாயெடுத்தவள், ''அய்யோ, ஆஞ்சனேய சாமியின் சொரூபம் அல்லவா. கெட்ட பேச்சு பேசினா சாபம் கிடைக்கும்'' என்று உடனே நாக்கைக் கடித்துக் கொண்டு தலையைத் தூக்கி மேலே பார்த்தாள். யாரோ மேலேயிருந்து ஒரே சமயத்தில் இரண்டு தடிகளால் ஓடுகளை அடித்து உடைப்பது போல் இருந்தது.

பதினைந்து இருபது ஓடுகள் உடைந்து சுக்கு நூறாகி அவளுடைய தலை மேலும், முகத்தின் மேலும் விழுந்தன. "இதுகளோட வீடு பாழாய்ப் போகட்டும்" என்று அவள் சத்தம் போட்டதும், "அதோ இருக்கா! இன்னுமொரு நாலு தடவை போட்டு விளாசு அப்பண்ணய்யா" என்று சென்னிகராயன் மேலிருந்து சொன்னது கேட்டது. அண்ணன் தம்பி இருவரும் கையில் இருந்த உலக்கையினால் அவளுடைய தலைக்கு மேலிருந்த ஓடுகளின் மேல் தங்களுடைய கைவரிசையைக் காட்டினார்கள். "தேவடியாப் பிள்ளைகளா! மணியக்காரர் சிவே கவுடரிடம் சொல்லி உங்களைத் தொலைச்சுக் கட்டறேன்" என்று சொல்லிக் கொண்டே வீட்டை விட்டு வெளியே ஓடினாள்.

"சிவே கவுடரைக் கூப்பிட்டு வர்றாளாம் சென்னையா,"— என்று அப்பண்ணய்யா அண்ணனை எச்சரித்தான். இருவரும் உலக்கைகளை அப்படியே போட்டு விட்டு கூரையின் பிற்பகுதி வரை ஓடிப் போய் அங்கிருந்து சாக்கடையைத் தாண்டிக் குதித்து ஓட்டம் பிடித்தனர்.

உ

ராமஸந்திர கிராமம் முன்பு ஐநூறு வீடுகளைக் கொண்டதாக இருந்தது. இப்போது கணக்குப்பிள்ளையின் ஜனத்தொகைக் கணக்கில் இருப்பது நூற்று நாற்பத்தேழு குடித்தனங்கள்தான். கிராமத்தின் இரண்டு பக்கமும் சூழ்ந்திருந்த ஏரித் தண்ணீர் கெட்டுப் போய் வருடக் கணக்கில் சகதி பிடித்த கோட்டைச் சுவர்களைத் தழுவியது. தெற்குப் பகுதியில் உள்ள சோமேச்வரன் கோவிலின் மூலலிங்கம் ஏரிக்கரையின் மேலிருக்கின்ற கோவிலில் இருக்கிறது. ஊருக்குள் இருக்கின்ற கோவிலின் எதிர்த் தெருக் கோடியில் பிரம்மாவின் மண்டபம் இருக்கிறது. அதற்கு அருகிலேயே அனுமார் கோவில். கிராமத்துக்கு வெளியே தோப்புக்கு அருகில் கிராமதேவதை காளம்மன் கோவில். வியாபாரி, கோனார், சேணியன், வாணியன், இடையன் முதலிய ஒவ்வொரு சாதிக்கும் ஒவ்வொரு சந்து. ஒரு சாதி சந்தில் மற்றொரு சாதிக்காரர் யாருமில்லை என்று கிடையாது. ஆனால் மாமிசம் உண்ணக் கூடிய சாதிக்காரர் நடுவே பிராம்மணர், லிங்காயதர், சாதானி போன்ற சாதிக்காரர் இருப்பது மிகவும் அரிது.

மணியக்காரர் சிவே கவுடருடைய வீட்டுக்கும் இறந்து போன கணக்குப்பிள்ளை ராமண்ணா வீட்டுக்கும் இடையில் இரண்டு சந்து தூரமிருக்கும். அதாவது சுமார் இருபது வீடுகளுக்கு அப்பால். கவுடர் வீட்டிலேயே இருந்தார். கங்கம்மா நேரே உள்ளே போய்

சொன்னாள், ''சீக்கிரம் வா சிவே கவுடா, என் சென்னியும், அப்பண்ணனும் வீட்டு மேலே ஏறி உலக்கை எடுத்து ஓட்டை உடைக்கிறானுக பார், என் மேலே ஓடு விழுந்து ரத்தம் வருது.''

''அது ஏன்?''

''மடத்துக்குப் போடான்னு சொன்னேன். அதனால் தான் இப்படிச் செய்யறானுக''.

''அதுகளுக்கு அதிகமாப் போச்சு! போய் ரெண்டு கொடுங்க'' என்று கவுடரின் மனைவி கௌரம்மா அவரிடம் சொன்னாள். கவுடர் தன்னுடைய பெரிய வயிற்றைத் தூக்கிக் கொண்டு, காலுக்கு செருப்பும் போட்டுக் கொண்டு கம்பீர நடையுடன் புறப்பட்டார். வந்து பார்த்தால் அண்ணன் தம்பி இருவரும் ஓடிப் போய்விட்டனர். அதற்குள் வீட்டுக்கு முன் கோவில் மாதேவய்யாவும் இன்னும் பதினைந்து இருபது பேரும் கூடிவிட்டனர். சமையலறையிலிருந்து பின்பக்கத்துக் கூரை வரைக்கும் ஓடுகள் சுக்கு நூறாக உடைந்திருந்தன. சிவே கவுடர் அங்கு கூடியிருந்தவர்களில் நான்கு பேரைப் பார்த்து ''டேய், போங்கடா, அவனுகளைத் தேடிப் பிடிச்சுக்கிட்டு வாங்க'' என்றார்.

சமையலறையைப் பார்த்த கங்கம்மாவின் கண்களில் கண்ணீர் வந்தது. ''சிவே கவுடா, அந்தப் பயல்களைப் பிடிச்சு வந்து காலை முறிச்சு உட்கார்த்தவேணும்'' என்றாள்.

பிள்ளைகள் எங்கும் அகப்படவில்லை. இரவு ஆகி இருட்டிய பிறகும் தடயம் இல்லை. ''இதுகளோட வீடு பாழாப் போகட்டும்'' என்று கங்கம்மா பத்து தடவை சொல்லிக் கொண்டாள். வீட்டில் அவள் ஒருத்திதான். பின்புறத்து ஓடுகள் எல்லாம் பொடிப் பொடியாய்ப் போய்விட்டன. ஒண்டியாக இருப்பதற்கு பயமெதுவும் கிடையாது. ''நானிருக்கும் பக்கம் பூதம்கூட அண்டாது'' என்று அவளே சொல்லிக் கொண்டாள். ''ஆனால் இந்த முண்டச்சிப் பயலுக எங்கே போச்சோ?'' ''அவர்களின் உயிரைப் பற்றி அவளுக்கு எந்த யோசனையும் கிடையாது. 'எங்கேயோ ஒளிஞ்சு உட்கார்ந்திருப்பானுக. ராத்திரி வயித்துக்கு என்ன செய்வானுகளோ? தோட்டத்துப் பக்கம் எளநீரு குடிச்சு கெளங்கு சாப்பிட்டிருப்பானுக. வயல் பக்கம் போயிருந்தா கரும்புச் சல்லை கடிச்சிருப்பானுக. ஆனா அதிக நேரமாறதுக்கு முன்னே வர

வேணுமா? காலையிலே ரொட்டி தின்ன வரட்டும். கவனிச்சுக் கிறேன்' என்று நினைத்துக் கொண்டாள்.

அவர்களுடைய வீட்டுக்கு முன்புறத்தில் சோளேச்வரன் கோவில். கோவில் கதவு வடக்கு நோக்கியது. இவர்களுடைய வீட்டுக் கதவு கிழக்குப் பார்த்தது. அதாவது கோவிலின் இடது பக்கம் இவர்களுடைய வீட்டின் முன்னே இருக்கிறது. கோவிலுக்கும் வீட்டுக்கும் நடுவே சிறிய மதில். இதற்கு முன்பு அது கோவிலின் பிரகாரமாயிருந்ததற்கு இப்பொழுதும் அடையாளமிருக்கிறது. கோவிலில் மாதேவய்யா தனியாக உட்கார்ந்து வலதுகையில் தம்பூரா மீட்டிக் கொண்டு இடது கையில் தாளக் கட்டையைத் தட்டிக் கொண்டு ''ஹரி ஹர எனுதலி ருத்ராக்ஷி, தரிசலு ஹரிவுது பவகள பரம தரிசித ருத்ராக்ஷி'' என்று பஜனை செய்து கொண்டிருந்தார். அவர் தினமும் அப்படித்தான். நடு இரவு வரை பஜனை செய்வார். காலையில் கோழிகூப்பிடும் முன்பே எழுந்து உட்கார்ந்து மறுபடியும் ஆரம்பிப்பார். அவருடைய சொந்த ஊரைப் பற்றியோ, நாட்டைப்பற்றியோ யாருக்கும் தெரியாது. அந்த ஊருக்கு வந்தே இருபது வருடங்களுக்கும் மேலாயிற்று. கங்கம்மா திருமணமாகி அங்கு வருவதற்கு முன்பே அவர் வந்துவிட்டாராம். சோளேச்வரன் கோவிலில் வாசம். பஜனை, உஞ்ச விருத்தி செய்து ஆகாரம். உயரமான உருண்டை முகம், நெற்றியின் மேல் பெரிதாக மூன்று விபூதிக் கோடு. அது புருவத்திற்கு நடுவில் மட்டுமல்லாமல் காது வரையிலும் நிற்கிறது. முழுவதும் மொட்டையடித்த தலை. காவி வேட்டி, அதே நிறத்தில் மேல் சட்டை இது அவரது வெளித்தோற்றம்.

படுத்தாலும் கங்கம்மாவுக்கு தூக்கம் வரவில்லை. பையன்கள் இன்னும் வீடு வந்து சேரவில்லை. மாதேவய்யா பஜனையை முடிக்கும் நேரம் நெருங்குவது தெரிந்தது. அவர் ''மங்களாரதி எத்தி அங்கநேயெரல்லா ... ... சங்கய்யா பசவண்ணனிகெ ... ...'' என்று ராகம் இழுத்துக் கொண்டிருந்தார். கங்கம்மா எழுந்து வெற்றுக் கதவைச் சாத்திவிட்டு அங்கே போனாள். கோவிலின் முன்புறம் கதவில்லாத பெரிய மண்டபம்போல் இருந்தது. ஐயா அங்கேதான் உட்கார்ந்து பஜனை செய்து கொண்டிருந்தார். பொழுது இருட்டும் மாலை நேரத்தில் பஜனையைக் கேட்கவும், அவருடன் தம்பூரா வாசித்துக் கொண்டு, தாளம் போட்டுக் கொண்டு தாமும் பஜனை செய்யவும் ஊர்க்காரர்கள் சில பேர் அங்கே வந்து உட்கார்ந்து கொண்டிருப்பார்கள்.

அப்பொழுதே நடு இரவாகி விட்டது. கோவிலில் வேறு யாரும் இருக்கவில்லை. கங்கம்மா மண்டபத்துக்குள் நுழைந்து ஐயாவுக்கு எதிரில் இருந்த தூணுக்கு அருகில் உட்கார்ந்தாள். அவர் கடைசி வரியைச் சொல்லி முடித்தவுடன் அவளே கேட்டாள், ''இந்தத் தேவடியாப் பயல்களுக்கு ஏன் புத்தியில்லே சாமி?''

''கங்கம்மா, புத்தி மெதுவாக வரும். நீங்கள் நல்ல பேச்சு பேசுவதற்கு முதலில் தெரிஞ்சுக் கோங்க''.

''நானென்ன கெட்ட வார்த்தை பேசினேன்?''

''இந்தத் தேவடியாப் பயலுகன்னு ஏன் சொல்றீங்க?''

கங்கம்மா தன் பேச்சை மாற்ற வேண்டும் என்று மாதேவய்யா அவளுக்குச் சொல்வது இது முதல் தடவை அல்ல. அவளைத் திருத்துவது யாராலும் முடியாத வேலை என்று தெரிந்திருந்தாலும் இதைப் போன்ற சந்தர்ப்பம் வந்தால் சொல்லிக் கொண்டே இருப்பார். பையன்கள் இன்னும் வீட்டுக்கு வராததைப் பற்றி கங்கம்மா சொன்னாள்.

''கங்கம்மா நீங்க அவங்களைத் தண்டிக்க நினைச்சா மணியக்காரரை கூட்டிக்கிட்டு வர ஏன் போறீங்க?''

''அதுக என் கையிலே சிக்கின சொல்லுங்க''.

''நீங்க செய்யறது தான் தப்பு—'' என்று மாதேவய்யா மறுபடியும் சொன்னார்.

''குடும்பத்தலைவி, தாய் திருந்தாமல் கொளந்தைகளைத் திருத்துவது எப்பிடி?'' என்ற அவருடைய பழைய கேள்வி அவளைத் திக்கு முக்காடச் செய்தது.

''மடத்துக்கு அனுப்பினீங்களே அப்பண்ணய்யாவை, அங்கே வாத்தியாரைத் தேவடியா மகன்னு திட்டிட்டு ஓடி வந்துட்டானும். இந்தப் பேச்சை அவன் எப்பிடித் தெரிஞ்சுகிட்டான்?''

''என் தலையெழுத்து பாருங்க! அதுதான் அவன் வாயிலே இப்படிப் பேச வைக்குது, அதுக்கப்புறம் அந்தத் தேவடியா மகனை வாத்தியார் சும்மா விட்டாரா?''

''அங்கேயிருந்து ஓடி வந்த பிறகுதானே அண்ணனும் தம்பியும் ஓட்டை உடைச்சாங்க''.

''இந்தப் பயலுக வீடு நாசமாப் போகட்டும். எல்லாத்துக்கும் புது ஓடு போட நான் எங்கிருந்து பணம் கொண்டு வரது?''

''மறுபடியும் கெட்ட வார்த்தை பேசறீங்களே கங்கம்மா? '' மாதேவய்யா இன்னும் ஏதோ சொன்னார். அதற்குள் தெருவில் ஐந்தாறு பேர் ஓடும் சத்தம் கேட்டது.

''கரும்புத் தோட்டத்திலே நெருப்பு! சீக்கிரம் ஓடி வாங்க, ஓடி வாங்க'' என்று சில பேர் சத்தம் போட்டார்கள். இவர் களிருவரும் வெளியே வந்து பார்க்கும் பொழுது ஏரியின் பின் பக்கத் தோட்டத்தில் நெருப்பின் சுவாலை எழும்புகிறது. அதன் வெளிச்சத்தில் புகையும் தெரிகிறது.

''அய்யோ, எங்க கரும்பும் இருக்குதே! எந்த பாழாய்ப் போன முண்டச்சிப் பயலுக இப்படி செஞ்சானுகளோ?'' என்று சொல்லிக் கொண்டே கங்கம்மா வீட்டுக்குப் போய் கதவுக்குப் பூட்டை மாட்டி விட்டு ஜனக் கும்பலுடன் ஏரிக்கரையை நோக்கி ஓடினாள்.

ஊருக்கு முன்பாகவே ஏரி. ஊரின் இரண்டு பக்கமும் சூழ்ந் திருக்கிற ஏரிக்கரைக்கு கிராமத்தில் முன்பாகத்திலிருந்து சுற்றிப் போக வேண்டும். இப்பொழுது ஊர் முழுவதும் ஓடிவந்து கரையின் மேல் நின்று கொண்டிருந்தது. முழு வயலில் பாதியளவுக்கு மேல் கரும்பு போட்டிருந்தது. மேற்குப் புறம் மதகுப் பக்கமாக இரண்டு ஆலைகள் கரும்பு அரைத்துக் கொண்டிருந்தன. கிழக்குப் பக்கமாக பற்றி எரிந்து கொண்டிருந்த கரும்புத் தோட்டத்து நெருப்பு மெதுவாக மேற்குப் பக்கமும், வடக்குப் பக்கமும் பரவிக் கொண்டிருந்தது. எல்லாக் கரும்பும் முற்றி வெட்டுக்குத் தயாராக இருந்ததால் கருப்பஞ் சோகைகள் உலர்ந்து சருகாகி நெருப்பு பரவுவதற்கு வசதியாயிருந்தது. ஆனால் காற்று திசை தவறியது போல ஒரு முறை மேற்குப் பக்கமும் மற்றொரு முறை தென் பக்கமும் வீசிக் கொண்டிருந்ததால் நெருப்பு மிக வேகமாக பரவிக் கொண்டிருந்தது. மேற்குப் புறத்தில் இரண்டு ஆலைக் காரர்களும், எருதுகளை அவிழ்த்து கரையின் பக்கமாக ஓட்டி விட்டார்கள். ஆட்கள் வெல்ல மூட்டைகளைத் தூக்கி ஒதுக்கி வைக்க ஆரம்பித்தார்கள். அச்சுப் பலகைகளை இரண்டிரண்டு பேர் சேர்ந்து தூக்கி கரையின் மேல் கொண்டு வந்து போட்டனர். மூங்கில் கழி, தென்னங்கீற்று, கரும்புச் சோகை இவையெல்லா வற்றையும் சேர்த்துக் கட்டியிருந்த களத்துச்சாலை இன்னும் ஐந்தே நிமிடங்களில் தீப்பற்றி ஆகாயம் வரை தீ எரிந்து சாம்பலாகிப் போவது உறுதியாகத் தெரிந்தது.

ஒவ்வொரு தோட்டத்துக்கும் நெருப்பு பரவிய போது அந்தத் தோட்டத்தின் சொந்தக்காரர்களும் அவர்களுடைய வீட்டுக்காரர்களும் தங்களுடைய உடம்புக்கே தீ பிடித்து விட்டது போல ''அய்யோ அய்யோ'' என்று அலறினார்கள். தீ எப்படிப் பற்றியது. யார் பற்ற வைத்தார்கள் என்பதைப் பற்றி அவர்களுக்குள்ளே வாதங்களும் எதிர்வாதங்களும் நடந்து கொண்டிருந்தன.

ஆலைக்கு அருகில்தான் கங்கம்மாவின் சிறிய தோட்டம் இருந்தது. நாற்பது தென்னை மரங்களைக் கொண்ட அது ஒரு ஏக்கர் பரப்புடையது. அவர்களுடைய மிஞ்சியிருந்த தோட்டம் வேறொரு பக்கம் புன்செய்க்கு அருகிலிருந்தது. இப்பொழுது நெருப்பு தோட்டத்தின் நான்கு பக்கங்களிலும் பரவி, தோட்டத்தின் அருகிலிருந்த ஆலைச் சாலைகளுக்கும் பற்றிக் கொண்டு அதன் வெப்பமும் புகையும் சவுக்கு மரத்தைவிட, உயரமாக எழும்பின. தோட்டத்தின் நடுவிலிருந்து யாரோ ''அய்யோ, அம்மா, காப்பாத்துங்களேன் ...'' என்று கூக்குரலிட்டு வாயில் அடித்துக் கொண்டு அலறுவது நெருப்பின் அந்தச் சடசட ஒலிக்கு இடையே தெளிவாகக் கேட்டது. மக்கள் எல்லோரும் பயத்துடனும், குழப்பத்துடனும், அந்தப் பக்கம் பார்த்துக் கொண்டிருந்த போதே கங்கம்மா—'' என் மகன் சென்னிகராயன் குரல். முண்டச்சிப் பயல் இவ்வளவு நேரம் ஏன் தோட்டத்துக்குள்ளே உட்கார்ந்திருந்தான்? உங்களைக் கெஞ்சி கேட்டுக்கறேன். ஆம்பளைக யாராவது போய் கூட்டி வாங்க'' என்று கூப்பாடு போட்டாள்.

ஆனால் சுற்றிலும் நெருப்புப் பிடித்து ஆலைகளும் பற்றி எரியும்போது தோட்டத்துக்குள் யார் போகமுடியும்? தோட்டத்தின் வேலிக்கும் தீ பரவிவிட்டது. தோட்டத்துக்குள் சோகை, தென்னைமட்டைக்கட்டு வேறே இருக்கிறது. அதற்கு நெருப்பு பிடிக்கலாம். எந்த ஆண் பிள்ளைகளும் தைரியமாகக் கிளம்பவில்லை. கோவில் மாதேவய்யா மட்டும் ''தோட்டத்துக்குள் நெருப்பு வரமுடியாது. வாங்க, வாங்க'' என்று சொல்லிக் கொண்டே கரையிலிருந்து வேகமாக இறங்கி, எரியும் வயலுக்கு நடுவில் செல்கின்ற வாய்க்காலுக்குள் பாய்ந்து தோட்டத்துக்குள் போய்ச் சேர்ந்தார்.

''ஆணுக்குப் பொறந்த தேவடியா மகனுக யாருமில்லையா? பொம்பளை நான் போறேன்'' என்று கூப்பாடு போட்டுக் கொண்டே கங்கம்மா கரையிலிருந்து இறங்கினாள். செம்படவ முத்தன், சக்கிலி பேலூரான் பஜனைக்கு வரும் தோட்டமாரி

முதலிய ஏமெட்டுப் பேர் அவளுக்குப் பின்னல் இறங்கி அவளுக்கு முன்னே ஓடினார்கள்.

தோட்டத்தில் சென்னிகராயன் ஒரு சிறு தென்னைமரத்தின் இளம் மட்டைமேல் உட்கார்ந்த கொண்டு, ''அய்யோ அப்பா'' என்று அலறிக் கொண்டிருந்தான். ''தோட்டத்துக்குள் நெருப்பு வரலே; சீக்கிரம் இறங்கி வா சென்னையா'' என்று மாதேவய்யா சத்தம் போட்டார். ஆனல் அவனுக்கு இறங்குவதற்குப் பயம். ''எனக்கு பயமாய் இருக்குதே, சாமி''- என்று பதறினன். அதற்குள் முத்தன், பேலூரான், தோட்டமாரி எல்லோரும் ஓடி வந்தார்கள். பின்புறமிருந்து கங்கம்மாவும் மூச்சு இரைக்க ஓடி வந்தாள். ''இறங்குடா என் கண்ணே'' என்று சத்தம் போட்டாள். அவனும் சற்று தைரியம் அடைந்து குரங்கு இறங்குவதுபோல் மளமளவென்று தென்னை மரத்தைவிட்டு இறங்கினன். இன்னும் அங்கே நின்றிருந்தால் நெருப்பு ஜுவாலை சோகை, மட்டைக்குப் பரவும் என்று அவனை அழைத்துக் கொண்டு எல்லோரும் திரும்பினர்கள். வாய்க்காலின் இரண்டு பக்கங்களிலும் இருந்த கரும்பின் வெப்பம் தணிந்து கொண்டிருந்தது. ஆலைச் சாலையின் ஜுவாலை மட்டும் இன்னும் அதிகமாகிக் கொண்டிருந்தது. ஆலைக்கு அருகிலேயே போட்டிருந்த பெரிய உலர்ந்த சக்கைக்குவியல் நெருப்புக்கு இரையாகிவிட்டிருந்தது.

எல்லோரும் கரையேறிய பிறகு மாதேவய்யா சென்னிகராயனைக் கேட்டார். ''இவ்வளவு நேரம் தென்னை மரத்தில் ஏறி ஏன் உட்கார்ந்திருந்தே?''

''அம்மா சிவே கவுடரைக் கூட்டிவரேன்னு போனளே, அதுக்காகத்தான்''.

அதற்குள் எல்லோரும் அங்கே சுற்றிச் சூழ்ந்தார்கள். சிவே கவுடர் வந்தார். ''நீங்க அண்ணன் தம்பி ரெண்டுபேரும் ஏன் ஓடு உடைச்சீங்க?'' என்று மாதேவய்யா கேட்டார்.

''அய்யோ ஓட்டு வீடு நாசமாப் போகட்டும். அப்பண்ணன் எங்கே போனனே?'' கங்கம்மா பதறியவாறு கேட்டாள்.

''லிங்காபுரம் பக்கமாக ஓடிப்போனன். அவன்தான் கரும்புத் தோட்டத்துக்கு தீ வெச்சவன்''.

''அவன் ஏண்டா வைக்கிறன்?''

''நாம் ரெண்டுபேரும் தென்னை மரத்துமேல் ஒளிஞ்சுக்கிலா மின்னு சொன்னேன். அவனால் சரியாக மரத்துமேல் ஏற முடியலே. 'நான் கரும்புத் தோட்டத்தில் இருக்கேன்னு சொன்னான். இந்தப் பக்கம் கரும்பு ஆலை, சாலையிலே இருக்கிறவங்க பார்த்து விடுவாங்கன்னு அந்தப் பக்கம் போனான். பீடி பத்தவைக்க தீக்குச்சி கிழிச்சான். உடனே கரும்புச் சோகை பத்திக்கிடிச்சாம்''. இதைக் கேட்டவுடன் மணியக்காரர் சிவே கவுடர் ''அவனைப் பிடிச்சுக் கொண்டு வாங்கடா'' என்று கர்ஜித்தார். ''இவன் சொல்லறதை எல்லாம் நம்ப முடியுமா? அவன் பீடி பத்த வைக்கும்போது நெருப்பு பிடிச்சதுன்னு உனக்கு எப்படித் தெரியும்?'' என்று கோவில் மாதேவய்யா கேட்டார்.

''நான் பொய் சொல்லலே சாமி. ஆண்டவனுக்கும் பொதுவா சத்தியம் செய்யறேன். அவனே இங்கே ஓடிவந்து 'இப்படி நடந்திடுச்சி. புரதப்பன் தோட்டத்திலே நெருப்புப் பிடிச்சிடுச்சி. நீ யார் கிட்டேயும் சொல்லாதே. நான் லிங்காபுரம் பக்கமாக ஓடிப் போறேன். நீயும் வா' ன்னு சொல்லிக் கூப்பிட்டான். ' தீ வெச்சவன் நீ. நான் எதுக்காக வரணுமின்னு கேட்டேன். அவன் ஓடிப் போயிட்டான்'' என்று தன் பேச்சை உறுதிப் படுத்தினான். அவனுடைய பேச்சின் விளைவு என்னவாகும் என்று மணியக்காரர் சிவேகவுடருக்கும் மற்ற முக்கியமானவர் களுக்கும் புரிந்து விட்டது. கங்கம்மாவுக்கு அது ஒன்றும் தெரியவில்லை. மாதேவய்யாவுக்கு எல்லாம் புரிந்தது. ஏதாகிலும் செய்து தப்புவிக்க வேண்டுமென்று ''இந்தப் பையனுடைய பேச்சை எப்படி நம்புவது?'' என்றார்.

''ஏன் நம்பக் கூடாது?'' மணியக்காரர் அதிகாரத்துடன் கேட்டார்.

''சத்தியமா மணியக்காரரே'' என்று சென்னிகராயன் மறுபடியும் வற்புறுத்தி தான் தவறு செய்யவில்லை என்பதைக் காட்டிக் கொண்டான். வீட்டு மூத்தமகனே முட்டாள் தனமாகப் பேசும் பொழுது தான் மட்டும் புத்திசாலித்தனமாகப் பேசினால், மணியக்காரரும் மற்ற ஊர்க்காரர்களும் தன் மேல் பாய்ந்து விடுவார்கள் என்று நினைத்துக் கொண்டே மாதேவய்யா அமைதியாக இருந்தார்.

## 3

மணியக்காரரின் உத்தரவுப்படி அப்பண்ணய்யாவைத் தேடிக் கொண்டு வருவதற்காக தலையாரியும் வெட்டியானும் புறப்பட்டுச் சென்றனர். ராத்திரி இருட்டில் அவன் வெகு தூரம் போய்

விடவில்லை. அந்தக் கோடியில் அய்யனுர் கோவில் மண்டபத்தில் கால்களை நெருக்கி குந்திக் கொண்டிருந்தான். செம்படவ முத்தனுக்கு சந்தேகம் தோன்றி உள்ளே போன பொழுது பிடிபட்டு, அப்பண்ணய்யன் பயந்து நடுங்கி வரமாட்டேன் என்று அடம் பிடித்தான். முரண்டு பிடித்து சுருண்டு படுத்தான். ஆனுல் முத்தன் அவனை ஆட்டுக் குட்டியின் நான்கு கால்களைப் பிடித்துத் தூக்குவதைப்போல தோள் மேல் போட்டுக் கொண்டு கிளம்பினுன்.

ஊர்க்காரர்கள் எல்லோரும் கரையின் மேலேயே இருந்தார்கள். அதற்குள் ஆலை எல்லாம் எரிந்து வெறும் தணல் மட்டும் இருந்தது. தோட்டத்தின் கரும்புகள் தீய்ந்து போய் கறுப்படித்து நின்றன. வானத்தில் நிலா வெளிச்சம் இல்லாமல் இருந்தாலும் எல்லாமே மங்கலாகத் தெரிந்தது. —அப்பண்ணய்யாவைத் தூக்கி வந்து அவனை எல்லோர் முன்னிலையிலும் இறக்கி விட்ட பொழுது அவன் பயத்திஞல் நடுங்கிக் கொண்டிருந்தான். பின்புறமாய் முடிச்சுப் போடுவதற்கு ஏற்றபடி குடுமி வைத்து முன் பக்கம் மழித்து விடப்பட்டிருந்த அவனுடைய மண்டை கூட வியர்த்திருந்தது. மகனின் முகத்தைப் பார்த்ததும் கங்கம்மா பெருமூச்சு விட்டாள். சிவேகவுடரிடம் சொல்லி அவனுக்கு நான்கு கொடுக்கும்படி செய்ய வேண்டும் என்று முன்பே முடிவு செய்திருந்தாள். ஆனுல் சிவேகவுடருடைய முடிவு வேறு விதமாய் இருந்தது.

''கரும்புத் தோட்டத்துக்கு ஏண்டா நீ தீ வைச்சே?'' அவர் கேட்டார். பயத்தால் அப்பண்ணய்யா பேசவில்லை. இன்னெரு முறை அதட்டிக் கேட்டவுடன் — ''எனக்குத் தெரியாது'' — என்முன்.

''ஓகோ தெரியாதுன்னு சொல்றுன்? பீடி பத்த வைக்கும் போது நெருப்பு பிடிக்கலையாடா? நீயே வந்து தென்னைமரத்து மேலே இருந்த என்கிட்டே சொல்லலையாடா?'' சென்னிகராயன் தானே முன்வந்து சாட்சி சொன்னுன். அப்பண்ணய்யன் பேசாமல் தலை குனிந்து நின்றுன். அவனுடைய கால்கள் நடுங்குவதும் தள்ளாடுவதும் சிறிய துண்டு வேட்டியில் நன்ருகத் தெரிந்தது. கும்பலில் நின்று கொண்டிருந்த அய்யா சாஸ்திரி, —''மௌனம் சம்மதத்துக்கு அடையாளம், அவனே தீ வைத்தது உண்மைன்னு தெரியுது. இனி மேற்கொண்டு பேசுங்கள்'' என்றுர்.

தோட்டக்காரர்கள் ஆளுக்கு ஆள் பேச ஆரம்பித்தார்கள். ''என் செங்கரும்பு கல்கண்டு மாதிரி வெல்லம் ஆகிக்

கிட்டிருந்தது. அணுவுக்கு ரெண்டு அச்சுன்னு போட்டாலும் வியாளக் கௌமை சந்தையிலே பிச்சுகிட்டு போயிடும். எப்படி யாளுலும் முந்நூறு ரூபாய் நட்டமாப் போச்சு'' என்று ஆட்டுக்கார கன்னையன் சொன்ஞன். ''என் கரும்பு ஆலையிலே அரைச்சாச்சு உண்மைதான். ஆஞ முளைக்கரும்பு வளர்ந்திருந்தா நானூறு ரூபாய் வந்திருக்கும்,'' என்ருன், வளையல்கார ரேவண்ண செட்டி. ஒவ்வொருவரும் தங்களுடைய நட்டத்தை மதிப்பிட்டுச் சொன்ஞர்கள். அய்யா சாஸ்திரிக்கு தோட்டம் இருக்கவில்லை. அவரும் தன்னுடைய நட்டத்தைக் கூறிஞர். ''எனக்குத் தோட்டம் இல்லைதான். ஆஞ எல்லோருடைய ஆலையிலும் அரவையிருந்தால் கணபதி பூசைக்காக ஒரு காய்ச்சலுக்கு ஒரு உருண்டை வெல்லம் எனக்குக் கொடுத்திருப் பாங்க. மொத்தமாகக் கணக்குப் போட்டால் ஐநூறு உருண்டை எனக்கு வந்திருக்கும். கணக்குப் பார்த்தால் அம்பது ரூபாய் ஆச்சு. மேற்கொண்டு கருப்பஞ்சாறு வெல்லம் காய்ச்சும் போது அங்கே போஞல் கெடைக்கிற சூடான வெல்லம், இதெல்லாம்...''

''சாஸ்திரிகளே, உங்க வட்டிக் கணக்கு ரொம்பவும் அதிகமாப் போச்சு. கரும்பு தோட்டக்காரனுக தணக்குப் போட்டால் நியாயம். நீங்க கணபதி பூசைக்கு வர வேண்டி யதையெல்லாம் கணக்குப் போட்டு நட்டக் கணக்குப் பாக்க வேண்டாம்'' — மாதேவய்யா இடையில் குறுக்கிட்டுச் சொன்ஞர். ''கரும்பு எல்லாம் அரைச்ச பிறகு முளைக் கரும்புக்கு நானூறு ரூபாய் கணக்குப் போடுகிருர், ரேவண்ண செட்டியார். அவருக்கு இருப்பது ஒண்ணரை ஏக்கர் தோட்டம். முதல் விளைச்சலுக்கே நூறு ரூபாய் கிடைக்கலை. முளைக் கரும்புக்கு எப்படி நானூறு கிடைக்கும்? 'நான் முளைக்கரும்புக்கு இடம் விடப் போறதில்லை. நிலத்தை மட்டம் பண்ணி நெல் போடப் போறேன் கரும்பு போட்டால் பூமி கெட்டுப் போகுது' ன்னு அவர் எங்கிட்டே சொன்ஞர்''.

இன்னும் எத்தனை பேர் தங்களுடைய நட்டத்தை அதிகப் படுத்தி சொல்லிக் கொண்டிருந்தார்களோ! ஆஞல் அய்யாவுடைய பேச்சிஞல், மற்றவர்கள் ஒப்புக் கொள்ளும்படியாக யோசனை செய்து அவர்கள் பேச வேண்டியதாயிற்று. அய்யா மறுபடியும் துவங்கிஞர். ''கணபதி பூசைக்குக் கொடுப்பது ஒரு பிடியளவுள்ள உருண்டை அது மாதிரி ஐநூறு கொடுத்தால் அம்பது ரூபாய் எவன் கொடுக்கிருன்? அப்படின்ஞ ரூபாய்க்கு பத்து உருண்டை யாச்சு. ரூபாய்க்கு நாப்பது வரை அச்சு வெல்லமே கிடைக்குது. பிடி அளவு உருண்டைக்கு ஒண்ணரை அஞ எவன் கொடுக்கிருன்?''

அத்துடன் அய்யா சாஸ்திரிகளுடைய வாய் அடைத்துப் போயிற்று. மாதேவய்யா கடைசியாக முடிவு சொல்பவரைப் போல எழுந்து நின்று சொன்னார். ''நட்டக் கணக்குப் போட்டால் யாருக்கும் கெடைக்கப் போவதில்லே. பையன் வேணுமின்னே செய்யலே. இத்தனை சின்னப் பையன் பீடி இழுக்கிறான். அவனுக்கு புத்தி புகட்ட வேணும். ஏதாவது குச்சி எடுத்து விளாசி அனுப்புங்க. இல்லாவிட்டா அவன் வாத்தியார் கிட்டே சொல்லி *கோதண்டத்திலே கட்டி வையுங்க'' ''என்னைக் கோதண்டத்திலே கட்டி வைக்காதீங்க. உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கிறேன்''— என்று அப்பண்ணய்யா அரற்றினான். ''என் தப்பு எதுவுமே கிடையாது. அவனைக் கட்டி வையுங்க'' என்று சென்னிகராயன் தானே வலியப் பேசினான்.

ஆனால் மணியக்கார சிவே கவுடர் வேறு முறையில் பேசினார். ''அய்யா, நீங்க சாமியார். வீடுமில்லே, வாசலுமில்லே, பெண்டாட்டி இல்லே, குழந்தை இல்லே. பையனுக்கு புத்தி புகட்டுவது வேறே பேச்சு. இப்போது ஆகியிருக்கிற நட்டம் யார் கொடுக்கிறாங்க? நான் ஊர் மணியக்காரன். நியாயம் சொல்ல வேணும். மொத்தமாக இவங்க ஊர் முழுவதுக்கும் ஒரு தொகை அபராதமாக கொடுத்துவிட வேணும். அதை யார் யாருக்கு நட்டம் ஏற்பட்டதோ அவங்களுக்கு பிரிச்சுக் கொடுக்க வேணும்''.

''நியாயம், நியாயம்'' என்று பலர் தலையசைத்தார்கள். ரேவண்ண செட்டியும், அய்யா சாஸ்திரிகளும் உரக்க ''அதுதான் அப்பனுக்குப் பிறந்த பேச்சு'' என்றார்கள். மாதேவய்யாவைக் கேலி செய்வதற்காகவே அவர்கள் அப்படி சொன்னார்கள். ஆனால் மாதேவய்யா அதைப் பொருட்படுத்தவில்லே. விவகாரம் எப்படி திரும்புகிறது, என்ற உணர்வு இப்போது கங்கம்மாவிற்கு உண்டாயிற்று. அவள் கையெடுத்துக் கும்பிட்டுக் கொண்டே ''நான் புருஷன் செத்த முண்டச்சி. இவனுக புத்தி இல்லாம ஏதோ செஞ்சிட்டானுக .....'' என்று சொல்லிக் கொண்டிருக்கும் போது சென்னிகராயன் குறுக்கிட்டு, ''என் தப்பு ஏதுமில்லேயம்மா. அப்பண்ணய்யாவை மட்டும் சொல்லு'' என்றான். கங்கம்மா அதைக் கவனியாமல் கேட்டுக் கொண்டாள்-. ''தப்பு செஞ்சதுக்காக அவனைக் கோதண்டத்திலே கட்டி வையுங்க. எங்கிட்டே அபராதம் கட்ட ஒண்ணுமே இல்லே''.

---

* இதில் கட்டினால் உடம்பை அசைக்க முடியாது. பையன்களை தண்டிக்கும் பழைய காலமுறை.

''என்னை கோதண்டத்திலே கட்டாதீங்க அபராதமே வாங்கிக் கொள்ளுங்க'' என்று அப்பண்ணய்யா அழுது கொண்டே சொன்னான். ஊர்ப் பெரியவர்களிடையே பேச்சு வார்த்தை யாயிற்று. எல்லோருக்கும் ஆகியிருந்த நட்டத்தைக் கணக்குப் போட்டார்கள். எல்லோருக்கும் முழுவதும் கொடுக்க முடியா விட்டாலும் சிறிது சிறிதாக வேணும் பங்கு போட்டுக் கொடுக்க கங்கம்மா ரூபாய் இரண்டாயிரம் தர வேண்டும். கணபதி உருண்டை தவறி விட்டதற்காக அய்யா சாஸ்திரிகளுக்கு மொத்த மாக பத்து ரூபாய், முளைக் கரும்பு நட்டத்துக்காக ரேவண்ண செட்டிக்கு இருபத்தைந்து ரூபாய் தர வேண்டும் என்று முடிவாகியது.

கங்கம்மா அரற்றினாள். கையெடுத்துக் கும்பிட்டாள். ஆனால் எவரும் கேட்கவில்லை. அவள் சார்பாகத் தான் பரிந்து பேசினாலும் பயனில்லை என்று அறிந்த மாதேவய்யா அமைதியானார். தன்னிடம் ஒரு தம்பிடியும் இல்லையென்று கங்கம்மா கூறியதற்கு மணியக்காரர் சிவே கவுடர் வழி சொன்னார். ''உன் வயல் புன்செய், தோப்பு, வீடு எல்லா சொத்தையும் எனக்கு அடமானம் எழுது. நான் பணம் தர்றேன். என் கடனைத் தீர்த்துகிட்டு அடமானம் திரும்ப வாங்கிக் கொள்'' என்றார்.

கங்கம்மாவுக்கு எதுவும் தோன்றவில்லை. அய்யா சாஸ்திரி களின் முகத்தைப் பார்த்தாள். தனக்கு வர வேண்டிய பத்து ரூபாயை இழக்க அவர் தயாராக இல்லை. அவர் ஒன்றும் பேசவில்லை. கிராமத்திலிருந்த மற்றொரு புரோகிதர் அண்ணு ஜோசியர். அய்யா சாஸ்திரிகளின் உறவினர், அதாவது அவரது தூரத்து வகையில் அண்ணு மகன். சித்தப்பா பேச்சுக்கு எதிராக அவர் வலியப் பேசுவதில்லை. கிராமத்துப் பெரியவர்கள் கூடிப் பேசிச் செய்த முடிவு - அவள் ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று.

அபராதத்திலிருந்து தப்புவிப்பதற்காக மாதேவய்யா முதலிலேயே முயற்சி செய்தார், நடக்கவில்லை. ஆனாலும் கங்கம்மாவிற்கு ஒரு புத்திமதி கூறினார். ''நிலத்தை அடமானம் வெச்சு கடன் வாங்காதீங்க. உங்களிடம் இருக்கிற தங்கம், வெள்ளி எது இருந்தாலும் வித்துக் கொடுங்க. பத்தாமல் போனால் வீட்டிலுள்ள தானியம், காய்கறி கொடுத்து பணத்தைச் சரிக்கட்டுங்க. சொத்து மேல் பத்திரம் எழுதாதீங்க. கடன் வாங்கினால் வளரும். அதெல்லாம் சமாளிக்க உங்களுக்கு விவரம் இல்லை.''

மணியக்கார சிவேகவுடர் குறுக்கிட்டார் ''அதுக்கென்ன விவரம் வேணும்? நானென்ன அவங்களிடம் வட்டி வாங்குறேனா?

பேச்சுக்கு இருக்கட்டுமின்னு அடமானம் எழுதரோம். கல்யாணத்தில் கெடச்சது, பெரியவங்க கொடுத்தது மாதிரி புடவை துணி மணிகளைக் கொடுத்திட்டா மறுபடியும் வருமா? சாமியாருக்கு தங்கம், வெள்ளி வேண்டாமின்னு குடும்பஸ்தர்களுக்கு வேண்டாமா? என்ன கங்கம்மா, இந்த சாமியார் பேச்சைக் கேட்கப் போறீங்களா? கிராமத்தில் உள்ள விவரம் தெரிஞ்ச பத்துப் பேரின் பேச்சைக் கேட்கப் போறீங்களா?''

பத்துப் பேரும் மணியக்காரரின் பேச்சுதான் சரி என்றார்கள். மணியக்காரரின் மைத்துனன், தற்போது கணக்குப்பிள்ளை வேலை பார்த்து வரும் சிவலிங்கே கவுடன் ''கல்யாணத்தில் கொடுத்த தங்கத்தை விக்கறதுக்கு புருஷன் செத்த பிறகு மனைவிக்கு அதிகாரம் இல்லை. அப்படி விக்க சட்டமும் இல்லை. நிலம் அடமானம் வைக்கலாம்'' என்றான். அய்யா சாஸ்திரிகளும் ஆமோதித்தார். இத்தனை பேர்களின் கருத்தை எதிர்க்கும் சட்ட அறிவு மாதேவய்யாவுக்கு இல்லை. இருந்தாலும் இந்தப் பஞ்சாயத்துக்காரர்களுக்கிடையே தம்முடைய கருத்துக்கு என்ன மதிப்பு? தன்னுடைய பேச்சை கங்கம்மா கேட்பாளென்ற உறுதியும் இல்லை. அவர் அமைதியாக இருந்தார்.

இனி நியாய விவகாரத்தில் தாமதம் செய்வதற்கில்லை. அப்பொழுதே இரண்டு வண்டி கட்டிக்கொண்டு இரண்டு பிள்ளைகளையும் கங்கம்மாவையும் அழைத்துக் கொண்டு மணியக்காரரும் ஊர் முக்கியஸ்தர்களும் திப்டூருக்குப் புறப்பட்டார்கள். சப்-ரிஜிஸ்தரார் முன்பு சிவேகவுடர் இரண்டாயிரம் கொடுத்தார். தன்னுடைய குடும்ப கஷ்டத்துக்காக என்று எழுதி அவளுடைய எல்லாச் சொத்துக்களையும் அடமானம் எழுதியாயிற்று. பத்திரம் எழுதியவன் கணக்குப்பிள்ளை சிவலிங்கே கவுடன், எழுத்துக் கூலி குறைந்தது இருபத்தைந்து ரூபாய் தர வேண்டுமென்று அவன் நச்சரித்து அடம் பிடித்தான். இந்தத் தடவை விளைச்சல் ஆனவுடன் அவரைக்காய் விற்றுக் கொடுப்பதாக கங்கம்மா ஒப்புக்கொண்டாள். தன்னுடைய கரும்புத் தோட்டத்து நட்டம் என்று நானூறு ரூபாயை வைத்துக் கொண்டு மீதியை மற்றவர்களுக்கு மணியக்கார சிவேகவுடர் பங்கிட்டார்.

விதவையான கங்கம்மா திப்டூரில் உள்ள ஓட்டலில் சாப்பிடுவதற்கில்லை; வறுப்பதற்கு முன்பு தண்ணீர் விடுவதால் பொரியையும் தொடமுடியாது. குளத்தில் குளித்துவிட்டு ஈரப்புடவையுடன் இரண்டு பிடி வறுத்தகடலை, ஒரு துண்டு வெல்லம் கடித்துவிட்டு வண்டியில் உட்கார்ந்தாள். பையன்

களுக்கு ஆறணு கொடுத்து பிராமணர் ஓட்டலில் இருபத்து நான்கு தோசையும், கெட்டிச் சட்னியும் வாங்கிக் கொடுத்தாள்.

ஊருக்கு வந்தபின் நான்கு நாட்கள் அவள் அவமானத்தால் வெளியே எங்கும் போகவில்லே. மூன்று மைல் தூரத்தில் உள்ள சன்னேனவள்ளி கிராமத்தின் குயவனுக்கு பதினுறு ரூபாய் கொடுத்து ஐ நூ ா று உருண்டை ஓடுகள் வரவழைத்து பின்புறத்துக் கூரை முழுவதும் வேயச் செய்தாள்.

எட்டு நாட்கள் ஆன பிறகு ஒருநாள் அவளே கோவில் மாதேவய்யாவுக்கு சொல்லி அனுப்பினுள். கஷ்டம், சுகங்களே யெல்லாம் சொன்னபிறகு ''மேற்கொண்டு என்ன செய்ய லாம்?'' என்று கேட்டாள். ''அப்பண்ணய்யாவை வாத்தியா ரிடம் சேர்த்து விடுங்க. கொஞ்சம் படிப்பு வந்தால் அவன் ஒழுங்காவான். சென்னிகராயனே ஹொ ா ன் ன வ ள் ளி க் கு அனுப்புங்க. நீங்களே போய் அவனே அங்கே விட்டு குடும்பத்துக் கணக்குப்பிள்ளே தொழில் கண்டவன் கையில் இருக்கு. இவனே புத்திசாலியாக்கி படிப்பு சொல்லிக் கொடுங்கன்னு அவரிடம் சொல்லிவிட்டு வாங்க. இனியும் தாமதம் செய்யறது நல்லதில்லே. அவனுக்கு இப்போதே பதினஞ்சு வயசு ஆயிடுச்சே, இல்லேயா?'' என்ருர் மாதேவய்யா.

கங்கம்மா ஒப்புக் கொண்டாள். ஹொன்னவள்ளி கணக்குப் பிள்ளே சீதாராமையாவின் கீழ் சென்னிகராயனே கணக்கு படிப் பதற்காக விடப் போகும் செய்தி மணியக்கார சிவேகவுடருக்குத் தெரிந்தது. அவரே வந்து சொன்ஞர்.'' அத்தனே தூரம் எதுக்கு அனுப்புறீங்க? நம் சிவலிங்கன் கிட்டே சேர்த்து விடுங்க. இங்கேயே வீட்டுக்கு முன்ஞலே இருந்து படிச்சால் ஆகாதா?''

ஆனுல் ஹொன்னவள்ளி சீதாராமையாவின் கீழ் படிக்காமல் படிப்பு வராது என்பது க ங் க ம் ம ா வு க் கு உறுதியான நம்பிக்கையாய் இருந்தது. மற்றவர்கள் கணக்குப்பிள்ளேத் தொழில் செய்யலாம், ஆனுல் அதற்கு குருவாக இருக்கக்கூடிய யோக்கியதை இந்த வட்டாரத்தில் ஹொன்னவள்ளிக் காரருக்கு மட்டும்தான் உண்டு. ஜாவகல்லு வட்டாரத்தில் ஹளேபீடு வெங்கடேசய்யாவுக்கு அதைப்போல யோக்கியதை உண்டு. ஆனுல் அவர் இந்த வட்டாரத்துக்காரர் அல்ல. ஒவ்வொரு இடத்தின் முறை, பழக்கம் அங்குள்ளவர்களுக்குத்தான் தெரியும்.

கங்கம்மா வில்வண்டி பூட்டிக்கொண்டு பிள்ளேகளுடன் ஹொன்னவள்ளிக்குப் புறப்பட்டாள். புறப்படுவதற்கு இரண்டு

நாட்களுக்கு முன்பு சென்னிகராயன் நாவிதன் ருத்ரண்ணனிடம் தலை சவரம் செய்துகொண்டு நெற்றியில் சந்தனப்பொட்டு இட்டுக்கொண்டான். அதற்கு மறுநாள் எண்ணெய்க் குளியல் ஆயிற்று. தேன்குழல், இனிப்பு மாவு எல்லாம் வைத்து மூட்டை கட்டியாயிற்று. கோட்டு, தொப்பி போட்டுக் கொண்டு அவன் வண்டி ஏறும்போது மாதேவய்யா சொன்னார். ''பெரிய இடத்துக்குப் போகிறாயடா! இனிமேல் உன் வாயில் எந்தத் திட்டும் வரக்கூடாது. புத்திசாலியாகத் திரும்பி வா.''

ஹொன்னவள்ளிக்காரருக்கு இறந்துபோன ராமண்ணாவைத் தெரியும். கங்கம்மாவின் கோரிக்கையை ஏற்றுக் கொண்டு சென்னிகராயனைத் தன் வீட்டில் வைத்துக்கொண்டு கணக்குச் சொல்லித்தர ஒப்புக்கொண்டார். சென்னிகராயனை சீதாராமையாவின் வீட்டில் விட்டபின், தாயும் தம்பியும் ஊருக்கு திரும்பிச் செல்லும் பொழுது சென்னிகராயன் அழுது கொண்டே நின்றான். அவன் கடைசியில் ''யாரிடமாவது இன்னொரு தடவை தேன்குழலும், இனிப்பு மாவும் கொடுத்தனுப்பு'' என்றான்.

ஊருக்குத் திரும்பிய பிறகு அப்பண்ணய்யாவை சாதாளி சென்ன கேசவய்யாவின் மடத்தில் சேர்த்தாகிவிட்டது. தினமும் அவனை மடத்துக்கு அனுப்ப கால்சட்டை ஜேப்பு நிரம்ப வறுத்த கடலை, வெல்லம் அரைத்துண்டு கொப்பரைத் தேங்காய் முதலியன கொடுக்க வேண்டியிருந்தது.

# இரண்டு

## 1

சென்னிகராயன் மொத்தமாக மூன்றுவருடங்கள் சிஷ்யனாக இருந்தான். இப்பொழுது அவன் சுலபமாக இடது கைவிரலில் ரூல்தடியை உருட்டுகிறான். வலது கையில் பேனாமுனையிலோ, பென்சிலிலோ கோடு போடுகிறான். கணக்கு பத்திரங்களில் இடது பக்கம் தப்பில்லாமல் கழிப்பது மட்டுமன்றி வலது பக்கம் எப்படி எழுத வேண்டுமென்று தெரிந்து கொண்டிருக்கின்றான். அவனுடைய படிப்பு முடிவடைந்து விட்டதா, இல்லையா என்று சொல்வது கஷ்டம். ''நீ ரூபாயிலே நான்கணா கூட படிக்கவில்லை'' என்று குரு சீதாராமையா சொல்கிறார். அவர் எதிரே எதிர்த்துப் , பேசாவிட்டாலும் சென்னிகராயனுக்கு அந்தப் பேச்சில் நம்பிக்கையில்லை. ''அவருடைய கணக்கையே படித்துக்

கொண்டு இங்கேயே விழுந்து கிடக்க வேணுமின்னு சொல்கிறார்'' என்று அவன் உள் அர்த்தம் செய்துகொண்டான்.

அவன் கால்நடையாகவே வருடத்துக்கு இரண்டு மூன்று தடவை ஊருக்கு வந்து போய்க் கொண்டிருந்தான். வந்தவன் தாயிடம் சொன்னான். ''இன்னும் எத்தனை நாள் அங்கே இருப்பது? நான் ஊருக்கு வந்து கணக்குப்பிள்ளை வேலையை ஒத்துக்கிறேன்''.

''கணக்கு சரியாக வந்திடுச்சா?'' வராமல் என்ன? கேட்டுக் கொள் ஒண்ணும் நம்பர் பணக்கணக்கு வழக்கு, இரண்டாம் நம்பர் தரிசு பூமி, மூணும் நம்பர் விளைச்சல், நாலாவது நம்பர் சுவாதீனம், அஞ்சாவது குத்தகை விவரம், ஆறுவது அதிகம் குறைச்சல், ஏழாவது தகராறு பூமி, எட்டாவது இனும் ரிஜிஸ்தர், ஒன்பதாவது ஜமாபந்திக் கணக்கு, பத்தாவது தினசரி வசூல், பதினொண்ணுவது ரசீது பட்டியல், பன்னெண்டாவது ஜனத்தொகை கணக்கு. இது பன்னெண்டும் கணக்குப்பிள்ளை வேலைக்கு வரக்கூடிய கணக்குகள்''— என்று பிரபவ, விபவ முதலிய அறுபது வருடங்களின் பெயர்களையும் மனப்பாடமாக ஒப்புவிப்பதுபோல் சொன்னான்.

மகன் கல்வியில் தேர்ச்சி பெற்று விட்டான் என்று தாய் நம்பிக்கை கொண்டாள். ''நீ பேசாமல் இருந்துவிடப் போறியா, எனக்கு கல்யாணம் செஞ்சு வைக்கப் போறியா?'' என்று மகன் கேட்டான்.

''செஞ்சு வைக்காமல் என்ன, கணக்குப்பிள்ளை வேலைக்கு வரட்டும்''.

''அது தானே வரப்போகுது. எனக்கு பதினெட்டு வயசாகலியா? நான் மேஜர் ஆகிட்டேன், மத்தவங்க எல்லோரும் பதினாறு வயசிலேயே ஆண்பிள்ளைகளுக்கு கல்யாணம் செய்து வைக்கிறாங்க. நாம் இப்பிடி இருந்தா மத்தவங்க என்ன சொல்லுவாங்க?''

சென்னிகராயனுக்குப் பெண் கொடுக்க அப்பொழுதே பல பேர் முன்வந்து கொண்டிருந்தார்கள். ஆனால் கங்கம்மா அதைப் பற்றி சிரத்தை காண்பிக்கவில்லை. இப்பொழுது மகனே கேட்கும் பொழுது செய்துவிட வேண்டியதுதான். அதைப்பற்றி மாதேவய்யாவிடம் ஆலோசனை கேட்டபொழுது, ''அவன் இன்னும் ரெண்டு வருஷம் கணக்குப் படிக்கட்டும். கணக்குப் பிள்ளை வேலை கைக்கு வந்த பிறகு கல்யாணம் செய்து வைக்கலாம்'' என்றார்.

சென்னிகராயனுக்குக் கோபம் வந்தது. ''ஓகோ, இன்னும் ரெண்டு வருஷம் காத்திருக்க வேணுமாம். உங்களுக்கு என்ன தெரியும்? சும்மா இருங்கய்யா'' — என்றான். இதற்கு முன்பு அவன் ஒருபோதும் அவரை ''உங்களுக்கென்ன தெரியும் சும்மா இருங்க'' என்று சொன்னதில்லை. அவர் அமைதியானார்.

சென்னிகராயன் மறுபடியும் ஹொன்னவள்ளிக்குப் போக வில்லை. அவனே ஒருநாள் சிவலிங்கே கவுடனிடம் போய் ''என் வேலையை எனக்குக் கொடு'' என்று கேட்டபொழுது ''கொடுப்போம், மேலிடத்திலிருந்து உத்தரவு வரட்டும்'' என்று பதில் சொன்னான். மேற்கொண்டு என்ன செய்வது என்று எதிர்காலக் கணக்குப் பிள்ளைக்குத் தெரியவில்லை. அதற்குள் திருமணப் பேச்சுக்கள் நடைபெற்று வந்ததால் கணக்குப்பிள்ளை தொழிலின் மீது அவனுடைய கவனம் செல்லவில்லை.

ஒருநாள் இவர்களுடைய வீட்டின் முன்பு ஒரு பெரிய வெள்ளைக்குதிரை வந்து நின்றது. மின்னுகின்ற தோல் கடிவாளம் பூட்டியிருந்த அதன் மேலிருந்து வெள்ளைச் சட்டையும் கோட்டும், வெள்ளைக் கால் சராயும், பூட்சும் அணிந்திருந்த இளைய வயது ஆள் ஒருவர் இறங்கினார். அந்தப்பெரிய வெள்ளைக் குதிரையை யும், அவருடைய மிடுக்கையும் பார்த்தால் ஜில்லா பெரிய அதிகாரி டெபுடி கமிஷனர்தான் அவர் என்று எல்லோரும் சொல்வார்கள். கங்கம்மா அப்படியே நினைத்துக் கொண்டு உள்ளே போய் சென்னிகராயனிடம் சொன்னாள். அவன் வெளியே வந்து பயபக்தியுடன் கை கூப்பி, ''மகா பிரபு, தயவு காட்ட வேணும்,'' என்று தலை வணங்கியவாறு சொன்னான். தனக்குக் கணக்குப்பிள்ளை வேலை தருவதற்காக டெபுடி கமிஷனர் வந்திருக்கிறார் என்று நினைத்துக் கொண்டான்.

''சிவலிங்கே கவுடனுக்கு சொல்லியனுப்பட்டுமா?'' அவன் கேட்டான்.

''எதுக்கு?''

''கணக்குப்பிள்ளை வேலை பொறுப்பு அவன்கிட்டேதான் இருக்குது. மகாபிரபு அதை எனக்கு வாங்கித்தர வேணும். இறந்து போன கணக்குப்பிள்ளை ராமண்ணாவின் மூத்த மகன் நான்தான்''- என்று சென்னிகராயன் சொன்னான்.

''வாங்கித் தரலாம். இப்போது உள்ளே நட.''

அவர் உள்ளே வந்தார். வீட்டில் நாற்காலி இருக்கவில்லை. அண்ணா ஜோசியர் வீட்டில் இருக்கிற ஒரு நாற்காலியைத்

தவிர அந்த ஊரில் யாருடைய வீட்டிலும் நாற்காலி கிடையாது. வந்த ஆள் முற்றத்துத் திண்ணையில் அமர்ந்தார். சென்னிக ராயன் உள்ளே சென்று தண்ணீர் கொண்டு வந்து வைத்தான். ''நாங்க முதலில் தண்ணீர் குடிக்கக் கூடாது'' என்ருர் அவர். இவர்கள் இரண்டு பேருக்கும் விஷயம் தெரியவில்லை. அவரே தொடர்ந்தார். ''நாகலாபுரம் கிராமம் தெரியுமில்லையா? நான் அங்கே ஊர் புரோகிதர், பெயர் கண்டி ஜோசியர். என் மகள் பெயர் நஞ்சம்மா. ரேவதி நட்சத்திரம். ரெண்டாம் பாதம். பன்னெண்டு வயசு நடக்குது. ஜாதகம் கொண்டு வந்திருக்கேன். உங்களுடைய மகன் ஜாதகத்தைக் கொடுங்க.''

டெபுடி கமிஷனர் என்று இவர்கள் நினைத்த ஆள் கண்டி ஜோசியர் என்று புரிந்து கொள்வதற்கு கங்கம்மாவுக்கு சிறிது நேரம் ஆயிற்று. தன்னுடைய மகனுக்கு இவர் பெண் கொடுக்க வந்திருக்கிருர் என்னும் விவரம் அவளுக்கு சிறிது மன நம்பிக் கையைக் கொடுத்தது. ஆனாலும் பெரிய குதிரையின் மேல் வந்திருப்பவர், டெபுடி கமிஷனரைப் போல உடை உடுத்தி யிருப்பவர், ஆகையால் கங்கம்மா தயக்கத்துடன் ''கணக்குப் பிள்ளை வேலை கைக்கு வரும் வரை கல்யாணம் வேண்டாம்னு நான் இருக்கேன்.''

''உனக்கென்ன தெரியும்? சும்மா இரம்மா. வேலை வாங்கித் தரேன்னு அவர் சொல்லலியா?'' என்று சென்னிகராயன் தன் அம்மாவை அடக்கினுன்.

''எனக்கு அதெல்லாம் தெரியும். உங்க வேலையை உங்களுக்கு வாங்கித்தர எவ்வளவு நேரமாகும்? நான் மேலதிகாரி யிடம் சொல்றேன். முன்னலே கல்யாணம் ஆகட்டும்.''

கங்கம்மா மகனுடைய ஜாதகத்தைக் கொடுத்தாள். கண்டி ஜோசியர், சுயமாகவே ஒரு சோதிடர்தான், அவ்விடத்திலேயே உட்கார்ந்து, கூட்டிப், பெருக்கிப் பார்த்து, ''நல்லாப் பொருந்துது. இனி பேசுங்க'' என்ருர்.

நாகலாபுரம், ராமஸந்திர கிராமத்திற்கு மேற்கே பன்னிரண்டு மைல் தூரத்தில் உள்ள கிராமம். அந்த ஊர் கண்டி ஜோசியருடைய புகழைப் பற்றி கேள்விப்படாதவர்களே இல்லை. ராமஸந்திர கிராமம், திப்டூர் தாலூக்கா, தும்கூர்

ஜில்லாவைச் சேர்ந்தது. நாகலாபுரம், சென்னராயன் பட்டணம் தாலூக்கா ஹாசன் ஜில்லாவைச் சேர்ந்தது. ஆகையால் இந்தப் பக்கத்துக் காரர்களுக்கு ஜோசியருடைய பெயர் அவ்வளவு பழக்கமில்லை. சென்னராயன் பட்டணம் தாலூக்கா, சாந்தி கிராமம், ஹாசன், கௌசீகம் முதலிய இடங்களில் அவரைப் பற்றிக் கேள்விப்படாதவர்களே இல்லை.

நல்ல உயரம், அகலமானநெற்றி, துடிப்பான கண்கள். இந்தத்தோற்றம் தான் கண்டி ஜோசியர். அவருடைய பதினாறாவது வயதில் திருமணம் நடைபெற்றது. இருபதாம் வயதில் மனைவி வீட்டுக்கு வந்தாள். இரண்டு ஆண்டுகளில் ஒரு குழந்தை பிறந்து இறந்து போயிற்று. பிறகு இரண்டு குழந்தைகள் பிறந்து அவைகளும் இறந்த பிறகு கடைசி பிரசவத்தில் மனைவியே இறந்து போனாள். தங்கிய பெண் குழந்தையை ஜோசியருடைய தாய் வளர்த்து வந்தாள். ஜோசியர் மறுபடியும் திருமணம் செய்து கொள்ளவில்லை. இப்பொழுது அவருக்கு இருப்பவர்கள் இரண்டு குழந்தைகள்தான். மூத்த மகன் கல்லேசன் போலீஸ் கான்ஸ்டபிளாக சிரவண பௌகொளாவில் வேலைபார்த்துக் கொண்டிருந்தான். தாய் இறந்தபோது உயிர் பிழைத்த குழந்தை நஞ்சம்மாவைத்தான் இப்போது சென்னிக ராயனுக்குத் திருமணம் செய்து கொடுக்கவிருக்கிறார்.

பிறந்த பிறகு தானாகப் புகழ் கொடுக்கும் வமிசத்தில் கண்டி ஜோசியர் பிறக்கவில்லை. புகழ் பெறுவதற்கு சில தன்மைகள் வேண்டுமல்லவா? பீமனைப் போன்ற அவருடைய உடல் ஒரு முறை பார்த்தவுடன் நினைவில் நிற்கக் கூடியது. நாடகம், கூத்து போன்றவைகளில் அவருடைய வேஷத்தை ஒரு முறை பார்த்த வர்கள் அதை மறக்கமுடியாது. காளிதாசன் நாடகத்தில் போஜராஜா வேஷம் அவரைத் தவிர வேறு எவருக்கும் பொருந்தக் கூடியது அல்ல. மகாபாரதம் நாடகத்தில் துரியோதனன் வேஷம் அவருக்கென்றே இருப்பது. *யட்சகானம் நாடகத்தில் வீரன் வேஷம் போட்டால் இரண்டு பலகைகளை முறித்துப் போடாமல் ஆட்டத்தை நிறுத்தமாட்டார். ஆரம்ப அறிமுகப் பாட்டை ஒரே மூச்சில் பாடி முடிப்பார். ஆர்மோனியம் தபலா இரண்டிலும் பழக்கம் உண்டு. நல்லது, கெட்டது இரண்டுக்கும் புரோகிதம், சோதிடம், பில்லி சூன்யம், மருந்து எல்லாமே அவருக்குக் கைவந்தவை. இவையல்லாமல் அதிகாரி களுடன் ஆங்கிலத்தில் பேசும் திறமை, முஸ்லிம்களுடன் உருதுவில் பேசும் அறிவு எல்லாம் உண்டு.

---

* யட்சகானம் கர்நாடக மாநில கிராமங்களில் நடத்தப்படும் கலை நிகழ்ச்சி. தெருக்கூத்து போன்றது.

அவருடைய தைரியம்தான் அவருக்குப் புகழ் தேடித் தந்தது. இதற்கு முன்பு ஏதேதோ கோர்ட்டுகளில் வழக்காடி வெற்றி பெற்ற அவர், ஒன்றிரண்டு கொலைகளையும் செய்து கோர்ட்டில் ஜெயித்திருக்கிறார், என்று மக்கள் பேசிக் கொண்டார்கள். அது மெய்யா, பொய்யா என்று யாருக்கும் தெரியாது. அவருடைய ஜோதிடம் பொய் என்று சொல்லிக் கொள்கிறார்கள். யாருடனாவது தகராறு செய்தால், ''உன்னைக் கொலை செய்கிறேன், பார்'' என்ற வார்த்தைகளெல்லாம் அவர் வாயிலிருந்து வருவதைப் பார்த்தால், அவர் எத்தனை கொலை செய்திருக்கிறாரோ என்று திகில் உண்டாகும். ஆந்தையைப் போல் இருட்டைக் கண்டு பயப்படாதவர். இடுப்பில் ஒரு பிச்சுவாக் கத்தியைச் செருகிக் கொண்டு காலை வீசிப் போட்டு நடக்க ஆரம்பித்தாரானால் பொழுது விடிவதற்குள் இருபத்து நான்கு மைல் தூரத்தில் உள்ள ஹாசன் போய்ச் சேர்ந்து விடுவார். ஜோசியர் பகல் நேரத்தில் நடப்பது மிகவும் அரிது. இருளில் கொள்ளிவாய்ப் பிசாசையும், சடைப்பேயையும் தைரியமாகச் சந்தித்து அவைகளுக்குப் பாடம் புகட்டிய இவருடைய புகழ் பரவியதில் ஆச்சரியமென்ன?

சென்னிகராயனுடைய திருமணத்துக்கு ராமஸந்திர கிராமத்தைச் சேர்ந்த பிராம்மணர்கள் எல்லோரும் வந்திருந்தனர். அவனுடைய கணக்குப்பிள்ளை அதிகார எல்லைக்குட்பட்ட குருபரஹள்ளி கிராம மணியக்காரன் குண்டே கவுடனும், மற்ற பெரிய மனிதர்களும் வந்திருந்தார்கள். மணமகன் வீட்டுக்காரர்கள் மொத்தமாகப் பத்து வண்டிகள் பூட்டிக்கொண்டு புறப்பட்டுப் போனார்கள். நாகலாபுரம் கிராமத்தின் ஏரிக்கு அருகிலேயே கொம்பு வாத்தியங்களை முழக்கி பெண் வீட்டார் இவர்களை வரவேற்றார்கள். மாப்பிள்ளையை அழைத்துப்போக கண்டி ஜோசியரின் வெள்ளைக்குதிரையைக் கொண்டு வந்திருந்தார்கள். அந்தக் குதிரையின் மீது ஏறி அமர்ந்து கொள்வதற்குள் சென்னிகராயன் பயந்து, நடுங்கி விட்டான். ஆனால் ஏறி உட்காராமற் போனால் ராமஸந்திர கிராமம் முழுவதற்குமே அது பெரிய அவமானமாகிவிடும். ''தூ! நீ ஒரு ஆண்பிள்ளையா!'' என்று கங்கம்மா கேவலம் செய்த பிறகு அவன் ஏறினான். குதிரை அங்குமிங்கும் அலையாமல் ஒரே சீராக நடப்பதற்காக பெண்ணின் அண்ணன் போலீஸ்காரக் கல்லேசன் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தபடி அருகிலேயே நடந்து வந்தான்.

திருமணத்துக்கு வந்திருந்த பையன் வீட்டாருக்கு கண்டி ஜோசியரின் தன்மை பரிச்சயமாயிற்று. பெரிய பணக்காரராக

இல்லாவிட்டாலும் ஓரளவு வசதிபடைத்தவர். சாப்பாட்டு விஷயத்தை அமர்க்களமாய் ஏற்பாடு செய்திருந்தார். திருமணத் துக்கு ஹாசன் நகரிலிருந்து ஒரு வக்கீல் (அவர் ஒரு வக்கீல் என்று ஜோசியர் சொன்னார்) வந்திருந்தார். பையன் வீட்டு புரோகிதர் களாக, அய்யா சாஸ்திரிகளும், அண்ணு ஜோசியரும் போயிருந் தனர். அய்யா சாஸ்திரிகளுக்கு மாதாந்திர திதி, புண்ணியா வாசனம், கௌரி கணேச விரதம் இவைகளைத் தவிர வேறு சடங்குகள் எதுவும் செய்து வைக்கத் தெரியாது. அண்ணு ஜோசியர் வயதில் இளையவராயிருந்தாலும் சிந்தபட்ட சூரண்ண ஜோசியரிடம் முறைப்படி அத்யயனம் செய்து அந்த வட்டாரத் தில் பெயர் பெற்றவர். இதுவரை ஏராளமான திருமணங்களை யும், உபநயனங்களையும் செய்வித்து, மந்திரங்கள் எல்லாமே அவருக்கு தண்ணீர்ப்பட்டபாடு. மாப்பிள்ளை வீட்டார் இறங்கி யிருந்த வீட்டில் அண்ணு ஜோசியர் உரக்க மந்திரம் முழங்கிக் கொண்டிருந்தார். ''ஓம் பூ: அக்னியே...... !''.

மாப்பிள்ளை வீட்டார் இறங்கியிருந்த வீட்டுக்கு அருகிலேயே பெண்ணின் வீடு இருந்தது. அவர் சொல்லிக் கொண்டிருந்த மந்திரங்கள் எல்லாம் பெண் வீட்டாருக்கும் கேட்டுக் கொண் டிருந்தது. அந்த மந்திரம் காதில் பட்டவுடன் கண்டி ஜோசியர் அங்கு வந்து சொன்னார். ''அக்னிக்கு நெய் வார்க்கும் மந்திரத்தை இன்னொரு தடவை சொல்லுங்க''.

''ஏன்''

''கொஞ்சம் கேட்க வேணும், சொல்லுங்க''

''அப்படி வேத மந்திரத்தை மறுபடியும் சொல்லக்கூடாது''- என்று சொல்லிக் கொண்டே அய்யா சாஸ்திரிகளுடைய முகத்தைப் பார்த்தார்.

''ஏன் சொல்லக் கூடாது? நீங்க தப்பாகச் சொல்லலாமா?''.

''நான் சொல்வது தப்பா? சிந்தபட்ட சூரண்ண-ஜோசிய ரிடம் பாடம் கேட்பது தப்பா? சொல்லுங்க சித்தப்பா, நான் இந்தத் திருமணத்தை செய்து வைக்க வேணுமா, எழுந்து போகட்டுமா?''- என்று ஜோசியர் எழுந்து நின்றுவிட்டார்.

''உங்க குருவுடைய விஷயம் எனக்குத் தெரியும். அவருக்கு ஒழுங்காக சமஸ்கிருதம் வராது. பூரக்னியே அப்படின்னு சொல்றது தப்பு. பூரக்னயேன்னு இருக்கவேணும். நீங்க சொல்வதில் இலக்கணம் சரியில்லை. புத்தகத்தை எடுத்துக்

காட்டட்டுமா? வேத மந்திரத்தைத் தவருகச் சொன்ன தலை ஆயிரம் துண்டுகளாய் சிதறிப் போகும்''

அப்படிச் சொன்னவுடன் அண்ணு ஜோசியர் அமைதியானுர். கண்டி ஜோசியருடைய மந்திர அறிவைக் கண்டு ராமஸந்திர கிராமத்துக்காரர்கள் திகைத்துப் போனுர்கள். பிறகு கன்யா தான மந்திரத்தை அவரே உரத்த குரலில் சொல்வதை அந்தக் கல்யாண வீடு முழுவதுமே கம்பீரமாகக் கேட்டுக் கொண் டிருந்தது. திருமணம் முடிந்து பையன் வீட்டுக்காரர்கள் கிளம்பிக் கொண்டிருந்த பொழுது அண்ணு ஜோசியர் கண்டி ஜோசியரிடம் வந்து, ''எனக்கு மந்திரங்கள் எல்லாம் மனப் பாடம் ஆகியிருக்கிறது அவ்வளவுதான். இலக்கணத்தில் நான் கொஞ்சம் பின்தங்கியவன்தான். அத்யயனம் முழுதும் முடி வதற்கு முன்பே என் தந்தை காலமாகிவிட்டார். ஆகையால் நான் பாதியிலே வந்து, வீட்டில் மனப்பாடம் செய்து கொண் டேன். பிழையிருந்தால் மன்னிக்க வேணும்'' என்ருர்.

திருமணம் சிறப்பாக முடிந்தது. பெண்ணுக்கு ஒட்டியாணம், நெற்றிச்சுட்டி, கால்சிலம்பு முதலியவை அணிவித்திருந்தார்கள். பையன் வீட்டார் முறைப்படி மாங்கல்யம், மூக்குத்தி முதலியவை களைக் கொண்டு வந்திருந்தார்கள். தகப்பனைப் போன்று உயர மான உடற்கட்டு, அகன்ற நெற்றி, பெரிய விழிகள்-பெண் லட்சணமாய் இருந்தாள். ''நம் சென்னிகராயனுக்கு இதைப் போல் பெண் கிடைத்ததற்கு அவன் மிகவும் புண்ணியம் செய் திருக்கிருன்'' என்று ராமஸந்திர கிராமத்துக்காரர்கள் பேசிக் கொண்டார்கள். இந்தப் பேச்சு கங்கம்மாவுக்கு மட்டும் பிடிக்க வில்லை. செய்து போட்ட பட்சணம், சாப்பாடு முதலியவைகளைக் கொஞ்சமும் மீதி வைக்காமல் சாப்பிட்ட சென்னிகராயனைப் பற்றி நாகலாபுரத்துக்காரர்கள் பேசிக் கொண்டார்கள். அப்படி சாப்பிட்டிருக்கக் கூடாதென்று ராமஸந்திர கிராமத்துக்காரர் களும் பிறகு பேசிக் கொண்டார்கள். ''ரொம்பவும் நல்லா மணமாக இருந்த பலகாரத்தை எச்சில் செய்து வீணுக்குவது எப்படி''? என்று சொல்லி அவன் தன் செயலைப் பாராட்டிக் கொண்டான்.

3

சென்னிகராயன் எத்தனை முறை போய்க் கேட்டாலும், சிவலிங்கே கவுடன் கணக்குப்பிள்ளை வேலையை விட்டுக் கொடுப்பதாயில்லை. முதலில் சில நாட்கள் ''கொடுக்கலாம், கொடுக்கலாம்'' என்று சொல்லிக் கொண்டிருந்தான். அதன்

பொருள் விளங்காத சென்னிகராயன் சில நாட்கள் பொறுத்துப் பார்த்தான். மறுபடியும் கேட்டால் அதே பதில். ''வருசக் கடைசியில் கணக்கு முடியட்டும் பிறகு பார்க்கலாம்'' என்றான் ஒரு நாள். வருட கடைசி என்றால் ஏப்ரல் மாத முடிவு. அதற்கு இன்னும் ஐந்து மாதங்கள் இருந்தன. ''ஆண்டுக் கணக்கு முடிக்காம கொடுத்தா உனக்கு என்ன தெரியும்?'' என்று அவன் சொன்னதை இவனும் உண்மையென்று ஒப்புக் கொண்டான்.

வீட்டில் வேறு வேலை எதுவுமிருக்கவில்லை. மனைவி இன்னும் பெரியவளாகாததால் வீட்டுக்கு அழைத்து வரவில்லை. பிறந்த வீட்டிலேயே இருந்தாள். இரண்டு ஆண்டுகள் மடத்துக்கு போயிருந்தாலும்கூட, அப்பண்ணய்யாவுக்கு முன் ஜென்மத்தி லிருந்தே கல்வித் தொடர்பு கிடையாது என்று சொல்லி ஆசிரியரும் அவனைக் கை கழுவிவிட்டார். இப்பொழுது அவன் தோட்ட வேலியில் இருந்த தேன் கூட்டைக் கலைப்பதிலும், இளநீர் சீவிக் குடிப்பதிலும் நேரத்தைப் போக்கிக் கொண்டிருந் தான். இனிமேற் கொண்டு கணக்குப்பிள்ளையாக வேண்டிய சென்னிகராயன் காலையில் எழுந்து குளித்துவிட்டு, தலைவலிக் காரன் நெற்றியில் பற்று அப்பிக் கொள்வதைப்போல் விபூதியைக் கரைத்து நெற்றியில் பட்டையாகப் பூசிக்கொண்டு, ஈர வேட்டி யுடன் அமர்ந்து, பூணூலைக் கையில் பிடித்துக் கொண்டு, சந்தியாவந்தனம் செய்தவாறே ''ஓம் தத் சத்'' என்று உரக்க காயத்ரி மந்திரம் சொல்லிக் கொண்டிருந்தான்.

வருட முடிவில் போய்க் கேட்டபொழுது சிவலிங்கே கவுடன் சொன்னான். ''மேலிடத்து உத்தரவு இல்லாம எப்படிக் கொடுக்கிறது?''

''என் வேலையை எனக்குக் கொடுக்க மேலிடத்து உத்தரவு எதுக்கு?''

''உம், உன் அப்பனுடையதுன்னு எழுதி வைக்கல்லே. எனக்கும் பத்து வருஷம் அனுபவ பாத்தியதை வந்தாச்சு. போ, முடிஞ்சா பிடுங்கிக்க பார்க்கலாம்''.

இந்தப் பேச்சைக் கேட்டவுடன் சென்னிகராயனுக்கு அழுகை வருவது போல் முகம் மாறியது. அவனைத் திட்ட வேண்டு மென்று வாயைத் திறந்தாலும் தைரியம் இல்லாமல் பேசாம லிருந்தான். அவனுடைய மைத்துனன், மணியக்கார சிவேகவுட ரிடம் சென்று சொன்னதும் அவர், ''அடே தம்பி, கணக்குப் பிள்ளை வேலை செய்ய உன்னால் முடியுமா? அதை விளையாட்டுன்னு நினைச்சிட்டியா?'' என்றார்.

மறுபடியும் என்ன சொல்வதென்று சென்னிகராயனுக்குத் தெரியவில்லை. மணியக்காரரை எதிர்த்துப் பேசும் தைரியம் அவனுக்கு வரவேண்டுமென்றால், அது எப்படி? அவன் சிறு பையனாக இருந்தபோதிலிருந்தே அவனை மிரட்ட கங்கம்மா இந்த மணியக்காரரைத்தானே அழைத்து வந்திருக்கிறாள்? அவன் நேராக தன் தாயிடம் சென்று சிவலிங்கன் கூறியதையும், மணியக்காரர் கூறியதையும் சொன்னான். கங்கம்மா பேசாமல் இருப்பாளா? மணியக்காரருடைய வீட்டு வாயிற்படியருகே வீதியில் நின்று கொண்டு உரக்கக் கூவினாள். ''சிவே கவுடா, உன் வீட்டு பெண் பிள்ளைக வளையல் உடைஞ்சு போகட்டும், உன் வீடு நாசமாய் போகட்டும்''.

இந்த சொற்களைக் கேட்ட மணியக்காரருடைய மனைவி கௌரம்மாவுக்கு பயம் ஏற்பட்டடது. இந்த பிராமண விதவையின் சாபம் பலித்துவிட்டால் கதி என்னவது? அவள் தன் கணவனிடம் கூறினாள், ''அவங்க ‡ சங்கலியை வைச்சுக்கிட்டு நமக்கென்ன ஆகவேணும்? எறியச் சொல்லுங்க சிவலிங்கனிடம்!''

மணியக்காரர் தானாகவே வெளியில் வந்து பேசினார்: ''கங்கம்மா, ஏன் இப்படிக் கெட்ட வார்த்தை பேசறே? வா, உட்கார், பேசலாம்.''

திண்ணையில் உட்காருவதற்காகப் பலகை கொண்டு வந்து போட்டாள் கௌரம்மா. கங்கம்மா பலகையில் அமர்ந்தபிறகு, மணியக்காரர் ஒரு தலையணையைக் கொண்டு வரச் செய்து அதன் மீது சாய்ந்து அமர்ந்தார். எதிர்காலக் கணக்குப்பிள்ளை சென்னிகராயன் வீட்டுக் கூரையின் கீழ்ப்பக்கம் நின்று கொண்டே இருந்தான். மணியக்காரர் சொல்லியனுப்பிய பிறகு அவன் வந்தான். தற்போதைய கணக்குப்பிள்ளை சிவலிங்கன் மற்றொரு திண்ணையில் கால் மீது கால் போட்டுக் கொண்டு அமர்ந்திருந்தான். மணியக்காரர் சொன்னார்; ''சிவா, பொறுப்பை ஏன் ஒப்படைக்க முடியாதுன்னு இந்த அம்மாவுக்கு விவரம் புரியும் படியாகச் சொல்லு''.

சிவலிங்கன் கங்கம்மாவிடம் கேட்டான்: ''உங்களுடைய மகனுக்கு வயசு எவ்வளவு?''.

''பத்தொன்பது''.

‡ சங்கிலி— இந்த இடத்தில் அளவுகோலைப் பயன்படுத்தும் கணக்குப்பிள்ளை வேலை.

''அப்படின்னு நீங்க சொல்றீங்க. அரசாங்க ரிக்கார்டுப்படி பதினுலுதான் ஆயிருக்குது. இன்னும் அவன் மேஜர் ஆகலே. அரசாங்க வேலே எப்படிக் கொடுக்க முடியும்''?.

''இவன் பிறந்த வேளேயில் எங்க வீட்டுக்காரர் தான் கணக்குப்பிள்ளேயாய் இருந்தார். அவர் என்ன பொய்யா எழுதி வெச்சிருக்கார்? சரியாய்ப்பார்''.

''ஜனன, மரண ரிஜிஸ்டர் எங்களிடம் கிடையாது. அதைப் பார்க்க அரசாங்கத்துக்கு பீஸ் கொடுக்க வேணும். முதலில் ஐம்பது ரூபாய் கொடுங்க. பிறகு திப்டூருக்குப் போய்க் காட்டச் சொல்றேன்''.

ஜனன, மரண ரிஜிஸ்டர் கணக்குப்பிள்ளேயிடம் இருக்கிறதா, இல்லேயா. அதைப் பார்ப்பதற்கு பீஸ் கொடுக்க வேண்டுமா, வேண்டாமா, கொடுப்பதென்ருல் ஐம்பது ரூபாய் ஆகுமா என்பதைப் பற்றி எல்லாம் கங்கம்மாவுக்குத் தெரியாது. ''என்னடா, சென்னேயா, கொடுக்க வேணுமா? நீதான் கணக்கு படிச்சுட்டு வந்திருக்கியே, நீ சொல்லு'' என்று மகனே பார்த்து சொன்னவுடன் அவன் அறிவாளியைப் போல யோசிக்கத் தொடங்கினுன். ''அதென்ன, சொல்லுடா'' என்று மற்ருெரு முறை கேட்ட பிறகு ''எனக்குத் தெரியாதம்மா'' என்ருன்.

''என்க்கு கணக்கு எல்லாம் தெரியும்னு சொன்னுயே?'' இப்பொழுது சிவலிங்கன் சொன்னுன்: ஹொன்னவள்ளிக்கார னிடம் போய்க் கணக்குப் படித்து விட்டு வந்தேன்னு சொன்னுயே? அவனுக்குக் கணக்குத் தெரிஞ்சிருந்தால் உனக்குச் சொல்லிக் கொடுத்திருப்பான். போகட்டும், இனி நாலு வருஷம் என் வீட்டில் குப்பைக் கூடை தூக்கு, நான் சொல்லித் தரேன்''.

மணியக்கார சிவே கவுடர் சொன்னுர்: ''போகட்டும், கங்கம்மா, ஐம்பது ரூபாய் கொடுத்துவிட்டுப் போங்க. இவ னுடைய வயசு எவ்வளவுன்னு மேலிடத்துக்கு எழுதிப் போட்டு உங்களுக்கு சொல்லறேன்''.

''பணம் எதுக்கு கொடுக்க வேணும், சிவேகவுடா?''

''அதென்ன அரசாங்கமில்லேயா? விளேயாட்டா சும்மா சொன்னுல் போதுமா?''

கங்கம்மாவுக்கு வேறு வழி எதுவுமே தோன்றவில்லே. ஐம்பது ரூபாய் கொடுக்காமல் மகனுடைய வயதுக் கணக்கு கிடைக்காது.

அது இல்லாமல் கணக்குப்பிள்ளை வேலை கைக்கு வராது. ஆனால் வீட்டில் அவ்வளவு பணம் கிடையாது. வீட்டுக்குப் போய் தன் பெட்டியில் தேடிப்பார்த்தாள். முப்பது ராணித் தலை பொறித்த ரூபாய்கள் இருந்தன. அத்துடன் ஆறு [5] வள்ளம் ராகியையும் சேர்த்து சிவலிங்கனிடம் கொடுத்து ''சீக்கிரம் இவனுடைய கணக்கை வரவழைச்சு விடு. வீட்டுக்காரர் காலத்து வேலை. இவன் கைப்பட ஒப்புக் கொண்டு நான் பார்க்க வேணும்'' என்றாள். பிறகு மூன்று மாதங்களாகியும் அதைப் பற்றித் தகவல் எதுவும் இருக்கவில்லை. கங்கம்மாவே போய்க் கேட்டபின் சிவலிங்கன் சொன்னான்: ''அரசாங்கக் கணக்கு இவ்வளவு சீக்கிரம் வந்து விடுமா? டெபுடி கமிஷனருக்குப் போய் அங்கிருந்து திவான் மிர்சா அய்யாவுக்குப் போய்விட்டு வரவேணும். மெதுவா வரும். ஏன் இப்படி அவசரப்படறீங்க? கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்க''.

வேறு எந்த வழியும் தோன்றாமல், கங்கம்மா வீட்டுக்கு வந்து மகனிடம் சொன்னாள்! ''சென்னையா, இவன் கொடுப்பது போல் தோணலை. நீயே திப்டூருக்குப் போய் அதிகாரியின் காலில் விழுந்து விஷயத்தை முடிச்சிகிட்டு வா''.

தான் மட்டும் தனித்துச் சென்று அதிகாரியைப் பார்க்க வேண்டுமென்று சொன்னவுடன் சென்னிகராயனுக்குப் பயம் ஏற்பட்டது. அவர் தன்னை கோபித்துக் கொண்டால் என்ன செய்வது? உன் வயதென்ன, உண்மையைச் சொல்லிவிடு என்றால் என்ன செய்வது? தனக்கு உண்மையாகவே பதினாறு வயதாகியிருக்கலாம். தன் ஜாதகம் தவறாக இருக்கலாம் என்ற கிலி ஏற்பட்டது. ''அம்மா, எனக்கு பதினாறு வயதுதான் இருக்கலாம். இன்னும் ரெண்டு வருஷம் பொறுத்துக்கலாம்''.

''தூ...! உன்னைப் பெத்தவ இங்கே தாண்டா இருக்கேன். எனக்குத் தெரியாதா, உன் வயசு? பத்தொம்பது முடிஞ்சு போச்சுடா. போய் அதிகாரியின் காலில் விழுந்து விட்டு வாடா''- கங்கம்மா கோபத்துடன் சீறினாள்.

''எனக்கு பயமாயிருக்குது அம்மா''.

''உனக்கு வெட்கமாயில்லையா, பொட்டச்சிப் பயலே! நானும் துணைக்கு வரேன்''- என்று கங்கம்மா சொன்னாலும் கூட,

---

[5] வள்ளம் — தானியங்களை அளக்கும் முகத்தலளவை. ஏறத்தாழ தற்போதைய நான்கு லிட்டர் அளவுக்குச் சமம்.

அரசாங்க வேலைகளுக்குப் பெண்கள் போகக் கூடாது என்பது நினைவுக்கு வந்தவுடன் பேசாமல் இருந்தாள். 'பெண்கள் அரசாங்கக் கணக்கு, வழக்குகளை கையால் தொட்டுவிட்டார்கள் என்று தெரிந்தாலே போலீஸ்காரர்கள் பிடித்து இழுத்துக் கொண்டு போய்விடுகிருர்களாம். நான் நேரடியாக அதிகாரியின் முன்பு போய் நின்ருல் விட்டுவிடுவார்களா?'

இனி வேறு வழியில்லை. இப்படியே ஒரு மாதம் கழிந்த பிறகு கங்கம்மா கூறிஞள். ''இப்படியே இருந்தா முடியாது. நீ ஒரு தடவை நாகலாபுரத்துக்குப் போய் உன் மாமனுர்கிட்டே சொல்லு. அவர் ஏதாச்சும் செய்வார்''.

சென்னிகராயனுக்குத் திருமணம் நடந்து ஒன்றரை ஆண்டுகள் கழிந்துவிட்ட போதிலும், அவன் ஒரு முறை கூட மாமனுர் வீட்டுக்குப் போனதில்லை. ஆனல் எவரும் அவனை வந்து அழைக்கவில்லை. தானே செல்வதற்கு அவனுக்குப் பயமோ, வெட்கமோ தெரியாது. இப்பொழுது கணக்குப்பிள்ளை வேலை சம்பந்தமாக அங்கே போய் வரும்படி கங்கம்மா கூறியதும் அவனுக்கு மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று. ஒரு நாள் காலையில் எழுந்து குளித்து, விரைவாக சந்தியாவந்தனம் செய்து முடித்துவிட்டு, அவரைக் காய் போட்ட ரொட்டியும், சட்னியுடன் தயிர்ச் சோறும் தின்று விட்டு, வழிப்பயணத்துக்காக மூன்று ரொட்டியும், சிறிது சட்னியும் கட்டிக் கொண்டு, கல்யாணக் கோட்டை மேலே அணிந்து கொண்டு, சங்கிலிக் கரை போட்ட வேட்டி உடுத்திக் கொண்டு, செருப்புப் போட்டுப் பழக்கமில்லாத காரணத்தால் வெற்றுக் காலுடன் பன்னிரண்டு மைல் தொலைவில் உள்ள நாகலாபுரத்தை நோக்கி மேற்குத் திசையில் புறப்பட்டான்.

ராமஸந்திர கிராமத்திலிருந்து மூன்று மைல் தூரத்தில் ஒரு மேடு ஏறி இறங்கிவிட்டால், சோளனகுட்ட. இந்தக் கருங்கல் காட்டுக்கு அருகிலேயே ஒரு பெரிய மணல் பள்ளம். பள்ளத்தின் இரு புறங்களிலும், நடுவிலும் எருக்கஞ் செடிகள் வளர்ந்திருந்தன. பள்ளத்தின் நடுவே இருந்த கிணற்றைக் கண்டவுடன் சென்னிகராயன் ரொட்டி சட்னியைத் தின்றுவிட்டு ஆறு தடவை கைகளால் நீரை அள்ளிக் குடித்து விட்டு, பயணத்தைத் தொடங்கிஞன். சோளன் கரட்டை வலப்புறமாகத் தாண்டி ஏறி, இறங்கியவுடன் கெம்மண்ணுஹள்ள. அதற்கு அப்பால் கடிகே ஹள்ளி. அதற்கு அருகில் உள்ள ஹூவினஹள்ளி நாகலாபுரம் பிர்க்காவைச் சேர்ந்தது. அந்த ஊரிலிருந்து ஒரு மைல் தூரத்தில் நாகலாபுரத்தின் பெரிய ஏரி தென்படும். ஆனல் அதை அடைவதற்கு

கற்ருழை வரப்பு, முன் பள்ளம் இவைகளின் வழியாக இரண்டு மைல் தூரம் நடக்க வேண்டும். ஏரிக் கரையின் மீது ஒரு மைல் நடந்து, ஊர்க் கோடியில் உள்ள சந்தைத் தோப்புக்குள் நுழைந்து போனுல், அதுதான் நாகலாபுரம்.

கிராமத்தின் ஏரிக்கரைக்கு அருகில் வந்தவுடன் அவனுக்கு ஒரு விதமான பயம் ஏற்பட்டது. தன்னை யாராவது கண்டு விட்டால்? இப்பொழுது எதற்கு வந்தாய் என்று கேட்டால்? மாமனுரே அப்படிக் கேட்டு விட்டால் என்ன பதில் சொல்வது? அவள் எப்படியிருக்கிருளோ, அவள் தன்னுடன் பேசுவாளோ மாட்டாளோ? பேசாமல் இருக்கட்டும், கழுதையைக் கவனித்துக் கொள்கிறேன். அவள் எப்பொழுது நம் ஊருக்கு வருவாள்? இப்பொழுது பதின்மூன்று வயது முடிந்து விட்டதாம். பெரியவளாவதற்கு இன்னும் எத்தனை நாட்களோ? இப்படி நினைத்துக் கொண்டே ஏரிக்கரையின் மேல் நடந்து ஊர்க் கோடியை அடைந்தான். கிராமத்துக்குள் நுழையும் போது மறு படியும் அச்சம். திருமண ஊர்வலம் சென்ற தெருவிலேயே இப் பொழுது நடக்கிருன். யாராவது அடையாளம் கண்டு விட்டால்! நெருக்கமாக வீடுகளைக் கட்டியிருந்த அந்த ஊருக்குள் நுழைந்த வுடன் எதிர்ப்படும் ஒரு தெருவின் பெயர் கணக்குப்பிள்ளை தெரு. ஊர்க் கணக்குப்பிள்ளை சியாமண்ணு ஆணவத்துடன் அதிகாரம் செய்கிருராம். அதனுல் அந்தத் தெருவுக்கு அப்படிப் பெயர். அங்கிருந்து நடந்து சென்ருல் ஒரு ஓரமாகத் தெரு முனையில் சென்னிகராயனுடைய மாமனுர் வீடு இருக்கிறது. கண்டி ஜோசியருடைய வீடு மற்ற எல்லா வீடுகளை விடப் பெரியது.

படபடவென்று அடித்துக்கொள்ளும் நெஞ்சைத் தடவிக் கொண்டே, பாதி திறந்திருந்த கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே சென்ருன். எந்த சந்தடியும் இருக்கவில்லை. ஒரு நிமிடம் நின்று, பார்த்து பிறகு தைரியமடைந்து உரக்கக் கேட்டான். ''யார் உள்ளே''?

சமையலறையிலிருந்து கிழவி கேட்டாள்- ''அது யாரப்பா? காளே கவுடனு?''

''இல்லை, ராமஸந்திர கிராமத்து ராமண்ணுவின் மகன் சென்னிகராயன்''.

''வாப்பா, வா, வா'' என்று சொல்லிக் கொண்டே கிழவி உள்ளிருந்து ஓடி வந்தாள். ஒரு பாயைப் போட்டு ''உட்காரு'' என்று சொல்லிவிட்டு, உள்ளிருந்து ஒரு தாமிர

*பஞ்ச பாத்திரத்தில் நிரம்பத் தண்ணீர் கொண்டு வந்து அவன் முன்பு வைத்து ''ஊரில் எல்லோரும் சௌக்கியமா?'' என்று கேட்டுக் கொண்டிருந்த பொழுது, பின் கதவின் வழியாக சென்னிகராயனுடைய மனைவி உள்ளே நுழைந்தாள். அவள் துவைத்துப் பிழிந்த ஒரு பச்சைப் புடவையையும், ரவிக்கையையும் கையில் பிடித்துக் கொண்டு, எதுவும் புரியாமல், உள்ளிருக்கும் இருட்டில் அழையா விருந்தாளியாக வந்திருப்பவன் யாரென்று தெரியாமல், பிழிந்த துணியுடன் அங்கேயே நின்று கொண்டிருந்தாள்.

''நஞ்சா... உன் புருஷன் வந்திருக்கான். அங்கே உட்கார்ந்திருக்கான். இருட்டிலே தெரியலையா?'' என்று பாட்டி சொன்னவுடன், பிடித்திருந்த புடவை கால் இடுக்கில் சிக்கி தடுமாறி தான் விழுவதையும் பொருட்படுத்தாமல் அவள் பின் கதவு வழியே ஓடிப் போனாள்.

வீட்டு மாப்பிள்ளை கை, கால் கழுவ பாட்டியே நீர் கொண்டு வந்து கொடுத்தாள். பிறகு சுடச்சுட மோர்க் குழம்பு, அப்பளம், ஊறுகாய், நெய், தயிர் முதலியவற்றைப் பரிமாறினாள். வேண்டாமென்று பாட்டி சொன்னாலும் ''பரவாயில்லை போடுங்க'' என்று சென்னிகராயனே கூறிக் கொண்டு ஒன்றரை உருண்டை களி போட்டுக் கொண்டு சாப்பிட்டான். சாப்பிட்ட பின்னர் தெரிந்தது — மாமனார் சாதாரணமாக ஊரில் தங்குவதே இல்லை. குதிரையில் அமர்ந்து சென்னராயன் பட்டணம், நரசிபுரம், ஹாசன் என்றெல்லாம் சுற்றிக் கொண்டே இருப்பார். இந்த முறை புறப்பட்டுப் போய் இருபது நாளாயிற்று. இரண்டு மூன்று நாட்களில் வரலாம். வந்த பிறகு, அவரைப் பார்க்காமல் குசலம் விசாரிக்காமல் போவது சரியல்ல. தங்கிவிட்டுப் போகும் படி பாட்டியும் வற்புறுத்தினாள். சென்னிகராயன் தங்கினான். அக்கம் பக்கத்து ஆண்கள் அவனை அழைத்துக் கொண்டு கிராமத்தையும், கண்டி ஜோசியரின் நிலபுலன்களையும் சுற்றிக் காண்பித்தார்கள். மறு நாள் காலையில் பாட்டியே எண்ணெய் தேய்த்து, தண்ணீர் விட்டாள். ஆனால் நஞ்சம்மா மட்டும் கண்ணில் தென்படவில்லை. இருட்டில் துவைத்த புடவையை அவள் பிடித்துக் கொண்டிருக்கும் பொழுது பார்த்ததுடன் சரி. தானாகவே அக்கம் பக்கத்தாருடன் சென்று பேச அவனுக்குப் பயம். பொழுதே போகவில்லை. அவனுடைய கிராமத்தில் செய்தது போலவே இங்கும் காலையில் எழுந்து குளித்து விட்டு, நெற்றியில் விபூதிப்

---

*பஞ்சபாத்திரம்: பிராமணர்கள் தங்கள் சடங்குகளின் போது நீரை ஊற்றி வைத்துக் கொள்ளும் ஒரு வகை டம்ளர்.

பட்டை போட்டு, ஈர வேட்டியுடன் ஆயிரத்தெட்டு காயத்திரி மந்திரங்களை ஜெபித்தான். இதைக் கண்டு பாட்டிக்குப் பெருமை பிடிபடவில்லை.

நான்காவது நாள் நள்ளிரவு திடீரென்று தெரு நாய்கள் குரைக்கத் தொடங்கின. நாய்களின் குரைப்பு அதிகமாயிற்று. 'கடகட' என்னும் ஒலி இவர்களுடைய வீட்டுக்கு அருகில் வந்து யாரோ கதவைத் தட்டுவது போல் ஓசை உண்டாயிற்று. ''நஞ்சா, கதவைத் திற'' என்று கூறுவதும் கேட்டது. மாமனார்தான் வந்திருக்கிறார் என்பது அவருடைய குரல் மூலம் சென்னிகராயனுக்குத் தெரிந்தது. தானே சென்று கதவைத் திறக்க, அவனுக்கு ஒருவிதமான பயம். கம்பளிப் போர்வையைப் போர்த்துக்கொண்டு, கண்களை மூடி அவன் படுத்துக்கொண்டான்.

வந்திருப்பது தன் தந்தைதான் என்பது சமையலறையில் பாட்டியுடன் படுத்திருக்கும் நஞ்சம்மாவுக்குப் புரிந்தது. ஆனால், கணவன் வெளிக் கூடத்தில் படுத்திருக்கும்போது தான் சென்று கதவைத் திறக்க அவளுக்குக் கூச்சமாக இருந்தது. அவள் பாட்டியை உலுக்கி எழுப்பினாள். பாட்டி மண்ணெண்ணெய் விளக்கைப் பற்ற வைத்துக் கொண்டு வந்து கதவைத் திறந்தாள். குதிரையை அந்தக் கதவின் வழியாகவே பின்புறம் கொண்டு சென்று, கட்டி வைத்து விட்டு கண்டி ஜோசியர் கேட்டார்: ''இது யார் படுத்திருக்கிறது?.''

''சென்னிகராயன் வந்திருக்கான். நாலு நாள் ஆச்சு. உனக்காகக் காத்திருக்கிறான்.''

''சென்னிகராயா...!'' என்று உரத்த குரலில் அவனது தலைக்கு அருகில் அவர் இரைந்தார். ''தூக்கம் வந்திருக்கும், எழுப்ப வேண்டாம்'' என்று பாட்டி சொல்லியதும் அவர் பேசாமல் இருந்தார். சாப்பாட்டை முடித்துவிட்டு வந்திருப்பதால், தனக்கு சாப்பிடுவதற்கு எதுவும் வேண்டாமென்றார். ஒரு முறை புகையிலை போட்டுக் கொண்ட பிறகு, படுக்கையை விரித்துப் போட மகளை எழுப்பாமல், தானே கூடத்தில் சென்னிகராயனுக்கு அருகில் படுக்கை விரித்து, சிந்தனை செய்தவாறே தன்னுடைய பூட்சு, கோட், சட்டை முதலியவற்றைக் களைந்து வேட்டி உடுத்திக் கொண்டு படுத்தார்.

## 5

**கா**லையில் பத்து மணிக்கு எழுந்த அவர் மாப்பிள்ளையை விசாரித்தார். எல்லாவற்றையும் கூறி, சிவலிங்கே கவுடன்

தன்னிடம் ஐம்பது ரூபாய் வசூல் செய்து விட்டதையும் அவன் சொன்னான். ''உன் தலையில் மூளை இருக்குதா, களி மண் இருக்குதா? கணக்குப் பிள்ளை வேலையைப் பற்றி சட்டம் தெரியாதவன், நீ என்ன செய்யப் போறே, மண்ணாங்கட்டி?'' என்று அவர் உடனே ஆத்திரமாகத் திட்டினார்.

சென்னிகராயன் இலேசாக நடுங்கியபடி தலை குனிந்து அமர்ந்து விட்டான். வந்த அன்றே சென்னிகராயன் பாட்டியிடம் விஷயத்தைக் கூறியிருந்தான். அவன் இப்பொழுது அதை மாமனாரிடம் கூறும் பொழுது பாட்டி அருகிலேயே இருந்தாள். மாப்பிள்ளையை இப்படி சொல்லிவிட்டதற்காக பாட்டி குறுக்கிட்டு, ''இதென்ன இப்படிப் பேசிட்டே, கண்டி? அவன் சிறு பையன். தெரியாது. உன் வாயால் முரட்டு வார்த்தைகள் தான் வர வேணுமா? நீ போய் அவன் வேலையை அவனுக்கு வாங்கிக் கொடு'' என்றாள். கண்டி ஜோசியர் மேற்கொண்டு பேசவில்லை. எழுந்து குளித்து, சந்தியாவந்தனம் செய்து முடித்தார். உள்ளே நஞ்சம்மா பலகாரம் செய்து கொடுத்தாள். அதை பாட்டி எடுத்து வந்து பரிமாறினாள். அவர் அரிசி உப்புமாவையும், எண்ணெய்க் கத்திரிக் காயையும் மாப்பிள்ளையுடன் அமர்ந்து சாப்பிட்டார். ஒரு முறை புகையிலை போட்டு மென்று, நான்கைந்து முறை வெளியே போய் உமிழ்ந்து விட்டு வந்த பிறகு ராமஸந்திர கிராமத்தின் நிலவரத்தைப் பற்றி நான்கைந்து கேள்விகள் கேட்டார். சென்னிகராயன் தனக்குத் தெரிந்த விஷயங்களைக் கூறினான். ஜோசியர் தமது குத்தகைக்காரன் மூலை வீட்டு ஹொன்னையாவை அழைத்து, அவனிடம் ஒரு சீட்டு எழுதிக் கொடுத்து, உடனே அதை எடுத்துக்கொண்டு போய் சிரவணபௌகொளாவில் உள்ள அவருடைய மகன் போலீஸ் கான்ஸ்டபிள் கல்லேசனிடம் கொடுத்து, பதில் வாங்கி வருமாறு உத்தரவிட்டார். பிறகு ஜோசியர் மாப்பிள்ளையுடன் எதையும் பேசவில்லை. அவர் ஊருக்கு வந்த செய்தி தெரிந்ததும், பில்லி சூன்யம், பேய் பிசாசு இவைகளுக்கு மந்திரம் செய்கின்ற சிலர் அவருடைய வீட்டுக்கு வந்து கும்பலாகப் பேசிக் கொண்டு இருந்தனர். பேச்சுத் துணை இல்லாமல் மாப்பிள்ளைக்கு சோம்பலாக இருக்கும் என்று நினைத்து பாட்டி அவனை சமையலறைக்கு அழைத்துச் சென்று அமர்த்தினாள். நஞ்சம்மா பெட்டி வைக்கும் அறைக்குச் சென்று விட்டாள்.

ஹொன்னன் மறுநாள் காலை பதினொரு மணிக்கு வந்து ஜோசியரிடம் ஒரு காகிதம் கொடுத்துவிட்டுச் சென்றான். அவன் சென்ற பிறகு அவர் தனது தாயிடம் ''அக்கம்மா, நானும்

இவனும் ராத்திரி ராமஸந்திர கிராமத்துக்குப் போறோம்.'' என்றார்.

''அதென்ன இன்னிக்கே புறப்படறீங்க? நான் பலகாரம் எதுவும் செய்யலியே.''

''சாயங்காலம் செய். ராத்திரி பாயசம் வைச்சிடு.''

''நீ தான் ராத்திரி நேரத்தில் கொள்ளிவாய்ப் பிசாசு மாதிரி சுத்தறே. அவனை எதுக்காக ராத்திரி நேரத்தில் அழைச்சிட்டுப் போகணும்?''

''அவன் என்ன பொம்பிளையா? ஆம்பிளைன்னுதானே என் மகளைக் கொடுத்தேன்?''

இருட்டு என்றால் அதிக பயம் இல்லாவிட்டாலும், இருட்டில் பேய், பிசாசுகள் நடமாடுகின்றன என்ற நினைவு வந்ததும் சென்னிகராயன் உள்ளம் சிறிது கிலேசமடைந்தது. அதைத் தவிர சோளேஸ்வரனகுட்டவுக்கு அருகே இரவு நேரத்தில் சிறுத்தைப் புலிகள் நடமாடுகின்றனவாம். அதை மாமனாரிடம் கூறினால், அவர் தன்னையே திட்டுவார் என்ற அச்சம். இக்கட்டான நிலையில் அவன் பேச முடியாமலிருந்தான்.

பாட்டி பரபரவென்று தேன்குழல் செய்தாள். நஞ்சம்மா முதல் நாளே முறுக்கு மாவு பொடித்து வைத்திருந்தாள். அதையும் வறுத்து எடுத்தாயிற்று. இரவு பாயசத்துடன் சாப்பாடு முடிந்த பிறகு ஜோசியர் கால் சிராய், வெள்ளை சட்டை, காக்கி கோட்டு அணிந்து கொண்டு காக்கித் தொப்பியும் வைத்துக் கொண்டார். அன்று காலையில் அம்பட்டன் கத்தரித்து, திருத்தியிருந்த கிருதா மீசை அவரது முகத்தில் அடர்த்தியாய் இருந்தது. குதிரைக்கு சேணம், லகான் முதலியவற்றைப் பூட்டி, அவருடைய துணிகளையும் பொருள்களையும் பையில் போட்டு இருபுறமும் தொங்க விட்டார். புறப்படுவதற்கு முன்பு சென்னிகராயன் பாட்டிக்கும், மாமனாருக்கும் காலில் விழுந்து நமஸ்காரம் செய்தான். ''நஞ்சா உன் புருஷனுக்கு நமஸ்காரம் செய் வா'' என்று பாட்டி கூப்பிட்டாள். அவள் வரவில்லை. பிறகு கண்டி ஜோசியரே கூப்பிட்டதும் வந்து, தூரத்தில் இருந்தபடியே தரையில் விழுந்து நமஸ்காரம் செய்துவிட்டுச் சென்றாள். மனைவியை பார்க்க வேண்டும் என்று சென்னிகராயன் விரும்பிய போதிலும், தனக்கு எதிரில் மாமனார் நின்று கொண்டிருந்தபடியால் பயப்பட்டு கண்களை அந்தப் பக்கம் செலுத்தவில்லை.

இரவு பத்து மணிக்கு அவர்கள் புறப்பட்டார்கள். அன்று அமாவாசையாதலால் எங்கு நோக்கினும் கும்மிருட்டு சூழ்ந்திருந்தது. ஊர் எல்லையை விட்டு வெளியே வந்தவுடன் சோதிடர் மாப்பிள்ளையிடம், ''நீயும் குதிரை மேலேறு'' என்றார். அவன், ''எனக்குப் பழக்கமில்லை, பயமாயிருக்கு'' என்றான். ''நான் பிடிச்சுக்கிறேன்'' என்றார் அவர். ''ஊகூம்... நீங்க என்ன வேணுமானாலும் சொல்லுங்க, என்னால் முடியாது'' என்று அவன் அடம் பிடித்தான்.

''சரி நடந்தே போகலாம் வா'' — என்று அவர் சொல்லி விட்டு அந்தக் கனத்த இருட்டில் பாதை தெளிவாகத் தெரிந்தவர் போல் காலை வீசிப் போட்டு நடக்கலானார். பின்புறம் குதிரை வந்து கொண்டிருந்தது. அதற்குப் பின்புறம் நான்கு *மார் தொலைவில் சென்னிகராயன் ஓட்டமும் நடையுமாக வந்து கொண்டிருந்தான். மாமனார் மௌனமாக நடந்து கொண்டிருந்தார். மாப்பிள்ளைக்கு களைப்பும், பயமும் சேர்ந்து உண்டாயின. அந்த மையிருட்டில் காற்று நாற்புறமும் விர்ரென்று வீசிக் கொண்டிருந்தது.

## 6

அவர்கள் ஏரிக்கரையைத் தாண்டி, ஹாவினஹள்ளி, கடிகெஹள்ளி இவைகளையும் கடந்து சோளேஸ்வரனகுட்டவின் மேற்கு சரிவுக்கு முன்புள்ள கெம்மண்ணு ஹள்ளத்தைக் கடந்து கொண்டிருந்தனர்.

கண்டி ஜோசியர் முன்னே போய்க்கொண்டே இருந்தார். அவருக்குப் பின்புறம் உயரமான வெள்ளைக் குதிரை. அதற்குப் பின்னால் களைத்து, சோர்ந்து போய் ஓட்டமும் நடையுமாய் வந்து கொண்டிருந்த சென்னிகராயனுக்கு குதிரையின் வெண்மை நிறம் மங்கலாகக் கண்ணுக்குத் தென்பட்டுக் கொண்டு இருந்தது. மாமனார் திடீரென்று அப்படியே நின்றார். குதிரையும் நின்றது. குதிரையின் பின்புறத்தின் மீது மோதிக் கொள்ளும் வண்ணம் சென்னிகராயனும் நின்றான். சிறிது தொலைவில் அவர்களுக்கு வலப்புறமாய் ஒரு வெளிச்சம் தோன்றியது. ''கொஞ்சம் முன்னே வா'' என்றார் மாமனார். அவன் குதிரையைப் பிடித்துக் கொண்டே அருகில் சென்றான். ''அங்கே பார்'' என்றார். பார்த்ததுதான் தாமதம். அவனுக்கு உடம்பு வியர்த்துப் போய் கைகால்கள் நடுங்கத் தொடங்கின.

*மார்: பழங்கால நீட்டலளவை ஏறத்தாழ இரண்டு மீட்டருக்கு சமமான நீளமுள்ளது.

இடுப்பளவு உயரத்தில் ஒரு காளி சிலை மண்டி போட்டு நின்றிருந்தது. திறந்த வாயிலிருந்து ரத்தச் சிவப்பான அதனுடைய நாக்கு வெளியே நீட்டிக் கொண்டு ரத்தத்தைச் சொட்டிக் கொண்டு இருப்பது போல் இருந்தது. கழுத்தில் சிவப்பான அரளிப் பூக்களின் பெரிய மாலை. இரு புறங்களிலும் அகல் விளக்குகள் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தன. எதிரில் மூன்று கோழிகள் தலை வெட்டப்பட்டு விழுந்து கிடந்தன. இரண்டு, மூன்று சீப்பு வாழைப் பழங்கள். அந்த இடமெங்கும் குங்குமம் சிதறிக் கிடந்தது. மஞ்சள் குங்குமம் காளியின் மீது எல்லா இடங்களிலும் பூசப்பட்டு இருந்தது. பச்சை நூல், தாமிரத் தகடு, தாயத்து, மனிதனுடைய எலும்போ பிராணி களுடைய எலும்போ சுற்றிலும் கிடந்தன.

ஜடமாக உறைந்து கொண்டிருந்த இருளைக் கிழித்துக் கொண்டிருந்த நெருப்புத் துண்டைப் போல இருந்தது அது.

''பாத்தியா?'' — மாமனார் கேட்டார்.

''உம்'' என்று சொல்வதற்குள் அவனுடைய நாக்கு தடுமாறியது.

''பார், அங்கே போய் அந்தப் பழச் சீப்பை எடுத்துவா. அந்தச் சிலையின் நெஞ்சு மேலே ஒரு தடவை எட்டி உதை. உனக்குப் பணம் கிடைக்கும்.''

இந்தச் சொற்களைக் கேட்டு அவன் கதி கலங்கினான். ''வேண்டாம், வேண்டாம்'' என்று பதறியபடியே கூறினான். ''அப்படியானால், நீ குதிரையின் லகானைப் பிடிச்சுக்கோ'' என்று அவர் அதை அவனுடைய கையில் கொடுத்து விட்டு முன்னே நடந்தார். நேராக அருகில் சென்று வாழைப் பழச் சீப்புகளைக் கையில் எடுத்துக் கொண்டார். இரண்டு நிமிடங்கள் அந்தச் சிலையை உற்று நோக்கி விட்டு அதன் கைகள், நாக்கு, தலை, கால்கள் முதலியவற்றின் மீது கைவைத்து எதையோ எடுத்துக் கொண்டார். வெள்ளி ரூபாய் நாணயங்களாய் இருக்க வேண்டும். பிறகு தனது இடது கால் பூட்சால் அதன் நெஞ்சின் மீது உதைத்தார். அது உடைந்து விழுந்தது. விழுந்த இடத்தி லேயே சில நாணயங்கள் சிதறின. அவைகளுடன் ஒரு தங்க நாணயமும் இருப்பது காணப்பட்டது. அவைகளை எல்லாம் வாரி எடுத்துத் தனது சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டு ''நட'' என்று சொல்லி முன்னே நடந்தார்.

இப்பொழுதும் கண்டி ஜோசியர் முன்னே. குதிரை இடையிலே. சென்னிகராயன் பின்னே. அவன் இப்பொழுது சிலைக்கு அருகில் இருந்தான். அந்தப் பக்கம் திரும்பிப் பார்க்க அவனுக்குப் பயம். பார்க்காமலிருந்தால் அது தன்னையே தொடர்ந்து வந்து முதுகின் மேல் அறைந்து, கழுத்தைப் பிடித்து நெரிக்கும், என்று பயம். பேசாமல் நடந்து போகும் போது இந்தப் பயம் அதிகமாயிற்று. மாமனார் பேசாமல் ஒரு பூதத்தைப் போல் வேகமாய் நடந்து கொண்டிருந்தார். ஏதாவது பேசினால் பயம் குறையும் என்று அவன் பேசினான். ''அது...அது...அது... என்ன?''

''இன்னிக்கு அமாவாசையில்லையா?''

''அதுக்கு...அதுக்கு...என்ன...செ...செஞ்சிருக்காங்க?''

''யாருக்கோ ஏவல் செஞ்சிருக்காங்க. கரிக்கரை வீராச்சாரின்னு ஒருத்தன் இருக்கான். அவன்தான் இதைப்போல் எல்லாம் செய்வான். செய்ய வைக்கிறவங்க முன்னாடி இதைப் போல் செஞ்சு அவங்களோடு அவனும் போயிடுவான். அதற்குப் பிறகு வந்து சிலைக்கு உள்ளே, நாக்கின் மேலே, கைகளின் மேலே, வைத்த காசு, பழம் எல்லாத்தையும் எடுத்துகிட்டுப் போயிடு வான். இன்னிக்குத் திரும்பி வந்து பாக்கட்டும், அவனுக்குக் கெடைக்கும் மண்ணாங்கட்டி...''

''அது...அதை... அதைத் தொட்டு எடுத்துக்கிட்டீங்களே, உங்...உங்...உங்களுக்கு எதுவும் ஆகாதா?''

''நெஞ்சைத் தொட்டுப் பார்த்துக் கொள்ள வேணும். அது திடமாயிருந்தா ஒரு மயிரும் பிடுங்க முடியாது. இல்லாட்டா ரத்தம் கக்கி விழுந்து சாகிற பொம்பிளை மாதிரி உள்ளவங்களும் இருக்காங்க''.

கடைசிச் சொற்களைக் கேட்டு சென்னிகராயனுக்குப் பதற்றம் ஏற்பட்டது. அதற்குள் அந்த மேடு மறைந்து, ஏவல் செய்த அந்த இடம் கண்ணுக்குத் தெரியாமல் தூரத்தில் மறைந்து போயிற்று. அவன் ஒரு முறை தைரியமாகப் பின் புறம் திரும்பிப் பார்த்தான். இருளில் கருமையைத் தவிர வேறு எதுவும் புலப்படவில்லை. இறக்கம் ஆரம்பமாகிவிட்டது. பள்ளத்தையும் கடந்து கொண்டே வந்தார்கள். பாதை முழுவதும் நன்கு பழக்கப்பட்டவர் போல் மாமனார் அந்த மையிருளில் விறுவிறுவென்று விரைந்து நடந்தார்.

இவ்வாறு கூறிக் கொண்டிருக்கும் பொழுதே சிவலிங்கன் ''கிடு கிடு'' என்று நடுங்கிக் கொண்டிருந்தான். அவனுடைய மனைவி அப்படியே தரையின் மீது விழுந்து அவரை நெடுஞ்சாண் கிடையாக வணங்கினாள். ''அந்த ஐம்பது வெள்ளி ரூபாயைக் கொண்டு வா'' என்றார். சிவலிங்கன் ''இ...இ... இரும்புப் பெட்டியில் இருக்குது. க...க... கதவைத் திறந்துவிடு'' என்றான். அவள் படுக்கையின் அடியிலிருந்த சாவிக் கொத்தினால் பெட்டியைத் திறந்து ஐம்பது வெள்ளி ரூபாய்களை எண்ணிக் கொண்டு வந்து ஒப்படைத்தாள். ''இன்ஸ்பெக்டர், இந்தப் பணத்தை சட்டைப் பையில் வைத்துக் கொள்ளுங்கள். நாளைக்கு டிரஷரியில் கட்ட வேண்டும்'' என்று சவாரிக்காரர் கூறியதும் டபேதார் அதைப் பையில் போட்டுக் கொண்டார்.

சவாரிக்காரர் அடுத்த விஷயத்துக்கு வந்தார். ''கணக்குப் பிள்ளைக்கு பொறுப்பைத் தரமாட்டேன்னு சொல்லி வம்பு செய்றியா, ஏண்டா, பரதேசிப் பயலே?''

''இ...இ... இல்லே'' என்று சிவலிங்கன் உளறினான்.

''அவனுடைய கையை விடுங்க'' என்று உத்தரவு இட்டார். போலீஸ்காரர்கள் அவனது தோள்களை விட்ட பிறகு, ''ஒரு நீளக் காகிதம், கட்டைப் பேனா எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்'' என்றார்.

சிவலிங்கன் அவ்வாறே செய்த பிறகு ஒரு முறை புலியைப் போல் செருமிக் கொண்டு, ''நான் சொல்கிறபடி எழுத வேணும், ராஸ்கல், உம்... ஆயிரத்துத் தொள்ளாயிரத்து...ம் ஆண்டு, மைசூர் சமஸ்தானம் மகாராஜா அரசாங்கத்தில், தும்கூர் ஜில்லா திப்டூர் தாலூகா கம்பனகெரெ பிர்க்கா ராமஸந்திர கிராமத்தின் கணக்குப்பிள்ளை காலமான ராமண்ணாவின் மூத்த மகன் உரிமைக்காரர் கணக்குப்பிள்ளை சென்னிகராயருக்கு மேற்படி ஜில்லா மேற்படி தாலூகா மேற்படி கிராமத்தின், மாற்றுக் கணக்குப்பிள்ளையாய் இருந்த சிவலிங்கே கவுடனாகிய நான் எழுதிக் கொடுத்த பொறுப்புப் பத்திரம் என்னவென்றால், இந்த ஆண்டு வரை நான் கவனித்து வந்த பிர்க்கா கணக்குப்பிள்ளை வேலை உங்களுடையதே ஆகும். நீங்கள் மைனராக இருந்தபடியால் நான் கவனித்து வந்தேன். தாங்கள் இப்பொழுது மேஜர் ஆகி ஒன்றரை ஆண்டுகள் கழிந்து விட்டபடியால் மேற்படி பொறுப்பை இன்று தங்களுக்கு ஒப்படைத்து, அது சம்மந்தமான சகல கணக்குப் பத்திரங்களையும் தங்கள் வசம் ஒப்படைத்திருக்கிறேன், என்பதில் எனக்கு

எவ்வித ஆட்சேபமும் கிடையாது. அதைத் தவிர, என் உடல் நலம் கெட்டுவிட்டபடியால், அரசாங்க வேலையை என்னால் செய்ய முடியாமல் இருக்கிறபடியால், அரசாங்கத்தின் உத்தரவு வருவதற்கு முன்பே தங்களிடம் எல்லாப் பொறுப்புகளையும் ஒப்படைத்து விட்டேன், தாங்கள் இதைக் கவனித்துக் கொள்வீராக — என்று எழுதிக் கொடுத்த பொறுப்பு பத்திர விவரங்கள் — முதல் நம்பர் பண வசூல், இரண்டாம் நம்பர் தரிசு முதலிய பத்திரங்கள், மாற்று கணக்குப்பிள்ளை சிவலிங்கே கவுடனுடைய கையொப்பம்.''

பொறுப்புப் பத்திரத்தை கையில் வாங்கிக் கொண்ட பிறகு அவர் சொன்னார். ''கணக்குப் புத்தகங்களைக் கொண்டு வந்து வை'' சிவலிங்கன் புத்தக மூட்டைகளைக் கொண்டு வந்து அவர் முன்னே வைத்தான். ''இதுகளை எல்லாம் நீயும், உன் பெண்டாட்டியும் இவர் வீட்டில் கொண்டு போய் வையுங்கள்'' என்றார்.

சிவலிங்கன், அவனது மனைவி, பதறி எழுந்த குழந்தைகள் ஆகிய அனைவரும் புத்தகக் கட்டுகளைத் தூக்கிக் கொண்டுபோய் சென்னிகராயனது வீட்டில் வைத்த பிறகு ''வாலை ஆட்டினால் ஒட்ட வெட்டி விடுவேன். மூடிக் கொண்டு பேசாமல் போய்ப் படு. போலீஸ் இங்கேதான் காம்ப் போட்டிருக்குது'' என்றார் சவாரிக்காரர்.

சிவலிங்கன் தனது மனைவி, மக்களுடன் வீட்டுக்குப் போய் கதவைத் தாழிட்டுப் படுத்தான். சற்றும் எதிர்பாராமல் ஏதோ கனவில் நடப்பது போல் இவையெல்லாம் நடந்தது அவனை நடுங்க வைத்து விட்டது. இதற்கு மேல் எதுவும் நடக்காமல் போயிற்றே என்று அவனது மனைவி அவனைத் தேற்றினாள்.

போலீஸ்காரர்கள் இருவரும் படுத்து உறங்கிப் போனார்கள். கங்கம்மா, சென்னிகராயன், அப்பண்ணய்யா ஆகிய மூவரும் சமையலறையில் படுத்தார்கள். சென்னிகராயனுக்கு உறக்கம் வரவில்லை. ஏதோ பீதி அடைந்து காய்ச்சல் வந்தது போல் அவன் இருந்தான். ஜோசியர் இரவு உறங்கினாரா, இல்லையா என்பதை எவரும் கவனிக்கவில்லை. அவருக்குப் பசி எடுத்ததோ, என்னவோ! காலையில் எழும் வேளையில், அவர் இரவு ஏவல் பூசையிலிருந்து எடுத்த வாழைப் பழ சீப்புகளில் இரண்டு சீப்பு பழங்களைத் தின்றுவிட்டு அவற்றின் தோலை தூணின் அருகே குவித்திருந்தார். காலையில் ஏழு மணிக்கு அப்பண்ணய்யாவைக் கூப்பிட்டு தண்டல்காரனை அழைத்து வரச் சொன்னார். அவன்

வந்ததும் உத்தரவு போட்டார். ''கணக்குப்பிள்ளை வேலையை உரிமைப்படி சென்னிகராயருக்குக் கொடுத்தாச்சு. ஆகையால் எல்லோரும் அவருக்குக் கட்டுப்பட்டு நடக்க வேணும். இல்லா விட்டால் தண்டனைக்கு ஆளாகணும். அப்படின்னு ஊருக்குள் தண்டோரா அடித்து சொல்லிவிடு. போலீஸ்காரங்க உள்ளே படுத்திருக்காங்க. தூணுக்கு பக்கத்திலே தொப்பியைப் பார்த்தியா?''

தண்டல்காரன் கைகுவித்து கும்பிட்டுவிட்டுப் போனான். சென்னிகராயன் கணக்குப்பிள்ளையாகப் பொறுப்பு ஏற்றுக் கொண்டது அரை மணி நேரத்திற்குள் ஊர் முழுவதும் தெரிந்து போயிற்று. அதே பிர்க்காவைச் சேர்ந்த குருபரஹள்ளி, லிங்காபுரம், கிராமங்களுக்கும் செய்தி தெரிவிக்க அவன் புறப்பட்டுப் போனான்.

பதினொரு மணிக்கு எழுந்தவுடன் போலீஸ்காரர்களுக்கு வென்னீரில் குளியல். அதற்குப் பிறகு வெல்லமும் பாலும் சேர்த்து காபி, பிறகு சாப்பாடு எல்லாம் ஆயிற்று. கல்லேச னுடன் வந்திருந்த டபேதாருக்கு இருபத்தைந்து ரூபாய் கொடுத்துவிட்டு, மீதியிருந்த இருபத்தைந்து ரூபாயை எடுத்துக் கொண்டு, கண்டி ஜோசியர் அதிகாரியைப் பார்த்து பொறுப்பு மாற்றத்தை முறைப்படி பதிவு செய்வதற்காக கம்பனகெரெயை நோக்கி குதிரையின் மீது புறப்பட்டார். சாப்பிட்டு முடித்த கல்லேசனும், டபேதாரும் சிரவன பௌள கொளாவை நோக்கிப் புறப்பட்டார்கள்.

இரவு பத்து மணிக்கு ஜோசியர் குதிரைச் சவாரி செய்து திரும்பி வந்தார். புதிய கணக்குப்பிள்ளை சென்னிகராயனுக்கு நெருப்பைப் போல் காய்ச்சல் அடித்துக் கொண்டிருந்தது. கங்கம்மா மகனுடைய நெற்றியில் பற்றுப் பூசி ஒரு துணியால் இறுக்கக் கட்டியிருந்தாள். அவன் தூக்கத்தில் அரற்றிக் கொண்டு இருந்தான். ''அய்யோ, நான் உதைக்கலே. நான் செஞ்சது தவறுதான்...'' அவனுடைய முனகல் அங்கிருந்த எவருக்கும் புரியவில்லை. உள்ளே வந்து பார்த்த ஜோசியருக்குப் புரிந்துவிட்டது. அவர் ஒரு ஓலையைக் கொண்டு வந்து அதன் மேல் கோடுகள் வரைந்து, அதைச் சுருட்டி, ஒரு மஞ்சள் நூலைச் சுற்றி, ஒரு முறுக்கிய கயிறுல் இறுகக் கட்டி, ஒரு தேங்காய் உடைத்து அதன் நீரால் அதை மூன்று முறை தடவி விட்டு, அந்த நீரை அவனுடைய முகத்தின் மேல் 'சல்' என்று அடித்து, ஓலையை அவனுடைய கழுத்தில் கட்டி, உடம்பை மூன்று முறை தடவி விட்டு, தலையின் மீது நான்கு தடவை

தட்டினார். கங்கம்மாவிடம் சொல்லி இலவங்கம், மிளகு, இஞ்சி போட்டு கஷாயம் காய்ச்சி வைத்து அதை குடிக்கக் கொடுத்தார். இப்போது கணக்குப்பிள்ளைக்கு ஆழ்ந்த உறக்கம் வந்தது.

மறு நாள் காலையில் எழுந்தபோது காய்ச்சல் விட்டுப் போயிருந்தது.

# மூன்று

## 1

நஞ்சம்மா பெரியவளாகி, சீர் வரிசை எல்லாம் முடிந்து வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். கணக்குப்பிள்ளை சென்னிகராய ருக்கு மனைவியிடம் பிரியம் அதிகம். ஆனால் அவளை அதிகாரம் பண்ண வேண்டும் என்ற விருப்பமும் இருந்தது. அதிகாரம் செய்து ஆட்டிப்படைப்பது என்றால் எப்படி? அடிக்க வேண்டும். அது சென்னிகராயரால் செய்யக் கூடிய வேலையல்ல. சண்டித் தனம் செய்யக் கூடிய பசுவையோ அல்லது கன்றுக் குட்டி யையோ கூட அவரால் அடிக்க முடியாது. நாவால் திட்டி, மிரட்டி ஆட்டி வைக்க வேண்டும். ஆதலால் அவருக்கு சரள மாக வரக் கூடிய ''முண்டை'' என்னும் சொல்லுடன் வேறு பல அடைமொழிகளையும் சேர்த்துப் பலவிதமாக அந்தச் சொல்லைப் பயன்படுத்துவார். அவருடைய மொழிப் புலமை அவ்வளவுதான் என்பது காரணமல்ல. அவர் கங்கம்மாவின் மகன். அவரால் சொல்மாரி பொழிய முடியும். ஆனால் இந்த விஷயம் மாமனாரின் காதுக்கு எட்டி விட்டால் என்ன செய்வது என்ற பயம் அவருக்கு அடிக்கடி நினைவுக்கு வரும்.

மருமகளை அடக்கியாளக் கூடிய விருப்பமும் திட்டக்கூடிய வசைச் சொற்களும் கங்கம்மாவுக்கு குறைவாக இருக்கவில்லை. ஆனால் அவளுக்கும் சம்பந்தியைக் கண்டால் மிகுந்த பயம். எனவே அவள் சீறிப் பேசுவதிலேயே திருப்தி அடைய வேண்டிய தாயிற்று.

கணக்குப் பிள்ளை வேலை கிடைத்த பிறகு முதல் வருடம் சென்னிகராயர் தானே கணக்கு எழுதி ஜமாபந்திக்கு கொண்டு வந்திருந்தார். அது வெறும் தாலூகா ஜமாபந்தி. ஹுஜூர் ஜமாபந்தியும் கூட அல்ல. தலைமை குமாஸ்தாவுக்கு மாமூல் கொடுத்த பிறகும் அவர் கணக்கில் நூறு பிழைகளைக் கண்டு

பிடித்தார். அவருடைய ஜமாபந்திக் கணக்கு முடியவில்லை. ''தூ...இவங்க''... என்று தனக்குள் முனகிக் கொண்டாரே யொழிய வாயைத் திறந்து திட்டவில்லை. அவருடைய கணக்கை ஜமாபந்தி செய்வதில்லையென்றும், இரண்டு மாதங்களுக்குள் அவரே திப்டூருக்குப் போய் அதிகாரியின் கையொப்பம் வாங்கி வர வேண்டும் என்றும் தலைமைக் குமஸ்தா கூறினான். அதிகாரியின் முன் நின்று வசை வாங்கிக் கொள்ளும் அனுபவம் அவருக்கு அதுவரை கிடையாது.

அதே ஜமாபந்தி வந்திருந்த திம்மலாபுரம் கணக்குப்பிள்ளை தியாவரசய்யா தவறில்லாமல் கணக்கு எழுதுபவர் என்று பெயர் பெற்றவர். இந்த வேலையைத் தவிர அவருக்கு வேறு ஜீவனோபாயம் கிடையாது. ஆனால் கணக்குப்பிள்ளை வேலை என்பது சாப்பாட்டுக்கு ருசி கொடுக்கும் ஊறுகாயைப் போன்றதுதானே யொழிய அது வயிறு நிரம்புவதற்கு உதவாது என்று அவர் கூறிக் கொண்டிருந்தார். சென்னிகராயர் தியாவரசய்யாவை அணுகினார். இது மட்டுமல்லாமல் எல்லாக் கணக்குகளையும் எழுதிக் கொடுப்பதாயும் மொத்தமாக வருடத்துக்கு ஐம்பது ரூபாய் தர வேண்டும் என்றும் அவர் கூறினார். சென்னிகராயனுடைய மூன்று கிராமங்களடங்கிய பிர்க்காவின் மொத்த வசூலே நூற்றிருபத்திரண்டு ரூபாய் ஏழு அணா பதினொரு பைசா. அதிலும் பச்சை நோட்டுக்கு மேல் உள்ளது காகிதம். மை செலவுகளுக்குச் சரியாகிறது. செலவுக் கணக்குப் போட்டால் சிரஸ்தாருக்கு பத்து (அதில் தாசில்தாருக்கு ஆறு, சிரஸ்தாருக்கு நான்கு என்கிறார்கள்) தலைமை குமஸ்தாவுக்கு இரண்டு, பிர்க்கா குமஸ்தாவுக்கு இரண்டு, மற்ற ரொக்கம் ஒன்று, சேவகர்களுக்கு தலா எட்டணா — பதினேழு, பதினெட்டு ரூபாய் செலவாகிறது. அதைத் தவிர தாலூகா ஆபீசுக்கு வந்த பொழுது சாப்பாடு, பலகாரம், ஜமாபந்தி செலவு. இத்தனை செலவுகள் முடிந்த பிறகு, கணக்கு எழுத ஐம்பது ரூபாய் கொடுக்க வேண்டுமென்றால் சென்னிகராயர் எங்கே போவார்? வசூல் செய்யும் பொழுது மட்டும் பத்து ரூபாய்க்கு மேல் வரி செலுத்தும் குடியானவர்கள் ஒரு ரூபாய், அதற்கு குறைந்தவர்கள் எட்டணா, இரண்டு ரூபாய் வரிக்காரர்கள் நான்கு அணா என்று மை வாங்கும் காணிக்கை செலுத்தும் வழக்கம் உண்டு. ஆனால் ராமஸந்திர கிராமம் ''மை'' காணிக்கையை மணியக்காரரே வாங்கி ஏப்பம் விட்டுக் கொண்டிருந்தார். லிங்காபுரத்திலிருந்தும் எதுவும் வந்து கொண்டிருக்கவில்லை. குருபரஹள்ளி கிராமத்தினுடையது மட்டும் நாற்பது ரூபாய் வரை கிடைத்துக் கொண்டிருந்தது. இதற்கு மேல் எவ்வளவு வருமானம் வந்தாலும் அது

கணக்குப்பிள்ளையின் திறமையைப் பொறுத்தது. பாகப்பிரிவினைப் பத்திரம், விற்பனைப் பத்திரம், அடமானப் பத்திரம், புகார் மனு இவைகளின் மூலம்தான் மேற்கொண்டு வருமானம் இருந்தது. வரி வசூல் கணக்கையே சரிவர எழுதத் தெரியாத சென்னிகராயர் ரிஜிஸ்தர் பத்திரங்களை எவ்வளவு கச்சிதமாக எழுதுவார்! அவருக்கு அந்த வகையில் வருமானமே இல்லை.

திம்மாலபுரத்தின் தியாவரசய்யா ராமஸந்திர கிராமத்திற்கு வந்து பதினைந்து நாள் குடி இருந்தார். நஞ்சம்மாவும், கங்கம்மாவும் சாப்பாடு பலகார விஷயத்தைக் கவனித்துக் கொண்டார்கள். சென்னிகராயர் அக்கறையாக உபசரித்தார். கணக்கு முடிந்தவுடன் அவரையும் உடன் அழைத்துக் கொண்டு போய் தலைமைக் குமஸ்தாவுக்கு இரண்டு, சிரஸ்தாருக்கு ஐந்து ரூபாய் கொடுத்து மரியாதை செய்த பிறகு தியாவரசய்யாவே ஜமாபந்தி கையொப்பம் வாங்கிக் கொடுத்தார். கோட்டுப் போட்டுக் கொண்டு, அதன் மீது அங்க வஸ்திரத்தைப் போர்த்திக் கொண்டு சென்னிகராயர் தாலூகா அலுவலகத்திற்குப் போய் வந்தார். அதிகாரி கையொப்பமிடும் போது இவர் அருகே கை கூப்பி நின்று கொண்டிருந்த போதிலும் அதிர்ஷ்ட வசமாக அதிகாரி இவரை எதுவும் கேட்கவில்லை. தலைமைக் குமாஸ்தா காட்டிய இடத்தில் கையொப்பமிட்டுக் கொடுத்தார்.

திப்டூரிலிருந்து சென்னிகராயரும், தியாவரசய்யாவும் வண்டியில் புறப்பட்டனர். திம்மாலபுரத்தில் தியாவரசய்யா இறங்கிக் கொண்டார். சென்னிகராயர் ஊர் வந்து சேரும் பொழுது மதியம் ஆகிவிட்டது. வண்டியிலிருந்து இறங்கும் பொழுதே மனைவியைத் திட்டிய வண்ணமாக இறங்கினார். ''ஏண்டி, கழுதை, ஜமாபந்தி முடிச்சுட்டு வந்து, உடம்பெல்லாம் வலிக்குது. விளக்கெண்ணெய் கொண்டு வந்து உடம்பெல்லாம் தேய்த்து விடு'' என்று கத்தினார்.

நஞ்சம்மா, உயரமான, கட்டுடல் கொண்ட வலுவுள்ள பெண். வீட்டின் கொல்லையில் இருந்த ராட்டினக் கிணற்றில் நீர் இறைத்து அண்டாவில் நிரப்பிக் காய்ச்சினாள். கணவனின் தலையில் எண்ணெய் தேய்த்து, முதுகு, தோள், கால், பாதம் முதலியவைகளுக்கும் எண்ணை தேய்த்துவிட்டு சுடச்சுட வென்னீரை உடம்பில் விட்டு, நன்கு பொடித்த சீகைக்காய்த் தூளை உடம்பில் தேய்த்துக் குளிப்பாட்டினாள். அவர் உடம்பு துடைத்துக் கொண்ட பிறகு, அவருக்கு மெத்தை விரித்துக் கொடுத்தாள். அவர் படுத்துக் கொண்டதும் கை, கால்களை, மெது

வாகப் பிடித்துவிட ஆரம்பித்தாள். அவர் போதும் என்று சொல்லும் வரை உடம்பு பிடித்து விட்டாள்.

உ

திருமணம் செய்திருந்தால் அப்பண்ணய்யாவுக்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே செய்திருக்க வேண்டும். ஆனால் அப் பொழுதுதான் சென்னிகரராயருக்குத் திருமணம் நடந்தது. அதற்குப் பிறகு அவர் கணக்குப்பிள்ளையாகும் விஷயம், அதன் பின்பு அதைப் பற்றிய வேலை விவகாரங்கள் சரியாகி விட்டன. ஆகையால் திருமண நேரம் தாமதமாய் இப்போது வந்து அமைந்தது.

அப்பண்ணய்யா சென்னகேசவய்யாவின் மடத்துக்கு இரண்டு ஆண்டுகள் போனது மெய். ஆனால் கல்விக்கும், அவனுக்கும் சம்பந்தமில்லை என்று ஆசிரியரே சொல்லிவிட்டார். அது அவனுடைய தவருகுமா? மணலில் எழுதி அவனுடைய விரல் நகம் வலித்தது. ஆனால் எழுத்துக்கள் மணலிலேயே மறைந்து போயின. அதைப்பற்றி எவரும் கவலைப்படவில்லை. அவனை மடத்துக்கு அனுப்பியது எதற்கு? அவன் கரும்புத் தோட்டத்தில் பீடி புகைத்து நெருப்பு பற்ற வைக்காமலிருக் கட்டும் என்றுதானே?

அவனுக்குப் பெண் கொடுத்தவர் கடூர் வட்டாரத்தைச் சேர்ந்த நுக்கிகெரே என்னும் கிராமத்தின் சியாம பட்டர் என்னும் புரோகிதர். கங்கம்மாவின் தாய் வீடு இருந்த ஜாகவல்லு கிராமத்தின் மூலம் அவருக்கு இந்தப் பையன் இருக்கும் விஷயம் தெரிந்து அவரே வந்து பார்த்து திரு மணத்தை முடிவு செய்தார். இருப்பதோ ஒரே மகள். ஆண் பிள்ளைகள் இல்லை. பெண்ணுக்கு ஆசார விவகாரமும் அத் துடன் துணியில் கிருஷ்ணன் படத்தை தையல் செய்யும் வேலை யும் கூடத் தெரிந்திருந்தன. அதாவது பெண் ''நாகரீகமான வள்.'' ஆனால் இதை சியாம பட்டர் கங்கம்மாவிடம் தெரி விக்கவில்லை. கூறியிருந்தால் அப்படிப்பட்ட 'தளுக்குக்காரி' வேண்டாம் என்று கூறி கங்கம்மா அதற்கு ஒப்புக் கொண்டிருக்க மாட்டாள்.

ஒரு சேர் எடையுள்ள வெள்ளி பஞ்ச பாத்திரம் முதற் கொண்டு சரிகை வேட்டி வரை எல்லாம் கொடுத்து திரு மணத்தை நன்றுகவே செய்திருந்தார்கள். பையனுடைய தாய் தந்தை என்னும் முறைக்கு அண்ணி நஞ்சம்மாவும்

அண்ணன் சென்னிகராயரும் இருந்து பெண்ணை ஏற்றுக் கொண்டனர். திருமணம் கழிந்து ஆறு மாதங்களில் சாதம்மா பெரியவளாகி சீர் வரிசை முடிந்து வீட்டுக்கு வந்துவிட்டாள்.

மனைவியை எப்படி ஆள்வது என்பது பற்றி அப்பண்ணய்யா வுக்கும் ஆரம்பத்தில் சந்தேகமிருந்தது. அண்ணன் அண்ணியை அடக்கியாளக் கூடிய விதத்திலேயே தானும் மனைவியை அடக்க வேண்டும் என்று முடிவு செய்திருந்தான். அவள் வந்த அன்று காலையிலேயே ''அடி முண்டை, எனக்கு எண்ணெ தேய்க்க வா, இங்கே'' என்றான்.

இது யாரைக் குறித்துச் சொன்னது என்று சாதம்மாவுக்கு முதலில் தெரியவில்லை. அவள் அதைக் கவனியாது பெருக்கிக் கொண்டிருந்தாள். ''அடி உன்னெத்தான் சொன்னது கேக்கலியா? சாத்து முண்டை'' என்று கணவன் கூறியதும் திடுக்கிட்டவளாய் அவனைப் பார்த்தாள். அதென்ன, அப்படிப் பாக்கறே, சொன்னது கேக்கலியா கழுதெ முண்டை?'' என்று அவன் மறுபடியும் கூவினான். சாதம்மாவுக்கு அழுகை வந்து விட்டது. அவள் துடைப்பத்தைப் போட்டுவிட்டு மாமியாரிடம் ஓடிச் சென்று சொன்னாள். ''உங்க மகன் சொன்னதைக் கேட்டீங்களா? பெண்டாட்டியை இப்படிக் கூப்பிட யாரு சொல்லிக் கொடுத்தாங்க அவருக்கு?''

மருமகள் இவ்வளவு துணிச்சலுடன் இருப்பாள் என்று கங்கம்மா நினைத்துப் பார்க்கவேயில்லை. பெரிய மருமகளை சென்னிகராயன் அப்படிக் கூப்பிடுவதில்லையா? அவள் ஒரு வார்த்தையும் பேசாமல் அமைதியாக இல்லையா? ஆனால் இந்தத் [1]தாடகி தன்னை எதிர்த்து இப்படிக் கேட்பதா?

''புருஷன், பெண்டாட்டியை எப்படிக் கூப்பிடுவான்? ஓடுகாலி''

''நான் ஏன் ஓடுகாலி ஆகிறேன்? அப்படிச் சொல்றவங்க தான் அப்பிடி இருப்பாங்க''

இந்தப் பேச்சைக் கேட்டதும் கங்கம்மா பொங்கி எழுந்தாள். ''டே பொம்பிளைப் பயலே, உன் பெண்டாட்டி உன்னைப் பெத்தவளைப் பார்த்துச் சொன்னது காதிலே விழுந்திச்சா? நான் ஓடு காலியாமே! பெண்டாட்டியை ஒழுங்கா அடக்கத் தெரியாத [2]சிகண்டிப் பயலே!''

---

[1] தாடகி — இராமாயணத்தில் வரும் அரக்கி

[2] சிகண்டி — மகாபாரதத்தில் வரும் ஒரு பாத்திரம்
பாஞ்சால நாட்டு இளவரசன் — ஆண்மையற்றவன்

அப்பண்ணய்யாவின் ஆண்மை சீறி எழுந்தது. அவ ளுடைய குரல் வளையைக் கையில் பிடித்துக்கொண்டு ''படால்'' என்று அறைந்தான். தலைசுற்றி அவள் கீழே விழுந்தாள். ''கொன்று போடறேன் உன்னை'' என்று அவன் உறுமிக் கொண்டிருந்த பொழுது, எல்லாவற்றையும் உள் ளிருந்து கேட்டுக்கொண்டிருந்த நஞ்சம்மா சமையலறை யிலிருந்து ஓடி வந்தாள். அவள் அதுவரை அப்பண்ணய்யா விடம் பேசியது கூடக் கிடையாது. ''அப்பண்ணய்யா, வீட்டுக்கு வந்த மருமகப் பொண்ணை இப்படிக் கொடுமை செஞ்சா கை முடமாப் போயிடும். உங்களுக்கு ஏன் இந்த கெட்ட புத்தி?'' என்று சொல்லிக் கொண்டே உள்ளிருந்து தண்ணீர் கொண்டு வந்து சாதம்மாவின் முகத்தில் தெளித்தாள். அண்ணியைப் பார்த்து ''முண்டை'' என்று திட்ட அப்பண்ணய்யாவின் நாக்கு துடித்தது. ஆனால் நஞ்சம்மாவின் தகப்பனார் கண்டி ஜோசியரின் நினைவு வந்ததால் அவன் பேசாமல் இருந்தான். சாதம்மாவுக்கு முழு நினைவு தவறிவிட வில்லை. அவள் தானாகவே எழுந்து அமர்ந்தாள். ''நல்ல பரம்பரையிலே பொறந்திருந்தா நல்ல பேச்சு வரும்.'' என்று அவள் சொன்னாள்.

''சாதூ நீ பேச வேண்டாம், பேசாமல் வா'' என்று நஞ்சம்மா அவளிடம் சொல்லி, அவளை மெல்லப் படியேற்றி மச்சின் மேல் அழைத்துச் சென்றாள்.

''அவளுக்குத் தாளம் போட்டு அவளைக் கௌப்பி விடறதுக்கு கூட்டிட்டுப் போறா இந்தப் பெரிய இராட்சசி'' என்று கங்கம்மா சொன்னது காதில் விழாததைப் போல் நஞ்சம்மா சென்றாள். ''இந்த மாதிரிப் பேச்சு பிராம்மணராப் பொறந்த இவங்க வாயிலே வரலாமா?'' சாதம்மா ஒரு பலகை யின் மேல் அமர்ந்தவாறு கேட்டாள்.

''இது உனக்குப் புதுசு. இந்த வீட்டு வாடிக்கையே அப்படி''

''அப்படியானா மச்சினர் உங்களையும் இப்படித் திட்டறாரா?''

''இங்கே வந்தப்புறம் இரண்டு வருஷத்திலே எனக்குப் பழக்கமாயிடுச்சு''

''நீங்க ஏன் கேட்டுகிட்டு பேசாம இருந்தீங்க, அதுதான் இவருக்கும் தைரியம் வந்திடுச்சு''

இதற்கு நஞ்சம்மா பதில் எதுவும் சொல்லவில்லை. தனக்குள் யோசிக்கத் தொடங்கினாள். மறுபடியும் சாதம்மா சொன்னாள், ''உங்க அப்பா எத்தனை பெரிய மனுஷர். என் கலியாணத்திற்கு வந்திருந்தாரே, கலியாண வீட்டிலே அவரைப் பாத்து எல்லோரும் மிரண்டு போனாங்க. அவர் ரொம்பவும் பெரிய மனுஷர்ன்னு என் அப்பாவும் சொன்னார். மச்சினருக்கு கணக்குப்பிள்ளை வேலை வாங்கித் தந்ததே அவர்தானாமே! என் அப்பாகிட்டே சொல்றேன்னு ஒரு தடவை மெரட்டுங்க. அப்புறம் வாயை மூடிக்கிட்டு பேசாம இருப்பார். இல்லாட்டா ஒரு தடவை நீங்களே அவர்கிட்டே சொல்லுங்க. அப்பத்தான் நல்ல புத்தி சொல்லிக் கொடுப்பார்.''

''சாதூ, உனக்கு சின்ன வயசு. இன்னும் தெரியாது. புருஷனுக்கு புத்தி வரணுமின்னு எந்த பொண்ணும் அப்பங் கிட்டே சொல்லி ரகளை பண்ணக்கூடாது.'' என்று கூறிய போதிலும் தன் தகப்பனின் முழு இயல்பையும் நஞ்சம்மா வாயைத் திறந்து விவரிக்கவில்லை. அவருக்கு யார் மீது கோபம் வந்தாலும் உடனே வீட்டுப் படியேறிச் சென்று குடுமியைப் பிடித்து பற்கள் தெரித்து விழும்படி உதைத்து விட்டுத்தான் பேச்சை ஆரம்பிப்பார். இதைத் தவிர வேறு வழி முறை அவருக்குத் தெரியாது. தனது கணவன், மருமகன் என்னும் மதிப்பை மாமனாரிடம் காப்பாற்றிக் கொள்ளவில்லை என்பது அவளுக்குத் தெரியும். தைரியமற்றவர்களை அவள் தகப்பனார் என்றும் மதிக்கவே மாட்டார். அது அவருடைய சுபாவம். ஆனால் தான் கணவனின் மானத்தை காப்பாற்றாமல் போனால் எப்படி?

சாதம்மா சொன்னாள், ''அப்படியானா இவருக்கு நீங்களே நல்ல புத்திமதி சொல்லுங்க. இனிமேல் எங்கிட்டே இப்படிப் பேசாம செய்யுங்க.''

இதற்குள் கீழே சென்னிகராயரின் குரல் கேட்டது. ''எங்கே போனா இவ? இவ வீடு பாழாய்ப் போக. இன்னும் ரொட்டி செஞ்சு சட்னி அரைக்கலியா?''

''கேட்டியா உன் மச்சினர் பேச்சை? நான் போய் ரொட்டி செய்யறேன். நீ சட்னி அரை. இல்லாட்டா உன் புருஷனுக்கு எண்ணை தேச்சுவிடு போ.'' என்று கூறி நஞ்சம்மா எழுந்தாள்.

''நான் போய் சட்னி அரைக்கிறேன். வேணுமின்னா அவங்க அம்மா கையாலே எண்ணெய் தேச்சுக்கட்டும்.'' என்று சாதம்மா தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

# நான்கு

## 1

நஞ்சம்மாவுக்கு ஏழு மாதமாயிருந்த போது ஒரு நாள் கண்டி ஜோசியர் தமது குதிரையில் ராமஸந்திர கிராமத்துக்கு வந்தார். இம் முறை பகல் நேரத்திலேயே வந்தார். அவர் வந்த இரண்டு மணி நேரத்துக்குப் பின்னர், தலையணைகளுடன் கூடிய ஒரு வில் வண்டி வந்து நின்றது. பிரசவத்திற்காக தன் மகளை அழைத்துச் செல்ல வந்த அவர் தன் மகன் கல்லேச னுடைய திருமணச் செய்தியையும் கூறினார். இன்னும் பதி னைந்து நாட்களில் பெண்ணின் வீட்டில் திருமணம். ஹாசன் ஊரைச் சேர்ந்த பெண். எல்லோரும் திருமணத்துக்கு முன்பு நாகலாபுரத்துக்கு வந்து சேர வேண்டுமென்றும், அங்கிருந்து வண்டியில் அனைவரும் திருமணத்துக்குப் புறப்பட்டுப் போகலா மென்றும் சொன்னார். பிறகு மகளுடன் பயணத்தைத் தொடங்கினார். நஞ்சம்மா வண்டிக்குள் அமர்ந்து கொண்டாள். வண்டிக்கு முன்பாக போர்த் தளபதியைப் போல் கண்டி ஜோசியர் வெள்ளைக் குதிரையின் மீது அமர்ந்து சென்றார்.

நாகலாபுரம் வீட்டில் இப்பொழுதும் பாட்டி மட்டும் தனியே இருந்தாள். நஞ்சம்மா பிறந்த நாளிலிருந்து சீராட்டி வளர்த்தவள் அவள்தான். பாட்டியைக் கண்டதும் நஞ்சம்மா வின் கண்களிலிருந்து நீர் வடிந்தது. அதிக நாட்கள் பாட்டியை விட்டுப் பிரிந்ததாலா அல்லது வேறு காரணங்களுக்காகவா என்பது அவளுக்குத் தெரியவில்லை. பிள்ளைத் தாய்ச்சியாய் நஞ்சம்மாவை இதற்கு முன்னரே வீட்டுக்கு அழைத்து வர வேண்டும் என்று பாட்டி நினைத்திருந்தாள். ஆனால் கண்டி ஜோசியர் ஊர் ஊராக சுற்றிக் கொண்டு இருந்ததனால் அது சாத்தியப்படவில்லை. அவர் முதல் நாள் இரவுதான் வீடு திரும்பியிருந்தார். மகனுடைய திருமணத்தையும், தேதியை யும், தீர்மானம் செய்து விட்டு வந்திருந்தார். இதற்கு முன்பே மகனுக்குத் திருமணம் செய்து முடித்திருக்க வேண்டும். ஆனால் ஜோசியர் இதுவரை அதைப் பற்றி அக்கறை காட்டவில்லை. சில நாட்களாக அவனுடைய போக்கு சரியில்லை என்று வேறொரு போலீஸ்காரன் தெரிவித்தான். எனவே உடனடியாகத் திரு மணத்தை ஏற்பாடு செய்தார்.

தமையனின் திருமணத்துக்கு நஞ்சம்மாவும் ஏற்பாடுகள் செய்யத் தொடங்கினாள். வீட்டுக்குச் சுண்ணாம்பு பூசுவதி

லிருந்து எல்லா வேலைகளுக்கும் ஆட்களை ஏற்பாடு செய்யும் பொறுப்பு அவளுடையதாயிற்று. ஊருக்குள் தொடர்ந்து இருப்பது என்னும் பழக்கம் ஜோசியரிடம் எப்போதுமே கிடை யாது. குதிரை ஏறிப்போன அவர் எட்டு நாட்கள் கழித்து வந்தார். திருமணத்துக்கு இன்னும் ஆறு நாட்கள் இருந்த பொழுது கல்லேசன் போலீஸ் உடையிலேயே ஊருக்கு வந்தான். எல்லா விவகாரங்களிலும் அவன் திறமைசாலி. திருமண ஏற் பாடுகளிலும் தங்கைக்கும், பாட்டிக்கும் எல்லா உதவியும் செய்தான். அவர்களுடைய குடும்பத்தில் முக்கியமான உற வினர்கள் ராமஸந்திர கிராமத்துக்காரர்கள்தான். சுவாமி சமாராதனைக்கு முதல் நாள் சென்னிகராயர், அப்பண்ணய்யா, சாதம்மா ஆகியவர்கள் வண்டியில் வந்தார்கள். கங்கம்மா தான் விதவையானதால் வரவில்லை என்று சொல்லி விட்டாள். சுவாமி பூஜை முடிந்த பிறகு அனைவரும் இரவு புறப்பட வேண்டும். ஆனால் கர்ப்பிணியாய் இருந்த நஞ்சம்மாவுக்கு மதியம் முதலே உடல் களைப்பாய், காய்ச்சல் கண்டது போல் இருந்தது. மாலையில் படுத்து விட்டாள். இரவு நேரத்தில் மாட்டு வண்டியில் இருபத்து நான்கு மைல் தூரம் பயணம் செய்வது உசிதமல்ல என்று அனைவரும் கருதினார்கள். பாட்டி யும் அவளும் வீட்டிலேயே தங்கி இருப்பது என்று முடிவாயிற்று.

வீட்டில் பாட்டியும் அவளும் மட்டும் தனித்து இருந்தனர். அது முதல் பிள்ளைப்பேறு. இந்தப் புதிய அனுபவத்தில் சாதாரணமாக இருக்கக் கூடிய பயம் நஞ்சம்மாவுக்கும் இருந் தது. ஆகையால் தன்னுடன் கணவனும் இருப்பது நல்லது என்று அவள் நினைத்தாள். வண்டியில் இருந்த கணவனுக்குச் சொல்லி அனுப்பினாள். வண்டியில் இரவு நேரத்தில் படுத்துத் தூங்குவதற்கு ஏற்ற இடத்தைத் தயார் செய்து கொண்டிருந்த சென்னிகராயர் சீற்றம் மிகுந்த குரலில் மற்றவர்களுக்குக் கேட்காத வண்ணம் ''என்ன?'' என்று கேட்டார்.

''எனக்கு ஒரு மாதிரி இருக்குது. வீட்டிலே ஆண்கள் யாரும் இல்லை. கலியாணத்துக்கு அப்பண்ணய்யாவும் சாதம்மா வும் போகட்டும். நீங்க இங்கே இருங்க.''

''அது எப்படி?'' என்று கேட்கும் போதே, திருமண வீட் டில் கோபுரம் போல் குவிந்துள்ள புளியஞ் சாதத்தையும் போளி களையும் தன்னிடமிருந்து யாரோ பறித்துச் செல்வது போல் அவருக்குத் தோன்றியது.

''ஏன் முடியாது? நீங்க இங்கேயே இருக்கணும்னு கல்லேசன் கிட்டேயும் அப்பாகிட்டேயும் சொல்லிடறேன்.''

''அதெல்லாம் வேண்டாம். வேணும்னு சாதம்மாவை நீ இங்கேயே இருக்கச் சொல்லு.''

நஞ்சம்மா மறுபடி பேசவில்லை. இரண்டு வருடங்கள் குடித்தனம் நடத்தியதிலிருந்து அவருடைய சுபாவம் எப்படியென்று அவளுக்குத் தெரியும். ''பரவாயில்லை நீங்க போங்க'' என்றாள். அவர் தான் ஏற்கெனவே முடிவு செய்து வைத்திருந்த குளிராத நல்ல இடமாய்ப் பார்த்து வண்டியில் அமர்ந்தார். சாதம்மா தானாகவே வலிய வந்து ''நான் இருக்கட்டுமா, அக்கா?'' என்று கேட்டாள்.

''வேண்டாம், நீ போயிட்டு வா'' என்று நஞ்சம்மா சொன்ன போதிலும் அவள் ஒப்புக் கொள்ளவில்லை. அவள் பாட்டியிடம் சென்று ''நீங்க வயசானவங்க, வீட்டிலே வேறே யாருமில்லை. நான் உங்களோடு இருக்கிறேன்'' என்றாள்.

''அங்கே ஓடியாடி வேலை செய்ய நம்ம வீட்டுப் பெண் பிள்ளைகள் யாருமில்லை. நீயாவது போய் செய்ய வேண்டிய வேலையைக் கவனி, நான் நஞ்சம்மாவைப் பாத்துக்கிறேன் பரவாயில்லை.'' என்று வற்புறுத்திய பிறகு அவள் புறப்பட்டாள்.

இரவு எட்டு மணிக்கு நான்கு வண்டிகள் கிளம்பின. ஜோசியர் கோட், பூட்சு, மேல் சட்டை முதலியன அணிந்து குதிரையில் முன்னே சென்றார். தன் நண்பர் சிலருடனும், டபேதாருடனும் கல்லேசன் பின் வண்டியில் அமர்ந்தான். நஞ்சம்மா கதவருகில் நின்று கொண்டு நான்கு வண்டிகளும் கண்களிலிருந்து மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்தாள்.

இரவு படுக்கும் பொழுது பாட்டி, சொன்னாள், ''பார் நஞ்சா, நீங்க ரெண்டு பேர்தான் கொளந்தைக. நீ ஏழு மாத கர்ப்பிணின்னு அப்பனுக்குத் தெரியும். ஆனாலும் இப்போ கல்யாணம் முடிவு செய்திட்டு வந்திருக்கிறான். அவனுக்கு புத்தி இருக்குதா, இல்லையா?''

''உன் தாய் இறந்து போன நாளிலிருந்து நான் ஒண்டியாக இருக்கிறேன். கல்லேசன் ஆண் பிள்ளை. நீ பொறந்த சமயம் அவனுக்கு ஏழு வயசு. ஆண் பிள்ளை எப்படியோ வளர்ந்துவிடும். உன் அப்பன் மூணு நாள் வீட்டில் தங்கி இருந்தால் மூணு மாசம் இருக்க மாட்டான். நீ கல்யாணம் ஆகிப் போனதிலிருந்து

நான் ஒண்டியாக இருந்து அலுத்துப் போயிடுச்சு. என்னவோ உன் வயித்திலே நாலு கொளந்தைக பொறந்து வளக்கணும்னு ஆசை. ஆண்டவன் நடத்தி வைக்கிறான். ஆறு பெண் கொளந்தைக கல்யாணம் செய்து கொடுத்து விட்டால் நெனச்ச போது வர முடியுமா?''

''இனி மேல் பரவாயில்லே. கல்லேசன் பெண்டாட்டி வர்ரா. உனக்கும் ஜோடி கெடைச்சுடும்.''

''உனக்குப் பைத்தியம். அவன் எந்த ஊருக்கு மாத்தலாகிப் போறானோ? அவன் கூட பெண்டாட்டியும் போகணும், அவ ஹாசன் ஊர்க்காரி, மகனுக்குக் கல்யாணம் முடிவு செய்யற போது உன் அப்பன் என்னிடம் ஒரு பேச்சுக் கேட்டானா? அவன் மனசிலே தோணற மாதிரி செய்யறான். இவன் பொறக்க என் வயிறு என்ன புண்ணியம் செஞ்சுதோ?''

நஞ்சம்மாவின் உள்ளம் தனது தந்தையைப் பற்றி சிந்திக்க ஆரம்பித்தது. அதற்குள் பாட்டி கேட்டாள். ''உன் மாமியார் உண்மையாகவே நல்லபடி நடத்தறாளா?''

''உம் நல்லபடி நடத்தறார்''

''சரி விடு, ஒரு பெண்ணுக்கு அதைவிட வேறு என்ன வேணும்'' என்று பாட்டி அமைதியானாள்.

சிறிது நேரம் கழித்து அவளே பேசினாள். ''பார் கண்ணு, நீ அப்போ பாடிக்கிட்டிருந்தியே, சீதா வனவாசப் பாட்டு, லவகுசா சண்டை போட்டது, அது நெனவிருக்கா?''

''அங்கே போனப்புறம் ஒரு தடவை கூட சொல்லலே. காலேயில் ராகி இடிக்கும் போது ஒரு நாள் சொல்ல ஆரம்பிச்சேன். தூக்கத்தைக் கெடுக்காதேன்னு அவர் சொல்லிட்டாரு. நான் பேசாமல் இடிக்க ஆரம்பிச்சேன்.''

''நாளேயிலிருந்து தினசரி சொல்லு, எனக்குக் கேட்க வேணுமின்னு ஆசையாய் இருக்குது.'' என்று சொன்னவள் ஏதோ நினைவு வந்தவளாய் ''ஒண்ணும் வேணும் விடு. பிள்ளேத் தாச்சிப் பொண் சீதா வனவாசம் பாட்டை சொல்லவும் கூடாது, கேட்கவும் கூடாது'' என்றாள்.

இரண்டு நிமிடங்கள் கழித்து மறுபடியும் கூறினாள். ''பார் நீ போனப்புறம் நம் ஊரில் பாட்டு சொல்லற பொண்களே

இல்லை. யார் வீட்டிலாவது ஆரத்தி செய்ய வேணும்னு வெறிச் சுன்னு இருக்குதுன்னு, சொல்றாங்க, உன் பாட்டுப் புஸ்தகத்தை மறந்து விட்டுப் போயிட்டியாம். அன்னிக்கு ஒரு நாள் கண்டிக்கு கெடைச்சுது. கொளந்தையோடதுன்னு சொல்லி எடுத்து வச்சான். காலையிலே தேடி எடுத்துப் பார். இல்லாட்டா மறந்து போயிடும்.''

உ

கேல்லேசனின் திருமண நாளன்றே நாகலாபுரத்தின் மீனவர் குப்பத்தில் எலி செத்து விழுந்தது. அதாவது பிளேக் மாரி யம்மா ஊருக்குள் வந்தாள். தன்னிடம் வேண்டிக் கொண்ட பிரார்த்தனையை நிறைவேற்றுதவர்களையும், பக்தியில்லாமல் நடப்பவர்களையும் ஒழித்து விடுவாள். கிராமத்துக்குள் அவள் வருவதற்குள் மக்கள் எல்லோரும் வீட்டை விட்டு ஊருக்கு வெளியே வயல், தோப்புகளுக்குப் போய் ஓலைக் கீற்றினால் குடிசை போட்டுக் கொண்டு இருக்க வேண்டும். மூன்று மாதங் களோ அதற்குப் பிறகோ கிராமத்தை விட்டு அவள் புறப்பட்டுப் போன பிறகு மக்கள் எல்லோரும் திரும்பி வரலாம்.

அதற்கு மறு நாள் கூடை மாரியம்மா வீட்டுக்கு வீடு வந்தார். இரட்டைத் தடிப்புள்ள, நான்கு முழ நீளமுள்ள சாட்டையால் தன்னுடைய உடம்பின் மேல் 'படார்' என்று அடித்துக் கொண்டு உடம்பு முழுவதும் மஞ்சள், குங்குமம் பூசிக் கொண்டு, கூடையைப் பிடித்துக் கொண்டு வந்தார். மாரியம்மா வேஷம் போட்டுக் கொண்டவனுக்குப் பின்னால் அவனுடைய மனைவி துதி சொல்லிக் கொண்டு இருந்தாள். ''அறுபத்து நான்கு கிராமங்களிலும் வந்தவளே! தாயை விட்டுக் குழந்தையைப் பறித்தவளே! .........! .........! .........! .........! ஏ......ஏ...'' அந்த ஆண் நடு நடுவே 'சடீல் சடீல், என்று தன்னுடைய வெற்றுடம்பின் மேல் சாட்டையால் அடித்துக் கொண்டு இருந்தான்.

இவ்வாறு கூடை மாரியம்மா வருவதும், துதி சொல்வதும், புதிய விஷயமல்ல. ஆனால் ''பிள்ளைத்தாச்சியின் உயிரைப் பறித்தவளே!'' என்ற சொல்லைக் கேட்டு பாட்டி பயந்துவிட்டாள். எல்லோரை விட முன்னதாகச் சென்று அரிசி, பருப்பு, மஞ்சள், குங்குமம், தேங்காய் மூன்று காசு தட்சிணை எல்லாவற்றையும் முறத்தில் வைத்து மாரியம்மனுக்குப் படைத்துவிட்டு குங்குமப் பிரசாதத்தைப் பெற்று நெற்றியில் இட்டுக் கொள்ளுமாறு சொல்லி நஞ்சம்மாவிடம் கொடுத்தாள்.

மறுநாள் இன்னும் அதிக எலிகள் விழுந்தன. ஊரின் மற்ற சேரிகளிலும் பிளேக் தென்பட்டது. சுற்றுப்புற கிராமங்களில் எல்லாவற்றிலுமே ஊரைவிட்டு ஜனங்கள் கிளம்புவதாகச்செய்தி வந்தது. இனிமேல் இவர்களும் கூடிய விரைவில் கொட்டகை போட்டுக் கொள்ள வேண்டும். கணக்குப்பிள்ளை சியாமண்ணு மாலையிலேயே வீட்டுக்கு ஒரு ஆள் பஞ்சாயத்துக் கூட்டத்துக்கு வரவேண்டுமென்றும், திங்கட்கிழமைக்குள் எல்லோரும் ஊரைக் காலி செய்ய வேண்டுமென்றும் சொல்லி அனுப்பினர். மறுநாள் காலையிலிருந்தே ஜனங்கள் தத்தம் தோப்பு, வயல்களிலும் நிலமற்ற ஏழைகள் மற்றவர்களுடைய பூமியிலும் கொட்டகை போட ஆரம்பித்தனர். வசதி குறைந்தவர்கள் தத்தம் பொருள்களையும் எடுத்துச் சென்றனர்.

கண்டி ஜோசியர் திருமணம் முடிந்து ஊருக்குத் திரும்பிய அன்றைய தினமே பல வீட்டுக்காரர்கள் பொருட்களை அப்புறப் படுத்திக் கொண்டிருந்தனர். கல்யாண அலுப்பு நீங்க சற்று ஓய்வு எடுத்துக் கொள்ளலாம் என்று நினைத்தபோது இந்த வேலை வந்து விட்டது. புதிதாக சுண்ணும்பு அடித்த வீட்டைக் காலி செய்ய வேண்டும். ஊரை விட்டுக் கிளம்ப வேண்டுமென்றல் ஊர்ப் புரோகிதரைக் கேட்டுக் கொண்டு தீர்மானிப்பது வழக்கம். சிறு புரோகித வேலைகளுக்கு புட்டா பட்டர் என்னும் ஒரு ஏழை பிராமணரை கண்டி ஜோசியர் நியமித்து, அதன் வருமானத்தை எல்லாம் அவருக்கே கொடுத்து வந்தார். ஆனல் இம்முறை கணக் குப்பிள்ளை சியாமண்ணு இவரைக் கலந்தாலோசிக்கவில்லை. இவர் இல்லாமலிருக்கும் பொழுது புட்டாபட்டரையும் அழைக்கவில்லை. தானே எல்லா முடிவுகளையும் செய்தான். அவனுக்கும் இவருக்கும் ஆரம்பத்திலிருந்தே பகை. இத்துடன், கடந்த ஆண்டு, வயல் தண்ணீர் பற்றி இருவருக்கும் தகராறு. அன்றிலிருந்து அவன் இப்படித்தான் ஏதாகிலும் செய்து வந்தான். அவனுடைய தீர் மானத்தைத் தாம் எதிர்க்க வேண்டும் என்று ஜோசியர் முடிவு செய்தார்.

திருமண வீட்டார் திரும்பி வந்த மறுநாளே சீர் செய்து பந்தல் அவிழ்த்தார்கள். சென்னிகராயர், அப்பண்ணய்யா, சாதம்மா ஆகிய மூவரும் ஊர் திரும்பினர்கள்.

இந்த சியாமண்ணுவை என்ன செய்ய வேண்டும்? அவன் செய்த தீர்மானத்தை எதிர்க்க வேண்டும். ஆனல் மக்கள் அப்பொழுதே சாமான்களை அப்புறப்படுத்தி, பூட்டி, எழுதத் தெரிந்தவர்கள் தங்கள் வீட்டுக் கதவின் மேல் ''நாளை வா''

என்று எழுதி கொட்டகைக்கு சென்றுர்கள். ''நான் பஞ்சாங்கம் படிச்சுப் பார்த்தேன். ஊருக்கு எதுவும் ஆகாது. யாரும் ஊரை விட்டுக் கிளம்ப வேண்டாம்'' என்று கண்டி ஜோசியர் கூறிஞலும் அதை எவரும் பொருட் படுத்தவில்லே. ''அப்படி யாஞல் நீங்க ஊருக்குள்ளேயே இருக்கிறீங்களா?'' என்று யாரோ ஒருவர் கேட்டார். ''உம் இருக்கிறேன்'' என்று இவரும் பிடி வாதப் போக்கில் கூறிஞர். தான் சொன்ன பேச்சைக் காப்பாற்ற வேண்டுமென்று, மற்றவர்கள் விட்டுச் சென்ற ஊரில் தான் ஒருவரே தனித்து இருக்க முடிவு செய்தார்.

இந்த முடிவை பாட்டி மிகவும் கடுமையாக எதிர்த்தாள். ''பேத்தி தலேச்சன் பிரசவத்துக்கு வந்திருக்கா. பாழாப் போன ஊரில் ஒருத்தன் மட்டும் குடித்தனம் நடத்தறது எப்படி? நாமும் கண்டிப்பாக் கிளம்பணும். பிரசவம் பார்க்க வசதி இல்லேன்னு சம்பந்தி சொன்ஞ சொல்லட்டும். வேணும்ஞ நானே அங்கே போய் இருந்து கவனிச்சிட்டு வர்றேன்''.

''நான் ஊரை விட்டுக்கிளம்ப மாட்டேன்னு கண்டிப்பாச் சொல்லியிருக்கேன். கிளம்பிஞ என் மரியாதை என்ஞறது?''

''இதில் என்ன மரியாதை? பேசாமல் வா''

கண்டி ஜோசியர் தமது மரியாதையைக் கைவிட ஒப்புக் கொள்ளவில்லே. பிறகு வாக்கு வாதம் நடந்து, ஊருக்கு வெளி யே உள்ள அவரது வயலில் கொட்டகை அமைப்பது, நஞ்சம்மா வும், பாட்டியும் அங்கே தங்குவது, நஞ்சம்மாவின் குழந்தைப் பேறு அந்தக் கொட்டகையிலே கவனிப்பது என்று முடிவாயிற்று. ஆஞல் ஜோசியர் மட்டும் ஊருக்குள் வீட்டிலேயே தங்குவது என்று தீர்மானித்தார். ''உன் புத்தி முன்ஞடி இருந்தே குறுக்கு புத்தி; பிடிவாத புத்தி நீ மட்டும் இங்கே ஏன் இருக்கணும்? அங்கே வரக் கூடாதா?''

''பிளேக் அம்மா எங்கிட்ட எதையும் பறிச்சுக்க மாட்டா. நான் ஆம்பளே. இங்கேயே இருக்கிறேன்''.

வேறு வழி எதுவும் இருக்கவில்லே. அவர் போட்டுக் கொடுத்த கொட்டகைக்கு பாட்டியும், பிள்ளேத்தாச்சியான பேத்தியும் சாமான்களுடன் சென்றனர். அனேவரும் விட்டுச் சென்றுள்ள ஊரில் வசிக்கும் ஜோசியரின் உடம்பில் 'அம்மன்' இருப்பதால் அவர் அடிக்கடி கொட்டகைக்கு வந்து தன் சொந்தத் தாயையும், மகளேயும் பார்க்கக் கூடாது என்று சியாமண்ஞ பொதுப்

பஞ்சாயத்து பேசி முடிவு செய்தான். ஆகையால் நஞ்சம்மாவின் குழந்தைப் பேறு சம்பந்தமான எல்லா விவகாரங்களும் பாட்டி யின் தலையில் விழுந்தன.

3

ஆண்டி ஜோசியர் ஒருவர் மட்டும் ஊரில் தங்கியவர். ஒரு பசுவை அவர் கொட்டகைக்கு அனுப்பினார். மற்றொரு பசுவை யும், கன்றையும் தானே வைத்துக் கொண்டார்.

தன் சமையல் வேலையைத் தானே செய்து கொண்டார். வீட்டை நன்கு பெருக்கி, சுத்தமாய் வைத்துக் கொண்டு புலித் தோலின் மேல் அமர்ந்து பழைய ஜோதிட ஓலைச்சுவடிகளை வாசித்து முக்கோண, நாற்கோண, ஐங்கோண, உருவங்களைப் பற்றியும், ஓம் ஹ்ரீம், தீம் என்னும் மந்திரச் சொற்களின் சக்தியைப் பற்றியும் தன் மனத்துள் சிந்தனை செய்து வந்தார். இல்லாவிடில், ஏதாவது ஒரு மந்திரத்தை உரக்கச் சொல்லிக் கொண்டு பின்புறம் நடைபோட்டுக் கொண்டிருப்பார். மிகவும் சலிப்பு ஏற்பட்டால் குதிரையில் சென்னராயன் பட்டணம் வரை சென்று வருவார்.

அவர் இத்தனை நாட்கள் தொடர்ந்து ஊரில் தங்கியதே கிடையாது. இப்பொழுதும் தங்க வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் கிராமக் கணக்குப் பிள்ளை சியாமண்ணாவின் பேரிலோ, அல்லது தன் பேச்சைக் கேட்காமல் ஊரை விட்டுச் சென்ற ஜனங்கள் மீதோ தான் கொண்டிருந்த விநோதமான பிடிவாதத் தினால் அவர் ஒருவர் மட்டும் தனியே இருந்தார். இருட்டு, தனிமை, திருடர்கள், கொலைகாரர்கள், பாம்பு பல்லி முதலிய வற்றைக் கண்டு பயப்படும் சுபாவம் அவர் ரத்தத்திலேயே கிடையாது.

ஒரு நாள் ஊருக்குள் ஒருவர் வந்தார். சுமார் ஐம்பது வயதிருக்கும். தலையின் முன் பாகத்தை அரை வட்டமாய் மழித்திருந்தார். பின்புறத்து வெள்ளை முடியை குடுமியாகக் கட்டியிருந்தார். சிவப்புச் சட்டை, கறுப்புக் கோட்டு அணிந்து வேட்டியைக் கச்சம் போட்டுக் கட்டியிருந்தார். முன் பாகத்தில் இரண்டு பற்களை இழந்திருந்த வாய் அவருடைய புகையிலை போடும் பழக்கத்தைக் காட்டியது. வலது கை நடுவிரலில் தங்கக் கம்பியைக் கொண்டு கோர்த்து செய்ததைப் போல் ஒரு மந்திர மோதிரம். வந்தவரின் அடையாளத்தை உடனே தெரிந்து கொள்ள முடியாவிட்டாலும், ஒரு நிமிடம் கழித்து

நினைவு கூர்ந்து, கண்டி ஜோசியர் பேசினார். ''என்ன வீராச்சாரி, காலியாப் போன ஊருக்கு வந்திருக்கே?''

''உங்களைப் பாத்துவிட்டு போகலாம்னு நாலு தடவை வந்தேன். நீங்க ஊரிலே. இருக்கீங்களா இல்லையாங்கறதே யாருக்கும் தெரியாது. இன்னிக்கு அப்படியே பாத்து விட்டுப் போகலாம்னு வந்தேன்''.

''வா, வா, உள்ளே உட்காரு.''

வீராச்சாரி உள்ளே வந்து அமர்ந்தான். தனது இருக்கைக்கு அருகில் ஜோசியர் நான்கு பழைய செருப்புகளை வைத்திருந்தார். ''பழைய செருப்பின் சக்தியை நீங்க ஒத்துக்கறிங்களா, சுவாமி?'' என்று கேட்டான் அவன்.

''கையிலே எடுத்துக்கிட்டு நின்னா எவனும் நம்ம பேச்சைத் தட்டமாட்டான்.''

''அதுக்கல்ல நான் சொன்னது. கெட்ட காத்து பேய் இதுகளை வெரட்டுமாம் அது.''

''அதுக்கும் ஆகும்தான். ஆனா நான் வெச்சுக்கிட்டிருப்பது மனுஷங்களுக்காக''

சிறிது நேரம் பல விஷயங்களைப் பற்றிப் பேசிவிட்டு ஜோசியர் கேட்டார். ''நீ எதுக்காக வந்தே?''

''அப்படியே வந்தேன். இப்ப ரெண்டு வருஷத்திலே ஒரு வேலை நடந்தது. சோளன் குட்டவுக்குப் பக்கத்திலே ஒரு ஏவல் செஞ்சேன். அமாவாசை நாள். காளியின் மேல் வெச்சிருந்த தட்சணை காசு, மூன்று சீப்பு பழம் எல்லாத்தையும் யாரோ அடிச்சுகிட்டு போயிட்டாங்க. உங்களுக்கு ஏதாவது தெரியுமான்னு கேக்க வந்தேன்''.

''ஏவல் செய்யக் கத்துகிட்டவனுக்கு சோழியைப் போட்டு ஆருடம் பாக்கத் தெரியாதா? என்னை ஏன் கேக்கறே? ஆருடம் பாக்க உன்னை விட எனக்கு நல்லாத் தெரியுமா?''

''இதற்கு சோசியமும் வேணும், புராணமும் வேணும். அன்னிக்கு ராத்திரி திரும்பி வந்து பார்த்ததுமே எனக்கு தெரிஞ்சு போச்சு. நான் செஞ்சு முடிச்சு புறப்பட்டதுமே காளி சிலையை ஒடைச்சுப் போட்டு, அது ஒடம்பு மேலே இருந்த பணத்தை

எடுத்துக்கிட்டு பக்கத்திலே வெச்சிருந்த பழத்தையும் தின்னு செரிக்கும் சக்தி வேறே யாருக்கும் கெடையாது. அமாவாசை ராத்திரி அங்கே போக யாருக்குத் துணிச்சல் இருக்கு? இந்த வட்டாரத்துலே கண்டி சோசியரைத் தவிர வேறு யாரும் இதைச் செய்ய முடியாதுன்னு எனக்குத் தெரிஞ்சு போச்சு. உண்மையைச் சொல்லுங்க''.

''உனக்கும் அறிவு இருக்குது ஆச்சாரி. இப்போ அந்தப் பணத்தை வாங்கிக்கிட்டு போக வந்தியா என்ன?

''அந்தப் பணம் பாழாப் போகட்டும். இனிமேல் நான் செய்யற வேலையிலே தயவு செஞ்சு தலையிடாதீங்க. உங்களை கும்பிட்டுக் கேட்டுக்கறேன்''.

''சரி விடு. நான் இன்னும் சமையல் செய்யலே. இப்போ ரெண்டு பேருக்கும் சேத்து செய்யறேன். சாப்பிட்டு விட்டுப் போ''. வீராச்சாரி சாப்பிடுவதற்காகத் தங்கினான். மாலை நான்கு மணி வரை இருந்து விட்டுப் புறப்பட்டான். அன்று இரவு கண்டி ஜோசியருக்குத் திடீரென்று மகளைப் பற்றிய நினைவு வந்தது. 'இப்போ பிரசவத்துக்கு நாள் நெருங்கியிருக்கும். நான் போய்ப் பார்க்கவே இல்லே. அந்த சோமாறி சியாமண்ணு பஞ்சாயத்துப் பேசி முடிவு செஞ்சா நான் எதுக்காகப் பயப்பட்டுப் போகமலிருக்கணும்? நாளைக்குப் போய்ப் பார்த்துட்டு வரேன். அவன் என்ன பிடுங்கருன்னு பாப்போம். அவனோட கொட்டகை நம்ம கொட்டகைக்குப் பக்கத்திலேயே இருக்குது. ராஜ கம்பீரமா அவனுக்கு எதிரிலேயே போறேன். அவன் ஏதாவது கூறினால், அவனைப் பட்டை எடுக்கிறேன். சோமாறிப் பயல், நான் இத்தனை நாள் அங்கே போகாமல் இருந்ததே சரியல்ல. அவன் போட்ட பஞ்சாயத்துத் தீர்மானத்தைப் பாத்து நான் பயந்துட்டேன்னு நெனச்சு அவன் மீசையை முறுக்கிக் கிட்டிருப் பான். என் மூத்திரத்தைத் தடவி செரைச்சுடனும் அவன் மீசையை,' என்று நினைத்துக் கொண்டே அவர் புரண்டு படுத்துக் கொண்டிருந்த பொழுது வீட்டின் ஓட்டின் மேலே ஏதோ விழு வதைப் போல சத்தம் கேட்டது. இன்னும் ஒரு நிமிடத்தில் ஒரு கல், இரண்டு கல் விழுந்த மாதிரி இருந்தது. இந்த வீராச் சாரியின் வேலையாக இருக்குமோ என்று நினைத்துக் கொண் டிருந்த பொழுதே 'சர் சர்' என்று இருபது, முப்பது கற்கள் வந்து விழுந்தன. ''வீராச்சாரிக்கும் இதுக்கும் எந்த சம்பந்தமும் இல்லே. இது ஊர்க்காரங்க யாரோ செய்யற வேலே. என்னை மிரட்டறதுக்காக இப்படி செய்யருனுக. இருக்கட்டும். இந்த

சிகண்டிப் பயல்களேக் கவனிச்சுக்கறேன்''. என்று சொல்லிக் கொண்டு அவர் மெதுவாக எழுந்து ஓசைப் படாமல் கதவைத் திறந்து கொண்டு பின்புறம் வந்தார். பிறகு மெதுவாக சுவரின் மேல் ஏறி அடுத்த வீட்டின் வழியாகச் சென்று தெருவுக்கு வந்து திடீரென்று உரக்க, ''எவன்டா அது, தேவடியாப் பயல்'' என்று அதட்டினர். நான்கைந்து பேர் திசை தெரியாமல் பதறியடித்துக் கொண்டு நாற்புறமும் சிதறி ஓடினர்கள். அவர்கள் பயத்தால் நடுங்கிக் கொண்டிருந்த பொழுது மற்றொரு முறை அதட்டினர். திடீரென்று பாய்ந்து அவர்களில் ஒருவனேப் பிடித்தார். மற்றவர்கள் தப்பி ஓடினர்கள்.

பிடிபட்டவனின் பெயர் ஜுட்டகன். கணக்குப்பிள்ளேயின் வயலே அவன் குத்தகைக்கு எடுத்துக் கொண்டிருந்தான். அவன் தைரியசாலி. ஆனல் இப்பொழுது அச்சத்தால் 'கிடு கிடு' வென்று நடுங்கிக் கொண்டிருந்தான். கண்டி ஜோசியர் என்றல் ஒரு மாரியம்மனுக்குச் சமம் என்னும் பயம். ஜனங்கள் காலி செய்துவிட்டுப் போயிருந்த ஊரில் மாரியம்மன் இருந்தே இருப்பாள் என்று அவன் கேள்விப் பட்டிருந்தான். இருண்ட இந்த நடு இரவில் தன் சகாக்களெல்லாம் ஓடிப்போன பிறகு ஆர்ப்பரித்துக் கொண்டு வந்து தன்னேப் பிடித்து வதைத்துக் கொண்டிருப்பது மாரியம்மஞ அல்லது கண்டி ஜோசியரா என்று அவனுக்கு நிச்சயமாகத் தெரியவில்லே. கண்டி ஜோசியர்தான் என்று தெளிவாகத் தெரிந்திருந்தாலும் அவரும் மாரியம்மன் தான் என்கிற நம்பிக்கையை அவனல் அகற்ற முடியவில்லே.

''அ...அ...அய்யோ... எஎ என்னே விட்டு விடுங்க'' என்று கை கூப்பினன்.

''நீ யார்? சியாமண்ண அனுப்பினை?''

''உம்''

''இங்கே வரக்கூடிய தைரியம் உனக்கு எப்படிடா வந்திச்சு?'' ''நீ ... நீ ... நீங்க ஊரில் இருக்க ... இருக்க மாட்டீங்கன்னு சொன்னரு'' ''நான் ஊரில் இருக்காட்டா கல் வீசத் தைரியம் வருமா?'' ''போகாட்டா வயலேப் புடுங்கிக்குவேன்னரு''

''மத்தவங்க யாரு?''

''திம்மக்கா வீட்டுக் குள்ளன், மியாகளகேரி குள்ளிகன், தளவார சித்தூரன்''

''அவங்களுக்கெல்லாம் எப்படி தைரியம் வந்திச்சு?''

''இல்லாட்டா அரசாங்க' நெலம் கெடைக்காதுன்னுரு?''

''அப்படியா? உம் பொண்டாட்டி முண்டையாகணும்னு உனக்கு ஆசையாய் இருக்கா?''

''கெஞ்சறேன், சாமி, அப்படிச் செய்யாதீங்க''

''என் வீட்டு மேலே கல் எறிஞ்சு நீ எப்படிப் பொழைப்பே?'' ஜுட்டகன் மறுபடியும் எதுவும் பேசாமல் நின்றான். அப்பொழுதே உடனே போய் கணக்குப்பிள்ளை சியாமண்ணாவின் கொட்டகையின் மேல் மண்ணெண்ணெய் ஊற்றி நெருப்புப் பற்ற வைக்க வேண்டுமென்று கண்டி ஜோசியருக்கு எண்ணம் வந்தது. ஆனால் அவருடைய கொட்டகைக்கு அருகிலேயே அவருடைய தாயும், மகளும் வசித்த கொட்டகை இருந்தது. நெருப்பு அங்கிருந்து இந்தப் பக்கமும் வீசலாம் என்று நினைத்து அந்த எண்ணத்தைக் கைவிட்டார். அந்த நாய்ப் பயலுக்கு புத்தி புகட்ட வேண்டுமென்றால் பட்டப் பகலில் செய்ய வேண்டும். இரவு வேளையில் செய்தால் அவனுக்கும் எனக்கும் என்ன வேறுபாடு! என்ற கேள்வி மனத்தில் எழுந்தது. ஜுட்டகன் அங்கேயே கைகூப்பி நின்று கொண்டிருந்தான்.

''என் கொட்டகைப் பக்கம் போயிருக்கியா?''

''உள்ளே போகலே. அந்த இடத்துக்குப் போயிருக்கேன்''

''அம்மா எப்படி இருக்காங்க?''

''இன்னிக்கு மத்தியானம் பொண் கொளந்தை பெறந்திருக்குது. தாயும் கொளந்தையும் நல்லா இருக்காங்க'' இந்தப் பேச்சைக் கேட்டு அவருடைய மனம் ஆறுதல் அடைந்தது. நாளைக்காலே அங்கே போய் அவர்களைப் பார்த்துவிட்டு வர வேண்டும். அப்படியே அந்த சியாமண்ணாவையும் விசாரித்து விட்டு வரவேண்டும் — என்று முடிவு செய்து அவர் ஜுட்டகனிடம் கூறினார்: ''சரி நீ போ.''

ஆனால் அவன் போகாமல் அங்கேயே நின்றான். ''ஏண்டா'' என்று கேட்டார். ''ஒண்டியாய்ப் போக பயமா இருக்குது. நீங்களும் துணைக்கு வாங்க'' என்றான்.

''அடிசக்கை, ஏண்டா நாயே! இங்கே வரப் பயமில்லே. இப்போ போடான்னு சொன்னா துணைக்கு வரவேணுமாம். பேசாமப் போறியா, உதைக்கட்டுமா?''

''இல்லீங்க போறேன்'' என்று அவன் வேகமாக ஊருக்கு வெளியே நடந்தான். ஆனால் சந்து, பொந்தெல்லாம் நுழைந்து சுற்றி பிளேக் பரவிய அந்த ஊரை விட்டு வெளியே போகவேண்டு மென்றால் இருநூறு, முன்னூறு தப்படிகளாவது நடக்க வேண்டும். ஏதோ ஒரு தைரியத்தில் கண்டி ஜோசியரின் வீடு இருந்த தெரு முனையைக் கடந்து சென்ற அவன் தொலைவில் திடீரென்று 'அய்யோ, அப்பா என்று விகாரமாய்க் கூக்குரலிட்டு ஓடிப் போனது காதில் பட்டது.

வீட்டின் முன் கதவுக்கு உள்பக்கத்தில் இருந்து தாழ்ப்பாள் போட்டிருந்ததால், ஜோசியர் மறுபடியும் பின் சுவரைத் தாண்டி வீட்டுக்குள் நுழைந்தார். ஆனால் உடனே தூக்கம் வரவில்லை. மறுநாள் சியாமண்ணாவுக்கு என்ன செய்வது என்பதைப் பற்றி எண்ணம் வந்தது. அவருடைய தகப்பனார் காலத்திலிருந்து அவருடைய வீட்டுக்கும் இவருடைய வீட்டுக்கும் ஒத்து வருவ தில்லே. கணக்குப்பிள்ளை என்றால் அரசாங்க வேலையாம். அவர் ராஜாவின் பிரதிநிதியாம். சியாமண்ணாவின் தந்தை அப்படிச் சொல்லிக் கொண்டிருந்தார். தற்போது இந்த மடையனும் அப்படிச் சொல்லிக் கொள்கிறான். நம்முடையது குறைச்சலா? அவனுடையது அரண்மனை வேலையென்றால் என்னுடையது குருமனை வேலே. அரண்மனைக்காரர்கள் குருமனைக்காரர்களை மிரட்டி வந்தார்கள். இப்பொழுது என்னுடைய காலத்தில் அது நின்று போயிருக்கிறது. தானம் வாங்கிக் கொண்டு வாழ்க்கை நடத்தி, இவர்கள் சொன்னபடி கேட்டு வந்தால் இவர்களுக்கு வேண்டும். என்னைப் போன்ற ஆண்மையுள்ள ஜோசியனாயிருந் தால் இவர்களுடைய 'ஆட்டம் பலிக்காது.' கண்டி ஜோசியர் என்றால் போரில் தீரன் கண்டீரவன் என்று பொருள். நாளை காட்டுகிறேன், இந்தப் பயல்களுக்கு — என்று யோசித்துக் கொண்டே படுத்திருக்கும் பொழுது விடியும் ஜாமத்தில் உறக்கம் வந்தது.

காலை விழித்தெழுந்த பொழுது பத்துமணி. சியாமண்ணாவின் கொட்டகைப் பக்கம் போக வேண்டுமென்று நினைத்துப் பின்புறம் போய்விட்டு வந்த பொழுது வீட்டின் முன்புறம் ஒரு போலீஸ் காரன் நின்று கொண்டிருப்பது, தென்பட்டது. ''என்ன செய்தி'' என்று கேட்டவுடன் அவன் சொன்னான். ''உங்க மகன் கல்லேச

னுக்கு பிளேக் வந்திருக்கிறது. அக்குள் இடைவெளியில் கட்டி வந்திருக்குது. நீங்க உடனே வரவேணும்.''

''உம்... எங்கே?''

''பௌகொளாவில் இருக்கிறுன். நெனப்பு சரியா இருக்குது. உங்களைக் கூட்டி வரணும்னு டபேதார் சொன்னுரு. கிராமப் புறம் ''பீட்'' போயிருந்தப்போ அம்மன் வந்திடுச்சு. சீக்கிரம் புறப்படுங்க.

மேற்கொண்டு பேசுவதற்கு எதுவுமிருக்கவில்லை. பின் புறத்தில் மாட்டுத் தொழுவத்தில் கட்டியிருந்த பசுவையும், கன்றையும் அவிழ்த்து ஊருக்கு வெளியே ஓட்டிச் சென்று எதிர்ப் பட்ட ஒருவனிடம், ''இதுகளை எங்க கொட்டகையிலே விட்டிடு.'' என்று சொல்லி அனுப்பினுர். வீட்டைப் பூட்டி போலீஸ்காரனைத் தனது குதிரையின் பின்புறம் அமர்த்திக் கொண்டு சிரவணபௌ கொளாவை நோக்கிக் குதிரையை ஓட்டினுர்.

## 4

இம்முறை பிளேக் நோய் நாகலாபுரத்தில் யாரையும் தாக்க வில்லை. சுற்றிலுமுள்ள எல்லா கிராமங்களிலும் மக்கள் ஊரை விட்டுக் கிளம்பியிருந்தார்கள். ராமச்ஸந்திர கிராமத்து மக்கள் வெளியே போய்க் கொட்டகை போட்டிருந்தாலும் மூன்று பேர் மடிந்தனர். மற்ற ஊர்களிலும் நிறைய ஜனங்கள் மடிந்து போயிருந்தனர். நாகலாபுரத்தில் அம்மனுக்கு யாரும் பலியாக வில்லை என்று சொல்ல முடியாது. இரவு நேரத்தில் ஜோசிய ருடைய வீட்டின் மீது கல்லெறிய வந்து பிடிபட்ட ஜுட்டகன் வீட்டுக்குத் திரும்பியதும் காய்ச்சல் கண்டு படுத்தான். தான் ஊருக்குள் சென்றிருந்ததாகவும், திரும்பி வரும்போது ஒரு சந்தில் கருப்பு நிறமுள்ள ஒரு பெரிய பெண்பிள்ளை பின்னிருந்து தன் மீது கருப்பு முந்தானையை வீசியது போல் தோன்றியதென் றும் அவன் மனைவியிடம் கூறினுன். காய்ச்சல் வேகமாக அதி கரித்தது. பிறகு குறையவில்லை. மறுநாள் மதிய வேளையில் நினைவு தவறியது. மாலையில் சிறிது உணர்வு வந்தது. விழிப்பு வந்தவுடன் ''கண்டி ஜோசியரிடம் மந்திரம் போடச் சொல்லு'' என்றுன். அவள் தன் சிறிய மாமனுரை ஊருக்குள் அனுப்பினுள். வீட்டுக் கதவு பூட்டிக் கிடந்ததால் அவரைப் பற்றி தகவல் தெரிய வில்லை. மறுநாள் காலையில் பார்த்த போது பூட்டு அப்படியே இருந்தது. ஜுட்டகனுக்கு மறுபடியும் நினைவு வந்த பொழுது

''ஜோசியர் வந்தாரா?'' என்று கேட்டான். ''இல்லே''யென்று தெரிந்ததும் கண் மூடினான். பிறகு உணர்வு வரவேயில்லை. இரண்டு நாட்களில் மடிந்தான். அவனுக்குக் கட்டி வந்ததா, இல்லையா என்பது யாருக்கும் தெரியவில்லை. ''அம்மன்'' வந்து சாக வேண்டுமென்றால் கட்டி கொப்பளித்துத் தென்பட வேண்டும், என்பது நியதியல்லவே? எப்படியோ ஜுட்டகனின் மனைவி விதவையானாள். அவள் அப்படி ஆக வேண்டாமென்று அவன் கண்டி ஜோசியரிடம் கெஞ்சியிருந்தான்.

நஞ்சம்மா பெண் குழந்தையைப் பெற்று, தாயும் குழந்தையும் நலமாய் இருக்கிறார்களென்று கண்டி ஜோசியரிடம் தெரிவித்து விட்டு வருமாறு மறுநாள் மதியம் ஜோசியரின் குத்தகைக்காரனை ஹொன்னனிடம் பாட்டி சொல்லி அனுப்பினாள். வீடு பூட்டியிருப்பதாக அவன் வந்து கூறினான். தாங்கள் ஊருக்குள் போன செய்தியைக் கல் வீசுவதற்காகப் போயிருந்த குள்ளனோ, குள்ளிகனோ, சித்தூரனோ யாரும் வாயைத் திறந்து யாரிடமும் சொல்லவில்லை. ஆகையால் இந்தச் செய்தி பாட்டிக்கும், நஞ்சம்மாவிற்கும் சிறிதும் தெரியாது. பசுவையும், கன்றையும் அனுப்பியதால் மகன் எங்கோ பயணம் போயிருக்கிறானென்றும், இன்னும் திரும்பி வரவில்லை என்றும் பாட்டி நினைத்துக் கொண்டாள். புரோகிதர் புட்டாபட்டரின் மனைவி பாட்டிக்கு உதவி செய்தாள். ராமச்ஸந்திர கிராமத்துக்குப் போய் செய்தியைத் தெரிவித்து குழந்தைக்கு *நாமகரணம் செய்யும் நாளன்று அவர்களை வரச் சொல்லும்படியும் சென்னிகராயரை அழைத்து வரும்படியும் புட்டாபட்டரிடம் பாட்டி சொன்னாள். காலி செய்த ஊரிலிருந்து அங்கே போகலாமா, கூடாதா என்று தெரியாமல் அவர் தயங்கிக் கொண்டிருந்த பொழுது தீட்டு அறையில் படுத்திருந்த நஞ்சம்மா அவரைக் கூப்பிட்டு, ''அவங்களும் ஊரைக் காலி செஞ்சிருக்காங்க. எங்க கொட்டகை ஊருக்கு வெளியே அம்மன் கோவிலுக்குப் பின்னாடி அத்தி மரத்துக்குப் பக்கத்திலே இருக்குதுன்னு நெனைக்கிறேன். தோட்டம் அங்கே தான் இருக்குது. நீங்க போயிட்டு வாங்க'' என்றாள். புட்டா பட்டரும் கிழக்குத் திசையில் பயணத்தை தொடங்கினார்.

பத்தாம் நாள் சென்னிகராயர் நாமகரணத்துக்கு கால் நடையாய்ப் புறப்பட்டார். வண்டி பூட்டிக் கொண்டு அப்பண்ணய்யாவையும், சாதம்மாளையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு புறப்பட்டிருக்கலாம் சாது அப்பொழுது கர்ப்பிணி

---

*நாமகரணம் : குழந்தைக்குப் பெயர் சூட்டும் சடங்கு.

யாய் இருந்தாள். வாந்தி இன்னும் நிற்கவில்லை. அதைத் தவிர, அவள் அப்பொழுது கங்கம்மாவிடமும், கணவனிடமும் பேசுவதில்லை. ஒரு நாள் அவ்விருவரையும் எதிர்த்துப் பேசிவிட்டாள். ஆரம்பத்திலிருந்தே மைத்துனரிடம் அதிகமாய்ப் பேசியதில்லை. அவரும் அவளிடம் பேசியதில்லை. இவ்வாறு, அவர் ஒருவரே தனித்து நாகலாபுரத்துக்குப் புறப்பட்டார்.

பதினொரு மணிக்கு அவர் மணல் பள்ளத்தைக் கடந்து, சோளன்குட்ட, கடிகெஹள்ளி இவற்றைத்தாண்டி நடு வழியில் உள்ள ஹூவன் ஹள்ளியை அடைந்தார். கிராமத்தின் முன் பக்கத்திலேயே ஒரு கடையில் பழுத்த ரஸ்தாளி வாழைப்பழ சீப்புகளைத் தொங்கவிட்டிருந்தான். ஒரு சீப்பு மூன்று அணு வீதம் மூன்று சீப்புகளை சென்னிகராயர் வாங்கினுர். மறு நாள் நாமகரணத்தின் தாம்பூலத் தட்டில் பழங்களை வைக்கலாம் என்று அவர் தீர்மானித்தார். கடைசியில் ஒரு திறந்த டப்பாவில் கரும்புச் சர்க்கரை வைத்திருப்பதும் தென்பட்டது. ஒன்றேகால் சேர் சர்க்கரையையும் வாங்கி ஒரு காகிதப் பொட்டலத்தில் கட்டிக் கொண்டு அதையும் தமது மூட்டைக்குள் போட்டுக் கொண்டு நடக்கத் தொடங்கினுர்.

இரண்டு மைல் தூரம் நடந்ததும் அவருடைய மனதில் ஒரு யோசனை தோன்றியது. குழந்தை பிறந்த பிறகு மூணு நாளைக்கொரு தடவை எண்ணெய்க் குளியல், சாப்பாட்டுக்கு ஒரு கரண்டி நெய், ''கமகம''ன்னு வாசனையா லேகியம் இதையெல்லாம் சாப்பிட்டுவிட்டு நல்லாப் படுத்துத் தூங்கறது, எனக்கு மட்டும் ஒண்ணும் இல்லை. இவ நாகலாபுரத்துக்குப் போன பின்னுடி நல்லா எண்ணெய் தேச்சு யாரும் வென்னீர் விடலை. எனக்குக் கை, கால் வலிக்காதா? அவ பாட்டி பேத்திக்கு பிரியமானது எதுன்னு கேட்டுக் கேட்டு செஞ்சு போடருளாம். தாய் இல்லாத குழந்தைன்னு அப்படி உபசாரம் செய்யருளாம். என்னைக் கூப்பிட வந்தப்போ புட்டாபட்டரே இப்படிச் சொன்னுர். எனக்கு ஏதாவது கொடுத்து அனுப்பினுங்களா? அல்லது இந்தப் பலகாரம் செய்யரேம், நீயும் வான்னு சொல்லி அனுப்பினுங்களா? இவங்க யோக்கியதையை செருப்பாலே அடிக்கணும் - என்று அவர் நினைத்துக் கொண்டிருந்தார். அவர் யோசித்துக் கொண்டிருக்கும் பொழுதே, வழியில் ஒரு ஆலமரம் தென்பட்டது. அதற்குப் பத்து மார் அப்பால் ஒரு குளமும் இருந்தது. கணக்குப் பிள்ளை தம்மையறியாமல் தனது மூட்டை முடிச்சுடன் ஆலமர நிழலில் அமர்ந்தார். ''இந்த வாழைப் பழத்தையும் கரும்புச் சர்க்கரையையும் அங்கே அவர்களுக்கு எதற்காக எடுத்துச்

செல்ல வேண்டும்?'' — என்று மனதில் பட்டவுடன் சீப்புகளை வெளியே எடுத்தார். சர்க்கரைப் பொட்டலத்தைப் பிரித்து வைத்துக் கொண்டு ஒவ்வொரு பழமாகத் தோல் உரித்து சர்க் கரையில் தொட்டு வாயில் போட்டு பாதி சாப்பிடுவதற்குள் அதை விழுங்கி, அடுத்த பழத்தைத் தோல் உரித்து சர்க்கரையில் தொட்டுக் கொண்டிருந்தார்.

மொத்தமாக முப்பத்தெட்டு பழங்களும், ஒன்னே கால் சேர் சர்க்கரையும் தீர்ந்த பிறகு அவருக்குத் தாகம் ஏற்பட்டது. குளத்தில் தண்ணீர் குடித்துவிட்டு வந்து, தனது மூட்டையைத் தலையணையாகத் தலைக்கு அடியில் வைத்துக் கொண்டு மாலை நேரம் வரை குறட்டை விட்டுத் தூங்கினர். விழித்துக் கொண்ட பிறகு பரபரப்புடன் நாகலாபுரத்தை நோக்கி நடக்கத் தொடங் கினர். அவர்களுடைய கொட்டகை எந்த இடத்தில் இருக் கிறது என்று புட்டாபட்டர் கூறியிருந்ததால் அதைத் தேடிக் கண்டு பிடிப்பதில் சிரமம் இருக்கவில்லை. அதுவரை இவருடைய வருகையை எதிர் நோக்கிக் காத்திருந்த பாட்டி மதியச் சமையல் ஆறிப் போயிருந்ததால் சூடாகச் சமையல் செய்ய உள்ளே போனள். கொட்டகைக்குள்ளேயே பிள்ளைத் தாய்ச் சிக்கு என்று கட்டப்பட்ட அறையில் ஒரு கட்டிலின் மீது குழந்தையுடன் நஞ்சம்மா படுத்திருந்தாள். சென்னிகராயர் அந்த அறையின் கதவருகே சென்றபோது நஞ்சம்மா கூறினள்: ''மத்தியானம் உங்களுக்கின்னு செஞ்ச சமையல் எல்லாம் ஆறிப் போச்சு. ஊருக்கு நேரா வராம அந்த மரத்தடியிலே ஏன் தூங்கினீங்க?''

இதைக் கேட்டதும் அவருக்கு ஆச்சரியமாய்ப் போய்விட் டது. ''அப்படி எவன் சொன்னது?''

''ஹூவன ஹள்ளி கடைக்கார சின்னையா எங்க வீட்டுப் புரோகிதத்துக்கு வர்றவன். அவன் கடையிலே நீங்க மூணு சீப்பு பழமும், ஒன்னே கால் சேர் சர்க்கரையும் வாங்கிட்டு வந்தீங்களாம். அவன் கடைச் சாமான் வாங்க இந்த ஊருக்குப் புறப்பட்டானும். வர்ற வழியிலே நீங்க ஆலமர நிழல்லே படுத்து கிட்டிருந்தீங்களாம். உங்களுக்குப் பக்கத்துலே பழத் தோலுக கிடந்ததாம்.''

''அப்படியா அவஞ் சொன்னன்? அவனை...'' என்று அவர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அவள் கேட்டாள். ''கெட்ட வார்த்தை ஏன் பேசறீங்க? வழியிலே பசிச்சுது. பழம் வாங்கிச் சாப்பிட்டீங்க யாரும் செய்யாத வேலையா அது? சீக்கிரமா வந்து வீட்டிலே சாப்பிட்டிருக்கலாமே!''

அவருக்கு எந்தவிதமான பதிலும் பிடிபடவில்லை. அல்லது வேறு வகைச் சொல் எதுவும் நினைவுக்கு வரவில்லை.

புட்டாபட்டரும் அவருடைய மனைவியும் உதவி செய்த தினால், பாட்டி பத்துப் பேரை விருந்து சாப்பாட்டுக்கு அழைத்து நாமகரணம் செய்வித்தாள். கணக்குப்பிள்ளை சியாமண்ணா வீட்டிலிருந்தும் வந்திருந்தார்கள். வீட்டுக்கு முதல் பெண் ஆனதால் அதற்கு பாட்டியின் பெயர் கங்கம்மா என்று வைக்க வேண்டியதாயிற்று. ஆனால் கங்கம்மா உயிரோடு இருப்பதால், கூப்பிடுவதற்கு வசதியாகவும் பிறந்த நட்சத்திரத்துக்குப் பொருத்தமாயும் பார்வதி என்று வைத்தார்கள். சென்னிகராயர் எட்டு நாட்கள் அங்கேயே தங்கியிருந்து அக்கம்மா பாட்டியின் சூடான சாப்பாட்டையும் உபசாரத்தையும் அனுபவித்தார். பிள்ளைத் தாச்சிக்கென்று வரவழைத்து வைத்திருந்த கொப்பரையும், வெல்லமும் அவருடைய வாய்க்கும் ருசியாக இருந்தன. நஞ்சம்மாளே வெற்றிலை மடித்து, சுண்ணாம்பு தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். பேத்தியின் கணவனுக்கு தினுசு, தினுசாக சமைத்துப் போட வேண்டுமென்று பாட்டிக்கு ஆசை. ஆனால் கிழவியான அவளது உடலில் தெம்பு இல்லை. மேலும் வேண்டிய சாமான்களை தாராளமாக வாங்க பணவசதி இருக்க வில்லை. மகன் கண்டி ஜோசியர் எங்கே போனாரோ யாருக்கும் தெரியவில்லை.

நஞ்சம்மா ஒருநாள் கணவனிடம் ''ஊர்லே கணக்குப்பிள்ளை வேலை இருக்குது. நீங்க ஷேக்தாருக்கும் கூட சொல்லாம இங்கேயே இருந்தா என்ன கதி?'' என்றாள்.

''அப்படியானா ஷேக்தாருக்கு ஒரு கடுதாசி அனுப்பட்டுமா''? கணவன் கேட்டான்.

''வசூல் காலம் நெருங்கி வந்திடுச்சு. நீங்க ஊரில் இல்லாம போனா தியாவரசய்யா என்ன செய்வாரு? வசூல் செய்ய வேண்டியது உங்க வேலைதானே? இன்னிக்கு தேதி இருபத் தஞ்சோ, இருபத்தாறோ ஆயிடுச்சு. ஒரு மழையும் லேசா வந்தாச்சு. ஊர்லே நெலம் எப்படி இருக்குதுன்னு பாக்க வேண்டாமா?''

ஊருக்குப் புறப்படாமல் வேறு வழி இல்லை. ஆகையால் கணக்குப்பிள்ளை சென்னிகராயர் மறுநாள் பலகாரம் சாப்பிட்டு விட்டு, பாட்டி செய்து கொடுத்த மாங்காய் சோற்று மூட்டையையும் தூக்கிக் கொண்டு கிளம்பினார். அவர் சென்ற பிறகு பாட்டி சொன்னாள்: ''நஞ்சா, உன் புருஷன் ஒரு தடவை கூட

குழந்தையை கையிலே எடுத்துக்கலியே? பொம்பளைக் குழந்தைன்னு வருத்தமா?'' நஞ்சம்மா பதில் சொல்லவில்லை. அவளுடைய கண்களில் நீர் நிரம்பியது. ''ஆம்பிளைக் குழந்தையா இருந்தாலும் எடுத்துக்க மாட்டாரு.'' என்று பதில் சொல்ல நாக்கு எழுந்தாலும் அவ்வாறு சொல்லவில்லை. பாட்டியின் பேச்சு தனது காதில் விழாதது போல் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

## 5

கண்டி ஜோசியர் வந்த பொழுது கல்லேசனுடைய அக்குளில் இருந்த கட்டி வீங்கி வலி அதிகமாய் விட்டது. அதற்கு அரசாங்க ஆஸ்பத்திரி டாக்டர் மருந்து கொடுத்திருந்தார். ''பெரிய டாக்டர் மருந்துதான் நல்லது. ஆனு நோயாளி உள்ள நிலைமையில் கூட்டிப் போவது சிரமம். என்ளுல் ஆனவரை செய்யறேன்'' என்ருர். தான் போய்ச் சேர்ந்தவுடன் ஜோசியர் பொறுப்பைத் தான் ஏற்றுக் கொண்டு டபேதாரிடம், ''நீங்க ஒரு வான் அனுப்புங்க நான் இவனை ஹாசனுக்குக் கூட்டிகிட்டுப் போறேன்'' என்ருர்.

டபேதார் சென்னராயன் பட்டணத்துக்குப் போய் ஒரு வான் கொண்டு வந்து அதில் கல்லேசனைப் படுக்க வைத்து அழைத்துக் கொண்டு போகும் வேலை முடிந்தது. அவன் நடு வழியில் இறந்து போயிருக்கக் கூடும் — ஆனுல் பிழைத்து விட்டான். கல்லேசனுடைய மாமன் ரங்கண்ணு கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக ஹாசனில் தபால்காரளுக இருந்தார். அவருக்கு பெரிய ஆஸ்பத்திரி டாக்டருடன் நல்ல பழக்கம் இருந்தது. டாக்டர் தம்மால் முடிந்த முயற்சி செய்தார். கட்டியை அறுத்து சீழ், கெட்ட ரத்தம் முதலியவற்றை வெளியே எடுத்து மருந்து போட்டார். உயிருக்குப் பயமில்லை என்று சொல்லும் நிலைமை வந்தது. ''இன்னும் பதினஞ்சு நாள் ஆஸ்பத்திரியிலே இருக்கட்டும்'' என்று டாக்டர் கூறிஞர். அதுவரை ஜோசியர் சம்பந்தியின் வீட்டிலேயே தங்கி மகனைக் கவனித்து வந்தார்.

ஆஸ்பத்திரியிலிருந்து வெளியே அனுப்பும் நாள் வந்த போதிலும் அவனுடைய இடது கை இன்னும் சரியாகவில்லை. அந்தக் கையின் அக்குளில் தான் கட்டி வந்திருந்தது. ''இவர் இந்த ஊரிலேயே இருக்கட்டும். நாங்க மறுபடியும் மருந்து கொடுக்கிருேம்'' என்று டாக்டர் கூறிஞர்.

ரங்கண்ணு மருமகனைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றார். எட்டு நாட்களுக்குப் பிறகு ஜோசியர் குதிரையில் ஊருக்குப் புறப்பட்டார். கடந்த இருபத்தைந்து நாட்களில் அவரது குதிரை உண்மையாகவே இளைத்துப் போயிருந்தது. சம்பந்தியின் வீட்டில் ஜோசியர் சாப்பாடு பலகாரம் சாப்பிட்டு வந்தார். ஹாசனில் தபால்காரனாய் இருந்த ரங்கண்ணு வீட்டில் ஜோசியர் சாப்பிடும் அளவுக்கு நல்ல சாப்பாடு கிடைக்காமல் இருந்தாலும், வயிறு நிரம்ப சாப்பாட்டுக்குக் கவலையில்லை. ஆனால் அவருடைய வெள்ளைக் குதிரைக்கு வேண்டிய மேய்ச்சலுக்கு என்ன செய்வது?

அவர் ஊருக்குப் புறப்பட்ட வேளையில் பிளேக் நோயின் அறிகுறிகள் மறைந்து சுற்று வட்டாரத்தில் இரண்டு தடவை இலேசான மழையும் பெய்துவிட்டது. நாகலாபுரத்துக்காரர்கள் கொட்டகைகளை விட்டுக் கிளம்பி ஊருக்கு வந்து விட்டார்கள். கல்லேசனுக்கு பிளேக் நோய் தொற்றி அவனை ஹாசனுக்கு அழைத்துப் போய் தற்போது அவன் உடல் தேறியிருக்கும் செய்தியும் ஜோசியர் அங்கேயே தங்கியிருக்கும் செய்தியும், பாட்டிக்கும், நஞ்சம்மாவுக்கும் காற்று வாக்கில் தெரிய வந்தது. இனி ஊருக்குள் போவதற்காக மகனை எதிர்நோக்கி இருப்பது சாத்தியம் இல்லை. அவருடைய வயலில் வேலை செய்யும் குடியானவர்கள் இருக்கிறார்கள். புட்டாபட்டர் இருக்கிறார். அவர்களுடைய உதவியினால் பாட்டி தானே கொட்டகையில் இருந்த சாமான்களை அப்புறப்படுத்தி, குழந்தையையும், நஞ்சம்மாவையும் வீட்டுக்கு அழைத்துச் சென்று விடுவது என்று முடிவு செய்து, ஆசாரியை அழைத்துப் போய் வீட்டின் பூட்டை உடைத்துப் பார்த்தாள். மழைத் தண்ணீர் வீட்டுக்குள் ஒழுகி தரை முழுவதும் நனைந்து சகதியாய் இருந்தது. மச்சின் மேல் போட்டிருந்த மூங்கில் சட்டத்தின் மேல் எல்லாம் தண்ணீர் வழிந்து அவை இன்னமும் ஈரம் உலராமல் இருந்தன. யாரோ போக்கிரிகள் வீட்டின் மீது கல் எறிந்திருக்கிறார்கள் என்பது அவளுக்குப் புரிந்து விட்டது.

அவர்கள் யார் என்று விசாரிக்க நேரம் இருக்கவில்லை. குத்தகைக்கார ஹொன்னன் மச்சின் மீது ஏணி வைத்து ஓடுகளை முன் பின்னாகத் தள்ளி வைத்து சரி செய்தான். வீட்டின் இரு புறங்களிலும் கதவுகளைத் திறந்து விட்டு காற்றுப்பட்டு தரை உலர்ந்து போக ஏற்பாடு செய்தான். ஆனாலும், புதிய மணல் பரப்பி தரையை செப்பனிட வேண்டியதாய் இருந்தது. அக்கம் பக்கத்துக்காரர்களை விட நான்கு நாட்கள் தாமதமாகத்தான் நஞ்சம்மா குழந்தையை எடுத்துக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்

தாள். குழந்தை பிறந்து ஒரு மாதமாய் விட்டது. எழுந்து ஏதாவது வேலே செய்வதாக அவள் சொன்னலும் பாட்டி விட வில்லே. வீட்டைப் பெருக்கி, மெழுகிச் சுத்தம் செய்வதிலிருந்து பால் கறக்கும் வரை எல்லா வேலேகளேயும் பாட்டியே செய்து வந்தாள்.

அவர்கள் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்த நான்காவது நாள் ஜோசியர் மதியம் மூன்று மணிக்கு குதிரையில் வீடு வந்து சேர்ந்தார். எல்லோருடைய உடல் நலத்தைப் பற்றியும் பாட்டியிடமும், நஞ்சம்மாவிடமும் விசாரித்த பிறகு அவரது கவனம் தரையின் மீது சென்றது. ''இதென்ன, தரைக்கு புதுசா மணல் போட்டீங்களா? இப்போ இதுக்கென்ன அவசரம்?''

''பாரு, வீட்டு மேலே யார் கல் வீசினுங்களோ? பருந்து உக்காந்து ஓட்டை இழுத்துப் போட்டதோ? மழைத் தண்ணி எல்லாம் உள்ளே ஒழுகி நெலமெல்லாம் சகதியாய்ப் போச்சு. கால் வைக்கவே முடியலே. ஹொன்னனிடம் சொல்லி மணல் போட்டுத் தட்டினப்புறம்தான் நாங்க சாமான் கொண்டு வந்தோம்.''

''படுவாப் பயல்களேக் கவனிக்கிறேன் ஒரு கை...!'' என்று சொல்லி கண்டி ஜோசியர் வெளியே போய்விட்டார். ஏன், எதற்கு என்பதெல்லாம் பாட்டிக்கும், நஞ்சம்மாவுக்கும் தெரியவில்லே.

மதிய சாப்பாட்டுக்குப் பின் கணக்குப்பிள்ளே சியாமண்ணு வீட்டுத் திண்ணேயில் கிராமத்தின் முக்கியஸ்தர்கள் பலர் ஒன்று கூடி இருட்டும் வரை பகடை ஆடுவது வழக்கம். இந்த நேரத்தில் சியாமண்ணு அங்கேதான் இருப்பான் என்பது ஜோசியருக்குத் தெரியும். அவர் நேரே சென்று திண்ணேயில் ஏறி நின்று கேட்டார். ''டேய் கழுதெ, ராத்திரி நேரத்திலே என் வீட்டு மேலே கல்வீச வைச்செ, ஆம்பளேயா இருந்தா பகல் நேரத்துலே வந்திருக்கணும். அதுவும் ஊர்லே ஜனங்க இருக்கும் போது வந்திருக்கணும், டேய், என்னே என்னன்னு நெனேச்சுக் கிட்டே தேவடியா மகனே?''

இவருடைய எதிர்பாராத வருகையினுல் மட்டும் அல்லாமல் இதைப் போன்ற சண்டைப் பேச்சைக் கேட்டு பகடை விளேயாட்டின் தளபதிகள் பேச்சற்று நின்றுவிட்டனர். சியாமண்ணுவும் கதிகலங்கினுர். கண்டி ஜோசியர் சியாமண்ணுவின் வீட்டுக்குள் 'விறு விறு' வென்று நுழைந்து, கதவுக்குப் பின்னுல் உரலுக்குப்

பக்கத்தில் வைத்திருந்த ஒரு உலக்கையை வலது கையில் எடுத்துக் கொண்டார். மச்சின் மேல் சாய்த்து வைத்திருந்த ஏணியை இடது கையில் பிடித்துக் கொண்டு வெளியே வந்தார். பிறகு ஏணியை கூரை மேல் சாய்த்து நிறுத்தி, ஏணியின் மேல் ஏறி உலக்கையால் ஓடுகளை சரமாரியாக உடைக்க ஆரம்பித்தார். ஐந்து, ஆறு அடிகள் விழுந்தவுடன் அவர்கள் விளையாடிக் கொண்டிருந்த திண்ணையின் மேல் பாகத்தில் இருந்த ஓடுகள் எல்லாம் பொடிப் பொடியாகி விழுந்தன.

திண்ணையின் மேல் பாகத்தில் இருந்த ஓட்டின் மேல் உலக்கை அடி விழுந்தவுடன் பகடை ஆடுபவர்கள் எழுந்து தெருவுக்கு வந்தனர். பீமனைப் போன்று ஓட்டின் மீது நின்று கொண்டிருந்த கண்டி ஜோசியர் அவர்களைப் பார்த்து உறுமினார். ''டேய் பேடிப் பயல்களா! அங்கேயே நில்லுங்க. உங்க பெண்டாட்டி தலையை மொட்டையடிச்சு, தாலியை அறுக்க றேன்'' இவ்வாறு சொல்லிக் கொண்டே, இரண்டு ஓடுகளை அவர்கள் மீது விட்டெறிந்தார். அது ஒருவனுடைய நெற்றி யிலும் மற்றவனுடைய மேற்கையிலும் பட்டு ரத்தம் கொட்டி யது. ஜனங்கள் திகில் அடைந்து ஓடி, ஒதுங்கினார்கள்.

தானே மேல் ஏறிச் சென்று ஜோசியருக்குப் பாடம் புகட்ட வேண்டுமென சியாமண்ணுவுக்குத் தோன்றியது. அவனும் கெட்டிக்காரன்தான். ஆனால் அப்படி மேல் ஏறிச் செல்வது அபாயம் என்று மனம் சொல்லவில்லை. அது வேறு உபாயத்தைச் சொல்லிற்று. சுமார் பத்தாயிரம் வில்லை ஓடுகளைச் செய்ய குயவன் எத்தனை மாதங்கள் பாடுபட்டிருப்பானோ! ஆனால் ஜோசியரின் உலக்கை இரண்டு கூரைகளையும் அரை மணி நேரத் திற்குள் அடித்து உடைத்தது. பிறகு மெதுவாகக் கீழே இறங்கி ஏணியையும், உலக்கையையும் அந்தந்த இடத்தில் வைத்துவிட்டு நிதானமாய், மிரண்டு போய் தெருவுக்கு வந்து எதிர்வீட்டுத் திண்ணையில் குழந்தைகளுடன் நின்று கொண்டிருந்த சியாமண்ணு வின் மனைவியைப் பார்த்துக் கூறினார். ''பாரம்மா, தூபினகெரெ தம்மையா ஜோசியரின் மகள் என்று உங்கிட்டே சொல்றேன். தம்மையா ஜோசியர்னா எனக்குக் குருவுக்கு சமானம். எல்லோரும் காலி செஞ்ச பின்னாடி ஊர்லே நான் ஒருத்தனே இருந்தேன்னு உன் புருஷன் நடு ராத்திரியில் ஆளனப்பி வீட்டு மேலே கல் எறிய வெச்சான். ஆனா என்னைப்பாரு! பகல் நேரத்திலே வந்து செஞ்சிருக்கேன், கண்டின்னு சொன்னா ஆம்பிளை, இனிமேலே என்ன செஞ்சாலும் சிகண்டி வேலை வேண்டாம். ஆம்பிளை மாதிரி செய்யச் சொல்லு. அந்தத்

தேவடியாப் பயல்கிட்டே நான் பேசமாட்டேன்.'' என்று சொல்லி நேரே தன் வீட்டுக்குச் சென்றார். சியாமண்ணாவின் மனைவி நிலைகுலைந்து நின்று கொண்டு இருந்தாள்.

நேரே வீட்டுக்குச் சென்ற ஜோசியர் சமையலறைக்குள் புகுந்தார். அப்போது அக்கம்மாப் பாட்டி உலையில் வைத்திருந்த சிவப்பு அரிசிச் சோறு கொதித்துக் கொண்டு இருந்தது. அடுத்த வீட்டில் இருந்து அவள் கொண்டு வந்து வைத்திருந்த குழம்பு ஈயம் பூசிய பாத்திரத்தில் இருந்தது. ஜோசியர் பின்புறம் சென்று கிணற்றிலிருந்து நீர் இறைத்து மேலே விட்டுக் கொண்டு ஸ்நானம் செய்தார். குளித்துக் கொண்டே தன் வெண்கலக் குரலில் சந்தியாவந்தன மந்திரங்களை உரக்கச் சொல்லிக் கொண்டு இருந்தார். பிறகு உடம்பைத் துடைத்தபின் வேட்டி உடுத்திக் கொண்டார். சுவாமி மாடத்துக்கு அருகில் இருந்த சந்தனக் கட்டையைத் தேய்த்து, சந்தனத்தை எடுத்து நெற்றியில் பூசிக் கொண்டு கையைக் கழுவி சாப்பிட அமர்ந்தார். ஒரு படி சாதம் சுடச்சுட தயாராக இருந்தது. வீட்டில் உள்ள கறவைப் பசுவின் நெய் பிள்ளைத்தாச்சிக்காக செலவழித்தது போக மீதி இருந்தது. முதலில் பாக்கு மட்டை நிரம்ப சாதம் போட்டுக் கொண்டு குழம்பு விட்டுப் பிசைந்து மூன்றே நிமிடங்களில் அதை முடித்தார். பிறகு ஊறுகாய், எண்ணெய் போட்டு மறுபடியும் சோற்றைப் பிசைந்து கொண்டே அக்கம்மாவிடம் கேட்டார். ''பசு கொடுக்கிற நெய் பிள்ளைத்தாச்சிக்குப் போறுமா? ''வேணுங்கற அளவு இருக்குது. இன்னும் ஒரு ஜாடி ரொம்ப வெச்சிருக்கேன்'' ''நல்லது.'' ''அவ குழந்தையை எடுத்துக்கிட்டு போகும் போது நாலு ஜாடி ரொம்பக் கொடுத்தனுப்பு. நல்லாச் சாப்பிடட்டும். சின்ன ஆமணக்குக் கொட்டை ஆட்டச் சொன்னியா? பெரிய கொட்டை ஆட்டச் சொன்னியா?'' ''பச்சைப் பிள்ளைத்தாச்சிக்கு யாரு சின்ன ஆமணக்கு எண்ணெ தேச்சு குளிப்பாட்டறாங்க? சளி பிடிக்கும்''

''சரி; நாமகரணம் செஞ்சீங்களா?''

''உம். சென்னிகராயன் வந்தான். பார்வதின்னு பேரு வெச்சிருக்கு.'' தயிர்ச் சாதம் சாப்பிட்டு முடித்து, பெரியதாய் ஏப்பமிட்டுக் கொண்டே அவர் பிள்ளைத்தாச்சி படுத்திருந்த அறைக்குள் வந்து கேட்டார்: ''நஞ்சா, எங்கே மகளைக் கொடு பார்க்கலாம்.''

குழந்தையை எடுத்து, மடியின் மீது படுக்க வைத்துக் கொண்டு அவர் அந்த அறையில் உட்கார்ந்தார். குழந்தை

சிவப்பாய், 'கொழு கொழு' வென்று சுறுசுறுப்பாய் இருந்தது. ''இவளும் உன்னைப் போலவே பார்த்தியா? எவ்வளவு பெரிசா இருக்கா? என்ன நட்சத்திரம்?''

''புட்டா பட்டர் என்னவோ சொன்னார், ஜாதகம் நீ வந்த பிறகே எழுதலாம். அவர் என்னைவிட நல்லா எழுதறார்ன்னு சொன்னார்.''

''சரி நாளைக்கு எனக்கு ஞாபகப் படுத்து. பிறந்த நேரத்தை சரியா குறிச்சு வைச்சிருக்கீங்க இல்லியா? எங்கே எனக்குக் கொஞ்சம் வெத்திலை கொடு. காலையிலேயிருந்து இன்னும் புகையிலை போட்டுக்கலை.'' — என்று சொல்லிக் குழந்தையை எடுத்துக் கொண்டே சமையலறைக்குச் சென்று சொன்னார்: ''அக்கம்மா, லேகியம், மருந்து இதுக்கெல்லாம் பணத்துக்கு என்ன செஞ்செ! எனக்கு வீட்டைப் பத்தி நெனப்பே இல்லை.'' பிறகு வெளியே வந்து தமது கோட்டுப் பையிலிருந்து முப்பது ரூபாய் எடுத்து வந்து கொடுத்து -- ''எங்கியாவது கடன், கிடன் வாங்கியிருந்தால் கொடுத்துடு. இனி நான் ஊர்லேயே இருக்கேன். இனி இருபது நாளுக்கப்புறம் ஹாசனுக்குப் போய் கல்லேசனைக் கூட்டிகிட்டு வரணும்.'' என்றார்.

மகள் மடித்துக் கொடுத்த வெற்றிலையைக் கடித்துக் குதப்பிக் கொண்டே குழந்தையை அவளுடைய மடியில் படுக்க வைத்து, தனது இடது உள்ளங்கையில் சிறிது புகையிலையை வைத்து, வலது கை விரலால் அதைத் தேய்த்து வாய்க்குள் போட்டுக் கொண்டு, ஐந்தாறு முறை வெளியே சென்று சாக்கடை அருகில் 'உச்' என்று துப்பிவிட்டு வந்தார். பிறகு ஒரு பாயை விரித்துத் தலைக்கு அடியில் ஒரு பலகையை வைத்துக்கொண்டு சற்று நேரம் கண்ணயர்ந்தார். மாலையில் வயல் பக்கம் சென்று வந்து இரவு சுடச்சுட சோறு, குழம்பு முதலியவைகளுடன் சாப்பிட்டு நிம்மதியாய்ப் படுத்தார்.

## 6

நள்ளிரவு நேரத்தில் யாரோ வீட்டுக் கதவைத் தட்டுவதைப் போல் தோன்றியது. ''யாருடா அது'' என்று கண் விழித்த ஜோசியர் கேட்டார். வந்த பதில் ஆத்திரமூட்டியது. ''உங்க மாமனார் வீட்டிலேருந்து. கதவைத் தொறங்க சும்மா''

''அது யாருடா, புத்தி இல்லாத பயல்'' என்று சொல்லிக் கொண்டே கதவுத் தாழ்ப்பாளைத் திறந்தார். நான்கு போலீஸ்

காரர்கள் உள்ளே நுழைந்து அவருடைய தோள்களை இறுகப் பற்றிக் கொண்டார்கள். உதறினாலும் விடவில்லை. டபேதார் சீழ்க்கை ஊதினார். பின்புறக் கதவுக்கு வெளியே நின்றிருந்த இரண்டு போலீஸ்காரர்கள் சுவரைச் சுற்றி வந்து இவரைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''என்னய்யா, எதுக்காக என்னைப் பிடிச்சுகிட்டு இருக்கீங்க? உங்களுக்கு என்ன அதாரிட்டி — இருக்குது?'' என்று இவர் கேட்டார். ''அது என்னவாயிருந்தாலும் ஸ்டேஷனில் வந்து கேட்டுக்கலாம். மொதல்ல கிளம்புங்க'' என்று கூறிப் புறப்பட்டார்கள். அதற்குள் விழிப்படைந்த நஞ்சம்மாவும், பாட்டியும் வந்து பார்த்து 'அய்யோ' என்று அழ ஆரம்பித்தார்கள். ஜோசியர் ''அக்கம்மா, அழாதே, இது அந்த சியாமண்ணாவின் அழும்பு வேலைன்னு தோணுது. நான் சென்னராயப்பட்டணம் வரை போயிட்டு வரேன். நீங்க கதவைச் சாத்திக்குங்க. நான் இல்லாத போது எந்த நாயாவது வீட்டுக்குப் பக்கத்திலே வந்தா செருப்பெடுத்து அடிச்சு விரட்டு'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார். ஊருக்கு வெளியே 'வான்' நின்றிருந்தது. அதற்குள் இவரை உட்கார வைத்து போலீஸ்காரர்கள் சென்னராயப் பட்டணத்துக்குச் சென்றார்கள். சியாமண்ணா ஊரிலேயே இருந்தான்.

தன் மகன் சியாமண்ணாவின் வீட்டுக்குச் சென்று ஓட்டை உடைத்த விவரம் அவன் மாலையில் வயல் பக்கம் சென்றிருந்த பொழுது அக்கம்மாவுக்குத் தெரிந்தது. அதன் காரணமும் தெரிய வந்தது. இப்பொழுது சியாமண்ணா போலீஸ்காரர்கள் மூலம் மகனைப் பிடித்துக் கொண்டு போனதால் அக்கம்மாவுக்குக் கடுங்கோபம் வந்தது. இரவு நேரத்தில் தான் மட்டும் ஒண்டியாக சியாமண்ணாவின் வீட்டுக்கு முன் சென்று தெருவில் இருந்த மண்ணைக் கையில் வாரித் தூற்றிக் கொண்டே வசை மாரி பொழிந்தாள். ''அய்யோ, உன்னைப் பெத்தவங்க வாயிலே என் பீயை வைக்க. பொம்பளைத் தேவடியாப் பயலே, ராத்திரி எங்க வீட்டு மேலே கல்வீச வெச்சியாடா, பேடி மொட்டச்சி மகனே? என் மகன் ஆம்பளை. பகல் நேரத்திலே வந்து ஓட்டை உடைச்சான். பயந்துகிட்டு போலீசிலே போய்ச் சொன்னியா? நீ சேலை கட்டிகிட்டிருக்கயாடா? உன் வமிசம் அழிஞ்சு போக! உங் குழந்தைங்க செத்துப் போக! உன் பொண்டாட்டி முண்டையாப் போக! என்னைப் போல் உன் பொண்டாட்டியும் தலையை மொட்டையடிச்சு செகப்பு சேலை கட்டிக்கட்டும். புருஷன் செத்த முண்டையோட சாபம் வீண் போகாது! என்னன்னு நெனைச்சுட்டேடா?''

அதற்குள் அக்கம்பக்கத்தவர்கள் பலர் வந்து கூடிஞர்கள். எல்லோருக்கும் நடந்த விஷயம் தெரிந்தது. யாரும் வாய்திறந்து பேசவில்லே. சியாமண்ணு வீட்டுக் கதவைத் திறக்கவே இல்லே. வீட்டில் நஞ்சம்மா மட்டும் குழந்தையுடன் இருப்பது நினைவுக்கு வந்தவுடன், பாட்டி மறுபடியும் பத்து வசவுகளேத் திட்டிவிட்டு வீட்டுக்கு வந்தாள்.

சென்னராயன் பட்டணம் போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தவுடன், ''ராத்திரி நீங்க இங்கேயே இருங்க. காலேயிலே சப்-இன்ஸ்பெக்டர் வந்து நீங்க சொல்றதைக் கேட்டுக்குவாரு.'' என்று டபேதார் சொன்னதை கண்டி ஜோசியர் ஒப்புக்கொள்ள வில்லே. ''அவரை இப்பவே கூப்பிடு. என்னன்னு கேக்கட்டும். ஸ்டேஷனில் சும்மா உக்காந்திட்டிருக்க நான் என்ன திருட்டுத் தனம் செஞ்சேன்?'' என்று உரக்க வாக்குவாதம் செய்தார்.

அடித்துப்போட்டுப் பேசாமலிருக்கச் செய்ய போலீஸ்காரர் களுக்குப் பயம். அவரைப் பற்றி அவர்கள் நிறையக் கேள்விப்பட்டிருக்கிறுர்கள். சப்-இன்ஸ்பெக்டர் அப்பொழுதே வந்துவிட்டார். சியாமண்ணு கணக்குப்பிள்ளே - அதாவது அரசாங்க அதிகாரி அவருடைய வீட்டு ஓடுகளே உடைத்தது மட்டுமல்லாமல், உள்ளே நுழைந்து கணக்குப் புத்தகங்களேத் தூக்கிக் கொண்டு போய்விட்டதாக அவன் புகார் கொடுத்திருந் தான். ஓடு உடைத்தது பற்றி போலீஸ்காரர்கள் உடனே நட வடிக்கை எடுக்காவிட்டாலும், அரசாங்கக் கணக்குப் புத்தகங் களேத் தூக்கிச் சென்றுவிட்ட புகாரைப்பற்றி நடவடிக்கை எடுத்தாக வேண்டும். இந்தப் புகாரின் நகல் ஒன்றை சியாமண்ணு தாசில்தாருக்கும் அனுப்பியிருந்தான். ''எனக்கு ஒண்ணும் தெரியாது. நான் அவன் வீட்டுக்குப் போகலே. இதெல்லாம் பொய்.'' என்று ஜோசியர் வாக்கு மூலம் கொடுத்தார். மறுநாள் உள்ளூர் நீதிபதியான தாசில்தாரிடமும் இதே வாக்குமூலத்தைக் கொடுத்தார். போலீஸ்காரர்கள் அவர்மீது வழக்கு ஒன்றைப் பதிவு செய்து கொண்டார்கள். உள்ளூர் நகரசபை உறுப்பினர் ஹனுமந்த செட்டியார் ஜாமீன் கொடுத்ததனுல் கண்டி ஜோசி யரை போலீஸ்காரர்கள் வெளியே விட்டனர். ஊருக்குத் திரும்பிய அவர் மீசையை முறுக்கிய வண்ணம் எல்லாத் தெருக் களேயும் ஒருமுறை சுற்றிவிட்டு வீட்டுக்கு வந்தார்.

சியாமண்ணுவைப் பிடித்து நசுக்கிவிட வேண்டுமென்று அவரது உள்ளத்தில் ஆசை எழுந்தது. ஆனுல் தன்மீது வழக்கு இருக்கும் பொழுது அவ்வாறு செய்யக்கூடாதென்று பேசாமல்

இருந்தார். சில நாட்களில் ஹொளேநரசீபுரத்திலிருந்து கோர்ட் சம்மன் வந்தது. புகழ்பெற்ற வக்கீல் வெங்கட்ராயரை அவர் ஏற்பாடு செய்தார். மூன்று மாத காலம் ஹொளேநரசீபுரத்துக்கும், ஹாசனுக்கும் அவர் குதிரையில் சுற்றினார்.

சாட்சியை விசாரணை செய்யும் நாளில் அவர் காலையிலேயே போய் வக்கீலைப் பார்க்க வேண்டியதாய் இருந்தது. இரவில் குதிரையில் ஏறி ஊரைவிட்டுப் புறப்பட்ட கண்டி ஜோசியர் சென்னராயப்பட்டணத்தைக் கடந்து எல்லைக்கு வந்தபோது ஆற்றில் நீர் நிரம்ப ஓடிக் கொண்டிருந்தது. இப்பொழுது ஆற்றில் தண்ணீர் வருவது அரிது. ஆனால் அவர் ஆற்றைத் தாண்டி காலையில் நரசீபுரத்துக்குப் போய்ச் சேர்ந்தே ஆகவேண்டும். அப்பொழுதே நள்ளிரவு நேரமாய்விட்டது. நிலா வெளிச்சத்தில் 'உர்' என்னும் ஒலியுடன் ஆறு இரு கரைகளையும் தழுவி ஓடிக் கொண்டிருந்தது. குதிரையின் மீதேறிக் கடப்பது நடவாத செயல். கரைக்கு அருகிலேயே இருந்த பிரயாணிகள் விடுதிக்குச் சென்று காவல்காரனிடம் விசாரித்தார். ''தெப்பம் விடலை பாருங்க, வெள்ளம் வந்திடுச்சு'' என்றான் அவன். ஆனால் அவர் பின் வாங்குவதாய் இல்லை. தனது குதிரையைக் கவனித்துக் கொள்ளும்படி அவனிடம் சொல்லி செலவுக்கென ஒரு ரூபாயும் கொடுத்தார். வெள்ளி ரூபாய் நாணயங்கள் இருந்த சுருக்குப் பையைத் தமது இடுப்புடன் சேர்த்து இறுகக் கட்டிக் கொண்டார். கோட்டு, சட்டை, காற்சட்டை இவைகளையெல்லாவற்றையும் களைந்து தமது தலையில் கட்டிக் கொண்டார். பிறகு ஒரு கோவணத்தைக் கட்டிக் கொண்டு, காவல்காரன் தடுத்த போதிலும், ஆற்றுக்குள் குதித்தார்.

சுமார் அரைமைல் இடப்பக்கமாகச் சென்று ஆற்றின் மறு கரையை எட்டினார். உடம்பும் கோவணமும் மட்டும் ஈரமாய் விட்டிருந்தன. தலையில் சுற்றிக் கட்டியிருந்த துணிகளில் சிறிது ஈரம் பட்டிருந்தது. அப்படியே அரைமைல் நடந்தபோது உடம்பின் மேல் இருந்த ஈரம் உலர்ந்துவிட்டது. காற்சட்டை, சட்டை, கோட்டு முதலியவற்றை அணிந்து வெற்றுக் காலுடன் 'விறுவிறு' வென்று நடந்தார். இன்னும் எட்டு மைல் தூரம்தான். நரசீபுரத்திற்கு கோழி கூவும் நேரத்திற்குப் போய்ச் சேர்ந்தார். ஆற்றங்கரைக்குச் சென்று காலைக்கடன்களை முடித்து, குளித்து சந்தியாவந்தனம் செய்துவிட்டு நன்கு விடியும் நேரத்தில் வக்கீல் வீட்டுக்குப் போனார். அன்று முக்கியமான இரண்டு சாட்சிகள் இருந்தனர். சியாமண்ணாவின் மனைவிதான் ஒரு சாட்சி. கோர்ட்டுக்கு எதிரில் இருந்த நந்தியைத் தொட்டு சத்தியம் செய்யுமாறு

வக்கீல் அவளிடம் கூறி, பொய் சாட்சி சொன்னால் கணவனும் குழந்தைகளும் இறந்து விடுவார்கள் என்று அவர் சொன்னபோது, பாட்டியின் சாபம் நினைவுக்கு வந்து அவளுக்குப் பாதி அழுகை வந்துவிட்டது. உண்மையைச் சொல்ல வேண்டுமென்று வக்கீல் கூறிய போது அவள் மிரண்டு சொல்லிவிட்டாள்; கண்டி ஜோசியர் எங்க வீட்டுக்குள்ளே நுழைஞ்சி உலக்கை எடுத்து ஓடுகளை உடைச்சது உண்மை. எல்லோரும் ஊரைக் காலி செஞ்சிட்டுப் போன பிறகு, குள்ளிகன், ஜுட்டகன் இவங்களை யெல்லாம் எங்க வீட்டுக்காரர் அனுப்பி ஜோசியர் வீட்டுமேலே கல் எறியச் சொன்னார். அதனால்தான் ஜோசியர் இப்படிச் செஞ்சார்.''

அங்கேயே இருந்த சியாமண்ணா மனைவியை விழுங்கி விடுவது போல் முறைத்துப் பார்த்துக் கொண்டு இருந்தான். ஜோசியருடைய வக்கீல் அவளைக் கேட்டார்: ''அம்மா, உண்மையைச் சொல்லுங்க. ஆண்டவன் மேலே சத்தியம் செஞ்சிருக்கீங்க. ஜோசியர் உங்க வீட்டுக்குள்ளே புகுந்து கணக்குப் புத்தகமெல்லாம் எடுத்துப் போனதாக சொல்லறது பொய்தானே.''

''கணக்கு புத்தகத்தை எடுத்துப் போகவில்லை. நான் அங்கேயே இருந்தேன்.''

ஊருக்குத் திரும்பிய பிறகு சியாமண்ணா மனைவியை அடித்து நொறுக்கினான்.

சிரவணபௌகொளா போலீஸ்காரர் அவரது சார்பில் சாட்சியம் சொன்னார். அன்று மதியம் மூன்று மணிக்கு தான் ஹாசனுக்குப் போயிருந்ததாகவும் அப்பொழுது அங்கே கண்டி ஜோசியரைப் பார்த்ததாகவும் கூறினார். அவர் மதியம் மூன்று மணிக்கு வீட்டுக்குள் நுழைந்து ஓடுகளை உடைத்துப் போட்டதாக வும், கணக்குப் புத்தகங்களைத் தூக்கிச் சென்றதாகவும் சியாமண்ணா புகார் கொடுத்திருந்தான்.

தீர்ப்பு வழங்கும் நாளன்று சியாமண்ணாவும் வந்திருந்தான். கண்டி ஜோசியரும், வந்திருந்தார். சரியாக ஒரு மணிக்கு நீதிபதி தீர்ப்பைப் படித்தார்: ''கணக்குப் புத்தகங்களைக் கையால் கூடத் தொடவில்லை என்று புகார் கொடுத்தவரின் மனைவியே கூறுகிறாள். மேலும் குற்றம் சாட்டப்பட்டவரின் வீட்டின்மேல் புகார்தாரர் இரவு நேரத்தில் கல் வீசச் செய்தாராம். அதற்கு எதிர் நடவடிக்கையாக குற்றம் சாட்டப்பட்டவர் ஓடுகளை உடைத்திருக்கலாம். ஆனால் முக்கியமான குற்றச்சாட்டு என்னவெனில்,

அரசாங்கக் கணக்குப் புத்தகங்களைத் தூக்கிச் சென்றார் என்பது. சம்பவ நேரத்தில் குற்றம் சாட்டப்பட்டவரை ஹாசனில் பார்த்ததாக சிரவணபௌளகொளா டபேதார் சாட்சியம் கூறி இருக்கிறார். இந்த எல்லா விஷயங்களையும் கருத்தில் கொண்டு ஆராயும் போது குற்றச்சாட்டில் உண்மை இல்லை என்பது தெளிவாகிறது. எனவே இந்த வழக்கைத் தள்ளுபடி செய்கிறேன்.''

## 7

தனது வக்கீலுக்குக் கொடுப்பதற்காக ஜோசியர் ஐம்பது ரூபாய் கொண்டு வந்திருந்தார். அதை வீட்டில் கொடுக்க வேண்டும். வக்கீலுக்கு கோர்ட் அலுவலகத்தில் சிறிது வேலை இருந்தது. அதற்குள் ஓட்டலுக்குச் சென்று சாப்பிட்டு வருவதாகச் சொல்லி, நீதிமன்றக் கட்டிடத்தை விட்டு வெளியே வந்து மரத்தின் கீழ் கட்டியிருந்த தமது குதிரையை அவிழ்த்து, அதன் மேல் ஏறி, ஒரு பர்லாங்கு தூரம் சென்றார். அப்பொழுது சியாமண்ணா மட்டும் தனியே போய்க் கொண்டிருப்பது தென்பட்டது. அவனைக் கண்டதும் அவருக்குத் திடீரென்று கோபம் பொங்கி எழுந்தது.

''டேய், உன்னெப் பெத்தவளை......என்னடா புடுங்கினே கோர்ட்டுக்குப் போய்...?'' என்று சொல்லிக் கொண்டே குதிரையிலிருந்து கீழிறங்கி அவன் எதிரே நின்றார். சியாமண்ணா பதற்றமடைந்து பேசாமல் நின்றான். ஜோசியர் தமது வலது கால் பூட்சைக் கையில் எடுத்துக் கொண்டு அவனுடைய தலை மீது அடித்தார். சியாமண்ணாவும் கை கலந்தான். அவர் தனது வலிமை எல்லாவற்றையும் திரட்டி, அவனுடைய கழுத்தை வளைத்து, முதுகின் மேல் ஓங்கி உதைத்தார். அவன் தரையின் மீது உருண்டு விழுந்து, வாயிலிருந்து ரத்தம் ஒழுகி, நினைவு தவறி விட்டான். அது வரை ஜோசியருக்கு நிதான புத்தி இருக்கவில்லை. இப்பொழுது பதறிப் போனார். அப்பொழுது யாரோ பின்புறமிருந்து, ''கொலைக் கேசாக இருக்கும். உடனே பிடி'' என்று சொல்வது காதில் பட்டது. பின்னால் திரும்பிப் பார்த்தார். அப்படிச் சொன்னது, அவருடைய வழக்கை விசாரித்த நீதிபதிதான். அவருடன் காவலாக வந்து கொண்டிருந்த போலீஸ் சேவகனிடம் அவர் அப்படிக் கூறினார். ஜோசியரின் உடம்பு வியர்த்து விட்டது. போலீஸ்காரன் வேகமாக வந்தான். அவர் மின்னலைப் போல் பாய்ந்து குதிரையின் மேலேறி அதன் முதுகை சொடுக்கினார். இன்னும் ஒரு மார்

தூரம் அருகே இருந்திருந்தால் போலீஸ்காரன் பிடித்திருப்பான். அதற்குள் குதிரை அம்பைப் போல் பாய்ந்து சென்றது. ஜோசியர் திரும்பிப் பார்க்கவில்லை.

மோட்டார் பாலத்தின் வழியாக வேகமாய் குதிரையை ஓட்டி, அங்கிருந்து வலப் பக்க பள்ளங்களை நோக்கித் திரும்பினர். ஏதேதோ வழியாகச் சென்று மாலை நேரத்தில் பரகூருக்கு அருகில் வந்தார். போலீஸ்காரர்கள் கண்டிப்பாய்த் தன் பின்னல் துரத்தி வருகிறார்கள். கொலைகாரன் எங்கிருந்தாலும் அவனைப் பிடிக்க வேண்டும் என்பது சமஸ்தானத்து உத்தரவு. மரண தண்டனை கிடைக்கும். நீதிபதியே நேரில் பார்த்து விட்டபடியால் எந்த வக்கீலும் எதுவும் செய்ய முடியாது. 'இந்த சமஸ்தானத்தை விட்டுச் சென்று விட வேண்டும்'. என்னும் முடிவு மனதில் தோன்றியது. அந்தக் குதிரையின் மேல் செல்வது அபாயம் என்பது தெரிந்திருந்தாலும், குதிரையை எங்கே விட்டுச் செல்வது என்னும் யோசனையும் தோன்றியது. வலப் பக்கமாய் நான்கு மைல் தூரம் சென்று, களைப் படைந்து போயிருந்த குதிரையை நிறுத்தி, ஊர்ப்பக்கமாய் விரட்டி விட்டார். அங்கிருந்து நாகலாபுரம் ஐந்து மைல் தொலைவில் இருந்தது. குதிரைக்குப் பழக்கமான வழி. எப்படிப் போனாலும் வீட்டுக்குப் போய் விடும் அல்லது வேறு யாரிடமாவது பிடிபட்டால் அவர்கள் அதைக் கட்டி வளர்த்து சவாரி செய்யட்டும் என்று நினைத்தார். அங்கிருந்து இடப் பக்கமாய் வந்து ஒரு கிராமத்துக்கு போனார். அது பேவின ஹள்ளி என்பது அவருக்குத் தெரியும். அங்கு ஒரு துணிக் கடையும் இருந்தது. கடைக்குச் சென்று ஒரு முரட்டு வேட்டி வாங்கினர். அந்தக் கடைக்கு அருகில் இருந்த பெட்டிக் கடையில் ஒரு அணுவுக்கு மஞ்சள் பொடியும், ஒரு தீப்பெட்டியும் வாங்கிக் கொண்டார். பிறகு கிராமத்தை விட்டு வெளியே நடந்தார். ஒரு தோட்டக் கிணற்றில் புது வேட்டியை நனைத்து, கஞ்சி போகுமாறு நன்கு கசக்கி, அதற்டு மஞ்சள் பொடி போட்டு, தம்மிடமிருந்த வெற்றிலைப் பையிலிருந்து சுண்ணாம்பு டப்பியை எடுத்து, சுண்ணாம்பை மஞ்சள் வேட்டியின் மேல் தேய்த்து கசக்கி, அதை காவி வேட்டியாக மாற்றினர். அதை தலையின் மேல் உயர்த்திப் பிடித்துக் கொண்டே வடக்கு நோக்கி நடக்கும் போது நள்ளிரவு நேரத்தில் வேட்டி உலர்ந்தது.

அங்கே இருந்த ஒரு மணல் பள்ளத்தில் சிறிது மணலைத் தோண்டினர். காவி வேட்டியை உடுத்தி, தான் அணிந்திருந்த கோட்டு, சட்டை, காற்சட்டைகளை அவிழ்த்து சில சுள்ளிகளுடன்

சேர்த்து அதற்கு நெருப்பிட்டார். அது நன்கு எரிந்து சாம்பலான பிறகு, அதன் மேல் மணலைப் போட்டு மறைத்தார். தம்மிடம் இருந்த பணத்தை சிறு முடிச்சாகக் கட்டி வேட்டிக்குள் வைத்துக் கொண்டார். இன்னும் எட்டு மைல் தூரம் நடந்தால் அரிசி கெரெ என்னும் ஊர் வந்து விடும். தாமதித்தால் ஆபத்து, வேகமாய் நடை போட்டு அரிசிகெரேயை அடைந்து ரயில்வே ஸ்டேஷனில் விசாரித்தார். ஹூப்ளியை நோக்கிச் செல்லும் ஒரு ரயில் விடிந்த பிறகு புறப்படுகிறதென்று தெரிந்தது. தைரியமாக ஸ்டேஷனில் காத்திருந்து காலையில் அந்த ரயிலில் புறப்பட்டுப் போனார். சமஸ்தானத்தின் கடைசி எல்லையான ஹரிஹர் ஸ்டேஷனைத் தாண்டி விட்டால் இங்கிலீஷ்காரனின் அரசாங்கம் வந்து விடுகிறது. பிறகு இந்தப் பயல்கள் நம்மை எதுவும் செய்ய முடியாது என்ற தைரியம் அவருக்கு இருந்தது.

## 8

எட்டு மாதங்கள் ஒரே சீராக மருந்து கொடுத்துக் கவனித்துக் கொண்டாலும் கல்லேசனுடைய இடதுகை சுவாதீனம் பெற வில்லை. கை நடுக்கம் தெளிவாகத் தெரியா விட்டாலும், இடது கையால் எதையும் இறுகப் பற்றி வேலை செய்ய முடியாது. வலதுகையை மட்டும் பயன்படுத்தி சைக்கிளைப் பிடித்துக் கொள்ள முடியவில்லை. மறுபடியும் போலீஸ்காரனாக வேலை செய்ய முடியாமலிருந்தது. நல்ல உடல் நிலை அவனுக்கில்லை என்று கூறி அவனை வேலையிலிருந்து நீக்கி விட்டனர். போலீஸ் இலாக்காவின் அடிமட்ட வேலையான கான்ஸ்டபிள் வேலையை அவன் அதுவரை செய்து வந்த போதிலும் அரசாங்க ஊழியர் களுடைய அதிகாரம், பெருமை ஆகியவற்றை அவன் நன்கு அனுபவித்து வந்தான். இப்பொழுது அது போய் விட்டது. நன்கு கவனித்துக் கொண்டால் வாழ்க்கைக்குத் திண்டாட்டம் ஏற்படாத அளவு கிராமத்தில் வயல், தோட்டம், கழனி, வீடு முதலியவை இருந்தன. அவன் அதைப் பற்றிச் சிந்திக்கவில்லை.

இதற்கிடையில் நரசீபுரம் வழக்கு தனது தந்தைக்கு ஆதர வாக முடிந்து, அவர் சியாமண்ணவைப் பிடித்து வாயில் இரத்தம் வந்து நினைவு தவறும் வரை அவனை அடித்துப் போட்டு விட்டுத் தலைமறைவாகி விட்டது, அவனுக்குத் தெரிய வந்தது. உண்மையில் சியாமண்ண இறந்து விடவில்லை. பூட்சு அடி வாயின் மேல் விழுந்த வேகத்தில் இரண்டு முன் பற்கள் உடைந்துபோய் ரத்தம் கொட்டியது. அப்படியே நினைவு தவறிப் போய் விட்டது. நீதிபதி அங்கேயே நின்று டாக்டரை வர

வழைத்தார். டாக்டர் வருவதற்கு முன்னரே அவனுக்கு நினைவு திரும்பிவிட்டது. இரண்டாம் முறை கண்டி ஜோசியரின் மீது கேஸ் போட்டு அவருக்கு அபராதம் விதிக்கலாம். அல்லது சிறைக்கு அனுப்பலாம். ஆனால் அவர் சிறையிலிருந்து வெளி வந்த பிறகு இரவு வேளையில் சியாமண்ணாவுடைய வீட்டுக் கதவை வெளியே பூட்டி விட்டு, மேலிருந்து மண்ணெண்ணெய் ஊற்றி நெருப்பு வைத்து விட்டால் என்ன செய்வது?— என்னும் யோசனை வந்தபடியால் பேசாமல் இருந்து விட்டான்.

கண்டி ஜோசியரின் குதிரை வீட்டுக்கு வந்து சேர்ந்தது. அக்கம்மாப் பாட்டி ஹொன்னனைக் கூப்பிட்டு அதைக் கட்டிப் போடச் சொன்னாள். மகன் எங்கே போனான், ஏன் போனான் என்பது அவளுக்கோ, கல்லேசனுக்கோ தெரியவில்லை. கல்லேசன் ஊருக்கு வந்து தனது இடது தோளுக்கு உடும்பு நெய் மருந்து தேய்க்க ஆரம்பித்தான். கண்டி ஜோசியரைப் பற்றிச் சொல்ல அவனுக்கும் எதுவும் பிடிபடவில்லை.

அந்தச் சமயத்தில் கல்லேசனுடைய மனைவி கமலு பெரியவள் ஆனாள். இவர்கள் ஆறு மாதங்கள் காத்திருந்தும் கண்டி ஜோசியரைப் பற்றித் தகவல் எதுவும் தெரியவில்லை. ''அவனுக் காகக் காத்திருக்க வேண்டாம். சீர் செஞ்சு முடிச்சு பொண்ணை அழைச்சுட்டு வரணும். இன்னும் பேசாம இருக்கறது சரியல்ல'' என்று அக்கம்மா கூறினாள். நல்ல நாள் பார்த்தார்கள். பிறகு கல்லேசன் ராமஸந்திர கிராமத்துக்குச் சென்று தங்கை, தங்கையின் குழந்தை, மைத்துனர் முதலியவர்களை அழைத்துக் கொண்டு வந்தான். வண்டி பூட்டி அக்கம்மாவையும் உடன் அழைத்துக் கொண்டு அனைவரும் ஹாசனுக்குப் புறப்பட்டார்கள்.

தனி அறைக்குள் விடப்பட்ட போது கமலா, கணவனுக்கு வாய்ப்பே அளிக்கவில்லை. முரண்டு பிடித்து, உடலைச் சுருட்டிக் கொண்டு இரவைக் கழித்தாள். கல்லேசன் பெண்ணையே கண் டிராத ஆண்பிள்ளை அல்ல. வேறு நடவடிக்கைகளும் இல்லா தவன் அல்ல. ஏழு மாதங்கள் அவர்களுடைய வீட்டிலேயே இருந்ததால் பரிச்சயமும் இருந்தது. ஆனால் இப்பொழுது அன் பாகப் பேசி அரவணைத்துக் கொள்ள முயன்றும் அவள் இணங்க வில்லை. பேசவும் இல்லை. அடுத்த நாள் மறு சீருக்காகத் தனி அறையில் இருந்த பொழுது அவள் வாயைத் திறந்து பேசினாள். ''அந்தப் பாழாப் போன கிராமத்திலே இருக்க என்னாலெ முடியாது.''

அவளுடைய உட்கருத்து கல்லேசனுக்கு உடனே புரிந்தது. ஆனால் அவன் எதையும் செய்யக்கூடிய நிலைமையில் இல்லே. பிறகு மெதுவாகச் சொன்னான். ''கிராமமானு என்ன? ரெண்டு பசு கறக்குது. இந்த ஊரைப் போல பால் நெய்க்கு பஞ்சமில்லே. அரிசி, பயிறு, தினை எல்லாமே ரொம்ப விளையுது. கிராமத்திலே எல்லாமே கெடைக்குது.''

''என்னாலெ கிராமத்திலே இருக்க முடியாது.''

''நான் அரசாங்க வேலையிலே இருந்தேனில்லியா? அதிர்ஷ்டம் இப்பிடியாப் போச்சு. என்ன செய்ய முடியும்? ஊர்லே வீடு, வயல் இருக்குதில்லியா? சுகமா இருக்கலாம்.''

''வேற அரசாங்க வேலே ஏதாவது தேடிக்குங்க.'' சுவற்றின் பக்கம் திரும்பி அவள் ''பட்'' என்று சொன்னாள்.

''பார்க்கலாம். மெடிகலி அன்ஃபிட்டுன்னு ஒரு இலாகா சொன்னப்புறம் இன்னொரு இலாகாவிலே சேத்துக்கு வாங்களா?''

''எனக்கு அதெல்லாம் தெரியாது'' — என்று சொன்னாளே யொழிய அவனுக்கு வாய்ப்பு அளிக்கவில்லே. கன்னம் வீங்கும் வரை அறைந்துவிட வேண்டும் என்று அவனுடைய வலது கை துடித்தது. ஆனால் வெளியே மாமனார் வீட்டு உறவினர்கள், நண்பர்கள் எல்லோரும் இருக்கிறார்கள். தன் பாட்டி, தங்கை, மைத்துனர், ஆகியவரும் இருக்கின்றார்கள். இந்த நேரத்தில் அமளி செய்வது சரியல்லவென்று அவன் பேசாமல் இருந்தான்.

உள்ளத்தில் வேறு ஒரு காரணமும் உறுத்திக்கொண்டு இருந்தது. தான் உடல் நலமில்லாமல் படுத்திருந்தபோது இத்தனை நாட்கள் அவர்கள் வீட்டில் படுக்க வைத்து உதவி செய்திருக்கிறார்கள். அதிலும் குறிப்பாக மாமனார் தனது மருமகனுக்காக அவனது இடது கை சுவாதீனம் அடைவதற்காக மிகவும் முயற்சி செய்திருக்கிறார். அவருடைய மனத்தைப் புண்படச் செய்வது அவனுக்கு மிகவும் கஷ்டமாய் இருந்தது. எனவே, ஒன்றும் செய்யவில்லே.

மறுநாள் அனைவரும் பயணத்துக்காக ஏற்பாடுகளேச் செய்து கொண்டிருந்த பொழுது கமலா தனது தாயிடம், ''நான் அங்கே போகமாட்டேன்'' என்றாள். ''யாராவது கேட்டா சிரிப்பாங்க. பேசாமலிரு. அப்பிடியெல்லாம் சொல்லாதே.''

அதைத் தவிர அவர்கள் வேறு எதுவும் சொல்லவில்லை. தாயை விட்டுச் செல்லும் பொழுது பெண் குழந்தைகள் அப்படிச் சொல்வது புதியதல்ல என்று நினைத்துப் பேசாமலிருந் தார்கள். அவளுடைய தகப்பனார், தாயார், தம்பிகள் ஆகிய அனைவரும் வண்டியில் நாகலாபுரத்திற்கு வந்தார்கள். நான்கு நாட்களுக்குப் பிறகு விருந்து, சீர் எல்லாம் முடிந்து திரும்பினார் கள். அன்றே நஞ்சம்மாவும் தன் கணவன், குழந்தையுடன் ஊருக்குப் புறப்பட்டுச் சென்றாள்.

அன்று இரவு கமலா மறுபடியும் அதே வார்த்தைகளைச் சொன்னாள். ''நீயே பாத்தியா? இந்த வீட்டிலே எதுக்குக் கொறச்சல்? இவ்வளவு பால், நெய், தயிர், காய்கறி ஹாசனில் கெடைக்குதா?'' என்று கல்லேசன் அவளிடம் கேட்டான்.

''அதெல்லாம் எனக்குத் தெரியாது'' — என்று சொல்லி அவள் சுவற்றின் பக்கமாய் உடம்பைத் திருப்பிக் கொண்டாள். மாமனாரும், மாமியாரும் இருக்கும் வரை கல்லேசன் பொறுமையை இழக்காமல் இருந்தான். இப்பொழுது பொறுக்க வில்லை. தலையின் மேல் ஓங்கி அடித்தான். அவள் தேம்பித் தேம்பி அழுதாள். போலீஸ் இலாக்காவில் இருந்த அவன் அவளுடைய முதுகில் விளாசினான். வெளியே படுத்திருந்த அக்கம்மா, ''என்னடா இது?'' என்று கேட்டாள்.

''திமிர் பிடிச்ச முண்டை, வாய்க்கு வந்தபடி பேசறா'' என்று சொல்லிக் கொண்டே கல்லேசன் தனது படுக்கையை அறைக்கு வெளியே போட்டுப் படுத்தான். அக்கம்மாவிடம் விஷயத்தைச் சொன்னவுடன் அவளும் அறைக்கு உள்ளே போய் ஆறுதல் சொல்ல ஆரம்பித்தாள். ''அதென்ன அப்படிச் சொல்லுறே? இங்கே உனக்கு என்ன கொறச்சல்? சாப்பிடக் கொறச்சலா? உடுக்கக் கொறச்சலா? அப்பிடியெல்லாம் பேசக் கூடாது, நான் உனக்கு எந்தக் கஷ்டமும் தரமாட்டேன். நிம்மதியாய் இரு.''

''எனக்கு இந்தப் பாழாப்போன கிராமம் வேண்டாம்'' அவள் விக்கி அழுது கொண்டே சொன்னாள்.

அதற்கு சமாதானம் சொல்ல அக்கம்மாவுக்குத் தெரிய வில்லை. இந்தப் பட்டணத்துப் பெண்ணை முடிவு செய்த போதே அவளுக்கு இந்த சந்தேகம் இருந்தது. ஆனால் யாரையும் கேட்காமல், கொள்ளாமல் கண்டி முடிவு செய்து விட்டான்.

இப்பொழுது எப்படியோ முடிந்துவிட்டது. இனி எப்படியாவது ஒத்துப்போகச் செய்ய வேண்டும் என்று கிழவி நினைத்தாள்.

''அவள் மாய்மாலம் செய்யறு. நீ ஒண்ணும் கொஞ்ச வேணும். பேசாம இங்கே வா'' என்று வெளியே இருந்தபடியே கல்லேசன் சொன்னன்.

அக்கம்மா தனக்குத் தெரிந்த ஆறுதல் வார்த்தைகளை யெல்லாம் சொல்லிவிட்டு வந்து படுத்தாள். கல்லேசன் சிறிது நேரம் கழித்து உறங்கிவிட்டான். காலையில் எழுந்து குளித்து, பலகாரம் சாப்பிட்டு, வெள்ளைக் குதிரையில் ஏறிக்கொண்டு சிரவணபௌகொளாவுக்குச் சென்றான். அவனுடைய பழைய நண்பர்கள் அங்கேயே அருகிலிருந்த கிராமத்தில் இருந்தார்கள்.

# ஐந்து

## 1

சாதம்மா கர்ப்பம் தரித்த ஐந்தாவது மாதம் அவளுடைய தகப்பனர் வந்து பிள்ளைப் பேற்றுக்காக அவளை அழைத்துக் கொண்டு போனர். பிறகு நஞ்சம்மா மீண்டும் கர்ப்பமுற்றாள்.

கணக்குப் பிள்ளைத் தொழிலில் கணக்குகளை எல்லாம் எழுதி வந்த திம்மலாபுரத்து தியாவரசய்யாவுக்கு அறுபது வயதுக்கு மேல் ஆகிவிட்டது. பிர்க்கா கணக்கு வழக்குகளை எழுத வேண்டி இருந்த அவருக்கு சென்னிகராயருடைய கணக்குகளை எழுதுவது சிரமமாய் விட்டது. சென்னிகராயர் கொடுத்துக் கொண்டிருந்த ஐம்பது ரூபாய்க்காக மட்டுமின்றி அவருக்கு அந்த வீட்டின் மேல் ஒரு வகையான விசுவாசம் உண்டு. ஒவ்வொருவரும் முரண்டு செய்து கொண்டிருந்த அந்தக் குடும்பத்தில் மருமகள் நஞ்சம்மா வின் குணத்தைப் பார்த்தால் அவருக்கு எப்பொழுதும் சந்தோஷம்.

ஒருநாள் வீட்டில் நஞ்சம்மாவைத் தவிர யாரும் இருக்க வில்லை. சென்னிகராயர் எதிரிலிருந்த கோவிலுக்குச் சென்று புகையிலையைக் குதப்பிக் கொண்டு மாதேவய்யாவின் பஜனை யைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

அப்பண்ணய்யா மீனவர் குப்பத்தில் உள்ள மாடன் வீட்டில் உட்கார்ந்து பீடி புகைத்துக் கொண்டிருந்தான். கங்கம்மா

வாணியத் தெருவில் ஈரக்கா வீட்டின் முன்னே செக்கில் எண்ணெய் ஆட்டுவித்துக் கொண்டு இருந்தாள்.

தியாவரசய்யா, நஞ்சம்மாவிடம் ''பாரம்மா, எனக்கும் வயசாயிடுச்சு. இனிமே நான் ஒண்ணு, ரெண்டு வருஷம் கணக்கு எழுதிக் கொடுக்கறேன். சென்னிகராயர் சுயமாகக் கணக்கு எழுதப் பழகட்டும். வேறென்ன செய்யறது?'' என்று கூறினர்.

''நீங்களே அவருக்கு நல்லா விளக்கிச் சொல்லிக் கொடுங்க.''

''இந்தக் கணக்கிலே என்ன இருக்குது? ஹொன்னவள்ளி சீதாராமய்யாவிடம் மூணு வருஷம் இருந்தாலும் இவர் கணக்கு கத்துக்கலேன்னு சொன்னு கணக்கு வராதுன்னு அர்த்தம். இத்தனை நாளா இங்கே நான் எழுதிக்கிட்டிருக்கேன். அவர் எல்லாத்தையும் என்கிட்டே கொடுத்துட்டுத் தூங்கறுரு. ஆனு எங்கூட உக்காந்து எழுதுறுரா? பழகப் பழகத் தெரியாதா? நடுவிலே என்னைக் கேட்டா சொல்லித்தர்றேன். தன் வேலையைத் தானே செய்ய முடியாதா? எத்தனை நாள் பணம் கொடுத்து எழுதறது?''

நஞ்சம்மாவுக்கு அந்தக் கவலை இரண்டு ஆண்டுகளாகவே உண்டு. ஆனுல் அவள் என்ன செய்ய முடியும்? ''மாமா, என் அதிர்ஷ்டம் உங்களுக்குத் தெரியும். என்ன செய்யறதுன்னு நீங்களே சொல்லுங்க.''

''அம்மா, உனக்கு எவ்வளவு நல்லா எழுதப் படிக்கத் தெரியுது? பாட்டுப் புத்தகத்தை நான் பார்த்திருக்கிறேன். ரொம்ப அழகா குண்டு, குண்டா எழுதறே. நான் சொல்லித் தர்றேன். நீயே எல்லாத்தையும் தெரிஞ்சுக்கோ, வீட்டிலே உக்காந்து எல்லாத்தையும் எழுதிக் கொடு. சென்னிகராயர் கோட்டு சட்டை போட்டுகிட்டு ஜமாபந்தி முடிச்சுகிட்டு வரட்டும். இல்லாட்டா வேலை நெலைக்காது.''

''பொம்பளைங்க அரசாங்கக் கணக்கு எழுதலாமா?''

இந்த சந்தேகத்துக்கான விடை தியாவரசய்யாவுக்கு உடனே தெரியவில்லை. இந்த விஷயத்தில் அரசாங்கச் சட்டம் எப்படி உள்ளது என்று அவருக்கும் தெரியவில்லை; எனினும் ''பாரு நீ கணக்குப்பிள்ளை வேலைப் பொறுப்பு ஏத்துகிட்டு வேலை பாக்கலை. வீட்டுக்குள்ளே உக்காந்து கணக்கு எழுதறே,

ஆம்பிளேங்க எழுதினுங்களா, பொம்பிளேங்க எழுதினுங்களான்னு மேலதிகாரிக்கு எப்பிடித் தெரியும்? நீ பேசாம படிச்சுத் தெரிஞ்சுக்கோ'' என்ருர்.

தான் கோடு போட்டுக் கொண்டிருந்த புத்தகத்தை முன்னே தள்ளிஞர், தியாவரசய்யா. பிறகு ''எங்கே இதுலே மொதல்லே கோடு போடு பாக்கலாம். இங்கே பாரு. தலைப்பு எழுதின செகப்பு மைக்கு நேரா ரூல்தடி வரணும். இடது கை விரல்லே ரூல் தடியை லேசா நகத்தணும். பேணுவிலேருந்து மை கொட்டாதபடி போடு, பாக்கலாம்.''

நஞ்சம்மா அவர் சொன்னபடியே போட்டாள். அவரைப் போல் சீக்கிரமாய் கோடுகள் போட முடியாவிட்டாலும் கோடுகள் சரியான இடத்தில் அமைந்து இருந்தன. ''நல்லா இருக்குது. பழக்கம் ஆகட்டும். புத்தகங்களுக்கு எல்லாம் நீயே போடு'' என்று சொல்லி அவர் ஏரியை நோக்கிச் சென்ருர். நஞ்சம்மாவுக்கு இது புதிய அனுபவம். அவள் சிறிய பெண்ணுய் இருந்த போது பாட்டுப் புத்தகத்தில் கோடு போட்டதுண்டு. ஆனல் ரூல் தடியை வைத்து அரசாங்கப் புத்தகத்தில் கோடு போடுவது மிகவும் பெருமையாய் இருந்தது. அதுவும் முதன் முறையே தவறு இல்லாமல் வந்து விட்டது. ''கணக்குப்பிள்ளைத் தொழில்ஞ என்ன? சரியா கோடு போடறதுக்கே கை முட்டி வீங்கும் வரை ஆறு வருஷமாவது ரூல் தடியாலே அடி வாங்க வேணும். கணக்கு சும்மா வராது.'' என்று கணக்குப்பிள்ளைகள் சொல்வதைக் கேட்டு இருக்கிருள்.

அவள் ரூல் போடும் போது அப்பண்ணய்யா உள்ளே வந்தான். அண்ணி செய்து கொண்டிருந்த வேலையைப் பார்த்து வியப்பு உண்டாயிற்று, கோபமும் வந்துவிட்டது. நேரே வாணியத் தெருவுக்குச் சென்று தாயிடம் சொன்ஞன்.

''பாரம்மா, அந்த அவ கணக்குப் புத்தகத்தைக் கெடுத்துக்கிட்டு இருக்கா.''

''எவ?''

''உன் பெரிய மருமக புத்தகத்துக்கு கோடு போடரு''

''இது என்னடா? அவ வீடு பாழாய்ப் போகட்டும், களுதெ முண்டை'' — என்று சொல்லிக் கொண்டே கங்கம்மா ஒரே மூச்சில் வீட்டுக்கு வந்தாள். அவள் வரும் வேளையில் தியாவரசய்யா ஏரியிலிருந்து திரும்பி வந்து திண்ணையில் உட்கார்ந்து

மூக்குப் பொடியை உறிஞ்சிக் கொண்டு இருந்தார். மருமகள் உள்ளே கோடு போட்டுக் கொண்டு இருந்தாள். ''உனக்கு என்ன அறிவு இல்லியா? என்ன செய்யறே கழுதெ?'' என்ற அவளுடைய சொற்களைக் கேட்ட தியாவரசய்யா உள்ளே வந்து ''ஏன்? என்ன ஆச்சு?'' என்று கேட்டார்.

''இவ கணக்குப் புத்தகத்தைத் தொட்டு இப்பிடிச் செய்யலாமா?''

''இல்லியம்மா, நான் தான் கோடு போடச் சொன்னேன், எனக்கு உடம்பு சரியில்லே. கணக்கை குறிச்ச காலத்திலே முடிக்கணும். சென்னிகராயர் எதையும் செய்யறது கெடை யாது.''

''பொம்பிளைங்க கையாலே கணக்கைத் தொட விடுறீங்களா?''

''ஏன் அப்படிப் பேசறீங்க? தொட்டா ஒண்ணும் ஆகாது.''

''இது என் வீட்டுக்காரர் செய்த வேலே. அந்தக் கணக்கை இவ தொடலாமா?''

''உங்க வீட்டுக்காரரின் மருமகதானே இவ? வேறு ஆள் இல்லியே?'' அதற்குள் நஞ்சம்மா ரூல் தடியையும் பேனாவையும் அங்கேயே வைத்துவிட்டு உள்ளே சென்று விட்டாள். தியாவ ரசய்யா மறுபடியும் கூப்பிட்டு, ''நஞ்சம்மா ஏன் எழுந்து போறே? உன் வேலையை நீ செய். உன் மாமியார்கிட்டே நான் சொல்றேன்'' என்றார்.

கங்கம்மா கோவிலுக்குச் சென்று மகனை அழைத்து வந்தாள். அதற்குள் நஞ்சம்மா மறுபடியும் கோடு போட்டுக் கொண்டிருந் தாள். அவளைக் காட்டி கங்கம்மா தன் மகனிடம் ''பாருடா உன் மனைவி உனக்கு சமமா வேலே செய்யப் புறப்பட்டு இருக்கா.''

தியாவரசய்யா தானாகவே சென்னிகராயரிடம் ''பாருங்க, கணக்குப்பிள்ளை, எனக்கு உடம்பு சரியில்லே. உக்காந்து கோடு போட்டுப் போட்டு முதுகுவலி எடுத்துடுச்சு. புத்தகத்தைக் கட்டறது, கோடு போடறது நடு நடுவே கணக்கை எழுதறது இதை எல்லாம் செய்யறதாக நான் ஒப்புக்கலே. இதையெல் லாம் நீங்க செஞ்சா நான் மேற்கொண்டு எழுதறேன். உங்க பெண்டாட்டி நல்லாக் கோடு போடுறா. குண்டு குண்டா எழுதறா. அவகிட்டே செய்யச் சொல்றீங்களா? இல்லாட்டா

நீங்களே செய்யறீங்களா? சொல்லுங்க. இல்லாட்டா நான் ஊருக்குப் போகிறேன்'' என்றார்.

சென்னிகராயருக்கு சங்கடமாய்ப் போய்விட்டது. ஒரு நிமிஷம் யோசித்து ''இவகிட்டேயே செய்யச் சொல்லுங்க. நான் பஜனை கேட்கப் போக வேணும்'' என்று சொல்லிப் புறப் பட்டுச் சென்றார். மகனைத் திட்டிக் கொண்டே கங்கம்மா வாணியத் தெருவுக்குச் சென்றாள். வீட்டில் ஒருவன் மட்டும் இருப்பதற்கு கூச்சப்பட்டு அப்பண்ணய்யா மீனவர் தெருவை நோக்கி நடை போட்டான்.

தியாவரசய்யா நஞ்சம்மாவிடம் ''அம்மா! இந்த வீட்டு விஷயம் எனக்கு முன்பு இருந்தே தெரியும். உன் மாமனாருக்கு முதல் மனைவி இறந்து இந்தக் கல்யாணம் ஆன போது வயது நாப்பதை விட அதிகம். உன் மாமியார் புத்தி எப்போதும் இப்படித்தான். அவர் என்னவோ சொல்லட்டும். நீ கவனிச்சு கணக்கு வழக்கு எல்லாத்தையும் தெரிஞ்சுக்கோ. இல்லாவிட் டால் குடும்பம் உருப்படாது'' என்றார்.

''உன் மாமனார் கணக்குப்பிள்ளையாய் இருந்த போது எனக்கு ஒரு தடவை உதவி செஞ்சிருக்கார். அதனால் தான் நான் உனக்கு எனக்குத் தெரிஞ்ச எல்லாத்தையும் சொல்லித் தர்றேன். நான் சொன்னபடி செய்,'' என்று மேலும் சொன்னார்.

உ

இது நடந்த மூன்று மாதங்களில் ஆண்டு இறுதிக் கணக்கு தயார் செய்து முடிக்க வேண்டும். கணக்குப்பிள்ளையின் கணக்குகளில் இது முக்கியமானது. அதைத் தவறு இல்லாமல் எழுதிவிட்டால் அடுத்த ஆண்டு கணக்குப் புத்தகங்களில் தவறு ஏற்படும் வாய்ப்பு இல்லை. ''அம்மா, ஆண்டவன் உனக்கு இவ்வளவு அறிவு கொடுத்திருக்கிறான். மத்தவங்க எல்லோரும் நான்கு வருஷமானாலும் வரவு செலவு புரிஞ்சுகிட்டு எழுத மாட்டாங்க. கஷ்டமாய் இருந்தாலும் நான் சொன்னபடி இதையெல்லாம் எழுது. அப்புறம் நான் உனக்கு வருஷ முடிவுக் கணக்கு சொல்லித் தர்றேன்'' என்று சொல்லி அவள் எழுத வேண்டிய கணக்குகளை அவளிடம் ஒப்படைத்துவிட்டு தியாவரசய்யா ஊருக்குப் புறப்பட்டார். அவர் வரவேண்டிய நாளில் கணக்குகள் எல்லாவற்றையும் முடிக்க வேண்டியதாய் இருந்தது.

நஞ்சம்மாவுக்கு இப்போது ஆறு மாதம். சாதம்மா பிள்ளைப் பேற்றுக்காக தாய் வீட்டுக்குச் சென்றிருக்கிறாள். குழந்தை பிறந்து விட்டதா இல்லையா என்று இவர்களுக்குத் தெரியவில்லை. வீட்டு வேலை எல்லாவற்றையும் செய்து கொண்டு அத்துடன் கணக்குகளையும் எழுதி வந்தாள். ஆண்களைப் போன்று பெண் கணக்குகளை எழுத உட்கார்ந்தால் தான் எதற்காக வேலை செய்ய வேண்டும் என்று கங்கம்மா பிடிவாதம் செய்து சமையல் அறைக்குள் செல்லவில்லை. ஒரு நாள் மதியம் சாப்பிட்ட பிறகு நஞ்சம்மா கணக்கு எழுதிக் கொண்டு இருந்தாள். சென்னிக ராயனும், அப்பண்ணய்யாவும் அதே கூடத்தில் படுத்து குறட்டை விடுவதில் போட்டி போட்டுக் கொண்டு இருந்தனர். கங்கம்மா கதவுக்கு அருகில் அமர்ந்து இரவு பலகாரத்திற்காக பாசிப்பயிறு புடைத்துக் கொண்டு இருந்தாள். குழந்தை பார்வதி உள்ளே தூங்கிக் கொண்டு இருந்தாள்.

வெளியே கட்டிப் போட்டிருந்த பசுவை மேய்ச்சலுக்காக யாரும் ஓட்டிப் போகவில்லை. அதற்கு வைக்கோல் போட்டுத் தண்ணீர் கூட வைத்திருக்கவில்லை. அது இரண்டு முறை உரக்கக் கத்திவிட்டு, கட்டி இருந்த இடத்திலேயே திமிர ஆரம்பித்தது. நஞ்சம்மா கணவனைக் கூப்பிட்டாள். ''கேட்டதா?''

அவருக்கு விழிப்பு வரவில்லை. அப்பண்ணய்யா புரண்டு படுத்தான். அவள் அவனிடம் ''அப்பண்ணய்யா முழிச்சி கிட்டியா?'' என்றாள்.

''உம்'' என்று சொல்லிக் கொண்டே அவன் இழுத்துப் போர்த்துக் கொண்டான்.

''நாம எல்லாம் சாப்பிட்டாச்சு. ஆனா பசு பட்டினியா இருக்குது. அதை வெளியே தோட்டத்துக்கு மேச்சலுக்கு ஓட்டிப் போகக் கூடாதா?''

''உம்'' என்று அவன் மறுபடியும் முனகிக் கொண்டு படுத்துக் கிடந்தான்.

பத்து நிமிடம் கழித்து நஞ்சம்மா கூறினாள்: ''அது ஒரு நாளைக்கு ரெண்டு தடவை பால் கொடுக்கணும். ஆனா அதுக்கு யாரும் தீனி போட மாட்டாங்க. இவ்வளவு சோம்பேறிகளா இருந்தா ஆண்டவன் எப்பிடி சோறு கொடுப்பான்?''

இந்தப் பேச்சைக் கேட்டு கங்கம்மாவிற்கு கோபம் வந்தது. ''என்னடி, கத்திக்கிட்டு இருக்கறே?'' என்ருள்.

''நான் ஏதும் தப்பாச் சொல்லலே, பசுவைப் பட்டினியாக் கட்டிப் போட்டு இருக்கிருங்கன்னு சொன்னேன்.''

''அப்பிடி இருந்தா நீயே போய் மேச்சுகிட்டு வா.''

''இங்கே இந்தக் கணக்கை யார் எழுதறது.''

''ஓகோ! ராட்சசி! கணக்கு எழுதறயா? பெரிய சுபேதார் கௌரவம் வந்திடுச்சா உனக்கு? திமிர் பிடிச்சு ஆடறியா?''

கண்டி ஜோசியர் திடீரென்று தலைமறைவாய் போய் இனித் திரும்பி வரப் போகிற வாய்ப்பு குறைவாக இருந்தபடியால் இந்த மருமகளிடம் கங்கம்மாவுக்குச் சிறிதும் பயம் இருக்கவில்லை. இதைப் போன்று பேச்சைக் கேட்டு நஞ்சம்மாவுக்கும் பழகிப் போய்விட்டது.

அம்மாவின் பேச்சால் விழிப்படைந்த அப்பண்ணய்யா மதியம் தூக்கம் கெட்டுப் போய் விட்டதே என்று சலித்துக் கொண்டே ''என்னம்மா அது'' என்று கேட்டுப் புரண்டு படுத்தான்.

''நான் இந்தக் கணக்கு எழுதி சுபேதார் வேலே பாக்கறேன். நீங்க தின்னு படுத்துக் கெடக்கறீங்களா? போய் மாடு மேச்சு கிட்டு வாங்கன்னு உத்தரவு போடரு இவ.''

அப்பண்ணய்யா உடனே எழுந்து உட்கார்ந்து கேட்டான். ''ஏண்டி, இப்படியெல்லாம் பேசறே? புத்தி இருக்குதா?''

''அம்மா, ஏன் இப்படி எல்லாம் பொய் சொல்றீங்க?''

''சாமி மேலே சத்தியம் செஞ்சு சொல்லுங்க! நான் அப்படிச் சொன்னேன்னு'' - நஞ்சம்மாவே மறுபடியும் கூறினுள்.

''பாருடா அப்பண்ணய்யா நான் சத்தியம் செய்ய வேணு மாம்? நான் சோறு சாப்பிடறேனு? அசிங்கம் சாப்பிடறேனு? உன் அம்மாவைப் பித்தலாட்டக்காரின்னு சொல்ரு இவ. அதென்ன அப்படிப் பாக்கறே? எழுந்து வந்து உதை, இந்தக் கழுதெய'' என்று கங்கம்மா சொல்லி முடித்தவுடன் அப்பண்ணய்யா எழுந்து வந்து அண்ணியின் முதுகின் மேல் வலது காலால் எட்டி உதைத்தான். அவள் நிலத்தில் விழுந்து உருண்

டாள். அவன் இன்னொரு தடவை காலைத் தூக்கி ''உன்னைக் குழி தோண்டிப் பொதைக்கிறேன், பாரு, எங்கம்மாவைச் சொன்னு'' என்று கர்ஜித்தான். அப்பொழுது போலீஸ்காரர்கள் உள்ளே வந்தார்கள். காக்கிக் கால் சட்டை, காக்கித் தொப்பி, காலில் பூட்சு, கையில் தோல்பை, கருப்புக் கோட்டு, அவர்களைப் போலவே இருவர் காக்கித் தலைப்பாகை சுற்றிக் கொண்டு தோல்பை, சங்கிலி, இரும்புத்தடி முதலியவற்றைப் பிடித்துக் கொண்டு உள்ளே வந்தார்கள். அப்பண்ணய்யாவின் நெஞ்சு திடுக்கிட்டது. ''அம்மாடியோய்! நான் மாட்டிக் கிட்டேன்'' என்று கூவிக் கொண்டே தெருவுக்கு ஓடிப் போனுன். அங்கிருந்து அந்த சந்துக்குள் நுழைந்து ஓடினுன். அவனுடைய வேகத்தைக் கண்டு நாய்கள் குரைத்தன. அவர்களைக் கண்டு கங்கம்மாவும் திகைப்படைந்தாள். வெல வெலத்துப் போய் எழுந்து நின்ருள். அப்பண்ணய்யா கூவிக் கொண்டே வெளியில் ஓடியதால் சென்னிகராயருக்கு விழிப்பு ஏற்பட்டு எழுந்து உட்கார்ந்தார். உள்ளே குழந்தையும் அழத் தொடங்கியது. அப்படியே திரும்பி வந்தவர்களைப் பார்த்தாள் நஞ்சம்மா. பிறகு குழந்தையை எடுத்துக் கொள்ள உள்ளே செல்வதற்காக எழுந்தாள். இடுப்பு சுளீர் என்று வலித்தது. நரம்பு சுளுக்கிக் கொண்டு இருக்கும் என நினைத்தாள். கூனிக் கொண்டே உள்ளே சென்ற பொழுது, சென்னிகராயர் எழுந்து பயபக்தியுடன் பேசத் தொடங்கினுர். ''ம...ம...மகா சுவாமிகள் த...த...தயவு செய்ய வேணும்''.

''நீங்க தானு கணக்குப் பிள்ளை சென்னிகராயர்ங்கறது?''

''ஆமாம் சுவாமி''

''அவர் யார்? உங்க தம்பியா பெண்டாட்டியை உதைச்சது?''

''அவ என் பெண்டாட்டி சுவாமி''

''ஓகோ அண்ணியை உதைச்சாரா?''

''இல்லை சுவாமி''.

என்ன, அரசாங்க அதிகாரியா இருக்கற நீங்க பொய் சொல்றீங்களா? பெண்டாட்டியை சரிவர கவனிக்க முடியலியா?''

கங்கம்மாவுக்கு வியர்த்து ஒழுகியது. வந்தவர்கள் அதிகமாக எதுவும் பேசவில்லை. செனனிகராயர் திண்ணையில் ஒரு பாயை விரித்து உட்கார வைத்து கை கட்டியபடி நின்று கொண்டிருந் தார். அதே சமயத்தில் கங்கம்மா சந்தடி இல்லாமல் நழுவி நேரே மீனவர் குப்பத்துக்குப் போனாள். மாடனுடைய வீட் டிற்குப் போய் கேட்ட பொழுது அவன் மெல்லிய குரலில் ''பரண் மேல் அவனை ஒளிச்சு வச்சிருக்கிறேன்'' என்றான். கங் கம்மா ஏணி வைத்து பரண் மேல் ஏறி மகனிடம் ரகசியமாக கேட்டாள். ''வந்தவங்க கையிலே என்ன இருக்குதுன்னு பாத்தியா? கயித்தைப் போல நீளமான சங்கிலி, இரும்புத்தடி இருக்குது. பிடிச்சா, சங்கிலியாலே கையைக் கட்டி குழி தோண்டி நிறுத்தி வச்சிருவாங்க. அவ அண்ணன் கல்லேசன் போலீஸ்காரனா இருந்த ஆளு. அவனுக்கு வேண்டியவங்க இவங்க. நீ தோட்டப் பக்கமா ஓடிப் போயிடு, அஞ்சாறு மாசம் தலைகாட்ட வேண்டாம். ஜாவகல்லு பக்கமாகப் போயிடு''.

அப்பண்ணய்யா ''இனி என்ன கதி?'' என்று விழித்தான். ''கண்ணே சீக்கிரம் புறப்படு. இந்த சனியன் வந்த பெறகு நமக்குப் பிடிச்சது பாரு கெட்ட காலம்'' என்றாள். அவன் 'விறுவிறு' என்று ஏணியின் வழியாக கீழே இறங்கி வெளிக் கதவுப் பக்கமாகச் சென்று இரு பக்கமும் எட்டிப் பார்த்து வேலி சந்துக்குள் குனிந்து நுழைந்து ஓட்டம் பிடித்தான். அவன் ஏரிக்கரையைத் தாண்டிப் பார்வையிலிருந்து மறையும் வரை வேலி ஓரத்திலிருந்து கங்கம்மா பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு அவளுக்கு நிம்மதி ஏற்பட்டது.

வீட்டுக்கு வந்தவர்கள் அரசாங்க மஜூம்தாரர்கள். சமஸ் தானத்தில் உள்ள விவசாயத்தை எல்லாம் அளந்து, வரிசைப் படி நிலத்தின் பரப்பைக் குறித்துக் கொண்டு பட்டியல் தயாரிக்க ரெவின்யூ கமிஷனர் உத்தரவு போட்டு இருந்தார். புதிதாக அளப்பதற்காக மஜூம்தாரர் தம் சிப்பந்திகளுடன் வந்திருந்தார். சுமார் மூன்று மாத காலம் ராமஸந்திர கிராமத்தில் ''காம்ப்'' போட்டு சுற்று வட்டாரத்து கிராமங்களின் நிலங்களை எல்லாம் அளந்தார்கள். அவர்கள் தங்குவதற்கு ஏற்பாடு செய்வது முதல் தலையாரி, வெட்டியான் முதலியவர்களை அவர்களுடன் அனுப்புவது வரை எல்லாப் பொறுப்புகளும் கணக்குப் பிள்ளை யைச் சேர்ந்தது.

3

இரண்டாவது பிள்ளைப் பேற்றுக்காக அக்கம்மா பாட்டி வண்டி பூட்டிக் கொண்டு வந்து நஞ்சம்மாவை அழைத்துப் போனாள். அப்பொழுது கல்லேசனுடைய கை சற்று குணமடைந்து இருந்தது. இரண்டு கைகளாலும் பற்றிக் கொண்டு தென்னை மரம் ஏற முடிந்தது. வயல் வேலைகளையும் சிறிது செய்து வந்தான். ''கிராமம் வேண்டாம்'' என்று அவனுடைய மனைவி கூறிய போதிலும் அவனுக்கு அரசாங்க வேலை கிடைப்பது சாத்தியமில்லை. அவனும் அதை விரும்ப வில்லை. ஆனால் அவன் மனைவி கிராம வாழ்க்கைக்குத் தன்னை அனுசரித்துக் கொண்டு போகவில்லையோ அல்லது அவளுடைய சுபாவமே அப்படியோ, எப்படியானாலும் பாட்டிக்கும், பேர னுக்கும் அவளால் சந்தோஷம் கிடையாது.

நஞ்சம்மா பிள்ளைப் பேற்றுக்காக வந்தபோது அவளுடன் இரண்டரை வயது பார்வதியும் வந்திருந்தாள். கல்லேசன் மிகப் பிரியமாக குழந்தைக்கு முத்தம் கொடுப்பான். ஒருநாள் அவன் வயலுக்குச் சென்றிருந்த போது கமலா தனக்குள் சொல்லிக் கொள்பவள் போல் உரத்த குரலில் ''பன்னி போல சீக்கிரம் சீக்கிரம் கர்ப்பமாயிட்டா ஆச்சா? புருஷன் வீட்டுக்காரங்களுக்கு பிள்ளைப் பேறு செய்யற யோக்கியதை இல்லாதபோது எதுக்காகக் குழந்தை? பொறந்த வீட்டுக்காரங்க செய்றுங்க செய்றுங்கன்னு அவங்க ரத்தத்தை உறிஞ்சிகிட்டே இருக்கணுமா?'' என்று சொன்னாள்.

இந்தப் பேச்சு நஞ்சம்மாவுக்கும் கேட்டது. 'தனக்கு நல்ல மாமியாரும் கிடைக்கவில்லை. தன் அதிர்ஷ்டமே இப்படி. இப் பொழுது ஏழு மாதம். குழந்தை பிறந்து அதற்கு மூன்று மாதம் ஆக வேண்டுமானால் ஐந்தாறு மாதங்கள் இருந்தாக வேண்டும். மாமியாரின் ஊருக்குப் போவதே நல்லது. ஆனால் அங்கு மாமி யாரின் கொட்டம். தாய் வீட்டிற்குப் போனவள் திரும்பி வந்தாள் என்றால் மாமியார் கொத்தாமல் விடமாட்டாள். புருஷன் மனைவிக்காக ஒரு வார்த்தை பரிந்து பேசமாட்டார்' என்று எண்ணினாள். அவளுடைய கண்களில் நீர் பனித்தது.

கமலாவின் பேச்சு அக்கம்மாவுக்கும் கேட்டது. பொறுமை யாய் இருந்த அவள் பேத்தியின் கண்களிலிருந்து உருண்டு விழுந்த நீரைக் கண்டு மனம் பதறினாள். உடனே அவள் கமலாவிடம் சென்று ''சாந்திமுகூர்த்தம் வந்து ஒரு வருஷ

மாளுலும் பிள்ளை உண்டாகாதவளே! அவளை ஏன் பன்னின்னு சொல்றே? உன்னைப் போல பாவி வயத்துலே பிள்ளை எப்படி உண்டாகும்?'' என்று கேட்டாள்.

''உன் பேரன் கண்ட கண்ட களுதைங்க கிட்டே போயிட்டு வந்தா எனக்கு எப்படிப் பிள்ளை உண்டாகும்? சொல்லுடி கெழவி! இது போலத் தேவடியா பிள்ளைங்கதான் உன் வீட்டிலே இருக்காங்க''

''வெக்கம் இல்லாம பேசாதே! மானம் கெட்ட கழுதெ! நீ ஒழுங்கா இருந்தா அவன் ஏண்டி வெளியே போருன்? நீ பொம்பளையா?

இந்தப் பேச்சிலிருந்து நஞ்சம்மாவுக்கு புதிய விஷயங்கள் தெரிந்தன. அவள் பாட்டியின் அருகில் வந்து ''அக்கம்மா, மெல்லப் பேசு. அடுத்த வீட்டுக்குக் கேட்டுட்டா...?'' என்ருள்.

''அடுத்த வீட்டுக்கென்ன, ஊர் முழுவதும் தெரியும். இந்தத் தறுதலையின் கதை. இவ வந்த ஒரு மாசத்திலேயே நம்ம மானம் போயிடுச்சு. குளத்துக்கு போகும் போதெல்லாம் நம்ம வீட்டு விஷயத்தை ஊர் முழுக்கச் சொல்லரு. நல்ல குடும்பத்தில பொறந்த பொண்ணு இருந்தாத்தானே!''

''அடிக் கெழவி! என் அப்பன் வீட்டுக்காரங்களைச் சொல்றியா? எங்க வீட்டுக் குளியல் ரூமிலே குளிச்சு மடி உடுத்திகிட்டா உனக்குப் புண்ணியம் வரும்!''

''அக்கம்மா, இனி நீ பேசாதே! உள்ளே போகலாம்'' என்று சொல்லி நஞ்சம்மா தன் பாட்டியை உள்ளே அழைத்துச் சென்ருள். பிறகு வெளி முற்றத்துக்கு வந்து அண்ணியிடம், ''அண்ணி, கொஞ்சம் பொறுமையாய் இருக்கக் கூடாதா? நம் வீட்டு விஷயம் வெளியே தெரிஞ்சா எல்லாரும் மறைவாப் பேசிச் சிரிப்பாங்க''.

''புருஷன் வீட்டிலே சாப்பாட்டுக்கு கதியில்லாம, குழந்தை பெத்துக்கறதுக்கு இங்கே வந்திருக்கறே. எனக்கு நீ புத்தி சொல்ல வேண்டா.''

நஞ்சம்மா பேசாமல் உள்ளே சென்ருள். படுக்கை அறைக்குப் போய் கமலா பாயில் குப்புறப் படுத்துக் கொண்டாள். கைகேயி படுத்துக் கிடந்தது போல் கூந்தலைப் போட்டு நெற்றிக்

குங்குமத்தை அழித்து முகத்தை வீங்க வைத்துக் கொண்டு படுத்துக் கொண்டாள். பிறகு யாரும் அவளிடம் பேசவில்லை.

ஒரு மணி நேரம் கழித்து கல்லேசன் வீட்டிற்கு வந்து குளித்தான். மனைவியின் மன நிலையை அவன் கவனிக்கவில்லை. ஆனால் கமலா சும்மா இருப்பது எப்படி? உள்ளே இருந்து 'முணுமுணு' என்று திட்ட ஆரம்பித்தாள். அவனது கவனம் அங்கு சென்றது. இலேசாக மூடியிருந்த அறையின் கதவருகே சென்று நின்று கொண்டான். அவளுடைய முணுமுணுப்புச் சொற்கள் படுவேகமாக வந்த போதிலும் தெளிவாய்க் கேட்டது. ''தேவடியா வீட்டுப் பயலுக வீடு பாழாப் போகட்டும். இவங்க குடும்பம் அழிஞ்சு போகட்டும். வீடு கட்டாந் தரையாப் போகட்டும். அந்த முண்டைக எல்லாம் அம்மை வந்து சாகட்டும். முண்டை...............''

வயலில் உழைத்து, வெய்யிலில் காய்ந்து போய் வந்திருந்த கல்லேசன் ''நீ யாரைடி திட்டிகிட்டிருக்கே?'' என்று கோபமாகக் கேட்டான்.

''முண்டை, முண்டை.........'' என்று மந்திரம் போல் சொல்லிக் கொண்டே அவள் தன் இரு கை விரல்களையும் சேர்த்து 'படபட' என்று சொடுக்கு எடுத்தாள்.

''தூத்தேறி'' என்று அவன் தன் வலது கையைத் தூக்கி அவள் முதுகின் மேல் ஓங்கி அடித்தான்.

அவள் முகத்தைத் திருப்பிக் கொண்டு ''முண்டைப் பயலே என்னை அடிக்கிறியாடா? உன் இடது கை விளங்காமப் போனது போல் வலது கையும் விளங்காமப் போகட்டும். என் சாபம் சும்மா போகாது.'' என்றாள். மற்றொரு அடி விழுந்தது. அவள் அதே மூச்சில் ''காய்ச்சல் வந்து எங்க அப்பா வீட்டில் படுத்துக்கிட்டு எட்டு மாசம் சோறு சாப்பிட்டியே! என்னை அடிக்க எப்படிடா கை வந்திச்சு? உன் கை புழுத்துப் போக'' என்றாள்.

நஞ்சம்மா அங்கே ஓடி வந்தாள். அடிதடி சத்தத்தைக் கேட்டு சமையல் அறையில் இருந்த குழந்தை கத்தத் தொடங்கியது. நஞ்சம்மா அண்ணன் கையைப் பிடித்து இழுத்து, ''அண்ணா, உனக்கு புத்தி சரியில்லையா? பெண்டாட்டியை

இப்படியா அடிக்கிறது? ஏதாவது ஆயிட்டா என்ன செய்யறது? பேசாம உள்ளே வந்து சாப்பிடு'' என்ருள்.

''என் கையை விடு. இந்தச் சனியனை இன்னிக்கு வழிக்குக் கொண்டு வந்துடறேன்'' என்று தன் கையை விடுவித்துக் கொண்டான். படுத்துக் கொண்டிருந்த கமலா வில்லில் இருந்து விடுபட்ட அம்பு போல வேகமாக எழுந்து நின்று சவால் விட்டாள். ''அடிக்கிறியாடா? தோள் பட்டை முறியற வரை அடி. உன்னை ஒழிச்சுக் கட்டறேன். இன்னிக்குத்தான் கடைசி நாள். அடி பாக்கலாம்.''

நஞ்சம்மா அண்ணன் கையை இறுகப் பற்றிக் கொண்டு வெளியே இழுத்தாள். கல்லேசன் கையை விடுவித்துக் கொள்ள வில்லை. அவன் இடது காலைத் தூக்கி கமலாவின் இடுப்பின் மேல் எட்டி உதைத்தான். அந்த வேகத்தில் அவள் சுருண்டு விழுந்தாள். ''உன்னைத் தீர்த்து விடறேன் பாரு'' என்று சொல்லி வெளியே வந்தான். ''உன்னைப் பொதைச்சு விடறேன் பாரு'' என்று அவள் உள்ளிருந்து கத்தினுள்.

கல்லேசன் உள்ளே அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அதைப் போன்ற சம்பவம் புதியதல்ல. ஆனுல் அன்று சற்று வரம்பு மீறி விட்டது. அவளை எப்படி கட்டுக்குள் கொண்டு வருவது என்று யோசித்துக் கொண்டே சாம்பார் சோற்றை கல்லேசன் பிசைந்து கொண்டிருந்தான். அக்கம்மாப் பாட்டி சோற்றுப் பாத்திரத்தில் தண்ணீர் விட்டுக் கொண்டிருந்தாள். அப்போது திடீரென்று ''அண்ணு ஓடி வா, அண்ணி கெணத்திலே விழுந்திட்டா'' என்று நஞ்சம்மா கூவினுள்.

''அடி சனியனே'' என்று கல்லேசன் ஒரே பாய்ச்சலில் கிணற்றுப் பக்கம் ஓடி வந்தான். அக்கம்மாப் பாட்டியும் குனிந்த முதுகுடன் ஓடி வந்தாள். கிணற்றுக்கருகே கயிற்றை உள்ளே விட்டு ''இதை கெட்டியாப் பிடிச்சுக்கோ'' என்று நஞ்சம்மாவிடம் கூறி கல்லேசன் 'சர்' என்று உள்ளே இறங்கினுன். நஞ்சம்மா கிணற்றுச் சுவரின் மேல் காலை ஊன்றிக் கொண்டு கயிற்றைப் பிடித்துக் கொண்டாள்.

நஞ்சம்மா கூவியது அடுத்த வீட்டு கபினிபதையாவின் மனைவியின் காதிலும் விழுந்தது. ''கமலா கெணத்திலே விழுந்திட்டாளாம்'' என்று கணவனிடம் சொல்லிக் கொண்டே அவளும் ஓடி வந்தாள். கபினிபதையாவும் ஓடி வந்தார்.

அக்கம்பக்கத்தவர்கள் எல்லாம் கும்பலாகக் கூடி விட்டார்கள். இந்தச் செய்தி மின்னலைப் போல் வேகமாகப் பரவி அடுத்த தெருக்காரர்களும் வந்து சேர்ந்தனர்.

கமலா ஒரு தடவை மூழ்கி எழுந்து இரண்டாம் தடவை மூழ்கினாள். இரண்டாம் தடவை வந்த போது உயிரைக் காப்பாற்றிக் கொள்ள இரண்டு கைகளையும் மேலே தூக்கி ஆட்டினாள். சாக வேண்டும் என்று அவள் குதிக்கவில்லை. கணவனைப் பழி வாங்க வேண்டும் என்ற ஆத்திரத்தில் குதித்தாள். ஆனால் தண்ணீருக்குள் ஒரு தடவை மூழ்கி எழுந்த பின் உயிர் மேல் ஆசை வந்து விட்டது. சாவைப் பற்றிய பயம் வந்து விட்டது. மூன்றும் முறையாக வந்த போது கல்லேசன் அவளுடைய சடையை இறுகப் பற்றிக் கொண்டான். அதற்குள் கிணற்றுக்கருகில் ஜனங்கள் கூடி விட்டார்கள். ''கயித்தைக் கொஞ்சம் மேலே இழு'' என்று அவன் கூவினான்.

அவன் இடது கையால் கயிற்றைப் பிடித்துக் கொண்டான். வலது கையால் அவளுடைய சடையைப் பிடித்துக் கொண்டான். அப்போது அவன் மார்பு வரை நீரில் நின்று கொண்டிருந்தான். அவளுடைய தோள் தண்ணீருக்கு மேல் இருந்தது. அவனுடைய இடது கை பிடி சரியாக அமையவில்லை. அந்தப் பளுவை அதிக நேரம் தாங்கும் சக்தி கைக்கு இல்லை. கிணற்றில் இறங்குவதற்காக சுவரில் வைக்கப்பட்டிருந்த பிறைகளைத் தேடி அதற்குள் கால்களை ஊன்றி பத்திரமாக நின்று கொண்டான்.

''அய்யோ, அப்பா, எனக்குப் பயமா இருக்குது. என்னை மேலே தூக்குங்க'' என்று அவள் கூக்குரலிட்டாள்.

மேலே இருந்தவர்கள் ஒரு சிறிய தொட்டிலைக் கொண்டு வந்து கயிற்றைக் கட்டி அதை மெதுவாக கிணற்றுக்குள் இறக்கினார்கள். அதை நீர் மட்டம் வரை இறக்க அதற்குள் கல்லேசன் கமலாவை உட்கார வைத்தான். ''கயித்தை இழுங்க'' என்று அவன் உரக்கச் சொன்னவுடன் அவள் ''எனக்குப் பயமா இருக்கு'' என்று கத்த ஆரம்பித்தாள். தொட்டில் மேலே சென்று கொண்டிருக்கும் போது குரங்கைப் போல் அங்கும் இங்கும் ஆடி தன் மேல் விழுந்து விட்டால் தானும் பிழைக்க முடியாது என்று கல்லேசன் நினைத்தான். ஆகையால் தன் வேட்டியை அவிழ்த்து அவளைத் தொட்டிலுடன் சேர்த்து இறுகக் கட்டினான். மேலே அணிந்திருந்த பனியனை எடுத்து கோவணமாகக் கட்டிக் கொண்டான். தொட்டில் மெதுவாக மேலே சென்றது. நான்கு

ஆண்கள் சேர்ந்து தொட்டிலே மேலே இழுத்தார்கள். பிறகு கல்லேசனும் மெதுவாக மேலே வந்தான். அவள் வயிற்றுக்குள் நீர் அதிகமாகச் சென்று வயிறு புடைத்திருந்தது. பயம், பதற்றம், அவமானம் ஆகியவைகளால் அவளுடைய கண்கள் சிவந்துவிட்டன. மேலிருந்து கிணற்றுக்குள் விழுந்த போது உடம்பு உராய்ந்ததால் கை, முதுகு, தலையின் ஒரு பக்கம் ஆகிய இடங்களில் இரத்தம் கசிந்து கொண்டிருந்தது. முதலில் அவளை தரையின் மீது கவிழ்ந்து படுக்க வைத்து கல்லேசன் அவளுடைய இடுப்பை அழுத்திப் பிடித்தான். வயிற்றில் இருந்த நீர் வாய் வழியாக வந்தது. ரோஜா இலைகளை அரைத்து இரத்தம் கசிந்து கொண்டிருந்த இடங்களில் தடவிய பொழுது ''ஐயோ அப்பா'' என்று அவள் அலறினாள்.

கல்லேசன் அங்கே கூடியிருந்தவர்களைப் பார்த்து ''இங்கே என்னய்யா வேலை? எல்லோரும் போங்க இங்கிருந்து'' என்று அதட்டினான். கும்பல் கலையவில்லை. பிறகு கல்லேசன், அக்கம்மா, அடுத்த வீட்டு ஆண்கள் இருவர் ஆகிய அனைவரும் சேர்ந்து அவர்களை விரட்டினார்கள். ''அவளுக்கு சுடச்சுட ஒரு டம்ளர் காப்பி செய்து கொடுங்க'' என்று கபினிபதையாவின் மனைவி புட்டம்மா கூறினாள்.

''இந்த முண்டைக்கு காப்பி ஒரு கேடா?'' என்று சொல்லி விட்டுக் கல்லேசன் வேறு வேட்டி உடுத்த சென்றான். போலீஸ் வேலையில் இருந்த அவனுக்கு காப்பி குடிக்கும் பழக்கம் இருந்தது. ஆனால் தினசரி குடிக்கும் வாடிக்கை கிடையாது. பட்டணத்துக் காரியான கமலா கிராமத்தில் காப்பி குடிக்காமல் இருக்க முடியுமா? ஆகையால் அவர்கள் வீட்டில் காப்பிப் பொடி இருந் தது. நஞ்சம்மாவே சென்று ஒரு டம்ளர் காப்பி கலந்து கொண்டு வந்து கொடுத்தாள். அதை ஒரு முறை வாயில் வைத்துக் குடித்த கமலா, ''தூ, இந்த பட்டிக் காட்டுப் பீடை களுக்கு சரியாக் காப்பியும் போட வராது. எப்போதாவது குடிச்சிருந்தால் தானே?'' என்று டம்ளரைத் தரையில் 'பட்' டென்று வைத்தாள். அந்தச் சத்தம் கல்லேசன் காதில் பட்டது. அவன் உடனே வந்து மீதியிருந்த காபியை எடுத்து அவளுடைய தலையில் ஊற்றினான். உடனே அவள் வாயை மூடிக் கொண் டாள். பிறகு அவன் உள்ளே சென்றவுடன் ''வேறு புடைவை கட்டிக்கோ'' என்று அக்கம்மா அவளிடம் சொன்னாள். அவள் எழுந்திருக்கவில்லை. நனைந்திருந்த புடவையையும் மாற்றிக் கொள்ளவில்லை. அவிழ்ந்த கூந்தலை அப்படியே தொங்க விட்டுக் கொண்டு அவள் கிணற்றுக்கருகிலேயே உட்கார்ந்திருந்தாள்.

அன்றிரவும் அவள் சாப்பிடவில்லை. கல்லேசன் சாப்பாட்டை முடித்துக் கொண்டான். அக்கம்மா வலுக்கட்டாயமாக கர்ப் பிணியான நஞ்சம்மாவுக்குப் பரிமாறினுள். பத்து வருடமாக அக்கம்மா எப்போதும் இரவு நேரத்தில் சாப்பிடுவது இல்லை. கமலா ராத்திரி தன் படுக்கை அறையில் படுத்துக் கொண்டாள். அக்கம்மா முன்புறக் கதவருகிலும், நஞ்சம்மா பின்புறக் கதவ ருகிலும் படுத்துக் கொள்ளுமாறு கல்லேசன் சாடை காட்டி ஞன். இராத்திரி வேளையில் அவள் மறுபடியும எழுந்து போய் கிணற்றில் விழுந்து விடுவாளோ என்ற சந்தேகம். அவர்கள் இருவரும் அப்படி படுத்துக் கொண்டதால் யாரும் இரவு நேரத் தில் கதவை திறந்து கொண்டு வெளியே போக வழி இருக்க வில்லை. கல்லேசன் அறைக் கதவோரமாக படுக்கை விரித்துப் படுத்தான். அவனுக்குச் சட்டென்று தூக்கம் வரவில்லை. என்ன வெல்லாமோ யோசனை, தனக்கு இப்படிப்பட்ட பெண் ணைத் திருமணம் செய்து வைத்த தகப்பனுரிடம் கோபம் வந் தது. யாரைப் பற்றியெல்லாமோ யோசனை. வெகு நேரம் கழித்துக் கண் அயர்ந்தான்.

ஆனுல் அவனுக்குத் திடீரென்று விழிப்பேற்பட்டது. சமை யலறையில் ஏதோ வெளிச்சம் தென்பட்டது. படுத்திருந்தவன் தலையைத் தூக்கிப் பார்த்தான். அறைக்குள் அவளைக் காண வில்லை. சந்தடி செய்யாமல் மெதுவாக பூனையைப் போல் நடந்து சென்று எட்டிப் பார்த்தான். அவள் அடுப்பின் எதிரே உட்கார்ந்து இருந்தாள். கூந்தல் அவிழ்ந்தபடியே கிடந்தது. சுவாமி படத்தின் எதிரே உட்காந்து இருந்தாள். சுவாமி படத்தின் முன் சிறிய அகல் விளக்கு எரிந்து கொண்டு இருந் தது. அவள் ஏதோ சாப்பிட்டுக் கொண்டிருந்தது போல் தோன்றியது. மெதுவாக மறுபடியும் சற்று முன்னே சென்று பார்த்தான். அவள் சோற்றுப் பானைக்குள்ளேயே குழம்பு ஊற்றி சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். அருகில் மோர்க் கிண்ணம்.

அவன் சந்தடி செய்யாமல் அப்படியே திரும்பி வந்து படுத் துக் கொண்டான். அவள் அதற்கு முன்பு பலதடவை அடம் பிடித்து சாப்பிடாமல் படுத்துக் கொண்டதுண்டு. பிறகு எல் லோரும் படுத்துக் கொண்ட பிறகு தான் மட்டும் எழுந்து தனியே சாப்பிட்டு விட்டு ஒன்றும் அறியாதவள் போல் படுத்துக் கொள்வாள். மறு நாள் காலையில், ''என்னை ராத்திரி சாப்பி டாம பட்டினி போட்டாங்க. அவங்க வீடு பாழாப் போகட் டும்'' என்று முணுமுணுத்துக் கொண்டிருப்பாள். ஆனுல் மூடி வைத்த சாப்பாடு மறைந்து போயிருக்கும். அதுதான் அவள்

சாப்பிட்டதற்கு அடையாளம். ஆனால் அன்று அவன் நேரில் பார்த்து விட்டான். 'இன்னொரு கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். இந்தக் கேடு கெட்ட முண்டையை அடித்து விரட்ட வேண்டும்' என்று மனதிற்குள் நினைத்துக் கொண்டான். அப் போது வெளியே மோட்டார் காரின் இறைச்சல் கேட்டது. 'அது என்ன? வீட்டிற்கு யார் வந்திருப்பார்கள்?' என்று நினைத் துக் கொண்டிருந்த போது சில பேர் காரிலிருந்து இறங்கி அவனு டைய வீட்டுக் கதவைத் தட்டினார்கள். ''யார் அது'' என்று கேட்டுக் கொண்டே எழுந்து விளக்கு ஏற்றி கதவோரமாய்ப் படுத்திருந்த அக்கம்மாவைத் தட்டி எழுப்பி கதவைத் திறந் தான். அவனுடைய மாமனாரும், மாமியாரும் வந்திருந் தார்கள். அவர்களுடன் உறவினர்கள் நான்கு பேர். அவர்களைப் பார்த்து அவனுக்கு ஆச்சரியமாகப் போய் விட்டது. ''கமலா எப்படி இருக்கா?'' என்று கேட்டுக் கொண்டே அவளுடைய தாயார் உள்ளே வந்தாள். ''சமைய லறைக்கு வாங்க'' என்று அவன் சொன்னான். அவர்கள் அங்கே சென்று பார்த்த பொழுது கமலா அங்கே இல்லை. சுவாமியின் எதிரே இருந்த அகல் விளக்கை அப்போது தான் அணைத்து விட் டிருந்த வாசனை வீசியது, ''எங்கே போனாள்?'' என்று சொல் லிக் கொண்டே அவளுடைய அறைக்குள் அவர்கள் சென்று பார்த்த போது அவள் அங்கே படுத்திருந்தாள். அவள் எழுந் திருக்கவே இல்லை என்று மற்றவர்கள் நினைக்க வேண்டும் என்ப தற்காக கண்ணை மூடிக் கொண்டிருந்தாள்.

''பாருங்க, நீங்க வந்த போது இவ திருட்டுத்தனமாய் சமையல் அறையிலே உக்காந்துகிட்டு சோத்துப் பானையிலே கொழம்பு ஊத்தி சாப்பிட்டுகிட்டிருந்தா. இப்ப வெளக்கை ஊதி அணைச்சிட்டு இங்கே வந்து ஒண்ணும் தெரியாதவ போல படுத்து கிட்டா. நீங்களே வந்து பாருங்க'' என்று கையில் விளக்கைப் பிடித்துக் கொண்டு அவளுடைய தாயாரை அழைத்துச் சென்று காட்டினான்.

''சரி போகட்டும் எல்லோரும் சௌக்கியம் தானே?'' என்று மாமனார் கேட்டார். ''நீங்க ஏன் வந்திங்க? என்ன சங்கதி?'' என்று கல்லேசன் கேட்டான். ''கமலா கெணத்துலே விழுந்துட்டா. நீங்க வாங்கன்னு நீ தானே போன் செஞ்சே''. ''உங்களுக்குப் போன் செஞ்சது யாருன்னு சொல்லுங்க. அந்த அமளியிலே எனக்கு மறந்து போச்சு''. ''யாரா இருந்தா இவருக்கென்ன?'' என்று கமலா உள்ளிருந்த படியே கூறினாள்.

போன் செய்ய வைத்தது அவள் தான் என்று எல்லோருக்கும் தெரிந்து விட்டது. ஆனால் அவளுக்காக யார் செய்தார்கள் என்பது தெரியவில்லை. அதைப் பற்றித் தெரிந்து கொள்வது கஷ்டம் அல்ல என்பதால் கல்லேசன் மறுபடியும் பேச்சைக் கிளறவில்லை. கல்லேசன் நேரே அடுத்த வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டினான். காரின் இரைச்சல் அவர்களையும் எழுப்பி விட்டிருந்தது.

கபினிபதையாவையும் அவருடைய மனைவியையும் வீட்டிற்கு அழைத்து வந்தான். அவ்வாறே அடுத்த வீட்டுக்காரர்களையும் எழுப்பிக் கூட்டி வந்தான். பிறகு பேச்சை ஆரம்பித்தான். ''நாங்க சொன்னா பொய்யின்னு நெனைக்கலாம். இவங்களையே கேளுங்க, கபினிபதையா! விஷயத்தை நீங்களே இவங்களுக்குச் சொல்லுங்க''

அடுத்த வீட்டுக்காரர்கள் தாமாகவே ஏதும் சொல்லவில்லை. கல்லேசன் நடந்ததைச் சொன்னான். ஆனால் எட்டி உதைத்ததைச் சொல்லவில்லை. அவன் சொன்னதெல்லாம் உண்மை தான் என்று அண்டை வீட்டுக்காரர்களும் சொன்னார்கள். அப்போது கல்லேசனுடைய மாமியார் குறிக்கிட்டு ''அப்பிடி இருந்தாலும், நாங்க பெத்து வளர்த்த பொண்ணை உங்க பட்டிக் காட்டுக்கு அனுப்பியிருக்கோம். நீங்க அனுசரிச்சுகிட்டுப் போகணும்'' என்றாள். ஆனால் மாமனார் குனிந்த தலை நிமிரவில்லை.. ''நீங்க இப்போ சொல்லுங்க. எந்தப்பய உங்களுக்கு போன் செய்யச் சொன்னது?'' என்று அப்போது கல்லேசன் கேட்டான்.

''என் வாயிலே பொய் வராது. சென்னராயன் பட்டணத்திலிருந்து போன் வந்தது. அங்கே உள்ள எலக்டிரிக் கேம்பிலிருந்து ஹாசன் கேம்பிற்குப் போன் செஞ்சாங்களாம். போஸ்ட்மேன் ரங்கண்ணகிட்டே உடனே சொல்லச் சொன்னாங்களாம். நான் அங்கே தபால் கொடுக்கிறதுக்காக தினசரி போய் நல்ல பரிச்சயம் இருக்கு. எலக்டிரிக் போர்மேன் வந்து எல்லா விஷயத்தையும் சொன்னார். உடனே அம்பது ரூபா கார் வாடகை கொடுத்து ஓடி வந்தேன்.

''இப்ப நீங்களும் வந்தாச்சு. கார் இருக்கு. உங்க மகளுக்கும் மனவருத்தம். உங்க மகளையும் கூட்டிக்கிட்டு போங்க''. ''நாலஞ்சு நாள் இருந்து மனவருத்தம் ஆறட்டும்'' என்று மாமியார் உடனே சொன்னார். அப்போது மாமனார் குறுக்கிட்டு ''வேண்டாம் வேண்டாம், புருஷன் பெண்டாட்டி சண்டைக்

காக நாம் பெண்ணை அழைச்சுக்கிட்டு போக வேண்டாம். சந்தோஷமா இருக்கும் போது தாராளமா வந்து போகலாம்.'' என்றார்.

''நம் பொண்ணை நம்ம வீட்டுக்குக் கூட்டிட்டு போக என்ன கஷ்டம்?'' என்று மாமியார் கேட்டார். ''உனக்கு என்ன தெரியும்? பேசாம இரு'' என்று அவர் அடக்கினார்.

''நானும் கண்டிப்பா வருவேன்'' என்று சொல்லிக் கொண்டே கமலா எழுந்து வந்து தாயாருக்குப் பக்கத்தில் நின்று கொண்டாள்.

''அம்மா நான் சொல்லறதைக் கேள். இப்ப வர வேண்டாம்'' என்று அவளுடைய தந்தை கூறியதை அவள் பொருட்படுத்தவில்லை.

இனியும் தாமதம் செய்ய வேண்டாம் என்று நினைத்து அவர் எழுந்து நின்று உடன் வந்தவர்களைப் பார்த்து ''எல்லோரும் புறப்படலாம். கார்லே உக்காந்துக்குங்க. ஊருக்குப் போகலாம்'' என்றார். ''நம் பொண்ணை.........'' என்று மாமியார் பேச ஆரம்பித்த போது ''இதுவரைக்கும் உன் பேச்சைக் கேட்டுத்தான் இப்பிடி ஆச்சு. வாயை மூடு'' என்று அதட்டினார். எல்லோரும் காரில் அமர்ந்தனர். கமலா அடம் பிடித்து தானும் காரில் உட்காருவதற்காக வந்தாள். ரங்கண்ணா அவளுடைய கையைப் பிடித்து நிறுத்தினார். நஞ்சம்மா ஓடி வந்து கல்லேசனுடைய மாமியார் முன் குங்குமத்தை நீட்டிய போது டிரைவர் நிலைமையைப் புரிந்து கொண்டு காரைக் கிளப்பினார். ''அம்பது ரூபா தண்டம். ஒரு மாசச் சம்பளம் போச்சு. பணத்துக்கு எங்கே போறது?'' என்று ரங்கண்ணா சொன்னது நஞ்சம்மாவின் காதில் பட்டது.

இருபது கஜ தூரம் போன பின் கார் நின்றது. ''கல்லேசா, இங்கே கொஞ்சம் வா'' என்று ரங்கண்ணா கூப்பிட்டார். கல்லேசன் காருக்கு அருகே சென்றான். அவர் கீழே இறங்கி அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டு ''கோபப்படாதே, மட்டமான பசுவைக் கொண்டு வந்தாலும் மேச்சுக் கட்டிக் காப்பாத்தணும். அவ கெடக்கட்டும். எனக்காக தயவு செய்'' என்று சொல்லிக் கொண்டு இருக்கும் பொழுதே அவருடைய கண்களில் நீர் சுரந்தது.

''நீங்க என்ன சிறுபிள்ளைத்தனமா பேசறீங்க? அவ செஞ்சது மட்டமான வேலையா'' என்று மனைவி கணவனைக் கடிந்து கொண்டாள். ''பேசிப் பயன் இல்லை'' என்று சொல்லிக் கொண்டே அவர் காருக்குள் அமர்ந்து கொண்டார். கார் வேக மாகச் சென்று மறைந்தது.

அடுத்த வீட்டுக்காரர்கள் போய்ப் படுத்துக் கொண்டார்கள். கல்லேசனுடைய வீட்டுக்காரர்களும் படுத்துக் கொண்டார்கள். பேசுவதற்கு மலையளவு விஷயம் இருந்தாலும் எதையும் பேசக் கூடிய நிலைமை அங்கே இருக்கவில்லை. ''நசுக்க வேணும் ராட்சசியை'' என்று அக்கம்மா தனக்குள் சொல்லிக் கொண் டாள். வழக்கம் போல் நஞ்சம்மா சும்மா இருந்தாள். கல்லேச னும் மௌனமாக இருந்தான். அக்கம்மாவினுல் பேச்சை ஆரம்பிக்க முடியவில்லை. அவனுடைய கையில் விழுந்த கண்ணீர்த் துளி கல்லேசனை வாட்டியது. அவனுக்கு பிளேக் நோய் வந்த போது அவர் தன்னை குழந்தை போல் காப்பாற்றி ஞர். அவரிடம் அவனுக்கு மரியாதை உண்டு. எழுந்து போய் மனைவியின் இடுப்பை முறிக்க வேண்டும் போல் அவனுக்கு எண் ணம் பிறந்தது. ஆனுல் மாமஞரின் கண்ணீர் அவனுடைய எண்ணத்தைத் தடுத்து நிறுத்தியது.

# ஆறு

## 1

சுமார் ஆறு மாதங்கள் கழிந்த பிறகு ஒரு நாள் நள்ளிரவில் அப்பண்ணய்யா மீனவர் குப்பத்தில் மாடன் வீட்டுக் கதவைத் தட்டினுன். உள்ளேயிருந்து எழுந்து வந்த மாடன், அவனைப் பார்த்து,'' எங்கே போயிருந்தேங்க சாமி?'' என்று கேட்டான்.

''போலீஸ், கீலீஸ் என்னைத் தேடிக்கிட்டிருந்தாங்களா?''

''எந்த போலீஸ்காரங்க சாமி?''

''அதுதான் அன்னிக்கு......''

உடனே மாடனுக்கு முன்பு நடந்த விஷயங்கள் எல்லாம் நினைவுக்கு வந்தன. அவன் ''அவக போலீஸ்காரங்க இல்லையாம். வயல் அளக்கறதுக்கு வந்த அதிகாரிகளாம். நம்ம ஊர்லே மூணு மாசம் இருந்தாங்க. நீங்க ஏன் இத்தினி நாள் ஒளிஞ்சு

கிட்டு இருந்தீங்க சாமி? என் கொளந்தை எங்கே போச்சோன்னு அம்மா ரொம்பவும் கவலைப்பட்டுகிட்டிருந்தாங்க'' என்றான்.

''அப்படியானு நான் வீட்டுக்குப் போகலாமா?''

''புறப்படுங்க சாமி.''

''எனக்குப் பயமாயிருக்கு, துணைக்கு நீயும் வா'' என்று மாடனைத் துணைக்கு அழைத்துச் சென்ற அப்பண்ணய்யா, சிறிது தைரியத்துடன் தன் வீட்டுக் கதவைத் தட்டினான். ''யாரடா... அது? இந்த வேளையிலே கதவைத் தட்டறது?'' என்று உள்ளேயிருந்து கூச்சல் போட்ட கங்கம்மாவுக்கு மாடனே பதில் சொன்னான். மண்ணெண்ணெ விளக்கைப் பற்ற வைத்துக் கொண்டு வெளியே வந்த கங்கம்மா மகனைப் பார்த்து, ''என் கண்ணே, இத்தினி நாள் எங்கே போயிருந்தேப்பா? அந்த முண்டைக்குப் பயந்து எங்கெல்லாம் திரிஞ்சியோ?'' என்று கண்களில் நீர் சுரக்கக் கேட்டாள். மாடன் உள்ளே வந்து அமர்ந்தான். நஞ்சம்மா பிள்ளைப் பேற்றுக்காக நாகலாபுரத்திற்குப் போயிருந்தாள். சென்னிகராயருடைய தூக்கம் சுலபத்தில் கலையக் கூடியது அல்ல. மகன் எங்கெல்லாம் திரிந்தான், என்ன சாப்பிட்டான் முதலிய எல்லாவற்றையும் கங்கம்மா விசாரித்தாள்.

''நான் ஒண்ணும் பயப்படலே. எல்லா எடத்துக்கும் போய் சமாளிச்சிட்டு வந்தேன்'' என்று தன் வீரக் கதைகளை தாயிடம் கூற ஆரம்பித்தான். ''இங்கேயிருந்து ஜாவகல்லுப் பக்கமாகப் போனேன். வழியிலே சண்ணே கவுடன் வீட்டுக்குப் போய் 'நான் பிராமணன். சமையல் செய்வதற்கு ஏதாவது சாமான் கொடுங்களேன்' அப்படின்னு கேட்டேன். ரெண்டுபடி அரிசி, அவரைப் பருப்பு, மிளகாய்ப் பொடி, வெண்ணெய் எல்லாம் கொடுத்தாங்க. சாப்பாட்டை முடிச்சுகிட்டு மீதியிருந்த எல்லாத்தையும் கட்டி எடுத்துகிட்டு ஜாவகல்லுக்குப் போனேன். அங்கே ஒரு மாசம் இருந்தேன், 'இப்ப எதுக்கு வந்திருக்கே? ஊர்லே எல்லாம் எப்படி இருக்காங்க? அவங்க ஏன் வரலே?' அப்படின்னு அந்த வெங்கட்ராமன் பெண்டாட்டி கேட்டா. ஒரு நாள் ராத்திரி அங்கேயிருந்து புறப்பட்டு அரிசிகெரெ பக்கமாகப் போனேன். அப்படியே சுத்திகிட்டு பாணவரம், கடூர் வழியாக சிவமொக்காவுக்குப் போனேன். அங்கே பெரிசா மடம் இருக்கு. அங்கே தங்கவும் படுக்கவும் ரொம்ப சௌகரியம்.''

''சாப்பாட்டுக்கு என்ன செஞ்சே?''

''அந்த மடத்துக்காரர்களே சொல்லிக் கொடுத்தாங்க. அவங்க லிங்காயத்தார். நான் அவங்க சாப்பாட்டை சாப்பிட முடியாதே? அந்த ஊர்லே பிராமணர் தெரு பெரிசா இருக்குது. எல்லாரும் வசதியானவங்க. தினசரி பிட்சான்னம் செய்தேன். நீ என்னதான் சொல்லு. வேறு எந்த சமையலும் பிட்சான்னத்துக்கு ஈடாகாது. மூட்டையாக அன்னம், கலயத்தில் கொழம்பு, ரசம் கொண்டு வந்து ஆற்றங்கரை படிக்கட்டைக் கழுவி அதுலே சாப்பாட்டைப் போட்டுகிட்டு கலந்து விளாசிகிட்டிருந்தேன்.''

''பிட்சான்னம்னு சொன்ன என்ன சாமி?'' — மாடன் கேட்டான்.

''சாப்பாட்டு வேலையிலே எல்லா வீட்டுக்கும் முன்னடி நின்று பவதி பிட்சாம் தேஹி — அப்படின்னு சொன்ன, மூட்டையிலே அன்னமும், கலயத்தில் கொழம்போ, ரசமோ, பச்சடியோ, எல்லாத்தையும் ஊத்துவாங்க. பிறகு எல்லாத்தையும் கலந்து சாப்பிடறது எவ்வளவு ருசி!''

''ருசி இல்லாமலா இருக்கும்'' — மாடன் வாயைச் சப்பிக் கொண்டான்.

''அம்மா அந்தப் பாழாப் போன சிவமொக்காவில் வெறும் சோத்தைத் தின்னு வெறுப்பாயிருக்குது. கொஞ்சம் களி செஞ்சு போடம்மா. வயிறு பசிக்குது.''

''இந்த நேரத்திலே என்னடா?''

''ராத்திரி எதுவுமே சாப்பிடலே.''

''அந்தத் தருதலைக ஏதாவது இப்ப இங்கேயிருந்தா எழுந்து செய்யடின்னு சொல்லியிருப்பேன். யாரும் இல்லையே. அப்பண்ணய்யா, உன் பெண்டாட்டிக்கு பொண் கொழந்தை பிறந்திருக்குது. நாம கரணத்துக்கு அழைக்க வந்தாங்க. இப்ப நாலு மாசமிருக்கும். கூட்டிகிட்டு வா. எனக்கும் சமைச்சு சலிச்சிப்போச்ச'' என்று சொல்லிக் கொண்டே கங்கம்மா எழுந்தாள்.

2

**நா**ன்கு நாட்கள் தலையை நிமிர்த்திக் கொண்டு ஊருக்குள் சுற்றிய பிறகு, மனைவியையும் குழந்தையையும் கூட்டிக்

கொண்டு வருவதற்காக நுக்கேகெரெய்க்கு அப்பண்ணய்யா புறப்பட்டான். ரொட்டி, சட்னி மூட்டையைத் தோள் மேல் போட்டுக் கொண்டு திப்டூர் வரை நடந்து சென்று, ரயிலில் ஓண்டியாகக் கடூருக்குப் போய், அங்கிருந்து ஒன்பது மைல் நடந்து மாமனார் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தான். குழந்தைக்கு நான்கு மாதங்களாயிருந்தது. அவர்களே ஜெயலட்சுமி என்று பெயர் வைத்திருந்தார்கள்.

அப்பண்ணய்யா போய்ச் சேர்ந்த பொழுது மாலை நேரமாகி விட்டது. சாதம்மா இன்னமும் பிள்ளைத்தாச்சி அறையிலேயே இருந்தாள். அவன் குழந்தையை எடுத்துக் கொண்டு விளை யாட்டுக் காண்பித்தான். மனைவியுடன் பேசினான். இரவு சாப்பாடு முடிந்ததும் மாமனார் நடுக் கூடத்தில் தன்னுடைய படுக்கைக்கு அருகிலேயே, அவனுடைய படுக்கையையும் விரித் தார். அவனுடைய முகம் சிறுத்து விட்டது. அவன் படுக்கையில் உட்கார்ந்ததும் மாமனார் அவனைப் பார்த்து, ''நாமகரணத்திற் குச் சொல்லி அனுப்பினோம். அப்போ எங்கே போயிருந்தே?'' என்று கேட்டார்.

''சிவமொக்காவுக்கு...அல்ல...ஜாவகல்லுக்கு''

''பெண்டாட்டிக்குப் பிரசவ நாளுன்னு தெரியாதா? அதென்ன அப்பிடி சொல்லாம கொள்ளாம ஊரை விட்டுப் போறது?''

''கொஞ்சம் வேலையிருந்தது''

பிள்ளைத்தாச்சி அறையிலிருந்த சாதம்மா கேட்டாள் — ''அதென்ன, கொள்ளை போற வேலை? ஏன் பொய் சொல்றீங்க? உண்மையைச் சொல்லுங்க. அண்ணியைக் காலால் எட்டி உதைச்சு, பிறகு போலீஸ்காரங்க பிடிச்சுடுவாங்கன்னு பயந்துதானே திருட்டுத்தனமா ஓடிப் போனீங்க.''

அப்பண்ணய்யா பதில் சொல்லவில்லை. தலை குனிந்தவாறு அமர்ந்திருந்தான்.

''உங்கம்மா உதைக்கச் சொன்னா, நீங்க உதைச்சீங்க, இல்லையா? அவ செத்துப் போகாமெ உங்களுக்கு புத்தி வராது'' என்று மறுபடியும் சத்தம் போட்டாள்.

தாயைப் பழித்துப் பேசியதால் அப்பண்ணய்யாவுக்குக் கோபம் வந்தது. ஆனால் அந்தக் கோபத்தை அந்த நேரத்தில்

காட்டிக் கொள்ள முடியாது. அது தவிர சாதம்மா, அண்ணி யைப் போல் சாதுவான பெண் அல்ல. ஆகையால் அவன் பேசாமலிருந்தான். ''உங்கம்மாவின் சகவாசம் எனக்கு வேண் டாம். உங்க வீட்டுக்குப் பின்னுடி காலி இடம் இருக்குதில்லையா. அங்கே சின்னதாக ஒரு வீட்டைக் கட்டி தனியாயிருக்க வழி செய்யுங்க. அதுக்குப் பிறகு என்னையும் குழந்தையையும் கூட்டிட்டுப் போங்க'' என்று சாதம்மா கூச்சலிட்டாள்.

அடைத்துக் கொண்ட தன் தொண்டையைச் செருமிக் கொண்டே ''அது எப்படி முடியும்?'' என்று அப்பண்ணய்யா கேட்டான். ''அது ஏன் முடியாது? நீங்க இருக்க ஒரு சின்ன வீட்டைக் கட்டுங்க. அண்ணனும் தம்பியும் பாகப் பிரிவினை செஞ்சிடுங்க. வீட்டுக்கு வேண்டிய பாத்திரம், பண்டம் எல்லாம் என் கல்யாணத்தில் கொடுத்ததே வேண்டியளவு இருக்குது. பத்தாட்டா நான் மறுபடியும் கொண்டு வர்றேன்.''

அவன் ஒன்றும் பேசவில்லை. ''நீங்க தனியாகப் பிரிய வேணும்னு நான் சொல்லலை. நீங்க அண்ணன் தம்பி ரெண்டு பேரும் சேர்ந்தே இருங்க. நான் அக்கா கூட இருக்கேன். ஆனால் உங்கம்மா தனியாக இருக்கணும். அவளுக்கு வேணும்னா தனி யாக ஒரு குடிசை கட்டிக் கொடுங்க. பிறகு வந்து என்னையும் குழந்தையையும் கூட்டிட்டுப் போங்க.''

தாயை இழிவாகப் பேசியதால் அவனுடைய முகம் கோபத் தால் சிவந்தது. அதைக் கவனியாமல் மாமியார் பேசினார் — ''என் வீட்டுக்காரரர் சுபாவம் ரொம்பவும் நல்லது. தங்கக் கம்பி மாதிரின்னு சாதம்மா சொல்லிகிட்டேயிருக்கா. மாமியார் மருமகளுக்கு ஒத்து வர்றதில்லை. நீங்க தனியாக இருங்க. வேணும்னா சாதம்மா உங்க தாய் வீட்டிலும் முடிந்த வேலை யைச் செய்யட்டும்'' இதைக் கேட்டதும் அவன் முகம் சந்தோஷத்தால் மலர்ந்தது.

''எப்படியோ நீங்க புருஷன்-பெண்டாட்டி ஒத்துமையா சந்தோஷமா இருக்கணும். அதுதான் முக்கியம். காலையில் எழுந்தவுடன் முண்டை, கிண்டைன்னு கெட்ட வார்த்தைகள் பேசக்கூடாது. நீ வேண்டிய ஏற்பாடுகளை செஞ்சிட்டு பெண்டாட்டியைக் கூட்டிப்போ. எங்களுக்கு இருப்பது ஒரே பெண். அவளைத் தவிர வேறு பையனோ பெண்ணோ கிடையாது.'' என்றார் மாமனார் கடைசியாக.

எந்தப் பணம் என்பது கங்கம்மாவுக்கு இரண்டு நிமிடங்கள் நினைவுக்கு வரவில்லை. சிவே கவுடனே சொன்னான்: ''அசல் இரண்டாயிரம் ரூபாய். ஏழு வருஷ வட்டி ஆயிரத்து எண்ணூத்து எண்பது ரூபாய். இத்தனை வருஷம் வட்டியும் கொடுக்கலை. அதுக்கும் வட்டி கணக்குப் போட்டா மேற்கொண்டு அறுநூறு ரூபாய். அதாவது நாலாயிரத்து அறுநூத்தி எண்பது ஆயிருச்சு. இனி ஒரு மாதத்திலே பணத்தைத் திருப்பி கொடுத்திடுங்க. வாய்தா முடியப் போகுது, இல்லாட்டா நான் கோர்ட்டுக்குப் போறேன்''.

''என்னவோ, பையன் தெரியாம செஞ்சிட்டதுக்காக இவ்வளவு பணம் எங்கிருந்து கொடுக்கறது சிவே கவுடா?''

''பையன் செஞ்சுட்டானேன்னு நான் பணம் கொடுத்தது பொய்யா? என்ன பேசறீங்க நீங்க? சென்னையா, கணக்குப் பிள்ளை வேலை செய்யறே இல்லையா? நீயே சொல்லு. நான் பணத்தை எடுத்துக் கொடுத்தது பொய்யா?''

சென்னிகராயர் பேசாமல் இருந்தார். ''இன்னும் எட்டு நாள்லே பணத்தை கொடுக்காட்டா, நான் கேஸ் போடுவேன். எங்கிட்டே வேறு பேச்சே கிடையாது. உம்......'' என்று சிவே கவுடன் சிவலிங்கே கவுடனுடன் புறப்பட்டுப் போனான்.

''இப்ப என்ன செய்யறது, சென்னையா?'' என்று கங்கம்மா வினவினாள்.

''என்க்கென்ன தெரியும். அம்மா?''

''நீ கணக்குப் பிள்ளை. உனக்குத் தெரிஞ்சிருக்க வேண்டாமா?'' அப்பண்ணய்யா பேசினான்: ''அவன் என்ன செய்வான்னு பார்க்கலாம். கொடுக்க முடியாதுன்னு சொல்லு''.

''சொன்னா என்ன?''

''உம். சரிம்மா''

''அம்மா எனக்குப் பசிக்குது. மொதல்ல சாப்பாடு போடு. அவன் என்ன செய்யறான்னு அப்புறம் பார்க்கலாம்'' என்று அப்பண்ணய்யா சொன்னான். கங்கம்மா உள்ளே போனாள்.

இந்த விஷயமாக யாரிடம் யோசனை கேட்கலாம் என்று கங்கம்மா யோசனை செய்து கொண்டிருந்தாள். உடனே அவளுக்கு ரேவண்ண செட்டியின் நினைவு வந்தது. ஊரிலிருந்த

பலபேர் ரேவண்ண செட்டியை வக்கீல் என்றே சொல்லி வந் தார்கள். அவன் அடிக்கடி திப்டூருக்குப் போய் வந்து கொண் டிருந்தான். பெரிய வக்கீலுக்குக் கூட தெரியாத ''பாயிண்டு கள்'' பல அவனுக்குத் தெரியுமாம். கங்கம்மா நேராக அவ னுடைய வீட்டிற்குப் போனாள். ''அவர் இல்லை. கோடி ஹள் ளிக்குப் போயிருக்கார்'' என்று அவன் மனைவி சர்வக்கா சொன்னாள்.

''என்ன விஷயம்?''

''உங்களுக்குத் தெரியாதா? சீட்டு ஆட. எதுக்கு வந் தீங்க? உட்காருங்க. பலகை போடறேன்.''

கங்கம்மா பலகையில் உட்கார்ந்த பிறகு, சிவே கவுடன் வந்திருந்த விஷயத்தையும், முன்பு நிலத்தை அவனிடம் அட மானம் வைத்திருந்ததைப் பற்றியும் சொன்னாள். நிலத்தை அடமானம் வைத்திருந்த விஷயம் ஊரில் இருந்த எல்லோருக்கும் தெரியும். ''அம்மா. நீங்க பணத்தை அவனுக்கு முன்னாடியே கொடுத்திருக்க வேண்டாமா? இத்தினி நாள் ஏன் விட்டு வைச்சீங்க?'' என்று கேட்டாள் அவள். ''அது என்ன உண்ட பணமா? உடுத்த பணமா? அது எப்படிக் கொடுக்க முடியும்?'' என்றுசொன்னாள் கங்கம்மா.

இந்தப் பேச்சுக்குப் பதில் சொல்லக் கூடிய அளவு சர்வக்கா வுக்கு விவரம் இருக்கவில்லை. அவளுக்கு வயது சுமாராக முப்பது. ஐந்து குழந்தைகள். அவைகளில் மூன்று இறந்துவிட்டன. அப்பண்ணய்யா கரும்புத் தோட்டத்திற்கு நெருப்பு வைத்த போது, அவளுடைய கணவனும் முளைக் கரும்பு நட்டமாகி விட்டது என்று சொல்லி, கணக்குப் போட்டு இருபத்தைந்து ரூபாய் வசூல் செய்தது அவளுக்குத் தெரியும். முளைக் கரும்பை வளர்க்கப் போவதில்லை என்று முதலில் சொல்லி வந்த அவன், பிறகு அதனுடைய பெயரைச் சொல்லிப் பணம் வாங்கிக் கொண்டது அநியாயம் என்று அவள் சொல்லி, தாடையின் மேல் அடி வாங்கிக் கொண்டாள்.

அவர்கள் எதையோ பற்றிப் பேசி, பொழுதைக் கழித்துக் கொண்டிருந்த போது, ரேவண்ண செட்டி வந்தான். கொக்கைப் போல வெண்மையான வேஷ்டி, காலில் ரப்பர் செருப்பு, மடிப்புக் கலையாத சட்டை, கழுத்தில் தங்கச் சங்கிலி, கை விரல் களில் சிவப்பாகப் பிரகாசிக்கும் மூன்று மோதிரங்கள், முகத்தில் எடுப்பாகத் தோன்றும்படி வெட்டி விட்ட மீசை — இந்தத்

தோற்றத்துடன் கூடிய ரேவண்ண செட்டியைப் பார்த்தவுடன் சிவே கவுடனுடைய பண விஷயத்தை ஜெயித்துவிட்டது போல் கங்கம்மாவுக்கு நம்பிக்கை பிறந்தது. கங்கம்மாவின் பேச்சைக் கேட்ட பிறகு ரேவண்ண செட்டி சொன்னான்: ''யார் வீட்டுப் பணமுன்னு நெனைச்சுகிட்டான், அந்தத் தறுதலை? கோர்ட்டுக்குப் போகிறானா? போகச் சொல்லுங்க. போய் என்ன செய்ய முடியுமோ அதைச் செய்யட்டும். திப்டூரிலே எனக்குப் பெரிய வக்கீல்களைத் தெரியும்.''

கங்கம்மாவுக்குத் தைரியம் வந்தது. ''நான் போய் அப்படியே சொல்லட்டுமா, ரேவண்ணா?''

''போயிட்டு வாங்கம்மா. நீங்க பயப்பட வேண்டாம் மேல் கொண்டு எல்லாத்தையும் நான் பாத்துக்கிறேன்.''

''என் கூட நீயும் வா''

''நான் வந்தால் நல்லாயிருக்காது. உள்ளிருந்தபடியே நான் வேலை செய்யனும். உங்களுக்கென்ன பயம்? கங்கம்மாவின் தைரியம் இந்த வட்டாரத்து அறுபத்தி நாலு கிராமத்திலே எந்த ஆம்பிளைக்கும் கிடையாதுன்னு ஜனங்க சொல்றாங்க. உங்களுக்கு ஏன் பயம்?''

இந்தப் பேச்சுக்கு பலனிருந்தது. ''நான் பயந்தாங்கொள்ளி முண்டையல்ல'' என்று சொல்லிக் கொண்டே அவள் எழுந்து நேரே சிவே கவுடனின் வீட்டின் முன் சென்று நின்று கொண்டு உரக்கச் சொன்னாள். ''என் வீட்டுக்காரர் கணக்குப்பிள்ளையாக இருந்தப்போ நாய்க்குட்டி போல் இருந்தியே, கவுடா! இப்ப அநியாயமாய் அபராதம் போட வைச்சு கோர்ட்டுக்குப் போறேன்னு மிரட்டறியா? கோர்ட்டுக்கென்ன, திவான்கிட்டே வேணுமானாலும் போ. நானும் வக்கீலை வைக்கிறேன். என்கிட்டே நீ ஒரு தம்படி கூடப் பிடுங்க முடியாது. நான் பொம்பளை. பயந்துடமாட்டேன்.'' உள்ளேயிருந்து வந்த சிவே கவுடன் கேட்டான்: ''அதென்னம்மா, ரெண்டு மணி நேரத்துக்கு முன்னாடி தானே நியாயமா பேசினீங்க? இப்ப இப்படிச் சொல்றீங்களே.''

''சொன்னா, என்ன? எனக்கும் கஷ்ட காலத்தில் ஒத்தாசை செய்ய ஆளுங்க இருக்காங்க. நான் பரதேசியல்ல'' — என்று சொல்லிவிட்டு கங்கம்மா நேரே தன் வீட்டுக்குப் போனாள்.

அவள் வந்த பொழுது, ரேவண்ண செட்டியும் வீட்டிற்கு வந்து உட்கார்ந்திருந்தான். அவளுடைய முகத்தைப் பார்த்தே

அவள் சிவே கவுடனிடம் என்ன பேசியிருப்பாள் என்று அவன் புரிந்து கொண்டான். அவன் தானுகவே பேசத் தொடங்கினுன்: ''அம்மா. நீங்களும், ரெண்டு பையன்களும் வண்டி பூட்டிகிட்டு நாலஞ்சு முறை திப்டூருக்குப் போய் வர வேண்டியிருக்கும். நீங்களே நேரடியாக 'இது அநியாயம்' என்று ஜட்ஜிடம் சொன்னு 'கேஸ்' உங்க பக்கம் ஜெயித்து விடும். மொத்தமாக ஒரு ஐந்நூறு ரூபா செலவு செஞ்சா போறும்.''

''திப்டூருக்குப் போனு, அங்கே சாப்பாடு பலகாரத்துக்கு என்ன செய்யறது?'' — அப்பண்ணய்யா கேட்டான்.

''ஓட்டல் இல்லையா?''

ஓட்டல் என்று சொன்னவுடன் அப்பண்ணய்யாவின் வாயில் நீர் ஊறியது. உருளைக் கிழங்கு, வெங்காய சாம்பார், வறுகடலை போட்ட மணக்கும் கெட்டி சட்னி, தயிர், மசாலா தோசை ஆகியவைகள் நினைவுக்கு வந்தன. ''ஊம், திப்டூருக்குப் போய் ''கேஸ்'' போடலாம்'' என்று முடிவாகக் கூறினுன்.

''என்ன சொல்றே, கணக்குப்பிள்ளை?'' என்று தாய் சென்னிகராயனிடம் கேட்டாள். ''யாராவது புத்திசாலியிடம் கேட்க வேணும்.'' என்று அவர் சொன்னுர்.

சிவே கவுடன் வழக்குப் போட்டு விட்டான். இவர்கள் மூவரும் ரேவண்ண செட்டியுடன் திப்டூருக்குப் போய், அவன் சொன்ன படியே மகாந்தையாவை வக்கீலாக ஏற்பாடு செய்தார்கள். அவர்களுடைய கட்சியை ரேவண்ண செட்டியே எடுத்துச் சொன்னுன். ''ஊருக்குள் சிலபேர் வேணும்னே கரும்புத் தோட்டத்துக்கு நெருப்பு வைச்சு விவரமில்லாத இவங்கமேல் பழியைப் போட்டு இவங்களிடமிருந்து பணம் பறிச்சாங்க. இதில் கையொப்பம் போட்டவங்க மைனர் பசங்க. அடமானம் வெச்சது பூர்வீக சொத்து. பத்திரம் எழுதி, சாட்சிக் கையொப்பம் போட்டவன், பணம் கொடுத்து அடமானம் வாங்கியவனின் சொந்த மைத்துனன். இவ்வளவு இருக்கும் போது கேஸ் ஜெயிக்காதா சாமி?''

''ஜெயிக்காமலிருக்குமா?'' என்ருர் வக்கீல். முதல் நாள் செலவுக்காக வீட்டிலிந்த தங்க நகையை விற்று இருநூறு ரூபாய் திரட்டினுர்கள். எல்லோர் முன்னிலையிலும் பணத்தைக் கொடுத்தால் வக்கீல் பணத்தைத் தொட மாட்டார் என்று கூறி, ரேவண்ணசெட்டி நூற்று எழுபத்தைந்து ரூபாய் பெற்றுக்

கொண்டு தான் மட்டும் தனியாக வக்கீல் வீட்டிற்குச் சென்று கணக்கை முடித்து விட்டு வந்தான். அப்பண்ணய்யா ஓட்டலில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு, அத்துடன் மூன்று மசாலா தோசையும் சாப்பிட்டான். சென்னிகராயர் ஓட்டலில் நன்ருகச் சாப்பிட்டு ருசி கண்டவர். வருடத்திற்கு நான்கு முறையாவது தியாவரசய்யாவுடன் திப்டூருக்கு வந்து போவார். அவர் காரா சேவு, ரவாலாடு, மைசூர் பாகுகளை மட்டும் சாப்பிட்டார். கங்கம்மா ஊரிலிருந்து கொண்டு வந்திருந்த பொரிமாவுடன், நான்கு வாழைப்பழங்களைச் சாப்பிட்டுத் தன் ஆகாரத்தை முடித்துக் கொண்டாள்.

4

நஞ்சம்மா ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். நாம கரணத்திற்கு வந்த சென்னிகராயர், தாய் கூறி அனுப்பியபடி தந்தையின் பெயரான ராமண்ணு என்னும் பெயரை வைத்தார். அந்தத் தடவை அவர் மாமனுர் வீட்டில் அதிக நாட்கள் தங்க வில்லை. மைத்துனனைக் கண்டால் அவருக்கு ஒரு விதமான பயம். அதைத்தவிர அவனுடைய மனைவி கமலா 'சிடுசிடு' வென்று சீறிக் கொண்டிருந்தாள்.

குழந்தை பிறந்து மூன்று மாதம் கழித்து ஊருக்கு திரும்பிய நஞ்சம்மா, தான் வந்த மறுநாள் சிவே கவுடனுடைய வழக்கைப் பற்றிக் கேள்விப்பட்டாள். சிவே கவுடனிடம் அவர்கள் கடன் பட்டிருப்பது அவளுக்கு முன்பே தெரிந்திருந்தது. நிலத்தை அட மானம் வைத்து இரண்டாயிரம் ரூபாய் பெற்று கரும்புத் தோட் டத்திற்கு நெருப்பு வைத்த குற்றத்திற்காக ஊர் மொத்திற்கும் சேர்த்து அந்தப் பணத்தை அபராதமாகக் கொடுத்தார்கள் என்று அவள் அந்த வீட்டிற்கு மருமகளாக வந்த ஒரு மாதத்தில் குளக் கரையில் பாத்திரம் தேய்க்கும் போது அவளுடைய காதில் விழுந்தது. ஆனுல் அதைப் பற்றி அவளாகவே வலியச் சென்று வீட்டில் எவரிடமும் விசாரிக்கவில்லை. ஒரு நாள் கணவனிடம் பேச்சு வாக்கில் கேட்ட பொழுது ''உனக்கு எதுக்கு இந்த எஜமா னியம்மா வேலை, பேசாமல் இரு'' என்று பதில் வந்தது.

தான் கணக்குப்பிள்ளையின் கணக்குகளை எல்லாம் எழுத ஆரம் பித்த பிறகு, அடமானக் கடனின் விளைவு என்னவாகும் என்ற யோசனை அவளுக்கு வந்தது. தானே ஒரு நாள் இந்தப் பேச்சை ஆரம்பிக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்த பொழுது அப்பண்ணய்யா அவளைக் காலால் எட்டி உதைத்து வீட்டை விட்டு ஓடிப் போனுன். ''இந்த சனியனுல் தான் என் கண்மணி வீட்டை

விட்டு ஓடிப்போனுன்'' என்று மாமியார் அவளைத் திட்டிக்கொண்டிருந்தாள். அந்த அடமான விஷயத்தைத்தான் பேச ஆரம்பித்தால் மறுபடியும் திட்டுவார்கள் என்று பயந்து பேசாமலிருந்தாள். குழந்தைப் பேற்றுக்காக ஊருக்குப் போய்த்திரும்புவதற்குள் விஷயம் கோர்ட்டுக்குப் போய் விட்டது. ஒரு நாள் கணவனிடம் ஜாடையாக அதைப் பற்றிக் கேட்டபோது ''ஒரு தம்படியும் தர மாட்டேன். கோர்ட்டில் அவன்கிட்டேயிருந்தே பணத்தைக் கறந்து விடுவேன்'' என்று வீரமாகச் சொன்னுர் சென்னிகராயர்.

''கேஸ் ஜெயிச்சுடும்னு உங்களுக்கு யார் சொன்னது?''

''ரேவண்ண செட்டி''

''ரேவண்ண செட்டியின் பேச்சை எப்படி நம்பறது? அவர் எப்படிப் பட்டவர்ங்கிறது உங்களுக்குத் தெரியாதா?''

''கழுதைமுண்டை அவரைத் திட்டறியா? உங்களை இவள் இப்படித் திட்டிஞள்னு நாளைக்கு அவர் கிட்டே சொல்றேன் பாரு''.

கணவன் அறிவற்றவன் என்பது அவளுக்குத் தெரியும். ஆனுல் இவ்வளவு தூரம் அறிவற்றவன் என்பதை உணர்ந்து கொண்ட அவளுடைய கண்களில் நீர் பெருகியது. அந்தப் பேச்சை அப்படியே நிறுத்தி விட்டாள். ஆனுல் அந்த எண்ணம் மனதை அரித்துக் கொண்டிருந்தது. ரேவண்ண செட்டி சீட்டாடுகிருன். குடிக்கிருன். அவன் தெருவில் நடக்கும் போது பெண்களைப் பார்க்கும் பார்வை சரியில்லை. அவனுடைய வீட்டில் மனைவி சந்தோஷமாக இல்லை என்பதெல்லாம் அவளுக்குத் தெரியும். ஊரில் எல்லோருக்கும் இந்த விஷயம் தெரியும். மறு நாள் பாத்திரம் தேய்ப்பதற்காக நஞ்சம்மா குளத்திற்குச் சென்ற போது ரேவண்ண செட்டியின் மூத்த மகள் ருத்ராணி அவளுக்கருகே படியில் இறங்கிக் கொண்டிருந்தாள். ''ருத்ராணி! உன் அம்மா வீட்டில் இருக்காங்களா?'' என்று கேட்டாள்.

''உம். இருக்காங்க''

''அப்பா இருக்காங்களா?''

''கோடி ஹள்ளிக்குப் போயிருக்காங்க'' - அது சீட்டாடத்தான் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ''அப்படின்னு நீ வீட்டுக்குப் போய் நான் கூப்பிட்டேன்னு சொல்லி ஒரே

நடையில் போய் அம்மாவைக் கூட்டிகிட்டு வர்றியா? உன் பாத்திரம் இங்கேயே இருக்கட்டும். நான் பார்த்துக்கிறேன். நீ வீட்டிலேயே இருந்துகிட்டு அம்மாவை அனுப்பு.''

பத்து நிமிடங்களில் சர்வக்கா வந்தாள். சில நிமிடங்கள் குசலம் விசாரித்த பின்னர் நஞ்சம்மா சுற்றுமுற்றும் ஒருமுறை பார்த்துவிட்டு, யாருமில்லை என்று உறுதி செய்து கொண்ட பிறகு கேட்டாள்: ''பாருங்க, ஒரு விஷயம் நான் ரகசியமாய்க் கேட்கறேன், நீங்க சொல்லணும்.''

''என்ன சொல்லுங்க''

''உங்க வீட்டுக்காரர் எங்க வீட்டுக் கேஸை நடத்துறேன்னு, முன்னுலெ நின்னு நடத்துருரே, அது உண்மையாகவே ஜெயிக்குமா?''

''ஆம்பிளைங்க சங்கதி நமக்கு எப்படித் தெரியும்? நமக்கு ஏன் அந்தப் பேச்சு? விட்டுடுங்க.''

''அப்படிச் சொல்லாதீங்க. உங்களுக்குத் தெரிஞ்சா தயவு செய்து சொல்லுங்க.''

சர்வக்கா ஒரு முறை சுற்றிலும் பார்த்துவிட்டுப் பிறகு சொன்னுள்: ''என் வீட்டுக்காரருக்குத் தெரிஞ்சா என்னைக் கொன்னு போடுவார். யார்கிட்டேயும் சொல்ல மாட்டேன்னு தண்ணியைத் தொட்டு சத்தியம் செய்யணும்.''

''கங்கைத் தாய் மேல் ஆணையா யார்கிட்டேயும் சொல்ல மாட்டேன்'' என்று நஞ்சம்மா குளத்து நீரைக் கையில் ஏந்திய வாறு சொன்னுள்.

''வளகேரள்ளி நிங்கப்பன் வீட்டு அண்ணன் — தம்பி சண்டையிலே என் வீட்டுக்காரர் வக்கீல் வெச்சுக் கேஸ் நடத்தினுரே! ஜெயிச்சுத் தர்றேன்னு சொல்லி பணத்தைச் சாப்பிட்டுட்டாராம். அவங்க தோத்துப் போனுங்களாம். ஒரு நாள் எங்க வீட்டு முன்னுடி வந்து கண்டபடி திட்டி குழந்தைகள் பாழாப் போகட்டும்னு மண்ணை வாரித் தூத்திட்டுப் போனுங்க. இவர் சீட்டாடப் பணம் பறிக்க இப்படியெல்லாம் வக்கீல் ஏற்பாடு செய்யருரு.''

அவள் நினைத்தபடியே சர்வக்கா சொன்னுள். இந்தக் கோர்ட் விவகாரத்திலிருந்து விடுபட்டு, இருக்கக் கூடிய

நிலத்தை எப்படிக் காப்பாற்றிக் கொள்வது என்பதைப் பற்றி யோசித்த வண்ணம் அவள் பேசாமல் நின்றாள். சர்வக்கா பெரு மூச்சு விட்டுக் கொண்டே, ''நஞ்சம்மா, உங்க தலையெழுத்தும் என் தலையெழுத்தும் ஒரே மாதிரி. என் வீட்டுக்காரருக்கு வீட்டைக் கெடுக்கிற புத்தி. உங்க வீட்டுக்காரருக்கு புத்தியே இல்லே. யாருக்கும் நிம்மதி கிடையாது. நான் போறேன். நான் சொன்னதை மட்டும் யார்கிட்டேயும் சொல்லாதீங்க. கங்கையம்மா மேலே சத்தியம் செஞ்சிருக்கீங்க'' என்றவாறு தன் பாத்திரங்களில் நீரை நிரப்பிக் கொண்டு வீட்டிற்குப் போனாள்.

நஞ்சம்மா அன்றிரவு முழுதும் தூங்கவில்லை. காலையில் எழுந்து ஒரு காகிதத்தில் — ''இங்கு நிலத்தையெல்லாம் அடமானம் வைத்திருந்தார்கள். இப்பொழுது கோர்ட்டில் கேஸ் போட்டிருக்கிறார்கள். நீங்கள் உடனே கண்டிப்பாக இவ்விடம் வந்துவிட்டுப் போகவும்'' என்று எழுதி, அந்தக் காகிதத்தை மடியில் வைத்துக் கொண்டு, ஒரு பாத்திரத்தை எடுத்துக் கொண்டு குளத்தை நோக்கிச் சென்றாள்.

குளக்கரையில் உள்ள யார் மூலமாவது அதைத் தாய் வீட்டுக்குக் கொடுத்தனுப்பலாம் என்று மனதில் நினைத்துக் கொண்டிருந்தாள். ஆனால் யாரும் அங்கிருக்கவில்லை. அந்த நேரம் கோவிலைச் சேர்ந்த மாதேவய்யா ஒரு கூடையில் அரளிப் பூவையும், வில்வத் தழைகளையும் எடுத்துக் கொண்டு அவற்றை குளத்து நீரில் அலம்ப, நஞ்சம்மா இருந்த இடத்தருகே வந்தார். மாதேவய்யாவிடம் நஞ்சம்மாவுக்கு மிகுந்த மரியாதையும் பக்தியும் இருந்தன. அவர் நஞ்சம்மாவின் வீட்டிற்கு அப் பொழுது அடிக்கடி வராமலிருந்தாலும், அவள் மீது அவருக்கு ஒருவிதமான தனி மதிப்பு இருந்தது. அவரை நஞ்சம்மா, ''ஐயா, இங்கே கொஞ்சம் வாங்க'' என்று அழைத்தாள். ஒரு முறை சுற்று முற்றும் பார்த்துவிட்டுத் தன்னிடமிருந்த காகிதத் துண்டை அவர் அருகே எறிந்தாள். ''இதை நீங்க படிச்சா உங்களுக்கே தெரியும். எப்பிடியாவது இதை என் அண்ணு கிட்டே கொடுத்துடுங்க. யாருக்கும் தெரியக் கூடாது'' என்று சொல்லி, ஏதும் அறியாதவள் போல் தலை குனிந்து கொண்டு பாத்திரம் துலக்க ஆரம்பித்தாள்.

மாதேவய்யா காகிதத் துண்டை எடுத்து, தனது காவிச் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டு ''ஆகட்டும் அம்மா'' என்று சொல்லி பூக்களையும் தழைகளையும் நீரில் நனைத்து

எடுத்துக் கொண்டு புறப்பட்டார். அன்று அவர் சிவகெரெய்க் கருகில் ஒன்றிரண்டு கிராமங்களுக்குச் சென்றிருந்தாராம்.

மறு நாள் மத்தியானம் கல்லேசன் கால் நடையாகவே தங்கையின் வீட்டிற்கு வந்தான். அண்ணனிடம் எல்லாவற்றை யும் பேச ஒரு வசதியான இடம் இருக்கவில்லை. அப்படி எங்கே யாவது சென்று பேசுவதை விட எல்லோர் முன்னிலையிலும் பேசுவதுதான் சரி என்று தீர்மானித்து நஞ்சம்மா பேச்சை ஆரம்பித்தாள். நடந்த எல்லாவற்றையும் கூறி, மேற்கொண்டு தாங்கள் என்ன செய்ய வேண்டுமென்று அவனிடம் ஆலோசனை கேட்டாள்.

யாரிடமோ சொல்லியனுப்பி அவள் தன் அண்ணனை வர வழைத்திருக்கிறாள் என்று கங்கம்மா ஊகித்தாள். ஆனால் போலீஸ் வேலையில் இருந்த இந்த சம்பந்தியின் மகனுக்கெதிரில் எதுவும் பேசக்கூடாது என்று அவள் பேசாமலிருந்தாள். அட மானப் பத்திரத்தில் என்ன எழுதியிருக்கிறார்கள் என்று கல்லேச னுக்குத் தெரியவில்லை. கணக்குப் பிள்ளையான தன் மைத்துனன் சென்னிகராயரிடம் கேட்டபொழுது ''அதென்னமோ எனக்குத் தெரியாது. சிவலிங்கன் எழுதினான்'' என்று கூறினார்.

''எதுவும் தெரியாமே நீங்க கோர்ட்டுக்கு எப்படிப் போனீங்க?'' என்று அவன் கேட்டான்.

''ரேவண்ண செட்டியாருக்கும் வக்கீலுக்கும் தெரியும். அவங்க என்ன பொய் சொல்றாங்களா? கேஸ் ஜெயிக்கத்தான் போகுது'' என்று உறுதியாக சென்னிகராயர் கூறினார்.

நஞ்சம்மா தைரியமாக ரேவண்ண செட்டியின் நடத்தை யைப் பற்றிக் கூறினாள். ''அவரை நம்பினா குடும்பம் கெட்டுப் போயிடும். இப்ப நமக்குத் தெரிஞ்சபடி புத்திசாலித்தனமாக நடக்கணும் மத்தவங்க புத்தியும் பேச்சும் நமக்கு வேண்டாம்'' ''வாங்க, போவோம். சிவே கவுடருடைய வீட்டுக்குப் போய் பத்திரத்தில் என்ன எழுதியிருக்குதுன்னு கேட்போம்'' — கல்லேசன் சென்னிகராயரை அழைத்தான்.

ஆனால் அவனுடைய வீட்டிற்குப் போக சென்னிகராயருக் குப் பயம். ''இப்ப எதுக்கப்பா இங்கே என் கிட்டே வந்திருக்கே? அதிலே என்ன இருந்தாலும் கோர்ட்டுலே பாத்துக்கோ, போ'' என்று அவன் சொல்லிவிட்டால் என்ன செய்வது என்ற பயம் உள்ளே அரித்துக் கொண்டிருந்தது. ''அந்தத் தறுதலையின்

வீட்டுக்கு ஏன் போகணும்? நம்ம கேஸ் ஜெயிச்சிடும். எனக்கு அது கூடத் தெரியாதா? என்று பதில் சொன்ஞர்.

கல்லேசன் மட்டும் தனியாக சிவேகவுடனுடைய வீட்டிற்குப் போஞன். எதிர்பார்த்தபடியே சிவேகவுடன் பதில் சொல்லி யனுப்பிஞன். திம்மாபுரம் தியாவரசய்யாவைச் சென்று பார்க்கும் படி நஞ்சம்மா கூறிஞள்.

அவன் அந்த ஊருக்கு வழி விசாரித்துக் கொண்டு, காலில் செருப்பணிந்து கொண்டு புறப்பட்டான். அவன் வீட்டிலிருந்து புறப்பட்டுப் போன பத்து நிமிடம் கழித்து கங்கம்மா மருமகளிடம் சீறிஞள்: ''எவன்கிட்டே சொல்லி வரச் சொன்னேடி உன் கள்ளப் புருஷனே? இன்னிக்கு ராத்திரி அவன்கிட்டதான் படுத்துக்கப் போறியா?'' இந்தப் பேச்சைக் கேட்ட நஞ்சம்மாவுக்கு என்றுமில்லாத அளவுக்குக் கோபமும், தைரியமும் வந்து விட்டன. ''உங்க நாக்கை அடக்கிப் பேசுங்க. சின்ன வயசுலே ஒழுங்கான புத்தியிருந்திருந்தா நீங்க ஏன் இப்படி இருக்கணும்? உங்க பிள்ளேகளும் இப்படி ஆயிருக்க மாட்டாங்க.'' என்று நஞ்சம்மா கோபத்துடன் படபடத்தாள்.

''கேட்டியா சென்னேய்யா? எழுந்து ஒரு உதை விடுடா அந்தக் கழுதையின் இடுப்பிலே.'' எழுந்து பெண்டாட்டியை உதைக்கத் தைரியமில்லாத காரணத்திலோ அல்லது சோம்பேறித் தனத்திஞலோ என்னவோ, சென்னிகராயர் எழுந்திருக்கவில்லே. இரண்டாவது மகனிடம் கங்கம்மா சொல்லவேயில்லே. சொல்லியிருந்தாலும், அவன் மற்ருெரு தடவை அப்படிச் செய்யுமளவுக்குத் துணிந்திருக்க மாட்டான்.

கல்லேசன் மறுநாள் வரவில்லே. இரண்டாம் நாள் வந்தான். அவனுடன் தியாவரசய்யாவும் இருந்தார். முதல் நாள் தியாவரசய்யாவின் வீட்டில் தங்கி, மறுநாள் அவரை அழைத்துக் கொண்டு திப்டூருக்குப் போய் சிவேகவுடரின் வக்கீலேயும் பார்த்துப் பேசி வந்திருந்தான். எல்லா நிலமும் அடமானத்தில் இருப்பதாகவும், அசல், வட்டி, கோர்ட்டுச் செலவு கொடுத்தால் வழக்கை வாபஸ் பெற்றுக் கொள்ளுமாறு தன் கட்சிக்காரரிடம் கூறுவதாகவும் அவர் சொல்லி அனுப்பிஞர்.

கங்கம்மா, சென்னிகராயர், அப்பண்ணய்யா ஆகிய மூவரையும் அமரச் செய்து கல்லேசன் சொன்ஞன் ''அசல் பணத்தை யாரும் விடமாட்டாங்க. கோர்ட்டுக்காக செலவு செய்ததையும் விடமாட்டாங்க. வட்டியிலே கொஞ்சம் தள்ளுபடி செய்யின்னு

வேணும்னு அவன்கிட்டே சொல்லிப் பார்க்கலாம். மொத்தமா ஒரு ஐயாயிரம் ரூபாயிலே முடிச்சிடலாம்னு ஏதாவது பெரிய வயலை வித்தோ இல்லாட்டி அவனுக்கே கிரயப் பத்திரம் எழுதிக் கொடுத்தோ மீதமுள்ள நிலத்தையாவது காப்பாத்திக்கலாம். அவன் வீட்டுக்குப் போய்ப் பேசலாம். கிளம்புங்க.''

கங்கம்மா இந்த ஆலோசனையை ஒப்புக் கொள்ளவில்லை. ஆனால் கல்லேசனும் இலேசில் விடவில்லை. அத்துடன் தியாவரசய்யா சென்னிகராயருக்குப் புத்திமதி கூறினார். கடைசியில் தாய், இரண்டு ஆண் பிள்ளைகள், கல்லேசன், தியாவரசய்யா ஆகிய ஐந்து பேரும் சிவேகவுடனுடைய வீட்டிற்குப் போனார்கள். அவர்களாகவே வலியச் சென்றதால் சிவேகவுடன் ஓங்கிப் பேசினான். ஆனால் கல்லேசனும், தியாவரசய்யாவும் பொறுமையுடன் அவனுடைய ஒவ்வொரு பேச்சுக்கும் தக்க சமாதானம் சொல்லி அவனை ஒரு முடிவுக்கு ஒப்புக் கொள்ளச் செய்தார்கள். சிவேகவுடன் கங்கம்மா இருந்த பக்கம் திரும்பி, பழி தீர்த்துக் கொள்ளும் குரலில் சொன்னான்: ''என்னம்மா, என்னை நாய்க் குட்டின்னு சொல்லி, உன்கிட்டேயிருந்து ஒரு தம்படி கூட பிடுங்க முடியாதுன்னு சொன்னே. இப்ப என் வீட்டுப் படியை மிதிச்சு வந்தியே, வெட்கமாயில்லியா?''

''அம்மா, நீங்க இப்ப கொஞ்சம் பொறுமையா இருங்க'' என்று தியாவரசய்யா சொன்னார். அதற்குள் அவள் கோபாவேசமாக ''ஏண்டா, கவுடா! என்னை சாதாரணப் பொம்பளைன்னு நினைச்சுகிட்டயா? உன் யோக்கிதை என்ன? நீ என்ன? நாய்ப் பயலே'' என்று சீறினாள்.

''அப்படின்னா நீ என்கிட்டே என்ன செய்வே பார்க்கலாம்.''

''நீ வழிக்கு வராட்டா கோர்ட்டு மூலம்செஞ்சு காட்டறேன். 'நீ'ன்னு மரியாதையில்லாம என்னைப் பேசறியா? பாவிப் பயலே! டேய்! அப்பண்ணய்யா, சென்னையா எழுந்திருங்கடா. வீட்டுக்குப் போவோம். ஏண்டா எழுந்திருக்கலே. அப்பனுக்குப் பொறந்த பிள்ளைங்க இல்லையா நீங்க?''

அப்பண்ணய்யா உடனே எழுந்து தாய்க்கருகில் நின்றான். கங்கம்மா, சென்னைய்யாவைப் பார்த்து ''டேய் சென்னைய்யா, நீ இங்கேயே உட்கார்ந்திருக்கப் போறியா? நீ அப்பனுக்குப் பொறந்தவன் இல்லையா? எழுந்திருடா மேலே.'' என்று உத்தரவிட்டாள்.

கணக்குப்பிள்ளை சென்னிகராயருடைய கௌரவம் பாதிக்கப் பட்டது. தான் அப்பனுக்குத்தான் பிறந்தவன் என்பதை மைத் துனன் கல்லேசன், தியாவரசய்யா, எதிர்க்கட்சி சிவேகவுடன், உள்ளே கதவோரமாக நின்றிருந்த அவனது மனைவி, வெளியே கதவுக்கு அருகிலிருந்த வேலையாள் ஆகிய அத்தனை பேருக்கும் முன்னால் உறுதிப்படுத்துவதற்காக மேலே எழுந்து, தாய் தம்பி யுடன் வீட்டுக்குப் புறப்பட்டுப் போனார். கல்லேசனும், தியாவ ரசய்யாவும் மேற்கொண்டு பேச முயற்சி செய்த போதிலும், சிவேகவுடன் அதற்கு வாய்ப்பளிக்கவில்லை. ''அந்த அம்மாவுக்கே இவ்வளவு திமிர் இருக்கும் போது எனக்கென்ன? அவங்களைத் தெருவிலே பிச்சை எடுக்கும்படி செய்யாட்டா நானும் அப்பனுக் குப் பொறந்தவனில்லே. கோர்ட்டிலே கேஸ் ஜெயிக்காட்டா என்னை ''தூத்தேறி''ன்னு நெஞ்சிலே எட்டி உதைச்சு செருப் பாலே அடியுங்க. பெரிய கோர்ட் வரை பாக்கறேன். மகாராஜா வரை வேணுமானாலும் போய்ப் பார்க்கலாம்'' என்று அவன் தன் குரள்வளையை வலக்கையால் பிடித்துக் கொண்டே உரக்கக் கத்தினான். ''அந்த வளையல் வியாபாரி ரேவண்ண செட்டி பின்னாலே சுத்தராங்களே, நான் எப்படிப் பட்ட கவுடன்னு அவங்களுக்குக் காட்டறேன்.''

இனிமேல் சமரசம் பேசிப் பயனில்லை என்று கல்லேசனும், தியாவரசய்யாவும் வீட்டுக்குப் புறப்பட்டுப் போனார்கள். கங்கம்மா திண்ணையில் அமர்ந்து தனது வீரப் பிரதாபத்தைச் சொல்லிக் கொண்டிருந்தாள். கணக்குப்பிள்ளை மிகவும் நிதான மாக வெற்றிலை, புகையிலை போட்டுக் குதப்பிக் கொண்டிருந்தார். தாய் மேல் அதிக பக்தியுள்ள அப்பண்ணய்யா சிவேகவுடனின் மனைவியின் தலையை மொட்டையடிப்பதைப் பற்றி சொல்லிக் கொண்டிருந்தான். கல்லேசனுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. ''உங்களுக்குக் கொஞ்சம்கூட புத்தியில்லே. என்னைப் போல யாராவது வந்து ஏதாவது செய்யலாம்னு, அறிவு கெட்டுப் போறீங்க. ஏ கெழவி! நீ சாகும் வரை இந்த வீடு உருப்படாது. உன் வீட்டில் பெண்ணைக் கொடுத்த என் அப்பாவைச் செருப் பால் அடிக்கணும்.''

கங்கம்மாவுக்கு ஆரம்பம் முதலே அவன் மீது ஆத்திரமிருந் தது. வீட்டுக்கு வந்தவுடன் தன் காலைத் தொட்டுக் கும்பிட வேண்டிய இந்த சம்பந்தி வீட்டுப் பையன் இப்படிச் சொன்னதும் அவளது கோபம் வெடித்தது. ''சோமாறிப் பயலே! என்னை இப்படியா பேசறே? உன்னை யாரடா இங்கே வரச் சொல்லிக் கூப்பிட்டது? அவ சொல்லி அனுப்பினான்னு திருட்டுத்தனமா

அவ கூட படுக்க வந்தியா? அப்பண்ணய்யா அவனைப் பிடிச்சு மண்டையிலே ரெண்டு போடு.''

அப்பண்ணய்யாவுக்கு அந்தளவு தைரியம் இருக்கவில்லை. கல்லேசன் திருப்பிக் கேட்டான்: ''அடிப் பாவி! உன் வாயிலே வர்ற பேச்சுக்கு உன் நாக்கு அழுகிப் போயிடும். சிவலிங்கன் கிட்டேயிருந்து கணக்குப்பிள்ளை வேலையை வாங்க முடியாம திண்டாடி அலைஞ்சுகிட்டிருந்தீங்களே, அப்ப உங்க வீரம் எங்கே போச்சு?''

அவன் உள்ளே சென்று, ''அடீ, நஞ்சா! இவ்வளவு மட்ட மானவங்க வீட்டிலே ஏன் குடித்தனம் செய்யறே? கொழந்தை களையும் கூட்டிட்டுப் புறப்படு. நம்ம வீட்டிலே ஆண்டவன் கொடுத்தது சாப்பாட்டுக்கு இருக்கு சாப்பிடுவோம்.''

நஞ்சம்மா அமைதியாக நின்று கொண்டிருந்தாள். கல்லேசனே கேட்டான். ''ஏன் பேசாம நிக்கிறே? புறப்படு.''

''அண்ணு, கோபத்திலே எதையும் செய்யக் கூடாது. கொஞ்ச நேரம் சும்மா உட்கார்.''

''இந்தப் பொறுக்கிப் பயல்கள் வீட்டிலே ஒரு டம்ளர் தண்ணி கூடத் தொட மாட்டேன்'' என்று சொல்லி எதிரே ஆணியில் மாட்டியிருந்த தனது கைப் பையை எடுத்துக் கொண்டு, காலுக்கு செருப்பு மாட்டிக் கொண்டு அவன் புறப் பட்டுப் போனுன். ''அண்ணு! என்ன இப்படிச் செய்யறே?'' என்று அவள் கூறிய போதும் அவன் நிற்கவில்லை. சிவே கவுடன் வீட்டில் நடந்ததை நஞ்சம்மாவிடம் சொல்ல ஆரம்பித்தால் திண்ணையில் அமர்ந்திருப்பவர்கள் மறுபடியும் அமளி செய்வார் கள் என்று எண்ணிய தியாவரசய்யா ஊருக்குப் புறப்பட்டுப் போனுர்.

## 5

நஞ்சம்மாவுக்கு இப்பொழுது முன்பு இல்லாத தைரியம் வந்துவிட்டது. சாதம்மாவின் தந்தைக்குச் சொல்லியனுப்பினுல் அவர் வந்து இவர்களுக்குப் புத்திமதி சொல்லக்கூடும் என்று அவள் நினைத்தாள். கல்லேசன் அவளுக்குச் சொந்த அண்ணன். ஆகையால் கடிதம் எழுதினுள். ஆனுல் சாதம்மாவின் தந்தைக்கு எப்படிக் கடிதமெழுதுவது? எப்படியானுலும் சரி, அவர் தந்தைக்கு ஒப்பானவர் என்று நினைத்து ஒரு நாள் மத்தியானம் எல்லோரும் உறங்கிக் கொண்டிருக்கும் வேளையில், பார்வதி

வெளியே விளையாடிக் கொண்டிருக்கும் போது ஒரு காகிதத்தில் செய்தி எழுதினுள். கடூர் ஜில்லா, கஸ்பா தாலூகா நுகெகெரெ கிராமத்தில் உள்ள ஸ்ரீ சியாம பட்டர் என்னும் விலாசம் அவளுக்குத் தெரியும். ஊருக்கு வாரத்திற்கொருமுறை கம்பன கெரெயிலிருந்து தபால்காரர் வாசப்பய்யா வருவது உண்டு. அந்தக் கிராமத்திற்கு வந்ததற்கு அடையாளமாக கணக்குப் பிள்ளை சென்னிகராயரிடம் கையொப்பம் வாங்கிச் செல்வார். அந்த வகையில் நஞ்சம்மாவுக்கு அவரைத் தெரியும்.

அந்தத் தடவை அவர் வந்த பொழுது வீட்டில் குழந்தைகளைத் தவிர வேறு யாரும் இருக்கவில்லை. ''வாசப்பய்யா, எனக்கு ஒரு கவர் வேணும். என்கிட்டே பணம் இல்லே. ரெண்டு கொப்பரை கொடுக்கிறேன். கவர் தர்றீங்களா?'' என்றுள் நஞ்சம்மா.

''அம்மா, நான் வர்ற போதெல்லாம் எனக்கு பலகாரம் கொடுக்கறீங்க. உங்ககிட்டே கொப்பரை வாங்கிட்டா கவர் கொடுக்கணும்? அப்படீன்ஞ எனக்கு என்ன யோக்கிதை இருக்கு? இந்தாங்கம்மா கவர்.''

''இந்த விஷயத்தை யார்கிட்டேயும் சொல்ல வேண்டாம். எங்க வீட்டுக் 'கேஸ்' உங்களுக்குத் தெரியுமில்லையா? இது சம்பந்தமாக என் மைத்துனரோட மாமஞரை வரச் சொல்லி எழுதியிருக்கேன்'' என்று தன்னுடைய கடிதத்தை அவரிடமே கொடுத்து முகவரியைச் சொன்னுள். தான் அந்த கடிதத்தைத் தபாலில் சேர்த்து விடுவதாகச் சொல்லி, அவர் அதைத் தன் காக்கிப் பைக்குள் போட்டுக் கொண்டார். ஊர்க் கோடியில் உள்ள வீராச்சாமியின் பட்டறையிலோ, கோவில் மாதேவய்யா வுக்கு எதிரிலோ அமர்ந்து, கணக்குப் பிள்ளை புகையிலை குதப்பி கொண்டிருப்பார், என்பது அவருக்குத் தெரியும். அங்கேயே சென்று அவரிடம் கையொப்பம் பெற்றுக் கொள்வதாகச் சொல்லி அவர் புறப்பட்டுச் சென்றுர்.

தான் தவருன காரியம் செய்து விட்டோமோ என்று அவர் புறப்பட்டுச் சென்ற பிறகு, நஞ்சம்மாவின் மனம் உறுத்தியது. தாயை விட்டுத் தனியாகப் பிரிந்து வசிப்பதாக இருந்தால் மனைவியையும் குழந்தையையும் கூட்டிச் செல்லுமாறு மாமஞர் வீட்டில் கூறியதாக அப்பண்ணய்யா ஊர் வந்து சேர்ந்த சில நாட்கள் கழித்துத் தன் தாயிடம் கூறியிருந்தான். ''என்னுடைய குடும்பத்தைப் பிரிக்கப் பார்க்கிருரா, இந்த கடூர்க்

காரர்?'' என்று கங்கம்மா சில நாட்கள் வசை பாடிக் கொண்டிருந்தாள். பிறகு திப்டூர் பயணம் துவங்கிய பிறகு பேசுவதற்கும் வசை பாடுவதற்கும் புதிய விஷயம் கிடைத்து விட்டதால் அந்த விஷயத்தை மறந்து விட்டாள். முதலிலேயே கசப்புணர்ச்சி இருக்கும் பொழுது அவர் வந்தால் இவர்கள் சும்மாயிருக்கமாட்டார்கள். அவரை வலிய அழைத்து சண்டைக்கு வழிகோலியது போல் தான் செய்து விட்டதாக அவளுக்கு உள்ளூர மனக் கிலேசம் மிகுந்தது. எனினும், தான் செய்தது முழுத் தவறு ஆகாது என்ற எண்ணமும் அவளுக்கு ஓரளவு ஆறுதலைத் தந்தது.

கடிதம் கொடுத்தனுப்பிய பன்னிரண்டாம் நாள் பிற்பகல் நான்கு மணியளவில் சியாம பட்டர் மட்டும் வீட்டுக்கு வந்தார். தோட்டத்துப் பள்ளத்தில் ஆமணக்குத் தழை பறிப்பதற்காக கங்கம்மா சென்றிருந்தாள். அப்பண்ணய்யா மாடு மேய்க்கும் சாக்கில் தாயைப் பின் தொடர்ந்து சென்றிருந்தான். சென்னிகராயர் வீட்டிலேயே இருந்தார். வந்தவர் கை, கால் முகம் கழுவிக் கொண்ட பிறகு சாப்பிட அமர்ந்தார். நஞ்சம்மா, அவருக்குப் பரிமாறிக் கொண்டே வழக்கின் விவரத்தையும், தன் அண்ணன் வந்து சென்ற விஷயத்தையும் கூறினாள். இவ்வாறு பேசிக் கொண்டிருப்பது கணக்குப்பிள்ளைக்கு மிகுந்த எரிச்சல் உண்டாக்கியது. ஆனால் சம்பந்தியின் முன் அவளைத் திட்டுவதற்கு கூச்சமோ அல்லது பயமோ—ஏதோ ஒன்று. ஆகையால் அவர் திட்டவில்லை. பேசாமல் தாழ்வாரத்தில் அமர்ந்து தனது வாயில் இருந்த புகையிலைச் சாறு வழிந்து விடாதபடி மிகவும் சாமர்த்தியமாக குதப்பிக் கொண்டேயிருந்தார்.

சியாம பட்டர் சாப்பிட்டு முடிந்து, வெளியே வந்து மூக்குப் பொடி போடுவதற்கான ஆயத்தம் செய்து கொண்டிருக்கும் போது கங்கம்மா ஒரு கூடை நிறைய தழைகளுடன் வந்து சேர்ந்தாள். அவளுக்குப் பின்னால் கறவைப் பசுவுடன் வந்த அப்பண்ணய்யா, கயிற்றைப் பிடித்துக் கொண்டு தொழுவத்திற்குச் சென்றான். சம்பந்தியைக் கண்டதும் கங்கம்மாவுக்கு கோபம் பற்றியெரிந்தது. மகன் தனியாகப் பிரிந்து செல்ல வேண்டுமென்று கூறி, வெட்கமில்லாமல் திண்ணையில் வந்தமர்ந்திருக்கிறானே, அவனை சரியானபடி கவனிக்க வேண்டுமென்று எண்ணிக் கொண்டே கங்கம்மா உள்ளே சென்று கூடையைத் தரையில் வைத்தாள். பிறகு வெளியே வந்து சம்பந்தியின் எதிரே நின்று. ''என்னய்யா, என் மகனை தனியா பிரிக்க வந்தியா? இல்லாட்டி பிராமணர்களுக்குப் போடற கருமச் சோறு சாப்

பிட்டு வயித்தை நிரப்பிகிட்டு போக வந்தியா?'' என்று கேட்டாள்.

தன் சம்பந்தி அம்மாள் விவஸ்தை அற்றவள் என்பது சியாம பட்டருக்குத் தெரிந்திருந்தது. ஆனால் தனக்கு எதிரிடையாக நின்று இந்த முறையில் பேசுவாள், என்று அவர் கற்பனை கூட செய்திருக்கவில்லை. எனவே அவர் திகைப்படைந்து இரண்டு நிமிடம் பேசாமலிருந்தார். பிறகு அவர் நிதானமாக, ''பாருங்க, நீங்க கொஞ்சம் பொறுமையா, அடக்கமா பேசணும். உங்க மகன் உங்க கூட இருந்தா எங்களுக்கு வயித்தெரிச்சல் எதுவும் கிடையாது. நான் வந்த முக்கியமான வேலை என்னன்னு கேட்டா, நீங்க கோர்ட்டுக்குப் போய் வழக்காடி இருக்கிற சொத்துக்களை தொலைச்சிடக் கூடாது. புத்திசாலித்தனமா நடந்து......''

சியாமபட்டர் தன் பேச்சை முடிப்பதற்குள் அவர் எப்படி எதற்காக வந்திருக்கிறார் என்பது கங்கம்மாவின் மனதில் பளிச்சிட்டது. உடனே அவள் சமையலறைக் கதவுப் பக்கமாய்ச் சென்று கழுத்தைத் திருப்பி, ''ஏண்டி, தேவடியா முண்டை, அன்னிக்கு உன் அண்ணனைக் கூப்பிட்டே. இன்னிக்கு இந்தக் கெழவனைக் கூப்பிட்டிருக்கே. உனக்கு வெறி அதிகமாப் போச்சா?'' என்று ஆடினாள். பிறகு, வெற்றிலைச் சாற்றை ஒருமுறை துப்பிவிட்டு வந்து கலவரத்துடன் அமர்ந்திருந்த மகனைப் பார்த்து, ''ஏண்டா, தேவடியா மகனே! உன் பெண்டாட்டி அன்னிக்கு அண்ணனைக் கூப்பிட்டா. இன்னிக்கு இந்தக் கெழவனைக் காகிதம் போட்டுக் கூப்பிட்டிருக்கா. நீ இன்னிக்குப் பேசாம வெளியிலே திண்ணையிலே படுத்துக்கோ. இவங்க மச்சு மேலே குலாவட்டும்'' என்று கத்தினாள். இந்த சொற்களைக் கேட்ட சியாமபட்டர், தன் கைகளால் காதுகளைப் பொத்திக்கொண்டு ''ராமா ராமா'' என்று வாயில் முணுமுணுத்துக் கொண்டே கங்கம்மாவைப் பார்த்தார். அவள் அப்பண்ணய்யாவைத் தன்னுடன் இழுத்துக் கொண்டு நேரே ரேவண்ண செட்டியின் வீட்டை நோக்கி விரைந்தாள்.

சியாமபட்டர் காதைப் பொத்திய கைகளை எடுத்து, சென்னிகராயரைப் பார்த்துக் கூறினார்— ''இங்கே பாருங்க, நீங்க வீட்டுக்கு எஜமானர். அதனாலே நான் உங்ககிட்டே சொல்றேன். வீட்டிலே பெரியவங்க இப்படி வாய்க்கு வந்தபடி பேசினால் குடும்பம் எதுக்கு ஆகும்? உங்க குடும்பத்திலே நஞ்சம்மாவுக்குத் தான், புத்தி, சாமர்த்தியம் எல்லாம் இருக்குன்னு என் பொண்ணு சாதம்மாவே சொல்றாள். அப்படிப்பட்ட மூத்த

மருமகளே என் கண் முன்னாடியே இவ இப்படிச் சொல்றாளே! சின்ன மருமகளே என்னவெல்லாம் சொல்லுவா. ஜாவக்கல்லு சொந்தக் காரங்க பேச்சைக் கேட்டுப் பெண் கொடுத்துட்டேன். இனி எப்படியோ சமாளிக்கணும். நான் சொன்னது புரிஞ்சதா?''

''இரண்டு வெத்திலே கொண்டு வாடி'' என்றார் சென்னிக ராயர். நஞ்சம்மா வெற்றிலே கொண்டு வந்து கொடுத்த பிறகு, அதற்கு சுண்ணும்பு தடவி வாயில் போட்டுக் கொண்டே, புகையிலையைக் கிள்ளியபடி ''உம்'' என்றார்.

''உங்க குடும்பத்தைப் பிரிக்க வேணுங்கறது எங்க ஆசை அல்ல. வீட்டிலே ஆம்பளே நீங்க. நீங்க கொஞ்சம் புத்திசாலித் தனமா நடந்துக்கணும். இப்ப கடன் கொடுத்தவன்கிட்டேயே உங்க விவகாரத்தை முடிச்சிக்கிங்க. நஞ்சம்மா சொல்றது போல ஏதோ ஒண்ணு, ரெண்டு நிலத்தைக் கொடுத்துக் கடன் தீர்ந்த துன்னு அடமானப் பத்திரத்திலே எழுதி வாங்கிக்கிங்க. மீத முள்ளதை வெச்சுட்டு எப்படியோ ஜீவனம் செஞ்சுக்கலாம்'' என்றார் சியாமபட்டர்.

கணக்குப்பிள்ளே தன் வாயில் நிரம்ப இருந்த தாம்பூலச் சாற்றின் சுவையில் ஈடுபட்டிருந்தார். அவருடைய பதிலுக் காகக் காத்திருந்த சம்பந்தி, ''இல்லேயா'' என்று தனது பேச்சுக்கு ஒப்புதல் கேட்டார். பதில் சொல்லுவதற்காக சென்னிகராயர் தனது வாயை மேற்புறம் நோக்கி குவித்துக் கொண்டு, நாவை அசைத்தாலும் சொற்கள் எதுவும் வெளியே வரவில்லே. அவர் எழுந்து போய் வெற்றிலேச் சாற்றைத் துப்பி விட்டு வரும் வரை காத்திருந்த சியாமபட்டர் மற்றுமொரு தடவை ''நீங்க இப்ப பதில் சொல்லுங்க'' என்றார். எந்தவித மான பதிலேச் சொல்லுவதற்கும் சென்னிகராயருக்கு மிகுந்த பயம். கடைசியில் எப்படியோ ஒரு முடிவு செய்தவராய், ''உங்கபாடு, அம்மாபாடு, எனக்கென்ன?'' என்று சொல்லி வெளியே புறப்பட்டுச் சென்றார்.

''நஞ்சம்மா, கேட்டியா?'' என்றார் சியாமபட்டர். ''இவங்க சுபாவம் உங்களுக்குச் சரியாகத் தெரியாது. உங்க மருமகனிடமே சொல்லிப் பாருங்க. உள்ளதைப் பங்கு போட்டு இருக்கும் கடனேயும் பாதி பாதியாகப் பிரித்துப் போடணும்னு. அப்பண்ணய்யா பிடிவாதம் பிடிச்சாத்தான் ஒரு வழி ஆகும்'' என்றாள் நஞ்சம்மா.

''அவன் யோக்கிதை எனக்குத் தெரியாதா? இந்தக் கோர்ட் விஷயம் எங்களுக்குத் தெரியாது. அதுக்கு முன்னாடியே நாங்க முடிவு செய்திருக்கோம். இருக்கிறது ஒரே பொண்ணு.

எப்படியோ காப்பாத்தறோம். ரெண்டு வேளை சாப்பாட்டுக்கு ஆண்டவன் குறை வைக்கலே. இப்படிப்பட்ட மாமியார்கிட்டே எதுக்காகப் பொண்ணை அனுப்பனும்? அதுதான் பிள்ளைப்பேறு முடிஞ்சப்புறமும் நாங்க அவளை அங்கேயே வச்சுகிட்டிருக்கோம்.''

என்ன சொல்வதென்று தெரியாமல் நஞ்சம்மா சும்மா நின்று கொண்டிருந்தாள். அப்பொழுது வீட்டினுள் நுழைந்த கங்கம்மா அவளைப் பார்த்து ''முடிஞ்சதா நியாயம் பேசி? உன் புருஷன் கோவில்லே உட்கார்ந்து கெடக்கறான்!'' என்றாள். நஞ்சம்மாவுக்கு ஆத்திரமும் தைரியமும் வந்தது. ''நீங்க கண்டபடி மனம் போன போக்கில் நடந்திருக்கீங்க போல் இருக்கு. அதனால்தான் எல்லா பொம்பளைகிட்டேயும் கண்டபடி பேசறீங்க. உங்க நாக்கு அழுகிப் போக! வாயை மூடறீங்களா, இல்லையா?'' என்றாள்.

''சக்கிலி முண்டை, என்னியா இப்படிச் சொல்றே? என் மகன்கிட்டே சொல்லி உன் தாலியை அறுத்து எறியாவிட்டா, நான் ஜாவகல்லுப் பொண்ணே அல்ல.'' என்று ஆர்ப்பாட்டம் செய்தவாறே கங்கம்மா நேரே கோவிலுக்குச் சென்றாள். தன் மகனின் எதிரே நின்று, ''டேய்! உன் பெண்டாட்டியின் முகவாய்க் கட்டையை உடை. அவ தாலியைப் புடுங்கிப் போடுடா. என் வாய் அழுகிப் போகட்டும்னு சொல்ற அந்த...'' என்று கர்ஜித்தாள்.

தம்பூராவை மீட்டியவாறே பாடிக் கொண்டிருந்த மாதேவய்யா, சட்டென்று தன் பாட்டை நிறுத்தி விட்டுப் பார்த்தார். ''நீ அப்பனுக்குப் பொறந்தவன் இல்லையா? அப்பனுக்குப் பொறந்தவனா இருந்தா எழுந்திரிச்சுவந்து அவதாலியைப் புடுங்கி எறிடா'' என்று மறுபடியும் கங்கம்மா, சவால் விட்டு அழைத்தாள். தன் பிறப்பின் புனிதத் தன்மையை எப்படி தாய்க்கு நிரூபித்துக் காட்டுவது என்று இரண்டு நிமிடங்கள் தயங்கி விட்டுப் பின்னர் சென்னிகராயர் மெதுவாக எழுந்தார். அருகில் அமர்ந்திருந்த மாதேவய்யா உடனே அவருடைய கைகளை சட்டென்று பிடித்திழுத்து ''இத்தினி நேரம் பஜனை கேட்டீங்க. புத்தி எங்கே போச்சு?'' என்று கேட்டார்.

அவருக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியாமல், ''சரி போகட்டும், பாடுங்க கேட்கலாம்'' என்று கூறியவாறு கணக்குப் பிள்ளை அமர்ந்தார். மாதேவய்யா தம்பூராவை மீட்டியவாறு மறுபடியும் பாட்டை ஆரம்பித்த போது, ''சாமியார் பயல் சொல்ற

பேச்சைக் கேட்கிருன். பெத்தவளுக்கு மரியாதை இல்லேயே'' என்று கூவிக் கொண்டே கங்கம்மா ரேவண்ண செட்டியின் வீட்டை நோக்கி நடந்தாள்.

சியாம பட்டர் நஞ்சம்மாவிடம், ''அம்மா, நான் இங்கே வந்து எந்தப் பிரயோசனமும் இல்லே. நான் புறப்படறேன். எனக்குப் பதினெட்டு கிராமத்திலே புரோகிதம் இருக்கு. மகளேயும் பேத்தியையும் காப்பாத்த முடியும்'' என்று கூறி மூட்டை முடிச்சுகளேயும் குடையையும் எடுத்துக் கொண்டு புறப்பட ஆயத்தமானுர். நஞ்சம்மா, அவரிடம், ''சரி, எப்படியோ ஆகட்டும், சாதம்மாவை அனுப்புங்க'' என்ருள். ''எதுக்காக அவளே அனுப்பனும்? உனக்கே எல்லாம் தெரியாதா?'' என்று அவர் திருப்பிக் கேட்டார்.

அவள் மறுபடியும் பேசவில்லே. புறப்படுவதற்காக எழுந்து நின்ற அவருக்கு நமஸ்காரம் செய்தாள். ''தீர்க்க சுமங்கலி பவ. சகல சன் மங்க ளாறி பவந்து'' என்று ஆசீர்வாதம் செய்து அவர் புறப்பட்டார். ''திப்டூருக்கு முன்னதாக திம்மலாபுரம்னு ஒரு கிராமம் இருக்கு. அங்கே கணக்குப் பிள்ளே தியாவரசய்யான்னு ஒருத்தர் இருக்கார். அவங்க வீட்டிலே ராத்திரி தங்கி, காலேயிலே புறப்படுங்க. இருட்டின பிறகு திப்டூர் வரை நடக்க வேண்டாம். புக்கன் திட்டில் திருடங்க இருக்காங்க. வண்டிலே கூட்டமா போனுலும் கூட, பிடிச்சு அடிச்சு பிடிங்கி கிட்டுப் போருங்க'' என்று சொன்னுள்.

# ஏழு

## 1

ஆண் குழந்தை ராமண்ணனுக்கு ஒன்றரை வயது ஆன பொழுது, நஞ்சம்மா மறுபடியும் கர்ப்பமுற்ருள். கோர்ட் விவகாரங்களால் எல்லா நிலங்களும் பறிபோய்விடும் என்பது அவளுக்கு நன்கு தெரியும். ''நம் நிலேமையே இந்த லட்சணம், மறுபடியும் குழந்தைகள் எதற்காக?'' என்று பலமுறை அவள் நினேத்துக் கொண்டதுண்டு. ஆனுல் திருமணமாகி இத்தனே காலம் கழிந்து விட்ட போதிலும் தன் அண்ணனுக்குக் குழந்தை பாக்கியமே கிடைக்கவில்லேயே! அவனுடைய தலேயெழுத்து அப்படி. ''நமக்கு ஆண்டவன் கொடுக்கும் போது வேண்டாம் என்று சொல்லக் கூடாது'' என்று தனக்குத்தானே நினேத்து ஆறுதல் கொண்டாள்.

அந்தச் சமயத்தில் இரண்டு சம்பவங்கள் நடந்தன. முதல் நிகழ்ச்சி, ஊரில் ப்ளேக் நோய் பரவியது. அது அந்த வட்டாரத்தில் அதிசயமான நிகழ்ச்சி அல்ல. இரண்டு, மூன்று ஆண்டுக் கொரு முறை ஜனங்கள் ஊரை விட்டு வெளியே சென்று, கொட்டகை போட்டுக் கொண்டு தங்குவது என்பது பழக்கப்பட்டுப் போன காரியம். வட்டிக்கடை முதலாளி என்று எல்லோராலும் அழைக் கப்பட்ட ஒருவர் அந்த ஊருக்கு வந்து லேவா தேவி விவகாரம் ஆரம்பித்தது, குறிப்பிடத்தக்க மற்றொரு சம்பவம். அவர் தங்கம், வெள்ளி, தாமிரம், பித்தளைப் பொருள்களை அடமானமாகப் பெற்றுக்கொண்டு கடன் தந்தார். ஒரு ரூபாய்க்கு ஒரு நாளைக்கு ஒரு காசு வட்டி. அவர் மலபார் பகுதியைச் சேர்ந்த மாப்பிள்ளை எனப்படும் முஸ்லீம் இனத்தைச் சேர்ந்தவர். கட்டம் போட்ட லுங்கி உடுத்து, குஞ்சலம் தொங்கும் தொப்பி அணிந்திருந்தார். வயது சுமார் ஐம்பது. ''ஒரு காசுன்னு சொன்னு எவ்வளவு குறைச்சல்! அவசரத்துக்குப் பணம் கிடைக்குதே'' என்று சிவே கவுடன், ஜனங்களிடம் அவருடைய பெருந்தன்மையை வெகு வாய்ப் புகழ்ந்தான். வெளியூரிலிருந்து வந்த அவருக்கு அவன் தான் இருக்க இடம் கொடுத்தான். சிவே கவுடனுக்கு மூன்று வீடுகள் இருந்தன. தெருவை ஒட்டியிருந்த சிறிய வீட்டில் பெரிய இரும்புப் பெட்டியை வைத்து அவர் வியாபாரத்தை ஆரம்பித் தார். அந்த வீட்டிற்கு அவர் வருட வாடகை பதினெட்டு ரூபாய் கொடுத்தாராம். சிவே கவுடனுக்கும் அந்த வியாபாரத்திற்கும் எந்தவித தொடர்பும் கிடையாது—அப்படித் தான் அவன் எல் லோரிடமும் திட்டவட்டமாகத் தெரிவித்து வந்தான்.

வட்டிக்கடை முதலாளி வியாபாரம் ஆரம்பித்த ஓரிரு மாதங்களிலேயே, அனேகமாக ஊர் மக்கள் எல்லோரும் அவரிடம் கடன் வாங்க ஆரம்பித்தனர். சிவே கவுடனும் அவசரத் தேவை ஏற்பட்ட போது வட்டி கொடுத்து கடன் வாங்கிக் கொண்டிருந் தானும். கணக்கு வழக்கு எல்லாம் கரூர், கண்டிப்பு. பொய், மோசடி கிடையாது. வட்டிக்கணக்கு போடுவதும் சுலபம். ஒரு நாளைக்கு ஒரு ரூபாய்க்கு ஒரு காசு தான் வட்டி. இவ்வாறு, அவர் ஊர்க்காரர்கள் அனைவருக்கும் வேண்டியவரானார். ப்ளேக் தோன்றி ஊர்மக்கள் வெளியேறிய போது அவரும் சிவேகவுட னுடைய கொட்டகைக் கருகில், கொட்டகை போட்டுக்கொண் டார். பணப் பெட்டியையும் அங்கேயே வைத்துக் கொண்டார்.

கங்கம்மாவின் குடும்பமும் வழக்கம் போல ஊருக்கு வெளியே இருந்த அவர்களின் தோட்டத்தில் கொட்டகை போட்டது. நஞ்சம்மாவுக்கு அப்பொழுது மூன்று மாதம். இடையிடையே

வாந்தி எடுத்துக் கொண்டிருந்தாலும், வீட்டுச் சாமான்கள் எல்லாம் கட்டி அப்புறப்படுத்தும் பொறுப்பு அவளுடைய தலையிலேயே வந்து விழுந்தது. மாதேவய்யாவும் கோவிலை விட்டு வெளியேற வேண்டியதாயிற்று. சோமேஸ்வரன் கோவில் மூல விக்கிரகம் ஏரிக்கரையின் அருகே அமைந்திருந்தது. அந்தக் கோவில் கருங்கல்லால் ஆனது. *ஜகணச்சாரி அதைக் கட்டியதாக மக்களிடையே நம்பிக்கை. அங்கே பாம்புகளின் நடமாட்டம் அதிகம் என்பது எல்லோருக்கும் தெரியும். ''பாம்புன்னு என்ன? அது சிவனின் கழுத்து ஆபரணம். அது என்னை என்ன செய்யும்?'' என்று கூறி, மாதேவய்யா தன்னுடைய தம்பூரா, திருவோடு, மரச் செருப்பு, தினை தானியம் முதலியவற்றை எடுத்துக் கொண்டு ஏரிக் கரைக் கோவிலுக்குப் புறப்பட்டுப் போனார். கங்கம்மாவின் கொட்டகைக்கும் அவர் இருந்த கோவிலுக்கும் இடையே தூரம் சிறிது அதிகம். அதனால், கணக்குப்பிள்ளை கோவிலுக்குப் போவது அரிதாயிற்று. வட்டிக் கடைக்காரரும் புகையிலை குதப்பக் கூடியவர். ஆகையால் சென்னிகராயர் வட்டிக் கடைக்காரரின் கொட்டகைக்குப் போய் அமர்ந்து வந்தார். அங்கே சில தடவை சிவேகவுடரும் வந்து போவார். அவர்களிருவரும் அதுவரை பேச்சை முறித்துக் கொண்டதில்லை. எதுவாயினும், அவர்கள் மணியகாரர், கணக்குப்பிள்ளை தானே? தகராறு கங்கம்மாவுக்கும் சிவேகவுடனுக்கும் தான். ஆனால் மகன் அங்கே போவதைப் பற்றித் தெரிந்தால் கங்கம்மா தன் மகனை வாய்க்கு வந்தபடி திட்டி விடுவாள்.

ஊரை விட்டுப் புறப்படுவதற்கு முன்னால் பிளேக் நோய் தாக்கி ஆறு பெரியவர்களும், இரண்டு குழந்தைகளும் மாண்டு போனார்கள். அதைத் தவிர வேறு சாவுகள் பிற்பாடு நேரவில்லை. ஊர்க்காரர்கள் எல்லோரும் சேர்ந்து பிளேக் மாரியம்மனுக்கு பூஜை செய்து, உடனே ஊரை விட்டுக் கிளம்பினார்கள். வெளியே குடி வந்த பிறகு நோயோ, சாவோ இல்லாதபடியால், அவர்களுடைய மனம் ஆறுதல் அடைந்தது. ஆனால் ஊருக்கு வெளியே குடியிருந்தபடியால் மனதில் உற்சாகம் இருக்கவில்லை. இந்தச் சலிப்பைப் போக்கக் கூடிய விதத்தில் எல்லோருக்கும் சுவையான பேச்சு அவர்களுக்கு சீக்கிரமே கிடைத்தது.

கங்கம்மா - சிவேகவுடர் வழக்கு கோர்ட்டில் முடிவடையக் கூடிய கட்டத்திற்கு வந்து கொண்டிருந்தது. இரண்டு கட்சி வக்கீல்களும் கோர்ட்டில் ''பாயிண்டுகளை'' அடித்துப் பேசினார்

* ஜகணச்சாரி — கர்நாடக மாநிலத்தின் புகழ் பெற்ற சிற்பி

ளாம். ''எங்க வக்கீல் சொன்ன பாயிண்டைக் கேட்டு நீதி பதியே அசந்து போயிட்டாரு'', என்று ரேவண்ண செட்டி கூறியது, ஊர் முழுதும் பரவி விட்டது. ''எங்க வக்கீல் சொன்ன பாயிண்டைக் கேட்டு அவங்க வக்கீல் அப்படியே அசந் திட்டாரு'', என்று சிவேகவுடர் சொன்னார். இரண்டு கட்சிக் காரர்களும் ஊக்கத்துடன் திப்டூருக்குப் போய் வந்து கொண்டிருந் தார்கள். அப்பண்ணய்யா எல்லோரையும் முந்திக் கொண்டு, வண்டியிலிருந்து இறங்கி திப்டூர் ஒட்டலுக்குப் போனான். சென்னிகராயரும் தம்பிக்குப் பின் தங்கவில்லை. சிவேகவுடர் ராகி அடையும், எள்ளு மாவையும் தின்று விட்டுக் ''கோர்ட்'' விஷயத்தைக் கவனித்து வந்தார்.

தீர்ப்பு சொல்லும் நாள் இரண்டு கட்சிக்காரர்களும் வண்டி பூட்டிக் கொண்டு கிளம்பினார்கள். கங்கம்மா தன் நெஞ்சின் மீது கை வைத்துக் கொண்டு தீர்ப்பைக் கேட்டாள். ''சிவே கவுடரிடமிருந்து இவர்கள் பணம் பெற்றிருக்கிறார்கள், அதற்கு வட்டி, வட்டிக்கு வட்டி, கோர்ட் செலவு உட்பட மொத்தம் ஐயாயிரத்து ஐநூறு ரூபாய் கோர்ட்டில் செலுத்த வேண்டும். தவறினால், கோர்ட்டார் எல்லா நிலங்களையும் ஏலத்தில் விற்று, கடன் தொகைகளைத் தீர்ப்பார்கள்''. இதைக் கேட்ட கங்கம்மா ''உன் பெண்டாட்டி வளையலே உடைக்க'' என்று சபிக்க விரும் பினாலும், வாசலில் நின்றிருந்த போலீஸ்காரர்களைப் பார்த்த வுடன் பேசாமல் இருந்தாள்.

நீதி மன்றத்தை விட்டு வெளியே வந்தவுடன் வக்கீல் மகாந் தையா, கங்கம்மாவைப் பார்த்து, ''தும்கூர் கோர்ட்டுக்கு அப்பீல் செய்யலாம். பணம் செலவாகும். கொண்டு வந்திருக் கீங்களா ?'' என்றார். ''வக்கீல் அய்யா, வீட்டிலிருந்த தங்கம் வெள்ளிப் பாத்திரமெல்லாமே நான் அடகு வச்சிருக்கேன். புருஷன் இல்லாதவ நான். எங்கிருந்து பணம் கொண்டு வர முடியும் ?'' என்றாள்.

அப்பொழுது சிவேகவுடருடைய வக்கீல் அவ்விடம் வந்தார். இரண்டு வக்கீல்களும் ஆங்கிலத்தில் சிறிது நேரம் பேசிக் கொண்ட பிறகு கங்கம்மாவின் வக்கீல் அவளிடம், ''பாருங் கம்மா, சிவேகவுடனே இன்னும் கொஞ்சம் பணம் தரச் சொல் றாராம், உங்களுக்கு. உங்க கடன் தொகையைச் செலுத்தற துக்கு ஈடாக எல்லா நிலத்தையும் அவனுக்கே எழுதிக் கொடுக் கறீங்களா? உங்களுக்கும் அநியாயம் செய்யக் கூடாது'' என்றார்.

''நிலத்தைத் தொலேச்சிட்டா வயித்துக்கு என்ன செய்றது வக்கீல் அய்யா ?'' என்றாள் கங்கம்மா. வாயில் புகையிலேச் சாறு நிரம்பியிருந்ததால் சென்னிகராயர் எதுவும் பேசவில்லே.

''இல்லாட்டா மேல் கோர்ட்டுக்குப் போகலாம். அதுக்கு ஆயிரக்கணக்கா ரூபாய் செலவாகும். பணம் திரட்ட தைரிய மிருந்தா வேறு பேச்சு பேசலாம்.''

வேறு வழியே இருக்கவில்லை. சிவேகவுடரை அங்கேயே வரவழைத்தார்கள். தான் இன்னமும் இரண்டாயிரம் ரூபாய் கொடுப்பதாக ஒப்புக் கொண்டார். கோர்ட் மூலம் ஏலம் போட்டால், வேறு யாராவது வாங்கி விட்டால் என்ன செய்வது என்ற பயம் அவரை ஆட்டிக் கொண்டிருந்தது. கங்கம்மா ஒன்றும் புரியாதவளாய் நின்று கொண்டிருந்தாள். அவர் அங்கேயே இருந்த ஒரு தேங்காய்க் கடைக்குச் சென்று இரண் டாயிரம் ரூபாய் பெற்று வந்து கொடுத்தார். இரண்டு வக்கீல் களும் சேர்ந்து பத்திரம் எழுதி முடிவு செய்தார்கள். மகாந் தையாவுக்கு கடைசியாக நூறு ரூபாய் ''பீஸ்'' கொடுக்க வேண் டியதாயிற்று. ''உங்களுக்கு மொத்தம் எண்ணூறு ரூபாய் கொடுத்திருக்கிறேன் அய்யா'', என்று கூறினாள் அவள்.

''மொத்தமாக எனக்கு நூற்றைம்பது ரூபாய் வந்திருக்கு'' என்றார் வக்கீல்.

தீர்ப்பு சொல்லும் நாள், ''நீங்க வண்டியிலே போங்க. நான் மோட்டார்லே வர்ரேன்'', என்று சொல்லிய ரேவண்ண செட்டி வரவே இல்லை. எவ்வாறாயினும் வக்கீலுக்கு நூறு ரூபாய் கொடுக்க வேண்டியதாயிற்று. மறுநாள் பத்திரங்களை முறைப்படி பதிவு செய்து விட்டு வண்டி பூட்டிக் கொண்டு புறப்பட்டார்கள். ஆயிரத்துத் தொள்ளாயிரம் ரூபாய் கொண்ட பண மூட்டையைத் தன் மடியில் வைத்துக் கொண்டு கங்கம்மா கண் இமைக்காமல் கவனமாக வண்டியில் வந்தாள்.

ஊருக்கு வந்த பிறகு கங்கம்மா கோர்ட் தீர்ப்பைப் பற்றி யாரிடமும் சொல்லவில்லை. ஆனால் சிவேகவுடர் சொல்லாமல் இருப்பாரா? அவர் எல்லோரிடமும் அதைப் பற்றி பிரச்சாரம் செய்தார். உடனே, கங்கம்மா கோர்ட் செலவுக்கென்று ''நோட்டு'' எழுதிக் கொடுத்து ஐம்பது, நூறு என்று கடன் வாங்கியிருந்த, கடன் கொடுத்தவர்கள் எல்லோரும் ''திபு திபு'' வென்று கங்கம்மாவின் கொட்டகைக்குள் நுழைந்தார்கள். அவர்களுக்கு மொத்தமாக எண்ணூறு ரூபாய் கொடுத்தாள். மீதியிருந்த பணத்தை கங்கம்மா தன் படுக்கை விரிப்பின் அடியில் வைத்து, மிகவும் கவனமாகப் படுத்து வந்தாள். ஒருநாள் அவள் ரேவண்ண செட்டியின் கொட்டகைக்குச் சென்று, ''ரேவண்ணா, நீ வக்கீலுக்கு எல்லா பணத்தையும் கொடுக்கலியாமே! எங் கிட்டே நூறு ரூபாய் வாங்கிக்கிட்டாரு,'' என்றாள்.

''யார் சொன்னது?''

''வக்கீலே சொன்னூர்''

''களவாணிப் பய, புறப்படுங்க இப்பவே. என் முன்னூடி அப்படிச் சொல்லட்டும். செருப்பால் அடிக்கிறேன் அவனே'' என்று சொல்லி ரேவண்ண செட்டி சிவந்த விழிகளை உருட்டினுன். பேச்சை வளர்த்த விரும்பவில்லை, கங்கம்மா. ரேவண்ண செட்டியிடம் அவளுக்கு பயமா அல்லது மன வருத்தமா அல்லது அவனது நாணயத்தில் நம்பிக்கையா என்று தெரியாது.

''ரேவண்ணு, ஜெயித்து விடும் என்று வக்கீல் சொன்னுரே, ஏன் தோத்துப் போச்சு?''

''நீதிபதிக்கு லஞ்சம் கொடுத்திருக்கிருன், சிவேகவுடன். மொதல் நாளே அவருக்கு ரெண்டாயிரம் கொடுத்திட்டான். அதுக்காகத்தான் ஒருநாள் முன்னதாகவே வண்டி பூட்டிக்கிட்டுப் போயிருக்கிருன். எனக்கு முன்னூடியே தெரிஞ்சு போச்சு. நம்ம கிட்ட இரண்டாயிரம் ரூபா இருந்தா நாமும் கொடுத்திருக்கலாம். உங்ககிட்ட பணம் இல்லேன்னு எனக்குத் தெரியும். அதுதான் தீர்ப்பு சொல்ற நாள் நான் வரலே.''

கங்கம்மா பேசாமல் தன் கொட்டகைக்குச் சென்ருள்.

உ

பல பேர் கங்கம்மாவின் கொட்டகைக்கு வந்து நீதிபதியையும், சிவேகவுடரையும் திட்டி, கங்கம்மாவிடம் தங்களுக்குள்ள அனுதாபத்தைத் தெரிவித்தார்கள். ஒருநாள் அய்யா சாஸ்திரிகள், கங்கம்மாவிடம், சிவேகவுடரைப்பற்றி வசைபாடிவிட்டு, ''கங்கம்மா, கொஞ்சம் வீட்டுக்கு வர்றியா? என் வீட்டுக்காரி உங்கிட்டே பேசணுமாம்'' என்ருர். கங்கம்மா சாஸ்திரிகள் வீட்டுக்குப் போனதும் அவருடைய மனைவியும் அவருடன் சேர்ந்து பல்வேறு வகைகளில் கவுடரைச் சபித்தாள். அய்யா சாஸ்திரிகள் பஞ்சாங்கத்தைப் பார்த்துவிட்டு, ''நீதிபதியின் மனைவியும், குழந்தைகளும் செத்துப் போவது உறுதி'' என்று சொன்னூர்.

''கங்கம்மா, நீ இங்கேயே மடிப்புடவை உடுத்திகிட்டு சாப்பாட்டை முடிச்சுக்க. அய்யோ பாவம்னு உனக்காக இரக்கப்படறவங்க யார் இருக்காங்க?'' என்று சாஸ்திரியின் மனைவி சுப்பம்மாள் கூறினுள். அவள் மறுபடியும் கட்டாயப் படுத்திய பொழுது கங்கம்மா தன் மனத்திற்குள் மருமகளைத் திட்ட ஆரம்பித்தாள். ''ராட்சசி, வீட்டிலே கால் வைச்ச நேரம், கஷ்டம் ஆரம்பிச்சது. இப்ப நெலமெல்லாம் போயிட்டுது. கொழந்தை பிறந்த நேரம், மருமக வந்த நேரம்னு சொல்றது சும்மாவா? சரிதான்.''

அவள் ஸ்நானம் செய்து, விபூதிப் பட்டை பூசிக் கொண்டு, மந்திரம் சொல்லிக் கொண்டிருந்த போது, சாஸ்திரிகள் அவளுடைய கொட்டகைக்குப் போய் அப்பண்ணய்யாவையும் அழைத்து வந்தார். சாஸ்திரிகளின் பெரியப்பா பேரன் அண்ணு ஜோசியனும் அப்பொழுது வந்து சேர்ந்தான். அவர்கள் இரு வருக்கும் சேர்ந்து அதிகப்படியாகவே சுப்பம்மா சமையல் செய்திருந்தாள். பூசனிக்காய் மோர்க்குழம்பு, கனி இவற்றை பாக்கு மட்டையில் பரிமாறிவிட்டு அவள் உபசரித்துக் கொண் டிருந்த போது சாஸ்திரிகள் பேச்சை ஆரம்பித்தார். ''ராமண்ணு இப்ப இருந்திருக்கணும். கதையே வேறுவிதமாய்ப் போயிருக்கும். நான் இவகிட்ட எத்தனை தடவை சொல்லி வருத்தப்பட்டிருக் கேன்னு, கேட்டுப்பாரு. அவர் போனது நம்ம ஊர்லே பெரிய தூண் விழுந்தது போல் ஆயிட்டுது.''

''இதைப் போல் மருமக சனியன் வரணும்னு என் தலையிலே எழுதியிருக்கிறபோது, அவர் எப்படி இருப்பார்?''

சுப்பம்மா கேட்டாள்: ''கங்கம்மா, உங்களுக்கு மாசத் தீட்டு நின்னு ரெண்டு வருஷம் ஆயிட்டுதா?''

''மூணு வருஷம் ஆச்சு''

உடனே சாஸ்திரிகள் சொன்னார்: ''பாத்தியா? நீயும் வாழா வெட்டியா இருந்திட்டே. நீ செய்யாத தானம், தருமம், விரதம் எதுவுமே கிடையாது. மாசத் தீட்டு நின்னப்புறம் பொம்மனாட்டி கள் ரிஷி பஞ்சமி விரதம் செஞ்சு முடிக்கணும். அப்புறம் உன் கஷ்டமெல்லாம் விடுஞ்சிடும்.''

அண்ணு ஜோசியன் தன் சிற்றப்பாவைவிட சாஸ்திர ஞானங் களைக் கரை கண்டவன். சூரண்ண ஜோசியரிடம் கற்றவன். ரிஷி பஞ்சமி விரதத்தின் மகிமையை சுலோகங்களுடன் எடுத்துக் கூறினான்.

''எப்படியோ ஆகட்டும். நீ அதையும் செஞ்சிடு. இங்கேயே கொட்டகையிலே செஞ்சாலும் பரவாயில்லை. உனக்கு வேண்டிய சகாயம் நான் செய்யறேன். அண்ணப்பன் பெண்டாட்டி வெங்கடலட்சுமி இருக்கா. வேறே ஒரு பந்தல் போட்டா முடிஞ்சது. எங்க கொட்டகைக்கு முன்னாடி பெரிசா போடலாம். உங்க கொட்டகைக்குப் பக்கம் வேறே ஜாதி ஜனங்க நடமாட்டம் அதிகம். ஆசாரத்துக்கு சரிப்படாது'' என்று சுப்பம்மா கூறினாள்.

''செய்யலாமாடா, அப்பண்ணய்யா?'' என்று மோர்க் குழம்புச் சாதத்தைப் பிசைந்து கொண்டே கங்கம்மா கேட்டாள்.

சென்னேனஹள்ளி வெங்கடாசலய்யாவின் தாயார் ரிஷி பஞ்சமி விரதம் செய்து, எல்லோருக்கும் சாப்பாடு போட்ட போது அங்கே அப்பண்ணய்யாவும் சாப்பிடச் சென்றிருந்தான். போளி, மாங்காய்ச் சாதம் முதலிய வகைகளுடன் நாவில் நீர் சொட்டும் படி மிகவும் அமர்க்களமாக அங்கே சமையல் செய்திருந்தார்கள். உடனே அது அவனுடைய நினைவுக்கு வந்து, எதிரில் இருந்த புளித்த மோர், ராகிக் களி உருண்டைகளுக்குப் பதிலாக இனிப் பான போளியும், மாங்காய்ச் சாதமும் அவனுடைய கண்ணெதிரே கற்பனையில் தோன்றின.

''செய்யலாம் அம்மா. அந்த வெங்கடாசலய்யாவை விட நாம் எந்த விதத்திலே கொறைஞ்சு போயிட்டோம்?'' விரதம் செய்வது என்று முடிவாயிற்று. சுப்பம்மா சொன்னாள்: ''கங்கம்மா என்றால் சும்மாவா? பேசினா ஒரே பேச்சுத்தான். மறு பேச்சே கிடையாது. அந்த பிரம்ம தேவனின் அப்பன் வந்தாலும் பேச்சை விட்டு மாற மாட்டா.''

கங்கம்மா தான் சொன்ன சொல்லை மாற்றவில்லை. மாற்றி விட்டால் அவளுடைய பெயர் கெட்டு விடுமே! அண்ணா ஜோசி யன் சாப்பாடு முடிந்த பிறகு, உட்கார்ந்து பஞ்சாங்கத்தைப் புரட்டிப் பார்த்துவிட்டு, விரல் விட்டு எண்ணி நல்ல நாள் எதுவென்று முடிவு செய்தான். சென்னேனஹள்ளி வெங்கடாச லய்யா தன் தாயாருக்கு செய்து முடித்ததைப் போல மிகவும் சாதாரணமாக ரிஷி பஞ்சமி செய்வது கங்கம்மாவின் அந்தஸ் துக்குப் பொருந்தாது. தாராளமாய்ப் பெரிய அளவில் சாமான் களை வாங்கி வர வேண்டும். அய்யா சாஸ்திரிகள் வீட்டில் கட்டைப் பேனாவால் மையைத் தொட்டெழுதி பட்டியல் தயாரித்தார்கள். கிராமத்தில் இருந்த இரண்டு புரோகிதர் களுக்கும் பட்டுத் துணி, மேல் துண்டு இருவரின் மனைவிக்கும் ஐம்பது ரூபாய் மதிப்பில் ஒவ்வொரு புடவை. வீட்டில் உள்ள கறவைப் பசுவையே தானமாகக் கொடுத்து விடலாம். சன்ன ரக அரிசி, பருப்பு, சர்க்கரை, ரவை முதலியவையெல்லாம் வாங்க வேண்டும். சாமான்களை வாங்கி வர திப்டூருக்கு வண்டி பூட்டிக் கொண்டு புறப்பட வேண்டும். வண்டியில் மற்றவர்களுடன் அய்யா சாஸ்திரிகளும், அண்ணா ஜோசியரும் செல்வது என்று முடிவாயிற்று. திப்டூருக்கு செல்லும் வாய்ப்பு மற்றொரு முறை அப்பண்ணய்யாவுக்கு கிடைத்தது.

3

ரிஷி பஞ்சமி விரதம் விமரிசையாக நடந்து முடிந்தது. எட்டு நாட்கள் கழித்து எல்லோரும் ஊருக்குள் செல்வது என்று

முடிவாயிற்று. விரதத்திற்காகக் கொண்டு வந்திருந்த ரவை, சர்க்கரை, நெய் முதலியன இன்னும் மீந்திருந்தன. கங்கம்மா ஒரு நாள் மருமகளிடம் சொன்னாள்: ''நீ எப்ப இந்த வீட்டிலெ கால் வெச்சியோ, அப்பவே வீடு நாசமாப் போச்சு. நிலமெல்லாம் போயாச்சு. ஊருக்குள் போன பிறகு நீயும் உன் கொழந்தை களும் தனியா இருங்க. நாங்க வீட்டிலே இருக்கோம்.''

''நீ, உன் குழந்தைகள்'' என்று மாமியார் சொன்ன சொற் கள் நஞ்சம்மாவுக்கு எரிச்சல் மூட்டியது. ''எந்த வீட்டில் இருக்கப் போறீங்க?'' என்று அவள் கேட்டாள். ''எந்த வீட்டிலா? என் வீட்டுக்காரர் கட்டின வீட்டிலே.'' ''சிவே கவுடர் உங்களை வீட்டுக்குள் விட்டாத்தானே'' என்ற சொற்கள் அவள் வாயிலிருந்து வெளிவர முயற்சித்தாலும் அவள் அப்படிச் சொல்ல வில்லை. அந்தக் குடும்பத்தின் எல்லாச் சொத்துகளும் கோர்ட்டில் போய் விடும் என்று அவள் தெளிவாக அனுமானித்திருந்தாள். சிவே கவுடரிடமிருந்து இரண்டாயிரம் ரூபாய் கிடைக்கும் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. பணம் கிடைத்த போது அதுபற்றி அறிவுரை சொல்லும் துணிச்சல் அவளுக்கு இருக்கவில்லை. சொன் ஞல் வீண் தகராறு. கேவலமான வார்த்தைகளைக் கேட்க வேண்டியிருக்கும். அப்பொழுது அவளுக்கு ஆறு மாதம். கர்ப்பிணிப் பெண்கள் கெட்ட பேச்சுக்களைப் பேசக் கூடாது; கேட்கக் கூடாது. எப்பொழுதும் நல்ல சொற்களைக் கேட்டுக் கொண்டு மகிழ்ச்சியாக இருக்க வேண்டும், என்று அவள் சிறு வயதாயிருக்கும் போதே கேள்விப்பட்டிருக்கிறாள். முதல் இரண்டு குழந்தைகளை கர்ப்பமுற்றிருந்த போது ஏனோ இவ் விஷயம் அவள் நினைவுக்கு வரவில்லை. தற்போது அந்த எண்ணம் அவள் மனதில் நன்கு பதிந்தது. தினசரி துருவ சரித்திரம், பக்த பிரகலாதன், ராம பட்டாபிஷேகம் ஆகிய பாடல்களைப் பாடி வந்தாள். எப்பொழுதும் அந்தக் கதைகளிலேயே மனதை ஈடு படுத்தினாள்.

அன்று மதியம் கணவன் படுத்துக் கொண்டிருந்த பொழுது, மாமியாரின் கட்டளை பற்றிச் சொல்லி, ''தனியாகப் போகச் சொல்லிட்டார். எங்கே போறது? பிழைக்கறது எப்படின்னு யோசனை செஞ்சீங்களா?'' என்று கேட்டாள். ''உன் யோக்கிதை யைப் பார்த்து என் அம்மா அப்பிடிச் சொன்னா. நீயும் உன் கொழந்தைகளும் என்னவோ செஞ்சிக்குங்க.'' ''என் யோக்கிதை என்னன்னு ஊர்க்காரர்களுக்கெல்லாம் தெரியும். இப்ப அந்தப் பேச்சு வேண்டாம். இனி என்ன செய்யறது?'' ''நான் சொல் லலையா? நான் என் அம்மா கூட இருக்கப் போறேன்'' என்று சொல்லிக் கொண்டே, கணக்குப்பிள்ளை போர்வையை இழுத்து

மூடிப் போர்த்துக் கொண்டார். அவளுக்கு ஆத்திரம் வந்தது. ''என்ன பேச்சுப் பேசறீங்க. புத்தி சரியா இருக்கா, இல்லையா?''
''போடி கழுதை அப்பாலே, என் தூக்கத்தைக் கெடுக்காதே.''

நஞ்சம்மா மறுபடியும் பேசவில்லை. தாங்கள் பிரிந்து தனியே போவது நிச்சயம் என்பதை அவள் அறிந்திருந்தாள். ஆனால் மாமியார் தன் மகனையும் இப்படித் தனியாகப் பிரித்து விடுவார் என்று அவள் நினைக்கவில்லை. நிலமெல்லாம் போய்விட்ட நிலையில் மாமியார் எவ்வளவு காலம் மகனைத் தன்னுடன் வைத்துக் கொள்வாள், என்ற சந்தேகமும் இருந்தது. எப்படியானாலும் இனிமேல் குடும்பப் பொறுப்பு தன்னுடையதுதான். குழந்தைகளையும் சேர்த்து எல்லோரையும் காப்பாற்றும் பொறுப்பு தன் மீது விழுந்திருக்கிறது, என்பதை அவள் உணர்ந்து கொண்டாள். எப்படிச் சமாளிப்பது என்பது அவளுக்குப் புரியவில்லை. எவ்வளவு கஷ்டம் வந்தாலும், கர்ப்பிணிப் பெண்ணான தான் அழக்கூடாது, மனதை அலட்டிக் கொள்ளக் கூடாது என்று அவள் உறுதியாக இருந்தாள்.

கணவனுக்குத் தூக்கம் வந்த பிறகு குழந்தை ராமண்ணனை எடுத்துக் கொண்டாள். அவனைத் தோளின் மீது சாய்த்துக் கொண்டு, வலது கையால் பார்வதியைப் பிடித்துக் கொண்டு ஏரிக் கரையின் ஓரமாகக் கோவிலை நோக்கி நடந்தாள். மூச்சு வாங்கிக் கொண்டிருந்ததால் நிதானமாக நடந்து கோவிலின் வெளிக்கதவை அடைந்தபோது, மாதேவய்யா அப்பொழுதுதான் குளித்துவிட்டு வந்து காவி வேஷ்டியை உலர்த்திக் கொண்டிருந்தார். மண் அடுப்பின் மேல் ஒரு கலயத்தில் சோறு கொதித்துக் கொண்டிருந்தது. அவர், ''வாம்மா, வா. நானே உன் கொட்டகைக்கு வரணும்னு நினைச்சேன். மாமியார் என்ன சொல்வாரோன்னு நினைச்சு வரலை'' என்றார்.

''இனிமேல் மாமியார் எதையும் சொல்ற மாதிரி இல்லை. அதனால் நானே வந்தேன்.'' என்றாள்.

அந்தக் குடும்பத்தைப் பற்றி மாதேவய்யாவுக்கும், ஊர்க்காரர்களுக்கும் தெரியாத விஷயம் இல்லை. ஆகையால் எந்த விஷயத்தையும் தானே நேரடியாக விசாரிக்கும் தேவை அவருக்கிருக்கவில்லை. தனியாகச் சென்று விடுமாறு தன்னிடம் மாமியார் சொன்னதையும், தான் கணவனிடம் அதைப் பற்றிச் சொன்ன போது அவன் கூறிய பதிலையும் நஞ்சம்மா எடுத்துக் கூறினாள்.

''ரெண்டாயிரம் ரூபாய் வந்ததே. அதிலே கடனுக்குப் போக மீதி ஆயிரம் ரூபாய் இருந்திச்சாம். அந்த அம்மா ஜோசியன் பேச்சைக் கேட்டுப் பணத்தையெல்லாம் வாரிக்

கொட்டி ரிஷி பஞ்சமி பண்டிகை கொண்டாடி பணத்தைத் தொலேச்சிட்டாளே. நீ ஏன் சும்மா இருந்தே?''

''அய்யா, எல்லாம் போயாச்சு. அதுவும் போச்சு. நான் சொல்லியிருந்தாலும் என் பேச்சைக் கேட்டிருக்க மாட்டாங்க. வீணுக எதுக்கு சண்டை?''

''அது சரிதான்.''

மாதேவய்யா சோற்றையும், அவரைப் பருப்பையும் அலு மினியத் தட்டில் போட்டுச் சாப்பிட்டார். ஒவ்வொரு நாள் மதியமும் அவர் லிங்காயத்தார் வீட்டுக்குப் போய் யாசகம் வாங்கிச் சாப்பாட்டை முடிப்பார். ஆனல் மதியம் அதிக நேரம் கழிந்து விட்டால் யாசகம் போக மாட்டார். அன்று திங்கட் கிழமையாதலால் தூரத்தில் உள்ள கிராமங்களுக்குப் போய் வருவதற்கு மிகுந்த தாமதமாகிவிட்டது. ஆகையால் அவரே சமைத்துக் கொண்டார். அவர் நஞ்சம்மாவுக்கும், பார்வதிக்கும் சாப்பிட வெல்லக்கட்டி கொடுத்தார். பிறகு யோசனே செய்த வாறு சிறிது நேரம் அமர்ந்திருந்தார்.

''அய்யா, என் பிறந்த வீட்டு விஷயம் உங்களுக்குத் தெரியுமோ, இல்லேயோ? என் புகுந்த வீட்டு விஷயத்தை நான் இதுவரை யாரிடமும் பேசியதில்லே. ஆனல் எல்லோருக்கும் தெரியும். என் மாமியார் சுபாவம் சரியில்லே. இனிமேல் பிள்ளேப் பேற்றுக்கோ, வேறு எந்த நல்லது கெட்டதுக்கோ அவங்ககிட்டே போக முடியாது. என் பாட்டியை உதவிக்கு வரச் சொன்ன, அவ வருவா. அவளுக்கும் எழுபத்தஞ்சு வயசுக்கு மேலாச்சு. உடம்பிலே வலு இல்லே. ஆனலும் பாடுபடுரு. இருக்க ஒரு கையளவு நிழலும், சாப்பிட ஒரு பிடி சாதமும் வேணும். அதுக்கு என்ன செய்யறது? இந்தப் புண்ணியவான்க என்னேக் கைவிடும் போது நான் என்ன செய்ய முடியும்?''

மாதேவய்யா சற்று நேரம் யோசித்து விட்டு, ''சென்னேயா ரெண்டு நாள் போன தானகவே தேடிட்டு வருவார். அந்தக் கவலேயே வேண்டாம். குருபரஹள்ளி மணியகாரர் குண்டே கவுடரைத் தெரியுமில்லேயா? அவர்கிட்டே போய்க் கேட்டா, கைவிடமாட்டார். இந்த ஊர்லே உங்களுக்கு உதவி செய்யற வங்க யாருமில்லே'' என்ருர்.

சென்னிகராயரின் கணக்குப்பிள்ளே அதிகாரத்திற்குட்பட்ட கிராமம் குருபரஹள்ளி. கிராமத்தில் இருந்த நாற்பது வீட்டின

ரும் ஒரே ஜாதி. மணியகாரர் பெரிய தருமவான் என்று எல்லோரும் சொல்வதைக் கேட்டிருக்கிருள். அவர் மணியகாரர் ஆன நாளிலிருந்து அதுவரை அந்த ஊருக்குள் எந்தவிதமான திருட்டோ, கெட்ட விவகாரமோ நடந்தது கிடையாது. வயிற்றுக்குச் சோறு இல்லை என்ற காரணத்திற்காக யாரும் ஊரை விட்டு வெளியேறியது கிடையாது. ''கீழ் தெருவிலே அவருக்கு ஒரு வீடு இருக்குது. அது காலியாவே இருக்கு. அதுலே குடியிருக்கேன்னு சொல்லுங்க. வேண்டாம்னு சொல்லமாட்டார்,'' என்று மாதேவய்யா கூறினர்.

அதைக் கேட்டதும் நஞ்சம்மாவுக்கு அவருடைய வீட்டைப் பற்றிய நினைவு வந்தது. அதில் யாரும் குடியிருக்கவில்லை. அவர் அந்த வீட்டைக் கொடுத்தால் குடியிருக்கும் வீட்டைப் பற்றிய கவலை இல்லை. நஞ்சம்மா அவரைப் பார்த்திருக்கிருள். ஆனல் அதிகப் பரிச்சயம் கிடையாது. இவர்களுடைய அதிகார எல்லைக்குட்பட்ட மணியகாரரானதால் பலமுறை வீட்டிற்கு வந்திருக்கிருர். சில தடவை நஞ்சம்மா அவருக்குச் சாப்பாடு போட்டதுண்டு. தடித்த அடர்த்தியான வெள்ளை மீசை, அகன்ற முகம், வலது கை மணிக்கட்டில் விரல் பருமனில் தங்கக் காப்பு. மேலே கோட்டுப் போட்டிருந்தாலும் முழங்கால் தெரியும்படி தட்டுச் சுற்ருக வேஷ்டி, கால்களில் தடித்த தோல் செருப்பு.

''நாளைக்கு ஒன்பது பத்து மணிக்கு குருபரஹள்ளிக்குப் போங்க. நானும் வர்றேன். கவுடரைக் கேளுங்க. நானும் அவர் கிட்டே சொல்றேன். முடியாதுன்னு அவர் மறுத்துச் சொல்ல மாட்டார். சென்னையா, அம்மா கூட இருப்பதைப் பற்றி எதுவுமே பேச வேண்டாம்,'' என்று அய்யா கூறிய பிறகு நஞ்சம்மா தங்களுடைய கொட்டகைக்குத் திரும்பினுள்.

''எங்கேடி, சுத்தப் போயிட்டே, தேவடியா'' என்று கங்கம்மா கத்தியதை அவள் பொருட்படுத்தவில்லை.

நஞ்சம்மா மறுநாள் காலையில் எழுந்து குளித்துவிட்டு, குழந்தைகளையும் குளிப்பாட்டி சட்டை அணிவித்து, அவர்களுக்கு ரொட்டி கொடுத்து, தானும் சாப்பிட்டாள். பிறகு தலைசீவி, நெற்றியில் பொட்டு இட்டு, ராமண்ணனைத் தோளின் மேல் சாய்த்துக் கொண்டு, பார்வதியின் கையைப் பிடித்தவாறு வெளியே புறப்பட்டாள். அப்பொழுது எதிர்ப்புறம் மரத்தின் கீழே அமர்ந்திருந்த கங்கம்மா, ''எங்கேடி, புறப்பட்டே சனியனே?'' என்ருள். நஞ்சம்மா பதிலேதும் சொல்லாமல் நடந்து சென்ருள். சிறிது தூரம் சென்று திரும்பிப் பார்த்தாள்.

அவள் எங்கே போகிறுள், என்று கணவனே மாமியாரோ கவனித்ததாகத் தெரியவில்லை.

ராமஸந்திர கிராமத்திலிருந்து குருபரஹள்ளி இரண்டு மைல். இடையே மேட்டைக் கடக்க வேண்டும். ஒண்டியாகச் செல்ல நஞ்சம்மா பயப்படவில்லை. ஆனுல் தோளின் மீது குழந்தையைச் சுமந்து கொண்டு, மேடு ஏறும் போது கர்ப்பிணி யாக இருந்த அவளுக்கு நெஞ்சு வலித்தது. நான்கு வயதுக் குழந்தையான பார்வதி கால் வலிக்கிறது என்று சொல்லிக் கொண்டே நடந்தாள். நஞ்சம்மாவுக்கு துக்கம் பீறிட்டுக் கொண்டு வந்தது. அவள் குழந்தையைத் தரையின் மீது படுக்க வைத்து, தானும் தரையில் அமர்ந்து கண்ணீர் விட்டு அழுதாள். அவள் தன்னைப் பற்றி நினைத்துக் கொண்ட பொழுது மறுபடியும் கண்ணீர் வழிந்தது. அதைத் தன் புடவையால் துடைத்துக் கொண்டாள். எங்காவது கிணற்றிலோ குளத்திலோ குழந்தை களைப் போட்டு விட்டுத் தானும் செத்துப் போவது என்று ஒரு கணம் நினைத்தாள். கர்ப்பிணியாக இருக்கும் நிலையில் அதைப் போன்ற கெட்ட விஷயங்களை நினைக்கக் கூடாது, அழக் கூடாது என்று முடிவெடுத்து மனதைத் திடப்படுத்திக் கொண்டாள். எழுந்து மறுபடியும் குழந்தையைத் தூக்கிக் கொண்டு, பார்வதி யின் கையைப் பிடித்துக் கொண்டு நடக்க ஆரம்பித்தாள். மேட்டின் மீது ஏறியதும் குருபரஹள்ளி தென்பட்டது. ஊருக்கு மத்தியில் சிவன் கோவில். அதற்கருகில் குண்டே கவுடரின் வீடு. குண்டே கவுடருக்கு நல்ல மனதைக் கொடுக்குமாறு இறைவ னிடம் வேண்டியவாறு அவள் இறக்கத்தில் இறங்கி நடக்கத் துவங்கினாள்.

கவுடர் புகையிலையைக் குதப்பியவாறு திண்ணையில் அமர்ந் திருந்தார். நஞ்சம்மாவைப் பார்த்ததும் எழுந்து நின்று, ''வாம்மா, வா. மகாலட்சுமி மாதிரி வந்திருக்கே. கொழந் தைகளை எடுத்துகிட்டு வெய்யிலிலே வந்திருக்கியே'', என்றார். பிறகு உள்ளே பார்த்து, ''டீ! கணக்குப்பிள்ளையம்மா வந்தி ருக்காங்க, பார். ஒரு பாயைக் கொண்டாந்து விரி'', என்று குரல் கொடுத்தார். திண்ணையில் நஞ்சம்மாவும், குழந்தைகளும் உட்கார்ந்தார்கள். பார்வதியின் கையில் தேங்காய்த் துண்டு ஒன்றையும், வெல்லக் கட்டியையும் கவுடரின் மனைவி கொடுத் தாள்.

''எங்க சங்கதியெல்லாம் தெரியுமா கவுடரே?'' என்று நஞ்சம்மா பேச்சைத் துவக்கினாள்.

''எல்லாமே கேள்விப்பட்டேன். உன் மாமியார் ஒரு பெரிய தீவட்டிக் கொள்ளி. எல்லாத்தையும் எரிக்கிறதுதான் அவ வேலே. உன் மாமனுர் என்னேப் போல் சாதுவான ஆள். அவ வந்து சேர்ந்து எல்லாத்தையும் அழிச்சிட்டா. இனிமே நீ தான் குடும்பத்தைக் கட்டிக் காக்கனும்,'' என்ருர். பிறகு அவர் மனேவியின் பக்கம் திரும்பி, ''கணக்கு எல்லாம் இந்த அம்மா தான் எழுதறது. அந்த சென்னேயாவுக்கு என்ன தெரியும்? வெறும் தலேயாட்டி மாடு. புல் தின்னியான்னு கேட்டா ஒரு தலேயாட்டல். தண்ணி குடிச்சியான்னு கேட்டா ஒரு தலே யாட்டல். உன் புருஷனே இப்படிச் சொல்றேன்னு கோபிக் காதே,'' என்ருர்.

''ஏன் கோபம் வருது? அந்த ஆள் செய்யறது அப்படித் தானே'' என்ருள் கவுடரின் மனேவி.

இப்படிப் பொதுப்படையாக பேசிக் கொண்டிருக்கும் பொழுது கவுடரின் மனேவி உள்ளே சென்று மூன்று டம்ளர் நிரம்பப் பால் ஊற்றி, வெல்லம் போட்டுக் கொண்டு வந்தாள்.

''எனக்கு இப்ப பால் வேண்டாம்'' என்று நஞ்சம்மா கூறினுள்.

''பிள்ளேத்தாச்சி நீங்க. பால் வேண்டாம்னு சொல்லக் கூடாது. குடிங்க,'' என்ருள் கவுடரின் மனேவி.

''கவுடரே, உங்க வீட்டுப் பால் வேண்டாம்னு சொல்லலே. ஆனு எனக்கு ஒரு உதவி செய்யறதா, வாக்குக் கொடுங்க''.

''அதென்ன சொல்லம்மா''

''நீங்க தனியா போயிடுங்கன்னு, மாமியா நேத்து என் கிட்டே சொல்லிட்டார். அதனுலே தங்கறதுக்கு ஒரு இடம் வேணும்''.

''எடத்துக்கென்னம்மா, என் வீடு இருக்கு. அதுலே இருந் துக்கலாம். பால் குடி!'' என்ருர் கவுடர்.

குண்டே கவுடரிடம், அவள் வீட்டைப் பற்றி கேட்கும் முன்பே, அவர் ஒப்புதல் அளித்தார். 'உபகாரம் செய்வதென்ருல் அவருக்கு துளி தயக்கம் கூடக் கிடையாது,' என்று நஞ்சம்மா நினேத்துக் கொண்டாள். நஞ்சம்மா தன் குழந்தைகளுக்கு பால் புகட்டி விட்டுத் தானும் குடித்தாள். கவுடர், தன் மனேவியி டம், ''நான் சொல்லியிருக்கேனில்லேயா? அந்த அம்மா முக லட்சணத்தைப் பார். சீதா தேவியைப் போல இருக்கு,'' என்று புகழ்ந்தார்.

அப்பொழுது மாதேவய்யா அங்கு வந்து சேர்ந்தார். நஞ்சம்மா உட்கார்ந்திருந்ததைக் கவனித்தவாறு, திண்ணையில் வந்தமர்ந்தார். கவுடரின் மனைவி அவர் உட்காருவதற்குப் பலகை கொண்டு வந்து கொடுத்தாள். மாதேவய்யா, ஏதும் அறியாதவர் போல் நஞ்சம்மா வந்திருப்பதின் காரணத்தை விசாரித்தார். அவள் தங்குவதற்கு கவுடர் வீடு கொடுக்க ஒப்புக்கொண்டுள்ளார் என்பதைத் தெரிந்து கொண்டதும், அவர் கவுடரைப் பார்த்து, ''கவுடரே, தங்க இடம் கொடுத்திட்டீங்க. வீட்டிலே கால் நீட்டிப் படுத்துக் கிட்டிருக்கிறதா? சோத்துக்கு என்ன செய்யறது?'' என்றார்.

''கணக்குப்பிள்ளை வேலை இல்லையா? பாடுபட்டுச் சாப்பிடற ஆம்பளைக்கு அதைவிட வேறு என்ன வேணும்?''

''அந்த ஆம்பளை எப்படிப் பட்டவர்னு உங்களுக்குத் தெரியாதா?''

''அது ஒரு தேவடியா பிள்ளை. ஜோடியில் ஒரு மாடு சோனியாக இருந்தா, என்ன செய்றது?'' என்று சொல்லி நஞ்சம்மாவைப் பார்த்து, ''நீ சொல்றபடி கேட்டுட்டு இருக்கச் சொல்லு, அந்தத் தலையாட்டிகிட்டே. அப்பிடியிருந்தா வயத்துக்குக் கவலையில்லை'' என்றார்.

''சொல்றபடி கேட்டு நடக்கற வம்சமா, அது?'' என்று மாதேவய்யா கவலைப்பட்டார்.

''எல்லாம் தலையெழுத்து'' என்று அங்கலாய்த்தாள், கவுடரின் மனைவி.

அதற்குள் மதியமாகிவிட்டது. சாப்பிடாமல் புறப்படக் கூடாது என்று கவுடரும், அவர் மனைவியும் பிடிவாதம் செய்தார்கள். கவுடரின் மனைவி நான்கு பித்தளைப் பாத்திரங்களையும், இரண்டு குடங்களையும் கொண்டு வந்து வைத்தாள். கோவிலுக்கு எதிரே இருந்த கிணற்றில் நஞ்சம்மாவும், மாதேவய்யாவும் தனித்தனியே நீர் இறைத்துக் கொண்டார்கள். கோவில் திண்ணையில் மூன்று கற்களை வைத்து, தனித் தனி உலைகளில் சோறு சமைத்து, மோர், ஊறுகாய், உப்பு போட்டுக் கொண்டு சாப்பிட்டனர். குழந்தைகளுக்குப் பால் கொடுத்தாள் நஞ்சம்மா. கவுடர் வண்டியைப் பூட்டி நஞ்சம்மாவையும், குழந்தைகளையும் ஏற்றிக் கொண்டு ராமஸந்திர கிராமத்துக்குப் புறப்பட்டார். மாதேவய்யாவும் அதே வண்டியில் ஏறிக் கொண்டார்.

4

கோட்டகையை விட்டு ஊருக்குள் நுழைந்த கங்கம்மா தன் வீட்டுக் கதவைத் திறந்தாள். அவளும் அப்பண்ணய்யாவும் வீட்டில் படிந்திருந்த தூசியைப் பெருக்குவதற்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தனர். அப்பொழுது சிவே கவுடர் வீட்டு ஆள், கையில் ஒரு பூட்டை வைத்துக் கொண்டு, ''உங்க சாமான்களே எடுத்துகிட்டுப் போகணுமாம். வீட்டைப் பூட்டி கிட்டு வரச் சொன்னரு கவுடர்,'' என்று கூறினன்.

''எந்தத் தேவடியா மகன் அப்படிச் சொன்னது.''

''சிவே கவுடர், அம்மா''

''அய்யோ, அவனேட வீடு பாழாய்ப் போகட்டும். நெலம் எல்லாம் போச்சு. வீட்டையும் எடுத்துக்க இது என்ன அவன் அப்பன் வீட்டுச் சொத்தா?'' என்று சொல்லிக் கொண்டே, கங்கம்மா அவருடைய வீட்டின் எதிரே போய் நின்று கொண்டு கூப்பாடு போட்டாள். ''வீடு உன் அப்பன் சொத்துன்னு நினேச்சுகிட்டியாடா? கோர்ட்டிலே தீர்ப்பு சொன்னது நிலத்துக்கு மாத்திரம் தான்.''

''வேணும்னு திப்டூருக்குப் போய் விசாரிச்சுகிட்டு வாம்மா. நீயும் உன் பிள்ளேங்களும் எழுதிக் கொடுத்த பத்திரம் இரும்புப் பெட்டியிலெ தான் இருக்கு. கொண்டு வந்து காட்டட்டுமா?'' என்று கேட்டபடியே கவுடர் வெளியே வந்தார்.

''அய்யோ, இவனேட குடும்பம் பாழாப் போக'' என்று கங்கம்மா சபித்தாள். வேறு ஒன்றும் அவளுக்குச் சொல்லத் தெரியவில்லே. சிறிது நேரம் அப்படியே கல்லாய்ச் சமைந்து நின்ருள். பிறகு கேட்டாள், ''அப்படின்னு நாங்க எங்கே போய்த் தொலேயறது? மணியக்காரா, நீயே சொல்லு.''

''வீடு இல்லாதவங்களுக்கெல்லாம் வீடு கட்டித் தர்றேன்னு சொல்லி, நான் மணியக்காரன் வேலே பார்க்கலே. சும்மா போம்மா,'' என்று சொல்லி அவர் வீட்டினுள் சென்று, ''படீர்'' என்று கதவைச் சாத்திக் கொண்டார்.

''மோசடி செஞ்சு சொத்தைப் புடுங்கிகிட்ட இவன் குடும்பம் பாழாய்ப் போகட்டும். எனக்கு வேறே யாரும் இல்லேயா?'' என்று சொல்லியவாறு, ரேவண்ண செட்டியை நாடிச் சென்ருள், கங்கம்மா. அவனிடம் விஷயத்தைச் சொல்லி, ''உன் மாட்டுக் கொட்டில்லே ஒரு பக்கமா தென்னங் கீத்து வைச்சு தடுத்து, நானும் ரெண்டு பிள்ளேகளும் இருந்துக்கரேம், சரியா?'' என்ருள்.

''அம்மா, என் வீட்டுப் பசு கன்னுக்குட்டி போட்டா, அதைக் கட்டறதுக்கு இடமில்லே. நீங்க எப்படி இருக்க முடியும்? அய்யா சாஸ்திரி உங்க ஜாதிக்காரர். அவர்கிட்டே கேட்டுப் பாருங்க'' என்றான் அவன். ''என் பணத்தையெல்லாம் ஏப்பம் விடற வரைக்கும், நான் தேவையா இருந்தேன், இந்தத் தேவடியா மகனுகளுக்கு'' என்று திட்டினாள். அய்யா சாஸ்திரி களிடம் வீட்டைப் பற்றிப் பேசினாள். அங்கும் இடம் கிடைக்க வில்லை. ''என் கிட்டே பணம் இருந்த வரைக்கும் சுரண்டி கிட்டு, இப்ப ஒரு கையளவு இடம் இல்லேன்னு சொல்றியா, திருட்டு ஜோசியா?'' என்று தெருவில் நின்று கூச்சல் போட ஆரம்பித்தாள். அவருக்குக் கொஞ்சம் பயம் ஏற்பட்டது. மாட் டுத் தொழுவத்தில் இடம் கொடுக்க அவருக்கு விருப்பமிருக்க வில்லை. ஆனால் வசைச் சொற்களையும் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. கடைசியில் அண்ணா ஜோசியனை அழைத்துப் பேசி ஒரு வழி செய்தார். ஊருக்குக் கிழக்கே ஆஞ்சநேயர் கோவில் இருந்தது. நான்கு அங்கண அளவில் செங்கல் கட்டிடம். அதற்குக் கதவும் பூட்டும் உண்டு. அண்ணா ஜோசியன் தான் அந்தக் கோவில் பூசாரி. மூன்று பேர் தாராளமாக இருக்கலாம். ஆனால் அதற்கு கிராமத்து முக்கியஸ்தர்கள் ஒப்புக் கொள்ள வேண்டும். அதாவது மணியகாரர், கணக்குப்பிள்ளை, பஞ்சா யத்து போர்டு தலைவர், உறுப்பினர்கள் ஆகியோர் ஒப்புக் கொள்ள வேண்டும். மணியகாரராகவும், பஞ்சாயத்துத் தலைவ ராகவும் உள்ள சிவே கவுடர் ஒப்புக்கொள்வாரா?

''கங்கம்மா, நீ கொஞ்சம் பணிஞ்சு பேசணும். நடுத் தெருவிலே நின்னுகிட்டு, முண்டை மகன், தேவடியா மகன் அப்பிடின்னெல்லாம் பேசக்கூடாது'' என்று அய்யா சாஸ்திரிகள் அறிவுரை வழங்கினார். ''நான் எந்தப் பயகிட்டேயும் பயப்பட மாட்டேன்'' என்று கங்கம்மா பதில் சொன்னாள்.

இரண்டு ஜோசியர்களும் சிவே கவுடரின் வீட்டிற்குத் தூது போனார்கள். இவர்கள் திட்டத்திற்கு அவர் முதலில் ஒத்துக் கொள்ளவில்லை. ஆனால் அவருடைய மனைவிக்கு ஒரு பயம் உள்ளூர இருந்தது. ''கங்கம்மாவோட நாக்கு பொல்லாதது. அதுலே மச்சம் இருக்கு. அவ நடுத் தெருவிலே நின்னுகிட்டு மண்ணை வாரி சாபம் கொடுப்பா. ஆஞ்சநேயர் கோவில் அவங்க ஜாதிக்காரங்களோடதுதான். அதுலே அவ இருந்துகிட்டுப் போகட்டுமே'' என்று அவள் கணவனை உள்ளே அழைத்துக் கவலையோடு காதில் கிசுகிசுத்தாள். சிவே கவுடரும் முடிவாக வெளியே வந்து, ''சரி, பொழச்சிப் போகட்டும்'' என்றார்.

அவர்கள் ஆஞ்சநேயர் கோவிலில் வந்து தங்கியதால் அண்ணு ஜோசியருக்கும் ஒரு சௌகரியம் ஏற்பட்டது. கோவில் பூசாரிக்கென ஐந்து ஏக்கர் புஞ்சையும், ஒரு ஏக்கர் நஞ்சையும் கொடுத்திருந்தார்கள். அண்ணு ஜோசியன் நிலத்தின் வருமானத்தை அனுபவித்து வந்தான். ஆனுல் தினசரி கோவிலுக்கு வந்து பிரகாரத்தைப் பெருக்கிக் கழுவி சுவாமிக்கு பூஜை, அபிஷேகம் செய்ய அவனுல் முடியவில்லை. அனேக நாட்களில் சுற்று வட்டாரக் கிராமங்களில் ஏதாவது தட்சிணை வாங்குவதற்குப் போய் விடுவான். சுற்றுப் பிரகாரங்களில் குப்பை கூளங்கள் நிரம்பி பறவைகளின் எச்சம் விழுந்து நாற்றமடித்துக் கொண்டிருக்கும் நாட்களும் உண்டு. அப்பொழுதெல்லாம் சுவாமிக்கு அபிஷேகமோ, பூ வைத்துப் பூஜையோ கிடையாது. வெளிக் கதவின் சாவித் துவாரத்தின் வழியே பார்த்தால் சுவாமியும் பிரகாரமும் தெரியும். பல தடவை சிவே கவுடர் பூசாரியைப் பற்றிப் புகார் செய்ததுண்டு. ஊர் ஜனங்களுக்கும் இந்த விஷயம் தெரியும். அவர்களும் பூசாரியைக் கண்டிப்பதுண்டு.

அண்ணு ஜோசியன் அப்பண்ணய்யாவை அழைத்து, ''இங்கே பார், உங்களுக்குக் கோவில்லே இடம் கொடுத்திருக்கேன். அதனுலெ தினசரி மண்டபம், பிரகாரம் இவைகளையெல்லாம் நல்லாப் பெருக்கித் தண்ணீர் விட்டுக் கழுவி விடணும். குப்பை கூளம் இருக்கக் கூடாது. ஆசாரமாக சுவாமிக்கு அபிஷேகம் செய்து, அகத்திப் பூ வைத்து பூஜை செய்யுணும். நீ பூஜை செய்யும் விஷயத்தை யார்கிட்டேயும் வெளியே சொல்லக் கூடாது. சொன்னு கோவிலை விட்டு விரட்டிடுவேன். நானும் சில நாள் பூஜை செய்வேன்'' என்றுன்.

அப்பண்ணய்யா ஒப்புக் கொண்டான். கங்கம்மாவும் சுவாமி பூஜை வேண்டாம் என்று சொல்லக் கூடியவள் அல்ல. அவளுடைய தெய்வ பக்தி ஆழமானது. சென்னிகராயருக்கு பூஜை மந்திரங்கள் எல்லாம் அத்துப்படி.

## 5

நஞ்சம்மாவின் திருமணத்தின் போது அவளுடைய தாய் வீட்டார் அவளுக்குப் போட்டிருந்த ஒட்டியாணம், ஒரு ஜோடி வளையல், வெள்ளிக் காப்பு முதலியவற்றை கணக்குப் புஸ்தகங்கள் வைக்கும் பெட்டியின் அடிப்பாகத்தில் ஒரு மூலையில் அவள் போட்டு வைத்திருந்தாள். அவள் கணவனிடம் அதைப் பற்றிக் கேட்டாள். அவர் சரியான பதில் சொல்லவில்லை. மறுபடியும் அதைப் பற்றிக் கேட்ட பொழுது, ''உன் அப்பன் வீட்டிலே

கொடுத்தது அப்படியே இருக்குமோ? செலவாப் போச்சு'' என்று சொல்லிவிட்டார்.

''அது எப்படிச் செலவாகும்? என்ன செஞ்சீங்க?'' என்றாள்.

''கோர்ட்டுக்காக செலவாச்சு.''

''என்ன செஞ்சீங்க?''

''வட்டிக்காரன்கிட்டே அம்பது ரூபாய்க்கு அடகு வைச்சேன். வேணும்னு பணம் கொடுத்து வாங்கிக்க.''

''வைச்சு எத்தனை நாளாச்சு?''

''போன தீபாவளிப் பண்டிகை சமயத்திலே''

அதாவது ஏழு மாதங்களாகிவிட்டது. வட்டியே ஐம்பது ரூபாய்க்கு அதிகமாயிருக்கும். நூறு ரூபாய் கொடுத்து அவை களைத் திரும்பப் பெறுவது என்பது கனவிலும் நடக்காத காரியம்.

''என் பிறந்த வீட்டிலே கொடுத்ததை என்னைக் கேட்காமே எதுக்காகத் தொட்டீங்க?''

''கொண்டுபோய் வைன்னு அம்மா சொன்னு, வைச்சேன்.''

தன்னுடைய பொறுமையை எப்பொழுதும் கைவிடக் கூடாது, என்று அவள் முடிவு செய்திருந்தது நடக்கவில்லை. வீட்டுப் பாத்திரம் பண்டங்கள் எதையும் மாமியார் அவளுக்குக் கொடுக்கவில்லை. அவளுடைய தாய் வீட்டார் கொடுத்திருந்த அண்டா, குண்டா, தவலை எதையும் மாமியார் கொடுக்கவில்லை. ஏதோ கொஞ்சம் தங்கமாவது இருந்திருந்தால் கஷ்டத்திற்கு உதவியாக இருந்திருக்கும். புதுக் குடித்தனம் ஆரம்பிக்க ஒரு செம்புகூட இருக்கவில்லை. வீட்டில் ஒரு பிடி அரிசியும் கிடை யாது. இந்த நிலையில் பிள்ளைப் பேறு நடந்தாக வேண்டும். பிள்ளைப் பேற்றுக்காக பிறந்த வீட்டுக்குப் போகும் நிலைமை கிடையாது. அண்ணி அப்படிப்பட்டவள்.

அவளுடைய பொறுமை எல்லை மீறி விட்டது. ''ஆம்பிளைன்னு சுயமா சம்பாதிச்சு பெண்டாட்டிக்குத் துணி மணி வாங்கித் தரணும். ஆனு இங்கே அம்மாவும் மகனும் சேர்ந்து எனக்குப் பிறந்த வீட்டிலே கொடுத்ததைக்கூட எனக்குத் தெரியாம அழிச்சிப் போட்டுட்டீங்களே! உங்களுக்கெல்லாம் வெட்கம், மானம், ரோஷம் எதுவும் கிடையாதா?'' என்றாள்.

சென்னிகராயர் பேசவில்லை. ஆட்டுக்கிடாவைப் போல் கண்களை உருட்டினார். ''இப்ப கொழந்தைங்க வயத்துக்கு என்ன செய்யறது? கோர்ட்டுக்குப் போக வேண்டாம்னு கிளிப்பிள் ளைக்குச் சொல்றது போலச் சொன்னேன். இப்ப எல்லாத்தை யும் தொலைச்சிட்டு வெறுங் கையோடு நிக்கறீங்க.''

சென்னிகராயரால் பதில் சொல்ல முடியவில்லை. அவருக்குக் கோபம் வந்தது. அவளைத் திட்ட வேண்டுமென்று நினைத்தார். ''முண்டை...முண்டை...'' என்று மூன்று முறை தணிந்த குரலிலும் இரண்டு முறை உரத்த குரலிலும் கூறினார். பிறகு அங்கிருந்து கோபமாக வெளியேறினார். நஞ்சம்மாவுக்கு துக்கம் பீரிட்டது. அங்கேயே உட்கார்ந்து பத்து நிமிடங்கள் அழுது ஓய்ந்த பிறகு கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

அவள் மாதேவய்யாவிடம் ஐந்து ரூபாய் கடன் வாங்கிக் கொண்டாள். மறுநாள் காலை குழந்தைகளைக் கணவனிடம் ஒப்படைத்துவிட்டு, நெசவாளர் தெரு புட்டம்மாவை அழைத் துக் கொண்டு சண்ணேனஹள்ளி கிராமத்திற்குச் சென்றாள். ராமஸந்திர கிராமத்திலிருந்து மூன்று மைல் தொலைவிலிருந்தது அந்தக் கிராமம். அங்கே சென்று குடித்தனத்திற்கு வேண்டிய மண்பாண்டங்களையெல்லாம் வாங்கினாள். புட்டம்மா பேரம் பேசியதால் பன்னிரண்டணாவுக்கு எல்லாம் வாங்க முடிந்தது. அவர்களிருவரும் வெயிலில் அவற்றைத் தூக்கிக் கொண்டு நடந்து வந்தனர். ஊருக்கு வந்து சேர்ந்த பொழுது உச்சிப் பொழுது ஆகிவிட்டது. சாமான்களை குண்டே கவுடரின் வீட் டில் வைத்துப் பூட்டிவிட்டுக் கொட்டகைக்குச் சென்ற பொழுது மாமியாரும் மைத்துனரும் ஆஞ்சநேயர் கோவிலுக்கு சாமான் களைக் கொண்டுபோய், கொட்டகையைக் காலி செய்திருந்தனர். கொட்டகையின் எதிரே குழந்தை அழுது கொண்டே உட்கார்ந் திருந்தான். சென்னிகராயரையும் பார்வதியையும் காணவில்லை. குழந்தையைக் கையில் எடுத்துக்கொண்டு அருகில் இருந்த குளத்தில் உடம்பு கைகால் ஆகியவற்றைக் கழுவி சுத்தப்படுத்தி னாள். அதிர்ஷ்டவசமாக குழந்தை குளத்தருகே சென்றிருக்க வில்லை. உடனே பார்வதியைப் பற்றிய நினைவு வந்தது. எல் லோரும் கொட்டகைகளில் இருந்து சாமான்களை அப்புறப்படுத் தும் வேலையில் ஈடுபட்டிருந்தனர். குழந்தையைத் தூக்கிக் கொண்டு ஊருக்குள் வந்தாள். அவர்களுடைய பழைய வீட் டுக்கு எதிரே இருந்த கோவிலுக்கு மாதேவய்யா தன்னுடைய பொருள்களைக் கொண்டு வந்து கொண்டிருந்தார். சென்னிகராயர் கோவில் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு புகையிலை மென்று

கொண்டிருந்தார். ''பார்வதி எங்கே?'' என்று அவரிடம் கேட்டாள். அவர் எழுந்து வந்து வாயிலிருந்த புகையிலைச் சாற்றைத் துப்பிவிட்டு ''எனக்கென்ன தெரியும்? எங்கேயாவது தேடிப் பார்'' என்றார்.

''அய்யா, இவர்கிட்டே கொழந்தையைப் பார்த்துக்கச் சொல்லிட்டு, மண்பானை வாங்கறதுக்குப் போனேன், வந்து பாத்தா, பார்வதியைக் காணோம். இவர் இப்படிச் சொல்றார்'' என்று மாதேவய்யாவிடம் நஞ்சம்மா புகார் கூறினாள்.

''என்னங்க காலையிலிருந்து இங்கேயே உக்காந்திருக்கீங்களே, குழந்தை எங்கே?'' என்று அவர் கேட்டதும் ''அந்த சனியன் எங்கே போச்சோ? ஓர் இடத்தில் உக்காந்தாத்தானே!'' என்றார் சென்னிகராயர்.

குழந்தையைத் தேடிக் கொண்டு நஞ்சம்மாவும் மாதேவய்யாவும் வெவ்வேறு இடங்களுக்குப் போனார்கள். மீனவர் குப்பத்தில் குழந்தையைப் பார்த்ததாக யாரோ சொன்னார்கள். நஞ்சம்மா அங்கே போனாள். ஒரு குடிசையின் எதிரே பார்வதி அழுது கொண்டே நின்றிருந்தாள். சாமான்களை அப்புறப் படுத்தும் வேலையில் எல்லோரும் ஈடுபட்டு இருந்ததால் குழந்தையை யாரும் கவனிக்கவில்லை.

நஞ்சம்மா பார்வதியின் கையைப் பிடித்து நடத்திக் கூட்டிக் கொண்டு வந்தாள். வீட்டின் நிலைமையை உணர்ந்து, மாதேவய்யா தானாகவே ஒரு முறத்தில் இரண்டுபடி ராகி மாவு, சிறிது அவரைப் பருப்பு, மிளகாய்ப் பொடி, உப்பு, புளி, காய்கறி முதலியவற்றைக் கொடுத்தார். பசியால் குழந்தைகள் அழுது ரகளை செய்து கொண்டிருந்தனர். வெய்யிலில் ஆறு மைல் தூரம் நடந்து வந்ததினால் அவளுக்கு கண் இருண்டு வந்து மயக்கமடைவது போல் களைத்திருந்தாள்.

களைத்துப் போய் இருந்தாலும் வேலை செய்யாமல் இருக்க முடியாது. எழுந்து போய் ஒரு பானையில் தண்ணீர் கொண்டு வந்தாள். அடுப்பில் பானையை வைத்து நீரை ஊற்றினாள். ஒரு கட்டு தென்னை மட்டைகளையும் ஓலையையும் மாதேவய்யா கொண்டு வந்து போட்டார். ஒரு கலயத்தில் அவரைப் பருப்புக் குழம்பும் மற்றொன்றில் ராகிக் களியும் செய்தாள். சமையல் முடியும் போது மணி நான்கு. பார்வதி பசியைத் தாங்கமாட்டாமல் களியை குழம்பில் தோய்த்து ''லபக், லபக்'' என்று அவசரமாக விழுங்கினாள். ராமண்ணன் அவளைவிட சிறிய

குழந்தையாக இருந்தபடியால் அவனால் களியைத் தின்ன முடிய வில்லை. வேண்டாமென்று ரகளை செய்தான். ஆகையால் அவனுக்காக ஒரு ராகி ரொட்டி செய்தாள். அவன் அதைக் குழம்பில் ஊற வைத்துக் கடித்துக் கொண்டிருந்தான். கடைசி யில் அரை ரொட்டி மிஞ்சியிருந்தது.

அப்பொழுது சென்னிகராயர் வந்தார். சமையலறைக் கதவுக்கு வெளியே நின்றவாறு உள்ளே எட்டிப் பார்த்தார். பிறகு வீட்டுக்கு வெளியே சென்று எங்கிருந்தோ பெரிய வாழை யிலைத் துண்டு ஒன்றைக் கொண்டு வந்தார். நேரே சமையலறைக் குள் புகுந்து நஞ்சம்மாவுக்கு எதிரில் அடுப்பருகில் இலையைப் போட்டுக் கொண்டு சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண் டார். அவள் சமைக்கும் போது கணவன் சாப்பிட வருவானா மாட்டானா என்றெல்லாம் யோசிக்கவில்லை. குழந்தைகளின் பசியைப் பற்றிய எண்ணமே அவளுடைய உள்ளத்தை வாட்டிக் கொண்டிருந்தது.

கணவன் இப்பொழுது எதற்காக இங்கே வந்தார்? அம்மா வுடன் இருப்பதாகச் சொன்னவர் ஏன் வந்தார்? அங்கே இன்னும் களி செய்யவில்லையா? அல்லது பெண்டாட்டி வீட்டில் போய்ச் சாப்பிடு என்று மாமியார் சொல்லிவிட்டாளா? அல்லது இவ ராகவே வலிய வந்துவிட்டாரா? நஞ்சம்மா இருக்கிறாளா, இறந்துவிட்டாளா என்று கூட காலையில் இருந்து எட்டிப் பார்க்க வில்லை. குழந்தைகளைப் பற்றிய கவலையே கிடையாது. களி செய்ய ஒரு பானைத் தண்ணீர் கூட இறைத்துத் தரவில்லை. இப் பொழுது தனக்கென்று ஒரே ஒரு இலையைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார். இவருக்கு பரிமாறுவதா, வேண்டாமா? என்று கூட யோசிக்கவில்லை. அங்கே இருக்கப் பிடிக்காமல் குழந்தைகளை எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள்.

ஏற்கனவே இரண்டு குழந்தைகளும் தூங்கி வழிந்து கொண் டிருந்தனர். அவர்களைப் படுக்க வைக்க ஒரு பாய் கூட இருக்க வில்லை. அவளுடைய பழைய புடவையை விரித்துப் போட்டுப் படுக்க வைத்தாள். அவளும் களைத்துப் போயிருந்தாள். வலது கையைத் தலைக்கடியில் வைத்துக் கொண்டு குழந்தைகளுக்கருகில் படுத்துக் கொண்டாள். எழுந்து போய் கணவனுக்குப் பரிமாற வேண்டும் என்று ஒரு கணம் நினைத்தாள். 'அவர் கூப்பிட்டால் போய்ப் பரிமாறுவோம்' என்று மறுபடியும் நினைத்துக் கொண்டு பேசாமல் படுத்துவிட்டாள். காலையில் இருந்து வேலை செய்த அசதியாலும், பசியாலும் அப்படியே தூங்கிவிட்டாள்.

அவள் கண் விழித்த போது வெளியே சூரியன் மறையும் நேரமாகிவிட்டிருந்தது. வெய்யில் தணிந்து கொண்டிருந்தது. கணவன் சாப்பிட்டு விட்டுப் போய்விட்டாரு அல்லது கோபித்துக் கொண்டு சாப்பிடாமல் போனுரு என்பது அவளுக்குத் தெரியவில்லை. உள்ளே சென்று பார்த்தாள். கணவன் சாப்பிட்டு விட்டுச் சென்ற இலை அங்கே இருந்தது. அவள் ஐந்து உருண்டைக் களி செய்திருந்தாள். பார்வதி அரை உருண்டை தின்ருள். மீதி நாலரை உருண்டைக் களி இருந்தது. ஆனுல் இப்போது பார்த்த பொழுது அரை உருண்டை மட்டுமே இருந்தது. கலயத்தின் அடியில் கொஞ்சம் குழம்பு இருந்தது. அதை மாத்திரம் அவர் மனைவிக்கு விட்டுப் போனுரா அல்லது வயிற்றில் இடமிருக்கவில்லையா என்பது அவளுக்குத் தெரியவில்லை. அவளுடைய வயிறு பசியினுல் பற்றி எரிந்தது. அந்த அரை உருண்டையைத் தின்று விடலாம் என்று கை வைத்தாள். ஆனுல் இரவு குழந்தைகள் எதைச் சாப்பிடுவது? ஒன்றரை ஆழாக்கு மாவு இருந்தது. அதில் ரொட்டி சுடலாம். ஆனுல் கணவன் விட்டுப் போயிருந்த அரை உருண்டையைச் சாப்பிட மனம் செல்லவில்லை. பேசாமல் எழுந்து வந்து வெளியே தூணுக்கருகில் அமர்ந்தாள்.

குழந்தைகள் இன்னமும் தூங்கிக் கொண்டிருந்தனர். அப்பொழுது பொழுது மறையும் நேரம். அந்த வேளையில் தூங்கக் கூடாது. ஆகையால் குழந்தைகளைத் தட்டி எழுப்பினுள். தானும் குழந்தைகளும் காலையிலிருந்து குளிக்கவில்லை என்பது அப்பொழுதுதான் அவளுக்கு நினைவு வந்தது. முகம் கழுவி குங்குமம் வைத்துக் கொள்ள வேண்டும். குங்குமச் சிமிழ் கூட மாமியார் வீட்டில் இருந்தது. அதைத் தருவாரோ மாட்டாரோ என்பது தெரியாது. வீட்டில் விளக்குப் பற்ற வைக்க ஒரு மண் எண்ணை விளக்கு கூட இல்லை. அவளிடம் நான்கு கால் ரூபாய் நாணயங்கள் இருந்தன. குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு வீட்டைப் பூட்டி விட்டு நெசவாளர் தெருவிலிருந்த சென்ன செட்டியார் கடைக்குப் போனுள். அங்கே இரண்டு மண் எண்ணை விளக்குகள், ஒரு பாட்டில் நிரம்ப மண் எண்ணை, ஒரு தீப்பெட்டி ஆகியவைகளை வாங்கிக் கொண்டாள். மொத்தம் மூன்றரையணு. ஆறு காசு கொடுத்து குழந்தைகளுக்கு மிட்டாய் வாங்கினுள். வீட்டிற்கு வந்த பிறகு தன் பழைய புடவையின் நுனியைக் கிழித்து அதை விளக்கினுள் திரியைப் போல் செருகி, எண்ணை ஊற்றி, விளக்கைப் பற்ற வைத்தாள். அந்த வெளிச்சத்தில் மற்ற விளக்கிற்கும் திரியைப் போட்டாள். பிறகு என்ன செய்வது என்று தெரியவில்லை. வேலை செய்வதற்கு உடம்பில் சக்தியும் இருக்கவில்லை. சோர்ந்து போய் தூணின் மேல் சாய்ந்து

உட்கார்ந்து கொண்டாள். இரண்டு குழந்தைகளும் அவளுடைய மடியில் படுத்துக் கொண்டனர். புதிய இடத்தில் குழந்தைகளுக்கு ஒருவிதமான பயம்.

சிறிது நேரம் சென்றபின் அவள் இரண்டு குழந்தைகளையும் உள்ளே கூட்டி வந்து மிஞ்சியிருந்த அரை ரொட்டியையும் அரை உருண்டைக் களியையும் கொடுத்தாள். ராமண்ணன் சாப்பிட்டு விட்டு கொஞ்சம் வைத்து விட்டான். பார்வதியும் கொஞ்சம் சாப்பிடாமல் வைத்து விட்டாள். நஞ்சம்மா மீதியிருந்த ரொட்டியையும், களியையும் குழம்பில் புரட்டிச் சாப்பிட்டாள். மீதி இருந்த ஒன்றரை ஆழாக்கு மாவில் ரொட்டி தட்டிச் சாப்பிடலாம் என்று நினைத்தாள். மறுபடியும் ஏதோ சலிப்படைந்து பேசாமல் எழுந்து, விளக்கை கையில் எடுத்துக் கொண்டு, குழந்தைகளுடன் கூடத்திற்கு வந்தாள். அப்பொழுது சென்னிகராயர் படுக்கையைச் சுருட்டித் தோளின் மீது வைத்துக் கொண்டு வந்தார். 'குழந்தைகளிடம் அக்கறை கொண்டு படுக்கையை எடுத்து வந்தாரோ?' என்று அவள் நினைத்தாள். அந்தப் படுக்கையைப் பிரித்துப் பார்த்தாள். அவள் ''பெரியவள்'' ஆன சீருக்காக அவளுடைய பிறந்த வீட்டில் கொடுத்திருந்த இரண்டு விரிப்புக்கள். இரண்டு ஜமக்காளங்கள், தலையணைகள், கருப்புக் கம்பளிப் போர்வை ஆகியவை இருந்தன. குழந்தைகளின் மூத்திரத்தில் ஊறிப் போய் ஒரு விரிப்பு நைந்து போயிருந்தது. கம்பளியும் பாதியளவு கிழிந்து விட்டது. ஒரு விரிப்பின் மேல் குழந்தைகள் இருவரையும் கிடத்திவிட்டு, அருகிலேயே ஒரு ஜமக்காளத்தை விரித்துத் தலையணையை வைத்துக் கொண்டாள். கணவனுக்குத் தனியாகத் தாழ்வாரத்தில் படுக்கையை விரித்தாள். அதைப் பார்த்துக் கொண்டிருந்த சென்னிகராயர் மனைவியை நோக்கி ''என் படுக்கையை உன் பக்கத்தில் ஏன் போடலே?'' என்று கேட்டார். அவள் பேசவில்லை. குழந்தையைப் படுக்க வைத்து முதுகைத் தட்டிக் கொண்டிருந்தாள்.

''தனியாகப் படுக்கத்தான் நான் அங்கிருந்து கஷ்டப்பட்டு படுக்கையைத் தூக்கி வந்தேனு?''

அவள் அப்பொழுதும் பேசவில்லை.

''ஏண்டி முண்டை பேசாமலிருக்கே?''

அவள் பொறுமையுடன் பதில் சொன்னாள் ''எனக்கு இப்ப ஆறு மாசம்.''

''அதனால் என்ன?'' என்று சொல்லிக் கொண்டே அவர் தன் படுக்கையை அவளுடைய ஜமக்காளத்திற்கு அருகிலேயே இழுத்துப் போட்டார். அவர் விளக்கை எடுத்துக் கொண்டு சமையலறைக்குப் போய் அங்கிருந்தே இரைந்தார்.

''எனக்கு ஏன் ஒண்ணும் வைக்கலே?''

''மத்தியானம் நீங்க சாப்பிட்டு என்ன மீதி வைச்சுட்டுப் போயிருக்கீங்க, இப்ப வைக்கறதுக்கு?'' அவள் சொன்னாள். அவர் பதில் சொல்லவில்லை. முறத்தில் இருந்த மாவுடன் உப்பைச் சேர்த்துப் பிசைந்தார். அடுப்பைப் பற்ற வைத்தார். இரண்டு வரட்டு ரொட்டி சுட்டார். பிறகு சுடச்சுட அவைகளைத் தின்றுவிட்டுப் பானையிலிருந்த நீரையும் குடித்து விளக்கை எடுத்துக் கொண்டு கூடத்திற்கு வந்தார். அப்பொழுது இரண்டு குழந்தைகளும் நன்கு தூங்கி விட்டன. அவர் தன் படுக்கையில் படுத்துக் கொண்டார். நஞ்சம்மா கண்ணை மூடிப் படுத்திருந்தாள். ஆனால் அவளுக்குத் தூக்கம் வரவில்லை. காலையிலிருந்து ஏதும் சாப்பிடாததால் வயிற்றில் எழுந்த எரிச்சலும், சங்கடமும் அவளை வாட்டின. கர்ப்பிணி பட்டினியாக இருக்கக் கூடாது. தனக்கு ஆகாரம் இல்லாவிட்டாலும் வயிற்றில் வளரும் பிள்ளைக்கு ஆகாரம் வேண்டுமல்லவா? மத்தியானம் கணவர் சாப்பிடாமல் விட்டிருந்த அரை உருண்டைக் களியைச் சாப்பிட்டிருக்கலாம் என்று தோன்றியது. அதைத் தான் சாப்பிட்டிருந்தால் இரவு குழந்தைகள் பட்டினி கிடந்திருக்கும் என்ற எண்ணமும் எழுந்து, தான் சாப்பிடாமல் இருந்ததே நல்லது என்று நினைத்துக் கொண்டாள். இருந்த மாவைக் கொண்டு ரொட்டி தட்டி சாப்பிட்டிருக்கலாம். குழந்தைகள் மறுநாள் சாப்பிட அந்த மாவு இருக்கட்டும் என்று அதை அப்படியே தொடாமல் வைத்து விட்டாள். அந்தக் குழந்தைகளின் தகப்பன் அந்த மாவைப் பிசைந்து சாப்பிட்டு விட்டான். சாயங்காலம் நான்கு உருண்டைக் களி தின்றவருக்கு ராத்திரி எப்படிப் பசித்தது? சாயங்காலம் சாப்பிட்ட பொழுதும், ராத்திரி சாப்பிட்ட பொழுதும் பெண்டாட்டியின் நினைவே வரவில்லை. ஆனால் இப்பொழுதோ பக்கத்தில் வந்து படுத்துக் கொண்டிருக்கிறார். பெண்டாட்டியின் உடல் நிலை எப்படியிருக்கிறது, எவ்வளவு மாதமாயிருக்கிறது, காலையிலிருந்து வயிற்றுக்குச் சாப்பிட்டாளா இல்லையா? என்ற எந்த யோசனையும் கிடையாது. ''எழுந்து விலகிப் படுத்துக்குங்க'' என்று சொல்ல வேண்டும் போல் இருந்தது.

தன் அம்மாவுடன் இருந்து கொள்ள போவதாக சொன்ன கணவர் மத்தியானம் களி சாப்பிட்டு, இரவு ரொட்டி தின்று,

தனக்குப் பக்கத்தில் படுத்துக் கொள்வதற்காகவே படுக்கையைத் தூக்கிக் கொண்டு வந்திருக்கிறார். அவரை அண்ட விடாமல் செய்தால், மறுபடியும் அம்மாவிடம் போகலாம். அம்மாவுடன் தங்குவது எத்தனை நாள் என்று மாதேவய்யா கேட்டதன் பொருள் புரிந்தது. குடும்பம் நிலைக்க வேண்டுமென்றால் இந்தக் கஷ்டத்தையெல்லாம் அனுபவித்தே ஆக வேண்டும் என்று முடிவு செய்தாள். கிராமத்துக்கு நடந்து போய் வந்ததால் ஏற்பட்ட களைப்பு, நாள் முழுதும் செய்த வேலை, வயிற்றுக்கு உணவு இல்லாததால் உண்டான சோர்வு ஆகியவைகளால் அவள் சோர்ந்து வாடிப்படுத்திருந்தாள். ஆனால் சென்னிக ராயருக்கோ எந்தவித அலுப்பும் இல்லை.

அவளுக்குத் தகப்பனின் நினைவு வந்தது. மிகுந்த முரட்டுச் சுபாவம். கோபம் வந்துவிட்டால் யாரையும், தாய், மனைவி, மக்கள் என்று பாராமல் — உயிர் போகும்படி அடித்து விடுவார். எதையும் சட்டை செய்பவர் அல்ல. ஆனால் சில சமயங்களில் மனம் உருகிவிடுவார். கல்லேசனுக்குப் பிளேக் நோய் வந்திருந்த பொழுது ஒருநாள் ராத்திரி முழுவதும் அவனுடைய தலையை மடியில் வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாராம். மனைவி சாப்பிட்டாளா, இல்லையா? குழந்தைகளின் வயிற்றுப் பாடு என்னவாயிற்று? என்று விசாரிக்கும் மனிதத்தன்மை கூட இல்லாவிட்டால் அந்தக் குடும்பம் எப்படி நிலைக்கும் என்று நினைத்துக் கொண்டாள். அக்கம்மாவின் நினைவு வந்தது. தான் பிறந்த பிறகு தாய்ப்பால் குடிக்கவே இல்லையாம். நஞ்சம்மா பிறந்ததும் அவளுடைய தாய் இறந்து போனாள். அன்றிலிருந்து அக்கம்மாதான் அவளை வளர்த்தவள். அவளிடம் பாசம் கொண்டிருப்பவள் அக்கம்மா மட்டும் தான். அவளை அழைத்துக் கொண்டு வரவேண்டும். ஆனால் அவளுக்கு வயது எழுபத்தைந்துக்கும் அதிகம். தனக்கே சோற்றுக்கு வழி இல்லாத பொழுது அவளை எப்படி அழைத்து வருவது? பிள்ளைப் பேறு செய்பவர் யார்? நாகலாபுரத்துக்குப் போக முடியாது. அவள் வந்தால் ஒரு மாதமாவது தங்க வைக்க வேண்டும். நாளைக் காலையில் எழுந்தால், எல்லாக் கலயமும் காலி. குழந்தைகளுக்கு என்ன கொடுப்பது? ஒரு பக்கமாக ஒருக்களித்துப் படுத்ததினால் வலப் புறம் வலி எடுத்தது. அவள் இடப்புறம் திரும்பிப் படுத்தாள். கணவன் குறட்டை விட்டுக் கொண்டே அருகில் படுத்திருந்தார். அவளுக்கு ஒரு வித வெறுப்பு உண்டாயிற்று. அங்கிருந்து எழுந்து, ஜமக்காளத்தை எடுத்துக் கொண்டு போய் இருட்டில் குழந்தைகளுக்கு அருகில் அதைப் போட்டு பார்வதியின் மேல் இடது கையைப் போட்டுக் கொண்டு படுத்தாள்.

# 6

காலையில் எழுந்ததும் முகம் கழுவிக் கொண்டாள். குழந்தைகளின் முகத்தையும் கழுவிப் புடவையால் துடைத்து விட்டாள். சமையலறைக்குச் சென்று அடுப்பில் இருந்த சாம்பலை எடுத்துப் பெருக்கி விட்டுப் பாத்திரங்களைத் துலக்கினுள். முந்தைய தினம் மாவு பிசைந்திருந்த பாண்டத்தில் தண்ணீர் விட்டு வைக்க மறந்து போய் விட்டதால் மாவு ஒட்டிக் கொண்டு உலர்ந்து போயிருந்தது. அதனுல் அதில் தண்ணீர் ஊற்றி விட்டு வந்தாள். கணவர் முன்புறக் கதவின் மேல் கால் நீட்டியவாறு நிம்மதியாய்க் குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார். தெருக்கதவைச் சற்றே திறந்து வீட்டின் முன்புறம் பெருக்கினுள். தண்ணீர் தெளித்துக் கோலம் போட கோலப் பொடி இருக்கவில்லை. அடுத்த வீட்டுக்காரியிடம் கேட்டுக் கொஞ்சம் கோலப் பொடி வாங்கி வந்து, கோலம் போட்டு மிஞ்சியிருந்ததை உள்ளே வைத்துச் சும்மா இருந்தாள். மேற்கொண்டு செய்யக் கூடிய வேலை எதுவுமிருக்கவில்லை. அந்த நாள் முழுவதும் வயிற்றுப் பாட்டை எப்படிச் சமாளிப்பது?

தெருவில் ஒரு எருமை கத்திய சத்தம் கேட்டு சென்னிகராயர் விழித்துக் கொண்டார். படுக்கையில் உட்கார்ந்தவாறே ''கௌசல்யா சுப்ரஜா ராமா'' சொல்லி முடித்துப் பின்னர் எழுந்து ஏரிக்கரையின் பக்கம் சென்றுர். நஞ்சம்மா அவருடைய படுக்கையைச் சுருட்டி வைத்தாள். அப்பொழுது மாதேவய்யா ஒரு சிறு மூட்டையைத் தோள் மேல் சுமந்து கொண்டு வந்து தூணுக்கு அருகே அதை இறக்கி வைத்தார். பிறகு நஞ்சம்மாவைப் பார்த்து ''நான் கிராமப் பக்கம் போய் வர்றேன். இதிலே இருபது படி ராகியும், நாலு படி அவரைப் பருப்பும் இருக்கு. எடுத்து உபயோகப் படுத்திக்குங்க.'' என்றுர்.

அன்றைய பொழுதை எப்படிக் கழிப்பது என்று கவலைப் பட்டுக் கொண்டிருந்த நஞ்சம்மா, அதைக் கேட்டதும் சந்தோஷம் அடைந்தாள். ஆயினும் அவள் மாதேவய்யாவிடம் ''அய்யா நேத்தும் கொடுத்திங்க. இன்னிக்கு இதைக் கொடுக்கறிங்க. நீங்களே ஊரூராகச் சுற்றி யாசகம் செய்யறவங்க. இதையெல்லாம் நான் எப்பிடித் திருப்பிக் கொடுக்கறது?'' என்று சொன்னுள்.

''அம்மா, இதையெல்லாம் நான் எப்பிடிச் செலவு செய்வேன்னு உங்களுக்குத் தெரியாதா? என்னைப் போல் யாராவது சாமியார் வந்தா ஆகாரம் செய்யக் கொடுப்பேன்.' நீங்க இதை

வெச்சுக்கிட்டு எட்டு நாள் சாப்பிட்டா என்ன கெட்டுப் போயிடும்? செஞ்சு சாப்பிடுங்க. ஆண்டவன் ஏதாவது வழி காட்டுவான்'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார்.

அய்யா கொடுத்த முறம் வீட்டிலேயே இருந்தது. அதில் இரண்டு படி ராகியை எடுத்து மாவு வீசுவதற்காக அமர்ந்தாள். வீட்டிலேயே எந்திரக்கல், உரல், அம்மி ஆகியவை இருந்தன. கால்படி வீசுவதற்குள்ளேயே சோர்ந்து போனாள். முந்தைய நாள் ஏதும் சாப்பிடவில்லை என்பது நினைவு வந்தது. ஐந்து நிமிடம் ஓய்ந்து உட்கார்ந்தாள். அப்பொழுது கணவர் வந்தார். ''ராகி எங்கிருந்து வந்தது? என்ன செய்தாய்?'' என்று அவர் கேட்கவில்லை. தூணின் மேல் சாய்ந்து கொண்டு சட்டைப் பையிலிருந்து வெற்றிலை எடுத்துப் புகையிலையைத் தேய்க்க ஆரம்பித்தார்.

''என்னாலே முடியலே. இதைக் கொஞ்சம் வீசித்தர்ரீங்களா?'' என்று நஞ்சம்மா கேட்டாள்.

அவர் பேசவில்லை. அவள் மறுபடியும் கேட்ட பொழுது அவர் அவளை அதட்டி ''ஆம்பிளைங்க எந்திரக் கல்லைத் தொடறது உண்டா? நான் ஆம்பளைன்னு நெனைச்சியா? இல்லே பொம்ப ளைன்னு நெனைச்சியா?'' என்று அவர் கேட்டார்.

பொறுமை இழக்கக் கூடாது என்று அவள் முடிவு செய்திருந் தாள். அவள் மறுபடியும் பேசவில்லை. நெசவாளர் தெருவிற்குச் சென்று புட்டம்மாவைக் கூட்டி வந்தாள். அவள் ராகி வீசு வதற்காக அமர்ந்தாள். நஞ்சம்மா சென்ன செட்டியாரின் கடைக்குப் போய் மிளகாய், கொத்துமல்லி, உப்பு, எண்ணை ஆகிய சாமான்களை வாங்கி வந்து சமையல் செய்ய ஆரம்பித்தாள். பதினொரு மணிக்கு அவரைக் குழம்பு, களி, ராமண்ணனுக்கு ரொட்டி ஆகியவற்றை செய்து முடித்தாள். முந்தைய நாள் கூட அவள் குளித்திருக்கவில்லை. ஆகையால் கிணற்றடிக்குப் போய் முதலில் குழந்தைகளைக் குளிப்பாட்டினாள். பிறகு தானும் குளித்து வேறு புடவை உடுத்திக் கொண்டு உள்ளே வந்தாள். அப்போது சென்னிகராயர் வாழை இலையில் களியை வைத்துக் கொண்டு ருசித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். தனக்கும் குழந்தைகளுக்கும் கொஞ்சம் மிச்சம் வைக்குமாறு அவள் அவரிடம் சொல்லவில்லை. அவராகவே மூன்று உருண்டைக் களியை சாப்பிடாமல் விட்டு வைத்து எழுந்து கொண்டார். அவள் ஏழு உருண்டைகள் செய்திருந்தாள். நஞ்சம்மாவும், பார்வதியும் சாப்பிட அமர்ந்தனர். நஞ்சம்மா ஒன்றரை

''உங்களுக்கு மொத்த நிலவரி எவ்வளவு எம்பது ரூபா தானே?''

''ஏன்?''

''உங்க நிலவரிக் கணக்கிலே அம்பது ரூபாய் வாங்கிட்டதாக இவர்கிட்டேயிருந்து ரசீது வாங்கிக்கிங்க. அந்த அம்பது ரூபாய்க்கு எங்களுக்கு ராகி, அவரைப்பருப்பு, மிளகாய், நெல் கொடுத்திடுங்க. நாங்க எப்படியோ ஜீவனம் செஞ்சிக்கறோம்.''

''இப்ப நீங்க ரசீது கொடுத்துட்டா அரசாங்கத்திற்கு எப்படிப் பணம் கட்டுவீங்க?''

''எங்க வருஷச் சம்பளம் நூத்திருபது ரூபா இருக்குதில்லையா, அதிலே பிடிச்சுக்கலாம்.''

கவுடருக்கு இந்த யோசனை மிகவும் நல்ல யோசனையாகத் தோன்றியது. ''திவான் வேலை பாக்கற அளவு உனக்கு அறிவிருக்குது'' என்றார் அவர். கணவர் மாதேவய்யாவின் கோவிலில் உட்கார்ந்து கொண்டு வெற்றிலை குதப்பிக் கொண்டிருப்பார் என்பது நஞ்சம்மாவுக்குத் தெரியும். ஆகையால் குண்டே கவுடர் வந்திருப்பதாகச் சொல்லி அவரை அழைத்து வரும்படி பார்வதியை அனுப்பினாள். அவள் போய்க் கூட்டி வந்தாள். சென்னிகராயர் வீட்டிற்கு வந்ததும் குண்டே கவுடருடன் மற்றொரு முறை வெற்றிலை பாக்கு போட்டுக் கொண்டார். பிறகு கவுடர் கேட்டார்.

''எங்கே உன் கணக்கு புத்தகமெல்லாம் எடு, பார்க்கலாம்''

''அது இங்கே இல்லியே''

''எங்கே இருக்குது?''

''என் அம்மா வீட்டிலே''

''என்னய்யா, கணக்குப்பிள்ளை வேலைன்னு லேசான காரியமா? உன் வீட்டிலேதானே புத்தகம் இருக்கணும்? கணக்கு எழுதத் தானே நான் இந்த வீட்டைக் கொடுத்தேன்? அரசாங்க சட்டம் தெரியாதா? உடனே போய்க் கொண்டு வா.''

சென்னிகராயர், ஆஞ்சநேயர் கோவிலுக்குப் போனார். ஆனால் கங்கம்மா அந்த புத்தகங்களைக் கொடுக்கவில்லை. குண்டே கவுடர் கொண்டு வரச் சொன்னதாக ராயர் கூறியபின் அவளே வந்தாள். ''அரசாங்கச் சட்டம் அப்பிடி இருக்குது''

என்று கவுடர் கூறியவுடன் ''அப்படியானு நானும் இங்கேயே வந்துடுறேன்'' என்று அவள் சொன்னுள்.

''வாங்க எனக்கென்ன நஷ்டம்?

ஆனுல் நஞ்சம்மா உடனே குறுக்கிட்டுப் பேசினுள். ''அதெல்லாம் முடியாது. தனியே போன்னு வெளியே வெரட்டின பெறகு உங்களுக்கும் எனக்கும் சரிப்படாது.''

''பாத்தியா கவுடா, இந்த ராட்சசி முண்டையின் பேச்சை''

''கங்கம்மா, நான் இந்த வீட்டைக் கணக்குப் புத்தகம் வைக்கறதுக்கும், கணக்கு எழுதற இந்த அம்மா இருக்கறதுக்கும் தான் கொடுத்தேன். மத்தவங்க இருக்கறதுக்குக் கொடுக்கலே. நீ சும்மா திட்டாதே'' என்று கவுடர் கூறினுர். அதைக் கேட்டதும் கங்கம்மா உரக்கத் திட்டிக் கொண்டே வெளியே போனுள்.

சென்னிகராயர் தானே நான்கு தடவை நடந்து புத்தகங்களைத் தலையில் வைத்துச் சுமந்து வந்தார். புத்தகங்கள் இருந்த பெட்டியைக் கங்கம்மா தரவில்லை. எல்லாவற்றையும் கொண்டு வந்த பிறகு கவுடர் கேட்டார் ''இத்தினி வருஷமா தொழில் செய்யறியே, அரசாங்கம் எதுக்காக தலையாரி, வெட்டியான் இவங்களை வெச்சிருக்குது?'' சென்னிகராயர் பதில் சொல்லவில்லை. கவுடரே சொன்னுர். ''நீ இத்தினி தடவை நடந்து புத்தகமெல்லாம் கொண்டு வந்தியே, தலையாரியை அனுப்பி எடுத்து வரச் சொல்லி இருக்கலாமே! என்ன வேலையப்பா நீ பாக்கறே! சரி காகிதம் எடுத்து எழுது. நீ சொல்லம்மா, என்ன எழுதவேணும்னு.''

நஞ்சம்மா சொன்னுள். ''ராமஸந்திரா கிராமம் பிர்க்காவைச் சேர்ந்த குருபரஹள்ளி கிராமத்து மணியக்காரர் குண்டே கவுடரிடமிருந்து அவருடைய வட்டாரத்து நிலவரி வகையருக்காக ஐம்பது ரூபாய் செலுத்தப்பட்டிருக்கிறது. நிலவரி வசூல் செய்யும் பொழுது இந்தத் தொகை போக மீதித் தொகை மட்டும் வசூலித்து மொத்தத் தொகையையும் வரவு வைத்து எழுதி விடுகிறேன். இப்படிக்கு, கணக்குப்பிள்ளை, சென்னிகராயர். தேதி......''

அவள் கூறியபடியே அவர் எழுதி கவுடரிடம் கொடுத்தார். தான் எழுதிக் கொடுத்தது பற்றி அவருக்கு எதுவுமே விளங்கவில்லை. பிறகு திடீரென்று ''பணம் எங்கே?'' என்று கேட்டார்.

''பணம் எங்கே போகுது? என்னைக் கேக்காதே'' என்று அவர் கூறினார்.

மறுநாள் குண்டே கவுடர் வண்டியைப் பூட்டிக் கொண்டு வந்து மூட்டைகளை இறக்கி வைத்துவிட்டுச் சொன்னார்.

''பாரம்மா, நாலு கண்டி ராகி — இருபத்து நாலு ரூபாய்
ஒரு வள்ளம் அவரைப் பருப்பு — எட்டு ரூபாய்
ஒரு மணு மிளகாய் — மூணு ரூபாய்
மொத்தம் எவ்வளவாச்சு?''

''முப்பத்தஞ்சு ரூபாய்''

''இந்த அஞ்சு ரூபாயை வாங்கிக்க, திப்டூரிலே தேங்காய்ப் பணம் வந்தவுடன் பத்து ரூபா தர்ரேன். என் வீட்டிலே நெல் இல்லை. நீயே கடையிலே அரிசி வாங்கிக்க.''

நஞ்சம்மாவுக்குச் சற்று தெம்பு வந்தது. அந்த ஐந்து ரூபாயுடன் கையில் இருந்த இரண்டு ரூபாயையும் சேர்த்து ஒரு துணியில் முடிந்து மேலே இருந்த விட்டத்தின் மேல் வைத்தாள்.

## 7

கர்ப்பிணி நஞ்சம்மாவுக்கு எட்டு மாதம். ஒரு நாள் தரையில் அமர்ந்தவாறு கணக்குப் புத்தகத்தில் கோடு போட்டுக் கொண்டிருந்தாள். உட்கார்ந்திருப்பது மிகவும் சிரமமாய் இருந்தது. காலை, மாற்றி, மாற்றி உட்கார்ந்தாள். சென்னிகராயர் தாழ்வாரத்தில் இலேசாகக் குறட்டை விட்டவாறு தூங்கிக் கொண்டிருந்தார்.

அப்பொழுது திடீரென்று கங்கம்மா உள்ளே நுழைந்தாள். குண்டே கவுடர் வந்திருந்த பொழுது திட்டிவிட்டுச் சென்றவள் அதுவரை அந்த வீட்டிற்கு வரவில்லை. உள்ளே நுழைந்த கங்கம்மா யாரையும் லட்சியம் செய்யாமல் நேரே சென்று ஒரு பானையின் மூடியை எடுத்து, அதிலிருந்த ராகியைத் தான் கொண்டு வந்திருந்த பைக்குள் கொட்டிக் கொள்ள ஆரம்பித்தாள். என்ன செய்வதென்று சற்று நேரம் நஞ்சம்மாவுக்குத் தெரியவில்லை. பிறகு அவள் கேட்டாள்.

''அம்மா, என்ன செய்யறீங்க?''

''என்ன செய்றேனு? ராகியை எடுத்துக்கிட்டிருக்கேன். அதைக் கேக்க நீ யார்?''

''அந்தப் பையை கீழே வைச்சுட்டு விலகி, நில்லுங்க. யார்கிட்டேயும் கேக்காம எங்க வீட்டுப் பொருளை ஏன் தொடறீங்க?''

''அடே இவ வீடாம்! உன் அப்பன் கட்டிய வீடா? கேக்கறது என்னடி? வீட்டிலே காலையிலிருந்து எதுவுமே இல்லாம அடுப்பே பத்தவைக்கலே. ராகி எடுக்க வந்தா ஏதோ பேசறு. குருபர ஹள்ளி குண்டே கவுடன் எங்க மணியக்காரன். அவன் உன் திருட்டுப் புருஷனு, உனக்கு சும்மா கொடுக்க?''

தூக்கத்திலிருந்து விழித்தெழுந்த சென்னிகராயர் ''எடுத்தா, எடுக்கட்டும், விடுடி......உங்கம்மாவை......'' என்ருர்.

''குண்டே கவுடர் உங்களுக்குக் கொடுக்கறதுக்காக தர்மத் துக்குக் கொடுக்கலே. வரியிலே கழிச்சுக்கச் சொல்லி நான் கேட்டு வாங்கியிருக்கேன்''

''கணக்குப்பிள்ளை வேலை என் புருஷனுடைது. உன் அப்பா வோடதல்ல, கழுதெ முண்டை.''

''என் அப்பாதான் குதிரையிலே வந்து வாங்கிக் கொடுத் தது. இல்லாட்டா வேலை கெடைச்சிருக்காது. கண்ணில் எண்ணெய் விட்டுக்கிட்டு கணக்கு எழுதறது நான் தான். என் வீட்டிலே புகுந்து ஏதாவது தொட்டா குண்டே கவுடருக்குச் சொல்லி அனுப்புவேன்.''

''காலையிலிருந்து எதுவும் சாப்பிடலையே, என்னடி செய்யறது பீடை?''

''சிவே கவுடரையோ, வட்டிக் கடைக்காரனையோ, ரேவண்ண செட்டியையோ கேளுங்க.''

அவள் குத்தலாகச் சொன்னது கங்கம்மாவுக்குப் புரியவில்லை. அவள் நேரே சிவே கவுடருடைய வீட்டை நோக்கிப் புறப்பட் டாள். அவள் புறப்பட்டுப் போனவுடன் நஞ்சம்மாவின் உள்ளம் அவளை உறுத்தத் தொடங்கியது. 'பட்டினி கிடப்பவளை அப் படியே அனுப்பிவிட்டோமே' என்று கவலையடைந்தாள். உடனே ஒரு முறத்தில் மூன்றுபடி ராகி மாவைக் கொட்டி அதைக் கணவனிடம் கொடுத்து மாமியார் வீட்டில் கொண்டு போய்க் கொடுக்கச் சொன்ஞள். சென்னிகராயர் மாவுடன் புறப் பட்டார்.

கங்கம்மா நேரே சிவே கவுடரின் வீட்டிற்குப் போய் ''என்னப்பா, மணியகாரா, காலையிலிருந்து அடுப்பு மூட்டலே. ஒரு இருபத்தஞ்சுபடி மாவு இருந்தாக் கொடு'' என்று கேட்டாள்.

''உனக்கென்னம்மா திமிரா? எங்கே இருக்குது இருபத்தஞ்சு படி மாவு?''

''உன் வீடு பாழாப் போகட்டும். தேவடியா மகனே! என் சொத்தையெல்லாம் பிடுங்கிட்டு இப்படிச் சொல்றியா! உம் வம்சம் அழிஞ்சு போகட்டும்.''

''நான் பணத்தைக் கொட்டலியா, ஏண்டி முண்டை! நாக்கை அடக்கிப் பேசு. இல்லே கழுத்தைப் புடுச்சித் தள்ளிடு வேன்.''

உடனே சிவேகவுடரின் மனைவி கௌரம்மா அங்கே வந்து ''அந்த அம்மா, அப்பிடிப் பேசினா நீங்களும் ஏன் அப்பிடிப் பேசு றீங்க. பேசாம தோட்டத்திற்குப் போங்க,, என்றாள்.

அந்தக் கிழவி நடுத்தெருவில் நின்று கொண்டு மண்ணை வாரித்தூற்றி சாபம் கொடுத்தால் குடும்பம் கெட்டுப் போயிடும் என்று கௌரம்மா பயந்தாள். அவளுடன் தகராறு செய்ய மணியக்காரரும் விரும்பவில்லை. மனைவி சொன்னவுடன் அவர் உடனே செருப்பு மாட்டிக் கொண்டு கிளம்பினார். கௌரம்மா இரண்டு முறம் நிரம்ப மாவு எடுத்து ஒரு கூடையில் போட்டு எடுத்து வந்தாள். அதைக் கங்கம்மாவின் எதிரே வைத்து ''அவர் ஏதோ சொல்றாரு. நீங்க கோவிச்சுக்காதிங்க. இதை எடுத்துக்குங்க'' என்றாள்.

கங்கம்மா கோபத்துடன் ''வேண்டாம்'' என்றாள். கௌரம்மா மறுபடியும் சொன்னவுடன் கங்கம்மா அந்தக் கூடையை எடுத்துக் கொண்டு ஆஞ்சநேயர் கோவிலுக்குப் போனாள்.

சென்னிகராயர் அப்பண்ணய்யாவிடம் முறத்தைக் கொடுத்து விட்டு மாதேவய்யாவின் கோவிலில் அமர்ந்திருந்தார். நஞ்சம்மா முதுகைக் கூனிக் கொண்டு கணக்கு நோட்டில் கோடு போட் டுக் கொண்டிருந்தாள். அப்பொழுது உள்ளே யாரோ வந் ததைப் போல் நிழலாடியது. அவள் நிமிர்ந்து பார்த்தாள். கங்கம்மா மாவு முறத்தைக் கையில் பிடித்துக் கொண்டு அவள் எதிரே வந்து நின்றாள். ''என்ன'' என்று கேட்பதற்கு முன் கங்கம்மா அந்த மாவு முழுவதையும் நஞ்சம்மாவின் தலையில் கொட்டி முறத்தால் அவள் தலையின் மேல் அடித்தாள். ''உன் வீட்டில் பிச்சை எடுத்துக் களி சாப்பிடணும்னு நெனைச்சுக் கிட்டயா பீடைமுண்டை?'' என்று உறுமிவிட்டு ''விர்'' ரென்று வெளியேறினாள்.

நஞ்சம்மாவின் தலை, உடம்பு, புடவை, மைப்புட்டி ஆகிய வற்றில் எல்லாம் மாவு படிந்திருந்தது. மாமியாரின் பின்னே சென்று அவளைப் பிடித்து நிறுத்த வேண்டும் என்று தோன்றி யது. அல்லது யாரிடமாவது அந்த வேஷத்தைக் காட்ட வேண் டும் என்று நினைத்தாள். வெளியே போய்க் காட்டினால் ஊர்க் காரர்கள் சிரிப்பார்கள் என்ற நினைவும் வந்தது. ஏற்கனவே அவர்களின் குடும்ப விவகாரத்தைப் பற்றிப் பலர் வம்பு பேசிச் சிரித்து வருவது அவளுக்குத் தெரியும். ஆகையால் பேசாமல் புடவையின் தலைப்பைத் தூக்கிப் பிடித்து அதிலிருந்த மாவை எடுத்தாள். பிறகு புத்தகத்தின் மீதும் பாயின் மீதும் படிந்திருந்த மாவையும் அள்ளியெடுத்து ஒருபுறமாக வைத்தாள். பின் புறம் சென்று தலைக்குத் தண்ணீர் விட்டுக் குளித்து உடம்பைச் சுத்தமாக்கிக் கொண்டு, மைப்புட்டியையும் நன்கு கழுவி, கடை யிலிருந்து இரண்டு சிவப்பு மைப் பொடிப் பொட்டலங்களை வாங்கிக் கொண்டு வந்து மை தயார் செய்து கோடு போட ஆரம்பித்தாள்.

## 8

இந்தச் சம்பவம் நடந்த மூன்றாம் நாள் காலை பத்து மணி. நஞ்சம்மா உள்ளே சமையல் செய்து கொண்டிருந்தாள். அப் பொழுது ''நஞ்சு'' என்று யாரோ கூப்பிடும் குரல் கேட்டது. அந்தக் குரலைக் கேட்டவுடன் அது அக்கம்மாவின் குரல்தான் என்று நஞ்சம்மா புரிந்து கொண்டு அவசரமாக வெளியே வந் தாள். புடவையால் கட்டிய சிறு மூட்டையைத் தலையின் மேல் வைத்துக் கொண்டு, முதுகைக் கூனியவாறு அக்கம்மா நின் றிருந்தாள். அவளுக்குப் பின்னால் இரண்டு ஆட்கள் நின்று கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு ஆளும் ஒரு சாக்கு மூட்டை யைத் தூக்கிக் கொண்டிருந்தான். நஞ்சம்மா வெளியே வந்த தும் அக்கம்மா அந்த மூட்டைகளை இறக்கி வைக்குமாறு அவர் களிடம் சொன்னாள். பிறகு அவள் நஞ்சம்மாவைப் பார்த்து ''நீ பிள்ளைத்தாய்ச்சின்னு சொல்லி அனுப்பக்கூடாதா?'' என்றாள்,

''சொல்லி அனுப்பலாம்னு நெனைச்சிருந்தேன். சரி, உள்ளே வா, நீ குளிச்சாச்சா?,,

''அது கெடக்கட்டும், சமையல் ஆயிருந்தா இந்த ரெண்டு பேருக்கும் சாப்பாடு போடு. அவங்க ஊருக்குப் போகணும்.''

உள்ளே குழம்பு கொதித்துக் கொண்டிருந்தது. களியை உருண்டை பிடித்தாக வேண்டும். நஞ்சம்மா அடுப்பை நன்றாக எரியச் செய்து கால் மணி நேரத்தில் குழம்பு, களி செய்து முடித்தாள். ஆட்கள் இருவரும் ஏரிக்குச் சென்று கை கால் கழுவி வந்தார்கள். நஞ்சம்மா அவர்களுக்குப் பரிமாறினாள். அப்பொழுது அக்கம்மாப் பாட்டி கேட்டாள் ''மோர் இல்லியா?''

''எங்கே போறது மோருக்கு?''

ஆட்கள் சாப்பிட்டு முடிந்ததும் பாட்டி ஒருவனிடம் சொன்னாள்: ''ஹொன்னு, இங்கே பார். லக்கன் என்னத்தையாவது சொல்லி வைக்கப் போறான். அவனுக்கு இன்னொரு தடவை சொல்லு. வீட்டுக்குப் போனவுடனே கல்லேசன்கிட்டே சொல்லு. இங்கே கறவை இல்லே. பிள்ளைத்தாச்சிக்குப் பால் வேணும். நம்ம வூட்லே இருக்கற வெள்ளைப் பசுவை, போன மாசம் கன்னு போட்டதே — அதை இங்கே அனுப்பச் சொல்லு. அதன் தாயை நஞ்சம்மாவின் கல்யாணத்தில் அவளுக்குக் கொடுத்தோம். பிறகு அனுப்பலே. இப்ப அதன் மகளையாவது நான் சொன்னதாகச் சொல்லி அனுப்பச் சொல்லு.''

ஆட்கள் புறப்பட்டுச் சென்றார்கள். பாட்டி குளிர்ந்த நீரில் குளித்து, ஈரப் புடவையைச் சுற்றிக் கொண்டு நெற்றியில் விபூதி இட்டுக் கொண்டாள். பிறகு மந்திரம் முணு முணுத்துக் கொண்டே தனது ஈரப் புடவை உலர்வதற்காக அடுப்பின் முன்பு அமர்ந்தாள். நஞ்சம்மா அப்பொழுது கேட்டாள்.

''உனக்கு எப்பிடித் தெரிஞ்சது?''

''நம்ம ஊர் சேணியன் தம்மப்ப செட்டியின் பெண்டாட்டி இந்த ஊர்தானே. ஏழெட்டு நாளுக்கு முன்னாடி ஏரிக்குப் போயிருந்தேன். திருமலம்மாவும் வந்திருந்தா. எல்லா விஷயமும் சொன்னா. குருபரஹள்ளி மணியக்காரன் வீட்லே நீங்க இருக்கறது, வயத்திலே எட்டு மாசம் ஆயிருக்கறது, மாமியார் வெரட்டியது எல்லாத்தையும் சொன்னா. எல்லா நெலமும் போயிடும்னு கல்லேசனே சொன்னான்.''

''நீ எப்ப புறப்பட்டே?''

''நேத்து புறப்பட்டேன். சாயங்காலம் பெரிய மழை பிடிச்சுகிட்டுது. குன்னுக்கு அந்தப் பக்கம் இருக்கற ஹூவின ஹள்ளி கிராமத்திலே மணியக்காரர் வீட்டுத் திண்ணையிலே மூணு பேரும் படுத்துக்கிட்டோம். அந்த வீட்டுக்காரங்க அவங்க ரெண்டு பேருக்கும் சாப்பாடு போட்டாங்க. எனக்குக் கொஞ்சம் தேங்காய்த் துருவலும், வெல்லமும் கொடுத்தாங்க.''

வெளியே விளையாடச் சென்றிருந்த இரண்டு குழந்தைகளும் திரும்பி வந்தார்கள். பார்வதிக்குப் பாட்டியின் அடையாளம் தெரிந்தது. ராமண்ணுவுக்குத் தெரியவில்லை. அரை மணி நேரம் கழிந்ததும் இரண்டு குழந்தைகளும் பாட்டியுடன் கலகலப்பாகப் பழகத் தொடங்கினர். சாப்பாட்டு வேளைக்கு சென்னிகராயர் வந்தார். ''சௌக்கியமா இருக்கீங்களா?'' என்று பாட்டியை அவர் விசாரித்ததோடு சரி. வேறு எதுவும் பேசவில்லை. பாட்டியும் அவரைச் சட்டை செய்யவில்லை. பாட்டி தான் கொண்டு வந்திருந்த இரண்டு மூட்டைகளையும் அவிழ்த்தாள். சென்னிகராயர் வீட்டில் படுத்துக் கொள்ளாமல் கோவில் திண்ணைக்குப் போய் விட்டார்.

பாட்டியின் ஒரு மூட்டையில் பித்தளை, தாமிரப் பாத்திரங்கள் இருந்தன. இரண்டு பித்தளைச் செம்புகள், ஒரு குடம், ஐந்து பித்தளை டம்ளர்கள், இரண்டு தாமிர பஞ்ச பாத்திரங்கள், இரண்டு தவலைகள், இரண்டு சருவங்கள் ஆகியவை இருந்தன. மற்றொரு மூட்டையில் அவுல், பொரி மாவு, வெல்லம் போட்டு செய்த உருண்டைகள் ஆகியவை இருந்தன. பதினைந்து படி அரிசியும் இருந்தது.

''அக்கம்மா, இதெல்லாம் எதுக்காகக் கொண்டு வந்தே?''

''கொழந்தைகள் இருக்கிற வீடு. அவுல், பொரி மாவு கொண்டு போன்னு கல்லேசனே சொன்னான். கரும்புத் தோட்டத்திலே ஆலை வெச்சிருக்காங்க. வீட்டிலே மூணு அண்டாவிலே வெல்லம் நிரம்பிடிச்சு. அவனே அரிசியும் வெல்லமும் மூட்டையிலே போட்டுக் கட்டினான்.''

''இந்தப் பாத்திரமெல்லாம் எதுக்காக?''

''கல்லேசன் போலீஸ் வேலையிலே இருந்தப்ப கண்டிக்குத் தானம் கெடைச்ச பாத்திரத்தையெல்லாம் பரண் மேலே போட்டு வைச்சிருந்தேன். அதைப் பத்தி யாருக்கும் கணக்கு வழக்குத் தெரியாது. உன் விஷயம் இப்படியாச்சுன்னு கேட்டப்புறம் அவ ஏரிக்குப் போயிருக்கறப்ப அவளுக்குத் தெரியாம ஒவ்வொரு பாத்திரமா, ஹொன்னன் பெண்டாட்டிகிட்டே கொடுத்து வெச்சேன். அதுகளை யாருக்கும் தெரியாம மூட்டை கட்டிக் கொண்டு வந்து சௌடேனஹள்ளித் திருப்பத்திலே காத்திருன்னு புறப்படற அன்னிக்கு ஹொன்னன்கிட்டே சொன்னேன்.''

''இதுகளை நீ கொண்டு வந்திருக்கக் கூடாது. அண்ணுவுக்குத் தெரிஞ்சா சும்மாயிருப்பாளு?''

''அவனுக்குத் தெரியாது, நீ சும்மாயிரு. கண்டி இருந்தப்ப கெடைச்சது'' என்று கிழவி சொன்னுள்.

அவளுக்கு மகனைப் பற்றிய நினைவு வந்து கண்களில் நீர் நிரம்பியது. ''பாவி! எங்கே போனுனோ? என்ன செய்தானோ? ஆரம்பத்திலிருந்தே இப்படித்தான். பேசாம வீட்லே இருந்து கிட்டே ஆண்டவன் கொடுத்ததை நிம்மதியா சாப்பிடத் தெரி யாது.'' தகப்பனைப் பற்றிய பேச்சு வந்ததும் நஞ்சம்மா கவலை யுடன், ''அப்பா விஷயம் எதுவும் தெரியவில்லையா?'' என்ருள்.

''அவன் எங்கே உயிருடன் இருக்கப் போருன்? செத்துப் போயிருப்பான்னு சொல்ருங்க. அவன் செத்திருக்கமாட்டான். மகராஜா போல் எங்கேயாவது இருப்பான்.''

''சாகலை, அதெல்லாம் பொய்'' என்று பேத்தி கூறியவுடன் பாட்டி ஆறுதல் அடைந்தாள்.

அக்கம்மாவுக்கு உடல் அசதியாக இருந்தது. வீட்டில் கோரைப் பாய் இருக்கவில்லை. ஈச்சம்பாய் மட்டுமே இருந்தது. அவள் அதில் படுக்க மாட்டாள். ஆகையால் வெற்றுத்தரையில் படுத்துக் கொண்டாள். அப்பொழுது நஞ்சம்மா கேட்டாள் ''இப்போ அண்ணி எப்படி இருக்கா?''

''காசிக்குப் போனுலும் கருமம் விடாது. உன் அப்பனோட கெடுபிடியே இப்படித்தான். நாலு பேர்கிட்டே விசாரிக்கலை. முன்னே பின்னே பார்த்ததில்லை. இங்கே வந்தான். உன்னைக் கொடுக்க ஏற்பாடு செஞ்சிட்டான். அங்கே போனுன். அவளைக் கொண்டுவர ஏற்பாடு செஞ்சிட்டான். அவளுக்கென்ன? ஆனந் தமா சாப்பிடரு. வறுத்து வைத்த கடலையைத் திருடித் தின் னரு. நெய்யும் பாலும் திருட்டுத்தனமாக் குடிக்கரு. வாரத் துக்கு ஒரு தடவை எண்ணைக் குளியல். நான் தேய்ச்சு விடக் கூடாது. அவளே குளிக்கரு. இவ்வளவு உபசாரம் நடந்தாலும் அந்தப் பீடையின் வயித்திலே ஒரு கொழந்தை உண்டாகலை.''

''புருஷன் பொண்டாட்டி சந்தோஷமா இருக்காங்களா?''

''என்ன சந்தோஷம்? நாலு நாள் ராத்திரி அறையிலே சேந்து படுத்துட்டு கிசுகிசுன்னு பேசிக்கருங்க. அப்பிறம் நாலு நாள் அவன் அவளை அடிக்கிருன். நான்தான் அடிக்கத் தூண்டி

விடறேன்னு நெனேச்சிகிட்டு அவ எனக்கு சாபம் கொடுக்கறு. அடிக்காதடான்னு அவன்கிட்டே சொன்ளு அவன் கேக்கற தில்லே. ''அடிச்சாத்தான் அவ ஒழுங்கா இருப்பா, நீ சும்மா இருன்னு அவன் என்னே மிரட்டறுன். புலேயன் காளன் மகள் கெம்பின்னு ஒருத்தி இருந்தாள் தெரியுமா ?''

''தெரியாம என்ன ?''

''கல்லேசன் அவளோட சேர்ந்து இருந்ததை கரும்புத் தோட்டத்திலே பாத்ததாக பல பேர் சொன்ளுங்க. மீனவர் தெருவிலே மாயகன் இருந்தானே அவன் செத்துப் போய் மூணு வருஷம் ஆச்சு. அவனுடை பெண்டாட்டியும் ரெண்டு சின்னக் குழந்தைகளும் இருக்காங்க. அவளோட வீட்லே உக்காந்திருக் காளும். என்னவெல்லாமோ சொல்ருங்க. நான் ஒரு நாள் அவன்கிட்டே கேட்டேன். ''எந்தத் தேவடியா மகன் அப்பிடிச் சொன்னது? அவனேச் செருப்பால் அடிக்கறேன்'' அப்பிடின்னு கத்திஞன். நான் பேசாம இருந்துட்டேன்.''

''வீட்லே பெண்டாட்டி இருக்கறப்போ அவன் ஏன் இப்படிச் செய்யருன்?''

''கல்யாணம் செஞ்சுகிட்ட பிறகு புருஷன்கிட்டே எப்படி நடந்துக்கறதுன்னு அந்த முண்டைக்குத் தெரிஞ்சிருந்தா அவன் ஏன் இப்படிப் போருன்?''

பேத்தியின் மனக் குறைகளேயெல்லாம் பாட்டி கேட்டுத் தெரிந்து கொண்டாள். அன்றிலிருந்து அவளே சமையல் வேலேயையும் கவனித்துக் கொண்டாள். இரவு நேரத்தில் நஞ்சம்மா தன் பாட்டியின் அருகே பாய் விரித்துப் படுத்துக் கொள்வாள். இரு குழந்தைகளும் பாட்டியின் இரு புறங்களில் படுத்துக் கொள்வார்கள். நஞ்சம்மாவுக்குத் தூக்கம் வரும் வரை பாட்டி பேசிக் கொண்டிருப்பாள். பாட்டி வந்துவிட்ட தால் வீட்டில் படுத்துக் கொள்ள சென்னிகராயருக்குப் பிடிக்க வில்லே. ஒரு நாள் இரவு அவர் படுக்கையை சுருட்டிக் கொண்டு மாதேவய்யாவின் கோவில் திண்ணேக்குப் போய்விட்டார்.

பாட்டி வந்து சேர்ந்த எட்டாவது நாள் வெள்ளேப் பசுவை யும் கன்றுக்குட்டிகளேயும் ஓட்டிக் கொண்டு கல்லேசன் வந்து சேர்ந்தான். அவன் இரண்டு நாட்கள் தங்கையின் வீட்டில் தங்கிவிட்டு ஊருக்குப் புறப்பட்டான். ஒன்பது மாதங்கள் நிறை வுற்றதும் நஞ்சம்மா ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். குழந்தை செழுமையாக இருந்தது. நாமகரணம் செய்யப் பணம்

இருக்கவில்லை. ஆனால் சடங்கு செய்யாமல் இருக்க முடியாது. அக்கம்மாப் பாட்டி கொண்டு வந்திருந்த அரிசியும் வெல்லமும் இருந்தன. அக்கம்மாவிடம் ஐந்து ரூபாய் இருந்தது. ஊருக்குள் இருந்த நான்கு பிராமண வீட்டுக்காரர்களையும் இரண்டு ஜோசியர்களையும் அழைத்துச் சாப்பாடு போட்டார்கள். சாஸ்திரப்படி விசுவநாதன் என்று பெயரிட்டார்கள். அன்று கங்கம்மாவும் அப்பண்ணய்யாவும் இருக்கவில்லை. முந்தைய நாளே வெளியூருக்குச் சென்றுவிட்டனர்.

# எட்டு

## 1

நஞ்சம்மாவுக்குக் குழந்தை பிறந்த பிறகு அக்கம்மா நான்கு மாத காலம் அவளை நன்கு கவனித்துக் கொண்டாள். பேத்தி எந்த வேலையும் செய்யாதபடி பாட்டி பார்த்துக் கொண்டாள். ஆனால் நஞ்சம்மா இரண்டாவது மாதத்திலேயே கணக்கு எழுத ஆரம்பித்து விட்டாள். இதைப் பாட்டியால் தடுக்க முடியவில்லை.

அக்கம்மாவை அழைத்துச் செல்ல கல்லேசனே வந்திருந்தான். பாட்டியும், கல்லேசனும் ஊருக்குப் புறப்படுவதற்கு முந்தைய தினம் மாலை தலையாரி கணக்குப்பிள்ளையை அழைத்துச் செல்ல வீட்டிற்கு வந்து சேர்ந்தான்.

''கடைக்கார சென்ன செட்டி வீட்டிலே பஞ்சாயத்து பேசறாங்க. உங்களை வரச் சொன்னாங்க.'' என்றான் கணக்குப் பிள்ளையை நோக்கி.

''எதுக்காகப் பஞ்சாயத்து?'' என்று நஞ்சம்மா கேட்டாள்.

''சென்ன செட்டி தன்னோட மருமகளை வெச்சுகிட்டிருக்கானாம். அதனாலே அவனோட மகன் பஞ்சாயத்து கூட்டியிருக்கான்.''

''மத்த பெரிய மனுசங்களையே பேசச் சொல்லு. எங்க வீட்டுக்கு உறவுக்காரங்க வந்திருக்காங்க. அவரு வரமுடியாதுன்னு சொல்லிடு.''

''கண்டிப்பாக கணக்குப்பிள்ளை வேணுமாம். அவரைக் கூட்டிகிட்டு வரணுமின்னு எல்லோரும் சொன்னாங்க.''

கிராமத்தில் பஞ்சாயத்து பேசும் பொழுது கணக்குப்பிள்ளை யும் அங்கே இருக்க வேண்டும் என்பது நியதி. ஆனால் சென்னிக ராயருக்கு எதுவும் தெரியாது என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் கணக்குப்பிள்ளை எப்படிப்பட்டவராயினும் அவர் கண்டிப் பாக இருந்தாக வேண்டும். ஆகையால் சென்னிகராயர் புறப் பட்டார். அவரைப் பின் தொடர்ந்து கல்லேசனும் புறப்பட் டான். அவனுக்கு உள்ள அனுபவம் யாருக்கு இருக்கிறது?

சென்ன செட்டியின் வீட்டுக் கூடத்தில் பஞ்சாயத்துக்காரர் கள் கூடியிருந்தார்கள். மணியகாரர் சிவே கவுடர், அவருடைய மைத்துனன் சிவலிங்கன், ரேவண்ண செட்டி, பஞ்சாயத்து போர்டு உறுப்பினர்கள் நான்கு பேர், இரண்டு ஜோசியர்கள் மற்றவர்கள் பத்துப் பதினைந்து பேர், ஆகிய எல்லோரும் அங்கே இருந்தனர். வெற்றிலை, பாக்கு, புகையிலை, பீடிக்கட்டு முதலி யவைகள் அவர்கள் எதிரே வைக்கப்பட்டிருந்தன. பஞ்சாயத் துப் பேச ஆரம்பிப்பதற்கு முன் தலைவராக இருப்பவர் யார் என்ற கேள்வி எழுந்தது. ''கணக்குப்பிள்ளையே தலைவராக இருக்கட்டும்'' என்று யாரோ சிலர் குறும்பாகச் சொன்னார்கள். உடனே மணியகாரர் சிவே கவுடர் குறுக்கிட்டு ''அந்த முட்டா ளுக்கு என்ன தெரியும்'' என்றார். ''மணியகாரர் தலைவராக இருக்கட்டும்'' என்றான் மற்றொருவன். ரேவண்ண செட்டி அதை எதிர்த்தான். ''உள்ளூர்க்காரங்க யாரும் வேண்டாம். போலீஸ்காரராக இருந்தவர் கணக்குப்பிள்ளையின் மச்சினர் — கல்லேசனே தலைவராக இருக்கட்டும்'' என்று பஞ்சாயத்தைக் கூட்டிய கிரியன் சொன்னான். அதை எல்லோரும் ஒப்புக் கொண் டார்கள். பிறகு கல்லேசன் எல்லோருக்கும் நடுவே அமர்ந்து, புகையிலையை மென்று கொண்டே கேட்டான்: ''இப்ப என்ன வெவகாரம் — யாருக்கு என்ன அநியாயம் நடந்திருக்குங்கறதை சபைக்கு முன்னாடி வந்து சொல்லுங்க.''

கிரியன் முன்னே வந்து சொன்னான்: ''எங்க அப்பன் என் பெண்டாட்டியை வெச்சுகிட்டு இருக்கான். ரெண்டு பேருக்கும் தண்டனை கொடுக்கணும்.''

''உங்க அப்பா யாரு?''

''அதோ, அங்கே உக்காந்திருக்கானே, அவன்தான்'' என்று சொல்லியவாறு, தூணுக்கருகே தலைகுனிந்து அமர்ந் திருந்த சென்ன செட்டியைச் சுட்டிக் காட்டினான்.

கல்லேசன் விஷயத்தை விரிவாக விசாரித்துத் தெரிந்து கொண்டான். கிரியன் வயல் வேலைக்காக எப்பொழுதும்

வெளியே போய் விடுவான். சென்ன செட்டி கடையிலே உட்கார்ந்து வியாபாரத்தைக் கவனிப்பான். கடை வீட்டுத் திண்ணையிலேயே இருந்தது. கிரியனின் மனைவி நரசம்மா எப்பொழுதும் வீட்டில் தான் இருப்பாள். கிரியனுக்குத் திருமணம் நடந்து எட்டு வருடங்கள் ஆகின்றன. சென்ன செட்டியின் மனைவி இறந்து இருபது வருடங்கள் ஆகின்றன. மனைவி இறந்த பிறகு அவர் மறுபடியும் திருமணம் செய்து கொள்ளவில்லை — இது போன்ற விஷயங்களை சம்பந்தப்பட்டவர்களை விசாரித்து அறிந்து கொண்டான் கல்லேசன்.

கல்லேசன் சென்ன செட்டியை விசாரித்தான். அவன் தலை குனிந்தவாறே பேசினான். ''இந்தப் படுபாவிப் பயல் சொல்லிக் கொடுத்தவங்க பேச்சைக் கேட்டு என் மரியாதையைக் கெடுப்பதற்காக இப்படிப் பஞ்சாயத்துக் கூட்டியிருக்கான். கடையிலிருந்து கிடைக்கிற வருமானத்திலெ இவனுக்கு ஒரு தம்படியும் தர மாட்டேன். என் நிலமும் இவனுக்குக் கிடையாது.''

''என் அம்மா மேலே ஆணையா நான் பொய் சொல்லலை. நானே கண்ணுலே பார்த்தேன்'' என்று உறுதியாகச் சொன்னான் கிரியன்.

''சரி. உன் பெண்டாட்டியை விசாரிக்கணும். அவளை இங்கே கூப்பிடு'' என்றான் கல்லேசன்.

''வாம்மா இங்கே'' என்று அய்யா சாஸ்திரிகள் கூப்பிட்டார். அவள் வரவில்லை. ''பஞ்சாயத்துப் பேசணும். இங்கே வாம்மா'' என்று அவர் மறுபடியும் அழைத்தார். சென்னிகராயரும் ''உம் உம்'' என்றார். நரசம்மா சமையலறைக் கதவருகே வந்து நின்றாள். அவளை அந்த ஊரில் யாரும் அதிகம் பார்த்தது கிடையாது. சிவந்த வட்டமான முகம். திரண்ட செழிப்பான மார்பகங்கள் நல்ல உயரம். அவள் மிடுக்குடன் நின்றாள். அவளைப் பார்த்ததும் என்ன தீர்ப்புச் சொல்ல வேண்டும் என்று கல்லேசன் முடிவு செய்து விட்டான். அய்யா சாஸ்திரிகள் பேசினார்: ''அம்மா, மாமனார்ங்கிறவர் அப்பாவுக்குச் சமமானவர். மருமகள் மகளுக்குச் சமமானவள். உலகத்திலே இப்படித் தப்பு நடந்தா மழை பெய்யுமா? நான் சொல்றது உனக்குப் புரியறதா? என்னய்யா, சென்ன செட்டி, நீ என்ன சொல்றே?''

அண்ணா ஜோசியர் சாஸ்திரங்களில் உள்ளவற்றை எடுத்துச் சொல்லி தர்மத்தைப் பற்றியும், அதர்மத்தைப் பற்றியும் வியாக்

கியானம் செய்தார். மற்றவர்கள் அதைக் கேட்டுக் கொண் டிருந்தார்கள். ''அந்த அம்மா என்ன சொல்ருன்னு கேளுங்க'' என்ருன் ரேவண்ண செட்டி.

''நீ என்னம்மா சொல்றே?'' என்ருன் கல்லேசன்.

''நீங்க இவ்வளவு பேசறீங்களே! நான் ஒரு சங்கதி கேட்க றேன். நீங்க சொல்றீங்களா?'' என்று இரண்டு புரோகிதர்களை யும் பார்த்துக் கேட்டாள் நரசி.

''தாராளமாக் கேளு'' என்று இருவரும் ஒரே குரலில் சொன்ஞர்கள்.

''பன்னிரண்டு மொளம் ஆழமுள்ள கிணத்துக்கு ஆறு மொளக் கயிறு போதுமா?''

அய்யா சாஸ்திரிகளால் பதில் சொல்ல முடியவில்லை. மற்ற பஞ்சாயத்துக்காரர்களும் திகைப்படைந்து பேசாமலிருந்தார்கள். ரேவண்ண செட்டி கல்லேசனிடம் ''சாமி! நீங்க முடிவு சொல் லிடுங்க'' என்ருன்.

''இவகூட நான் இனிமேல் இருக்க முடியாது'' என்று கிரியன் சொன்ஞன்.

கல்லேசன் சிறிது நேரம் யோசித்துவிட்டுத் தன் முடிவைச் சொன்ஞன் :- ''பெண்டாட்டி கூட இருக்க முடியாதுன்னு புருஷன் சொல்லிட்டான். அவகூட இருக்கச் சொல்லி அவனைக் கட்டாயம் செய்ய முடியாது. மாமனுருக்கும் மருமகளுக்கும் சம்பந்தம் இருக்குன்னு அவன் சொல்ருன். அவன் பொய் பேசறதாக சென்ன செட்டி சொல்ருன். ஒருத்தனைப் பத்தி அபாண்டமாக நாம சொல்லக் கூடாது. ஆனு மகனேட ஆறு தலுக்காக மாமனுரும் மருமகளும் தனித்தனியே இருக்கணும். அவ தனியா இருக்கறதுக்கு சென்ன செட்டி ஒரு சின்ன வீட்டைக் கட்டிக் கொடுக்கனும். அப்பனும் மகனும் பிரியப்பட்டது போல இருந்துக்கலாம்.''

இந்தத் தீர்ப்பில் இருந்த நியாயம் மற்றவர்களுக்குப் புரிய வில்லை. அவர்கள் திகைப்படைந்தார்கள். ''இது எப்படி நியாயம்?'' — சிவே கவுடர் கேட்டார். ''அவரைத் தலைவரா ஏத்துகிட்டோம். அவர் சொல்றதையும் ஏத்துக்க வேணும். மறு பேச்சு கூடாது. நீ பேசாம ஒப்புக்கம்மா'' என்று நரசியைப் பார்த்து ரேவண்ண செட்டி சொன்ஞன்.

''நாலு பெரிய மனுஷங்க சொல்றதை நான் மீற முடியுமா?'' என்ருள் அவள்.

மற்றவர்கள் மறுபடியும் பேசத் துவங்கு முன் ரேவண்ண செட்டி எழுந்தான். கல்லேசனும் எழுந்து விட்டான். ஆகை யால் மற்றவர்களும் புறப்பட்டார்கள்.

வீட்டிற்கு வந்த பிறகு சென்னிகராயர் கல்லேசனிடம் ''அவள் ஏதோ கேள்வி கேட்டாளே! அது என்ன?'' என்று கேட்டார்.

''புரியலையா?''

''இல்லை.''

''அதுதான் நியாயம் சொல்ல உங்களைப் போடலை. புரி யாட்டா பரவாயில்லை.''

சென்னிகராயர் மறுபடியும் ஒரு துண்டுப் புகையிலையை வாயில் போட்டுச் சுவைக்க ஆரம்பித்தார்.

உ

ரேவண்ண செட்டி சீட்டு ஆட கோடிஹள்ளி கிராமத்திற் குச் செல்வது வழக்கம். அந்த ஊர் மணியகாரன் சிக்கே கவுட னின் வீட்டில் மாட்டுத் தொழுவத்தில் ஒரு பரண் இருந்தது. அது சீட்டு விளையாட மிகவும் சௌகரியமான இடம். சிக்கே கவுடன், ரேவண்ண செட்டி, கம்பன்கெரெ சேர்மன் லிங்கத் தேவர், காண்ட்ராக்டர் சின்னசாமி, தோல் வியாபாரி ஹயாத் சாயபு முதலியோர் அங்கே கூடுவார்கள்.

ஒரு நாள் மதியம் ரேவண்ண செட்டி, சிக்கே கவுடனிடம், ''அம்பது ரூபாய் கொடுக்கறீங்களா அண்ணு? தேங்கா போட்ட தும் தர்றேன்'' என்ருன். ''நீ இது வரை என்கிட்டே எவ்வளவு பணம் வாங்கிட்டே! இனிமேல் என்கிட்டே பணமில்லை.''

''கொடுங்கண்ணு. அப்படிச் சொல்லாதீங்க.''

ரேவண்ண செட்டிக்குக் கடன் கொடுப்பதில் சிக்கே கவுட னுக்கு நஷ்டமேதுமில்லை. கொடுத்த பணத்தில் ஓரளவு சீட் டாட்டத்தில் வந்து விடும். புரோ நோட்டுப் பாரங்கள், ரெவின்யு ஸ்டாம்புகள் ஆகியவை சிக்கே கவுடனிடம் எப்பொழு தும் இருந்தன. அந்தப் பாரத்தில் தொகை, தேதி ஆகியவைகள் எழுதி ரேவண்ண செட்டியிடம் கையொப்பம் பெற்றுக்கொண்ட பின், ஒரு வருட வட்டி ஆறு ரூபாயைக் கழித்துக் கொண்டு, மீதி நாற்பத்து நான்கு ரூபாயை சிக்கே கவுடன் ரேவண்ண செட்டியிடம் கொடுத்தான். அந்தப் பணம் அவனுடைய சட்டைப் பைக்குள் செல்லவில்லை. சீட்டாட்டப் பாய் மேல்

இருந்தது. நாற்பத்து நான்கு ரூபாய் என்பது சிறிய தொகை என்ற காரணத்தால் அந்தப் பணத்தை வைத்துக் கொண்டு ''மூணு சீட்டு'' ஆட அவன் ஒத்துக் கொள்ளவில்லை. ஒரு ரூபாய் வைத்து ''இருபத்தெட்டு'' ஆட ஆரம்பித்தான். மற்ற வர்கள் யாரும் வராததால் ரேவண்ண செட்டியும் சிக்கே கவுட னும் மாத்திரம் ஆடினார்கள். சாயங்காலம் ஆறு மணி அளவில் நாற்பத்தி நான்கு ரூபாயையும் சிக்கே கவுடன் ஜெயித்து விட் டான். இழந்த பணத்தை ஜெயித்து விடவேண்டும் என்ற வெறி ரேவண்ண செட்டியை ஆட்டியது. மறுபடியும் புரோ நோட்டில் கையொப்பமிட்டு நாற்பத்து நான்கு ரூபாய் கடன் வாங்கி ஆட ஆரம்பித்தான். இரவு பதினொறு மணியளவில் அந்தப் பணத்தை யும் கவுடனிடம் இழந்து விட்ட ரேவண்ண செட்டி, துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு ஊருக்குக் கிளம்பினான்.

சர்வக்கா தன் வீட்டில் ஐந்து குழந்தைகளுடன் படுத்துக் கொண்டிருந்தாள். கதவைத் தட்டி உள்ளே சென்ற ரேவண்ண செட்டி, ''சாப்பிட ஏதாச்சும் போடு'' என்றான். அவள் வெண் கலத் தட்டில் ஆறிப்போன களியைப் போட்டு, அகத்திக்கீரை மசியல், ரசம் ஆகியவற்றை எடுத்து வந்து அவன் எதிரே வைத் தாள். ''ஏன் சூடாக இல்லே.'' — அவன் உறுமினான்.

''சூடாகத்தான் செஞ்சு வைச்சேன். நீங்க எப்ப வருவீங் கென்னு எனக்கெப்படித் தெரியும்? அது ஆறிப் போச்சு.''

''கேடு கெட்ட முண்டை, நான் எப்ப வருவேன்னு என் கிட்டே கேக்க உனக்கு தைரியம் வந்தாச்சா? உன் நெஞ்சு மேலே உதைச்சுக் கொன்னுடறேன், பாரு'' என்று உறுமிக் கொண்டே களி உருண்டையை ரசத்தில் தொட்டு வாயில் போட்டான். அது கெட்டியாக இருந்ததால் தொண்டைக்குள் எளிதாக இறங்கவில்லை. அவன் உடனே ஆவேசத்துடன் எழுந்து அவளை உதைத்து ''சூடாக சோறு வடி'' என்றான்.

அடிபட்ட வேதனையால் அவள் அழுது கொண்டே ''அரிசி இல்லையே'' என்றாள்.

''எப்பக் கேட்டாலும் இல்லே இல்லேன்னு சொல்றியா, தரித்திர முண்டை!'' என்று கூறியபடி ஆத்திரத்துடன் மறுபடி யும் அவளை ஒருமுறை பலமாக உதைத்துவிட்டு தட்டிலிருந்த ஆறிய களியைச் சாப்பிட்டு விட்டுக் கட்டிலில் படுத்துக் கொண் டான். சர்வக்கா, தட்டைக் கழுவி வைத்துவிட்டு, தரையில் தன் கடைசிக் குழந்தை ருத்ரேசனுடன் படுத்துக் கொண்டாள்.

3

கணக்கு எழுதும் போது சந்தேகம் ஏற்பட்டால் அந்தச் சந்தேகத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்வதற்காக நஞ்சம்மா, நாகலாபுரத்திற்குச் செல்வது வழக்கம். கணக்குப் புத்தகங்களை தலையாரி தூக்கி வருவான். தியாவரசய்யா மிகத் தெளிவாகச் சொல்லிக் கொடுப்பார். வரி வசூல் செய்யும் போது மணிய காரரும் உடன் இருப்பார். ''நிலவரி வசூல் செய்வது மணிய காரர் பொறுப்பு. மணியகாரர் சொன்னபடி கணக்குப்பிள்ளை கணக்கெழுதிவிட்டுச் சும்மா இருக்க வேண்டும்'' என்பது சிவே கவுடரின் எண்ணம். அவனை எதிர்த்துப் பேசக் கூடியவர்கள் யாருமில்லாததால் அந்த ஊரில் அதுவரை அவன் சொன்னபடியே நடந்து வந்தது. வரி வசூலில் ஒரு அணு கூட கணக்குப்பிள்ளைக்கு ஆதாயம் இருக்கவில்லை. ராமஸந்திர கிராமத்தில் விற்பனைப் பத்திரம், அடமானப் பத்திரம் முதலிய எந்தப் பத்திரம் எழுத வேண்டுமாயிருந்தாலும், ஊர்க்காரர்கள் பழைய கணக்குப் பிள்ளை சிவலிங்கனிடம்தான் போய்க் கொண்டிருந்தார்கள். சென்னிகராயரைத் தேடி எவரும் வருவதில்லை. சென்னிகராய ருக்குச் சரியாகப் பத்திரம் எழுதத் தெரியாது என்பது ஒரு காரணம். ''அவன்கிட்டே போய் எழுதிகிட்டு வந்தா, இந்தப் பத்திரம் செல்லுமா?'' என்று மணியகாரர் ஜனங்களிடம் இளக் காரமாகப் பேசிக் கொண்டிருப்பார். மற்றொரு காரணம், சிவலிங்கனை விட நஞ்சம்மா பத்திரங்களை நல்லவிதமாக எழுது வாள் என்பது ஜனங்களுக்குத் தெரிந்திருந்தாலும், அரசாங்கப் பத்திரங்களைப் பெண்கள் எழுதினால் செல்லுபடியாகாது என்ற எண்ணமும் அவர்களிடமிருந்ததுதான். ஆகையால், ராமஸந்திர கிராமத்தில் நஞ்சம்மாவுக்கு எவ்வித வருமானமும் இருக்கவில்லை.

குருபரஹள்ளியில் வரி வசூல் செய்யும் பொழுது மணியகாரர் குண்டே கவுடர், சென்னிகராயருடன் செல்வார். வரி வசூலிக் கும் பொழுது ஒவ்வொருவருடைய வரித் தொகைக்கேற்படி அவர்களிடமிருந்து 'மை' காணிக்கையை- தலையாரி வசூல் செய்து கணக்குப்பிள்ளையிடம் கொடுத்து விடுவான். இது குண்டே கவுடரின் ஏற்பாடு. அத்துடன் அவரும் இரண்டு ரூபாய் கொடுத்து விடுவார். மொத்தமாக அந்த ஊரில் நாற்பது ரூபாய் வருமானம் கிடைத்து வந்தது. சென்னிகராயர் தனிக்குடித்தனம் ஆரம்பித்த பிறகு, அறுவடை காலத்தில் குண்டே கவுடர் ஊர்க் காரர்களிடமிருந்து ஒரு கண்டி ராகியும், ஐந்துபடி அவரைப் பருப்பும் திரட்டி கணக்குப்பிள்ளையின் குடும்பத்திற்குக் கொடுத்து வந்தார். குருபரஹள்ளியில் சொத்து விற்பனை, அடமானம்

ஆகிய வகைகள் அதிகம் கிடையாது. ஆகையால் அந்த வகையில் அங்கே வருமானம் கிடையாது.

சென்னிகராயரின் அதிகார எல்லைக்குட்பட்ட மற்ருெரு கிராமம் லிங்காபுரம். அந்த ஊர்க்காரர்கள் எல்லோரும் ஓரளவு வசதி படைத்தவர்கள். ராமஸந்திர கிராமத்து மணியகாரர் சிவே கவுடர் அவர்களுக்கு தூரத்து உறவினர். கணக்குப் பிள்ளைக்கு எதற்காக மைக் காணிக்கை கொடுக்க வேண்டும் என்ற அவனது கேள்வி, ஊர்க்காரர்களுக்கு நியாயமாய்ப்பட்டது. மேலும் அந்த ஊர் மணியகாரன் புரதப்பன் அந்தப் பணம் தனக்குச் சேர வேண்டியதுதான் என்று சொல்லிவிட்டான். ஆகையால் அந்த ஊரிலும் நஞ்சம்மாவுக்கு வருமானம் கிடையாது.

நஞ்சம்மாவே குருபரஹள்ளிக்குப் போய் வரி வசூல் செய்வாள். மற்ற ஊர்களில் மணியகாரர்களே வசூல் செய்தனர். அந்தக் கிராமத்தின் கணக்குகளை அவள் வீட்டிலேயே அமர்ந்து எழுதினுள். ஜமாபந்திக்கு வேண்டிய எல்லாக் கணக்குகளையும் எழுதி வந்தாள். ஏதாவது சந்தேகம் இருந்தால் திம்மலாபுரத்திற்குச் சென்று தெரிந்து கொண்டு வந்து விடுவாள். சென்னிகராயர் கோட்டு அணிந்து, தலையில் தலைப்பாகை கட்டி, தோளில் துண்டு போட்டுக் கொண்டு நடுங்கியவாறே ஜமாபந்திக்குப் போய் குமாஸ்தாவுக்குத் தரவேண்டிய ''மாமூல்'' பணத்தைக் கொடுத்து, அதிகாரியிடம் கையொப்பம் வாங்கிக் கொண்டு ஆண்பிள்ளை போல் வீட்டுக்கு வந்து சேர்வார். ஷேக்தாரோ, தாசில்தாரோ கிராமத்திற்கு வந்தால் நஞ்சம்மா அவர்களுக்குச் சுடச்சுட சோறு, ரசம், கறி, அப்பளம் ஆகியவற்றுடன் சாப்பாடு போட்டு ''நாங்க ஏழைகள். கணக்குலே ஏதாவது தப்பிருந்தா மன்னிக்கணும்'' என்று நயந்து சொல்வாள். ''நான் தான் கணக்கு எழுதுகிறேன்'' என்று சொல்லமாட்டாள்.

அத்துடன் கணவனைக் கவனித்துக் கொள்ளவேண்டிய வேலையும் இருந்தது. அவள் சிரமப்பட்டு ஆண்டு முழுவதும் கணக்கு எழுதி முடிப்பாள். வருடக் கடைசியில் சென்னிகராயர் சம்பளம் வாங்கி, பதினைந்து நாட்களுக்கு கிராமத்திற்கே வர மாட்டார். திரும்பி வரும் சமயத்தில் அவரிடம் ஐந்து ரூபாய் இருக்கும். அதையும் அவர் தன் தகரப் பெட்டியில் வைத்துப் பூட்டி, சாவியை தன் அரைஞாண் கயிற்றில் தொங்கவிட்டுக் கொள்வார். தாசில்தார், சிரஸ்தார், தலைமைக் குமாஸ்தா, பியூன்கள் ஆகிய எல்லோருக்கும் பணம் கொடுத்த பிறகு நூறு

ரூபாயாவது மீதி இருக்கவேண்டும். குண்டே கவுடரின் நிலவரி ரசீதுக்காகக் கழித்துக் கொண்டது போக ஐம்பது ரூபாயாவது வீட்டிற்கு வந்து சேரவேண்டும். ஆகையால் ஒரு தடவை நஞ்சம்மா அவரிடம், ''மீதிப்பணம் எங்கே?'' என்று கேட்டாள். ''நீ செஞ்சு போடற களியும், அவரைப் பருப்பு ரசமும் சாப் பிட்டு நாக்கு செத்துப் போச்சு. அதுதான் பதினஞ்சு நாள் உருளைக்கிழங்கு வெங்காய சாம்பார், வடை, மசாலா தோசை, மைசூர்பாகு சாப்பிட்டுண்டு குஷியா இருந்தேன்'' என்று உடனே பதில் வந்தது. ''நீங்க நல்லா மைசூர்பாகு சாப்பிடுங்க. வீட்டிலே கொழந்தைங்க ஒரு துண்டு மைசூர்பாகு கூட பார்த்ததில்லே. ஓட்டல்லே நீங்க மாத்திரம் சாப்பிட எப்படி மனசு வந்தது?'' என்றாள் நஞ்சம்மா. சென்னிகராயரால் பதில் சொல்ல முடிய வில்லை. ஆகையால் ''தூ...முண்டை....தூ...தூ'' என்று பல முறை சொல்லிவிட்டு மாதேவய்யாவின் கோவிலுக்குப் போய் விட்டார்.

இனி வருடம் முழுதும் எப்படி சமாளிப்பது என்ற கவலை அவளை வாட்டியது. விசுவனுக்கு எட்டு மாதம். வயிற்றிலே மூன்று மாதம். ஆண்டுக்கொரு தடவை கிடைக்கும் சம்பளம் இப்படி வீணகப் போய்விட்டதே! குழந்தைகளைப் பட்டினி போட முடியுமா? தினசரி இரண்டு உருண்டைக் களியாவது பெரியவர்களுக்கு வேண்டும். என்னிடமே சம்பளத்தைக் கொடுங் கள் என்று அரசாங்கத்திடம் கேட்கமுடியுமா? இனி என்ன செய்வது? — என்றெல்லாம் இரண்டு நாட்கள் யோசனை செய்து கொண்டிருந்தாள். கடைசியில் ஒரு வழி பிடிபட்டது.

மறுநாள் காலையில் எழுந்து குளித்துவிட்டு, குழந்தைகளையும் குளிப்பாட்டி அவர்களுக்கு ரொட்டி, சட்னி கொடுத்தாள். அவர்கள் சாப்பிட்ட பிறகு நெசவாளர் தெருவில் இருந்த புட் டம்மாவின் வீட்டிற்கு அழைத்துச் சென்று அங்கே அவர்களை உட்கார்ந்திருக்கச் சொன்னாள். பிறகு கைக்குழந்தை விசுவனைத் தூக்கிக் கொண்டு குருபரஹள்ளிக்குப் போனாள். அங்கே குண்டே கவுடரின் வீட்டிற்குள் நுழைந்தபோது உள் முற்றத்தில் கங்கம்மா உட்கார்ந்து, தன் சிவப்புப் புடவைத் தலைப்பை விரித்து நீட்டிக் கொண்டிருந்தாள். கவுடரின் மனைவி லக்கம்மா அந்தப் புட வையில் ஒரு முறம் ராகி கொட்டிக் கொண்டிருந்தாள். கவுடர் சுவரில் சாய்ந்து உட்கார்ந்தவாறே தன் வெற்றிலை பாக்குப் பைக்குள் கையைவிட்டு ஏதோ தேடிக்கொண்டிருந்தார். கங்கம்மா தன் மருமகளைக் கண்டதும் ஆவேசம் கொண்டாள். ''நான் பிச்சை எடுத்துப் பிழைக்கிறேன். அதைக் கெடுக்க இங்கேயும்

வந்திட்டியா, ராட்சசி?'' என்று கத்தினுள். நஞ்சம்மா மௌன மாக நின்றுவிட்டாள்.

''வாம்மா, இங்கே வா, உட்கார்'' என்று கவுடர் கூறிய பிறகு அவள் கவுடருக்குப் பக்கத்தில் இருந்த பாயில் அமர்ந்தாள். புடவையில் இருந்த ராகியை முடிந்தவாறு கங்கம்மா வெளி யேறினுள்.

கவுடரின் மனைவி நஞ்சம்மாவிடம், ''உன் மாமியார் உன்னைப் பத்திதான் குறை சொல்லிகிட்டிருந்தா. நீ அவளைப் பார்த்து பொருமைப் படறியாம். புருஷனைக் கைக்குள் போட்டுகிட்டு ஆட்டம் போடறியாம். ஆம்பிளை போல அலையறியாம். கணக்குப்பிள்ளைச் சம்பளத்திலே அவளுக்குப் பங்கு கொடுக்கற தில்லையாம்'' என்று விளக்கமாகச் சொன்னுள்.

''அந்தம்மா ஏதோ சொல்லிட்டுப் போகட்டும். நீ பேசாம இரு'' என்று, கவுடர் மனைவியிடம் சொல்லிவிட்டு, ''என்னம்மா சம்பளம் வந்தாச்சா?'' என்று நஞ்சம்மாவைப் பார்த்துக் கேட்டார்.

''கவுடரே, அதைப் பத்திப் பேசத்தான் வந்தேன்'' என்று சொல்லி தன் கணவனின் நடத்தையை விளக்கினுள், நஞ்சம்மா.

''அந்த ஆளுக்கு ரெண்டு கொடுக்கணும்'' என்ருள் கவுட ரின் மனைவி லக்கம்மா.

''கொடுத்தாலும் புத்திவராது அந்த ஆளுக்கு. என்ன செய்யணும்னு நீயே சொல்லு.''

''சம்பளப் பணம் அவர் கையில் கிடைக்காம இருக்கணும். அது போதும்.''

''அரசாங்கம் உன்கிட்டே கொடுப்பாங்களா?''

''அப்படிச் செய்ய வேண்டாம். மொத்த சம்பளம் நூத்திரு பது ரூபாய். தாசில்தார், சிரஸ்தார் அவங்களுக்குக் கொடுக்க பதினஞ்சு அல்லது இருபது ரூபாய் போதும். மீதி நூறு ரூபாய் அதுக்கு நீங்க இப்பவே இவர்கிட்டேயிருந்து போன வருஷம் வாங்கினதைப் போல ரசீது வாங்கிக்கிங்க. உங்க வரி எண்பது ரூபாய் இருபது ரூபாய்க்கு வேறே யார் பேரிலேயாவது ரசீது எழுதி வாங்கிக்கிங்க. இந்த ரசீதுப் பணத்தை சம்பளம் கொடுக் கறப்ப கழிச்சுக்குவாங்க. அவருக்குப் பணம் கிடைக்காது. அந்த நூறு ரூபாய்க்கு நீங்க ராகி, பருப்பு, மொளகா கொடுங்க. பணம் மிச்சமிருந்தா அஞ்சோ, பத்தோ எனக்குக் கொடுங்க.''

''நல்லது, அப்படியே செய்யலாம். திவான் வேலை பாக்கற அளவுக்கு உனக்கு அறிவு இருக்குது. இந்த மடையனை ஆளத் தெரிஞ்சுட்டா மைசூர் நாட்டையே ஆளலாம். நான் நாளைக்கு வர்றேன். எழுதி வாங்கிடலாம்.'' என்றார்.

பஸவண்ணன் கோவிலில் சமைத்துச் சாப்பிட்டுவிட்டுப் போகும்படி கவுடரின் மனைவி நஞ்சம்மாவிடம் கூறினாள். குழந் தைகளை ஊரில் விட்டு வந்திருப்பதால் உடனே ஊருக்குத் திரும்ப வேண்டுமென்று நஞ்சம்மா சொன்னாள். குழந்தை களுக்குக் கொடுப்பதற்காக இரண்டு கொப்பரைகளையும் இரண்டு உருண்டை வெல்லத்தையும் கவுடர் மனைவி கொடுத்தாள். அவற்றை நஞ்சம்மா புடவையில் முடிந்து கொண்டாள். பிறகு நெய்யும், கரும்புச் சர்க்கரையும் போட்ட பாலைக் குழந் தைக்கு ஊட்டி விட்டு, தானும் குடித்து ஊருக்குப் புறப்பட்டாள்.

வீட்டில் சென்னிகராயர் மனைவியிடம் ''எங்கே போயி ருந்தே?'' என்று விசாரிக்கவில்லை. ''ஏன் சமையல் செய்யலை?'' என்று கோபித்துக் கொண்டார். அவளுடைய புடவை முடிச் சிலிருந்து எடுத்து வைக்கப்பட்ட கொப்பரையும், வெல்லமும் அவருடைய பார்வையில் பட்டவுடன், கொப்பரையை எடுத்து முறித்துச் சுவைக்க ஆரம்பித்தார். புட்டம்மாவின் வீட்டில் இருந்த இரண்டு குழந்தைகளும் வருவதற்குள், சென்னிகராயர் கொப்பரைகளையும் வெல்லத்தையும் தின்று தீர்த்துவிட்டு பிசுக் கான கைகளைக் கழுவிக் கொண்டிருந்தார்.

மறுநாள் குண்டே கவுடர் வந்தவுடன், நஞ்சம்மா தன் கணவர் முன் காகிதத்தையும் கட்டைப் பேனாவையும் வைத்தாள். ''அந்தம்மா சொல்றதுபோல் எழுதய்யா'' என்று கவுடர் சென்னிகராயரை அதட்டினார்.

''குருபரஹள்ளி மணியகாரரர் குண்டே கவுடரிடமிருந்து அவருடைய ரெவின்யூ வரிவகையில் எண்பது ரூபாய் மட்டும் பெற்றுக்கொண்டேன்'' என்று நஞ்சம்மா சொல்லிக் கொண் டிருந்த போதே, கணக்குப்பிள்ளை கட்டைப் பேனாவைக் கீழே வைத்துவிட்டு, ''எதுக்காக அப்படி எழுதணும்? என் கையிலே சம்பளப் பணம் ஒண்ணும் வராதே!'' என்று சொல்லி அமர்ந்து விட்டார். கவுடருக்குக் கோபம் வந்துவிட்டது. ''சூத்தாம் பட்டைய மூடிக்கிட்டு எழுதறியா, இல்லையா?'' என்று கூச்சலிட்டார். ஆனால் கணக்குப்பிள்ளை பேனாவைத் தொட வில்லை. ''எழுதமாட்டியா? எங்க ஊருக்கு வந்தா உன் காலை முறிச்சிடறேன். என்னன்னு நெனச்சிகிட்டே?''

''என் செலவுக்கு என்ன செய்யறது'' — சென்னிகராயர்.

''அதுக்கு நான் கொடுக்கறேன். எழுது'' — கவுடர்.

நூறு ரூபாய்க்கு ரசீது எழுதிக் கையொப்பம் போட்டுக் கொடுத்தார் கணக்குப்பிள்ளை. பிறகு ''எனக்கு ஏதாச்சும் கொடுங்க,'' என்று கவுடரிடம் வினயமாகக் கேட்டார். கவுடர் தன் இடுப்பிலிருந்து இரண்டு ரூபாயை எடுத்துக் கணக்குப்பிள் ளையின் எதிரே வைத்து ''எடுத்துக்க. இப்பவே கொடுத்திட் டேன்'' என்றார்.

கணக்குப்பிள்ளை அந்தப் பணத்தை மிக்க திருப்தியுடன் தன் சட்டைப் பைக்குள் போட்டுக்கொண்டார். கவுடர் ஊர் திரும்பி னார். மறுநாள் வெள்ளிக்கிழமை. சென்னிகராயர் காலையில் ரொட்டி சாப்பிட்டுவிட்டு கம்பன்கெரெ சந்தைக்குப் புறப்பட்டுப் போனார். சந்தையில் திப்டூர்காரர்கள் ''டேரா'' போட்டு ஓட்டல் நடத்துகிறார்கள். திப்டூர் ஓட்டலில் கிடைக்கக் கூடிய மசாலா தோசை, உருளைக்கிழங்கு மசாலா, மைசூர்பாகு, போண்டா முதலியவை சந்தை ஓட்டலிலும் கிடைக்கும்.

## 4

கணக்குப்பிள்ளை வேலை மாத்திரமே இருந்தால் வாழ்க்கை நடத்தமுடியாது, என்பதை நஞ்சம்மா உணர்ந்து கொண்டாள். பூமி, காணி இல்லாமல் வெறும் வேலையை வைத்துக் கொண்டு குடும்பத்தைச் சமாளிக்க முடியாது, என்பதைத் தெரிந்து கொண்ட பிறகு மேற்கொண்டு சம்பாதிப்பதற்கு என்ன வழி என் பதை அவள்யோசிக்க ஆரம்பித்தாள். அவள் திம்மலாபுரத்திற்குப் போயிருந்த பொழுது தியாவரசய்யாவின் வீட்டிற்குப் பக்கத்தி லிருந்தவர்கள் புரச இலையைத் தைத்து கட்டுக்கட்டாக அடுக்கி வைத்திருந்ததைப் பார்த்திருந்தாள். அவர்கள் அதை திப்டூருக்கு அனுப்புகிறார்களாம். நூறு இலை ஆறு அணா வீதம் கடைக் காரர்கள் வாங்கிக் கொள்கிறார்களாம். வீட்டு வேலை, கணக்கு வேலை ஆகியவைகளுடன் தினசரி நூறு அல்லது ஐம்பது இலை தைத்துவிடலாம் என்று நினைத்தாள்.

ராமஸந்திர கிராமத்திலிருந்த பிராமணர்கள் சோளேஸ் வரனகுட்டயை அடுத்த மணல் பள்ளத்திலிருந்து புரச இலைகளைக் கொண்டு வந்து கொண்டிருந்தார்கள். அதாவது, மூன்று மைல் தூரம். அவளுடைய பிறந்த ஊரான நாகலாபுரத்திற்குச் செல்லும் வழியில்தான் அந்தக் குன்று இருந்தது. புரச இலை

பறிப்பதற்கு அவள் பங்குனி மாதத்தில் செல்ல ஆரம்பித்தாள். அவ்வளவு தூரம் பெண்பிள்ளை ஒண்டியாகச் செல்வது சரியல்ல. துணைக்கு யாரை அழைப்பது? கணவனை அழைத்தாள். அவர் வர மறுத்துவிட்டார். ''உனக்குத் தேவையா இருந்தா நீ போ. எனக்கு அவசியம் கிடையாது'' என்றார் அவர். நெசவாளர் தெரு புட்டம்மாவைத் துணைக்கு அழைத்துக் கொண்டு, குழந்தைகளை அருகே இருந்த சென்னசெட்டியின் வீட்டில் விட்டுவிட்டு காலையில் காகம் கரைவதற்கு முன்னமே, கோணிப் பைகளையும், ரொட்டி சட்னியையும் எடுத்துக் கொண்டு புறப்பட்டாள். புட்டம்மாவுக்கு ஒருநாள் கூலி மூன்றணா. இருவரும் 'மளமள' வென்று நடந்து சென்று பொழுது விடிவதற்கு முன்பே இலை பறிக்க ஆரம்பித்தார்கள். எட்டு மணி வரை இலை பறித்த பிறகு இருவரும் ரொட்டி சாப்பிட்டு, அருகேயிருந்த ஓடையில் நீர் குடித்து விட்டு மறுபடியும் இலை பறிக்கத் துவங்கினார்கள். கோணிப்பை நிரம்ப இலைகளை அடைத்தபிறகு மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு இருவரும் கிளம்பினார்கள். வீட்டில் இலையை காம்பின் அருகே பார்வதி தைத்தாள். ராமண்ணனும் தைத்தான். அப்போது நஞ்சம்மாவுக்கு சமையல் வேலை. மத்தியான நேரத்தில் கணவர் வீட்டுக்கு வந்ததும் அவருக்கு புரச இலையில் சாப்பாடு. சாப்பாடு முடிந்து, பாத்திரங்கள் துலக்கிய பிறகு நஞ்சம்மாவும் இலை தைத்தாள். மாலை வெய்யிலில் இலைகளை உலர்த்தினார்கள். மறுநாள் காலையில் எடுத்துச் செல்வதற்கும் குழந்தைகள் சாப்பிடுவதற்கும் இரவில், ரொட்டி செய்யும் வேலை. அதிகாலையில் எழ வேண்டும் என்பதினால் இரவில் சீக்கிரமாகவே படுத்துக்கொண்டாள். இப்படியே தினசரி பழகிப் போய்விட்டது.

மழைக்காலம் ஆரம்பமாவதற்குள் சுமார் இருநூறு கட்டு இலை தைப்பதற்கு வேண்டிய இலைகளைச் சேகரித்துவிட்டாள். ஒரு கட்டுக்கு ஆறணா என்று கணக்குப் போட்டால் எழுபத்தைந்து ரூபாய் கிடைக்கும். கை வலிக்கத் தைக்க வேண்டும். இலை சேகரிக்கும் காலம் முடிவடையும் சமயத்தில் நிலவரி வசூல் செய்ய வேண்டிய காலம் வந்துவிட்டது. ''நீ ஏன் வர்றே?'' என்று சென்னிகராயர் அதட்டினாலும் நஞ்சம்மா அவருடன் வசூலுக்குப் புறப்பட்டாள். குண்டே கவுடர் 'மை' காணிக்கைப் பணத்தை வசூல் செய்து தானே வைத்துக் கொண்டார். ''இப்ப உனக்குப் பணம் எதுக்கு? வேணும்னா பிறகு கொடுக்கறேன்'' என்று அவர் சொல்லிவிட்டார். சென்னிகராயர் அவரை முறைத்துப் பார்த்தார். ஆனால் அவரை எதிர்த்துப் பேச தைரியம் வரவில்லை. வீட்டிற்கு வந்த பிறகு தன் மனைவி

யையும் கவுடரையும் ''நடத்தை கெட்டவங்க'' என்று திட்டி ஆறுதல் அடைந்தார். எப்படியோ அவருக்கு ஐந்து ரூபாய் கிடைத்துவிட்டது. திப்டூருக்குப் போவதைப் பற்றிய இன்ப எண்ணத்தில் திளைத்தார். திப்டூரில் குப்பிசுரண்ணுவின் நாடகம் வந்திருக்கிறதாம். அரண்மனைக்காரர்களே பார்த்து வியங்கும் படி 'சீன்' போடுகிறார்களாம். ஆறு அணு வீசிவிட்டு நாடகம் பார்க்க வேண்டும். ராத்திரி சாப்பாட்டுக்குப் பதிலாக, பம்பாய் போண்டா ஒரு கை பார்த்துவிட வேண்டும். அந்த குண்டே கவுடன் நூறு ரூபாய்க்கு ரசீது வாங்கிக் கொண்டான், பாவி! தாலுகா ஆபீஸ்காரர்களுக்கு கொடுத்தது போக கையில் நான்கு ரூபாய் இருக்கும். அத்துடன் இந்த ஐந்து ரூபாய். மொத்தம் பத்து ரூபாய். எத்தனை நாட்கள் சாப்பிடமுடியும்? ஒரு மைசூர் பாகு ஒன்பது காசு. நாலணு கொடுத்தால் ஆறு. இன்னமும் இரண்டு சேர்த்துக் கொடுத்தால், அவன் அப்பன் வீட்டுச் சொத்து போய்விடுமா? — என்னும் பல எண்ணங்கள்.

அந்தச் சமயத்தில் ராமஸந்திர கிராமத்துக்கு ஆரம்பப் பள்ளிக்கூடம் வந்துவிட்டது. பள்ளிக்கூடம் நடத்த கட்டிடம் இருக்கவில்லை. அதை எங்கே நடத்துவது என்பது பற்றி அரசாங்கம் ஊர்ப் பெரிய மனிதர்களிடம் அபிப்பிராயம் கேட்டது. ஆஞ்சநேயர் கோவிலில் நடத்தலாம் என்று சிவே கவுடர் சொன்னார். அப்படியானால் கங்கம்மாவும், அப்பண்ணய்யாவும் கோவிலைக் காலி செய்யவேண்டி வரும். கங்கம்மா சிவே கவுடரின் வீட்டின் எதிரே மண்ணை வாரித் தூற்றினாள். கோவில் பூசாரி அண்ணு ஜோசியரும் கோவிலில் பள்ளிக்கூடம் நடத்தக்கூடாது என்று சொன்ன பிறகு கங்கம்மாவின் கட்சி வலுவடைந்தது. அப்பொழுது சிவே கவுடருக்குச் சொந்தமான ஒரு வீடு காலியாயிற்று. வருட வாடகை முப்பத்தாறு ரூபாய்க்கு சிவே கவுடர் அந்த வீட்டை அரசாங்கத்துக்குக் கொடுத்தார். சூரப்பா என்ற பெயருடைய ஒருவர் ஆசிரியராக வந்தார். சில சிறுவர்களைப் பள்ளியில் சேர்த்துக்கொண்டார். பெண்களைப் படிக்க அனுப்பலாமா, என்பதைப் பற்றி ஊரில் விவாதம் நடந்து கொண்டிருந்தது. ''பொண்ணுங்களையும் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புங்க. பெரிய ஊர்கள்லே பொண்ணுங்க ஹைஸ்கூல் வரைப் படிக்கிறாங்க'' என்று ஆசிரியர் வற்புறுத்தினார். அதை யாரும் பொருட்படுத்தவில்லை. ''அம்மா, ஏதோ கொஞ்சம் படிச்சா பொண்ணுங்க கஷ்டப்படாம இருக்கலாம். சம்பாதிக்கவும் செய்யலாம். உங்களைப் போல படிச்சவங்களுக்கு நான் சொல்லவும் வேணுமா?'' என்று ஆசிரியர் நஞ்சம்மாவிடம் கூறியதும் அவள் பார்வதியைப் பள்ளியில் சேர்த்துவிட்டாள்.

பார்வதியுடன் ராமண்ணனையும் பள்ளிக்கு அனுப்பினுள். ''அந்த அம்மாவோட கெட்டிக்காரத்தனத்தைப் பாத்தியா?'' என்று ஊர்க் காரர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள். அந்தப் பள்ளிக்கூடத்தில் ஆசிரியர் அடிக்கவில்லை. மணலில் எழுதச் சொல்லவில்லை. சிலேட்டில் எழுதக் கற்பித்தார்.

அந்த முறையும் பிள்ளைப் பேற்றுக்கு அக்கம்மா வந்தாள். பிறந்த பெண் குழந்தை அரைமணி நேரத்தில் இறந்துவிட்டது. ''கர்ப்பமான பெண் இத்தனை புரச எலை தைச்சா சூடு ஆகாதா? அதான் குழந்தை செத்துப் போச்சு'' என்று அக்கம்மா கூறினுள்.

நஞ்சம்மா பேசவில்லை. அழுது கொண்டே இருந்தாள். ''அழாதே, கண்ணு. நீ அழுது உன் உடம்புக்கு ஏதாச்சும் ஆயிட்டா, இந்தக் கொழந்தைகளோட கதி என்ன?'' என்று அக்கம்மா கூறிக்கொண்டே இருந்ததால், அவள் இரண்டு நாட்களுக்குப் பிறகு அழுவதை நிறுத்தி, தன்னைத்தானே தேற்றிக் கொண்டாள். கங்கம்மா தான் வசித்து வந்த கோவிலுக்குள்ளேயே தீட்டுக் கழித்தாளேயொழிய, மருமகளின் வீட்டிற்குவந்து அவ்விடம் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அக்கம்மா தான் புறப்படுவதற்கு முன்தினம் பேத்தியிடம், ''உன் புருஷனுடை யோக்கிதை இப்படி இருக்கு. பெத்த கொழந்தைககிட்ட பாசம் கெடையாது. தன் வயித்துக் கவலைதான் அவனுக்கு. கொழந்தைகளை வளர்க்க நீதான் கஷ்டப்படணும். இனிமேல் அவனைப் படுக்கைகிட்ட வரவிடாதே'' என்று புத்திமதி கூறினுள்.

நஞ்சம்மா பேசாமல் இருந்தாள். ''அவன் கோபிச்சிட்டா பரவாயில்லே. நெருங்கவிடாதே'' என்று அக்கம்மா தொடர்ந்தாள். அப்பொழுது நஞ்சம்மா குறுக்கிட்டு, ''இதெல்லாம் நம்ம தலையெழுத்து, அப்படிச் செஞ்சா, அவருக்கு மானம் மரியாதை எதுவுமே கிடையாது. நடுத் தெருவிலே நின்னு கெட்ட வார்த்தைகளைச் சொல்லிக் கூச்சல் போடுருர். நானும் செஞ்சு பாத்துட்டேன்'' என்றுள்.

''தலையெழுத்து'' என்று அக்கம்மா பெருமூச்சு விட்டாள். எழுபத்தெட்டு வயதான அக்கம்மா, தான் நடந்தே போய் விடுவதாக சொன்னுள். அவளுடன் துணைக்கு ஒரு ஆளை அனுப்புமாறு அவள் சொன்னபோதிலும் பேத்தி ஒப்புக் கொள்ள வில்லை. அவள் பாட்டிக்கு மூன்று ரூபாய் விலையில் ஒரு புதிய சிவப்பு புடவை வாங்கிக் கொடுத்து, உடுத்துக் கொள்ளச் செய்து, பிறகு ஒன்றரை ரூபாய்க்கு வாடகை வண்டி பேசி, பாட்டியை வண்டியில் அனுப்பி வைத்தாள்.

5

ஒருநாள் மதியம் ஒரு மணியளவில் ரேவண்ணசெட்டியின் மனைவி சர்வக்கா நஞ்சம்மாவின் வீட்டுக்கு வந்து, ''ரெண்டு படி மாவு கொடுக்கறீங்களா?'' என்று கேட்டாள்.

''மாவு இல்லையே. வந்து உட்காருங்க.''

''அப்படியானால் ரெண்டு படி ராகியாவது கொடுங்க''

சர்வக்கா கொண்டு வந்திருந்த டப்பாவில் இரண்டு படி ராகியை நஞ்சம்மா அளந்து போட்டாள். சர்வக்கா அதிகம் பேசாமல் போய்விட்டாள். அன்று மாலை சர்வக்கா வந்தபோது நஞ்சம்மா இலை தைத்துக் கொண்டிருந்தாள். சர்வக்கா அவளருகே அமர்ந்து, ''யார்கிட்டே போய் கேக்கறதுன்னு நினைச்சுகிட்டிருந்தேன். கொழந்தைகளுக்கு ரொம்பப் பசி. எனக்கும் பட்டினி கிடந்து உடம்பு சோர்ந்து போச்சு. நீங்க ராகி கொடுத்து சாப்பாடு போட்டீங்க'' என்றாள்.

''இதென்ன இப்படிச் சொல்லிட்டீங்க? நிலம் வைச்சிருக்கற நீங்களே இப்படிச் சொன்னா, எப்படி நம்பறது?''

''உண்மையைச் சொல்லுங்க. உங்களுக்குத் தெரியாதா?''

''ஏதோ கேள்விப்பட்டேன். ஆனா வீட்டிலே சாப்பாட்டுக்கே கஷ்டம்னு எனக்குத் தெரியாது.''

''நான் தவிக்கறேன். போன ஜன்மத்துலெ சரியானபடி பூஜை செய்யலை. அந்தப் பலனை அனுபவிக்கிறேன்'' என்று கண்ணீர் வடித்தபடியே எல்லாவற்றையும் விளக்கிக் கூறினாள்.

ரேவண்ண செட்டி கோடிஹள்ளி கிராமத்திற்குப் போய், சீட்டாட்டத்திற்காக புரோநோட்டு எழுதிக்கொடுத்து வாங்கிய பணம் மூவாயிரத்துக்கு மேலே ஏறிவிட்டது. அந்தக் கடனுக்கு ஈடாக ஊருக்கு வெளியே இருந்த வயலை எழுதிக் கொடுக்க வேண்டும் என்று ஒருநாள் சிக்கே கவுடன் ரேவண்ணசெட்டியை வழியில் மிரட்டிவிட்டான். ஆகையால் அங்கிருந்தபடியே திப்டூருக்குப் போய் ரிஜிஸ்டர் செய்து, பத்திரத்தில் புரோநோட்டுக் கடனை ரத்து செய்துவிட்டார்களாம். இனி இருப்பது மேட்டு நிலம்தானும். மழை நன்றாகப் பெய்து, ஏரி நிரம்பி, நிலத்தில் கஷ்டப்பட்டு உழைத்தால் பன்னிரண்டு கண்டி தானியம் கிடைக்கும். ஆனால் மடிப்புக் கலையாத வெள்ளை வேஷ்டி உடுத்தி, பளபளவென்று செருப்புப் போட்டுக் கொண்டு, உல்லாசமாகத்

திரியும் ரேவண்ண செட்டி, நிலத்தில் வேலை செய்வானா? குத்தகை விட்டிருந்த நிலத்திலிருந்து நான்கு கண்டி தானியம் வந்து கொண்டிருந்தது. அந்த நிலத்தையும் வட்டிக் கடைக்காரனிடம் அடமானம் வைத்து எண்ணூறு ரூபாய் வாங்கிவிட்டானாம், செட்டி.

''அடமானம் வைச்சுக் கடன் வாங்க, என்ன செலவு வந்திடுத்து உங்களுக்கு? ருத்ராணிக்கு கல்யாண ஏற்பாடு செய்யறீங்களா ?''

''வீட்டிலே வயது வந்த பொண்ணு இருக்கிறான்னு எண்ணம் இருந்தாத்தானே? ஊருக்கு வெளியே சின்ன ஓட்டு வீடு கட்டி, கடை வெச்சிருக்காளே அந்தத் தேவடியா, அவளுக்கு எங்கிருந்து பணம் வந்திச்சு? அந்த எண்ணூறு ரூபா அந்த முண்டைக்குத் தான்.''

அவர்களிடம் மிஞ்சியிருப்பது ஐம்பது தென்னைமரம் உள்ள ஒரு தோப்பு மட்டும்தான். தேங்காய் முற்றுவதற்கு முன்பே அதைப் பறித்து விற்றுக் கொண்டிருந்தார்கள். இல்லாவிட்டால் அவனுடைய மடிப்பு கலையாத வேஷ்டி சட்டைக்கும், சவரம் செய்யும் பிளேடுக்கும், விலை உயர்ந்த சிகரெட்டுக்கும் பணம் ஏது?

நரசி ஊருக்கு வெளியே மூன்று அங்கண ஓட்டு வீடு ஒன்றைக் கட்டி, அங்கேயே கடை ஒன்றையும் வைத்து நடத்திக் கொண்டிருந்தாள். அவளைப் பற்றித் தெரியாதவர்களே கிடையாது. அவளுடைய மாமனார் சென்ன செட்டி அவமானப்பட்டு ராமஸந்திர கிராமத்தை விட்டு திப்டூருக்கு அப்பால் இருந்த சென்னபுரத்திற்குப் போய்விட்டான். அங்கே கடை வைத்து நடத்திக் கொண்டிருந்தான். அவளுடைய கணவன் கிரியன் வேறு ஏதோ ஊருக்குப் போய்விட்டான்.

ரேவண்ண செட்டிக்குப் புத்திமதி சொல்ல யாரும் இருக்கவில்லை. அவனுடைய வாய்ச் சொல்லுக்கு எல்லோரும் பயந்து, அவனுடன் யாரும் வாயாட விரும்பவில்லை. சர்வக்காவுக்கு அண்ணன், தம்பிமார்கள் இருந்தனர். அவர்கள் அவளுக்கு மிகுந்த உதவி செய்துவந்தனர். அடிக்கடி அவர்களைத் தொந்தரவு செய்ய அவள் விரும்பவில்லை. அவளுடைய அண்ணன் ஒருதடவை ரேவண்ண செட்டியிடம் பேசவந்தான். செட்டி அவனைக் கண்டபடி கேவலமாகத் திட்டி விட்டான். ஆகையால் இனிமேல் தன் மைத்துனனுடன் பேசுவதில்லை என்று அவன் முடிவு செய்துவிட்டான்.

''நஞ்சம்மா, கொழந்தைகளை எப்படியோ காப்பாத்தணும். உங்க ஜாதிக்காரர்களைப் போல எங்களுக்கு இலை தைக்கவராது. தயவு செஞ்சு நீங்க எனக்கு சொல்லிக் கொடுக்கணும். இந்த வருஷத்திலிருந்து நீங்க இலை எடுத்துகிட்டு வரப்போறப்ப என்னையும் சோளேஸ்வரன குட்டவுக்கு கூட்டிக்கிட்டுப் போகணும். நானும் உங்ககூட வர்றேன்'' என்று சர்வக்கா நஞ்சம்மாவிடம் உருக்கமாகச் சொன்னாள்.

''நீங்க இலை பறிக்க வந்தா, உங்க வீட்டுக்காரர் சும்மா யிருப்பாரா?''

''சும்மா இருக்காம வேறு என்ன செய்யமுடியும்? இன்னிக்கு மத்தியானம் உங்க வீட்டிலேயிருந்து ராகி கொண்டு பேர்யக் களி செய்தேன். அதை நாய் போலச் சாப்பிடலேயா?''

மறுநாளிலிருந்து சர்வக்கா தினசரி சற்று நேரம் வந்து இலை தைக்கக் கற்றுக்கொண்டாள். குச்சியை முறிப்பது, காம்புகளைக் கிள்ளியெடுப்பது, நீர் தெளிப்பது, குச்சி வைத்துத் தைப்பது ஆகியவைகளை நஞ்சம்மா கற்றுக் கொடுத்தாள். ''இப்படித் தைச்சுப் பழகிட்டா வேகமாகத் தைச்சுடலாம்'' என்று நஞ்சம்மா ஊக்கமூட்டியதால் சர்வக்கா உற்சாகத்துடன் கற்றுக் கொண்டாள்.

6

ஒருநாள் மதியம் நஞ்சம்மா, அரசாங்கக் கிணற்றில் நீர் இறைக்கும் பொழுது, குடம் தவறி கிணற்றில் விழுந்துவிட்டது. வீட்டிலிருந்தது அந்த ஒரே குடம்தான். கிணற்றில் மூழ்கிக் குடம் எடுத்துவர கம்பனகெரெயிலிருந்து காசிம் சாயபுவைத் தான் கூட்டி வரவேண்டும். வீட்டிற்குப் போய் மண்பானையைக் கொண்டு வருவதைத் தவிர வேறு வழியில்லை. பொதுக் கிணற்றிலிருந்து பானையில் நீர் எடுத்துச் செல்லவேண்டும், என்பதை நினைத்த பொழுது அவளுக்குக் கூச்சமாக இருந்தது. ஆனால் வேறு வழியில்லை. அவள் வீட்டிற்குத் திரும்பி வந்த பொழுது கல்லேசன் வீட்டில் உட்கார்ந்து கொண்டிருந்தான். குழந்தைகள் அவன் கொடுத்த மிட்டாய்களைச் சப்பிக்கொண்டிருந்தனர்.

''தண்ணீருக்குப் போயிருந்தியா? வெறுங்கையோடு திரும்பி வர்றியே?'' என்று கல்லேசன் கேட்டான்.

''குடம் கிணத்திலே விழுந்திடுத்து.''

''புறப்படு, நான் எடுத்துக் கொடுக்கறேன்'' என்று சொல்லி அவன் புறப்பட்டான். நஞ்சம்மா பின் தொடர்ந்தாள். வேடிக்கை பார்க்கக் குழந்தைகளும் உற்சாகத்துடன் கிளம்பினார்கள். ஆகையால் நஞ்சம்மா வீட்டுக் கதவைப் பூட்டிவிட்டு வந்தாள்.

ஊரிலிருந்த மற்ற கிணறுகளின் நீர் அவ்வளவு ருசியாக இருக்கவில்லை. ஆனால் அரசாங்கம் இரண்டு வருஷங்களுக்கு முன் தோண்டி, கல்சுவர் அமைத்திருந்த இந்த கிணற்று நீர் மிகவும் நன்றாக இருந்தது. மிகவும் சுத்தமாகவும் இருந்தது. எல்லா ஜாதிக்காரர்களும் அங்கே வந்து தண்ணீர் எடுத்துச் செல்வார்கள். பிராமணர், லிங்காயத்தார், தட்டாமார், சாதாளி முதலிய உயர் ஜாதிப் பெண்கள் தாங்கள் தண்ணீர் இறைப்பதற்கு முன், தங்கள் வீட்டிலிருந்து கொண்டுவந்த கொஞ்சம் நீரை கிணற்றின் ராட்டினத்தின் மீது கொட்டி, அதன் பின்னரே ஆசாரமாகத் தண்ணீர் எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

கல்லேசன் கயிற்றைக் கிணற்றுக்குள் தொங்கவிட்டு, அதன் மேல் முனையை ராட்டினம் தொங்கும் இரும்புச் சட்டத்தில் இறுகக் கட்டினான். அணிந்திருந்த வேஷ்டி, சட்டைகளை அவிழ்த்து வைத்துவிட்டுக் கிணற்றில் இறங்கினான். அந்தக் கிணறு இரண்டு கஜ நீளமும் இரண்டு கஜ அகலமும் இருந்தது. ஆழம் மிக அதிகமாக இருந்தது. ஏறவும், இறங்கவும் சுவற்றில் சிறு பிறைகள் இருந்தன. அவன் நீரில் மூழ்கி மெலெழுந்த போது ஒரு குடத்தை எடுத்துவிட்டான். அதைக் கயிற்றில் கட்டி, ''மேலே இழு'' என்று ஜாடை காட்டினான். நஞ்சம்மா குடத்தை மேலே இழுத்தாள். ஆனால் அது அவளுடைய குடம் அல்ல. ''அதை அங்கேயே வைச்சுக்கோ. யார் வந்து கேட்டாலும் கொடுக்காதே. கயிற்றைக் கீழே விடு,'' என்று கீழிருந்து கூவினான். அவன் மற்றொரு முறை மூழ்கி எழுந்தவுடன் மறுபடியும் ஒரு குடம் கிடைத்தது. தண்ணீரில் மூழ்கிக் கிடந்த பத்துப் பன்னிரண்டு குடங்களையும் எடுத்து மேலே அனுப்பினான். அவன் கயிற்றைப் பிடித்துக் கொண்டு பிறைகளில் கால் வைத்தவாறு மேலே வந்து சேர்ந்தான். அப்பொழுது ஆண்களும், பெண்களுமாக இருபது இருபத்தைந்து பேர் அங்கே கூடிவிட்டனர்.

''நஞ்சா, உன் கொடத்தை எடுத்துக்கோ'' என்று தன் தங்கையிடம் கூறிவிட்டு, அங்கே நின்றவர்களைப் பார்த்து, ''கொடத்து சொந்தக்காரங்க ஒவ்வொரு கொடத்துக்கும் எட்டணா கொடுத்து எடுத்துட்டுப் போங்க. இல்லாட்டா, நான்

இதையெல்லாம் என் ஊருக்குக் கொண்டு போறேன்'' என்று உரக்கக் கூறினன்.

பழைய கணக்குப்பிள்ளை சிவலிங்கனும் அங்கே நின்று கொண்டிருந்தான். அவன் கல்லேசனைப் பார்த்து, ''எங்க ஊர் கெணத்திலேயிருந்து கொடம் எடுத்துகிட்டுப் போக உங்களுக்கு அதிகாரம் கெடுத்தது யாரு?'' என்றான்.

''அப்படியாஞ, நான் இந்தக் கொடத்தையெல்லாம் தண்ணி நிரப்பி கெணத்துக்குள்ளேயே போட்டுடறேன். தண்ணியிலே இறங்கி எடுத்துக்கிறீங்களா?''

சிவலிங்கன் பதில் சொல்லவில்லை. ஒவ்வொருவரும் எட்டணு கொடுத்துக் குடங்களை எடுத்துச் சென்றூர்கள். கல்லேசனுக்கு மொத்தமாய் ஆறு ரூபாய் எட்டணு கிடைத்தது. பணத்தைச் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டு, ஈர உள்ளாடையுடன் சட்டை, வேஷ்டியை கையில் பிடித்துக்கொண்டவாறு வீட்டுக்குப் புறப்பட்டான்.

அண்ணன் இரண்டு நாட்கள் தங்குவான் என்று எதிர்பார்த்த நஞ்சம்மா, மறுநாள் ஏதாவது பலகாரம் செய்யவேண்டுமென்று நினைத்தாள். ஆகையால் இடியாப்பம் செய்வதற்கான சாமான்களைக் கடையில் சென்று வாங்கி வந்தாள். மதியம் சாப்பிட்ட பிறகு கல்லேசன் சற்றுக்கண்ணயர்ந்தான். தூக்கம் கலைந்து எழுந்த அவன், நஞ்சம்மா வாங்கி வந்திருந்த மளிகைக் கடைப் பொட்டலங்களைக் கண்டு, ''இதை எதுக்கு வாங்கிக் கொண்டு வந்தே?'' என்று அந்தப் பொருட்களைச் சுட்டிக் காட்டியவாறு கேட்டான்.

''இடியாப்பம் செய்ய. உனக்குப் பிடிக்குமில்லையா?''

''நான் பொழுது சாயறப்பப் பொறப்படப் போறேன்.''

''என்ன, வந்தவுடனேயாவா? இரு, இரு.''

''இல்லை. அவசரமான வேலை இருக்கு. உன்னைப் பார்த்து விட்டுப் போகலாம்னு வந்தேன். எனக்கு ஒரு டம்ளர் காப்பி கொடு, போறும்.''

நஞ்சம்மா ராமண்ணனைக் கடைக்கனுப்பி ஆறு காசுக்கு காப்பிப் பொடி வாங்கி வரச் சொன்னுள். பிறகு வெல்லம் போட்டு காப்பி செய்து ஒரு வெண்கல டம்ளரில் அவனுக்குக்

கொடுத்தாள். அவன் அதைக் குடித்துவிட்டுப் புறப்பட்டான். அப்பொழுதே பொழுது சாய்ந்து இருட்டிக்கொண்டிருந்தது. அப்பனைப் போலவே மகனும் இருட்டைக் கண்டு பயப்படக் கூடியவன் அல்ல.

அவன் சென்ற சற்று நேரம் கழித்து, சர்வக்கா நஞ்சம்மாவின் வீட்டிற்கு வந்தாள். ''சோளேஸ்வரன குட்டவுக்குப் பக்கத்திலே புரச இலை பச்சப்பசேரென்று தளைத்திருக்குதாம். மாதேவய்யா ஹலவினஹள்ளிக்குப் போனப்ப கண்ணிலே பட்டதாம். உடனே பறிச்சிகிட்டு வந்தாரு. நானும் இலைகளைப் பார்த்தேன்'' என்றாள்.

''இன்னமும் மாசி மாசமே முடியலையே?''

''இந்த வருஷம் மழை சீக்கிரமே வந்திடுச்சல்லையா? நாம நாளைக்குப் போகலாம்.''

இலை தளிர்க்கும் காலத்திலேயே சீக்கிரமாக இலைகளைச் சேகரிக்காவிட்டால் பிறகு சிரமமாகி விடும் என்று எண்ணிய நஞ்சம்மா, ''சரி'' என்று ஒப்புதல் அளித்தாள்.

காகம் கரைவதற்கு முன்னரே வந்துவிடுவதாகச் சொல்லி, சர்வக்கா கிளம்பினாள். அவளுக்கு அது முதல் அனுபவம். ஆகையால் அவள் இரவில் சரியாகத் தூங்கவில்லை. காக்கைகளின் சத்தம் கேட்டவுடனே, அவள் 'சட்'டென்று எழுந்து, கோணிப்பைகளையும், ரொட்டிப் பொட்டலத்தையும் கையில் எடுத்துக்கொண்டு, தலையில் முக்காடு போட்டுக்கொண்டு, நஞ்சம்மாவின் வீட்டிற்குக்கிளம்பினாள். நஞ்சம்மாவும் தயாராகி விட்டாள். நிலா வெளிச்சம் இனிமையாக இருந்தது. ''வெய்யில் ஏறிட்டா கஷ்டம். வேகமாக நடக்கலாம்,'' என்றவாறு சர்வக்கா முன்னே நடந்தாள். இருவரும் ஊரைக் கடந்து தோப்பின் அருகே நடந்து செல்லும் போது, ஊருக்கு வெளியே நரசி கட்டியிருந்த வீட்டிலிருந்து யாரோ வெளியே வருவதைப் போல் தோன்றியது. ''கண்டிப்பாக,'' என்று கல்லேசன் தாழ்ந்த குரலில் சொல்லிவிட்டு, வேகமாக நடந்து சென்றான். நரசி கதவைச் சாத்திக்கொண்டாள்.

வழியில் சென்று கொண்டிருக்கும் இரண்டு பெண்களில் ஒருத்தி, தன் தங்கைதான் என்பதைக் கல்லேசன் தெரிந்து கொள்ளவில்லை. தோளில் கோணிப்பையுடன், தலையில் முக்காடு போட்டுக்கொண்டு அவள் சென்றுகொண்டிருந்ததால், அவனுக்கு

அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. அவன் வேகமாக நடைபோட்டதால், நஞ்சம்மா சற்று மெதுவாக நடந்து பின் தங்கினாள். காரணத்தை சர்வக்காவிடம் சொல்லக் கூடாதென் பதால் பேசாமலிருந்தாள். முன்னே நடந்துகொண்டிருந்த ஆள், தங்கள் பார்வையிலிருந்து மறையும் வரை பொறுத்திருந்த சர்வக்கா, அந்த ஆள் அப்பால் மறைந்ததும், நஞ்சம்மாவிடம், ''அவரு உங்க அண்ணா இல்லையா ?'' என்றாள்.

''யாரோ, நான் சரியாகப் பார்க்கலே.''

''அவரு உங்க அண்ணாதான். பத்து பதினைஞ்சு நாளுக்கொரு தடவை, இங்கே இருட்டின பிறகு வந்து, காலையிலே கோழி கூவுறதுக்கு முன்னாடி போயிடராரும். அந்த நரசி யார்கிட் டேயோ அப்படிச் சொன்னாளாம்.''

நஞ்சம்மா பேசவில்லை. அந்தப் பேச்சு காதில் விழாதவளைப் போல் நடைபோட்டாள்.

# ஒன்பது

## 1

ஒருவர் ஓரிடத்தில் அதிக காலம் தங்கியிருந்தால் அந்த இடம் அவருக்கே உரிமையாகி விடுவது போல் ஆஞ்சநேயர் கோவில் கங்கம்மா, அப்பண்ணய்யாவுடையதாகி விட்டிருந்தது. அண்ணா ஜோசியரின் பூஜை உரிமை என்னவோ குறையவில்லை. ஆனால் ஜனங்கள் ஆஞ்சநேயர் கோவிலை ''கங்கம்மா வீடு'' என்றே சொல்ல ஆரம்பித்திருந்தனர்.

கங்கம்மாவும், அப்பண்ணய்யாவும் அடிக்கடி வெளியூருக்குச் செல்லத் தொடங்கியிருந்தனர். முன்பு இராமஸந்திர கிராமம் சிவே கவுடரின் பெயர் மூன்று மைல் சுற்று வட்டாரத்து மக்க ளுக்குத் தெரிந்திருந்தது. இப்பொழுது இருபது மைல் சுற்று வட்டாரத்தில் உள்ள மக்கள் எல்லோருக்கும் தெரியும். தாயும் மகனும் ஒவ்வொரு கிராமத்திற்கும் போய் அங்குள்ள ஒவ்வொரு வீட்டிலும் நுழைவார்கள். தங்களுடைய குடும்பப் பெருமையைச் சொல்லிவிட்டு ''அந்தப் பாழாப் போன சிவே கவுடன் எங்களை ஏமாத்தி எல்லா சொத்தையும் புடுங்கிட்டான். பிழைக்க வழி இல்லை'' என்று சொல்வார்கள் கங்கம்மா தன் சிவப்புப் புடவையின் முந்தானையை விரிப்பாள்.

அவளிடம் அனுதாபம் கொண்டு, ராகி, அவரைப்பருப்பு, மிள காய் ஆகியவற்றை அவளது புடவையில் கொட்டுவார்கள். கங்கம்மா இவ்வாறு திரட்டியதை அப்பண்ணய்யா மூட்டை கட்டி தலைமேல் வைத்துத் தூக்கி வருவான். மாதேவய்யாவும் இவ்வாறு செய்வது தான் வழக்கம். ஆனால் அவர் சாமியார். சிவப்பு வேட்டி உடுத்தி, சிவப்புச் சட்டை அணிந்து, விபூதிப் பட்டை தீட்டி, ஒவ்வொரு வீட்டு முற்றத்திலும் நுழைந்து ''குரு மகாதேவா, பிட்சை''என்று சொல்லியதும், ராகியும் மற்ற பொருள்களும் வந்து விழும். ஆனால் தாயும் மகனும், ஒவ்வொரு வீட்டிலும் நுழைந்து தங்களுடைய பூர்வீகத்தைச் சொல்லி சிவே கவுடரைத் திட்டவேண்டும். சில வேளைகளில் ராகி கிடைக்கும். ராகி கொடுக்காதவர்களை வசைபாடிவிட்டு கங்கம்மா கிளம்புவாள்.

கங்கம்மா வீட்டிலும் பெட்டி இருக்கிறது. பெட்டி நிரம்ப ராகி, இரண்டு கலம் அவரைப்பருப்பு, ஒரு தவலை நிரம்ப மிளகாய் ஆகியவை இருந்தன. ''சிவே கவுடன் வாழ்வு என்ன ஒசத்தி? என் வாழ்வு என்ன கெட்டுப் போச்சு?'' என்று அந்தப் பொருள் களைப் பார்த்துப் பெருமையாகப் பேசுவாள்.

ஒருநாள் மதியம் ஒருமணி சுமாருக்கு இரண்டு வண்டிகள் ஆஞ்சநேயர் கோவிலின் எதிரே வந்து நின்றன. ஒரு வண்டி செக்குக்காரன் சிங்க செட்டியாருடையது. மற்றது உப்புக்கார மூக்கண்ணனுடையது. வண்டி நிரம்பப் பாத்திரம், பண்டங்கள், படுக்கை, பாய், குடை, பெட்டிகள், பலகைகள், ஜமக்காளம் ஆகியவை இருந்தன. வண்டிகளுக்குப் பின்னால் ஐம்பது வயது மதிக்கத்தக்க விதவை ஒருத்தி, ஒரு இருபது வயதுப் பெண், சுமார் ஏழு வயதுப் பெண் ஒருத்தி, ஒரு நான்கு வயதுப் பையன் ஆகியோர் இருந்தனர். அப்பண்ணய்யா அவர்களைப் பார்த்ததும் திருட்டு முழி முழித்துக்கொண்டு கோவிலின் பின்புறச் சுவரைத் தாண்டிக் குதித்து மறைந்தான். ''இதுதான் கங்கம்மாவின் வீடு'' என்று சொல்லி வண்டிக்காரன் வண்டியை நிறுத்தி, சாமான்களை இறக்க ஆரம்பித்தான். வயதில் மூத்தவள் தயங் கியவாறு முன் சென்றாள். கங்கம்மாவுக்கு அடையாளம் தெரி யவில்லை. வந்தவளே பேசினாள். ''நாங்க நுக்கிகெரெ கிராமத்துக்காரங்க. என் வீட்டுக்காரர் இறந்து இரண்டு வருஷமாச்சு. சாதம்மாவும், கொழந்தைகளும் இங்கேயே உங்களுக்கு உதவியா இருக்கணும்னுங்க. அதான் கூட்டிக்கிட்டு வந்தேன்.''

அவள் சொன்னதைப் புரிந்து கொள்ள கங்கம்மாவுக்கு இரண்டு நிமிடம் ஆயிற்று. அப்பொழுது சாதம்மா இரண்டு குழந்தைகளையும் கையைப் பற்றியவாறு உள்ளே அழைத்து வந்தாள். கங்கம்மாவின் மனதில் மின்னலைப் போல் ஓர் எண்ணம் எழுந்தது. ''ஏண்டி முண்டை. இந்தப் பெரிய பொண்ணு என் அப்பண்ணய்யாவுக்குப் பொறந்தவ. நீ இங் கிருந்தப்பவே உண்டாயிருந்தே. இந்தப் பையனை எவங்கிட்டே போய் பெத்தே? சொல்லடி தேவடியாளே. கணக்குப்பிள்ளை ராமண்ணாவின் வம்சத்துக்குக் கெட்ட பெயர் உண்டாக்க வந்தியா? உன்னை என்ன செய்றேன் பாரு'' என்று கூறியபடியே மூலையில் கிடந்த ஒரு துடைப்பத்தைக் கையில் எடுத்துக் கொண்டாள்.

''ஏன் இப்படிக் கெட்ட வார்த்தை பேசறீங்க? எம் பொண்ணு அப்பிடிப்பட்டவ இல்லே. உங்க மகனே வந்திருந்தான். உங்க மகனையே கேட்டுப் பாருங்க. நாமகரணத்துக்கு வரச் சொல்லி கடுதாசி போட்டும் ஏன் வரவில்லே?'' என்று சம்பந்தி அம்மாள் கேட்டது கங்கம்மாவின் செவிகளில் படவேயில்லே.

சாதம்மா தானாகவே கோவிலிலிருந்து வெளியே வந்தாள். இரண்டு குழந்தைகளும் பயப்பட்டு அவளுடைய புடவையைப் பிடித்துக் கொண்டே வந்தன. அவளுடைய தாய் ''இதைப் போலப் பொம்பளையை நான் பாத்ததே கெடையாது'' என்று சொல்லிக் கொண்டே புறப்பட்டார். வண்டியைத் திருப்பி ஓட்டும் பொழுது ''அவங்ககிட்டே பேசாம போகக் கூடாது. என் ஓரகத்தி இங்கேயே இருக்கிறாராம். இப்ப அங்கே போக லாம்'' என்றாள் சாதம்மா. அவளுடைய தாயாரும் அதை ஒப்புக் கொண்டாள். வண்டி நஞ்சம்மாவின் வீட்டு முன்புறம் நின்றது. வண்டிக்காரர்கள் சாமான்களை இறக்க ஆரம்பித்தனர். அவர்கள் வந்த விஷயத்தைப் பற்றி நஞ்சம்மா விசாரிக்கவில்லே. சாதம்மாவின் தாயாருடைய தோற்றத்திலிருந்தே அவளுடைய வீட்டுக்காரர் இறந்திருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண் டாள். ''அவர்கள் எப்படிப்பட்ட கஷ்டத்தில் இருக்கிறார்களோ, முதலில் உள்ளே வந்து ஆகாரம் ஏதாவது சாப்பிடட்டும். பிறகு விரிவாகக் கேட்கலாம்'' என்று நஞ்சம்மா நினைத்து அவர்களை உள்ளே அழைத்து அமரச் சொன்னாள். அந்தப் பையனைப் பார்த்து அவளுக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. கணவனுக்குப் பிறக்காத குழந்தையை தைரியமாக வெளியே அழைத்து வரு வார்களா? என்ற எண்ணமும் ஏற்பட்டது. சாதம்மா கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய தாய் ''அப்பண்

ணய்யா ரெண்டு தடவை வந்து பதினஞ்சு நாள் இருந்துவிட்டுப் போனுன். அப்பத்தான் ராமகிருஷ்ணன் பிறந்தான். சாது கெட்ட நடத்தைக்காரின்னு தெரு பூரா கேக்கற மாதிரி அவ மாமியார் ஆர்பாட்டம் செய்யறு, சண்டாளி'' என்றுள்.

''சரி விடுங்க. எந்திரிச்சு குளிங்க. உங்க வீட்டுக்காரர் போய் எத்தனை நாளாச்சு?''

''ரெண்டு வருஷமாச்சு. அவர் இருந்த மட்டும் புரோகிதத்திலே நல்ல வரும்படி. சொகமா இருந்தோம். ஆம்பளைத் துணை இல்லாட்டா யார் மதிக்கருங்க? எப்பிடியோ புருஷனும் பொண்டாட்டியும் சேந்துதானே இருக்கணும்? தானே வந்து கூட்டிக்கிட்டுப் போறேன்னு அப்பண்ணய்யா சொல்லி இருந்தான். அப்புறம் வரவேயில்லை. இப்ப நாங்களே வந்துட்டோம். திப்டூரிலிருந்து பஸ்ஸிலே வந்தோம். எரு ஏத்திக்கிட்டு ரெண்டு வண்டி வயல் பக்கம் வந்தது. வண்டிக்கு நாலணு கொடுத்து வண்டியிலே எல்லா சாமானையும் ஏத்திக்கிட்டு வந்தோம்.''

''சாது, முதல்லே கொழந்தைகளைக் குளிப்பாட்டு. அதுகளுக்கு வயிறு பசிக்கும்'' என்றுள் நஞ்சம்மா. அப்பொழுது ''இந்தத் தேவடியா முண்டைகளை செருப்பாலே அடிச்சு ஊரை விட்டுத் துரத்தாட்டா என் பேரு கங்கம்மா இல்லே'' என்று கங்கம்மா கூவிக் கொண்டே வரும் சத்தம் கேட்டது. அவள் உள்ளே புகுந்து ''ஏண்டி முண்டை, அவ கூட சேந்துட்டு அவளைப் போல் நீயும் செய்யலாம்னு பாக்கிறியா? உனக்குச் சரியா புத்தி சொல்லித் தராட்டா என் மூக்கை அறுத்துக்கறேன்'' என்று நஞ்சம்மாவிடம் சொன்னுள். அப்பொழுது அய்யா சாஸ்திரிகளும், அண்ணு ஜோசியரும் அவளுக்குப் பின்னுல் தென்பட்டனர். பிறகு ஒரு நிமிடத்துக்குள் சிவே கவுடரும் சிவலிங்கனும் உள்ளே வந்தனர். அடுத்த சில நொடிகளில் ரேவண்ண செட்டியும் வந்தான். இன்னும் ஐந்தாறு பேர் வேடிக்கை பார்க்க வந்தவர்களைப் போல் உள்ளே புகுந்தனர். அவர்கள் எல்லோரும் ஒரே சமயத்தில் வந்ததைப் பார்த்ததும் கங்கம்மா தான் அவர்களை அழைத்து வந்திருக்கிறுள் என்பது தெளிவாகத் தெரிந்து விட்டது. ''என் வீட்டுக்கு ஏன் வந்தீங்க? உங்களை யார் கூப்பிட்டாங்க?'' என்று கேட்க விரும்பினுள் நஞ்சம்மா. ஆனுல், ஊர்ப் பெரிய மனிதர்களைப் பகைத்துக் கொள்ளக் கூடாது என்று நினைத்து அவ்வாறு கேட்கவில்லை. வந்தவர்களைப் பார்த்து ''வாங்க'' என்றோ ''உக்காருங்க'' என்றோ சொல்லவில்லை. இந்தச் சந்தடியில் சென்னிகராயர் உறக்கம் கலைந்து

எழுந்தார். அவர் இரண்டு பாய்களை விரித்தார். ஜோசியர்களுக்காகத் தனியாக ஒரு பாய் விரித்தார். சாதம்மா, இரண்டு குழந்தைகள், அவளுடைய தாய் ஆகியோர் சமையலறைக்குள் சென்றுவிட்டனர்.

''ஏண்டி உள்ளே போறே தேவடியாளே? ஊர்க்காரங்க முன்னுடி நியாயம் சொல்லு'' என்ருள் கங்கம்மா.

''நியாயம் சொல்லுங்கம்மா. இங்கே வாங்க'' என்று நீதியைக் காக்க முன் வந்தான் ரேவண்ண செட்டி.

''ரேவண்ண செட்டியாரே கூப்பிடருரு, வாடி இங்கே'' — என்று கங்கம்மா மறுபடியும் கூவிளுள்.

ரேவண்ண செட்டி உள்ளே நுழைந்ததையும் அவன் நீதிபதியைப் போல் பேசியதையும் நஞ்சம்மா விரும்பவில்லை. அங்கிருந்தவர்களை எப்படி அங்கிருந்து கிளப்புவது என்று யோசித்துக் கொண்டிருந்தாள். அப்பொழுது பார்வதியும் ராமண்ணனும் பள்ளிக்கூடத்திலிருந்து சிலேட் எடுத்துக் கொண்டு ஓடி வந்தனர். உடனே நஞ்சம்மா பார்வதியைப் பார்த்து ''கோவில் மாதேவய்யாவையும். உன் வாத்தியாரையும் உடனே நான் வரச் சொன்னேன்னு சொல்லிக் கூட்டிக்கிட்டு வா'' என்ருள். இரு குழந்தைகளும் வெளியே ஓடினர். ''என்னம்மா, நாங்க நியாயம் சொன்னு ஆகாதா?'' என்று நஞ்சம்மாவிடம் ரேவண்ண செட்டி கேட்டான். அவள் பதில் சொல்லாமல் உள்ளே போனுள். ''ஏன் உள்ளே போறே வக்கிலம்மா?'' என்று கங்கம்மா நையாண்டி செய்த போதிலும் அவள் வெளியே வரவில்லை.

அய்யா சாஸ்திரிகளும் அண்ணு ஜோசியனும் தங்களுடைய சாஸ்திர ஞானத்தை காட்ட ஆரம்பித்தார்கள். அண்ணு ஜோசியன் ஏதோ ஒரு மந்திரம் சொன்னுன், ''விபசாரம் செய்த பொண்ணோட தலையைச் சீவணும்னு மனு சாஸ்திரத்திலே சொல்லியிருக்கு அல்லது ஆயிரம் நாணயம் அதாவது ஆயிரம் ரூபாய் செலவு செஞ்சு பரிகாரம் செய்யணும். அப்படிப் பரிகாரம் செய்யறதுக்கு முன்னுடி அவங்களை வீட்டிலே சேத்துட்டது நஞ்சம்மாவோட தப்பு'' என்று அய்யா சாஸ்திரிகள் விளக்கம் சொன்னுர்.

கங்கம்மா கூச்சல் போட்டுக் கொண்டே வந்ததால் ஊர்க்காரர்கள் எல்லோருக்கும் விஷயம் தெரிந்து வீட்டின் முன்பு பெரிய கும்பல் கூடியிருந்தது. கூட்டத்திற்குள் புகுந்து நெருக்கிக்

கொண்டு மாதேவய்யா வந்து சேர்ந்தார். ஜனங்களின் பேச்சி லிருந்தே அவர் விஷயத்தை அறிந்து கொண்டு விட்டார். மாதேவய்யா வந்து விட்டதைக் கதவு இடுக்கின் மூலமாகப் பார்த்து விட்ட நஞ்சம்மா வெளியே வந்து ''அய்யா நியாயம் தர்மம் எல்லாம் தெரிஞ்சவங்க நீங்க. நீங்க நியாயத்தைச் சொல்லணும். மத்தவங்க வாய்க்கு வந்தபடி பேசக் கூடாது. 'அப்பண்ணய்யா வந்திருந்தான். அவனுக்குப் பொறந்தவன்தான் இந்தப் பையன்' அப்பிடின்னு அவங்க இப்ப சாமி மேலே ஆணையாச் சொல்றுங்க'' என்று விஷயத்தை விளக்கினாள். அது வரை அங்கே என்ன பேசியிருப்பார்கள் என்று அவர் ஊகித்துக் கொண்டார். ''மொதல்லே அப்பண்ணய்யாவைக் கூட்டிக்கிட்டு வரலாம். அப்புறம் நியாயம் பேசலாம்'' என்றார், அவர்.

''என் செல்லக்கண்ணு அப்பிடி எந்தத் தப்பும் செஞ்சிருக்க மாட்டான். அவன் தறுதலை அல்ல'' என்று கங்கம்மா குறுக் கிட்டுச் சொன்னாள்.

''தப்பு செஞ்சானா இல்லியாங்கிறதை அப்புறம் விசாரிக்க லாம். பெண்டாட்டி வீட்டுக்கு புருஷன் போனா அதிலே எந்தத் தப்பும் இல்லே'' என்று மாதேவய்யா, கங்கம்மாவுக்கு ஆறுதல் கூறிவிட்டு கதவருகே நின்றிருந்தவர்களிடம் ''அப்பண்ணய்யா எங்கிருந்தாலும் கூட்டிகிட்டு வாங்க'' என்றார். உடனே பத்துப் பன்னிரண்டு பேர் பரபரப்புடன் ஓடினார்கள். அப்பொழுது மறுபடியும் பேச்சை ஆரம்பிக்க அய்யா சாஸ்திரிகள் முயன்ற பொழுது ''அவன் வர்ர வரை ஒண்ணும் பேச வேண்டாம்'' என்று மாதேவய்யா அவரை அடக்கினார்.

பதினைந்து நிமிடங்களில் அப்பண்ணய்யாவைப் பிடித்து வந்தார்கள். அவன் பசப்ப செட்டியாரின் குடிசைக்கு அருகில் இருந்த வைக்கோல் போர் ஓரமாகச் சந்துக்குள் ஒளிந்திருந் தானாம். அவன் தப்பியோட முயற்சித்த பொழுது இருவர் அவனை இறுக்கப் பிடித்துக் கூட்டி வந்தார்கள். அவன் அந்தச் சபைக்கு நடுவே தூணுக்கு அருகே குடுமி அவிழ்ந்து தலைமயிர் நெற்றியில் விழுமாறு தலைகுனிந்தவாறு நின்றான். மாதேவய்யா அவனிடம் எதையும் கேட்கவில்லை. ஒரு தீபத்தை ஏற்றி சுவாமி படம் ஒன்றையும் கொண்டு வருமாறு அவர் நஞ்சம்மாவிடம் சொன்னார். நஞ்சம்மா ஒரு பலகையை வைத்து அதன் மேல் ஒரு ஜோடி அகல் விளக்கை ஏற்றி நடுவே ராமர் படத்தை வைத்தாள். குங்குமச் சிமிழ் ஒன்றையும் கொண்டு வரச் சொல்லி அதிலிருந்து குங்குமத்தை எடுத்து அவனுடைய நெற்றியில்

அய்யா வைத்தார். பிறகு சுவாமி படத்தை அவனுடைய கையில் கொடுத்துப் பிடித்துக் கொள்ளும்படி சொன்னார். பின்னர் ''பாரப்பா, பொய் சொன்னா சாமி உன் கை, காலை முறிச்சிடுவான். மாரியம்மா உன்னை அடிச்சுப் போடுவா. உண்மையாச் சொல்லு, உன் அம்மாவுக்குத் தெரியாம நீ உன் பொண்டாட்டி வீட்டுக்குப் போயிருந்தியா, இல்லியா?'' என்று கேட்டார்.

அப்பண்ணய்யா பேசவில்லை. ''என் கொழந்தையைப் பொய் சத்தியம் செய்யச் சொல்றியா? சாமியாரே'' என்று கங்கம்மா உரக்கக் கேட்டாள். மாதேவய்யா அவளைப் பொருட்படுத்த வில்லை. ''நீ சொல்லு, பொய் சொன்னா, கை, கால் மொண்டி யாகிவிடும். எரிஞ்சிக்கிட்டிருக்கிற வௌக்கு ''பக்''குன்னு பத்திகிட்டு பொசுக்கிடும். சனி மகாத்மியம் நாடகம் பாக்கலியா? விக்கிரமாதித்தன் கை, கால் எப்படி முறிஞ்சு போச்சு! சரி சீக்கிரம் சொல்லு.''

அப்பண்ணய்யாவின் மனதில் பயம் தோன்றியது. தொம்பி தாசர் நடித்த சனி மகாத்மியம் யட்சகான நிகழ்ச்சியில் விக்கிர மாதித்தனின் தொடை அறுபட்டுப் போன காட்சி அவனுக்கு நினைவு வந்தது. மாதேவய்யா மறுபடியும் ''சனிபகவான்......'' என்று சொல்ல ஆரம்பித்தவுடன் அவன் ''நான் பொய் சொல் லலை. நான் ரெண்டு தடவை நுக்கிகெரெய்க்கு அவ வீட்டுக்குப் போனேன்'' என்றான்.

''எத்தனை நாள் இருந்தே?''

''ஒருதடவை பதினஞ்சு நாள். இன்னொரு தடவை எத்தனை நாளுன்னு ஞாபகம் இல்லே''

''எத்தனை நாளுக்கு முன்னாடி போனே?''

''ரெண்டாவது பிளேக் வந்தப்ப''

அதாவது ஏறக்குறைய ஆறு ஆண்டுகளுக்கு முன்பு. நஞ்சம்மா உள்ளே சென்று பையனைக் கூட்டி வந்தாள். அவனுக்கு சுமார் ஐந்து வயது இருக்கும். அவனுடைய முகம் அப்பண் ணய்யாவின் முகத்தைப் போல் இருந்தது.

''டேய் ஜாகவல்லுக்குப் போறேன்னு சொல்லி அங்கே போயிருந்தயா? நீ இனி அங்கேயே போயிடு. நான் களி தர மாட்டேன். தேவடியாளுக்குப் பொறந்தவனே!'' என்று திட்டியவாறு கங்கம்மா எழுந்து சென்றாள். அங்கு இனி சுவாரசியம் இல்லை என்று புரிந்து கொண்டு கிராமத்துக்காரர்கள் ஒவ்வொருவராய்ப் புறப்பட்டார்கள்.

௨

அன்றே கங்கம்மா மகனையும் கூட்டிக் கொண்டு கிராமத்திலிருந்து புறப்பட்டாள். இவ்வாறு அவள் செல்வது முதல் தடவை அல்ல. அண்ணு ஜோசியனிடமும் கோவில் சாவி ஒன்று இருந்தது. அவன் அதைக் கொண்டு கதவைத் திறந்து பூசை செய்வான். தானே பூசை செய்வதாக எல்லோரிடமும் சொல்லிக் கொள்வதற்கும் அது வசதியாக இருந்தது.

சாது, இரண்டு குழந்தைகள், தங்கம்மா — அதாவது சாதுவின் தாய் — ஆகியோர் நஞ்சம்மாவின் வீட்டிலேயே தங்கினர். அவர்களுக்கும் உணவு கொடுத்துச் சமாளிக்கும் அளவுக்கு ராகியும், அவரைப் பருப்பும் நஞ்சம்மாவின் வீட்டில் இருந்தன. ஆனால் ராகிக் களியும், அவரையும் அவர்களுடைய உடம்புக்கு ஒத்து வரவில்லை. தினசரி அரிசியும் துவரம் பருப்பும் போட்டுச் சமைக்கக் கூடிய பண வசதி அவளிடம் இருக்கவில்லை. ஏதாவது பண்டிகை வந்தால் பெரிய சிவப்பு அரிசி போட்டு சமைப்பாள். ஷேக்தாரர் போன்ற அதிகாரிகள் வந்தால் சன்ன வெள்ளை அரிசி போட்டு சமைப்பாள். துவரம் பருப்பு ரசம் செய்வாள். ஆனால் இப்பொழுது சாதம்மாவின் குடும்பத்திற்காக, வேறு வழியில்லாமல் தினசரி அரிசிச் சாதமும், துவரம் பருப்பு ரசமும் செய்து பரிமாறினாள். அரிசிச் சோற்றைக் கண்டால் குழந்தைகள் சும்மா இருக்கமாட்டார்கள். சென்னிகராயருக்கு அரிசிச் சாதம் என்றால் ஆனந்தம். எல்லோரும் அரிசிச் சோறு சாப்பிடும் பொழுது தான் மட்டும் ராகிக் களி சாப்பிடுவதால் என்ன லாபம்? மொத்தத்தில் செலவைச் சமாளிப்பது கஷ்டமாக இருந்தது.

பதினைந்து நாட்களுக்குப் பிறகு கங்கம்மாவும் அப்பண்ணய்யாவும் ஊருக்குத் திரும்பினர். அவர்கள் திரும்பிய செய்தி அறிந்த நஞ்சம்மா சாயங்காலம் விளக்கேற்றும் நேரத்தில் பார்வதியிடம், ''உன் சித்தப்பாவைக் கூட்டிக்கிட்டு வா. பாட்டி முன்னாடி கூப்பிடாதே'' என்று சொன்னாள். பார்வதியும் அவ்வாறே அழைத்து வந்தாள். நஞ்சம்மாவின் வீட்டில் மனைவியைக் கண்டதும் அப்பண்ணய்யா மனதில் ஆசையும், பயமும் வெட்கமும் ஒரே நேரத்தில் எழுந்தன. நஞ்சம்மா அவனை உட்காரச் சொல்லி பேசிக்கொண்டிருந்தாள். சாதம்மா உள்ளே சமையல் செய்து கொண்டிருந்தாள்.

''அப்பண்ணய்யா, இங்கேயே சாப்பிடுங்க'' என்றாள் நஞ்சம்மா. ''அம்மா......'' என்று இழுத்தான் அவன். ''அவர்

ஒண்ணும் சொல்லமாட்டாரு. ராத்திரி அவங்க ரொட்டி செஞ்சு பலகாரம் சாப்பிடுவாங்க. நீங்க கை, கால் அலம்பிக்கங்க'' என்றாள் அவள்.

அப்பண்ணய்யா கை, கால் கழுவி வந்தான். சென்னிக ராயரும் எழுந்துகொண்டார். குழந்தைகளுக்கும் சாப்பாடு போடும்படி நஞ்சம்மா சாதம்மாவிடம் சொன்னாள். சாதம்மா பரிமாறினாள். அப்பண்ணய்யாவுக்கு மிகவும் கூச்சமாக இருந்தது. ''போடட்டுமா, வேண்டாமா'' என்று கேட்க சாதம்மாவுக்கு வெட்கமாக இருந்தது. நஞ்சம்மாவும் தங்கம்மாவும் வெளி முற்றத்தில் நின்று பேசிக்கொண்டிருந்தனர். சாப்பிட்டு முடிந் ததும் சென்னிகராயரும், அப்பண்ணய்யாவும் வெற்றிலை, பாக்கு போட்டுக் கொண்டனர். நஞ்சம்மா சமையலறைக்குள் சென்று சாதம்மாவிடம் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தாள். தங்கம் மாவும் அந்தப் பேச்சில் கலந்து கொண்டாள்.

அந்த வீட்டில் தானியம் போட்டு வைக்கும் இருட்டான அறை ஒன்று இருந்தது. அதற்குக் கதவும் இருந்தது. நஞ்சம்மா அந்த அறையை நன்கு பெருக்கி, அங்கே பாய் விரித்தாள். சாதம்மா கொண்டு வந்திருந்த ஜமக்காளங்களில் இரண்டை அருகருகே சேர்த்து விரித்தாள். அப்பண்ணய்யா வீட்டிற்குப் போவதற்காக எழுந்த பொழுது ''இன்னிக்கு இங்கேயே படுத் துக்கங்க'' என்று நஞ்சம்மா சொன்னாள். அவன் அதை சற்றும் எதிர்பார்க்காததால் மகிழ்ச்சியில் ஒரு கணம் திண்டாடினான். பிறகு சற்றுப் பதட்டமடைந்து ''அம்மா......'' என்று சொல்ல ஆரம்பித்தான். உடனே நஞ்சம்மா ''உங்க அம்மா கூடத் துணைக்குப் படுத்துக்க பார்வதியையும், ராமகிருஷ்ணனையும் அனுப்பறேன். நீங்க களஞ்சிய அறையிலே படுத்துக்கங்க'' என்றாள். ''உனக்கு ஏன் இந்த வேலை?'' என்று சென்னிகராயர் கண்களை உருட்டினார். ''நீங்க பேசாம இருங்க. திருமலைக் கவுடர் வீட்டிலே செனைப்பால் கொடுத்தாங்க. அதிலே பாயசம் வெச்சிருக்கிறேன் வேணுமா?'' என்று கேட்டாள். பாயசம் என்ற சொல்லைக் கேட்டதும் சென்னிகராயர் சமையலறைக்குச் சென்றார். அப்பண்ணய்யா அறைக்குள் போனான். நஞ்சம்மா சமையலறைக்குச் சென்று ''நாங்க பாயசம் செஞ்ச பிறகு உங்க ளைக் கூப்பிடறோம். நீங்க இன்னொருதடவை வெத்திலை போடுங்க'' என்று சென்னிகராயரை அனுப்பினாள். பிறகு அவளே சாதம்மாவை அறைக்குள் அனுப்பிக் கதவை இழுத்து மூடினாள்.

நிலைமையைச் சமாளிப்பதற்காக சினைப்பால் பாயசம் என்று நஞ்சம்மா சொல்லிவிட்டாள். இனி சினைப்பால் எங்கு கிடைக்

கும்? ஒரு தந்திரம் செய்தாள். தாழ்வாரத்தில் படுக்கையை விரித்துக் குழந்தைகளைப் படுக்க வைத்தாள். ஒரு தேங்காயைத் துருவி, கொஞ்சம் அரிசியை அத்துடன் சேர்த்து ஆட்டி சிறிது வெல்லம் போட்டு அடுப்பில் வைத்துச் சூடாக்கினாள். பிறகு கொஞ்சம் பாலையும் பாயசத்தில் ஊற்றிக் கலக்கினாள். தங்கம்மாவை வெளியே அனுப்பி விட்டு சென்னிகராயரை அழைத்தாள். பாயசத்துக்காகக் காத்திருந்த அவர் உடனே சமையலறைக்குள் விரைந்து சென்றார். பாயசம் சாப்பிடுவதற்காகத் தரையின் மீது கால்களைச் சம்மணம் போட்டுக் கொண்டு அமர்ந்தார். பாயசப் பாத்திரத்தையே அவருக்கு எதிரே வைத்து அருகில் ஒரு கிண்ணத்தையும் வைத்துவிட்டு நஞ்சம்மா சொன்னாள். ''அவங்க வீட்டு எருமை கன்னு போட்டு பதினஞ்சு நாளாச்சு. செனைப்பால் நல்லா இல்லை.''

சென்னிகராயர் ஒரு கரண்டிப் பாயசத்தை எடுத்துக் கிண்ணத்தில் ஊற்றி நக்கிப் பார்த்தார். பாயசம் இனிப்பாக இருக்கவில்லை. ''சப்'' என்று இருந்தது. ''நான் போகட்டுமா? நீங்க சாப்பிடுங்க'' என்று நஞ்சம்மா சொன்னாள். ''உம்'' என்று தலையாட்டினார் சென்னிகராயர்.

அப்பண்ணய்யா காலையில் எழுந்ததும் ஏரிக்கரைக்குச் சென்று, பின் கோவிலை அடைந்தான். பிறகு மெதுவாக தன் தாயிடம் ''அவங்களை இங்கே வரச் சொல்லிக் கூப்பிடலாமா?'' என்று கேட்டான்.

''யாரைக் கூப்பிடறது?''

''அந்த நுக்கிகெரெக்காரங்களை''

ஒரே நிமிடத்தில் கங்கம்மாவுக்கு விஷயம் புரிந்துவிட்டது. ''அட வேசிப் பயலே! நீ ராத்திரி திவாலபுரத்திலே ஆட்டம் பாக்கப் போயிருந்தேன்னு நெனச்சுக்கிட்டிருக்கேன். நீ அந்தத் தேவடியா கிட்டப் படுக்கவா போனே?'' அப்பண்ணய்யா தலை குனிந்தவாறு நின்றான். சற்று நேரம் கங்கம்மா தனக்குத் தெரிந்தவாறு திட்டிக் கொண்டு இருந்தாள். பிறகு ''எங்களையும் கூட்டிக்கிட்டுப் போன்னு அவ சொன்னாளா?'' என்று கேட்டாள்.

அப்பண்ணய்யாவுக்குச் சற்று தைரியம் வந்தது. ''அவ என்ன சொல்றது? நான்தான் கேக்கறேன். எதுக்காக அவங்களை அங்கே விட்டு வைக்கணும்?''

''கூட்டிக்கிட்டுப் போறேன்னு அவகிட்டே சொல்லிட்டு வந்தயா தறுதலைப் பயலே! பொறு. அண்ணு ஜோசியர்கிட்டே சொல்லி என்ன செய்யறேன் பார்'' என்று கூறி ஜோசியரின் வீட்டுக்கருகே சென்று ''அய்யா, இங்கே கொஞ்சம் வாங்க'' என்று கூவினுள்.

அவளுடைய கூப்பாட்டைக் கேட்டு ஏழெட்டு பேர்கள் அங்கே கூடி விட்டனர். ஜோசியன் வெளியே வந்தான். அவனிடம் ''நேத்து ராத்திரி இவன் அந்தத் தேவடியா கூட படுத்துட்டு வந்திருக்கான். அவளையும் இங்கே கூட்டிட்டு வரணும்னு சொல்ருன். நீங்களே சொல்லுங்க. சுவாமி கோவில்லே புருஷன் பொண்டாட்டி இருக்கலாமா?'' என்று நியாயம் கேட்டாள்.

''ஆஞ்சநேயர் பிரம்மச்சாரி. அவர் கோவில்லே புருஷன் பொண்டாட்டி இருக்கறது சாஸ்திரத்துக்குச் சரிப்படாது. அதைப் போல் நடந்தா எல்லோரையும் கோவிலே விட்டு வெளியே தொரத்திடுவேன் கிராமத்திலே மழை பெய்யக் கூடாதுன்னு இப்படிச் செய்யறீங்களா?'' என்று ஜோசியன் சொல்லி முடித்தான். அப்பண்ணய்யாவின் முகம் ''சப்'' என்ருகி விட்டது. ஆளுல் இரவு பெண்டாட்டியிடம் பெற்ற இன்பம் அவனுக்குத் தைரியமூட்டியது. அவன் நேரே அண்ணியின் வீட்டிற்குப் போய் நடந்ததைச் சொன்ஞன். கங்கம்மா அவன் பின்ஞலேயே வந்து வெளியில் நின்றபடியே சென்னிகராயரை யும், நஞ்சம்மாவையும் திட்டிஞள். சென்னிகராயர் அதுவரை தூக்கம் கலைந்து எழவில்லை. முன்னிரவு சாப்பிட்ட பாயசம் அவருக்கு ஆழ்ந்த தூக்கத்தைக் கொடுத்திருந்தது. கங்கம்மா போட்ட சத்தம் அவரது தூக்கத்தைக் கலைத்துவிட்டது. அவர் படுக்கையிலிருந்து எழுந்தார். தன் மனைவியைத் திட்ட வேண்டு மென்று அவர் விரும்பிய போதிலும், ஏரிக்கரைப் பக்கமாக அவசரமாகப் போக வேண்டியிருந்தது. ஆதலால் அவர் ஓட்ட மும் நடையுமாக ஏரியை நோக்கிச் சென்ருர். மூத்த மகனும் தனக்கு ஆதரவாக இல்லை என்று நினைத்த கங்கம்மா தன் வீட் டிற்குப் புறப்பட்டாள்.

3

அன்றிரவும் மனைவியுடன் அப்பண்ணய்யா தங்கிஞன். இரண்டு மூன்று நாட்கள் சென்றதும் ஒரு முடிவு செய்தார்கள். மனைவி மக்களுடன் அப்பண்ணய்யா தனித்து வசிக்க வேண்டும் என்று முடிவாகியது. மாமியாரும் அவனுடன் இருப்பது என்று

தீர்மானித்தார்கள். பிழைப்புக்கு என்ன வழி? ''பிச்சை எடுத்தாவது பொண்டாட்டி கொழந்தைகளைக் காப்பாத்தறேன். நான் ஆம்பிளை இல்லையா?'' என்று அவன் வீராப்புப் பேசினான். தங்குவதற்கு ஒரு இடத்தைத் தேடிப் பிடித்தாக வேண்டும்.

குருபரஹள்ளி குண்டே கவுடருக்குச் சொந்தமான நிலம் ஒன்று அவர்களுடைய கிராமத்திலேயே இருந்தது. அதற்கு வேலி கிடையாது. அதை யாரும் பயன்படுத்திக் கொண்டிருக்கவில்லை. அது ஆஞ்சநேயர் கோவிலுக்கு முப்பது *மார் தூரத்தில் இருந்தது. நஞ்சம்மா அப்பண்ணய்யாவை அழைத்துக் கொண்டு கவுடரிடம் சென்று பேசினாள். அப்பண்ணய்யா தன் சொந்த செலவில் அந்த இடத்தில் குடிசை கட்டிக் கொள்ள கவுடர் ஒப்புக் கொண்டார். அப்பண்ணய்யா சென்னிகராயரைப் போல் சோம்பேறி அல்ல. அவனிடம் வேலை செய்வதற்கு வேண்டிய சக்தியும் ஊக்கமும் இருந்தன. யாராவது அவனைப் புகழ்ந்து ஊக்கப்படுத்திவிட்டால் வேலை செய்து கொண்டே இருப்பான். மனைவியிடம் பெற்ற சுகம் அவனை ஊக்குவித்தது. நஞ்சம்மா அவனுக்கு வழிகாட்டியாக இருந்தாள். சாதம்மா கொண்டு வந்திருந்த வெள்ளிச் சாமான்களை விற்றதில் இருபத்தைந்து ரூபாய் கிடைத்தது. மூங்கில், மண், தூண்கள் ஆகியவற்றைப் பணம் கொடுத்து அப்பண்ணய்யா வாங்கினான். அவனே குழி வெட்டி இடுப்பு உயரத்துக்கு சுவர் கட்டித் தூணை நட்டான். அதன் மேல் தட்டியை வைத்து மேலே மூங்கில் கூரை போட்டான். சில பேரிடம் கேட்டு அறுநூறு, எழுநூறு ஓலையை வாங்கிக் கீற்றுப் பின்னி கூரைக்குப் போட்டான். தச்சனுக்கு மூன்று ரூபாய் கொடுத்து நான்கு அடி உயரமுள்ள ஒரு கதவும் தாழ்ப்பாளும் செய்யச் சொன்னான். சொற்பப் பணச் செலவில் அவனே வீட்டைக் கட்டி முடித்தான். ஒரு நல்ல நாளன்று பால் காய்ச்சி கிருகப் பிரவேசம் செய்தார்கள். அவர்கள் தனிக் குடித்தனம் ஆரம்பிக்கும் வரை நஞ்சம்மாவின் வீட்டிலேயே சாப்பிட்டு வந்தார்கள்.

இனி பிழைப்புக்கு வழி வேண்டுமல்லவா? அவன் ஒருவன் மட்டும் தனியாக ஒவ்வொரு கிராமத்திற்கும் போய், ஒவ்வொரு வீட்டிற்குள்ளும் நுழைந்து, சிவே கவுடரைத் திட்டி ஏதாவது கொடுக்குமாறு வேண்டுவான். அவன் கதவுக்கு வெளியே நின்று துணியை விரித்துப் பிச்சை கேட்கும் பிச்சைக்காரன் அல்ல. கௌரவமாக இருப்பதால் அவனுக்கு முறத்தில் தாராளமாகக் கொடுத்தார்கள்.

*மார் — சுமார் ஒரு மீட்டர் நீளம்

முன்பு இருவரும் சேர்ந்து கிராமங்களுக்குச் சென்று கொண்டிருந்தார்கள். இப்பொழுது தனித்தனியாகச் செல்லும் பொழுது ''அம்மாவும் மகனும் பிரிஞ்சிட்டோம்னு சொல்லி ரெண்டு தடவை வாங்கிக்கிறீங்களா?'' என்று வீட்டுக்காரர்கள் கேட்டார்கள். ஆகையால் கங்கம்மா அருகில் இருந்த கிராமங்களுக்கு முதலிலேயே சென்று விட்டாள். அவளுடைய வீட்டில் ஒரு வயிறு தான். ஆதலால் மூன்று வருடங்களுக்குத் தேவையான ராகி, அவரைப் பருப்பு, மிளகாய் ஆகியவற்றை அவள் சேர்த்து வைத்திருந்தாள். அப்பண்ணய்யாவின் வீட்டில் ஐந்து வயிறுகள். கங்கம்மா கணவன் இழந்த கிழவியாதலால் அவளிடம் அதிகக் கருணை காட்டினார்கள். அப்பண்ணய்யா உடல் வலுவுள்ள ஆண்பிள்ளையாக இருந்ததால் அவனிடம் ஜனங்கள் அவ்வளவாக இரக்கம் காட்டவில்லை. சிலர் அவனைப் பார்த்து ''கூலி வேலை செஞ்சு பிழைக்கக் கூடாதா? உன் கை, கால் முறிஞ்சா போச்சு?'' என்று கேட்டார்கள்.

முதன் முதலாக மனைவி வந்து சேர்ந்த சமயத்தில் அப்பண்ணய்யா மிகுந்த உற்சாகத்துடன் இருந்தான். நான்கு நாட்கள் கழிந்ததும் ஊக்கம் சற்றுக் குறைந்தது. தினசரி ஒவ்வொரு ஊருக்கும் சென்று யாசகம் கேட்டு வீட்டுக்காரர்கள் கடிந்து சொல்லும் பேச்சைப் பொறுத்துக் கொள்வது அவனுக்கு சிரமமாக இருந்தது. முன்பு யாசகம் கேட்கும் வேலையை கங்கம்மா செய்து வந்தாள். அவள் கொண்டு வரும் பொருள்களை மூட்டை கட்டித் தூக்கி வரும் வேலையை மட்டுமே அப்பண்ணய்யா செய்து வந்தான். இப்பொழுது தானே சென்று யாசகம் கேட்க அவனுக்கு விருப்பமில்லை. வெறுப்பு அதிகமாகிக் கொண்டு வந்தது.

ஒரு நாள் நஞ்சம்மா அப்பண்ணய்யாவின் வீட்டிற்குச் சென்றாள். அப்பண்ணய்யா வெளியே சென்றிருந்தான். நஞ்சம்மா பேச்சு வாக்கில் சாதம்மாவிடம் ''உம் பொண்ணு ஜெயலட்சுமிக்கு பள்ளிக்கூடத்திலே சேர்க்கற வயசாயிடுத்தே. அவளையும் ராமகிருஷ்ணனையும் பள்ளிக்கூடத்திலே சேர்த்துடு. நாலு எழுத்துப் படிக்காவிட்டா கொழந்தைக கதி என்ன?'' என்று புத்திமதி கூறினாள்.

''ஆமா, கொழந்தைகளைப் பள்ளிக்கூடத்திலே சேக்கணும்'' என்றாள் சாதம்மா.

''உங்கிட்டே வேறொரு விஷயம் சொல்லணும். நீங்க ராகியை வித்துடறீங்களாமே. அப்பிடிச் செய்ய வேண்டாம்.

அறுவடை காலத்திலே ஜனங்க ராகி கொடுப்பாங்க. அப்புறம் சித்திரை வைகாசி மாசத்திலே ஒரு மணி கூடக் கெடைக்காது. இப்ப இப்படி வித்துட்டா அப்புறம் ரொம்ப சிரமம். ஒண்ணு, ரெண்டு மண் பானை வாங்கிப் போட்டு வையுங்க.'' என்றாள் நஞ்சம்மா. உடனே தங்கம்மா ''கெட்டுப் போன ராகியை வைச்சுக்கிட்டு என்ன செய்யறது. யார் சாப்பிடுவாங்க''? என்றாள்.

ராகி சாப்பிட்டால் அவர்களுடைய உடம்புக்கு ஒத்துக் கொள்வதில்லை என்று நஞ்சம்மாவுக்குத் தெரியும். ஆனால் கிராமத்தில் யார் அரிசி சாப்பிடுகிறார்கள்? சில நாட்கள் தொடர்ந்து ராகி சாப்பிட்டால் தானாகவே ஒத்துக் கொள்ளும். விருப்பம் போல் சாப்பிட ஜமீன்தார்களால் மட்டுமே முடியும். அவள் தனக்குத் தெரிந்த புத்திமதியைச் சொன்னாள். மேலும் சாதம்மா குடும்பத்தினர் கடூர் வட்டாரத்தைச் சேர்ந்தவர்கள். காபி குடித்துப் பழகியவர்கள். சாதம்மா முதன் முதலாக மாமியார் வீட்டிற்கு வந்த பொழுது மாமியாருக்குப் பயந்து காபி குடிக்காமல் இருந்தாள். ராமஸந்திர கிராமத்திலும் சில பேர் காபி குடிக்க ஆரம்பித்துவிட்டார்கள். வசதியுள்ளவர்களால் தான் அது முடியும். அப்பண்ணய்யாவின் குடும்பத்திற்கு இரண்டு வேளை காபி தேவையா?

''நீங்க காபியை விட்டுட்டா எவ்வளவோ மிச்சமாகுமே'' — நஞ்சம்மா கூறினாள்.

''அது எங்களாலே முடியாதப்பா! காலையிலே எழுந்திரிச்சு எப்பிடி வெறும் வயித்திலே இருக்கறது? நீங்க வெறும் ராகி ரொட்டியைத் தின்னுட்டு இருக்கீங்க. எங்களாலே அது முடியாது. நாங்க அப்பிடி இருந்தவங்க அல்ல'' என்று தங்கம்மா கூறியவுடன் நஞ்சம்மா மறுபடியும் அதைப் பற்றிப் பேசவில்லை.

ஒரு நாள் சாதம்மா நஞ்சம்மாவின் வீட்டிற்கு வந்து பேசிக் கொண்டிருந்தாள். நஞ்சம்மா 'சட சட' வென்று குச்சியை முறித்துப் போட்டபடி மளமள வென்று இலை தைத்துக் கொண்டிருந்தாள். ''அக்கா, நீங்க எவ்வளவு வேலை செய்றீங்க. வீட்டு வேலையும் செஞ்சு கணக்கும் எழுதுறீங்க. இலை தைக்கறீங்க. என்னாலே இதெல்லாம் செய்ய முடியாதம்மா'' என்றாள் சாதம்மா. நஞ்சம்மா சொன்னாள். ''உங்கிட்டே சொல்லணும்னு ரெண்டு, மூணு மாசமா நெனச்சிக்கிட்டிருக்கேன். நீங்க தப்பா எடுத்துக்குவீங்கன்னு நெனச்சு சொல்லலை.''

''என்ன, சொல்லுங்க''

''உங்க வீட்லே சாப்பிட அஞ்சு பேர் இருக்கீங்க. சம்பாதிக்கிறவன் ஒரு ஆள் தான். அதுவும் யாசகம் செஞ்சு எத்தனை நாள் பிழைக்க முடியும்? ஒரு சொந்தத் தொழில் வேண்டாமா? சொந்தத் தொழில் இருந்தா குடும்பத்துக்கு இந்த நிலையே வந்திருக்காது. வீட்லே ரெண்டு பொம்பளைக இருக்கீங்க. நீங்களாவது ஏதாவதும் செய்யக் கூடாதா? வீட்டு வேலை செஞ்சுகிட்டே இலை தைச்சாலும் கூட தினமும் முன்னூறு இலை தைச்சுடலாம். இப்ப இலை நூறு ஏழணு. திப்டூரிலிருந்து லாரியிலே பெங்களூருக்கு புரச இலை அனுப்பறாங்களாம். நீங்க மாசம் முப்பது ரூபாய் சம்பாதிச்சுடலாம். அது எவ்வளவு உதவியா இருக்கும்!''

''ஒரேயடியா இலை தைச்சா சூடு ஆகாதா?''

''பழக்கமானு ஒண்ணும் ஆகாது'' அப்பிடி உடம்பு சூடானாலுங்கூட ராத்திரி படுக்கறப்போ உள்ளங்கால்லே கொஞ்சம் விளக்கெண்ணை தேச்சுகிட்டா சரியாயிடும்.''

தானும் இலை தைக்க வேண்டுமென்று சாதம்மா முடிவு செய்தாள். மறுநாள் நஞ்சம்மாவின் வீட்டுக்கு வந்து அவளுடன் சேர்ந்து இலை தைக்க ஆரம்பித்தாள். நஞ்சம்மா நூற்றிருபது செய்து முடிக்கும் பொழுது அவள் பதினெட்டு செய்தாள். பழக்கமாகி விட்டால் வேகமாகச் செய்யலாம் என்று நஞ்சம்மா அவளுக்கு ஊக்கமூட்டினாள். ஆனால் அடுத்த நாள் சாதம்மாவின் கையும் காலும் எரிச்சல் எடுக்கத் தொடங்கின.

''தாலி கட்டின புருஷன் பெண்டாட்டி பிள்ளைகளைக் காப்பாத்தனும். நீ இலையும் தைக்க வேண்டாம், தலையும் தைக்க வேண்டாம்'' என்று சாதம்மாவின் தாய் கூறினாள். அத்துடன் அந்த வேலை முடிவடைந்தது. அந்தச் சமயத்தில் அவளுடைய மாத விலக்கு நின்று, அவள் வாந்தி எடுக்க ஆரம்பித்தாள்.

சாதம்மாவின் தந்தை புரோகிதப் பரம்பரையில் பிறந்தவர். ஆதலால் அவளுடைய தாயாருக்கு, மடி, ஆசாரம், நியமம் ஆகியவை நன்கு தெரிந்திருந்தன. கங்கம்மாவின் வீட்டில் ஆசார விஷயங்கள் அவ்வளவாகக் கிடையாது. நஞ்சம்மா ஆசார, நியமங்கள் செய்வது போல் வெளிப்படையாகச் சற்று காட்டிக் கொள்வாள். ஆனால் அவள் அதிக ஆசாரம் பார்ப்பது கிடையாது. மண் பானையில் ரசம் செய்வாள். பானையிலே சோறு வடிப்பாள். இதெல்லாம் பிராம்மண நியதிகளுக்கு முரண்பட்டது. நஞ்சம்மாவின் நான்கு வயது மகன் விசுவனுதன்

மாதேவய்யாவின் மடியில் அமர்ந்து, அவர் வேறு ஜாதிக்காரர் வீட்டிலிருந்து கொண்டு வந்த சாப்பாட்டைச் சாப்பிடுவான். நஞ்சம்மா அதைக் கண்டிப்பதில்லை. இவைகளெல்லாம் சாதம்மாவுக்கும், அவளுடைய தாய்க்கும் பிடித்தமான விஷயங்கள் அல்ல.

அய்யா சாஸ்திரிகளின் மனைவியும், அண்ணு ஜோசியரின் மனைவியும் பிராம்மண நியதிகளைக் கடைப்பிடிப்பவர்கள். அய்யா சாஸ்திரிகளின் மனைவி மாதவிலக்கு சமயத்தில் சாஸ்திரிகளின் கண்ணுக்குத் தட்டுப்படமாட்டாள். ஆனால் நஞ்சம்மா மாதத் தீட்டு சமயத்தில் திருட்டுத்தனமாக அவளே சமையல் செய்து விடுகிறாளாம். மகள் சமைத்ததாகப் பொய் சொல்லுகிறாளாம். அண்ணு ஜோசியரின் மனைவி இவ்விதம் சொன்னதும், இனிமேல் நஞ்சம்மாவின் வீட்டிற்குப் போகக்கூடாது என்று சாதம்மாவின் தாய் முடிவு செய்தாள். ''மற்ற ஜாதிக்காரங்க தீட்டான நாளே குளிச்சிட்டு சமையல் செய்யறாங்க, பிராம்மணர்களும் அப்பிடிச் செய்யலாமா?'' என்று அவள் ஆசாரத்தை நிலை நாட்டுவதில் முனைந்தாள்.

ஒரு நாள் சாதம்மாவும், அவளுடைய தாயாரும் அண்ணு ஜோசியரின் வீட்டிற்குப் போயிருந்தனர். அப்பொழுது ஜோசியர் பேச்சை ஆரம்பித்தார். ''பூர்வீக சொத்துக்களை அண்ணன் தம்பி ரெண்டு பேரும் சமமாக பங்கு போட்டுக்கணும். இப்ப நில, புலன் எதுவும் கிடையாது. கணக்குப்பிள்ளை வேலைதான் பரம்பரை உரிமையை அண்ணன், தம்பி ரெண்டு பேரும் பிரிச்சுக்க வேணும்னு அரசாங்க சட்டம் இருக்கு. இன்னும் எவ்வளவு காலம் அவங்க உங்களை ஏமாத்த முடியும்?''

அவர் தூண்டிவிட்டதும் தங்கம்மா சுறுசுறுப்படைந்தாள். ''எங்க உரிமையைப் பத்தி இந்த ஓரகத்தி எதுவுமே பேசாம இருக்காளே'' என்று சாதம்மாவும் பொறுமைப்பட ஆரம்பித்தாள்.

''நீங்களும் அப்பண்ணய்யாவும் போய்க் கேளுங்க. கொடுக்க முடியாதுன்னு அவர் சொன்னா திப்டூருக்குப் போய் தாசில்தார் கால்லே விழுந்து கேளுங்க. அவர் கொடுப்பாரு'' என்று ஜோசியர் மறுபடியும் தூண்டிவிட்டார்.

அன்று மாலையில் அப்பண்ணய்யா வீடு திரும்பியதும் சாதம்மா அவனிடம் ''நமக்கும் கொழந்தைகள் இல்லியா? பூர்வீகச் சொத்துன்னு அதுகளுக்கு எதுவும் வேண்டாமா? சம்பளம் நூத்திருவது ரூபாயிலே அரைப்பங்கு, அதாவது அறுபது ரூபா

நமக்கும் கெடைக்கணும். ''மை'' காணிக்கையிலும் பங்கு வேணும்'' என்ருள். அப்பண்ணய்யாவுக்கு அதைப் பற்றி எதுவும் தெரியாது. ஆனல் மணியக்காரன், கணக்குப்பிள்ளைத் தொழில் மூத்த மகனுக்குத்தான் என்று அவன் கேள்விப்பட்டிருந்தான். ''சட்டம் எப்படி இருக்கிறதோ! ஜோசியருக்குத் தெரியாதது நமக்குத் தெரிந்து விடுமா?'' என்று நினைத்து அப்பொழுதே இருட்டில் ஜோசியரின் வீட்டிற்குப் போய் அவரிடம் கேட்டான். ''இத்தனை வருஷம் அவரே பணத்தைச் சாப்பிட்டு ஏப்பம் விட்டாரே! முட்டாப் பயலே'' என்று அவர் சொன்னதும் ஆத்திரம் அடைந்து நேரே சென்னிகராயரின் வீட்டை அடைந்தான். சென்னிகராயர் இருக்கவில்லை. நஞ்சம்மா குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். அவன் அவளுக்கு எதிரே நின்று ''இப்பிடி மோசடி செஞ்சா நான் சும்மா இருக்கமாட்டேன். சம்பளத்திலே எனக்கும் பாதி வேணும்'' என்ருன்.

நஞ்சம்மாவுக்கு ஒன்றும் புரியவில்லை. ''எந்தச் சம்பளம். நீங்க என்ன சொல்றீங்க?'' என்ருள்.

''கணக்குப்பிள்ளைச் சம்பளம். என் அப்பாவுக்கு அவன் ஒருத்தன் மட்டும் மகனல்ல. நானும் மகன்தான். எனக்கும் அரைச் சம்பளம் தரணும். இல்லாட்டா தாசில்தார்கிட்டே போய்ச்சொல்லுவேன்'' என்று கூறிவிட்டு, அண்ணன் மாதேவய்யாவின் கோவிலில் இருப்பான் என்று நினைத்துக் கொண்டு கோவிலை நோக்கிப் புறப்பட்டான். ''நானும் என் அப்பாவுக்குப் பிறந்த மகன்தான். எனக்கும் அரைச் சம்பளம் கொடுக்கணும் நான் ஊர் ஊராய்ப் போய் யாசகம் செய்யறது. இவன் சம்பளத்தை வாங்கிட்டு சுகமாயிருக்கறதா?'' என்று வழி நெடுகக் கூறிக்கொண்டே சென்ருன்.

அவன் மாதேவய்யாவின் கோவிலுக்குப் போனது நஞ்சம்மாவுக்குத் தெரியாது. அந்த விஷயத்தை தீர விசாரிக்க வேண்டுமென்று நினைத்து, அவள் அப்பண்ணய்யாவின் வீட்டிற்குப் போனுள். அங்கே அப்பண்ணய்யா இருக்கவில்லை.

''அப்பண்ணய்யா எங்க வீட்டுக்கு வந்து அரைச் சம்பளம் கொடுக்கணும்னு சத்தம்போட்டுட்டுப் போனுரு. என்ன சங்கதி?'' என்று நஞ்சம்மா கேட்டாள்.

''அண்ணன் தம்பின்னு இருந்தா ரெண்டு பேருக்கும் பங்கு கெடையாதா? இத்தனை நாள் நீங்களே சாப்பிட்டு அனுபவிச்சீங்க. இந்தக் காலத்திலே யாரையும் நம்ப முடியாது.''

''அரசாங்க சட்டம் அப்பிடிக் கெடையாது. யார் உங்க கிட்டே அப்பிடிச் சொன்னது? சம்பளம் நூத்திருபது ரூபா வர்றது உண்மைதான். ஆனு நோட்டுப் புத்தகம் வாங்க, மை வாங்க எவ்வளவு செலவு! கண்ணிலே எண்ணெய் விட்டுட்டு கணக்கு எழுத வேண்டாமா? இதையெல்லாம் யோசிச்சுப் பாக்காம அவர் அப்பிடிச் சத்தம் போடலாமா?''

''கணக்கு என்ன பிரமாதம்? நான்கூட எழுதுவேன். எலும்பு உடையப் பாடுபட்டாத்தானே பல் உடையச் சாப் பிடலாம்?''

நஞ்சம்மா மறுபடியும் பேச்சை வளர்க்காமல் வீடு திரும் பினுள். சென்னிகராயர் கோவிலில் இருக்கவில்லை. அவர் ஏரிக் கரைக்குச் சென்று அங்கிருந்து நேரே வீட்டிற்கு வந்தார். பிறகு சந்தியாவந்தனம் செய்ய ஆரம்பித்தார். குழந்தைகள் விளக்கு வெளிச்சத்தில் படித்துக் கொண்டிருந்தார்கள். நஞ்சம்மா வீட்டிற்கு வந்ததும் சமையலறையைப் பெருக்கி சுவாமியின் முன்னுல் அகல் விளக்கேற்றி வைத்தாள். அப்பண்ணய்யாவின் சுபாவம் அவளுக்குத் தெரியும். ''ஆனுல் சாதம்மா ஏன் இப்படி மாறினுள்! அவள்தான் கணவனுக்கு சொல்லி இருப்பாள். அவளுக்கு யார் சொன்னுர்கள்? யார் சொல்லிக் கொடுத்தாலும் அவள் இப்படி மாறியிருக்கக்கூடாது. உப்பு தின்ற நன்றி கூட இல்லை. யாருக்கும் உதவி செய்யக்கூடாது'' என்று நினைத்தாள்.

அப்பண்ணய்யா மறுபடியும் வந்த அரவம் கேட்டது. அவனுடன் ஏழெட்டுப்பேர் வந்தது போல் சந்தடி கேட்டது. அத்துடன் கங்கம்மாவின் குரலும் ஒலித்தது. நஞ்சம்மா வெளியே வந்து பார்த்தாள். அப்பண்ணய்யா, அய்யா சாஸ்திரிகள், அண்ணு ஜோசியர், செக்குக்கார சிவலிங்கன். சிவே கவுடர், ரேவண்ண செட்டி, பழைய கணக்குப்பிள்ளை சிவலிங்கன், கங்கம்மா ஆகியோரடங்கிய ஒரு கும்பல் கூடி இருந்தது. சென்னிகராயர் பஞ்ச பாத்திரத்தை எடுத்து வைத்து மேலே ஒரு துணியைப் போர்த்திக் கொண்டார். நஞ்சம்மா வெளியே வந்த வுடன் கங்கம்மா அவளைப் பார்த்து ''என் வீட்டுக்காரர் — அந்த புண்ணியவான் எனக்குத் தாலி கட்டினது பொய்யா? எனக்கும் பங்கு கொடுக்கணும். நீயே நியாயஞ் சொல்லு ரேவண்ண செட்டி'' என்று கூவினுள்.

''முன்னுடி கணக்குப்பிள்ளை வேலை பார்த்த சிவலிங்க அண் ணுவுக்கு இந்த விஷயம் எல்லாம் தெரியும். அவரே நியாயம் சொல்லட்டும்'' என்று ரேவண்ண செட்டி கூறினுன்.

உடனே சிவலிங்கன் திண்ணையில் தூணுக்கருகே அமர்ந்து ''சொல்லய்யா, சென்னையா'' என்று மிடுக்குடன் சொன்னான். என்ன சொல்வதென்று சென்னிகராயருக்குத் தெரியவில்லை. ''அவளையே கேளுங்க'' என்று சொல்லிவிட்டு அவர் உட்கார்ந்தார். ''நீங்களே சொல்லுங்க'' என்று ரேவண்ண செட்டி நஞ்சம்மாவைப் பார்த்துச் சொன்னான். ஒரு நிமிடம் கழித்து ''பயப்படாதீங்க'' என்று மறுபடியும் கூறினான்.

அப்பொழுது சாதம்மாவும், தங்கம்மாவும் வந்து வெளிக் கதவருகே நின்றார்கள். நஞ்சம்மாவின் கோபம் எல்லை மீறியது. ''உங்களை யார் இங்கே வரச் சொன்னது? அடுத்தவன் வீட்டு வெவகாரத்திலே நியாயம் பேச ஓடி வர்றீங்க. உங்க வீட்டு வெவகாரத்துக்கு யார் நியாயஞ் சொல்றது? பேசாம போறீங்களா? வேறே மரியாதை வேணுமா?'' என்றாள்.

அந்தப் பதிலை எவரும் எதிர்பார்க்கவில்லை. செக்குக்கார சிங்கன் ஆகிய சிலருக்கு விஷயம் என்னவென்று தெரியாது. ''பஞ்சாயத்துப் பேசறோம், எல்லாரும் வாங்க'' என்று கூவிக் கொண்டே அய்யா சாஸ்திரிகள் போனார். ஆகையால் அவர்களும் வந்திருந்தார்கள். கணக்குப்பிள்ளையின் தயவு எப்பொழுதும் வேண்டும். நமக்கு ஏன் வம்பு என்று நினைத்து அவர்கள் எழுந்து சென்றார்கள். அவர்கள் சென்றதும் மற்றவர்களின் தைரியம் குறைந்தது. ''பேசாம போறீங்களா? இல்லியா'' என்று நஞ்சம்மா மறுபடியும் அதட்டியதும் ரேவண்ண செட்டியும் சிவலிங்கனும் எழுந்து சென்றார்கள். நஞ்சம்மா அப்பண்ணய்யாவை நோக்கி, ''எந்தச் சோமாறி உங்களுக்கு இப்படிச் சொல்லிக் குடுத்தான்?'' என்று மீண்டும் கேட்டாள். அவன் பதில் சொல்லவில்லை. ஆனால் அவள் அப்படிக் கேட்டதும் அண்ணா ஜோசியன் எழுந்து ''சந்தியாவந்தனம் செய்ய நேரமாச்சு. உங்க வீட்டு வெவகாரம். சும்மா ஊர்க்காரங்களைக் கூப்பிடாதேன்னு சொன்னாலும் அப்பண்ணய்யா கேக்கலை. இவனுக்கு எப்பத்தான் புத்தி வருமோ!'' என்று சொல்லியபடியே எழுந்து சென்றார். அவருடன் அய்யா சாஸ்திரிகளும் சென்றார்.

''அப்பண்ணய்யா, கணக்குப்பிள்ளை வேலை எப்பவும் மூத்த மகனுக்குத்தான். வேணும்னா நீங்க திப்டூருக்குப் போய்க் கேட்டுட்டு வாங்க'' என்றவுடன் அவன் எழுந்துவிட்டான். பஞ்சாயத்துக்காரர்கள் அவனைக் கைவிட்டுச் சென்ற பொழுதே அவன் மனம் ஒடிந்து போனான். ''இந்த முண்டை நாக்கைப் பாரு. ஊர்க்காரங்களையெல்லாம் அதட்டிப் போட்டாளே! நான்

எம் பங்கை விடமாட்டேன்'' என்று சத்தம் போட்டுக் கொண்டே கங்கம்மா சென்றாள்.

ராத்திரி சாப்பிடும்பொழுது சென்னிகராயர் எதுவுமே பேச வில்லை. ''பாத்தீங்களா, அவங்க யோக்கிதையை'' என்று நஞ்சம்மா சொன்னதும் ''சரி, போகட்டும் விடு'' என்று சொல்லிக்கொண்டே சென்னிகராயர் தனக்கும் அந்த விஷயத்திற்கும் தொடர்பு இல்லாதது போல் மிகவும் நிதானமாகக் கீரைக் குழம்பு போட்டுக் கொண்டார். அன்று இரவு முழுவதும் நஞ்சம்மாவுக்குத் தூக்கம் வரவில்லை. ஓரகத்தி இப்படி மாறிவிட்டதைப் பற்றி நினைத்து அவளுக்கு மன வருத்தம் மிகுந்தது. உண்மையாகவே அவர்களுக்குப் பங்கு தர வேண்டுமா என்ற சந்தேகமும் வந்தது, மறுநாள் ஒரு நடை சென்று தியாவரசய்யாவிடம் கேட்டு வரவேண்டும் என்று நினைத்தாள்.

விடியும் நேரத்தில் கணவனை எழுப்பி விஷயத்தைக் கூறியதும் ''என்னாலே முடியாது. நீயே போ'' என்று சொல்லி அவர் போர்வையை இழுத்துப் போர்த்துக் கொண்டு தூங்க ஆரம்பித்தார். அவள் பார்வதியையும், ராமண்ணனையும் எழுப்பி, முகம் கழுவி விட்டு, வறுத்த மாவைப் பிசைந்து அவர்களுக்குச் சாப்பிடக் கொடுத்தாள். பிறகு அவர்களையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டாள்.

தியாவரசய்யாவுக்கு வயதாகி விட்டபடியால் அவருடைய உடல் நிலை கெட்டுப் போயிருந்தது. நஞ்சம்மா வந்த பொழுது அவர் இன்னமும் போர்த்துக் கொண்டு படுத்தபடி இருந்தார். அந்த வேளையில் நஞ்சம்மாவைக் கண்டதும் அவருக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. அவள் தன்னிச்சையாகவே கணக்கு வழக்குகளை எழுதிச் சமாளித்து வருகிறாள் என்பதால் அவளிடம் அவருக்கு மனத்திருப்தி இருந்தது. அவளுடைய விஷயத்தைக் கேட்டு ''அதுலே எந்தச் சந்தேகமும் கெடையாது. மூத்த மகனுக்குத் தான் உரிமை'' என்று சொன்னார்.

நஞ்சம்மாவும் குழந்தைகளும் குளித்து சாப்பிட்ட பிறகு அவர் நஞ்சம்மாவிடம், ''உனக்கும் மனசிலே நிம்மதி இருக்கணும். கம்பனகெரெ இங்கிருந்து மூணு மைல்தான். ஷேக்தார் கிட்டேயும் போய்க் கேளு. அப்புறம் மன உறுத்தல் இருக்காது'' என்றார்.

வழிகாட்டுவதற்காக ஒரு ஆளையும் உடன் அனுப்பினார். இரு குழந்தைகளையும் நடத்திக் கொண்டு அவள் கம்பனகெரெய்க்குப்

போனாள். ஷேக்தாரிடம் அவளுக்கு அறிமுகம் இருந்தது. அவர் ராமஸந்திர கிராமத்துக்கு வந்த பொழுதெல்லாம் அவள் வெள்ளை வெளேரென்று சாதம் வடித்து ரசம், சட்னி ஆகியவைகளுடன் பரிமாறியிருக்கிறாள். அவர் மிகுந்த அமைதியான சுபாவம் கொண்டவர். ஆகையால் அவரைப் பார்க்கச் செல்லும் பொழுது அவளுக்குப் பயம் ஏற்படவில்லை. அவர் வீட்டிற்குச் சென்றதும் அவர் அவளைப் பார்த்து "என்னம்மா, கணக்குப் பிள்ளை வேலையிலே தம்பிக்கும் பங்கு உண்டான்னு கேக்க வந்தீங்களா?" என்றார்.

அவளுக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது. ஊமையைப் போல் பேசாமல் நின்றாள். "இப்ப அரைமணிக்கு முன்னாடிதான் அவங்க வந்திருந்தாங்க. உங்க மச்சினன் அப்பண்ணய்யாவும், அவன் பொண்டாட்டியும் வந்திருந்தாங்க. எங்கிட்டே பேச பயப்பட்டு கதவுக்கு வெளியே கை கூப்பி நின்னுகிட்டிருந்தாங்க. அண்ணை ஜோகியன்னு ஒரு ஆளும், சிவலிங்கே கவுடன்னு ஒரு ஆளும் அவங்களுக்காக எங்கிட்டே பேசினாங்க. அவங்க முகத்திலே துப்பி அனுப்பினேன். உரிமை மூத்த மகனுக்குத்தான் அப்படிங்கறது யாருக்குத்தான் தெரியாது? இதைக் கேக்கறதுக்காக நீங்க இவ்வளவு தூரம் எதுக்காக வரணும்?" என்றார் அவர்.

"வெய்யில்லே வந்திருக்கீங்க, கொஞ்சம் தங்கிட்டுப் போகலாம்" என்று சொன்னார் அவர். சாப்பாட்டை முடித்துக் கொண்டு வெய்யில் தாழ்ந்த பிறகு அவர்கள் புறப்பட்டார்கள். புறப்படும் பொழுது ஷேக்தாரின் மனைவி நஞ்சம்மாவுக்கு வெற்றிலை, பாக்கு, தேங்காயுடன் ஒரு ரவிக்கைத் துண்டும் கொடுத்து குழந்தைகளுக்கு வெல்லம், சீடை கொடுத்தாள்.

கம்பனகெரெ ராமஸந்திர கிராமத்திலிருந்து ஐந்து மைல் தூரம் இருந்தது. நடக்கும் பொழுது கால் வலிக்கிறது என்று குழந்தைகள் அடம்பிடித்தார்கள். நஞ்சம்மா அவர்களின் கையைப் பிடித்துக் கொண்டு, அவர்களைக் கொஞ்சியவாறே மெதுவாக நடை போட்டு, பொழுது சாய்வதற்கு முன் ஊர் போய்ச் சேர்ந்தாள்.

## 4

அப்பண்ணய்யா தன் மனைவியுடன் தனிக்குடித்தனம் ஆரம்பித்த பிறகு, கங்கம்மாவால் தனிமையைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் தவிப்பாகப் போயிற்று. தன் வயிற்றில் பிறந்த கண்மணியே தன்னிடமிருந்து பிரிந்து சென்று விட்டான்.

தன்னிடமிருந்து மகனைப் பிரிக்க வேண்டுமென்று மூத்த மருமகள் வேண்டுமென்றே திட்டமிட்டு அவன் குடிசை கட்டிக் கொள்ள உதவி செய்தாள் என்பது அவளுடைய எண்ணம்.

அப்பண்ணய்யாவின் மாமியார், மனைவி, குழந்தைகள் ஆகியோர் வந்து ஒன்றரை வருடம் ஆயிற்று. ஊர் ஊராகச் சென்று யாசகம் செய்து, கண்ட பேச்சுக்களையெல்லாம் கேட்டு அவனுக்கும் சலிப்பு ஏற்பட்டுவிட்டது. ஒரு நாள் கல்லே கவுடனின் வீட்டிற்குச் சென்றான். அவன் அப்பண்ணய்யாவிடம் முகம் காட்டிப் பேசவில்லை. அப்பண்ணய்யா தானாகவே தரையில் அமர்ந்து, கொஞ்சம் ராகி தருமாறு கேட்டான். அவன் அவ்வாறு கேட்டவுடன் கவுடன் பளிச்சென்று ''உனக்கு ராகி தர்றேம்னு நாங்க எழுதியா கொடுத்திருக்கோம்? இப்பத்தான் உன் அம்மா வந்து வாங்கிட்டுப் போனா. இப்ப நீ வந்திருக்கியா? போய் வயல்லே வேலை செய். ரெண்டு படி ராகி கூலியாத் தர்றேன்'' என்று மிரட்டினான். அப்பண்ணய்யா எழுந்திருக்கவில்லை. ''பேசாம வெளியே போறயா? இல்லே கழுத்தைப் பிடிச்சுத் தள்ளட்டுமா?'' என்று மறுபடியும் மிரட்டினான்.

அப்பண்ணய்யாவுக்கு துக்கம் தொண்டையை அடைத்தது. அதைப் போன்ற வசைச் சொற்களை அவன் பலமுறை கேட்டிருந்தாலும், கழுத்தைப் பிடித்து தள்ளுவேன் என்ற மிரட்டலை அப்பொழுதுதான் முதல் தடவையாகக் கேட்டான். அவன் எழுந்து எதிரே வைத்திருந்த துணியையும், சிறிய கோணிப்பைகளையும் எடுத்துக் கொண்டு வெளியே வந்தான். பத்து தப்படி நடந்து சென்றவுடன் அவனுடைய கண்களில் நீர் பொங்கியது. அவன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே நடந்தான். கங்கம்மா எதிரே வந்தாள். பெரிதாக வளர்ந்து விட்ட மகன் கண்ணீர் சொரிந்து அழுவதைக் கண்டதும் அவளுடைய பெற்ற வயிறு பற்றி எரிந்தது. ''கண்ணே ஏண்டா அழறே?'' என்று அவள் கேட்டதும் அவனுடைய அழுகை அதிகமாயிற்று. நடந்த விஷயத்தைச் சொல்லி ''கல்லே கவுடன் இப்படிச் செய்யலாமா?'' என்று புலம்பினான்.

''வா, சிவன் கோவில் திண்ணையில் உக்காந்து பேசலாம்'' என்று சொல்லி கங்கம்மா மகனை அழைத்துக் கொண்டு போய்ச் சொன்னாள். ''தாயும் மகனும் தனித்தனியாக போய்க் கேட்டா அவங்க தரமுடியுமா? உனக்கெதுக்கு இந்தப் பாடு?''

''இல்லாட்டா பிழைக்கறது எப்பிடி?''

''அய்யோ! உன் தலையெழுத்து இப்பிடியாச்சே! என் வயித்திலே பொறந்து கஷ்டப் படணுமா? நீ ஊர் ஊராய்ப் போய் பிச்சையெடுத்துப் பிழைக்கணுமா? நீ கஷ்டப்பட்டு ராகியைக் கொண்டு போய்க் கொடுக்கறே. அந்த முண்டைக அதை வித்து நல்ல அரிசிச் சாப்பாடும் துவரம் பருப்பு ரசமும் சாப்பிடட்டும். இந்த லட்சனத்திலே காபி வேறே. அந்த முண்டை கட்டிக்க தினுசு தினுசாப் புடவை. நீ கட்டிக்க கந்தல் துணி. அவங்க ஏன் உன்னைக் கவனிக்கறுங்க?''

தாய் சொல்வதெல்லாம் உண்மை என்று அப்பண்ணய்யாவின் மனதில் பட்டது. மனைவி மக்கள் வருவதற்கு முன்பு அவன் யாசகம் கேட்க நேரடியாகப் போனதில்லை. வெற்றிலை புகையிலை போட்டுக் குதப்பிக் கொண்டு ஊருக்கு வெளியே அவன் திரிந்து கொண்டிருப்பான். கங்கம்மா வீடு வீடாகச் சென்று புடவையை விரித்துப் பொருள்களை வாங்கி வருவாள். அவள் கொண்டு வந்து சேர்க்கும் ராகி, அவரைப் பருப்பு, மிளகாய் ஆகியவற்றை அவன் மூட்டையாகக் கட்டி தூக்கிப் போவான். மூன்று மாதம் ஊர், ஊராகச் சுற்றிப் பொருள்களைச் சேகரித்தால் ஒன்பது மாதகாலம் சுகமாக இருக்கலாம்.

''அவளை உம் பொண்டாட்டின்னு வைச்சுக் காப்பாத்தறியா? அவ பொண்டாட்டி அல்ல. தேவடியா. அவ கூட அந்த மாமியாருக்கும் சோறு போடணும்.''

பிறகு அப்பண்ணய்யா வேறு எந்த வீட்டுக்கும் போகவில்லை. கங்கம்மா துணியில் வாங்கி வைத்திருந்ததை கோணிப்பையில் போட்டு அதைத் தூக்கிக் கொண்டு அவளுடன் புறப்பட்டான். ''அந்த மாதேவய்யா ஒரு தறுதலைப் பயல். அவன் உங்கிட்டே பொய்சத்தியம் வாங்கிட்டான். நீ ஒரு தடவை அவ வீட்டுக்குப் போனுலுங்கூட, அந்தப் பையன் உனக்குப் பெறந்தவன்னு எப்படித் தெரியும்?'' என்று கங்கம்மா சொல்லிக் கொண்டே நடந்தாள். அவன் எதுவும் பேசாமல் பின்னே நடந்தான். ''நீ என் வீட்டுக்கே வந்திடு. முன்னே இருந்த மாதிரி சொகமா இரு'' என்றாள் தாய்.

அப்பண்ணய்யா தாய் வீட்டுக்குப் போனுன். அவன் எந்த வேலையும் செய்யாமல் பேசாமல் படுத்துக்கிடந்தான். கங்கம்மா, வெங்காயமும், வெள்ளைப் பூண்டும் அரைத்துப் போட்டு சுடச்சுட அவரைப் பருப்பு குழம்பு செய்து, ராகிக்களியும் கிண்டினுள். அப்பண்ணய்யா களியைக் குழம்பில் போட்டுத் தோய்த்து ஆனந்

தமாகச் சாப்பிட்டான். ஒன்றரை வருடத்துக்கு முன்பு அவன் வாழ்ந்த இன்பமான நாட்களை எண்ணிப் பார்த்தான். அவனுடைய மனைவியோ அல்லது மாமியாரோ ஒரு நாள்கூட அவ்வளவு ருசியான களியையும் குழம்பையும் செய்து போட்டதில்லை.

அன்று அவன் மனைவியின் வீட்டிற்குப் போகவில்லை. அவன் வெளியூரிலிருந்து திரும்பி வரவில்லை என்று மனைவியும் மாமியாரும் நினைத்தார்கள். பிறகு அவன் தாயாருடன் தங்கி இருப்பது அவர்களுக்குத் தெரிய வந்தது. மூன்றும் நாள் மகனை கங்கம்மாவின் வீட்டிற்கு அனுப்பினார்கள். ஆஞ்சநேயர் கோவில் பூட்டிக் கிடந்தது. தாயும், மகனும் பதினைந்து நாட்கள் திரும்பி வரவில்லை. அப்பண்ணய்யாவின் வீட்டில் அரிசி இருக்கவில்லை. காபிப் பொடியும் தீர்ந்து போயிற்று. ஏரிக்கரையருகே கரும்பாலை போட்டிருந்தார்கள். வெல்லம் காய்ச்சும் பொழுது ஜயலட்சுமியும் ராமகிருஷ்ணனும் அங்கே போய் நின்று கொஞ்சம் வெல்லம் வாங்கி வருவதுண்டு. அவ்வாறு வாங்கிக் கொண்டு வந்த வெல்லம் கொஞ்சம் இருந்தது. ஆனால் வெல்லத்தை மட்டும் வைத்துக் கொண்டு காபி போட முடியுமா? அப்பண்ணய்யா தாயுடன் வசித்து வரும் செய்தி ஊர்க்காரர்களுக்குத் தெரிந்திருந்தது. ஆகையால் கடையில் கடன் கிடைக்கவில்லை. என்ன செய்வது? காபி குடிக்காமல் தலைவலி போகாது. வீட்டில் இருந்த ஒரு பெரிய வெள்ளிப் பாத்திரத்தை வட்டிக் கடைக்காரரிடம் அடகு வைத்தார்கள். இரண்டு ரூபாய் கிடைத்தது. ஒரு ரூபாய்க்கு எட்டுபடி அரிசி, இரண்டு அணுவுக்கு காபிப் பொடி, ஒரு அணுவுக்குப் பால் வாங்கி வந்தார்கள்.

அப்பண்ணய்யா தாயுடன் ஊர் திரும்பினான். ஆனால் மனைவியின் வீட்டிற்குப் போகவில்லை. சாதம்மா இப்போது நான்கு மாத கர்ப்பிணி. அவள் ராமகிருஷ்ணனை கங்கம்மாவின் வீட்டிற்கு அனுப்பினாள். ''அவன் வரமாட்டான். யாருகூடப் படுத்து உன்னைப் பெத்தாளோ அவனையே கூட்டிட்டு வந்து வீட்டிலே வைச்சுக்கச் சொல்லு'' என்று கங்கம்மா சொல்லி அனுப்பினாள்.

அவள் சொல்லியபடியே பையன் சாதம்மாவிடம் சொன்னான். அவளுக்குக் கோபம் வந்தது. தங்கம்மா ஆவேசமடைந்தாள். ''அம்மா, நீ ஒண்ணும் பேசாதே'' என்று சாதம்மா கூறியதைப் பொருட்படுத்தாமல், நேரே கோவிலுக்குப் போனாள். ''இவ்வளவு நாளா ஒண்ணும் சாப்பிடலை. பட்டினி கெடக்கறோம். பொண்டாட்டி கொழந்தைகளைக் காப்பாத்த கதியில்

லாதவன் எதுக்குக் கல்யாணம் செஞ்சுக்கணும்?'' என்று கேட்டாள்.

''தேவடியா கூட என் மகன் குடும்பம் நடத்தமாட்டான்'' என்று கங்கம்மா எதிரடி கொடுத்தாள்.

''என் பொண்ணு ஏன் அப்பிடி இருக்கா? நீ தான் அப்பிடி இருந்து உன் பையனைப் பெத்தெ. அதான் உன் கெட்ட புத்தி உன்னோட வருது,'' என்று தங்கம்மா சொல்லிக் கொண்டிருக்கும் போது சாதம்மா அங்கே வந்தாள், ''அம்மா நீ ஏன் பேசறே? அவங்க எதுவேணும்னாலும் பேசட்டும். அந்தப் பாவம் அவங்களையே பிடிக்கட்டும்'' என்றாள் அவள். உடனே கங்கம்மா ''அப்பண்ணய்யா, பாத்தியா! இந்த சண்டாளி பேசறதை. நான் பேசினா மட்டும் பாவமாயிடும். சொந்த புருஷன் இல்லாம புள்ளை பெத்துக்கறது மட்டும் பாவமில்லையாம்'' என்று கூறினாள். அப்பண்ணய்யா ஆவேசத்துடன் வெளியே வந்து, ''ஏண்டி, முண்டைகளா, உங்களைச் செருப்பாலே அடிப்பேன். உங்க யோக்கிதை எனக்குத் தெரியாதா?'' என்று கத்தினான். அவனைப் பார்த்து பயந்து சாதம்மா, தங்கம்மா இருவரும் அங்கிருந்து ஓடினார்கள். உடனே கங்கம்மா ''அங்கே என்னடா பாக்கறே? அவளோட தாலியைப் பிடுங்கிட்டு ஊரை விட்டு வெரட்டு. அது நீ கட்டின வீடுதான். மொதல்லே அதுக்கு நெருப்பு வை'' என்று இரைந்தாள்.

அப்பண்ணய்யா அவர்களைத் துரத்திக் கொண்டு ஓடினான். சாதம்மா அப்பொழுதுதான் வீட்டிற்குள் நுழைந்து கொண்டிருந்தாள். அப்பண்ணய்யா பாய்ந்து சென்று அவளுடைய கழுத்தில் இருந்த தாலியைப் பற்றி இழுத்தான். தாலிச்சரடு அறுந்து போய் கறுப்பு மணிகள் தரையின் மேல் உதிர்ந்தன. அவன் வெறியுடன் இழுத்ததால் தாலிக் கயிறு அவளது கழுத்தை அழுத்தி, கழுத்தில் ரத்தம் கசிவது போல் எரியத் தொடங்கியது. அவள் ''அய்யோ அம்மா'' என்று அலறிக் கொண்டே கீழே விழுந்தாள். அவன் நேரே உள்ளே ஓடினான். அடுப்பு எரிந்து கொண்டிருந்தது. அதிலிருந்து எரிந்து கொண்டிருக்கும் மட்டை ஒன்றை உருவியெடுத்து கீற்றுப் போட்டு வேய்ந்திருந்த மேல் கூரைக்கு நெருப்பிட்டான். கீற்று நன்கு பற்றி எரியத் தொடங்கியது. சற்று நேரத்தில் புகையும், சுவாலையும் உயரே எழும்பின. ஆரவாரத்தைக் கேட்டு, உயரே எழும்பிய புகையைக் கண்டு ஊர்க்காரர்கள் எல்லோரும் ஓடி வந்து அங்கே கும்பலாகக் கூடினர்.

''எங்க வீட்டுச் சாமானத்தை யாராவது வெளியே கொண்டு வந்து போடுங்க'' என்று தங்கம்மா அலறினாள். ஜனங்கள் உள்ளே புகுந்து கையில் அகப்பட்டதையெல்லாம் வெளியே கொண்டு வந்து போட்டார்கள். நெருப்பை அணைக்க முடிய வில்லை. அருகே தண்ணீரும் இருக்கவில்லை. ஒன்றரை வருடங் களுக்கு முன் அப்பண்ணய்யா மிகுந்த பாடுபட்டு, பலரிடம் உதவிகள் பெற்றுக் கட்டிய வீடு, அவனுலேயே அரை மணி நேரத்தில் எரிந்து சாம்பலாயிற்று. கடைசியில் நான்கு சுவர் களும், இரண்டு கல் தூண்களும் மட்டுமே கருகிப் போய் எஞ்சி நின்றன.

''பாத்தியாடி, நான் என்ன செஞ்சேன்'' என்று அப்பண் ணய்யா உறுமினான். ''உன் கை புழுத்துப் போகட்டும்'' என்று தங்கம்மா சாபம் இட்டாள். ''அம்மா, நீ பேசாம இரு'' என்று சற்று தூரத்தில் இருந்த சாதம்மா கூறினாள். ''அவ தாலி என் கையிலே இருக்கு. அவ தாலியைப் புடுங்கிட்டேன். இனி அவ என் பொண்டாட்டியும் அல்ல நான் அவளுக்குப் புருஷனும் அல்ல. அவ ஒரு தேவடியா'' என்று வெறியுடன் கத்திக் கொண்டே அப்பண்ணய்யா கிராமத்தின் தெருக்கள் எல்லாவற் றிலும் புகுந்து ஒருமுறை சுற்றி வந்தான்.

நெருப்பு பற்றிக் கொண்டவுடன் மற்ற ஜனங்களுடன் நஞ்சம்மாவும் ஓடிவந்தாள். அவளும் எரியும் வீட்டினுள் புகுந்து கைக்கு அகப்பட்ட பொருள்கள் எல்லாவற்றையும் வெளியே கொண்டு வந்து போட்டாள். எல்லாம் எரிந்து முடிந்த பிறகு சாதம்மா, நஞ்சம்மாவிடம் வந்து அவளுடைய கையைப் பற்றிய படி ''அக்கா, நீங்கதான் எங்களுக்கு கதி என்று கெஞ்சினாள். அவர்களுக்கு என்ன உதவி செய்வது என்று அவளுக்குத் தெரிய வில்லை. ''தான் எந்த விதத்திலே உதவி செய்யனும். நீயே சொல்லு'' என்றாள் நஞ்சம்மா.

''இப்ப ஒண்ணு ரெண்டு நாளைக்கு உங்க வீட்டிலே வந்து தங்கிக்கறோம். அப்புறம் ஏதாவது செய்யலாம்'' என்றாள் சாதம்மா. அங்கே நின்று கொண்டிருந்த சிலரிடம் நஞ்சம்மா, ''இந்த சாமானத்தையெல்லாம் என் வீட்டிலே கொண்டு வந்து போடுங்க'' என்று கூறி தானும் சில பொருள்களை எடுத்துக் கொண்டாள். எல்லாப் பொருட்களும் நஞ்சம்மாவின் வீட்டில் ஒரு மூலையில் குவிந்தன. சாதம்மாவின் வீட்டுக்காரர்கள் ராகி சாப்பிடமாட்டார்களாதலால், பண்டிகைக்கு வைத்திருந்த அரிசியை எடுத்து நீரில் ஊறப் போட்டாள். வீட்டில் துவரம்

பருப்பு இருக்கவில்லை. ஆகையால் பார்வதியிடம் நாலணு கொடுத்துப் பருப்பு வாங்கி வர அனுப்பினுள்.

சாதம்மா வீட்டுக்காரர்கள் மீண்டும் நஞ்சம்மா வீட்டுக்குப் போனதைக் கேள்விப்பட்ட கங்கம்மா கலவரமடைந்தாள். ''அவ தந்திரக்கார முண்டை. மறுபடியும் ஏதாச்சும் செஞ்சு என் கொழந்தையை எங்கிட்டேயிருந்து பிரிச்சுடுவா'' என்று அவள் நினைத்தாள். அதைத் தடுக்க ஏதாவது செய்ய வேண்டுமென்று எண்ணி அண்ணு ஜோசியரின் வீட்டுக்குப் போனுள். ''தெரியுமா சேதி ஜோசியரே?'' என்று கேட்டாள். ''என்ன எனக்குத் தெரியாதே'' என்ருர் ஜோசியர். அவளுடைய வாயிலிருந்தே விஷயத்தைக் கிளறி வரவழைக்க வேண்டுமென்பது அவருடைய ஆசை. தன் மகன், அவன் மனைவியின் தாலியைப் பறித்த விஷயத்தை மிகச் சுவையாகக் கூறினுள். ''அவ தாலியைப் புடுங்கியாச்சு. தாலி இல்லாத அவளை எப்படி வீட்டிலே சேத்துக்கலாம்? பஞ்சாயத்தைக் கூட்டி அபராதம் போடக்கூடாதா?'' என்று கடைசியில் கேட்டாள். அண்ணு ஜோசியருக்கு தர்ம சாத்திரத்தைப் பற்றிய ஒரு புதிய ''பாயிண்ட்டு'' கிடைத்து விட்டது. எப்படியாவது நஞ்சம்மாவை இருபத்தைந்து ரூபாய் அபராதம் கட்ட வைத்துவிட வேண்டுமென்று அவர் மனம் நினைத்தது. கணக்குப்பிள்ளை வேலையின் சம்பளத்தில் பங்கு தரவேண்டுமென்று' நியாயம் சொல்லப் போன பொழுது நஞ்சம்மா அவர்களின் முகத்தில் அடித்தது போல் பேசியதும், ஷேக்தாரிடம் சென்ற போது அவர் தன்னை விரட்டியடித்ததும் அவர் நினைவில் தோன்றின. முதலில் ஜோசியர் ஒருகணம் தயங்கினுர், பின் பழிக்குப் பழி வாங்க இதுவே நல்ல சந்தர்ப்பம் என்று நினைத்து அய்யா சாஸ்திரிகளின் வீட்டுக்குப் புறப்பட்டார். அய்யா சாஸ்திரிகளுக்கு வயதாகி விட்டபோதிலும் அவரும் சந்தர்ப்பத்தை நழுவ விடக்கூடியவர் அல்ல. பிராமண ஜாதியின் ஆசார விஷயங்களில் அலட்சியமாக இருக்க முடியாதே! பிராமண நெறியைக் காப்பாற்றியாக வேண்டுமே!

அவர் வேறு நான்கு பிராமண ஆசார சீலர்களை அழைத்துக் கொண்டு நஞ்சம்மாவின் வீட்டுக்குப் புறப்பட்டார். அவர்களுடன் கங்கம்மாவும், அப்பண்ணய்யாவும் கிளம்பினுர்கள். அவர்கள் எல்லோரும் நியாயம் பேச வந்திருக்கிருர்கள் என்று நஞ்சம்மாவுக்கு உடனே புரியவில்லை. முதலில் அண்ணு ஜோசியரே பேச்சை ஆரம்பித்தார். ''தாலி இல்லாதவ விதவைக்குச் சமம். ஆனு அவ புருசன் உயிரோடு இருக்கான். ஆகையினுலே அவ உயிரோடு இருந்தாலும் செத்தவளுக்குச் சமம். அவளைப்

போல இருக்கறவங்களைப் பாக்கவே கூடாது. அப்படியிருக்கறப்ப அவளை வீட்லே வைச்சுக்கிட்டிருக்கிறது பெரிய பாவம். அதுக்குப் பரிகாரமா அபராதம் செலுத்தணும்.''

இதைக் கேட்டதும் சென்னிகராயர் பதறிப் போனார். ''நான் போய் கூட்டிகிட்டு வரலே. இவதான் கூட்டிவந்தா. வேணுமின்னா இப்பவே நான் கழுத்தைப் பிடுச்சு வெளியே தள்ளறேன்.''

''சரி அப்படியே செய்யுங்க. ஆனா இதுவரை இருந்ததுக்கு அபராதம் கட்டணும்.''

''எவ்வளவு?''

''எவ்வளவு கட்டணும்? சித்தப்பா'' என்று அண்ணா ஜோசியர் அய்யா சாஸ்திரிகளைப் பார்த்துக் கேட்டார். அவர் ''இவங்க பாவம், ஏழைங்க. இருபத்தஞ்சு ரூபாய் கொடுத்தாப் போதும்'' என்றார்.

''அவ்வளவு ரூபாய் கேட்டா நாங்க என்ன செய்யறது? கொஞ்சம் கொறைச்சு சொல்லுங்க சாஸ்திரிகளே'' என்றார் சென்னிகராயர்.

''இந்தப் பணம் எங்க அப்பன் வீட்டுக்கா போகுது? இது சிருங்கேரி மடத்துக்குப் போற பணம்.''

உடனே சென்னிகராயர் நஞ்சம்மாவை நோக்கி ''உனக்கு எதுக்கடி இந்தப் பெரிய மனுஷி வேலே. யார் இவங்களைக் கூட்டி வரச் சொன்னது? இந்தச் சனியன்களை வீட்டை விட்டு வெரட்டறியா, இல்லையா?'' என்று அதட்டினார்.

அதுவரை சமையலறையின் உள்ளே கதவோரமாக நின்று இந்தப் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த தங்கம்மா தலையை வெளியே நீட்டி ''இதுவரைக்கும் வேண்டியவங்களா இருந்த நீங்க ஏன் இப்பிடிச் செய்யறீங்க ஜோசியரே? நாங்க உங்களுக்கு என்ன கெடுதி செஞ்சோம்?'' என்றாள்.

''உங்ககிட்டே எங்களுக்கு எந்த விரோதமும் கெடையாது. இது தர்ம சாஸ்திர விஷயம். ஆசார விஷயம். நாங்க இதைக் கண்டும் காணாம இருந்துட்டா சிருங்கேரி மடத்துக்காரங்க சும்மா இருப்பாங்களா?'' என்றார் அண்ணா ஜோசியர்.

அதுவரை பேசாமல் நின்றிருந்த நஞ்சம்மா பேசினாள். ''தாலியைப் பிடுங்கினது யாரு? அப்பண்ணய்யாதான். அவர் அப்பிடிச் செய்யலாம்னு உங்க சாஸ்திரத்திலே இருக்குதோ? அபராதம் போடணும்னா அவருக்குப் போடுங்க. வீடு எரிஞ்சு போய் நடுத்தெருவிலே பொம்பளைக நிக்கறப்ப அவங்களுக்கு

உதவி செய்யக் கூடாதுன்னு எந்த சாஸ்திரத்திலே எழுதி இருக்கு?''

இரண்டு தர்மக் காவலர்களும் பேசத் தெரியாமல் நின்றார்கள். தந்திரக்கார மருமகள் மகனின் மீதே விஷயத்தைத் திருப்பி விட்டதைப் பார்த்ததும் கங்கம்மாவுக்குப் ''பகீர்'' என்றது. ''அவன் கட்டின தாலி. அதனாலே அவன்......'' என்று சாஸ்திரிகள் பேச ஆரம்பித்தார். உடனே அண்ணா ஜோசியர், ''பேசாம இருங்க'' என்று அவரிடம் கூறிவிட்டு ''நீ கட்டின தாலி எனக்கு வேண்டாம்னு சொல்லி அவளே தாலியை அறுத்துப் போட்டாளாம், அப்பிடித் தானே கங்கம்மா?'' என்று கங்கம்மாவைப் பார்த்துக் கேட்டார்.

''உம், உம் இந்தத் தாலி வேண்டாம்னு அந்த முண்டையே அறுத்துப் போட்டா'' என்றாள் கங்கம்மா.

''ஏன் இப்பிடி அநியாயமாச் சொல்றீங்க? நீங்க சத்தியம் செஞ்சு சொல்வீங்களா?'' என்று தங்கம்மா கேட்டதும் ''ஊர்க்காரங்க எல்லோரும் பாத்த சங்கதிக்கு சத்தியம் செய்யணுமா, ராட்சசி?'' என்று கங்கம்மா சொன்னாள்.

தங்களுடைய சார்பில் பேசுவதற்கு ஒரு ஆண்பிள்ளை இல்லாவிட்டால் சரிப்படாது என்பதை உணர்ந்து கொண்ட நஞ்சம்மா, ''ஜோசியரே, நீங்க நேரடியாய் பாக்காத சங்கதியைப் பத்தி ஏன் பேசறீங்க? மத்தவங்க குடும்பத்திலே தகராறு கௌப்பி விட்டு வேடிக்கை பாக்கறதுதான் உங்க வேலையா? இது மரியாதைக்காரங்க செய்யற வேலை அல்ல. எங்க வீட்டு வெவகாரத்துக்கு உங்களை யார் கூப்பிட்டது? பேசாம எந்திரிச்சுப் போங்க,'' என்றாள்.

''பாத்திங்களா, இந்த முண்டையோட பேச்சை?'' என்று கங்கம்மா சொல்லிக் கொண்டிருந்தாள். அதுவரை சமையலறைக் கதவோரமாக பேசாமல் நின்றிருந்த சாதம்மா தன்னருகே இருந்த துடைப்பத்தைக் கையில் எடுத்து, ''இந்த வீடு இந்த முண்டையாலேதான் கெட்டுப் போச்சு'' என்று சொல்லிக் கொண்டே வெளியே வந்து கங்கம்மாவின் மீது துடைப்பத்தை எறிந்தாள். ஒரு கணம் கங்கம்மா கதி கலங்கி விட்டாள். அப்பண்ணய்யா பதறியபடி எழுந்தான். இந்த திடீர்த் திருப்பத்தைக் கண்டு நஞ்சம்மா பதற்றமடைந்து சாதம்மா, தங்கம்மா ஆகிய இருவரையும் சமையலறைக்குள் அனுப்பிக் கதவை மூடினாள். பிறகு கதவின் குறுக்கே நின்று மற்றவர்களைப் பார்த்து, ''நீங்க பேசாம வீட்டை விட்டு வெளியே போறீங்களா, இல்லியா?'' என்றாள்.

சாஸ்திரிகளும், ஜோசியரும் கிளம்பினர். இந்தப் பேச்சில் தங்களுக்கு எந்தவிதத் தொடர்பும் கிடையாது என்பதைப் போல் மற்ற பிராமணர்களும் புறப்பட்டனர். கங்கம்மாவுக்குப் பேச்சு எழவில்லை. அவள் மூலையில் கிடந்த ஒரு உலக்கையைக் கையில் எடுத்துக் கொண்டு சமையலறைக் கதவை நெருங்கினாள். நஞ்சம்மா அவளை வழி மறித்து, ''இது கணக்குப்பிள்ளை வீடு. ஏதாவது கலாட்டா செஞ்சா ஷேக்தாருக்குச் சொல்லி அனுப்பி போலீஸ்காரங்களை வரச் சொல்வேன்'' என்று மிரட்டினாள். போலீஸ் என்ற சொல்லைக் கேட்டதும் கங்கம்மா துணுக்குற்றாள். அப்பண்ணய்யாவுக்கு வியர்த்துக் கொட்டியது. ''வாம்மா, இந்த ஓடுகாலிக வெவகாரமே வேண்டாம்'' என்று சொல்லி அவளுடைய கையிலிருந்த உலக்கையைப் பிடுங்கிக் கீழே வைத்து விட்டு வெளியே சென்றான். கங்கம்மா கொஞ்ச நேரம் திட்டி விட்டு அங்கிருந்து புறப்பட்டாள்.

சோறும் ரசமும் தயாராக இருந்தாலும் சாதம்மாவும், தங்கம்மாவும் சாப்பிடவில்லை. பிழைப்புக்கு என்ன வழி என்ற கவலை அவர்களை அரித்துக் கொண்டிருந்தது, அன்று மதியத்திலிருந்து நடந்த நிகழ்ச்சிகள் அவர்களைக் கலக்கி விட்டிருந்தன.

## 5

இரவு முழுதும் தாயும், மகளும் பேசிக்கொண்டிருந்தனர். காலையில் எழுந்ததும் தங்கம்மா நஞ்சம்மாவிடம், ''இனிமே இந்த ஊர்லே இருந்து என்ன சுகம்? எங்க ஊர்லே சொந்த வீடு ஒண்ணு இருந்தது. இங்கே வர்றதுக்கு ஆறு மாசம் முன்னாடி அதை வித்துட்டோம். புரோகிதத் தொழில் இருக்கு. ராமகிருஷ்ணனுக்கு எட்டு வயசாச்சு. ஏதோ ஒரு புண்ணியவான் தயவிலே அவனுக்குப் பூணூல் போட்டு, நவகிரகசாந்தி, புண்யாவசனம், அப்பிடின்னு ஒண்ணு, ரெண்டு விஷயம் சொல்லிக் கொடுத்தா எப்படியோ பெழைச்சுக்குவோம். யாராவது ஒரு தர்மவான்கிட்டே கேட்டு ஒரு சின்ன குடிசை கட்டி அதிலே இருந்துக்கறோம்'' என்றாள்.

அவர்களுக்கு எந்தவித ஆலோசனையும் சொல்லக்கூடிய நிலைமையில் நஞ்சம்மா இருக்கவில்லை. கஷ்டப்பட்டு உழைத்து, கிடைத்ததைச் சாப்பிட்டு பிழைத்துக் கொள்ளும் வழி அவர்களுக்குத் தெரியாது. அதைத் தெரிந்து கொள்வதற்கும் அவர்கள் முயற்சி செய்யவில்லை. அவர்கள் அப்படி முயற்சி செய்திருந்தால் அப்பண்ணய்யா அப்படிச் செய்திருக்க மாட்டானோ என்னவோ!

வெளியூருக்குச் சென்றாலும் கஷ்டம்தான். அவர்கள் புறப்படு வதற்கு அவள் சம்மதம் தெரிவித்தாள். அவர்கள் புறப்படத் துடித்துக் கொண்டிருந்தனர். சாதம்மா தன் தோடுகளை விற்று இருபத்தைந்து ரூபாய் கொண்டு வந்தாள். அந்தப் பணம் அவர்களுடைய வழிச் செலவுக்குப் போதும். நஞ்சம்மா பாயசம் வைத்துச் சாப்பாடு போட்டாள். அவர்கள் புறப்படும் பொழுது சாதம்மாவின் நெற்றியிலும், ஜயலட்சுமியின் நெற்றி யிலும் நஞ்சம்மா குங்குமம் இட்டாள். வண்டி பூட்டிக் கொண்டு அவர்களுடன் நஞ்சம்மாவும் வண்டியில் சென்றாள். பஸ் செல்லும் சாலையை அடைந்ததும் வண்டியிலிருந்து அவர்கள் இறங்கினார் கள். பஸ் வருவதற்கு இன்னும் சற்று நேரம் இருந்தது. அப் பொழுது சாதம்மா நஞ்சம்மாவிடம், ''அக்கா! நாம ரெண்டு பேரும் இந்த வீட்டிலே மருமகளாப் புகுந்தோம். என் தலை யெழுத்து இப்படி ஆச்சு. நீங்க எப்படியோ சமாளிக்கிறீங்க'' என்று சொல்லிக் கண்ணீர் வடித்தாள்.

நஞ்சம்மா பதில் சொல்லவில்லை. திருமணமான பிறகு அந்த ஊருக்கு வந்ததிலிருந்து அதுவரை நடந்த நிகழ்ச்சிகள் அவள் மனதில் நிழலாடின. ஏன் பிறந்தோம். ஏன் இந்த வீட்டிற்கு வந்து சேர்ந்தோம் என்ற கேள்விகளும் எழுந்தன. பஸ் வந்ததும், அதன் மேல் பகுதியில் சாமான்களை ஏற்றிவிட்டு அவர்கள் உள்ளே அமர்ந்தனர். ''எங்க ஊருக்கு ஒரு தடவை வாங்க'' என்று அவர்கள் கூறிய போதிலும், இனி மேற்கொண்டு சந்திக்க முடியும் என்னும் நம்பிக்கை அவர்களுக்கு இருக்கவில்லை.

நஞ்சம்மா வண்டியில் வீடு திரும்பினாள். சற்று நேரத்தில் சூரப்ப வாத்தியாரின் மனைவி ருக்கம்மா வந்து பேசிக்கொண் டிருந்தாள். ''உங்களை சாதியிலேருந்து ஒதுக்கி வைக்கணும்னு அண்ணா ஜோசியர் சிருங்கேரி மடத்துக்கு எழுதி இருக்காராம்'' என்று அவள் நஞ்சம்மாவிடம் சொன்னாள்.

''எழுதி என்ன செய்யப் போறாங்களாம்?''

''அய்யோ, உங்களுக்குத் தெரியாதா? உங்க வீட்டுக்கு யாரும் வரக் கூடாது, போகக் கூடாது. உங்க வீட்டுக்கு எந்த வீட்டுக்காராளும் தண்ணி, நெருப்பு தரக்கூடாது. உங்க வீட்டுத் தண்ணியை யாரும் தொடக் கூடாதுன்னு மடத்துக் காரங்க உத்தரவு போடுவாங்க. சாதிக்காரங்க ஒதுக்கி வைச்சா எப்படிப் பொழைக்கறது?''

இதைக் கேட்டு நஞ்சம்மா சற்றுக் கலவரமடைந்தாள். ஆனால் ஜாதிக்காரர்கள் அதுவரை செய்திருக்கக் கூடிய உதவி

ானே? இனிமேல் என்ன உதவி செய்யப் போகிறார்கள்? எதுவும் ்லே. அவர்கள் வராவிட்டால் அதுவும் நல்லதுதான் என்று ைத்து அவள் ஒன்றும் பேசவில்லை.

பதினைந்து நாட்களுக்குப் பிறகு, அண்ணா ஜோசியரும், ப்யா சாஸ்திரிகளும் நஞ்சம்மாவின் வீட்டிற்கு வந்து அவளிடம் ந கடிதத்தைக் கொடுத்தனர். அந்தக் கடிதத்தில் சிருங்கேரி டத்தின் தலைமை அதிகாரி கையொப்பமிட்டிருந்தார். ''கண ்னே வேண்டாமென்று கூறித் தன் தாலியை அறுத்தெறிந்த ந பெண்ணை வீட்டுக்குள் அழைத்து வந்து வைத்துக் கொண் தற்காக கணக்குப்பிள்ளை சென்னிகராயரின் குடும்பம் ஒதுக்கி வக்கப்படுகிறது. ஆகையால் மடத்துக்கு ரூபாய் நூற்று ஒன்று பராதமாகச் செலுத்திய பின், உள்ளூர் புரோகிதரைக் காண்டு தர்ப்பைப் புல்லினால் நாக்கைச் சுட்டுக் கொள்ள வண்டும். அதுவரை ஜாதிக்காரர்கள் எவரும் அந்தக் குடும் த்துடன் நீர், நெருப்பு முதலிய எந்தவிதத் தொடர்பும் வத்துக் கொள்ளக் கூடாது. தவறினால், சம்பந்தப்பட்ட பர்களும் ஒதுக்கி வைக்கப்படுவார்கள் என்று மடம் அறிவிக் றது'' என்று எழுதி மடத்தின் முத்திரையும் இடப்பட்டிருந்தது.

''என்ன செய்யப் போறே?'' என்று அய்யா சாஸ்திரிகள் கட்டார்.

''இது வரை ராமநவமிக்குப் பானகமும், கோசமல்லியும் சஞ்சு உங்களுக்குக் கொடுத்துட்டிருந்தேன். இனி அப்பிடிச் சய்ய முடியாது.''

''செஞ்சாலும் வரமாட்டோம்''

''உங்க இஷ்டம்''

''ராஜாவைப் பகைச்சுகிட்டாலும், குருவைப் பகைச்சுகிட்டு பாழ முடியாது, தெரிஞ்சுதா?'' என்று சொல்லிவிட்டு, இரண்டு 'பர்களும் புறப்பட்டார்கள். அவளுக்கு இந்த விஷயம் பெரிய அவமானமாகப் பட்டது. ஆனால் அவள் பயப்படவில்லை. மறுநாள் அவள் ஒரு கடிதம் எழுதினாள். நடந்த நிகழ்ச்சிகளை விவரித்து, ாய் சொல்லைக் கேட்டுக் கணவனே மனைவியின் தாலியைப் பிடுங்கியதாகவும், கதியற்ற பெண்களை ஒருநாள் வீட்டில் தங்க வைத்துக் காப்பாற்றி மறுநாள் ஊருக்கு அனுப்பி விட்டதாகவும், னவே தவறு எதுவும் நடந்து விடவில்லையென்றும் எழுதி சென் னிகராயரிடம் கையொப்பம் பெற்றாள். திங்கட்கிழமை தபால் காரனிடம் ஒரு உறையை வாங்கி, அதில் கடிதத்தை வைத்து,

முகவரியும் எழுதிக் கொடுத்தாள். ஆனால் எந்தப் பதிலும் வரவில்லை.

மார்கழி மாதத்தில் நஞ்சம்மாவின் மாமனாருடைய திதி செய்ய வேண்டும். அதுவரை மூத்த மகனான சென்னிகராயர் வீட்டிலேயே அது நடந்து வந்தது. அதில் அப்பண்ணய்யா கலந்து கொண்டு சாப்பிட்டுச் செல்வது வழக்கம். செலவில் அவன் பங்கு கொடுக்கும் வழக்கம் கிடையாது. அந்த வருடம் சென்னிகராயரின் வீட்டில் திதி செய்ய முடியாது என்று இரண்டு புரோகிதர்களும் சொல்லி விட்டார்கள். ஜாதிக்காரர்கள் ஒதுக்கி வைத்து விட்டதனால் இப்படி ஆயிற்றே என்று சென்னிக ராயருக்கு வருத்தம். ''ஏண்டி முண்டை, அவங்களைக் கூட் டிட்டு வந்தே? உன்னால் தானே இப்பிடியெல்லாம் வந்தது?'' என்று மனைவியிடம் சீறினார். அவள் பதில் சொல்லவில்லை.

அந்த வருடம் திதியை கங்கம்மா வசிக்கும் கோவில் வீட்டி லேயே செய்து விடலாம் என்று புரோகிதர்களான அண்ணா ஜோசியரும் அய்யா சாஸ்திரிகளும் முடிவு செயதனர். அப் பண்ணய்யாவே சடங்கை செய்ய வேண்டும் என்றும் தீர்மானித் தனர். வீட்டு எஜமானன் தான் திதிச் சடங்கை செய்வது வழக்கம். சடங்கைச் செய்வதன் மூலம் தான் ஒரு பெரிய மனிதனாகப் போகிறோம் என்று நினைத்து அப்பண்ணய்யா பெரு மிதம் அடைந்தான். தன் வீட்டில் திதி செய்தால் திதிக்காக செய்யப்படும் வடை, ரவாலட்டு முதலியவைகளைப் பல நாட்கள் சாப்பிடலாம் என்று மற்றொரு விதத்தில் அவனுக்கு சந்தோஷம். ஆனால் அவன்தான் செலவு செய்ய வேண்டும் என்கிற விஷயம் அவனுடைய அறிவுக்கு எட்டவில்லை.

கங்கம்மா வேறுவிதமாக யோசனை செய்தாள். பதினைந்து, பதினாறு ரூபாயை எப்படியாவது திரட்டிவிடலாம். கிராமம் கிராமமாகச் சென்று திதிச் செலவுக்காக யாசகம் கேட்டால் ஒவ்வொரு வீட்டிலும் நான்கைந்து அணா, ஒன்றிரண்டு தேங்காய், எள், உளுந்துப் பருப்பு, அவரைப் பருப்பு ஆகியவை கிடைக்கும். அவற்றை வைத்துக் கொண்டு மூன்று மாதங்கள் சௌகரியமாக ஓட்டி விடலாம் ஆனால் மூத்த மகன் உயிரோடிருக்கும் பொழுது, இளையவன் பிண்டம் வைத்தால் அது சொர்க்கத்தில் இருக்கும் கணவருக்குப் போய்ச் சேருமா? கணக்குப்பிள்ளை வேலை மூத்த மகனுக்குத்தான் என்று அரசாங்கச் சட்டம் இருப்பது போல் இதற்கும் சட்டம் இருக்குமே! மூத்த மகன் செய்யாவிட்டால் கணவர் பட்டினி கிடக்க நேரிடுமே! ஏதாவது வழி செய்தாக

வேண்டும். தவறு செய்தது மருமகள்தான், மகன் அல்ல என்பது அவளுடைய எண்ணம்.

கங்கம்மாவின் கருத்தை இரண்டு புரோகிதர்களும் ஏற்றுக் கொண்டனர். சென்னிகராயரிடமிருந்து சொற்பத் தொகையை அபராதமாக பெற்றுக் கொண்டு அவரை மட்டும் ஜாதியில் சேர்த்துக் கொள்வதென்றும், மனைவியை விலக்கியே வைப்ப தென்றும் முடிவு செய்தார்கள். ஆனால் சென்னிகராயரிடம் பணம் ஏது? இரண்டு புரோகிதர்களும் தீவிரமாக ஆலோசனை செய்தார்கள். அண்ணு ஜோசியர் ஒன்பது ரூபாய், எட்டு அணு வரி கட்டக் கூடியவர். அய்யா சாஸ்திரிகள் செலுத்த வேண்டிய வரி ஆறு ரூபாய், மூன்று அணு, ஐந்து பைசா. அந்த இரண்டு பேரிடமிருந்தும் வரி வசூலிக்கப்பட்டு விட்டதாக சென்னிகராயர் ரசீது எழுதிக் கொடுத்தார். அந்தப் பணத்தை அவருடைய சம்பளத்தில் பிடித்தம் செய்ய வசதி இருந்தது. இவ்வாறு, திதி செய்யும் உரிமையை சென்னிகராயர் மறுபடியும் பெற்றார். அவர் மட்டும் தாயாரின் வீட்டிற்குச் சென்று திதி செய்வது என்றும் மனைவி, குழந்தைகள் வரக்கூடாது என்றும் தீர்மானித்தார்கள்.

சடங்கில் சாப்பாடு சாப்பிடுவதற்காக அண்ணு ஜோசியர் காலையிலிருந்து ஏதும் சாப்பிடாமல் பட்டினியாக இருந்தார். மனைவி சமையலறையில் வேலை செய்து கொண்டிருந்தாள். பட்டினி கிடந்த ஜோசியருக்கு மாமியார் வீட்டில் ஏதோ ஒரு நாள் சாப்பிட்ட நெய்ப்பூரியின் நினைவு வந்தது. அவர் மனைவியை அழைத்து. ''உன் அம்மா ஒரு தடவை நெய்யில் பூரி பொரிச்சுக் கொடுத்தாங்க பார், அந்த ருசியே ருசி. நீ ஒரு தடவை கூட அப்பிடிச் செஞ்சதில்லையே?'' என்றார்.

''வெண்ணெய் கொண்டு வந்து கொடுங்க. தாராளமா செஞ்சு தர்றேன்.''

''வெண்ணெய் ஒரு சேர் என்ன விலை தெரியுமா? எங்கிருந்து கொண்டு வர்றது?''

''அப்பிடியானு வாயை மூடிட்டு பேசாம இருங்க''

ஜோசியரின் முகம் வாடி விட்டது. ஆனால் உடனே ஒரு தந்திரம் அவருடைய மனதில் பளிச்சிட்டது. ''இன்னிக்கு வெண்ணெய் காச்சி புது நெய்யிலே செஞ்ச பலகாரம் சாப் பிடறேன் பார்'' என்று மனைவியிடம் சவால் விட்டார். ''ஆமா, உங்களுக்குத்தான் செஞ்சு கொடுக்கறுங்க! வேறே வேலை இல்லை!'' என்று முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

''பாக்கலாமா?'' என்று கூறி ''டேய், நரசிம்மா, உடனே ஓடிப் போய் அப்பண்ணய்யாவைக் கூப்பிடு'' என்று மகனிடம் சொன்னார் ஜோசியர்.

அப்பண்ணய்யா ஈர வேட்டியை உடுத்துக் கொண்டு சமையலறையில் தாயாருக்கு உதவி செய்து கொண்டிருந்தான். அவன் திறந்த மார்புடன் ஓடி வந்தான். ''பார், அப்பண்ணய்யா! எனக்கு இன்னிக்கு உடம்பு சரியில்லே. சளி, காய்ச்சல். அதனாலே சாப்பிட வரமுடியாது.''

''இப்ப இப்பிடிச் சொன்னா எப்பிடி? இனி யாரைப் போய் கூட்டிட்டு வர்றது?''

''உன் அம்மாவைக் கூப்பிடு, சொல்றேன்.'' கங்கம்மா ஓடி வந்தாள். ''என் புருஷனைப் பட்டினி போட்டா எப்பிடி? நீங்க சாப்பிடாட்டா சொர்க்கத்திலே என் புருஷனுக்கும் சாப்பாடு கெடைக்காதே! தயவு செய்யுங்க'' என்று சொல்லி தூரத்திலேயே விழுந்து கும்பிட்டாள்.

''நீ இப்பிடிச் சொல்லறப்ப நான் முடியாதுன்னு எப்பிடிச் சொல்றது? சாப்பாட்டு இலை முன்னாடி உக்காந்தா அப்புறம் பலகாரம் சாப்பிடாம இருந்தா சாஸ்திரப்படி தப்பு. ஆகையாலே ஒண்ணு செய். எல்லாப் பலகாரத்தையும் நெய்யிலே செஞ்சிடு. நான் சாப்பிடறேன்''

''இப்ப அவ்வளவு நெய் எங்கே கெடைக்கும்?''

''பணம் கொண்டு வா. நான் கவுடர் கிட்டே போய் வாங்கி வர்றேன். நான் இன்னும் குளிக்கலே''

கங்கம்மா வீட்டுக்குப் போனாள். ஒரு பிராமணருக்கு மட்டும் நெய்ப் பலகாரமும், மற்றவர்க்கு எண்ணெய்ப் பலகாரமும் போட முடியாது. வீட்டுக்காரர்கள் எண்ணெய்ப் பலகாரம் சாப்பிடலாம், இரண்டு பிராமணர்களுக்கு மட்டும் பூரி, வடை, அப்பம் ஆகியவற்றை நெய்யில் செய்ய வேண்டும். அதற்கு ஒன்றரைப் படி நெய் வேண்டும். அதாவது, ஏழெட்டு சேர் வெண்ணெய் வேண்டும். வீட்டில் இரண்டு ரூபாயை விடக் குறைவாகத் தான் பணம் இருந்தது. வீட்டில் ஒரு வெள்ளிப் பஞ்சபாத்திரம் இருந்தது. அதை அப்பண்ணய்யாவிடம் கொடுத்து அனுப்பினாள். அவன் அதை வட்டிக் கடைக்காரரிடம் அடகு வைக்க எடுத்துச் சென்றவுடன் வட்டிக் கடைக்காரர் பாத்திரத்தை எடை போட்டுப் பார்த்து இரண்டு ரூபாய் கொடுத்தார். நாளொன்றுக்கு இரண்டு காசு வட்டி.

ஜோசியர் புது நெய்யில் செய்த பலகாரங்களைச் சுவைத்துச் சாப்பிட்டு விட்டு, தன் குழந்தைகளுக்கு என்று சொல்லிக் கொஞ்சம் பலகாரங்களை இலையில் கட்டி எடுத்து வந்து அதைத் தன் மனைவியிடம் கொடுத்து, ''நீயும் சாப்பிடு'' என்றார்.

'' அடுத்த வீட்டுத் திதிப் பலகாரத்தை நான் சாப்பிடமாட்டேன்'' என்றாள் மனைவி.

'' மத்தவங்க வீட்டுத் திதிப் பலகாரத்தை சாப்பிட்டா உன்னை எதுவும் பிடிச்சுக்காது''

'' இங்கே பாருங்க, நான் லௌகீக வீட்டிலே பெறந்தவ. ஆனாலும் எனக்கு சாஸ்திரம், சடங்குன்னு பயம். நீங்க புரோகிதரானாலும் உங்களுக்குப் பயம் கெடையாது.'' என்று சொல்லி சிரித்தாள். தனது தைரியத்தைப் பற்றி ஜோசியர் பெருமிதம் கொண்டார்.

6

பிராம்மணர்கள் சாப்பிட்டு முடித்த பிறகு சென்னிகராயர் இலையின் முன்னே அமர்ந்து வயிறாரச் சாப்பிட்டார். பிறகு சட்டை அணிந்து கொண்டு ஏரிக்கரையின் பக்கம் நடந்தார். அப்பொழுது பிற்பகல் நாலரை மணி ஆகியிருந்தது. அவர் மத்தியானம் குளித்ததிலிருந்து புகையிலை போடவில்லை. ஆஞ்சநேயர் கோவிலில் புகையிலை இருந்தது. ஆனால் வெற்றிலை, பாக்கு இருக்கவில்லை. காசு கொடுத்து வாங்கலாமென்றால் சட்டைப் பையில் ஒரு தம்பிடி கூட இருக்கவில்லை. ஏரிக்கரையிலிருந்து ஊருக்கு வரும் வழியிலேயே நரசியின் கடை இருந்தது. மூன்று அங்கண அளவில் அவளுடைய ஓட்டு வீடு அமைந்திருந்தது. முன்புறம் கடை. அதற்குப் பின்புறம் கடைச்சாமான்களை வைக்கும் இடம். கடைசியில் சமையலறை. அங்குள்ள பரண் மீதும் கடைச் சாமான்களை வைப்பதுண்டாம்.

சென்னிகராயர் வந்து கொண்டிருந்த பொழுது அவள் கடையில் உட்கார்ந்து கொண்டிருந்தாள். அவளுக்கு எதிரே வெற்றிலை அடுக்கு இருந்தது. அவர் நேரே கதவருகே சென்று '' நரசம்மா, எனக்கு ரெண்டு வெத்திலை, கொஞ்சம் புகையிலை தர்றியா?'' என்று கேட்டார்.

நரசியும் வெற்றிலை மென்று கொண்டிருந்தாள். கஅன்ற விழிகள். பெரிய வட்டமான முகம். சிவந்த உதடுகள். எப்பொழுதுமே

வெற்றிலே போட்டு வெற்றிலைச் சாற்ருல் சிவந்தது போல அந்த உதடுகள் இருக்கும். அவள் சிரிக்கும் பொழுது எதிரே இருப் போரைச் சுண்டி இழுப்பது போல் கண்களில் ஒளி வீசும். அவள் கேட்டாள்!'' இதென்ன கணக்குப்பிள்ளை அய்யா, என் கிட்ட இலே கேக்கறீங்களே? வீட்டிலே பொண்டாட்டி கொடுக்கிற தில்லையா?

'' வீட்டிலே வெத்திலே இருக்கலே. என் அப்பா திதியை முடிச்சிட்டு ஏரிக்கரைக்குப் போய் அப்பிடியே வந்தேன்''

''வாங்க, வாங்க, கொடுக்கறேன். ஊர்க் கணக்குப்பிள்ளை நீங்க, உங்களுக்கு இல்லாததா?'' என்று கண்ணைச் சிமிட்டிக் கொண்டே சிரித்தாள். தன் அதிகாரத்தை அவளாவது ஒப்புக் கொண்டாளே என்று அவருக்கு சந்தோஷம். அவர் உள்ளே சென்ருர். '' உள்ளே வாங்க '' என்று சொல்லியவாறே எழுந்த அவள் அவரை உள்ளே அழைத்துச் சென்ருள். உட்புறம் மிக மங்கலான வெளிச்சமாக இருந்தது. இருட்டு அதிக மாகிக்கொண்டிருந்தது. சில மூட்டைகள், மூலேயில் ஒரு கட்டில் அதில் படுக்கை விரிக்கப்பட்டிருந்தது. அவள் அவருடைய இரு கைகளையும் பிடித்து இழுத்துச் சென்று படுக்கையின் மேல் உட் கார வைத்துத் தானும் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள். நெருக்கம் அதிகமாகியதும் அவருடைய கை கால்கள் இலேசாக நடுங்கத் தொடங்கின. பல் வரிசைகள் ஒன்றுடன் ஒன்று அடித்துக் கொள்ளத் தொடங்கின.

'' ஏன் இப்படி நடுங்கறீங்க?'' என்று அவள் கேட்டாள்.

'' நீ......நீ...நீ...... இப்பிடி என்னை... என்னை... செய்ய ...... செய்யலாமா?''

'' என் கிட்ட இலே கேட்டீங்களே?''

அவள் பேசுவதன் பொருள் அவருக்குப்புரியவில்லை. ப...ப... பணம் இருக்கலே கேட்டேன்.''

''நான் பணம் கேக்கலியே?''

''அ...அ... அப்படின்ளு என்னை... ஏன்... தொடறே?''

அவள் அவருடைய கையைப் பிடித்து எழச் செய்து வெளியே கூட்டி வந்து விட்டாள்.

'' நேரே வீட்டுக்குப் போங்க''

அவர் பயந்து நடுங்கிக்கொண்டே காலை வீசிப் போட்டு நடந் தார். ''ஒரு நிமிஷம் நில்லுங்க'' என்று அவள் கூவியதும் மறு படியும் பயந்து நின்ருர்.

''கொஞ்சம் இங்கே வாங்க. நான் உங்களைச் சாப்பிட மாட்டேன்''

அவர் கடைக்கு எதிரே வந்து நின்றார். ஒரு கவுளி வெற்றிலை, ஒரு பிடி பாக்கு, இரண்டு நீளமான புகையிலைத் துண்டு ஆகிய வற்றை அவரிடம் கொடுத்து விட்டுச் சொன்னாள். '' எடுத்துக்கிட் டுப் போங்க. வீட்டிலே நஞ்சம்மா கிட்டே சுண்ணாம்பு தடவித்தரச் சொல்லிப் போட்டுக்கங்க. உங்களைப் போல ஆளுங்க வீட்டிலே பெண்டாட்டி சொன்னபடி நடக்கணும். தெரிஞ்சுதா?''

அவருக்குக் கோபம் வந்தது. ஆனால் எப்படித் திட்டுவ தென்று தெரியவில்லை. வெற்றிலை, பாக்கு, புகையிலையை எடுத்துக் கொண்டு வீட்டை நோக்கிப் புறப்பட்டார். வீட்டில் நஞ்சம்மா கணக்கு நோட்டுகளில் கணக்கு எழுதிக் கொண்டிருந்தாள். அவள் அவரைப் பார்த்தாள். ஆனால் பேசவில்லை. அவரும் பேசவில்லை. தூணுக்கு அருகே விரித்துப் போட்டிருந்த பாயில் கை, கால்களை விரித்துப் படுத்து வெற்றிலை, புகையிலை குதப்ப ஆரம்பித்தார்.

# பத்து

## 1

தான் கணவனை மட்டும் ஜாதியில் சேர்த்துக் கொண்டு தன்னை விலக்கி வைத்திருப்பதற்காக நஞ்சம்மா கவலைப் படவில்லை. ஆனால் அதை ஒரு அவமானமாக நினைத்தாள். தர்மம், நியாயம், திதி முதலியவைகளைப்பற்றி அவளுடைய கருத்து மற்றவர்களிட மிருந்து வேறுபட்டது தான். அவளுடைய தந்தை அந்த வட் டாரத்திலேயே மிக ஆழமாக சாஸ்திரங்கள் படித்தவர். எந்த நல்ல காரியமானாலும், கெட்ட காரியமானாலும் அவரிடம் வந்து கருத்துக் கேட்பார்கள். அப்படிப்பட்டவரே தன் தந்தையின் திதி செய்வதில்லை. யாராவது கேட்டால், ''நான் கயாவிலே திதி செஞ்சு பிண்டம் வைச்சவன். இனி திதி செய்ய வேண்டியதில்லை'' என்று கூறி, அதைப்பற்றி ஒரு வடமொழி சுலோகமும் சொல்லி விடுவார். அவர் கயாவுக்கு போனதைப் பற்றியோ, போயிருந் தாலும் பிண்டம் வைத்ததைப் பற்றியோ எவருக்கும் நம்பிக்கை கிடையாது. அவருடைய தாயாருக்கே நம்பிக்கை கிடையாது. ஆனால் அவர் எதிரே அதைச் சொல்லும் தைரியம் யாருக்கும் இருக்கவில்லை.

தன் தந்தை இருந்திருந்தால் இந்தப் புரோகிதர்கள் வாலாட்ட முடியாது. நிலமும் போயிருக்காது. அவர் ஒரு அதட்

டல் போட்டால் கணவனும், மாமியாரும் பேசாமல் அடங்கி நடப் பார்கள். நிலத்தைக் காப்பாற்றி இருக்கலாம். எங்கே போனாரோ? கண்டிப்பாக இறந்திருக்க மாட்டார். தான் நான்கு வயதுக் குழந் தையாக இருந்த பொழுது வீட்டைவிட்டு வெளியே சுற்றப் போன வர் நான்கு வருட காலம் திரும்பவில்லையாம். காசி, ராமேஸ் வரம் என்று எங்கெல்லாமோ சுற்றித் திரிந்தாராம். இந்தத் தடவை அவர் போய் கிட்டத்தட்ட ஒன்பது வருடமாயிற்று. பார்வதி எட்டு மாதக் குழந்தையாக இருந்த பொழுது போனார். பார்வதிக்கு ஒன்பது வயதாயிற்று. ஊர்சுற்றுவது அவருடைய தலை யெழுத்து. இவ்வாறெல்லாம் நஞ்சம்மா எண்ணிக்கொண்டாள்.

தாயாருடைய வீட்டில் கணவர் சடங்கு செய்து கொண் டிருந்த பொழுது நஞ்சம்மாவின் மனம் கிலேச மடைந்திருந்தது. அவளுடைய வீட்டில் சடங்கு நடந்திருந்தால் அவள் குளித்து, சமையல் செய்து கொண்டிருப்பாள். கணவன் அங்கே சடங்கில் ஈடுபட்டிருந்த பொழுது தான் வீட்டில் சாப்பிடலாமா என்ற சந்தேகம் தலை தூக்கியது. குழந்தைகளுக்கு மட்டும் ரொட்டியும் சட்டினியும் செய்து கொடுத்தாள். மதியம் சாப்பாடு சாப்பிட குழந்தைகளை மாமியார் வீட்டுக்காரர்கள் கூப்பிடுவார்களா, மாட்டார்களா, என்ற சந்தேகமும் எழுந்தது. ஆகையால் பத்து ரொட்டி செய்து வைத்தாள். கூப்பிட்டால் குழந்தைகள் போகட்டும் ரொட்டி கெட்டுப் போகாது, கூப்பிடாவிட்டால் ரொட்டி சாப்பிடட்டும் என்று முடிவு செய்தாள்.

குழந்தைகள் பள்ளிக்குப் போயிருந்தார்கள். பார்வதி, ராமண்ணா - இருவரும் நான்காம் வகுப்பில் படித்துக் கொண் டிருந்தார்கள். விசுவநாதன் இரண்டாம் வகுப்பு. நஞ்சம்மா இலை தைத்துக் கொண்டிருந்தாள். மதிய வேளை, மாதேவய்யா நஞ்சம்மாவின் வீட்டிற்கு வந்தார். அவர் அந்த நேரத்தில் வந்தது கிடையாது. அவருடைய முகம் வாடி இருந்தது. குடும் பஸ்தர்களுக்குத்தான் கவலை இருக்க முடியும். சாமியாருக்கு என்ன கவலை? நஞ்சம்மா அவர் உட்காருவதற்காகப் பாய் விரித்தாள். ''அய்யா சாப்பாடு ஆச்சா?''.

'' இந்த ஊரிலே என் ஜாதிக்காரங்க வீட்டிலே சாப்பிடற தில்லேன்னு முடிவு செஞ்சிருக்கேன்''

'' என்ன விஷயம் ?''

'' நான் மத்த கிராமங்களுக்கும் போய் ராகி கொண்டு வர்றேன். வெளியூர்ச் சாமியார்கள் யாராவது இங்கே நம்ம

ஊருக்கு வந்தா அவங்க சமைக்க அந்தப்பொருளைக் கொடுக்கறேன் நான் நம்ம ஊரிலேயே இருக்கறப்ப வீடுகளுக்குப் போய் யாசகம் செஞ்சு என் ஆகாரத்தை முடிச்சுக்கறேன். இன்னிக்கு வாணிகர் தெருவிலே ஏதோ பேச்சு நடந்திருக்குது போல் தோணுது. நான் மூணு, நாலு வீடுகளுக்குப் போனேன். எல்லா வீட்டுக்காரங் களும், 'இந்த அய்யாவுக்கு வேறே வேலை இல்லியா? காலை யிலே ராகி தரணும். எங்களாலே முடியுமா'ன்னு சொன்னாங்க, ரொம்பவும் வருத்தமா போச்சு. பேசாம வந்துட்டேன்''.

அதைக் கேட்டு நஞ்சம்மாவுக்கு வருத்தம் ஏற்பட்டது. மாதேவய்யா தான் கொண்டு வரும் தானியத்தை விற்றுப் பணம் சம்பாதிப்பதில்லை. மற்றவர்களுடைய சாப்பாட்டுக்காக கொடுத்து விடுகிறார். அவருக்குச் சொந்தமான பொருள் என்று சொல்லும்படியாக எதுவும் கிடையாது. வெளியூர்க்காரர்களுக்கு சாப்பாடு போவதற்காகத்தான் அவர் யாசகம் செய்து ராகியைத் திரட்டுகிறார்.

''அய்யா நீங்க கோவிலுக்குப் போய் சமைக்கலையா?''

''மனம் சரியில்லை. வயிறு பசிக்குது. நீ ஏதாச்சும் கொடுத்தா சாப்பிடறேன்.''

அவர் அது வரை நஞ்சம்மாவின் வீட்டில் ஒரு சொட்டுத் தண்ணீர் கூட குடித்தது கிடையாது. இப்பொழுது சாப்பிடுவ தாகச் சொன்னவுடன் நஞ்சம்மா எழுந்து ''கொஞ்ச நேரம் உக் காந்திருங்க. அதுக்குள்ளே சோறு, ரசம் செய்யறேன்'' என்றாள். '' வேண்டாம், வேண்டாம் இருக்கறதைக் கொடு'' என்றார், அவர். அவள் உள்ளே போய் சில ரொட்டிகளையும் சட்னியும் கொண்டு வந்து வைத்தாள். ஒரு அலுமினியக் கிண்ணம் நிரம்பக் தயிர் கொண்டு வந்து அருகே வைத்தாள். அவளுடைய மாமியார் வீட்டில் திதி நடந்து கொண்டிருப்பது நினைவுக்கு வந்தது. அவள் அவரிடம் '' அய்யா இன்னிக்கு என் மாமனார் திதி என்னை மட்டும் ஒதுக்கி வைச்சிருக்காங்க தெரியுமா?'' என்று கேட்டாள்.

''தெரியும். தெரியும். எல்லாப் பலகாரத்தையும் நெய்யிலே செய்யாட்டா சாப்பாட்டுக்கு வர முடியாதுன்னு ஜோசியர் சொன்னாராம். அப்பண்ணய்யா வெள்ளிப் பஞ்ச பாத்திரத்தை வட்டிக் கடையிலே அடகு வைச்சு ரெண்டு ரூபாய் வாங்கி, அந்தப் பணத்திலே வெண்ணெய் வாங்கிட்டுப் போனான். அவருக்கு சளி, காய்ச்சலாம். எண்ணெயிலே செஞ்சா சாப்பிட

முடியாது. நெய்யிலே செஞ்சாத்தான் சாப்பிடுவேன்னு சொன்ஞராம். நான் ஒம்பது மணி சுமாருக்குக் கோவில் திண்ணையிலே உக்காந்துகிட்டிருந்தேன். அப்பண்ணய்யா எங்கிட்டே சொல்லிட்டுப் போஞன்.''

வட்டியுடன் பணத்தைத் திரும்பக் கொடுத்து அவர்கள் வெள்ளிப் பாத்திரத்தை மீட்க முடியாது என்பது இருவருக்கும் தெரியும். அவர்கள் அதைப் பற்றிப் பேசவில்லை. ''அய்யா இந்தத் திதி மாதிரி சங்கதி எலலாம் உண்மையா? இந்த ஜோசியர் போல இருக்கற ஆளுகளைக் கூப்பிட்டு சாப்பாடு போடறது எல்லாம் நியாயம்தாஞ?''

''உண்மையா, பொய்யான்னு யாருக்குத் தெரியும்? உண்மையா இருக்கலாம். ஆஞ உன் மாமஞர் உயிரோடு இருந்தப்ப ஒரு நாள் கூட அந்த அம்மா ஒழுங்காகக் கவனிச்சுச் சோறு போட்டது கெடையாது. இப்ப ஊர், ஊராப் போய் யாசகம் வாங்கி திதி செய்யரு.''

''என் மாமஞர் உயிரோடு இருந்தப்ப நீங்க இந்த ஊரிலே இருந்தீங்களா?''

''சென்னையா பிறக்கறதுக்கு மூணு வருஷத்துக்கு முன்ஞடி நான் இங்கே வந்துட்டேன்.''

''உங்க சொந்த ஊர் எது?''

''எந்த ஊரா இருந்தா என்ன? ஆண்டவன் படைச்சப்புறம் ஏதோ ஒரு ஊரிலே இருந்துதானே ஆகணும்'' என்ருர். ஆஞல் அவர் தன் ஊர்ப் பெயரைச் சொல்லவில்லை. அவர் முதன் முதலாக அந்த ஊருக்கு வந்த பொழுது அவர் ஹுப்ளி, தார்வார் போன்ற வட பகுதியைச் சேர்ந்தவர் என்று ஜனங்கள் பேசிக் கொண்டார்கள். போரேசந்தை, ராமஞதபுரம் ஆகிய இடங்களில் மாடு வாங்குவதற்காக வரும் வட நாட்டுக்காரர்களைப் போல் அவர் பேசி வந்தார். முதன் முதலாக வந்த பொழுது ராகிக் களி உருண்டை சாப்பிட அவருக்குத் தெரிந்திருக்கவில்லை. ஆஞல் ஒன்றிரண்டு வருடங்களில் உள்ளூர்க்காரர்களைப் போல் பேசவும், களி உருண்டை செய்யவும் சாப்பிடவும் பழகிக் கொண்டார். ''உங்க ஊர் எது?'' என்று யாராவது கேட்டால், ''ராமஸந்திர கிராமத்தில் இருக்கற சோளேஸ்வரன் கோவில்'' என்று பதில் சொல்வார். சென்னிகராயர் போன்ற நடுத்தர வயதுக்காரர்களை விட அதிக காலம் அவர் அந்த ஊரிலே வசித்து வருவதஞல் அந்தக் கேள்வியை இப்பொழுது யாரும் கேட்பதில்லை. நஞ்சம்மா மறுபடியும் அந்தக் கேள்வியைக் கேட்கவில்லை.

அய்யா சாப்பிட்டு முடித்தார். அப்பொழுது பள்ளியிலிருந்து குழந்தைகள் திரும்பி வந்தார்கள். நஞ்சம்மா கொடுத்த ரொட்டியைப் பேசாமல் சாப்பிட்டு விட்டு மறுபடியும் பள்ளிக்குப் புறப்பட்டார்கள். ரொட்டி மிஞ்சவில்லை. ஆகையால் நஞ்சம்மா சாப்பிட எதுவும் இருக்கவில்லை. மறுபடியும் செய்ய அவளுக்குச் சோம்பலாக இருந்தது. மாதேவய்யா வெளியே அமர்ந்திருந் தார். அவள் வெளியே சென்று அவரைப் பார்த்து, ''அய்யா, ஒரு கேள்வி கேக்கறேன். இஷ்டமிருந்தா பதில் சொல்லுங்க. நீங்க ஏன் வீடு, வாசல் எல்லாத்தையும் விட்டுட்டு இப்பிடி வந்துட்டீங்க?'' என்றாள்.

''நான் எங்கே வீட்டை விட்டு வந்தேன்? எனக்குக் குடும்பம் ஏது? பிறக்கும்போதே சாமியாராய்ப் பிறந்தேன். ஊர் ஊராகத் திரிஞ்சுகிட்டே இருந்தேன். இந்த ஊரிலே தங்கலாம்னு மனசிலே பட்டது. ஆகையால் இருக்கேன்'' என்றார். அவளுடைய கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. அவருடைய குடும்பம், வீடு ஆகியவை புதிராகவே இருந்தன.

அவருடைய கடந்த கால வாழ்க்கையைப் பற்றி யோசித்துக் கொண்டு நஞ்சம்மா உட்கார்ந்திருந்தாள். அவருக்குக் கல்யா ணம் ஆகியிருந்திருக்குமா அல்லது கல்யாணம் ஆன பிறகு அவர் இப்படிச் சாமியாராக மாறிவிட்டாரா? அவர் பல்லாரியைச் சேர்ந்தவர் என்றும், மனைவி நடத்தை கெட்டுப் போனதால் வாழ்க்கையில் வெறுப்படைந்து சாமியாராகி விட்டாரென்றும், அடுத்த வீட்டுப் புட்டம்மா எப்பொழுதோ, ஒரு முறை சொல்லி யிருந்தாள். ''உனக்கு எப்படித் தெரியும்?'' என்று நஞ்சம்மா அவளிடம் கேட்டாள். ''நான் சின்னப் பொண்ணா இருந்தப்ப எல்லோரும் அப்பிடிச் சொல்லிக்கிட்டிருந்தாங்க'' என்று அவள் பதில் சொன்னாள். புட்டம்மாவின் பேச்சை நம்ப முடியாது. ஏனென்றால் அய்யா தன் சொந்த வாழ்க்கையைப் பற்றி எவரிட மும் சொல்லியிருக்க மாட்டார். இவ்வாறெல்லாம் அவள் நினைத்துக் கொண்டிருந்தாள். ''சரி, அவருடைய குடும்பத்தைப் பற்றிச் சொல்லாவிட்டால் போகட்டும். அவருக்கு எவ்வளவோ மனக் கஷ்டம் இருக்கும்'' என்ற எண்ணமும் வந்தது.

இருவரும் சற்று நேரம் மௌனமாக அமர்ந்திருந்தனர். பிறகு அய்யா கேட்டார் ''என்னம்மா, யோசனை செஞ்சு கிட்டிருக்கே?''

''ஒண்ணும் இல்லை''

''நான் இந்த ஊரிலே இவ்வளவு காலம் இருந்தாச்சு. இனிமேலே எங்காச்சும் போகணும்''

''நீங்க சாமியார். யாரோ அறிவில்லாத நாலு பேர் ஏதோ சொல்லிட்டாங்கன்னு நீங்க ஏன் போகணும்? எந்த ஊருக்குப் போனாலும் இவங்களைப் போல சில பேர் இருப்பாங்க. அதுக்காக என்ன செய்ய முடியும்?''

''நீ சொல்றதும் உண்மைதான்'' என்று சொல்லிக் கொண்டே அவர் கோவிலுக்குப் புறப்பட்டார். அரட்டை அடிக்கும் பழக்கம் அவருக்குக் கிடையாது.

உ

அன்று மாதேவய்யா ஊரை விட்டுச் சென்றவர், இரண்டு மூன்று மாதங்களாகியும் திரும்பி வரவில்லை. அவர் திரும்பி வர மாட்டாரோ என்னும் கவலை நஞ்சம்மாவை வாட்டியது. அந்த ஊரில் இருந்த ஒரே நல்ல மனிதர் அவர்தான். அவரும் மன வருத்தம் அடைந்து புறப்பட்டு விட்டார். அவருடைய அறையில் ராகி, மிளகாய், சில அலுமினியப் பாத்திரங்கள், பாய் முதலியவை இருந்தன. அவர் சாவியைத் தன்னுடன் எடுத்துச் சென்றிருந்தார். ஆகையால் எப்பொழுதாவது ஒரு நாள் அவர் திரும்பி வரலாம் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அவர் இல்லாததனால் கோவில் களை இழந்து தோன்றியது. சென்னிகராயர் போன்றவர்கள் கூடக் கோவிலுக்குப் போக விரும்பவில்லை.

பார்வதியும், ராமண்ணனும் ஆரம்பப் பள்ளிப் படிப்பை முடித்து விட்டார்கள். ராமண்ணன், பள்ளியிலேயே மிகச் சிறந்த மாணவன் என்று ஆசிரியர் கூறினார். அவனுடைய எழுத்து மிக அழகாக மணி போல் இருந்தது. அவன் கணக்குப் புத்தகங்களில் தவறில்லாமல் கோடு போட்டான். நஞ்சம்மா பஜ கோவிந்தம் முதலிய தோத்திரப் பாடல்களை மூன்று குழந்தைகளுக்கும் சொல்லிக் கொடுத்தாள். நளன் கதை, லவ குசன் போர் ஆகியவைகளைப் பார்வதியும், ராமண்ணனும் மனப்பாடமாக ஒப்புவித்தார்கள். கிராம கணக்குப் பிள்ளை வேலைக்கு அந்த அளவு கல்வி போதும். ஆனால் குழந்தைகள் அதிகமாகப் படித்து வேலை பார்க்க வேண்டும் என்று நஞ்சம்மா விரும்பினாள். குறைந்த பட்சம், ஷேக்தார் உத்தியோகம் பார்க்கும் அளவுக்குப் படிக்க வேண்டும் என்று நினைத்தாள்.

''இத்தோட படிப்பை நிறுத்த வேண்டாம். மிடில் ஸ்கூலுக்கு அனுப்புங்க'' என்று ஆசிரியர் சூரப்பா கூறினர். நடுநிலைப் பள்ளி கம்பனகெரெயில் இருந்தது. ஐந்து மைல் தூரம் போக வேண்டும். அந்த ஊரில் பதினைந்து, இருபது பிராமண வீடுகள் இருக்கின்றனவாம். யாராவது ஆண்கள் அங்கே போய்ப் பேசி சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்தால் அங்கேயே தங்கிப் படிக்கலாம். சனிக்கிழமை ஊருக்கு வந்து விட்டு திங்கட்கிழமை சோற்று மூட்டை கட்டிக் கொண்டு அங்கே போய்விடலாம். ஷேக்தாரிடம் சொன்னால் அவர் வாரத்தில் ஒரு நாள் சாப்பாடு போடுவார். மற்ற நாட்களுக்கு என்ன செய்வது? ஆசிரியர் சூரப்பாவுக்கு அறிமுகமானவர் யாரேனும் அங்கே இருக்கலாம். தியாவரசய்யாவுக்குத் தெரிந்தவர்களும் இருக்கக் கூடும், என்பது நஞ்சம்மாவின் எண்ணம்.

அன்னியர் வீட்டில் தங்க ராமண்ணன் ஒப்புக் கொள்ள வில்லை. அவனுக்குக் கூச்சமாக இருந்திருக்கலாம். அல்லது பயமாக இருந்திருக்கலாம். தினசரி நடந்து போய் வருவதாகச் சொன்னன். போக வரப் பத்து மைல்கள் நடக்க வேண்டும். ஊர்க் கோடியில் உள்ள அம்மன் கோவிலுக்கு அப்பால் உள்ள மாமரத்தைத் தாண்டி, ஒரு மேட்டைக் கடந்து, பாம்புப் புற்றுகள் நிறைந்த வழியில் செல்ல வேண்டும். அந்தப் புற்றுகள் பயங்கரமாகக் காட்சி அளிக்கின்றன. அதற்கு அப்பால் கவுடர்களின் குடியிருப்பு. அதைக் கடந்து கள்ளிப் புதர்கள் நிறைந்த ஒற்றையடிப் பாதையில் நடக்க வேண்டும். ராமண்ணன் ஒன்பது வயதுச் சிறுவன். இவ்வளவு ஆபத்துக்கள் நிறைந்த வழியில் அவன் சென்று வர வேண்டும். ஆனல் கஷ்டத்தைக் கவனித்தால் படிப்பு வருமா? ஆசிரியர் கொடுத்திருந்த ஆரம்பப் பள்ளி சர்டிபிகேட்டை ராமண்ணன் சுவாமியின் முன் வைத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டான். பிறகு அதைக் கையில் எடுத்துக் கொண்டு, நஞ்சம்மா கொடுத்திருந்த ரொட்டிப் பொட்டலத்தையும் கையில் பிடித்துக் கொண்டு அவன் புறப்பட்டான். ராமண்ணனை அழைத்துச் சென்று பள்ளிக் கூடத்தில் சேர்த்து விட்டு வருவதாக சென்னிகராயர் ஒப்புக் கொண்டிருந்தார். ஆனல் இப்பொழுது இழுத்துப் போர்த்துப் படுத்தவாறே ''நாளைக்குப் போகலாம்'' என்று தூங்கி வழிந்து கொண்டே சொன்னர். அவருடைய தூக்கம் கலையவில்லை. பஞ்சாங்கத்தைப் பார்த்து முடிவு செய்திருந்த அந்த நாளைத் தவற விட நஞ்சம்மா விரும்ப வில்லை. அவளே மகனுடன் புறப்பட்டாள். அவன் சுவாமிக்கும், தாயாருக்கும், அக்காவுக்கும் நமஸ்காரம் செய்துவிட்டுக் கிளம்பினன். தலைமையாசிரியர் நஞ்சம்மாவின் கையொப்பத்தைப்

பெற்று நுழைவுக் கட்டணமாக எட்டணு வாங்கி, அவனைப் பள்ளியில் சேர்த்துக் கொண்டார். மற்ற சிறுவர்கள் எல்லோரும் வேட்டி உடுத்திக் கொண்டு, தலையில் கருப்புக் குல்லாய் வைத் திருந்தார்கள். ஆகையால் அவனுக்கும் அவைகளை வாங்கித் தர வேண்டும் என்று நஞ்சம்மா நினைத்தாள்.

இரண்டு வேட்டிகள் வாங்க வேண்டும். ஒரு வேட்டியைத் துவைத்துப் போட்டால், மற்றொன்றை உடுத்திக் கொள்ளலாம். இரண்டு வேட்டி, ஒரு குல்லாய் வாங்க இரண்டு ரூபாய் வேண்டும். புத்தகங்கள், நோட்டுக்கள், ரூல் பென்சில் வாங்க வேண்டும். சாப்பாட்டுப் பொட்டலத்தையும், பள்ளிக்கூடப் புத்தகங்களையும் எடுத்துச் செல்ல ஒரு பை வாங்க வேண்டும். மொத்தமாக ஏழெட்டு ரூபாய் ஆகும். பணத்துக்கு என்ன செய்வது? அவள் வீடு திரும்பியதும் பரண் மேல் ஏறி, அங்கே வைத்திருந்த இலைக் கட்டுகளை எண்ணிப் பார்த்தாள். நூறு கட்டுகள் இருந்தன. ஒரு கட்டு விலை ஏழணு என்றால் நாற்பத்து நான்கு ரூபாய் கிடைக்கும். மொத்தமாக விற்று விடலாம். ஆனால் வெறும் நூறு கட்டுகளுக்காக மட்டும் ஒரு வண்டியை ஏற்பாடு செய்து, திப்டூருக்குச் சென்றால், வண்டி வாடகை வீண் செலவுதான். உடனே பணம் புரட்ட என்ன செய்வது?

சர்வக்காவை அழைத்து வந்து அவளிடம் பேசினாள். அவளிடம் எண்பது கட்டுகள் இருந்தன. இருவரது கட்டுகளை யும் சேர்த்து மொத்தமாக அனுப்பினால் வண்டி வாடகையைப் பங்கு போட்டுக் கொள்ளலாம், என்று நஞ்சம்மா சொன்னாள். ''கோர்ட்டிலே சாட்சியம் சொல்றதுக்கு நாளைக்கு என் வீட்டுக் காரர் போறார். அவர் போற வண்டியிலே போட்டு அனுப்பிட லாம்'' என்றாள் சர்வக்கா.

''சர்வக்கா, உங்க வீட்டுக்காரர் சுபாவம் உங்களுக்குத் தெரியாதா?''

''ஆமா. நீங்க சொல்றதும் சரிதான்'' என்றாள் சர்வக்கா. பிறகு இருவரும் கூடிப் பேசி ஒரு முடிவெடுத்தார்கள். இரண்டு பேருடைய இலைக் கட்டுகளையும் வண்டியில் ஏற்றி, வீட்டுக்கார ருடன் அவளும் சென்று இலைக் கட்டுகளை விற்று, அந்தப் பணத்தில் ராமண்ணனுக்குத் தேவையான புத்தகம், நோட்டு, பென்சில், வேட்டி, குல்லாய், பை, ஆகியவற்றை வாங்கிக் கொண்டு வருவது என்று தீர்மானித்தார்கள்.

மறு நாள் இரவு சர்வக்கா தன் வீட்டுக்காரருடன் வண்டி யில் ஏறினாள். இலை விற்ற பணத்தில் தேவையான பொருட்களை வாங்கி, வண்டியில் வைத்து அடுத்த நாள் இரவு தன் கணவ

ருடன் திப்டூரிலிருந்து புறப்பட்டாள். மீதிப் பணத்தைப் பையில் போட்டுத் தன் தோளில் தொங்க விட்டுக் கொண்டிருந்தாள். இரவு முழுவதும் வண்டியில் தூங்கி வழிந்து கொண்டே வந்தாள். காலையில் வீட்டின் முன்பு வண்டி நின்றவுடன் கீழே இறங்கினாள். வாங்கிய பொருட்கள் எல்லாம் வண்டியில் அப்படியே இருந்தன. ஆனால் பணப் பையைக் காணவில்லை. கணவனைக் கேட்டதும், ''ஏண்டி கழுதெ முண்டை, நீ தூங்கி வளிஞ்சு பணத்தைத் தொலைச்சிட்டு எங்கிட்டே கேக்கறியா?'' என்று சீறினான். அவளுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. கண்ணீரும் கம்பலையுமாக நஞ்சம்மாவின் வீட்டிற்கு ஓடிப்போய் விஷயத்தைச் சொன்னாள். நஞ்சம்மாவின் பணம் முப்பத்தெட்டே கால் ரூபாயும், அவளுடைய பணம் முப்பத்தைந்து ரூபாயும் பையில் இருந்தன.

''நஞ்சம்மா, என் தாலியின் மேலே ஆணையாச் சொல்றேன். நான் திருடலை.''

நஞ்சம்மா பொறுமையுடன் சில கேள்விகள் கேட்ட பிறகு சொன்னாள். ''பணம் எங்கும் போயிடலை. நீங்க தூங்கிக்கிட்டிருந்தப்ப உங்க வீட்டுக்காரர்தான் அதை எடுத்திருக்காரு.''

அது உண்மைதான் என்பது சர்வக்காவுக்கு உடனே புரிந்து விட்டது. அவள் நேரே வீட்டிற்குச் சென்று கணவனிடம், ''நீங்கதான் பணத்தை எடுத்திருக்கீங்க. நஞ்சம்மா பணத்தை யாவது கொடுங்க'' என்று கெஞ்சினாள். அவன் வெறி பிடித்த வன் போல் அவளை அடித்து விட்டான். கோர்ட்டில் சாட்சியம் சொல்லும் பெரிய மனிதனைத் திருடன் என்று சொன்னால் அவன் எப்படிப் பொறுப்பான்?

சர்வக்கா தனக்குள் ஒரு முடிவு செய்தாள். மறு நாள் காலை பொழுது புலர்வதற்கு முன் தன் மகள் ருத்ராணியைக் கூட்டிக் கொண்டு சொந்த ஊரான சிவகெரெய்க்கு நடந்தே சென்றாள். அவளுடைய கழுத்தில் தாய் வீட்டார் செய்து கொடுத்த தங்கத் தாலி இருந்தது. ரேவண்ண செட்டியின் பார்வை அதுவரை அந்தத் தாலியின் மேல் விழுந்திருக்கவில்லை. ஒரு தட்டானிடம் அதை நூற்றைம்பது ரூபாய்க்கு விற்று, எட்டு ரூபாய்க்கு ஒரு வெள்ளித் தாலியை வாங்கிக் கொண்டாள். இரண்டு நாட்களுக்குப் பிறகு அவள் ஊர் திரும்பினாள். அவள் நஞ்சம்மாவுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடுத்துவிட்டு, மீதியிருந்த ரூபாயையும் அவளிடமே கொடுத்து வைத்து, ''இந்தப் பணமும்

உங்ககிட்டியே இருக்கட்டும். சாப்பாட்டுக்கு எதுவும் இல்லாதப்ப உங்ககிட்டே ஒரு ரூபா, எட்டு அணுன்னு வாங்கிக்கறேன்'' என்று சொன்னாள்.

''இவ்வளவு பெரிய தொகையை நான் எங்கே வைக்கறது? தற்செயலா ஏதாவது நடந்துட்டா நான் என்ன செய்வேன்?''

''ஒரு பானையில் போட்டுப் பரண் மேலே இலைக்கு நடுவே வைங்க. ஒரு பயலுக்கும் தெரியாது.''

நஞ்சம்மா அவ்வாறே செய்தாள். அந்தத் திருட்டுச் சம்பவத்திற்குப் பிறகு ரேவண்ண செட்டி எட்டு நாட்கள் இரவு நேரங்களில் வீட்டில் படுத்துத் தூங்கவில்லை. பகல் நேரங்களில் மட்டும் வீட்டில் தூங்கிக் கொண்டிருந்தான்.

## 3

ராமண்ணன் நடுநிலைப் பள்ளிக்குப் போகத் துவங்கியதிலிருந்து பார்வதி வீட்டிலேயே இருந்து வந்தாள். அவளுக்குப் பன்னிரண்டு வயதாகிவிட்டது. அவள் உயரமாக நல்ல உடல் கட்டுடன் செழிப்பாக இருந்தாள். வயதுக்கு மீறிய வளர்ச்சி இருந்தது. அதுவரை அவளைப் பற்றி நினைத்து வந்த எண்ணம் நஞ்சம்மாவின் உள்ளத்தில் வலுப்பெற்றுவிட்டது. அதாவது, அவளுக்குத் திருமணம் செய்ய வேண்டும். ஆனால், எந்தப் பையனைத் தேடிப் பிடிப்பது? பணம் எங்கே? இந்தக் கேள்விகளும் மனத்தில் தோன்றின. அதுவரை அவள் எப்படியோ குடும்பத்தை நடத்தி வந்தாள். இனி மேற்கொண்டு ராமண்ணனின் படிப்புக்கும் பணம் செலவு செய்தாக வேண்டும். கல்யாணத்துக்கும் பணம் வேண்டும். கல்யாணம் செய்வதென்பது இலேசான விஷயம் அல்ல. ஆனால் நடத்தாமல் விட்டுவிடக் கூடிய விஷயமும் அல்ல. கண்டிப்பாகச் செய்தே தீர வேண்டும்.

பார்வதி பள்ளிக்குப் போய்க்கொண்டிருந்த பொழுதே தன் தாயாருக்குத் தெரிந்திருந்த எல்லாப் பாடல்களையும் மனனம் செய்து விட்டிருந்தாள். தற்போது சமையல் வேலையும் நன்கு பழக்கமாகி விட்டது. வீட்டில் வேறு வேலை அதிகம் இல்லை. ஆகையால் காலையிலிருந்து மாலை வரை இலை தைத்துக் கொண்டிருப்பாள். தினசரி இரு நூறு இலை தைத்து விடுவாள். அவள் வளர்ந்து கொண்டிருக்கும் பெண். ஆகையால் அவளுக்குக் கொஞ்சம் பால், நெய் ஆகியவைகளைக் கொடுக்க வேண்டும். வீட்டில் இருந்த பசுவை வெளியே மேய்ச்சலுக்கு அழைத்துச் செல்ல ஆட்கள் இல்லாததால் அது முக்கால்படி பால் தான் கொடுத்துக்

கொண்டிருந்தது. வீட்டுக்காரர் சாப்பிடும் பொழுது மூன்று கரண்டி தயிர் அவருக்குப் போடாமல் இருந்தால், அவர் அமளி செய்வார். மீதியிருக்கும் தயிரை எந்தக் குழந்தைக்கு வேண்டிய அளவு தர முடியும்? தினசரி புரச இலை தைப்பதால் பார்வதியின் உடம்பில் சூடு அதிகம். ராமண்ணன் தினமும் பத்து மைல் தூரம் நடக்கும் பையன். விசுவனுதன் பள்ளிக் கூடத்தில் படிக்கும் பையன். வளரக் கூடிய பையன். இவர்களில் யாருக்குக் குறைப்பது, யாருக்குக் குறைக்காமலிருப்பது?

அந்த வருடம் ஆனி, ஆடி, மாதங்கள் கழிந்த பின்னரும் கூட ஒரு துளி மழையும் பெய்யவில்லை. கோடை காலத்தில் வறண்டு போய்விட்ட பூமியில் புல், பூண்டு கூட முளைக்கவில்லை. மேய்ச்சல் தரை இல்லாததால் கறவை வற்றி விட்டது. குடியானவர்கள் நிலத்தை உழவில்லை. ராகி விளைச்சலே கிடையாது. நஞ்சம்மா வழக்கம் போல் தன் கணவனிடம் சொல்லி குண்டேகவுடருக்கு நிலவரி ரசீதைக் கொடுத்து விட்டாள். உடனே அவர் அவளிடம், ''அம்மா, இந்த வருஷம் வெளைச்சல் இல்லாட்டாலுங்கூட களஞ்சியத்திலே உள்ள ராகி வீட்டுக்காரங்களுக்கும் வேலைக்காரங்களுக்கும் போதும். சம்பந்தி வீட்டுக்காரங்ககிட்டே ஒரு மணி ராகி கூட இல்லியாம். அதனுலே, நாலு கண்டி ராகி கொடுத்தனுப்பச் சொல்லி இருக்காங்க. இக்கட்டான நெலமை. உனக்கு இந்த வருஷம் ராகி தர முடியாது. பணத்தைக் கொடுத்துடறேன்'' என்று சொன்னுர்.

உடனே அவரது பணத்தைக் கொண்டு ராகி வாங்கி வைத்திருக்கலாம். வீட்டில் ராகி இருப்பு இருந்ததால் நஞ்சம்மா அப்படிச் செய்யவில்லை. இரண்டு மாதங்களில் இருப்புத் தீர்ந்தது, மழை பெய்யவில்லை. ராகி விலை ஏறி விட்டது. ரூபாய்க்கு எட்டு படி! அவளுடைய மனம் பதறியது. குண்டே கவுடரிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கொண்டு வருவதாக ஒரு நாள் சென்ருள். ''உன் வீட்டிலே ராகி இருக்குன்னு நெனைச்சுகிட்டு நான் சும்மா இருந்துட்டேன். இப்பவாவது கெடைச்ச மட்டும் வாங்கி வைச்சுக்க. இன்னும் ரெண்டு மாசம் போனு வெதைக்கவும் கூட ராகி கெடைக்காது'' என்று சொன்னுர்.

''அப்பிடின்னு நீங்களே எங்கிருந்தாச்சும் வாங்கிக் கொடுங்க.''

குருபரஹள்ளிக் கிராமத்துக்கு அண்டை ஊரான நாகேனஹள்ளியில் சிக்க தம்மே கவுடரிடம் ராகி இருந்தது. குண்டே கவுடர் அவரிடமிருந்து ஐந்து வள்ளம் ராகி வாங்கி அனுப்பினுர்.

அப்பொழுது விலை கூடி விட்டது. அதன் விலையே எண்பது ரூபாய் ஆகி விட்டது. மீதி இருபது ரூபாய் சில்லறைச் செலவு களுக்குத் தேவைப்படும் என்று நினைத்துக் கொண்டு, இருபது ரூபாயை ரொக்கமாகப் பெற்றுக் கொண்டாள்.

ஐந்து பேர் உள்ள வீட்டில் குறைந்த பட்சம் நான்குபடி ராகியாவது தினசரி தேவைப்படும். தாராளமாகப் பால், தயிர், நெய், காய்கறி ஆகியவை இருந்தால் ராகிச் செலவு குறையும். வெறும் ராகியை மட்டும் சாப்பிட்டு வயிற்றை நிரப்பும் பொழுது, தினசரி நான்குபடி தேவை. காலையில் ரொட்டி செய்யாமலிருந் தால் ஒரு படி மிச்சப்படும். ஆனால் வெகு தூரம் நடந்து போகும் ராமண்ணனுக்கு ரொட்டி தராமல் இருக்க முடியாது. அவன் ரொட்டி சாப்பிடும் பொழுது விசுவன் சும்மா இருக்க மாட்டான். பையன்களுக்கு மட்டும் கொடுத்துவிட்டு, வளரும் பெண் பார் வதியை விட்டு விட முடியாது. குழந்தைகளையாவது எப்படியோ சமாளித்து விடலாம். ஆனால் தன் வீட்டுக்காரர் சென்னிக ராயரை வழிக்குக் கொண்டு வர முடியாது. காலையில் எழுந்த வுடன் அவருக்குச் சாப்பிடக் கொடுக்காவிட்டால் வீட்டின் வெளியே நின்றுகொண்டு ''முண்டை, பீடை'' என்று கத்த ஆரம்பித்து விடுவார். வீட்டு மானம் போய் விடும். குழந்தை களுக்கு எதிரே இவ்வாறு கண்டபடி மட்டமாகப் பேசுவதும் நல்லதல்ல.

கணக்குப் போட்டுப் பார்த்தால் நான்கு மாதங்களில் ராகி தீர்ந்து விடும். மறுபடியும் வாங்கப் பணம் கிடையாது. ஆகை யால் இலை தைத்து மேற்கொண்டு ஏதாவது சம்பாதிக்கவேண்டும். தாயும், மகளும் சேர்ந்து தைக்க ஆரம்பித்தால் தினசரி நானூறு இலைகள் தைத்து விடலாம். அந்த வருடம் விளைச்சல் கணக்கு எழுத வேண்டிய அவசியம் இல்லை. மழை இல்லாமல் எல்லா நிலமும் பாலைவனம் போல் இருக்கிறது. ஆனால் கணக்குப் புத்தகத்தில் சிவப்பு மசியால் குறுக்கும், நெடுக்கும் கோடுகள் போட்டுத் தலைப்பு எழுத வேண்டும். ஒவ்வொரு சர்வே எண் ணுக்கு எதிரேயும் ''இல்லை'' என்று எழுத வேண்டும். ஆனால் தென்னைமரம், மாமரக் கணக்குகளை எழுதாமல் விடமுடியாது. வீட்டு வேலை, இலை தைக்கும் வேலை ஆகியவைகளுடன் கணக்கு வேலையையும் சமாளிக்க வேண்டும்.

மார்கழி மாதம் முடிவடையக்கூடிய சமயத்தில் தண்ணீர் கிடைப்பது கூட மிகவும் சிரமம் ஆகி விட்டது. எங்கும் ஒரே வறட்சி. புல்லும் நீரும் இல்லாததால் ஆடு, மாடுகள் மடியத்

தொடங்கின. சிறிதளவு புல் வைத்திருந்தவர்கள் கூட திருட்டுக்குப் பயந்து பரண் மேல் புல்லைப் போட்டுப் பத்திரப்படுத்த ஆரம்பித்தார்கள். சிலர் தங்கள் வீட்டுப் பசு, மாடுகளுக்கு அவ்வப் பொழுது கொஞ்சம் புல்லைப் போட்டு, அவைகள் செத்துப் போகாமல் காப்பாற்றி வந்தார்கள். ராமஸந்திர கிராமம், தும்கூர், கோலார் ஆகிய எல்லா ஊர்களிலும் கடும் பஞ்சம். வைக்கோல் விலை மிகவும் ஏறிவிட்டது. ஒரு வண்டி வைக்கோல் விலை அறுபது ரூபாய் வரை வந்து விட்டது. நஞ்சம்மாவிடம் இரண்டு பசுக்களும், ஒரு கன்றும் இருந்தன. அவைகளுக்குப் புல், வாங்கிப் போட வசதியில்லாமல், அவள் அவற்றை குருபர ஹள்ளிக்கு ஓட்டிப் போனாள். ''கவுடரே, இதுகளைத் தானமா வாங்கிக்குங்க. ஏதோ கொஞ்சம் புல்லைப் போட்டு செத்துப் போகம வைச்சுக்குங்க. உங்க பேரக் கொழந்தைகளுக்காவது பால் கெடைக்கும்.'' என்று குண்டே கவுடரிடம் கூறினாள்.

''நான் குடியானவன். தானமா எப்பிடி வாங்கிக்க முடியும்?''

''அப்படின்னா மொத்தமா மூணு காசு கொடுத்துடுங்க. நான் உங்களுக்கு வித்துடறேன்.''

''கவுடருக்கும் புல் தாராளமாகக் கிடைக்கவில்லை. அவரிடம் அடுத்த வருடத்துக்கும் வேண்டிய புல் கையிருப்பாக இருந்த போதிலும், மறுபடியும் மழை தவறி விட்டால் என்ன செய்வது என்று ஒரு புறம் பயம். அடுத்த வருடத்தைப் பற்றி நினைத்துக் கொண்டு நஞ்சம்மாவின் பேச்சைப் புறக்கணிக்கலாமா என்று ஒரு புறம் இரக்கம். ''சரி நான் இதுகளைக் காப்பாத்தறேன். நீ தானமாகவும் கொடுக்க வேண்டாம் விலைக்கும் வேண்டாம். அப்புறம் எனக்கு இந்த ஜாதி பொண்ணுக் குட்டியை ஒண்ணைக் கொடுத்திடு. ரொம்ப வெள்ளையா அளகா இருக்குது'' என்றார் கவுடர்.

நஞ்சம்மாவின் கவலை நீங்கியது. ராமஸந்திர கிராமத்தில் எவ்வளவோ கால்நடைகள் மடிந்து கொண்டிருந்தன. பல மாடுகள் இறக்கும் தருவாயில் இருந்தன.

நஞ்சம்மாவும், மகளும் இலை தைக்கும் வேலையில் மூளைந்து ஈடுபட்டதால் சேகரித்து வைத்திருந்த இலைகள் சீக்கிரமாகத் தீர்ந்துவிட்டன. ராகி மாவும் முடிந்து போயிற்று. நஞ்சம்மா பரண் மேல் ஏறி இலைகளை எண்ணிப் பார்த்தாள். மொத்தம் இருபதாயிரம் இலைகள் இருந்தன. எல்லாப் பொருட்களின்

விலையும் ஏறுமுகமாய் இருந்தபடியால் இலைகளின் விலையும் கூடுதலாய் இருக்கும் என்று நினைத்தாள். நூறு எட்டணு என்று கொடுத்தால் நூறு ரூபாய் கிடைக்கும். சர்வக்காவிடம் ஆருயிரம் இலைகள் இருந்தன. நஞ்சம்மா, சர்வக்கா, ராமண்ணன் ஆகிய மூவரும் இரண்டு வண்டிகளில் இலைகளை ஏற்றிக் கொண்டு திப்டூருக்குப் புறப்பட்டார்கள். இரண்டு வண்டி இலைகள் ஒட்டு மொத்தமாக வந்ததைக் கண்டதும் இலை வியாபாரியான கோமுட்டி செட்டியார் நஞ்சம்மாவிடம் ''சாப்பிடறதுக்கே சோறு இல்லாத வேளையிலே இலையை வாங்கி என்ன செய்யறது? நீங்க கொண்டு வந்திருக்கறதாலே வாங்கிக்கறேன். நூறு நாலணு'' என்ருர்.

''என்ன செட்டியாரே, இப்படிச் சொல்றீங்க? நாங்க கஷ்டப்பட்டு எலையைப் பறிச்சு சேகரிச்சு, தைச்சுக் கொண்டு வர்ரோம். நீங்க சொல்றது நியாயமா?''

''நியாயத்தைப் பேச வேணும். வேறே கடையிலே விலையை விசாரிச்சுப் பாருங்க.''

அடுத்த கடைகளில் விசாரித்த பொழுது நூறு மூன்றணு என்று சொன்னுர்கள். ஆகையால் முதல் செட்டியாரிடமே இலையைக் கொடுத்துப் பணம் வாங்கிஞர்கள். வண்டி வாடகையாக நஞ்சம்மா மூன்றரை ரூபாய் கொடுத்தாள். சர்வக்கா ஒன்றரை ரூபாய் கொடுத்தாள். நஞ்சம்மா தனக்கு ஒரு புடவையும், மகளுக்கு ஒரு புடவையும் வாங்கிஞள். ராமண்ணனுக்கு ஒரு சட்டை, விசுவனுக்கு ஒரு சட்டை, கால் சட்டை ஆகியவைகளையும் வாங்கிக் கொண்டாள். மீதி முப்பத்தேழு ரூபாய் இருந்தது. கட்டிக் கொண்டு போயிருந்த வரட்டு ரொட்டியைச் சாப்பிட்டு விட்டு எல்லோரும் ஊருக்குத் திரும்பிஞர்கள். ராகி விலை மீண்டும் ஏறிவிட்டது. முப்பத்தேழு ரூபாய்க்கு ராகி வாங்கிஞல் எவ்வளவு காலம் சமாளிக்க முடியும் என்ற கவலை அவளை வாட்டியது

## 4

மறுபடியும் பிளேக் நோய் பரவத் தொடங்கியது. திடீரென்று அந்த நோய் பரவியதால் பல ஊர்களிலும் பல உயிர்கள் பலியாகின. எலிகள் விழுந்து மடியத் தொடங்கின. அவைகளுடன் ஜனங்களும் மடிந்தார்கள். ராமஸந்திர கிராமத்திலும் பலருக்குக் கட்டி வந்தது. உடனே எல்லோரும் ஊரை விட்டு

வெளியே சென்று கொட்டகை போட்டுக் கொண்டார்கள். சொந்த நிலம் உடையவர்கள் தங்கள் நிலங்களில் கொட்டகை அமைத்துக்கொண்டார்கள். நிலமற்ற நஞ்சம்மா, கங்கம்மா, சர்வக்கா போன்றவர்கள் கிராம தேவதையின் கோவிலுக்குப் பின்புறம் கொட்டகை கட்டிக் கொண்டார்கள்.

மழை தவறிப் போய் விட்டபடியால் புரச மரங்களில் இலைகள் துளிர்க்கவில்லை. ஆகையால் இலை தைக்கும் வேலை கிடையாது. வருமானமும் கிடையாது. இலை விற்றுக் கிடைத்த பணம் செலவழிந்து கொண்டே இருந்தது. இன்னும் மூன்று நாட்கள் கழிந்தால் அடுப்புப் பற்ற வைக்க முடியாது. சில பேர் இரவு வேளைகளில் மற்றவருடைய தென்னந்தோப்புக்களில் புகுந்து அகப்பட்ட அளவு இளநீரும், தேங்காயும் சாப்பிட்டு வந்தார்கள். காவல் காக்கச் சென்ற தோப்புக்காரர்களின் மேல் கல்லடி விழுந்தது. அவர்கள் உயிருக்குப் பயந்து காவலுக்குப் போவதை நிறுத்தி விட்டார்கள். வீடுகளில் இருந்த தங்க, வெள்ளி நகைகள் வட்டிக் கடைக்குச் சென்றன. பிறகு பித்தளை, தாமிரப் பாத்திரங்களும் வட்டிக் கடையில் புகுந்தன.

நஞ்சம்மாவின் வீட்டில் ராகி தீர்ந்து போய் விட்டதால் ராமண்ணன் ஏதும் சாப்பிடாமல் பட்டினியாகவே பள்ளிக்கு நடந்து போயிருந்தான். கம்பனகெரெ ஐந்து மைல் தூரத்தில் இருந்தது. அவனுடைய பள்ளிக்கூடம் ஊருக்கு வெளியே இரண்டு பர்லாங் தூரத்தில் இருந்தது. அவனுக்குப் படிப்பில் மிகவும் ஆர்வம். பாடம் சொல்லித்தருவதற்கு முன்பே படித்து விடுவான். கணக்குப் புத்தகத்தில் இருந்த கணக்குகளை ஆசிரியர் விளக்குவதற்கு முன்னரே போட்டு விடுவான். ஆங்கிலப் புத்தகம் முழுவதும் மனப்பாடம். பள்ளிக்குப் போகாமல் இருந்த நாளே கிடையாது. ஒன்றரை மணிக்கு மணி அடித்தவுடன் சிறுவர்கள் சாப்பிடக் கிளம்பினார்கள். ரொட்டிப் பொட்டலம் கொண்டு வந்திருந்த கிராமத்துப் பையன்கள் ஏரியை நோக்கிப் புறப்பட்டார்கள். வறண்டு போயிருந்த ஏரியின் நடுவே ஒரு கிணறு தோண்டியிருந்தார்கள். பள்ளியின் பின்புறம் இருந்த ஒரு மரத்தின் அடியில் ராமண்ணன் சோர்ந்து போய் உட்கார்ந்திருந்தான்.

மகன் பட்டினியாகப் பள்ளிக்கூடம் போயிருக்கிறான் என்பதை நினைத்து நஞ்சம்மாவின் மனம் துடித்துக் கொண்டிருந்தது. பார்வதி வாடிய முகத்துடன் ஒரு மூலையில் அமர்ந்து கொண்டிருந்தாள். ''சாப்பிடக் கொடு'' என்று கேட்டபடி

விசுவன் ரகளை செய்து கொண்டிருந்தான். ஒன்றிரண்டு நாட்கள் பட்டினி கிடக்கலாம். ஆனால் தொடர்ந்து இருக்க முடியுமா? அது வரை நஞ்சம்மா தன் பாத்திரங்களை அடகு வைத்திருக்க வில்லை. இருபது ரூபாய் விலையுள்ள பாத்திரத்தை அடகு வைத்தால், இரண்டு ரூபாய் கிடைக்கும். அதைக் கொடுத்து நான்குபடி ராகி வாங்கினால் ஒரு நாள் கழிந்து விடும். வீட்டிலுள்ள எல்லா பாத்திரங்களையும் ஒவ்வொன்றாக வைத்தால் பதினைந்து இருபது நாட்களை சமாளிக்கலாம். பிறகு என்ன செய்வது? உள்ள பாத்திரங்களை இழந்து விட்டால் மறுபடியும் வாங்க முடியாது. அதைத் தவிர அந்தப் பாத் திரங்கள் எல்லாம் அக்கம்மா கொடுத்தவை-நஞ்சம்மா இவ்வாறு சிந்தித்தபடி இருந்தாள்.

பார்வதி தூங்கிவிட்டாள். ரகளை செய்து ஓய்ந்து போன விசுவன் ஒருபுறம் படுத்துக் கிடந்தான். நஞ்சம்மாவின் வயிறும் பசியால் கருகிக் கொண்டிருந்தது. அவளுடைய வீட்டுக்காரர் மத்தியானம் வெளியே சென்றவர் இன்னமும் திரும்பவில்லை. தாயைப் பார்க்கச் சென்றிருப்பார். அங்கேயே சாப்பிட் டிருக்கலாம். கங்கம்மாவின் வீட்டில் ராகி இருப்பு உண்டு. அவர்கள் வீட்டில் தாயும் மகனும்-இரண்டே பேர். ஆகையால் பழைய கையிருப்பே அதிக அளவு இருக்கும். கடந்த மூன்று மாதங்களில் ஒரு மூட்டை அளவு அரிசி சம்பாதித்து வைத் திருந்தார்கள். பள்ளிக்குப் போன ராமண்ணன் இன்னமும் திரும்பவில்லை. பசி மயக்கத்தால் வழியில் விழுந்து கிடக்கிறானோ என்று நஞ்சம்மாவுக்குப் பயம். சற்று தூரம் சென்று பார்க்கலாம் என்று நினைத்தாள். பொழுது இருட்டிவிட்டது. இரவு வேளையில் ஒண்டியாகச் செல்ல முடியாது. பார்வதியையும் துணைக்கு அழைத்துச் சென்றால் வீட்டில் விசுவனைத் தனியே விட முடியாது. வீட்டைப் பூட்டிக் கொண்டு போனால் யாராவது உள்ளே புகுந்து அகப்பட்ட பாத்திரம், பண்டம் ஆகியவைகளைத் திருடிச் சென்று விடுவார்கள். பஞ்ச காலத்தில் எதையும் செய்யலாம்.

'' நான் ஏரிப் பக்கம் போயிட்டு வர்றேன்'' என்று சொல்லி விசுவனையும், பார்வதியையும் வீட்டில் தங்க வைத்து விட்டு நஞ்சம்மா புறப்பட்டாள். மூன்று பர்லாங் தூரத்தில் பெரிய மாமரம். அந்த மரத்தின் பொந்துகளில் ஏராளமான ஆந்தைகள் இருக்கின்றன. அவைகள் இரவு நேரத்தில் அலறு வதைக் கேட்டால் பயமாக இருக்கும். யார் வீட்டின் மீதாவது உட்கார்ந்து ஆந்தை அலறினால் அந்த வீட்டில் ஒரு சிறுவனோ, குழந்தையோ இறந்து விடுவது உறுதி. பெரியவர்கள் இறந்தால்

எரிப்பார்கள். சிறியவர்கள் இறந்தால் புதைத்து விடுவார்கள். ஆகையால் பிராமணர் வீட்டின் மேல் உட்கார்ந்து ஆந்தை அலறினுல் சிறுவர்கள் மட்டுமே இறப்பார்கள். மற்றவர்கள் வீட்டின் மேல் அலறினுல் யாராவது இறப்பார்கள் என்பது ஒரு மரபு. அந்த மரத்தின் அருகே வந்தவுடன் நஞ்சம்மாவுக்குக் கிலி தோன்றியது. ராமண்ணன் அந்த மரத்தைக் கடந்து தானே வர வேண்டும். பத்து வயதுச் சிறுவன் எப்படித் தைரியமாக வர முடியும்?.

அங்கேயே நின்று கொண்டிருக்கவும் விருப்பமில்லை. திரும்பிச் செல்லவும் விருப்பமில்லை. அவள் இரண்டு பர்லாங் தூரம் மறுபடியும் முன்னே நடந்தாள். வழியில் இருந்த ஒரு பெரிய கல்லின் மேல் ஏறி நின்று பெருமூச்சு விட்டவாறு தொலைவில் பார்த்தாள். அரைமணி நேரம் கழிந்தது. அவன் வருவதாகக் காணும். அவளுடைய பதற்றம் அதிகரித்தது. அரிச்சந்திரன் கதை அவளுக்கு நினைவு வந்தது. பாம்பு கடித்த மகனை எண்ணி, எண்ணி சந்திரமதி எவ்வளவு அழுதாளோ! கம்பனகெரெ செல்லும் வழியில் பாம்புப் புற்றுகள் ஏராளம். வயல் வரப்புகளில் தவளையைப் பிடிக்கச் செல்லும் பாம்புகள் அந்தப் புற்றுகளில் தான் தங்குமாம். ராமண்ணன் வரும் வழியில் கவனமில்லாமல் ஏதாவது ஒரு பாம்பின் மேல் காலை வைத்து மிதித்து விட்டானே! வெளியே தலையை நீட்டிக் கொண்டிருக்கும் பாம்பின் மேல் கல் வீசினனே! ஆனுல் ராமண்ணன் நல்ல பையன். போக்கிரித்தனம் செய்ய மாட்டான் — என்றெல்லாம் நினைத்துக் கொண்டாள்.

அவள் சற்று நேரம் அங்கேயே நின்று கொண்டிருந்தாள். கொட்டகைக்குத் திரும்பிச் சென்று யாராவது ஒன்றிரண்டு ஆண் பிள்ளைகளை அழைத்து வந்து தேடச்சொல்லலாம் என்று நினைத்துத் திரும்பினுள். பிறகு மறுபடியும் ராமண்ணன் வரும் வழியில் பார்வையைச் செலுத்தினுள். பெற்ற அப்பனுக்கு மகனைப் பற்றிய கவலை இல்லை, மதியம் வெளியே சென்ற ஆள் இனியும் திரும்பி வரவில்லை என்று அவள் உள்ளம் எண்ணியது.

அவள் நின்று கொண்டிருந்த இடமும் நல்ல இடம் அல்ல. மூன்று வருடங்களுக்கு முன்பு, அருகே இருந்த கல் மேடையின் மேல் தான் சன்னேனஹள்ளி மணியக்காரனைக் கல்லால் அடித்து, நசுக்கிக் கொலை செய்தார்களாம். அவன் பேய் உருவில் சுற்றித் திரிந்து கொண்டிருக்கிருனும். சில இரவு வேளைகளில் அவன்

'கோ' வென்று அலறுவதைத் திப்டூரிலிருந்து வரும் வண்டிக் காரர்கள் கேட்டிருக்கிறார்களாம்.

நஞ்சம்மாவுக்குத் திகில் ஏற்பட்டது. ஒரு கணம் உடம்பு சில்லிட்டது. திரும்பிச் சென்று விடலாம் என்று யோசனை தோன்றியது. ஆனால் மகன் இன்னமும் வீடு திரும்பவில்லை. பெரியவளான தானே பயந்து சென்று விட்டால். அவன் எப்படி வருவான் என்ற கேள்வியும் எழுந்தது. அவள் அங்கேயே நின்றாள். இருளில் பார்வை வெகு தொலைவு செல்லவில்லை.

பேய் ஒரு இடத்தில் தங்கி இருக்காதாம். அங்குமிங்கும் அலைந்து கொண்டே இருக்குமாம். அது கம்பனகெரெய்க்குச் சென்று திரும்பி வரும் வழியில் ராமண்ணனைப் பிடித்துக் கொண்டு விட்டால் என்ன கதி என்ற பயம் ஏற்பட்டது. பேய், பிசாசு என்பதெல்லாம் பொய். அப்பாவும், கல்லேசனும் நள்ளிரவில் எங்கெல்லாமோ சுற்றுகிறார்கள். உண்மையிலேயே பேய் இருந்தால் அவர்களைப் பிடித்துக் கொண்டிருக்குமே என்ற எண்ணம் வந்தவுடன் மனம் ஆறுதல் அடைந்தது. சிறிய பையன், இன்னமும் வரக் காணோம் என்ற கவலை உறுத்தத் தொடங்கியது.

அப்பொழுது சற்றுத் தொலைவில் ஒரு மனித உருவம் தென் பட்டது. அந்த உருவத்தின் தலையில் ஒரு மூட்டை இருப்பது போல் தோன்றியது. அது ராமண்ணனாக இருக்க முடியாது. பள்ளிக்கூடத்திலிருந்து வரும் பையனின் தலை மேல் மூட்டை எப்படி இருக்க முடியும்? அந்த உருவம் பாதையில் சற்று தூரம் வந்தவுடன் திடீரென்று பயந்ததுபோல் பாதையை விட்டு விலகி முள்ளும், கல்லும் நிறைந்த இடத்தில் கால்களை எட்டிப் போட்டு நடப்பது போல் தோன்றியது. நஞ்சம்மா சற்றுத் தைரிய மடைந்து ''யாரது?'' என்று கேட்டாள். பதிலில்லை. அவள் மறுபடியும் உரக்க ''யாரது?'' என்று கேட்டவுடன் அந்த உருவம் அங்கேயே நின்றது. பிறகு ''யார், அம்மாவா?'' என்ற குரல் கேட்டதும் அது ராமண்ணன்தான் என்பது தெரிந்து விட்டது.

''நான் தான் கண்ணு, ஏன் அந்தப் பக்கம் கல்லு, முள்ளு மேலே நடந்து போறே?''

ராமண்ணன் நெருங்கி வந்தான். அவனுடைய தலையின் மேல் மூன்று பலாக் காய்கள் இருந்தன. உடுத்தியிருந்த வேட்டி யைக் கிழித்து அந்தக் காய்களை ஒரு மூட்டையாகக் கட்டித் தலையில் வைத்துக் கொண்டிருந்தான்.

''ஏன் அந்தப் பக்கம் போனே கண்ணு?'' என்று தாய் கேட்டாள்.

''இருட்டிலே ஒரு உருவம் நின்னுகிட்டிருப்பது தெரிஞ்சது. இந்தக் கல் மேடையிலே கொலை நடந்திருக்கிறதா நீ சொல்லி யிருக்கே இல்லியா? அதனுலே, பேய் தான் நின்னுகிட்டிருக் குன்னு நெனச்சு வேகமா நடந்தேன். நீ நிக்கறது எனக்கு எப்பிடித் தெரியும்?''

''இதை எங்கிருந்து கொண்டு வந்தே? நான் தூக்கிக்கிறேன், கொடு'' என்று சொல்லியவாறு அவள் மூட்டையைத் தூக்கிக் கொண்டாள்.

''வர்ற வழியிலே கவுடர் வளவு இருக்கில்லேயா? அங்கே ஒரு தோட்டத்திலே இந்தக் காய்கள் காச்சிருக்கறதைப் பாத் தேன். அதனுலே வேணும்னே நேரம் கழிச்சு இருட்டினப்புறம் புறப்பட்டேன். இருட்டிலே வேலியைத் தாண்டிப் போய், காய்களைப் பறிச்சேன். நறுக்கிக் கறி செஞ்சா வயிறு ரொம்பும் இல்லியா?''

மகனுடைய வீரத்தையும், புத்திசாலித் தனத்தையும் பாராட்டி என்ன சொல்வதென்று அவளுக்குத் தெரியவில்லை. திருடுவது, பொய் சொல்வது ஆகியவை எல்லாம் பாவம் என்று அவள் குழந்தைகளுக்கு சொல்லியிருக்கிருள். நடுநிலைப் பள்ளியில் படிக்கும் ராமண்ணனுக்கு அது நிச்சயம் மறந்து போயிருக்காது. ஆனுல் இப்பொழுது பாவத்தைப் பற்றி அவள் எந்தப் புத்திமதி யும் சொல்லவில்லை. இருவரும் வேகமாகக் கால்களை வீசிப் போட்டு நடந்தார்கள். வீட்டில் குழந்தைகள் பசியால் வாடிப் படுத்திருந்தார்கள். ராமண்ணன் பத்து மைல் நடந்திருக்கிருன். பலாக் காயை நறுக்கிக் கறி செய்தால் வயிற்றை எப்படியோ நிரப்பி விடலாம்.

அவள் கொட்டகைக்குத் திரும்பி வந்த பொழுது, அவளுடைய வீட்டுக்காரர் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண் டிருந்தார். வயிறு காலியாக இருந்தால், குறட்டை வராது என்பது நஞ்சம்மாவுக்கும், ராமண்ணனுக்கும் தெரியும். அவர்கள் எதுவும் பேசவில்லை. பார்வதியும் விசுவனும் சுருண்டு படுத்திருந்தார்கள். நஞ்சம்மா அரிவாள் மனையை எடுத்து வைத்துக் கொண்டு காய்களை நறுக்கினுள். அவைகளின் மேல் தோலை சீவி எடுத்துவிட்டு அடுப்பில் வேக வைத்தாள். வெந்து கொண்டிருக்கும் பொழுது ஒரு பிடி மிளகாய்ப் பொடியும் தூவினுள்.

ராமண்ணன் மெல்லக் கேட்டான், ''அம்மா, குடியானவங்க வீட்டு ரொட்டியைச் சாப்பிடறது பாவந்தானே?''

''ஏண்டா கண்ணு?''

''இன்னிக்கு மத்தியானம் நான் எதுவும் சாப்பிடாம மரத் தடியிலே உக்காந்திருந்தேன். நரசே கவுடன்னு ஒரு சிநேகிதன் இருக்கான். அவங்கிட்டே ரொட்டி மீந்திருந்தது. நான் ஏன் சாப்பிடலேன்னு, கேட்டான். நான் பதில் சொல்லலே. 'என் ரொட்டியைச் சாப்பிடு. யார்கிட்டேயும் சொல்லமாட்டேன்'னு சொன்னான். அவன் கொடுத்த ரொட்டி உள்ளங்கை அளவு தடிப்பா இருந்தது. தின்னுட்டேன். யார்கிட்டேயும் சொல்ற தில்லேன்னு கையைத் தொட்டுச் சத்தியம் செஞ்சிருக்கான்.''

தாய் பதில் சொல்லவில்லை. ''அம்மா, அது பாவம் இல்லியா? சாமி தண்டனை கொடுக்கமாட்டாரா? என்று அவன் மறுபடியும் கேட்டதும் ''மாதேவய்யாவோட தட்டிலே விசுவன் சாப்பிடலையா? என்று அவள் சொன்னாள்.

''அவன் சின்னப் பையன். நான் பெரியவன் இல்லியா?''

மகனுடைய கேள்விக்குப் பதில் சொல்ல அவளுக்குத் தெரியவில்லை. அவன் மீண்டும் கேட்கவில்லை. பலாக்காய்த் துண்டுகள் வெந்தவுடன் உப்பைப் போட்டுக் கீழே இறக்கி வைத்து விட்டுப் பார்வதியையும் விசுவனையும் எழுப்பினாள். ''பலாக்காய்க் கறி சாப்பிடறீங்களா?'' என்று வீட்டுக்காரரைத் தட்டி எழுப்பிக் கேட்டாள். ''எனக்கு வேண்டாம்'' என்று சொல்லிவிட்டு அவர் மறுபடியும் குறட்டையில் ஆழ்ந்தார். தாயாரும் குழந்தைகளும் வயிறு நிரம்பச் சாப்பிட்டார்கள். இரவு படுத்துக் கொண்ட பின் அவள் கிசுகிசுத்த குரலில் ராமண்ணனிடம் ''மறுபடியும் அந்தத் தோட்டத்துக்குப் போகாதே. ஒரு தடவை திருட்டுப் போன பிறகு அவங்க ஜாக்கிரதையா இருப்பாங்க'' என்று கூறினாள்.

5

கிராமத்தில் மக்கள் எல்லோரும் உணவைத் தேடி எல்லா இடங்களிலும் சுற்றி அலைந்தார்கள். ஏரித் தண்ணீர் வற்றிப் போனதால் ஏரிப் படுகை வறண்டு விரிசல் விட்டிருந்தது. அந்த மண்ணைத் தோண்டினால் தாமரைக் கிழங்கு அகப் படுகிறதென்று ஒரு நாள் மீனவன் மாடன் கண்டு பிடித்தான். உடனே எல்லோரும் ஏரிக்குள் ஒவ்வொரு இடத்தில் உட்கார்ந்து

கொண்டு தரையைத் தோண்ட ஆரம்பித்தார்கள். காலையிலிருந்து மாலை வரை ஒருவன் தோண்டினுல், நான்கு பேர் சாப்பிடக் கூடிய அளவு கிழங்கு கிடைத்துக் கொண்டிருந்தது. நஞ்சம்மா வும், பார்வதியும், மண் வெட்டி, கடப்பாரை ஆகியவைகளை எடுத்துக் கொண்டு புறப்பட்டார்கள். இலை தைக்கும் வேலைக்குப் பதிலாக இந்த வேலை அகப்பட்டது. தலையின் மேல் முந்தானை யைப் போட்டுக் கொண்டு இருந்தாலும், வெய்யில் உடம்பைப் பொசுக்கியது. முதல் நாள் கிழங்குகளைக் கொண்டு வந்து அவைகளை நன்கு தேய்த்துக் கழுவி, வேக வைத்துச் சாப்பிடு வதற்குள் பெரும்பாடாகி விட்டது. இருந்த போதிலும் வயிற்றை நிரப்பாமல் இருக்க முடியாதே! மறுநாள் வெய்யில் ஏறுவதற்கு முன்பே புறப்பட வேண்டுமென்று தாயும், மகளும் முடிவு செய்தார்கள்.

மறு நாள் அவர்கள் புறப்படும் வேளையில் அவர்களுடன் சர்வக்காவும் வந்து சேர்ந்தாள். தரையைத் தோண்டிக் கொண் டிருக்கும் பொழுது பேச்சு வாக்கில் நஞ்சம்மா சொன்னுள். "பாருங்க. மாதேவய்யா ஊரைவிட்டுப் போனதுக்கப்புறம் ஊருக்கு இந்தக் கதி வந்திட்டுது. பெரியவங்க சாபம் சும்மா விடாதுன்னு சொல்றது பொய் அல்ல."

"யாரோ நாலு பாவிங்க சொன்னதாலே எல்லோருக்குமே இந்த கஷ்டம் வந்திட்டுது."

"உங்க ஜாதிக்காரங்க தான் சொன்னுங்களாம்."

"உங்களுக்கு உள் விஷயம் தெரியாது. எங்க வீட்டுக்காரர் தான் மத்தவங்ககிட்டே சொல்லித் தூண்டி விட்டாரு."

"அவர் திரும்பி வந்தாலும் வரலாம். அவரோட பாத்திரம், ராகி, மௌகாய் எல்லாமே கோவில்லேதான் இருக்கு. சாவி அவர்கிட்டேதான் இருக்கு."

ஏழெட்டு நாட்கள் சர்வக்காவும் கிழங்கு எடுக்க வந்தாள். ஒரு நாள் அவள் ஐந்து படி ராகி, ஒரு படி அரிசி ஆகியவைகளை மறைவாக எடுத்து வந்து நஞ்சம்மாவிடம் கொடுத்து "யார் கிட்டேயும் சொல்ல வேண்டாம். எங்க வீட்டுக்காரர் ரெண்டு மூட்டை ராகி, இருபத்தஞ்சுபடி அரிசி, காப்பிக் கொட்டை எல்லாம் கொண்டு வந்திருக்காரு. கோர்ட்டு வேலையாத் திப்டூருக்குப் போயிருந்தாராம்" என்றுள்.

இந்த ராகியைச் சிக்கனமாக செலவழித்தால், பள்ளிக் கூடத்திற்கு நடந்து போகும் ராமண்ணனுக்கும், சிறிய பையன்

விசுவனுக்கும் எட்டு நாட்கள் காலே வேளேயில் ரொட்டி செய்து கொடுக்கலாம். கிழங்கைத் தின்று, தின்று வயிற்றில் எரிச்சல். ஒரு நாளாவது அரிசிச் சோறு வடித்து, குழம்பு செய்து சாப்பிட லாம். சர்வக்காவின் நல்ல எண்ணத்தை நினைத்து நஞ்சம்மா சந்தோஷப்பட்டாள். ரேவண்ண செட்டியிடம் எவ்வளவு கெட்ட சுபாவம் இருந்த போதிலும், தேவையான வேளேகளில் புத்திசாலித்தனமாக நடந்து கொள்கிறுன். கோர்ட்டுக்கு வரும் ஏதோ ஒரு கட்சிக்காரனிடம் தில்லு முல்லு செய்திருக் கிறுன். இல்லாவிடில், இவ்வளவு அரிசியும், ராகியும் வாங்க அவனிடம் பணம் ஏது? அவனுடைய சம்பாத்தியம் எல்லாம் தவறுன வழிகளில் தான். இவ்வாறு நினைத்துக் கொண்டே ராகியை அரைப்பதற்காக கல்லின் எதிரே அமர்ந்தாள்.

சில நாட்களுக்குப் பிறகு கிராமத்தில் இருந்த வாணிகர்களுக் கும், கவுடர்களுக்கும் இடையே தகராறு ஏற்பட்டது. மாதேவய்யா தன் கோவிலில் ராகி முதலிய பொருள்களே வைத் திருந்த விஷயம் பல பேர்களுக்குத் தெரியும். பேச்சு வாக்கில் அதைப் பற்றி நஞ்சம்மா சர்வக்காவிடம் கூறினுள். அவள் தன் கணவனிடம் அதைத் தெரிவித்தாள். அந்தத் தானியம் தன் வீட்டிற்கு வந்தால் பரவாயில்லே என்பது அவளுடைய ஆசை. இதைப் போன்ற விஷயங்களில் ரேவண்ண செட்டியின் மூளே அபாரமாக வேலே செய்யும். ஒரு நாள் கோவிலுக்குப் போய்ப் பூட்டை உடைத்து, அங்கிருக்கும் தானியம் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு வந்து விட வேண்டும் என்று நினைத்தான். காலியாக இருக்கும் ஊருக்குள் தான் மட்டும் ஒண்டியாகப் போக அவனுக்குப் பயம். பிளேக் மாரியம்மா ஊருக்குள் திரிந்து கொண்டிருப்பாளாம். இரவு வேளேயில் தான் அந்த வேலேயைச் செய்ய வேண்டும். சிவன் கோவிலின் உள் அங்கணத்திற்குள் புகுந்து பூட்டை உடைக்க வேண்டும். மாரியம்மா என்பது சிவபிரானின் தேவி தானே? தான் அவ்வாறு திருட்டுத்தனம் செய்தால் ரத்தம் கக்கிச் சாகுமாறு தேவி செய்து விடுவாளே! ஆனுல் தானியத்தை எடுத்துக் கொள்ளும் ஆசையையும் விட முடியவில்லே. இரண்டு பேர்களாகச் சேர்ந்து போகலாம் என்று நினைத்துத் தன் தாயாதியான புட்டண்ண செட்டியிடம் விஷயத்தைச் சொன்னுன். விஷயம் இப்படியே பரவி, எல்லா வாணிகர்களுக்கும் தெரிந்துவிட்டது. ''மாதேவய்யா நம்ம ஜாதிக்காரர். அதனுலே நாம எல்லோரும் பங்கு போட்டுக்க லாம்'' என்று வாணிகர்கள் எல்லோரும் பேசிக் கொள்ளும் அளவிற்கு விஷயம் வந்துவிட்டது. பிறகு மெல்ல மெல்லப் பரவி கவுடர், சேணியர், மீனவர், குடியானவர் முதலிய எல்லோருக்

குமே தெரிந்துவிட்டது. ''வாணிகர் வீடுகள்லே மாத்திரம் அய்யா தானியம் வாங்கலே. எங்க ஜாதிக்காரங்களும் அவருக்குக் கொடுத்திருக்காங்க. அதனாலே எங்களுக்கும் பங்கு தரவேணும்'' என்று ஒவ்வொருவரும் பேச ஆரம்பித்தார்கள். அந்தப் பேச்சு சண்டையாக மாறி, அடித்துக் கொள்ளத் துவங்கினார்கள். கடைசியில், மணியக்காரன் சிவே கவுடன் பஞ்சாயத்து செய்து, அந்தத் தானியத்தை எல்லோரும் பங்கு போட்டுக் கொள்ள வேண்டும், என்று தீர்ப்புச் சொன்னான். ஒவ்வொருவருக்கும் இரண்டு படி ராகி கிடைக்கலாம் என்று கணக்குப் போட்டார்கள்.

ஒரு நாள் மதியம் வீட்டுக்கு ஒரு ஆள் வீதம் எல்லோரு மாகத் திரண்டு ஊருக்குள் நுழைந்தார்கள். கோவிலுக்குள் சென்று பார்த்த பொழுது அய்யாவின் அறையில் பூட்டே இருக்கவில்லை. உள்ளே நுழைந்து பார்த்த பொழுது அரிசி, ராகி, மிளகாய் எதுவுமே இருக்கவில்லை. அலுமினியப் பாத்திரங்கள் மட்டுமே இருந்தன.

''எவனோ திருட்டுப் பயல் அடிச்சுகிட்டுப் போயிட்டான்'' என்று எல்லோரும் பேசிக் கொண்டார்கள். ஆனால் அந்த ஆள் யார் என்பதைக் கண்டு பிடிக்கும் வழி எவருக்கும் புலப்பட வில்லை. எல்லோரும் ஏமாற்றத்துடன் திரும்பினார்கள்.

ஏரிப் படுகையில் இருந்த கிழங்குகள் எல்லாமே தீர்ந்து போயின. ஒரு அங்குல இடத்தையும் விட்டு வைக்காமல் எல்லா இடத்தையும் தோண்டிப் பார்த்து விட்டார்கள். கற்றாழைச் செடியின் கிழங்கை வேக வைத்துச் சாப்பிடலாம் என்று யாரோ சொன்னார்கள். அது ருசியாகவும் இருந்தது. ஆகையால் சுற்று வட்டாரத்தில் இருந்த கற்றாழைச் செடிகள் எல்லாவற்றையும் பறித்து எல்லோரும் வயிறு நிரம்பச் சாப்பிட்டார்கள்.

அதைச் சாப்பிட்ட இரண்டாம் நாள் எல்லோருக்கும் பேதி கண்டது. பதினாறு பேர் மடிந்து போனார்கள். அதன் காரணத்தை உணர்ந்து கொண்ட மற்றவர்கள் கற்றாழையின் பக்கம் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை.

6

நஞ்சம்மா, பார்வதி, சர்வக்கா ஆகிய மூவரும் கிழங்கு தோண்டச் சென்றிருந்த பொழுது ஒரு நாள் பார்வதிக்குத் தலைவலி வந்தது. தலையின் மேல் முக்காடு போட்டிருந்தாலும் வெய்யில் 'சுளீர்' என்று தாக்கியது. ''நீ கொட்டகைக்குப் போ. நாங்க ரெண்டு பேரும் கெழங்கு தோண்டி எடுத்துட்டு வர்றோம்''

என்று சர்வக்கா அவளிடம் கூறினாள். நஞ்சம்மாவும் அவ்வாறே சொன்னபின், பார்வதி புறப்பட்டாள்.

கோவிலுக்கு அருகே அவள் கரையேறி, கொட்டகையை நோக்கி கரையின் மீது நடந்து வந்து கொண்டிருந்தாள். அப்பொழுது நரசி எதிர்ப்பட்டாள். அவள் பார்வதியிடம் கேட்டாள், ''கெழங்கு தோண்டியாச்சா?''

''இல்லே. எனக்குத் தலைவலி. அதனாலே வந்துட்டேன்''

''என் கடைக்கு வா. கொஞ்சம் கடலை தர்றேன். சாப்பிடு.''

பார்வதி பதில் சொல்லாமல் நடந்தாள். கொட்டகைக்குச் செல்ல வேண்டிய திருப்பத்தில் அவள் நடக்க ஆரம்பித்ததும் நரசி அவளிடம், ''கூச்சப்பட வேணாம், கடலை சாப்பிட்டா எதுவும் ஆகாது'' என்றாள். அப்பொழுது கொட்டகைக்கு அருகே விளையாடிக் கொண்டிருந்த விசுவன் அவளை நோக்கி ஓடி வந்தான். நரசி கடலையைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தது அவனுடைய காதிலும் விழுந்தது. அவன் அக்காவிடம் ''வாக்கா, கொண்டு வரலாம்'' என்று சொல்லி அடம் செய்தான். ஆகையால் இருவரும் புறப்பட்டார்கள். நரசி அவர்களுக்கு இரண்டிரண்டு பிடி வறுத்த கடலையும், ஒரு துண்டு வெல்லமும் கொடுத்தாள். விசுவன் அள்ளிப் போட்டு சாப்பிட ஆரம்பித்தான். பார்வதி ஒரு பிடி கடலையை வாயில் போட்டுக் கொண்டாள். அப்பொழுது திடீரென்று அவளுடைய கண்களில் நீர் நிரம்பியது. ''ஏம்மா அழறே?'' என்று நரசி கேட்டதும் அவள் விக்கி, விக்கி அழ ஆரம்பித்தாள். நரசி அவளுடைய முதுகை அன்புடன் தட்டிக் கொடுத்து மறுபடியும் கேட்டவுடன் ''ராமண்ணன் பட்டினியா பள்ளிக்கூடம் போயிருக்கான்'' என்று சொன்னாள்.

நரசியின் மனம் இளகியது. அவள் உடனே இரண்டு பிடி கடலையையும், ஒரு வெல்லத் துண்டையும் பார்வதியிடம் கொடுத்து ''இதை அவனுக்குக் கொடு'' என்றாள். பார்வதியின் அழுகை குறைந்தது. ''நாங்க போயிட்டு வர்றோம்'' என்று சொல்லி விட்டு, விசுவனின் கையைப் பிடித்துக் கொண்டு அவள் புறப்பட்டாள். கதவைத் திறந்து உள்ளே சென்று பாயை விரித்துப் போட்டுப் படுத்தாள். அவளுடைய மனம் பலவிதமாக யோசித்தது. தான் இது வரை நரசியிடம் பேசியதில்லை. அவள் கெட்டவளாம். அவள் இன்று தன்னை வலிய அழைத்துக் கடலை கொடுத்தாள். தான் அதைச் சாப்பிட்டிருக்கக் கூடாது. அம்மாவுக்குத் தெரிந்தால் திட்டுவாள். அம்மாவிடம் சொல்லக்

கூடாது. ஆனால் ராமண்ணனுக்குத் தரவேண்டிய கடலையை என்ன செய்வது? இது எங்கிருந்து கிடைத்தது என்று கேட்டால் என்ன சொல்வது? விசுவன் எல்லா விஷயத்தையும் சொல்லி விடுவானே! என்ன செய்வது? என்று பலவாறு யோசித்தாள். கடைசியில் ஒரு உபாயம் புலப்பட்டது. தான் முடிந்து வைத் திருந்தவற்றை விசுவனிடம் கொடுத்து, ''இதையும் நீயே சாப்பிடு'' என்றாள்.

''ராமண்ணனுக்கு வேண்டாமா?'' என்றான் அவன்.

''அம்மா அவனுக்குக் கெழங்கு வேக வைச்சுக் கொடுப்பா. இது அவன் உடம்புக்கு ஒத்துக்காது. நீயே சாப்பிடு'' என்று சொல்லி அவனையே சாப்பிடச் செய்தாள்.

அவன் சாப்பிட்டு முடித்ததும் சொம்பிலிருந்து தண்ணீரை எடுத்துக் குடித்தான். அவள் அவனைத் தன்னருகே உட்கார வைத்து ''இங்கே பாரு, நரசம்மா கடையிலே சாப்பிட்டதைச் சொன்னா அம்மா அடிச்சுடுவா. யார்கிட்டேயும் சொல்லாதே'' என்றாள்.

''எதுக்காக அடிக்கணும்?''

''நரசம்மா கெட்டவள்னு எல்லோரும் சொல்றாங்க, இல்லியா? அதனாலே நீ யார்கிட்டேயும் சொல்லக்கூடாது.''

''உம்''

''சத்தியம் செய்'' அவன் அவளுடைய உள்ளங்கையின் மேல் தன் கையால் ஒரு முறை அடித்து சத்தியம் செய்தான். ஆனாலும் அவளுடைய கிலி குறையவில்லை. கிராம தேவதை யான காளம்மன் கோவிலுக்கு அவனை அழைத்துச் சென்றாள். மூடியிருந்த கோவில் கதவைத் தொட்டுச் சத்தியம் செய்யச் சொன்னாள். பிறகு அவனைப் பார்த்து ''நீ அம்மன் மேல் ஆணை யாகச் சொல்லி இருக்கே. ஆணையை மீறினா கோவில்லே இருக்கற வேதாளம் உன்னை சாப்பிட்டுடும்'' என்று மிரட்டினாள்.

''நான் சொல்லமாட்டேன். எனக்குத் தெரியாதா?'' என்று சமாதானம் சொன்னான் அவன்.

மாலையில் அம்மா வீடு திரும்பியதும் கிழங்குகளைக் கழுவி வேக வைத்தாள். பொழுது சாய்ந்ததும் ராமண்ணன் திரும்பி னான். எங்கோ வெளியில் சென்றிருந்த சென்னிகராயரும் திரும்பி வந்து சேர்ந்தார். எல்லோரும் கிழங்கு சாப்பிட்டுக் கொண்டிருந்த பொழுது விசுவன் இடையிலேயே எழுந்து

விட்டான். ''ஏண்டா, வேறு என்ன சாப்பிட்டே?'' என்று நஞ்சம்மா அவனிடம் கேட்ட பொழுது பார்வதிக்கு 'பகீர்' என்றது. ''எனக்குப் பிடிக்கலே'' என்று விசுவன் சொன்னான். எல்லோரும் சாப்பிட்டு முடித்த பிறகு அவனே பார்வதியின் கையைப் பிடித்துக் கொட்டகைக்கு வெளியே அழைத்துச் சென்று ''நான் சொன்னேனா?'' என்று கேட்டான்.

''நீ கெட்டிக்காரன்'' என்று அவனைப் புகழ்ந்து விட்டு உள்ளே சென்றாள்.

7

சுற்று வட்டாரத்தில் எல்லாக் கிராமங்களிலும் பிளேக் நோய் மறைந்து விட்டதால் ஜனங்கள் தங்களுடைய கொட்டகைகளை விட்டு ஊருக்குள் குடி வந்து விட்டார்கள். ராமஸந்திர கிராமத்துக்காரர்களும் தங்களுடைய ஊருக்குள் வந்து விட்டார்கள். வெளியே நடத்திய வாழ்க்கைக்கும், உள்ளே நடத்துகின்ற வாழ்க்கைக்கும் அதிக வேறுபாடு இருக்கவில்லை. இரண்டு இடங்களிலும் வயிற்றுப்பாடு திண்டாட்டம்தான்.

நஞ்சம்மாவுக்கு ஒரு உபாயம் தோன்றியது. அப்பண்ணய்யா குடிசை கட்டிக் கொண்டிருந்து விட்டுப் பிறகு நெருப்பு வைத்துக் கொளுத்திய இடம் குண்டே கவுடருடையது. அந்த வருடம் நாலேபயலு கிராமத்தைத் தவிர மற்ற ஊர்கள் எல்லாமே பஞ்சத்தால் பாதிக்கப்பட்டிருந்தபடியால் அரசாங்கம் வரி வஜா செய்துவிட்டது. அந்த வருடம் வரி வசூலிக்க அவர்கள் குருபர ஹள்ளிக்குப் போயிருக்கவில்லை. வரியில் கழித்துக் கொள்ளலாம் என்று நினைத்து குண்டே கவுடரிடம் வாங்கியிருந்த தொகைக்கு என்ன பதில் சொல்வது?

சென்னிகராயர் எட்டு நாட்களாக ஊரில் இருக்கவில்லை. அவர் எங்கே போயிருந்தார் என்னும் விஷயமும் யாருக்கும் தெரியாது.

நஞ்சம்மா குருபரஹள்ளிக்குப் போய் குண்டே கவுடரிடம் ''கவுடரே, இந்த வருஷம் வரி இல்லை. உங்க பணத்தை அடுத்த வருஷம் கழிச்சுக்கலாம்'' என்றாள்.

''சரி விடம்மா. இப்ப உங்கிட்டே பணத்தைக் கேட்டா நீ என்ன செய்ய முடியும்?''

''சரி இன்னொரு விஷயம். ராமஸந்திர கிராமத்திலே உங்க இடம் இருக்கில்லியா? அங்கே நான் கொஞ்சம் தண்டங்கீரை பயிர் செய்யட்டுமா?''

''தாராளமாச் செய்யி''

வீட்டுக்கு வந்த சுமங்கலி வெறுங்கையுடன் திரும்பக் கூடாது என்று நஞ்சம்மாவுக்கு ஒரு தேங்காயும், ஒரு படி ராகி மாவும் கொடுத்தனுப்பினூர் குண்டே கவுடர். நஞ்சம்மா அவரையும், அவருடைய சந்ததியையும் மனமார வாழ்த்திக் கொண்டே திரும்பினுள். அப்பொழுது அவளுக்கு ஒரு எண்ணம் தோன்றியது. வரி வஜா ஆகிவிட்டாலும், கணக்குப்பிள்ளையின் சம்பளத்தில் பிடித்தம் எதுவும் இருக்காது. முழு சம்பளமும் கணவரின் கையில் வந்து விட்டால் அந்தப் பணம் முழுவதையும், அவர் திப்டூர் ஓட்டலில் தின்று தீர்ப்பார். பணம் அவரிடம் போய்ச் சேராமல் தடுக்க வேண்டும். என்ன செய்வது? ஷேக் தாரிடம் போய் விஷயத்தைச் சொல்லிக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ள வேண்டும். மற்றவர்கள் யாரும் எதுவும் செய்ய முடியாது.

வீட்டுக்காரரர் எட்டு நாட்களாக ஊரில் இல்லே. கங்கம்மா வும், அப்பண்ணய்யாவும் யாசகம் செய்து நிதி திரட்டுவதற்காக நாலேபயலு கிராமத்துப் பக்கம் போயிருக்கிறூர்கள். சுகமான சாப்பாடு கிடைக்கும் என்று நினேத்துக் கொண்டு வீட்டுக்காரரும் அவர்களுடன் போயிருக்கிறுரோ!

அவள் ராமண்ணனே உடன் அழைத்துக் கொண்டு கம்பன கெரெய்க்குப் போனுள். ஷேக்தாரின் வீட்டிற்குப் போய் அவரைப் பார்த்த பொழுது ''என்னம்மா விசேஷம்? இந்த வருசம் வெளேச்சலும் இல்லே. வரி வசூலும் இல்லே. அடுத்த வருசம் என்ன ஆகுதோ பாப்போம்'' என்ருர்.

தன் கணவரின் சம்பளத்தைப் பற்றியும், குருபரஹள்ளி குண்டே கவுடரின் வரிப் பணத்தை முன்கூட்டியே பெற்றுக் கொள்வதைப் பற்றியும் அவள் விளக்கிச் சொன்னுள்.

''பாருங்கம்மா, சென்னிகராயரோட சங்கதி எனக்கு நல் லாத் தெரியும். இந்தப் பிர்க்காவிலே அவரோட விவகாரத்தைப் பேசாத கணக்குப்பிள்ளேகளே கெடையாது. ஆனு சட்டப்படி நான் இந்த விஷயத்திலே ஒண்ணும் செய்ய முடியாது. மேல் அதிகாரிகிட்டே ஒரு பேச்சு சொல்றேன்.''

''எப்பிடியோ, நீங்க வயித்துக்கு வழி செய்யணும்.''

உடனே ஷேக்தாரின் மனேவி குறுக்கிட்டு ஷேக்தாரிடம், ''நீங்க திப்டூருக்குப் போறீங்க இல்லியா? இவரையும் கூட்டி கிட்டுப் போய் அதிகாரிகிட்டே நேரிலே விஷயத்தைச்

சொல்லுங்க. புருஷனோட லட்சணம் அவருக்கும் தெரியட்டும்'' என்று சொன்னாள்.

ஒரு மணி நேரம் கழித்து, முதலியார் சர்வீஸ் மோட்டாரில் தன்னுடன் திப்டூருக்கு வருமாறு ஷேக்தார் சொன்னார். மோட்டாருக்குக் கொடுக்கத் தன்னிடம் பணம் இல்லையென்று சொன்ன போது நஞ்சம்மாவுக்கு உயிர் போவது போல் அவமானம் ஆயிற்று.

''பரவாயில்லை உங்களுக்கு நாலணா. பையனுக்கு ரெண்டணா. நானே கொடுத்துடறேன்.'' என்றார் அவர்.

அம்மாவும், மகனும் அவருடைய வீட்டில் காபி, உப்புமா சாப்பிட்டார்கள். மோட்டாரில் ஏறி பன்னிரண்டு மணி சுமாருக்கு தாலூகா ஆபீஸ் போய்ச் சேர்ந்தார்கள். ஷேக்தார் பிர்க்கா குமாஸ்தாவிடம் விசாரித்தார். ''சார் ராமஸந்திர கிராமத்து பிர்க்கா சம்பளத்தைக் கொடுத்து எட்டு நாளாச்சே!'' என்றார் குமாஸ்தா.

நஞ்சம்மாவுக்குப் ''பகீர்'' என்றது ''இப்ப என்ன செய்றதம்மா?'' — ஷேக்தார் கேட்டார்.

''அவர் இந்த ஊரிலேதான் இருப்பார். எல்லாப் பணமும் செலவாயிருக்காது. நீங்க போய் மெரட்டினா கொடுத்துடுவாரு''.

''சார் அவர் எப்பவும் மாதவபட்டர் ஓட்டல்லே தான் இருப்பார். வேணும்னா இப்ப போய்ப் பாருங்க. அங்கே சாப்பிட்டுக்கிட்டிருப்பார்.'' என்றார் குமாஸ்தா.

மூவரும் ஓட்டலுக்குப் புறப்பட்டனர். நஞ்சம்மாவும் ராமண்ணாவும் ஓட்டலின் வெளியே நின்று கொண்டனர். ஷேக்தார் மாத்திரம் உள்ளே போனார். அவர் நேரே சாப்பாட்டு அறைப் பக்கம் சென்று உள்ளே எட்டிப் பார்த்தார். சென்னிகராயர் ஒரு நுனி வாழை இலையின் முன்னால் பலகையில் அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார். உருளைக் கிழங்கு, வெங்காய சாம்பாரில் சோற்றைப் பிசைந்து மெய்மறந்து ருசித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். கறி, பச்சடி, அப்பளம், ஊறுகாய் முதலியவை இலையில் நிரம்பி இருந்தன. அவர் ஷேக்தார் நின்று பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனிக்கவில்லை. ஷேக்தார் அறைக் கதவுக்கு அப்பால் சென்று நாற்காலியில் அமைதியாக அமர்ந்து கொண்டார். வெளியே தாயும், மகனும் காத்துக் கொண்டிருந்தனர். அரைமணி நேரம் கழிந்தது. சென்னிகராயர் நிதானமாகச் சாப்பிட்டு முடித்து வெளியே வந்தார். ஷேக்தாரைக் கண்டவுடன் கை கூப்பி ''வணக்கம் சார்'' என்றார்.

''எங்கே இந்தப் பக்கம் வந்தீங்க?''

''இ...இ...இல்லே...கொஞ்சம் வே...வே...வேலே இருந்தது.''

''சாப்பாட்டுப் பணத்தைக் கொடுத்துட்டு வாங்க. கொஞ்சம் பேச வேணும்.''

பணத்தைக் கொடுத்துவிட்டு சென்னிகராயர் வெளியே வந்தார். நஞ்சம்மாவும் ராமண்ணனும் நின்று கொண்டு இருந்தார்கள். ஷேக்தார் சென்னிகராயரைப் பார்த்து ''உங்க மேலே போலீஸ் வாரண்ட் இருக்குது. உங்களே அரஸ்ட் செய்ய தாசில்தார் உத்தரவு போட்டிருக்கார்.''

சென்னிகராயர் நடுங்கிப் போனர். ''வருஷச் சம்பளத்திலே கழிச்சுக்கறதாகச் சொல்லிக் குடியானவங்கிட்டே பணத்தை வசூல் பண்ணி இங்கே வந்து முழுச் சம்பளத்தையும் வாங்கி செலவு செய்யறீங்க. இது கிரிமினல் குற்றம்'' என்றுர் ஷேக்தார்.

''தெ...தெ...தெரியாமல் செஞ்சுட்டேன், சார். இந்த முண்...'' என்று சொல்ல ஆரம்பித்தவர் தன் நாவை அடக்கிக் கொண்டு ''இவ சொன்ளை சார்?'' என்றுர்.

''யாரோ சொன்னுங்க. ஆபீசுக்குப் புறப்படுங்க.''

''நான் கௌரவமானவன். தயவு செஞ்சு போலீசிலே ஒப்படைக்கவேண்டாம்.''

''உங்ககிட்டே எவ்வளவு பணம் இருக்குது? உடனே எடுத்துக் கொடுங்க, உம்''

''கொடுக்கறேன் சார். உள்ளே இருக்கு.''

''பரவாயில்லே. இங்கேயே எடுத்துக் கொடுங்க.''

சென்னிகராயர் சட்டையைத் தூக்கி, வேட்டியை அவிழ்த்து, உட்பக்கமாக முடிந்து வைத்திருந்த பணத்தை எடுத்தார். ஆறு பத்து ரூபாய் நோட்டுக்களும், ஒரு ஐந்து ரூபாய் நோட்டும் இருந்தன. ஷேக்தார் பணத்தை வாங்கி எண்ணிப் பார்த்துவிட்டு, ''மீதிப் பணம் எங்கே?'' என்றுர்.

''செலவாப் போச்சு, சார்.''

''வீட்டிலே மனேவி கொழந்தைகளேப் பட்டினி போட்டுட்டு இங்கே வந்து பன்னி மாதிரி சாப்புடறீயே, ஏய்யா, உனக்கு வெக்கமாயில்லியா?'' என்று திட்டி விட்டுப் பணத்தை நஞ்சம்மாவிடம் கொடுத்தார். பிறகு சென்னிகராயரைப் பார்த்து, ''உனக்குக் கணக்கு எழுதவும் தெரியாது. இந்த அம்மாதான் எழுதணும். இனிமேலே மனேவி, கொழந்தை

களுக்குத் தெரியாம சம்பளப் பணத்தைத் தின்னு தீர்த்தா உன்னைக் கைது செஞ்சிருவேன், பார். நான் மாற்றலாகிப் போனாலும் கூட புது ஆள்கிட்டே சொல்லிட்டுப் போறேன். பெரிய அதிகாரிகிட்டேயும் சொல்லிடறேன்.''

சென்னிகராயர் நடுத்தெருவிலேயே அவருடைய கால்களைப் பிடித்துக் கொண்டு, ''சார், நான் ஏழை, பெரிய அதிகாரிகிட்டே சொல்லாதீங்க'' என்று கெஞ்சினார். ஷேக்தார் நஞ்சம்மாவிடம், ''அம்மா, நாலு மணிக்கு ஒரு பஸ் இருக்கு. அதுக்குள்ளே ஏதாவது சாமான் வேணும்னா வாங்கிக்குங்க. நான் தாலூகா ஆபீசுக்குப் போயிட்டு அதே பஸ்ஸிலெ வர்றேன்.'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார். அங்கிருந்த அரளி மரத்தின் அருகே, முழங்கால்களுக்கிடையே தலையைத் தொங்கப் போட்ட வாறு சென்னிகராயர் அமர்ந்துவிட்டார். ''அம்மா, ஓட்டல்லே நான் சாப்பிட்டதே இல்லை. இப்ப எனக்கு வாங்கிக் கொடு'' என்றான் ராமண்ணன். ''ஊரிலே அக்காவும், விசுவனும் பட்டினி யாக இருக்காங்களே! காலையிலே ஒவ்வொரு ரொட்டி சாப் பிட்டது அவ்வளவுதான்.''

அவன் பேசவில்லை. அவனுடைய முகம் வாடிப் போயிற்று. அதைக் கண்டதும் அவளுடைய பெற்ற வயிறு கலங்கியது. அவள் அவனை ஓட்டலுக்குள் அழைத்துப் போய் ''ஒரு பைய னுக்கு சாப்பாடு எவ்வளவு?'' என்று கேட்டாள். ''ஆறணா'' என்றார் கடைக்காரர். ''சரி, இவனுக்குச் சாப்பாடு போடுங்க'' என்று அவள் சொன்னதும் ''அம்மா, நீ சாப்பிடலேன்னா எனக்கும் வேண்டாம்'' என்றான் அவன். அவளும் சாப்பிட அமர்ந்தாள். ''கமகம'' வென்று சமையல் மணம் வீசியது. ''வீட்டிலே சாமான் இருந்தா நாமும் நல்லா சமைக்கலாம். நீ பெரியவனாகி சம்பளம் கொண்டு வந்து தர்றப்ப இதைவிட நல்லா சமைச்சுப் போடறேன்'' என்று சொல்லிக் கொண்டே அவள் சாப்பிட்டு முடித்தாள். இருவருக்கும் சேர்த்து ஒரு ரூபாய் ஆயிற்று. வீட்டிலுள்ள குழந்தைகளுக்காக நான்கணா வுக்கு காரா சேவும், நான்கணாவுக்கு பூந்தியும், எட்டணாவுக்கு மைசூர் பாகும் வாங்கிக் கொண்டாள். அருகில் இருந்த ஒரு பெரிய கடைக்குச் சென்று ராகி விலை எப்படி என்று விசாரித் தாள். வள்ளம் முப்பது ரூபாய். அதே அளவு ராகியின் விலை ராமஸந்திர கிராமத்தில் ஐம்பது ரூபாய்! கடைக்காரனிடம் அறுபது ரூபாய் கொடுத்து இரண்டு வள்ளம் ராகியையும் பஸ்ஸில் கொண்டு வந்து வைக்குமாறு சொன்னாள். அதே பஸ்ஸில் ஷேக்தாரும் இருந்ததால், ராகி மூட்டைக்குக் கட்டணம்

வாங்க வேண்டாமென்று அவர் பஸ்காரனிடம் சொல்லிவிட்டார். சென்னிகராயர் எங்கே போனார் என்பது யாருக்கும் தெரியவில்லை.

கிராமத்திலிருந்து ஒரு மைல் தூரத்தில் உள்ள ரஸ்தாவில் 'பஸ்காரன்' ராகி மூட்டைகளை இறக்கிவிட்டான். ராமண்ணன் ஊருக்குப் போய் தலையாரியிடம் சொல்லி வண்டி பூட்டிக் கொண்டு வந்தான். அதுவரை மூட்டைகளைக் காவல் காத்துக் கொண்டு நஞ்சம்மா ரஸ்தாவில் மரத்தினடியே அமர்ந்திருந்தாள்,

மறுநாள் சென்னிகராயர் கால்நடையாகவே ஊருக்கு வந்து சேர்ந்தார். நஞ்சம்மா ஏதும் சொல்லவில்லை. ராமண்ணன் சாடையாக அப்பாவைப் பழித்துப் பேசினான். நஞ்சம்மா அவனைக் கூப்பிட்டு, ''அவர் உன்னைப் பெத்த அப்பா. நீ அவரைப் பத்தி இப்பிடியெல்லாம் பேசக் கூடாது'' என்று கண்டித்தவுடன் அவன் அடங்கிப் போனான்.

இரண்டு மூட்டை ராகி வீட்டிற்கு வந்து சேர்ந்ததும் எல்லோருக்கும் சொல்ல முடியாத சந்தோஷம். வயிற்றுக்குச் சரியாக ஆகாரம் இல்லாததால் நஞ்சம்மா உலர்ந்த பருத்திச் செடியைப் போல் மாறிவிட்டாள். பார்வதியும், ராமண்ணனும் இளைத்துத் துரும்பாகி விட்டார்கள். விசுவனும் மெலிந்து விட்டான். பொதுவாக, ஊருக்குள் முக்கால் வாசிப்பேர் அப்படித்தான் இருந்தனர். சென்னிகராயரின் வீட்டில் அவர்தான் மற்றவர்களைவிடக் கொஞ்சம் திடமாயிருந்தார்.

வயிறுரச் சாப்பிட்டால் இரண்டே மாதங்களில் ராகி தீர்ந்து விடும். ஆகையால் தினசரி இரண்டு படி ராகி மட்டுமே செலவு செய்ய வேண்டுமென்று நஞ்சம்மா தீர்மானித்தாள். அடுத்த வருடம் மழை பெய்யாவிட்டால் நிலைமை இன்னும் மோசமாகும். அவள் பார்வதியைக் கூப்பிட்டு ''இங்கே பார், காலையில் ஒரே மாதிரியா ஏழு ரொட்டி செய். ஆளுக்கு ஒண்ணு. ராமண்ணன் கொண்டு போக ஒண்ணு கொடு. மத்தியானம் நீயும், விசுவனும் அரை ரொட்டி சாப்பிடுங்க. ராத்திரி ஒரு படி ராகி போட்டு மாவு செய். அதில் களி செய்து அஞ்சு உருண்டை செஞ்சா ஆளுக்கு ஒண்ணு. அவ்வளவுதான்'' என்று கூறினாள்.

இந்த ஏற்பாட்டினால் குழந்தைகள் வயிறு ஓரளவு நிரம்பியது. பசியைப் பொறுத்துக் கொள்ள நஞ்சம்மா தயங்கவில்லை. ஆனால் சென்னிகராயரின் பாடு திண்டாட்டமாய்ப் போய்விட்டது. அவர் மனைவியின் மேல் சீறி விழுந்த பொழுது பார்வதியும், ராமண்ணனும் அவரைச் சரியானபடி மடக்கிக் கேட்டுவிட்டனர். சிறிய பையன் விசுவனும் அவரிடம், ''நீ அப்பாதானே. அரிசி கொண்டு வா. நான் சாப்பிடணும்'' என்றான்.

நஞ்சம்மா சமையல் வேலை எல்லாவற்றையும் பார்வதியிடம் ஒப்படைத்து விட்டு குண்டே கவுடரின் நிலத்தைச் சீர் செய்வதில் முனைந்து விட்டாள். கருகிப் போய் நின்ற சுவர்களை இடித்துப் போட்டு விட்டு, காலை, மாலை இரண்டு வேளைகளிலும் கிணற்றிலிருந்து தண்ணீரை இறைத்துக் கொட்டினாள். ஒரு வருடமாக நீரைக் காணாத நிலம் தண்ணீரை உடனுக்குடன் உறிஞ்சிக் கொண்டது. நிலம் சற்றுப் பதம் அடைந்தவுடன் அவளே ஒரு மூலையிலிருந்து தோண்ட ஆரம்பித்தாள். இரண்டு ரூபாய் கொடுத்து ஒரு வண்டி மூங்கிலும், முள்ளும் வாங்கினாள். நிலத்தின் நான்கு பக்கங்களிலும் கள்ளிச் செடிகளை நட்டு, மூங்கிலையும் முள்ளையும் வைத்து வேலி கட்டினாள். மூங்கிலினால் கதவு ஒன்றையும் அமைத்துப் பூட்டுப் போட வசதியாகச் செய்தாள். நிலத்தை நன்றாகப் பண்படுத்திய பிறகு ஒரு புறம் கீரை விதைகளையும், மற்றொரு பக்கம் கத்திரிக்காய், பூசணிக்காய் விதைகளையும் விதைத்தாள். கீரை காய்கறிகளையாவது சாப்பிட்டு வயிற்றை நிரப்பலாம் என்று நினைத்தாள். மழை தவறி விட்டாலும் கூட, கிணற்றில் நீர் இருக்கிறதே என்று எண்ணி சந்தோஷப்பட்டு கிணற்று நீரை இறைத்துக் கொட்டி வந்தாள்.

அதனிடையே, சர்வக்காவின் மகள் ருத்ராணி இரண்டு நாட்கள் வாந்தி, பேதியால் கஷ்டப்பட்டு இறந்து போனாள். அவளுக்கு உடம்பு சரியில்லாமல் இருந்த விஷயம் பொதுவாக ஊர்க்காரர்கள் யாருக்கும் தெரிந்திருக்கவில்லை. அந்த விஷயம் நஞ்சம்மாவுக்கும் தெரிந்திருக்கவில்லை. அவள் இறந்துவிட்ட சங்கதி தெரிந்தவுடன் சர்வக்காவின் வீட்டிற்கு நஞ்சம்மா புறப்பட்டு போனாள். அப்பொழுது இறந்து போன உடலை ஒரு ஜமக்காளத்தில் கிடத்தி நான்கு பேர் நான்கு மூலைகளிலும் பிடித்தவாறு தூக்கிக் கொண்டு போனார்கள். ஒருவன் அவர்களுக்குப் பின்னே பொரியை அள்ளி வீசிக் கொண்டே நடந்தான். ரேவண்ண செட்டி தலை குனிந்தவாறு பின்புறம் நடந்து சென்றான். சர்வக்கா தன் வீட்டு நிலைப்படியில் தலையை முட்டிக் கொண்டு கண்ணீர் வடித்தாள்.

நஞ்சம்மா சர்வக்காவின் அருகே சென்று கையைப் பிடித்து ''இப்படி முட்டிட்டு அழுது என்ன பிரயோஜனம்? அவளுக்கு என்ன வியாதி?'' என்று ஆறுதலாகக் கேட்டாள். அவள் உடனே ஆத்திரமாக ''அவ அப்பனோட வியாதி'' என்று சொல்லி ''சட்'' என்று வாயை மூடிக் கொண்டாள்.

பிணத்தைப் புதைத்து விட்டு ரேவண்ண செட்டி திரும்பி வரும் வரை நஞ்சம்மாவும், அக்கம் பக்கத்தைச் சேர்ந்த மற்ற ஆண்களும் பெண்களும் சர்வக்காவின் வீட்டிலேயே அவளுக்கு ஆறுதல் சொல்லிக் கொண்டு இருந்தனர். அவன் வந்ததும் பெண்கள் எல்லோரும் அவசரமாகக் கிளம்பிச் சென்றனர். நஞ்சம்மா காய்கறி பயிரிட்டிருந்த நிலம் சர்வக்காவின் வீட்டின் அருகே இருந்தது. ஆகையால் மறு நாளிலிருந்து நஞ்சம்மா அவளை நிலத்திற்கு அழைத்து வந்து அவளிடம் ஆறுதல் வார்த்தை பேச ஆரம்பித்தாள். ஆனால் அவளுடைய துக்கம் குறையவில்லை. அவள் வந்து உட்கார்ந்து விடுவாள். ஆனால் எதுவும் பேசமாட்டாள். நஞ்சம்மா கிணற்றிலிருந்து நீரை இறைத்துத் தலையில் ஒரு குடமும், இடுப்பில் ஒரு குடமும் வைத்துக் கொண்டு வந்து கீரை, கத்திரிச் செடிகளுக்கு நீர் ஊற்றுவாள். சர்வக்கா பேசாமல் உட்கார்ந்திருப்பாள். அவளிடம் பேச்சுக் கொடுத்தாலும் பதில் வராது. ஒரு நாள் மாலையில் நஞ்சம்மா கீரைச் செடிகளுக்கு நீர் ஊற்றிக் கொண்டிருக்கும் பொழுது சர்வக்கா தானாகவே பேச்சை ஆரம்பித்தாள். ''பெத்த அப்பனே பொண்ணைக் கொண்ணு போட்டா, தலை விதியை என்ன சொல்றது?''

''அப்படிச் சொன்னா புரியலியே!''

''சரி வேணும் விடுங்க.''

''அதென்ன சொல்லுங்க. நான் யார்கிட்டேயும் சத்தியமாச் சொல்ல மாட்டேன்.''

''கோர்ட்டிலே சாட்சியம் சொல்லி என் வீட்டுக்காரர் ராகியும், அரிசியும் கொண்டு வந்தார்னு உங்களுக்கும் கொஞ்சம் ராகி கொடுத்தேனே, இல்லியா?''

''உம்''

''அது கோர்ட்டுக்குப் போய்க் கொண்டாந்தது இல்லியாம். அந்த பரதேசிப் பய வட்டிக் கடைக்காரனோட பெண்டாட்டி, கொளந்தைக எல்லோரும் மலையாள தேசத்திலே இருக்கறுங்களாம். அவங்கிட்டே என் வீட்டுக்காரர் பணம் வாங்கினாராம்.''

''வாங்கினா என்ன?''

''நீங்களும் நானும் கௌங்கு பறிக்க ஏரிக்கு போயிருந்தோம் இல்லியா? அப்ப என் வீட்டுக்காரரே அவனைக் கொட்டகைக்குக் கூட்டி வந்தாராம். ருத்ராணி கர்ப்பமாயிட்டா''

சர்வக்கா சொல்வதைப் புரிந்து கொள்வதும் நம்புவதும் நஞ்சம்மாவுக்கு சிரமமாய் இருந்தது. இந்தத் தடவை பஞ்சத்

தால் பட்டினி கிடக்க நேரிட்ட பல பெண்கள் தங்கள் வயிற்றுப் பாட்டுக்காக மானத்தை இழந்திருக்கிருர்கள் என்று அவள் கேள்விப்பட்டிருந்தாள். ஆனுல் தகப்பனே மகளை இப்படிச் செய்ய வைப்பான் என்பதை அவளால் நம்ப முடியவில்லை.

''தாலி கட்டின புருஷனைப் பத்தி நான் பொய் சொல்வேனு? தகப்பன்னு சொல்ற இவன்தான் அப்பிடி செய்யச் சொன்னுன்னு அவ எப்பிடிச் சொல்ல முடியும்? கலியாணம் பேசறதுக்கு சிவகெரெய்க்காரங்க வந்திருந்தாங்க. பணம் இல்லை. கொஞ்சம் பொறு. பெறகு பாத்துக்கலாம்னு என் வீட்டுக்காரன்தான் சொன்னுன்.''

''அப்புறம் என்னுச்சு?''

—''எனக்கு சங்கதியே தெரியாது. மூணு மாசம் ஆன பெறகு தான் எனக்குத் தெரிஞ்சது. என் வீட்டுக்காரன் அவளைப் பிடிச்சு அடிச்சான். 'பரவாயில்லை. பயப்படாதேன்னு சொல்லி அப்பாதான் அந்த வட்டிக்கடைக்காரனை உள்ளே அனுப்பி வெளியே கதவைமூடுனுரு'ன்னு, அவ சத்தியம் செஞ்சு சொன்னு. என்ன செய்ய முடியும்? என் வீட்டுக்காரனே அந்த நரசியிடம் சொல்லி மருந்து வாங்கி வந்து மூணு நாள் குடிக்க வைச்சான். ரத்தம் ரத்தமா வாந்தி பேதி ஆரம்பிச்சு என் பொண்ணு செத்துப்போனு.''

எல்லாவற்றையும் கேட்டு நஞ்சம்மா ஊமையானுள். சர்வக்கா மறுபடியும் ஒரு தடவை உரக்கப் புலம்பி அழுதுவிட்டுக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். நஞ்சம்மா பார்வதியைப் பற்றி நினைத்தாள். அவளுக்குப் பன்னிரண்டு வயது நிரம்பப் போகிறது. இந்த வயிற்றுப் பட்டினி இல்லாவிட்டால் அவள் இதற்கு முன்பே பெரியவளாகியிருப்பாள். இப்பொழுது அவள் பெரியவளாகிவிட்டால் என்ன செய்வது? உடனே திருமணம் செய்துவிட முடியுமா? எவ்வளவு சிக்கனமாகச் செய்தாலும் நிலபுலன் உள்ள ஒரு பையனுக்குக் கொடுப்பதென்ருல் எழுநூறு, எண்ணூறு ரூபாயாவது தேவைப்படும். வயிற்றுக்கே சோறு இல்லாத இந்தச் சமயத்தில் பணத்துக்கு எங்கே போவது?

''நஞ்சம்மா, இதைப் பத்தி யார்கிட்டேயும் சொல்ல வேணும்.''

''கடவுள் மேலே ஆணையாச் சொல்ல மாட்டேன். மானம், மரியாதை உங்களுக்கும் எனக்கும் பொது.''

''இந்தப் புருசனே வேணும். பேசாம பொறந்த வீட்டுக்கு போகலாம்னு தோணுது. ஆனு அங்கே போனு அண்ணியோட

அதிகாரத்திலே சிக்கித் தவிக்கணும். நாம் ஏன் பெறந்தோம்? சொல்லுங்க.''

சர்வக்காவின் இந்தக் கேள்வியை நஞ்சம்மா தனக்குத் தானே பலமுறை கேட்டுக் கொண்டதுண்டு. அவளுடைய வாழ்க்கையில் என்ன இன்பம் இருக்கிறது? கணவன் பிரியமாக இருக்கிருனு? மாமியார் பரிவுடன் நடந்து கொள்கிருரா? பிறந்த வீட்டில் சுகம் இருக்கிறதா? எந்த வகையிலும் நிம்மதி இல்லை. எதற்காக உயிர் வாழ வேண்டும் என்று நினைக்கும் பொழுதெல் லாம் குழந்தைகளின் முகம் நினைவில் வருகிறது. கீரைத் தோட் டத்தில் நீர் பாய்ச்சுவது, கணவனின் சம்பளம் செலவாகிப் போய்விடாமல் ஏற்பாடு செய்வது, புரச இலைகளைத் தைப்பது ஆகிய இந்த வேலைகள் எல்லாம் எதற்காகச் செய்ய வேண்டும்? அலுமினியத் தட்டில் அரை உருண்டைக் களியைத் தின்பதற் காகத் தானு? அவ்வளவுதான். வேறு என்ன இருக்கிறது வாழ்க்கையில்? என்று எண்ணிக் கொண்டாள்.

8

பிளேக் நோயின் கொடுமை முடிவடைந்தவுடன், கிராமத்தில் எல்லோருக்கும் சொரி, சிரங்கு, கட்டிகள் வரத் தொடங்கின. எல்லோரும் எப்பொழுதும் உடம்பைத் தேய்த்து விட்டுக்கொண்டும் கை கால்களைச் சொரிந்து கொண்டும் வேலை செய்தனர். தொடைசந்தில் கட்டி வந்தவர்கள் நடக்கும் பொழுது கஷ்டப்பட்டு, விந்தி, விந்தி நடந்தார்கள். சொரி பிடித்தவர்களின் கை, கால் விரல்களில் சீழ் வழிந்து கொண்டிருந்தது.

நஞ்சம்மாவின் வீட்டில் முதலில் ராமண்ணனுக்கு சொரி வந்தது. பிறகு பார்வதிக்கும், விசுவனுக்கும் நஞ்சம்மாவுக்கும் பரவியது. இள வெய்யிலில் காய்வது, அடுப்பு மூட்டி நெருப்பின் எதிரே சொரியும் பகுதிகளைக் காட்டி உடலுக்கு இதம் தேடுவது ஆகியவைகள் தான் அவர்கள் மேற்கொண்ட வைத்திய முறைகள். சில வேளைகளில் பெரிய கொப்பளங்கள் தோன்றிய பொழுது அவற்றின் வேதனை தாங்கமாட்டாமல் குழந்தைகள் முள்ளால் அவற்றைக் குத்தி விடுவார்கள். சீழ் மற்ற பாகங் களில் பரவி புண் பெரியதாகும். விசுவன் வலி தாங்கமாட் டாமல் உரக்க அழுது விடுவான். சில சமயங்களில் பார்வதியும், ராமண்ணனும் கூட அழுவதுண்டு. அது வரை பார்வதியே எல்லா வீட்டு வேலைகளையும் கவனித்து வந்தாள். இரண்டு

கைகளிலும் சிரங்கு வந்த பிறகு பாத்திரம் தேய்க்க முடியவில்லை. எந்திரக் கல்லைப் பிடித்து மாவு வீச முடியவில்லை. நஞ்சம்மாவால் தண்ணீர் பாய்ச்ச முடியாததால் செழித்து வளர்ந்திருந்த காய் கறிச் செடிகள் வாட ஆரம்பித்தன. ஜனங்கள் எல்லோரும் நாகத்திற்கு வேண்டுதல் செய்ய ஆரம்பித்தார்கள். நஞ்சம்மாவும் எட்டு நாட்கள் தினசரி தானும் தண்ணீரில் குளித்துவிட்டு, குழந்தைகளையும் குளிப்பாட்டி பாம்புப் புற்றுக்கு பால் வார்த்து வணங்கி வந்தாள். ஆனால் சிரங்குத் தொல்லை குறைவதாகத் தெரியவில்லை.

ஒரு மாதம் கழித்து சென்னிகராயருக்கும் சிரங்கு கிளம்பி விட்டது. அதுவரை மணியக்காரர் முதலிய சில ஊர்ப் பெரிய மனிதர்களுக்கு அந்தத் தொல்லை ஏற்பட்டிருக்கவில்லை. ஒரு கொப்பளம் ஏற்பட்டவுடனேயே சென்னிகராயர் மிகவும் திண்டாடிப் போய் விட்டார். கங்கம்மாவுக்கும், அப்பண்ணய் யாவுக்கும் அதுவரை சொரி வரவில்லை. சென்னிகராயர் வலி தாங்க முடியாமல் தாய் வீட்டுக்குப் போனார். அவரைப் பார்த்தவுடன் கங்கம்மா, ''அவளை விலக்கி வைச்சு சிருங்கேரி மடத்திலே உத்திரவு போட்டிருக்காங்க. அவ பரிகாரம் எதுவும் செய்யலை. அவகிட்டே ஆசாரம் எதுவும் கெடையாது. மூணு நாள் தீட்டு சமயத்திலே கூட கீரைப்பாத்திக்கு தண்ணி ஊத்தறு. இப்பிடி இருந்தா நாகம் சும்மா இருக்குமா?. நீ அந்த முண்டையைத் தொட்டதனலே உனக்கும் வந்துட்டுது. நீ அவளை விட்டு விலகாம இருந்தா உன்னே இந்த வியாதி விடாது'' என்று சொன்னாள்.

''உன்னே விட்டுப் போறேன்'' என்று சொன்னால் மனைவி பதற்றப்பட மாட்டாள் என்பது சென்னிகராயருக்குத் தெரியும். அவளை விட்டு விலகி வந்தால் சோற்றுக்கு என்ன வழி? அவள் ஷேக்தாரிடம் சொல்லி விட்டால் என்ன செய்வது? ஆகையால் கங்கம்மாவின் அந்தச் சொற்களை அவர் காதில் போட்டுக் கொள்ளவில்லை. ஆனால் சிரங்கைக் குணப்படுத்த ஏதாவது செய்தாக வேண்டும். ஆகையால் தாயும் மகனும் அண்ணு ஜோசியரின் வீட்டிற்குச் சென்றனர். சற்று நேரத்தில் அய்யா சாஸ்திரிகளும் அங்கே வந்து சேர்ந்தார். சாஸ்திரி வயதில் மூத்தவர். எந்த வீட்டில் எந்த சம்பிரதாயம் இருந்து வந்தது என்பது அவருக்குத் தெரியும். அவர் கங்கம்மாவிடம் ''கங்கம்மா உன் புருஷன் இருந்த காலத்திலே உன் வீட்டிலே நாக பூஜை இருந்தது. புருஷன் செத்த பிறகு ஒரு தடவைகூட நாக பூஜை செய்யலை. அதான் நாகன் ரொம்ப வாட்டறுன்,'' என்று சொன்னார்.

கங்கம்மாவுக்கு நினைவு வந்தது. ''அது ரொம்ப பக்தி, சிரத்தையோடு செய்ய வேண்டிய காரியம். ஏதோ ஒரு சஷ்டி யன்னிக்கு வீட்டுக்காரங்க எல்லோரும் தோட்டத்துக்குப் போகணும். அதுக்கு மொத நாளே ஆம்பிளேங்க அந்தத் தோட்டத்திலே ஒரு சின்ன ஊத்துக் கெணறு தோண்டி வைச்சிருக்கணும், பூஜை செய்யற அன்னிக்கு அந்தக் கெணத்துத் தண்ணியிலே வடை, போளி, பாயசம், அன்னம், ரசம் இதுகளைத் தயார் செய்யணும். ரெண்டு புரோகிதர்கள், அவங்க பெண்டாட்டிகள், ஒரு விதவை, பெண்டாட்டி செத்த ஒருத்தன், ஒரு பிரம்மச்சாரி இவங்களை அழைச்சுச் சாப்பாடு போடணும். கோதுமை மாவையும், அரிசி மாவையும் கலந்து பிசைஞ்சு அதிலே ஒரு நாக உருவம் செஞ்சு அதுக்கு பூஜை செய்யணும். அப்புறம் அந்தப் பிராமணர்களுக்கும் மத்தவங்களுக்கும் ஒரு வெள்ளி ரூபாய் தட்சணையாகக் கொடுக்கணும். ஆம்பளைகளுக்கு வேட்டியும், பொம்பளைகளுக்கு புடவை ரவிக்கைத் துண்டும், பிரம்மச்சாரிக்கு வேட்டி, பூணூல், பணம் இதுகளையும் தானமாகக் கொடுக்கணும். சாயங்காலம் நாகத்திற்குப் பூஜை செஞ்சு மிஞ்சியிருக்கும் அரிசி, பருப்பு, கோதுமை மாவு இதுகளையும் நாகத்தையும், கெணத்திலே போட்டு மண்ணுலே மூடி விட்டுத் திரும்பிப் பார்க்காம வீட்டுக்குப் போகணும். இப்பிடியெல்லாம் செஞ்சா சொரி, சிரங்கு தானுவே ஓடிப் போயிடும். உன் வீட்டுக்காரர் இருந்த சமயத்திலே இப்பிடி வியாதி வந்ததா?. நீங்க உங்க கடமையிலே தவறிட்டீங்க. அதான் இப்பிடியாச்சு'' என்று சொல்லிக் கொண்டே சாஸ்திரிகள் தன் கைகளில் இருந்த சிரங்கைச் சொரிந்து கொண்டார். சாஸ்திரிகள் இவ்வாறு சொல்லி முடித்தவுடன், எப்படியோ நாக பூஜையை செய்து விட வேண்டும் என்று கங்கம்மா முடிவு செய்தாள்.

அண்ணு ஜோசியர் சொன்னுர், ''எந்தக் கவலேயும் வேண்டாம். பிராம்மணருக்காகத் தேடி அலேய வேண்டாம். நானும் சித்தப்பாவும் சின்னம்மாவும், என் பெண்டாட்டியும் இருக்கரேும். என் மகன் நரசிம்மனே பிரம்மச்சாரிக்கு இருக்கிருன். என் விதவைத் தங்கையை கொண்டேனஹள்ளியிலேருந்து அழைச்சுட்டு வர்றேன். பெண்டாட்டி செத்த என் மச்சினன் ரங்காபுரத்திலே இருக்கான். அவனேயும் அழைச்சுட்டு வந்துடலாம். மத்த விஷயங்களே நீ கவனிச்சுக்க''

சீக்கிரத்திலேயே இந்த வேலேயை முடித்து விடுவதாகச் சொல்லி கங்கம்மா புறப்பட்டாள். ''சென்னேயா, உன்

பெண்டாட்டி கிட்டே அரைப் பங்கு செலவைக் கொடுக்கச் சொல்லு'' என்று சென்னிகராயரிடம் சொல்லி அனுப்பினாள். கணவர் விவரித்தவற்றை எல்லாம் கேட்டுவிட்டு நஞ்சம்மா கணக்குப் போட்டாள். நூறு ரூபாய் செலவு ஆகும். ஐம்பது ரூபாய் கொடுக்க வேண்டும். ஜாதியிலிருந்து விலக்கி வைத்த தற்குப் பரிகாரம் செய்ய வேண்டும் என்று ஏதாவது வம்பு கிளப்பி விட்டு அண்ணா ஜோசியர் மேலும் பணம் கேட்பார். இதற்கெல்லாம் பணம் வேண்டும். வயிற்றுக்கே திண்டாட்டமாக இருக்கும் நேரத்தில் இது எல்லாம் எதற்கு?. ஆகையால் இந்த விவகாரமே வேண்டாம் என்று நஞ்சம்மா முடிவு செய்தாள். ஆனால் நாகம் கோபித்துக் கொண்டு யாரையாவது பலி வாங்கி விட்டால் என்ன செய்வது என்ற பயமும் அவள் மனதில் எழுந்தது.

மருமகளும், பேரக் குழந்தைகளும் எப்படியோ போகட்டும். தனக்கும், அப்பண்ணய்யாவுக்கும் சொரி வரக்கூடாது என்று கங்கம்மா நினைத்தாள். சென்னிகராயரையும் தன்னுடன் கூட்டிக் கொண்டு ஆற்றோரக் கிராமங்களில் யாசகம் கேட்க கங்கம்மா புறப்பட்டாள். ''சுவாமி காரியம் நடக்கணும். தர்மம் கொடுங்க'' என்று ஒவ்வொரு கிராமத்திலும் ஒவ்வொரு வீட்டிலும் சொன்னாள். வீட்டுக்காரர்கள் பணமும் நெல்லும் கொடுத்தார்கள். குறைந்த அளவு, இரண்டு படி நெல்லாவது கொடுக்காவிட்டால் அவர்களுக்கும் பாவம் பிடிக்கும். இவ்வாறு திரட்டிய நெல்லை விற்று, நூறு ரூபாய் சம்பாதித்தார்கள். பிறகு நாக பூஜை செய்வதற்கு ஒரு நல்ல நாளையும் தீர்மானித்தார்கள்.

சொரியால் அவதிப்பட்டாலும் ராமண்ணன் பள்ளிக் கூடத்திற்குப் போவதை நிறுத்தவில்லை. அவன் இங்கிலீஷ் இரண்டாம் வகுப்பு மாணவன். அவனுடைய வகுப்பில் சொரி பிடித்த மாணவர்களை ஆசிரியர் தனியே ஒரு புறம் உட்கார வைத்திருந்தார். மாணவர்களின் அவதியைக் கண்டு ஒரு நாள் தலைமையாசிரியர் அரசாங்க டாக்டரிடம் சென்று மாணவர் களின் நோயைப் பற்றிக் கலந்தாலோசித்தார். பஞ்சாயத்துப் போர்டு தலைவரும், அரசாங்க டாக்டரும் அரசாங்கத்துக்கு மனுப் போட்டு மருந்தை வரவழைத்தார்கள். டாக்டர் எல்லாப் பையன்களுக்கும் ஊசி போட்டுக் களிம்பும் கொடுத்தார். சில நாட்களில் எல்லோருடைய புண்ணும் ஆறி விட்டது.

ராமண்ணன் தன் தாயிடம் கூறினுன்: ''அம்மா, அந்த ஊசி போட்டுக்கறப்ப வலிச்சாலும் உடம்பு குணமாகுது பாரு. நீங்க எல்லோரும் ஒரு நாள் ஆஸ்பத்திரிக்கு வந்து ஊசி போட்டுக்குங்க''

ஒரு நாள் பார்வதியையும், விசுவனேயும் கூட்டிக் கொண்டு நஞ்சம்மா கம்பனகெரெய்க்குப் போனுள். மூவரும் ஊசி போட்டுக் கொண்டனர். நான்கு நாட்களுக்குப் பிறகு மறு படியும் சென்று ஊசி போட்டுக் கொண்டனர். கொஞ்சம் கொஞ்சமாக அவர்களுடைய புண்ணும் ஆறத் தொடங்கியது. ஒருநாள் ராமண்ணன் நஞ்சம்மாவிடம் சொன்னுன். ''அம்மா, எங்க ஹெட்மாஸ்டர் சொன்னுர். போனவருஷம் மழை தவறிப் போனதால் ஜனங்களுக்கு சரியான ஆகாரம் இல்லியாம். கண்ட கெழங்கைச் சாப்பிட்டதால் ரத்தம் கெட்டுப் போய் சொரி வந்துதாம். எல்லோரும் ஊசி போட்டுட்டா குணமாயிடுமாம்?''

கங்கம்மா, அப்பண்ணய்யா, 'சென்னிகராயர் ஆகிய மூவரும் ஜோசியருக்கு வேட்டி, புடவை, தட்சிணே கொடுத்து சாப்பாடு போட்டு நாக பூஜை செய்து முடித்தனர். நஞ்சம்மாவும், குழந்தைகளும் ஊசி போட்டுக் கொண்டதை அறிந்த கங்கம்மா, ''சுவாமி வந்திருக்கற வேளேயிலே அந்த முண்டை மருந்து போட்டுட்டு வந்திருக்கா, கை, கால் எல்லாம் அழுகி சாகப் போறு'' என்று ஆவேசமாகக் கூப்பாடு போட்டாள்.

நஞ்சம்மாவின் வீட்டில் உள்ளவர்கள் ஊசி போட்டுக் கொண்டு வந்த பிறகு அவர்களுடைய உடம்பு சரியாகி விட்டது என்பதை அறிந்ததும், ஊர்க்காரர்கள் மெதுவே ஒவ்வொரு வராக ஊசி போட்டுக் கொள்ளப் புறப்பட்டார்கள்.

## 9

ஆடி, ஆவணி முடிந்து விட்டாலும் மழை பெய்வதாகக் காணேம். போன வருடத்தைப் போலவே இந்த வருடமும் வறட்சி நிலேமைதான். பலத்த காற்று மேக மூட்டத்தைக் கலேத்துக் கொண்டிருந்தது. போன வருடம் கொஞ்சம் தானியம் கையிருப்பு வைத்திருந்தவர்கள் கூட, இந்த வருடம் திண்டாடிக் கொண்டிருந்தனர். நஞ்சம்மா காய்கறித் தோட்டத்திலேயே பாடுபட்டு வந்தாள். தினசரி ஒரு படி ராகி மட்டுமே செலவழித்து வந்தாள். காய்கறிகளேச் சாப்பிட்டு வயிற்றை நிரப்பிக் கொண்டார்கள். இரவு வேளேயில் காய்கறிகள் திருட்டுப்

போகலாம் என்று, எதிர்பார்த்து, நான்கு முறையேனும் பையன்களை உடன் அழைத்துக் கொண்டு போய் தோட்டத்தைக் கவனித்து வந்தாள். தென்னை மரங்களில் அதிகம் காய்க்க வில்லை. தென்னந் தோப்புக்காரர்களே இளநீர்க் குலைகளைப் பறித்து திப்டூரில் விற்று வந்தார்கள். ஆகையால் இரவு நேரத் தில் மற்றவர்கள் தேங்காய்களைத் திருட்டுத்தனமாகப் பறிக்க முடியவில்லை.

ஒரு நாள் நள்ளிரவில் திடீரென்று மழை பெய்ய ஆரம் பித்து விட்டது. ஆலங்கட்டிகளைப் போன்ற பெரிய துளிகள் கூரைகளின் மேல் ''சடசட'' வென்று விழ ஆரம்பித்தன. வீட்டில் படுத்திருந்தவர்கள் விழிப்படைந்து வெளியே வந்து பார்த்தார்கள். வானம் இருண்டிருந்தது. காற்று சிறிதும் வீச வில்லை. 'சோ' வென்று மழை ஓரே சீராகக் கொட்டிக் கொண்டிருந்தது. அரை மணி நேரத்தில் எல்லாத் தெருக் களிலும் வெள்ளம் போல் மழை நீர் பாய்ந்து கொண்டிருந்தது. இவ்வளவு காலம் கழித்து எப்படி மழை வந்தது?. அந்தக் கிராம தேவதை சோளேஸ்வரனின் கருணை தான் இதற்குக் காரணம். தன் தோட்டத்தில் உள்ள காய்கறிகள் எல்லாம் மழை நீரில் அடித்துக் கொண்டு போய்விடுமோ என்று நஞ்சம்மா கவலைப்பட்டாலும், மற்றொரு வகையில் சந்தோஷம் அடைந்தாள். மழை பெய்து, நல்ல விளைச்சல் ஏற்பட்டால் வயிறுரச் சோறு சாப்பிடலாம். காய்கறிகள் அழிந்து போய் விட்டால் கூடப் பரவாயில்லை, மறுபடியும் விதைத்துப் பயிரிட லாம் என்று நினைத்துக் கொண்டாள்.

நீண்ட காலம் மழையே பெய்யாமல் போய் விட்டதால் கூரைக்கு ஓடு வேய்ந்து செப்பனிடுவதைப் பற்றி யாருமே யோசனை செய்திருக்கவில்லை. திடீரென்று மழை கொட்டத் துவங்கியதால் எல்லா வீடுகளிலுமே ஒழுகியது. ஆனால் ஒழுகு வதைப் பற்றியோ, சுவர் இடிந்து விழுவதைப் பற்றியோ, யாருமே கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. மழையைக் கண்டு எல்லோருக்கும் தாங்க முடியாத சந்தோஷம்.

விடியும் வேளையில் மழை நின்றது. பொழுது விடிந்ததும் எல்லோரும் தங்களுடைய நில, புலன்களைப் பார்த்து விட்டு வரப் புறப்பட்டார்கள். ஏரி பாதி நிரம்பி விட்டது.

நஞ்சம்மா காய்கறித் தோட்டத்தைப் பார்த்து வரப் புறப்பட்டாள். செல்லும் வழியில் மாதேவய்யா எதிர்ப் பட்டார். அவர் திரும்பி வரமாட்டார் என்று அவள் எண்ணி இருந்தாள்.

''அய்யா, எங்களை எல்லாம் விட்டு இத்தனை நாள் எங்கே போயிருந்தீங்க?.'' ''காசிக்குப் போயிருந்தேன். இவ்வளவு காலம் அங்கேயே இருந்தேன். திரும்பி வரணும்னு மனசுலே பட்டது. வந்துட்டேன்''

மாதேவய்யாவையும் உடன் அழைத்துக் கொண்டு நஞ்சம்மா வீட்டிற்குத் திரும்பினுள். சென்னிகராயர் வெளியே போயிருந்தார். நஞ்சம்மா அய்யாவிடம் கேட்டாள்: ''எப்ப வந்தீங்க?.''

'' ராத்திரி வந்தேன். உங்க வீட்டுக்கு வந்து உங்களை எழுப்பலாம்னு நெனைச்சேன். அதுக்குள்ளே மழை பெய்ய ஆரம்பிச்சிடுத்து.''

அவர் பேசிக் கொண்டிருக்கும் பொழுது சர்வக்கா ஏதோ வேலையாக அங்கே வந்தாள். அவர் சொன்னது அவளுடைய காதிலும் விழுந்தது, அய்யா வந்தார். உடனே மழை பெய்து விட்டது. அவர் எப்பொழுது போனுர்?. அவள் யோசித்தாள். உடனே அவளுக்கு அந்த விஷயம் மனதில் பளிச்சிட்டது. நம் ஜாதிக்காரர்கள் சோறு கொடுக்க மாட்டோம் என்று சொன்ஞர்கள். அவர் வருத்தப்பட்டுக்கொண்டு ஊரை விட்டுச் சென்ருர். அன்றிலிருந்து மழை பெய்யவில்லை. பஞ்சம் தான். அவர் திரும்பி வந்தவுடன் மழை பெய்துவிட்டது. மகான்கள், துறவிகள் என்ருல் சாமானியமா?. சர்வக்கா, அவருடைய பாதங்களைத் தொட்டுக் கும்பிட்டாள்.

''அய்யா, நீங்க ஏன் வருத்தப்பட்டுகிட்டு ஊரை விட்டுப் போனீங்க?.''

'' எங்காவது போகணும்னு எண்ணம் வந்தது. என்னைப் போல் இன்னொரு துணை கெடைச்சுது. காசிக்குப் போயிட்டேன். அங்கே மடத்திலே சாமியாரா இருந்தேன். நம்ம பக்கத்து சாமியார்கள் யார் போனுலும், கவலை இல்லாம அங்கே இருக்கலாம். அங்கேயும் பஜனை செஞ்சு வந்தேன். எவ்வளவு வசதி இருந்தாலும் அது நம்ம தேசம் அல்ல. அங்கே நம்ம ஜனங்க அதிகமாக இல்லை. அதனுலே ஊருக்குத் திரும்பி வந்துடலாம்னு தோணித்து. வந்திட்டேன்.''

''அய்யா, உங்க ராகி. அவரைப் பருப்பு எல்லாம் திருட்டுப் போயிடிச்சாம். நீங்க போய்ப் பாத்தீங்களா?'' சர்வக்கா கேட்டாள்.

''ராத்திரி தீக்குச்சி உரைச்சுப் பாத்தேன். ஒண்ணும் இருக்கலை. சுத்து வட்டாரம் முழுதும் பஞ்சம் வந்திட்டுது.

வயித்துக்கு இல்லாத யாரோ எடுத்துட்டு போய் சாப்பிட்டிருப் பாங்க அதனால் என்ன?''.

சர்வக்கா ஒரு படி மாவு கடனாக வாங்கிக் கொண்டு போனாள். அவளுடைய வீட்டிற்கு விருந்தினர்கள் வந்திருக் கிறார்களாம். அவள் புறப்பட்டுச் சென்ற பிறகு அய்யா சொன்னார் ''உங்க அப்பாவைப் பாத்தேன்.''.

''எங்கே?'' என்று ஆவலுடன் நஞ்சம்மா கேட்டாள். அவளுடைய தந்தை கண்டி ஜோசியர் காணாமல் போய் பன்னிரண்டு வருடமாகி விட்டது. அவருடைய அடையாளமே மறந்து போயிருக்கும். அவர் உயிரோடு இருக்கிறாரா அல்லது இறந்து விட்டாரா என்று அவள் அடிக்கடி நினைப்பதுண்டு.

''காசியில் தான் பார்த்தேன். போன மாசம் ஒரு நாள் காலையிலே ஆத்தங்கரைக்குப் போயிருந்தேன். அந்தக் குளியல் துறைக்கு ஹனுமான் காட்னுபேர். நம்ம பக்கத்து பிராமணர்கள் பல பேர் அங்கே இருக்காங்க. நம்ம பக்கத்துக்காரர்கள் மட்டுமா, இந்தியாவின் எல்லாப் பாகங்களிலிருந்தும் காசிக்கு ஜனங்க தினமும் வந்துகிட்டே இருக்காங்க. அவர் அங்கே திதி செஞ்சு கிட்டிருந்தார். மந்திரங்களை சத்தமா சொல்லிக்கிட்டிருந்தார். நானே அவர் கிட்டே போய்ப் பேசினேன். ரெண்டு நாளைக்கப் புறம் நான் தங்கியிருந்த ஜங்கமவாடி மடத்துக்கு அவர் வந்தார். என்னைக் கைது செய்ய போலீஸ் உத்தரவு இன்னமும் இருக்கு தான்னு பயந்துகிட்டே கேட்டார். 'எதுக்காக'ன்னு கேட்டேன். 'எங்க ஊர் கணக்குப்பிள்ளை சியாமண்ணா செத்துப் போனதுக் காக'ன்னு சொன்னார். எனக்கு விஷயம் விளங்கலே. 'நீங்க கோர்ட்டிலே ஜெயிச்சுட்டீங்களே! எதுக்காக, ஊரை விட்டுக் கௌம்பினீங்க'ன்னு கேட்டேன். அவர் பதில் சொல்லலே. 'நான் ஊரை விட்டு வந்து பன்னெண்டு வருஷமாச்சு. ஊருக்குப் போகணும்,' அப்பிடின்னார். அதுக்கப்புறம் நான் அவரைப் பார்க்கலே. அவர் எங்கே தங்கியிருக்கார்னு எங்கிட்டே சொல்லலே.''

நஞ்சம்மாவுக்கு விஷயம் புரிந்தது. கோர்ட்டில் வழக்கை முடித்துக் கொண்டு திரும்பி வந்த சியாமண்ணா ''அவன் பிடி பட்டா ஜட்ஜ் அவனை ஒழிச்சிடுவார்'' என்று சொல்லிக் கொண்டிருந்தான். அதனால்தான் அவர் பயந்து தலைமறை வாகிப் போய் விட்டார். இதைப் போன்ற விவகாரங்களின் கெடு பன்னிரண்டு வருடமாம். அதற்குப் பிறகு அந்த ரிக்கார்டுகளை எரித்து விடுவார்களாம். இவ்வாறு வீடு, வாசல்

எல்லாவற்றையும் விட்டு ஊர் சுற்றுவது தான் அப்பாவின் தலையெழுத்து என்று நினைத்துக் கொண்டு நஞ்சம்மா பேசாமல் இருந்தாள். அப்பொழுது சென்னிகராயர் வீட்டிற்குத் திரும்பினார். அய்யாவைக் கண்டதும் அவருக்கு மிகுந்த சந்தோஷம் ஏற்பட்டது. அய்யா இருந்தால் அவருடைய பஜனை, கதை ஆகியவற்றைக் கேட்டுக் கொண்டு இருக்கலாம். சௌகரியமாகப் பொழுது போய் விடும். அய்யா வெளியூருக்குப் போய் விட்டு வந்ததைப் பற்றி அவர் பொதுவாக விசாரித்தார். காசியைப் பற்றி அனேகம் பேர் அவரிடம் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் மாதேவய்யாவைப் போல் வருடக் கணக்கில் அங்கே தங்கியிருந்தவர்களை அவர் அதுவரை கண்டதில்லை. ஆகையால் அவர் அய்யாவிடம் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்பினார்.

''அய்யா அங்கே மகாராஜா தினமும் சாப்பாடு போடுகிறாராம். ஒரு லட்டு சாப்பிட்டால் ஒரு ரூபாய் தட்சிணை கொடுக்கறாங்களாமே, உண்மை தானா?''.

'' அங்கே மகாராஜா கட்டின தரும சாலைகள் நெறைய இருக்கு. ஒவ்வொரு தரும சாலையிலும் வெளியூர்க்காரங்களுக்கு மூணு வேளை சாப்பாடு போடுறாங்க. சில சமயத்திலே ஒரு லட்டு சாப்பிட்டால் ஒரு ரூபாய் கொடுக்கிறதுண்டு''.

''அங்கேயே போய் இருந்துடலாம்.''

'' காசியிலே பிச்சைக்காரங்களே இல்லைன்னு நெனைச்சீங்களா? உங்களைப் போல் எவ்வளவு பேர் யோசனை செய்யறாங்க?. எல்லோருக்கும் தினசரி மூணு வேளை சாப்பாடு போட எந்த ராஜாகிட்டே பணம் இருக்கு?''.

'' தூ! அந்த ராஜாவோட யோக்கியதையை செருப்பால் அடிக்க! இந்த லட்சணத்திலே அவன் என்ன மகாராஜா?.''

மாதேவய்யா பதில் சொல்லவில்லை, சற்று நேரம் கழித்து அவர் புறப்பட்டதும் நஞ்சம்மா அவரிடம் ''அய்யா, உங்க ராகி, பருப்பு எல்லாமே திருட்டுப் போயிடுத்து. இன்னிக்கு நீங்க சாப்பிடக் கொஞ்சம் மாவு, பருப்பு மௌகாய்ப்பொடி கொடுக்கறேன். இல்லாட்டா எங்க வீட்லேயே சாப்பிட்டுடறீங்களா?'' என்றாள்.

அவர் ஒரு நிமிடம் யோசித்து விட்டு ''இந்த ஊருக்குத் திரும்பி வந்தாச்சு. அக்கம்பக்கத்து ஊர்லே யாசகம் செஞ்சு சாப்பிடறேன். ஜாதிக்காரங்க தயவு இனி கெடையாது. இங்

கேயே சாப்பிட வர்றேன்'' என்று சொல்லி அங்கிருந்து கிளம்பினார்.

அவர் கோவிலுக்குச் சென்ற அரை மணி நேரத்திற்குள் வாணிக ஜாதியைச் சேர்ந்த ஆண்பிள்ளைகள் ஒவ்வொருவராக அவரைப் பார்க்க வந்து சேர்ந்தார்கள். ரேவண்ண செட்டி, செட்டப்பன், மருனப்ப செட்டி, லிங்க தேவன் ஆகியோர் ஒட்டு மொத்தமாக நெடுஞ்சாண் கிடையாக அவர் முன்னே விழுந்து வணங்கினார்கள். ''அய்யா, நீங்க பெரிய மகான். வருத்தப்பட்டு ஊரை விட்டுப் போனிங்க. அதுக்கப்புறம் மழையே பெய்யலே. வெளிச்சமும் இல்லே. நேத்து ராத்திரி வந்திங்க. உடனே மழை பெஞ்சது. நாங்க உங்களைப் பத்தி கண்டபடிப் பேசி பாவம் செஞ்சிட்டோம். நீங்க அதை மறந்து எங்க வீட்டுக்கு தினமும் வந்து தானம் வாங்கிக்கணும்'' என்று ரேவண்ண செட்டி பணிவாகக் கூறினான்.

அய்யா அந்த விவகாரத்தை மறந்து விட்டிருந்தார். தான் ஊரைவிட்டுச் சென்றதால் மழை பெய்யவில்லையா? ராமஸந்திர கிராமத்தில் மட்டுமல்லாது அந்த வட்டாரம் முழுவதுமே மழை இருக்கவில்லையே. தமிழ், தெலுங்கு பிரதேசங்களிலும் மழை இல்லாமல் நிலங்கள் வரண்டிருந்ததைப் பார்த்திருந்தார். தான் ஊருக்கு வந்து சேர்ந்ததற்கும், மழை பெய்ததற்கும் என்ன தொடர்பு? ''நான் எப்பிடிப்பட்ட மகானும் அல்ல. மழை வர்றதும், வராததும் கடவுள் செயல். ஜனங்க பாவ புண்ணியத்துக்கு தகுந்தாப் போல நமக்கு ஆகாரம் கெடைக்குது'' என்று அய்யா கூறினார்.

ஆனால் வந்தவர்கள் அவர் சொன்னதைக் கேட்கவில்லை. மத்தியானம் தங்கள் வீட்டிற்கு வந்து உணவைப் பெற்றுச் செல்ல வேண்டுமென்று மன்றாடினார்கள். அந்த வேளையில் ஊரில் இருந்த எல்லோரும் ஆகாரம் இல்லாமல் திண்டாடு கிறார்கள் என்பது அவருக்குத் தெரியும். இருந்த போதிலும், அவர்கள் வற்புறுத்தியதால் அவர்களுடைய வீட்டிலிருந்து உணவைப் பெற்று வந்து, கோவிலில் சாப்பிட்டார். இரவு சாப்பிட வருவதாக நஞ்சம்மாவிடம் சொல்லி விட்டார். விசுவன் அவரை ஓரளவு மறந்து விட்டான். அத்துடன், அவன் பள்ளியில் படிக்கும் மாணவனாகி விட்டான்.

மாதேவய்யா, ஊரை விட்டுச் சென்றவுடன் மழை பெய்யவில்லை. ஊருக்குத் திரும்பி வந்ததும் மழை பெய்தது

என்ற செய்தி ஊருக்குள் பரவி விட்டது. குயவன், சேணியன், தச்சன் ஆகிய ஜாதிக்காரர்கள் எல்லோரும் வந்து அவரைக் கும்பிட்டுப் போனார்கள். மணியக்காரர் சிவே கவுடரைப் போன்ற சிலர் இதை நம்பவில்லை. அன்று இரவு அய்யா மட்டும் தனியாகக் கோவிலில் படுத்திருந்தார். நள்ளிரவில் யாரோ வந்து ''அய்யா அய்யா'' என்று கூப்பிட்டு அவரை எழுப் பினார்கள். அவர் எழுந்து தீக்குச்சியைக் கிறினார். மணியக் காரர் சிவே கவுடரின் வேலையாள் கொரவன் எதிரே நின்று கொண்டிருந்தான். அவன் அவருடைய கால்களைத் தொட்டுக் கும்பிட்டு, ''அய்யா, எனக்குப் பாவம் வர வேணும். நான் தப்பு செய்யலே'' என்றான்

''ஏன் என்ன ஆச்சு? எழுந்திரு''

''உங்க ராகி, பருப்பு இதுகளை எல்லாம் கவுடர்தான் ராத்திரி வேளையிலே வந்து அள்ளிக் கிட்டிப் போனாரு. அவர் தான் பூட்டையும் உடைச்சாரு. நான் மூட்டையைத் தூக்கிட்டுப் போயி அவங்க கொட்டகையிலே வைச்சேன். என் வீட்டுக்கு எடுத்துப் போகலே. இதிலே என் தப்பு ஒண்ணுமில்லே''

''சரி, விடு. தப்பு உன்னோடதில்லே''

''நான் சொன்னதை யார்கிட்டேயும் சொல்ல வேணும்''

''சரி ஆகட்டும். சொல்ல மாட்டேன்'' என்று வாக்குறுதி கொடுத்த பிறகு அவன் சென்றான்.

மணியக்காரர் சிவே கவுடர் எப்படிப் பட்ட ஆள் என்பது அய்யாவுக்கு முன்னரே தெரிந்திருந்தது. கோவில் அறையின் பூட்டை உடைத்து ராகியைத் திருடிக் கொண்டு செல்வதற்கு இப்படிப்பட்ட ஆட்களின் உதவி வேண்டும். சாதாரணத் திருடன் இதைச் செய்திருக்க முடியாது என்று அவர் ஏற்கனவே எண்ணியிருந்தார்

மறு நாள் காலையில் பத்து மணியளவில் ஒரு விசித்திரமான சம்பவம் நடந்தது. நூறு தும்பிகள் ஒரே சமயத்தில் பறக்கும் பொழுது சத்தம் எழுப்புவதைப் போல் ஒலி கேட்டது. வயல் வரப்புகளிலும் தோட்டங்களிலும் வேலை செய்து கொண்டிருந்த வர்கள் தலையை நிமிர்த்தி மேலே பார்த்தார்கள். கருடனைப் போல் ஏதோ ஒன்று வெண்மையாக ஆகாயத்தில் பறந்து கொண் டிருந்தது. இறக்கைகள் அசையவில்லை. இறக்கைகளைப் போன்று

இரண்டு பக்கங்களிலும் ஏதோ இருந்தது. கழுத்து இருக்கவில்லை. வால் போன்று ஏதோ இருந்தது. ஊருக்கு மேல் அது பறந்த பொழுது அதிலிருந்து ஏதோ கீழே விழுந்தது. கீழே விழுந்த பொருள் காற்றில் சிதறிப் பல இடங்களிலும் விழுந்த பிறகு, அது ஒரு நோட்டீஸ் கட்டு என்று தெரிந்தது. கிராமத்தில் இருந்தவர்கள் எல்லோருமே அதுவரை ஆகாய விமானத்தைக் கண்டதில்லை. அதைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தார்கள். எனவே, பறந்து சென்றது ஒரு ஆகாய விமானம்தான், என்று அவர்கள் ஊகித்தார்கள். கீழே விழுந்த ஒரு நோட்டீசை எடுத்து நஞ்சம்மா படித்தாள்.

மைசூர் ராஜ்யத்தின் மேன்மை பொருந்திய மகாராஜாவின் அரசாங்கம் அதை அச்சிட்டிருந்தது. சண்டை நடந்து கொண்டிருக்கிறதாம். ஐரோப்பாக் கண்டத்தில் ஜெர்மனிக்காரர்கள் முன்னேறி வருகிறார்களாம். ஜப்பான் தேசம் இந்தியாவைப் பிடிக்க வந்து கொண்டிருக்கிறதாம். மைசூர் ராஜ்யத்தின் மீதும் ஜப்பான்காரர்கள் குண்டு வீசலாம். விமானங்கள் பறந்தால் மக்கள் நின்று கொண்டு பார்க்கக் கூடாது. இருக்கும் இடத்திலேயே குப்புறப் படுத்துக் கொள்ள வேண்டும். எதிரிகளை விரட்டுவதற்காக யுத்த நிதிக்கு உதவ வேண்டும், என்று அச்சிட்டிருந்தார்கள். ''வெற்றி'' என்ற சொல் பெரிய எழுத்துக்களில் அச்சிடப்பட்டிருந்தது.

ஒரு வாரம் கழித்து ஷேக்தார் ராமஸந்திர கிராமத்துக்கு வந்தார். யுத்த நிதிக்குப் பணம் திரட்ட வேண்டுமென்று அரசாங்கம் உத்தரவு போட்டிருக்கிறதாம். இதே அரசாங்கம் தான் போன வருடம் மழை தவறி விட்டதால் வரி வஜா செய்திருந்தது. இங்கிலாந்து சக்கரவர்த்தி வெற்றி பெறப் பணம் வேண்டும். ஆகையால் ஒவ்வொருவரும் தன்னால் இயன்ற அளவு பணம் கொடுக்க வேண்டுமென்று ஷேக்தார் சொன்னார். ஷேக்தார் கேட்ட தொகையை சிவே கவுடரும், வட்டிக் கடைக்காரனும் தந்து விட்டார்கள். ஊருக்கு வெளியே கடை வைத்திருந்த நரசி ஐந்து ரூபாய் கொடுத்தாள். மொத்தமாக நூறு ரூபாய் வசூலாயிற்று. ''எப்படியோ, உங்க ஊர் மானம் போகலே'' என்று சொல்லிவிட்டு ஷேக்தார் புறப்பட்டார்.

மறுநாள் ராமண்ணன் பள்ளியிலிருந்து திரும்பி வந்த பொழுது அவனுடைய சட்டையின் மேல் 'V' என்று அச்சிடப்பட்ட ஒரு காகிதத் துண்டு குண்டூசியால் குத்தப்பட்டிருந்தது. அவன் நஞ்சம்மாவிடம் சொன்னான்: ''அம்மா, இதைக் குத்திட்டு எங்க பள்ளிக்கூடத்துப் பசங்க எல்லோரும் ஊர்வலம்

போறேம். இது என்ன தெரியுமா? இங்கிலீசிலே ''வி''ன்னு அச்சடிச்சிருக்கு.''

''அப்படின்னு என்ன?''

''வி'' ன்னு சொன்னு விக்டரின்னு அர்த்தம். அதாவது சண்டையிலே நமக்கு வெற்றி கெடைக்கணும். அதுக்காக ஒவ்வொரு பையனும் ரெண்டணு கொடுக்கணும்னு ஹெட்மாஸ்டர் சொல்லியிருக்கார்'' என்று மகன் விளக்கினுன். இரண்டணு சம்பாதிப்பது எப்படி என்ற கவலையில் தாய் மூழ்கினுள்.

## பதினென்று

### 1

இவ்வளவு காலமாகியும் கமலாவுக்குக் குழந்தை பிறக்கவில்லை. தான் வளர்த்த பேரன் மூலம் வம்சம் வளராததைக் கண்டு அக்கம்மாவுக்குப் பெரிய மனக்குறை. அதையும் தவிர கமலா தன் கணவனையும் பாட்டியையும் சந்தோஷமாக வைத்திருக்கவில்லை.

ராமஸந்திர கிராமத்தில் மழை தவறி விளைச்சல் இல்லாமற் போய்விட்ட பொழுது நாகலாபுரத்திலும் விளைச்சல் இல்லை. கல்லேசன் கெட்டிக்காரன். எப்பொழுதும் ஒரு வருடத்திற்குத் தேவையான தானியத்தைச் சேமித்து வைப்பது அவனுடைய வழக்கம். போன தடவை மழை தவறி விடும் என்று தோன்றியவுடன் வயலில் கம்பு விதைத்தான். மழை பெய்யாவிட்டாலும் வயலில் கம்பு விளைந்தது. வீட்டில் ராகி இருந்தது. ஆகையால் தானியத்திற்குத் தட்டுப்பாடு ஏற்படவில்லை. கம்புச் சோறு நன்ருகயிருந்தது. ஆனல் அது கல்லேசனுடைய உடம்பிற்கு ஒத்துக் கொள்ளவில்லை. அதைச் சாப்பிட்டால் ஏற்கனவே சிறிதளவு சுவாதீனமில்லாத அவனது இடக்கை நடுங்கத் தொடங்கிவிடும். ஆகையால் அவன் அதைச் சாப்பிடுவதில்லை. வீட்டில் இருந்த ஒரு மூட்டை நெல்லை அவ்வப்போது குற்றிக் கொண்டால் ஐம்பது படி அரிசியாவது கிடைக்கும். தினமும் அரை ஆழாக்கு அரிசிச் சோறு வடித்தால் போதும். அவன் ராகிக் களியுடன் அதைச் சாப்பிட்டு வந்தான். அக்கம்மாவுக்கு வயதாகிவிட்ட போதிலும் கம்புச் சோற்றுல் அவளுக்கு எந்த விதத் தொந்தரவும் ஏற்படவில்லை. ஆகையால் கமலாவும், தானும் அதையே சாப்பிடலாம் என்று அக்கம்மா முடிவு செய்தாள்.

இரண்டு வகையான சோறு செய்து தனக்கு ஒரு விதமாகவும் தன்னுடைய கணவனுக்கு மற்றொரு விதமாகவும் பரிமாறு வதைக் கண்ட கமலா எரிந்து விழுந்தாள். ''அவன் மட்டும் என்ன உசத்தி; நான் என்ன மட்டம்?'' என்பது தான் அவளுடைய கேள்வி. நாகலாபுரத்துக்கு வந்து பன்னிரண்டு வருடங்களாகிவிட்ட போதிலும் தான் இன்னமும் ஹாசன் நகரத்தைச் சேர்ந்தவள் என்னும் எண்ணம் அவளிடம் பதிந் திருந்தது. ஆகையால் அதுவரை ஒரு நாள் கூட அவள் ராகியைச் சாப்பிட்டது கிடையாது. இப்பொழுது கம்புச் சோறு எப்படித் தொண்டைக்குள் இறங்கும்? ஒரு நாள் அக்கம்மா சமைத்துவிட்டுக் கொல்லையில் பறங்கிக் கொடி அருகில் உட் கார்ந்திருந்தாள். கல்லேசன் காய்கறிச் செடிகளுக்குப் பக்கத்தில் மண்ணைக் கொத்திக் கொண்டிருந்தான். ராகி, அரிசி, பருப்பு ஆகியவை கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் கொல்லையில் எப்பொழுதும் நிறையக் காய்கறிச் செடிகளைப் பயிரிட்டு வந்தான். சும்மாவிருப்பது அவன் சுபாவமல்ல. கொத்திய மண்ணை அப் புறப்படுத்தி அந்த இடத்தில் சாணி, செம்மண் கலவையைப் போட்டு விட்டு மறுபடியும் பழைய மண்ணைப் போட்டு மூடி பாத்தி கட்டி இரண்டு குடம் தண்ணீர் இறைத்து ஊற்றினான். சாப்பிட்ட பிறகு எந்தச் செடிக்கு என்ன செய்ய வேண்டும் என்பதை முடிவு செய்தான். பிறகு அக்கம்மாவிடம் ''சாப்பாடு போடு, எழுந்திரு'' என்றான்.

கல்லேசன் மற்றொரு குடம் தண்ணீரை இறைத்துக் கிணற் றின் அருகேயிருந்த கல்லின் மேல் நின்று கொண்டு கை கால் களைச் சுத்தம் செய்து கொண்டிருந்தான். அக்கம்மா உள்ளே சென்றாள். கமலா வெள்ளித் தட்டில் சாப்பிட்டுக் கொண்டிருந் தாள். கணவனுக்காகச் செய்திருந்த அரிசிச் சோறு அவள் தட்டிலிருந்தது. சோற்றுப் பாத்திரம் காலியாயிருந்தது. தாராளமாக நெய் ஊற்றிக் கொண்டு தெளிந்த ரசத்தையும் விட்டு ருசித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். உள்ளே வந்த அக்கம்மா திகைப்படைந்து நின்றாள். கமலா அவளைப் பொருட் படுத்தாமல் சாப்பிட்டுக் கொண்டேயிருந்தாள். அப்பொழுது கல்லேசனும் உள்ளே வந்தான். பார்த்தவுடன் அவனுக்கு விஷயம் தெரிந்து விட்டது. நேரே அடுப்புக்கு அருகே சென்று அங்கேயிருந்த விறகுக் கட்டையை எடுத்து அவளது முதுகு, கை, கால் உடம்பு முழுதும் அடித்து நொறுக்க ஆரம்பித்தான். ''சாப்பிட்டுட்டுப் போகட்டும். அடிக்காதே'' என்று சொல்லி அக்கம்மா இடையே புகுந்தாள். அவன் அவளை இடது கையால்

தள்ளி விட்டான். கிழவி தடுமாறிக் கொண்டே சுவரோரமாக விழுந்தாள்.

''அடிக்கிறயாடா, உன் வீட்டுச் சோறு சாப்பிட்டதுக்காக அடிக்கிறயாடா? பொண்டாட்டிக்குச் சோறு போட யோக்கிதை இல்லாதவனே! அடிக்க மட்டும் வந்திட்டியா? உனக்கு வெக்கம், மானம் கெடையாதா? என்று கமலா கோபத்துடன் கத்தினாள். கல்லேசனுடைய கோபம் அதிகமாகியது. அவன் கண்மூடித்தனமாய் அடிக்க ஆரம்பித்தான். விறகு உடைந்து போயிற்று. விறகைப் பிடித்துக் கொண்டிருந்த அவனுடைய கையில் சிராய்க் குச்சிகள் குத்தி ரத்தம் வடிந்து கொண்டிருந்தது. கமலாவின் உடம்பு வீங்கிப் போய் ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. முறிந்து போன விறகை வீசியெறிந்து விட்டு அவன் சாப்பிடாமலேயே வெளியே போனான். அவன் அப்படி வீட்டை விட்டு வெளியே போவது முதல் தடவையல்ல. அவன் எங்கே போகிறானென்று யாரும் சரியாகச் சொல்ல முடியாது. ஆனால் அவன் போகக் கூடிய இடம் எது என்பது அக்கம்மாவுக்குத் தெரியும். அந்த இடத்தைப் பற்றி கமலாவுக்கும் தெரியும். மருவனஹள்ளி வேசி தேவியின் வீட்டிற்கோ, ஹொசூருக்குப் பக்கத்தில் சேரியிலுள்ள முனியம்மா வீட்டிற்கோ அல்லது நாகலாபுரத்து புட்டியின் வீட்டிற்கோ அல்லது அதே ஊர் போலீஸ்காரன் மம்மி சாயபுவின் மூன்றாவது மனைவியின் வீட்டிற்கோ அல்லது வேறு எங்கோ செல்வான். அவனது சாப்பாடு பலகாரம் எல்லாம் அங்கேயே முடிந்து விடும். எந்த இடத்திற்குப் போனாலும் நள்ளிரவுக்குள் வந்து விடுவான். அல்லது வேறு இடத்திற்குப் போனாலும் ஒரு நாளுக்கு மேல் தங்க மாட்டான்.

அவன் வெளியே சென்றவுடன் கமலா அக்கம்மாவைப் பார்த்து, ''கௌவி முண்டை! உன் பேரன்கிட்டே சொல்லி என்னை அடிக்க வைச்சியா? உன் வயித்துக்குச் சோறு கெடைக்காமப் போகட்டும். உன் பொணத்தை நாய்க தின்னட்டும்...'' என்று பலவாறாகத் திட்டினாள். அக்கம்மா பேசவேயில்லை. எவ்வளவு நன்றாக சமைத்து வைத்தாலும் அதைச் சாப்பிடுவோம் என்னும் நம்பிக்கை அந்த வீட்டில் கிடையாது.

கல்லேசன் காரணமில்லாமல் ரகளை செய்வதுண்டு. அவனுடைய மனைவியும் ரகளை செய்வதுண்டு. ஆனால் அன்று கொஞ்சம் அதிகமாகத்தான் நடந்துவிட்டது. அக்கம்மா எழுந்து போய்க் கொல்லையில் மறுபடியும் அமர்ந்து கொண்டாள். அடிதடி சத்தம் நான்கு வீடுகளுக்கு மட்டும் கேட்கும்.

திட்டக்கூடிய வார்த்தைகள் இருபது வீடுகளுக்குப் பரவிவிடும். கல்லேசன் வெளியே போன சற்று நேரத்தில் கணக்குப்பிள்ளை சியாமண்ணுவின் மருமகள் வந்தாள், கமலாவை ஒத்த வயதுக் காரி. அவளுக்கும் கமலாவுக்கும் ஐந்து ஆறு ஆண்டுகளாக சினேகிதம். இருவரும் ஒன்ருகச் சேர்ந்தே ஏரிக்குச் சென்று கொண்டிருந்தனர். இரண்டு வருடங்களுக்கு முன்பு சியாமண்ணு வின் மனைவி இறந்துவிட்ட பிறகு மருமகள் புட்டகௌரி தான் வீட்டிற்கு எஜமானி. அவளுடைய கணவனும் அவளுடைய சொற்படி கேட்டு வந்தான். அவள்தான் அவ்வப்போது கமலாவுக்கு ஆலோசனை சொல்பவள். அவள் வந்து போவது அக்கம்மாவுக்குப் பிடிக்கவில்லை. சியாமண்ணு தன் மருமகளின் மூலம் கமலாவைத் தூண்டி விட்டு வீட்டில் வம்பு வளர்த்து வேடிக்கை பார்க்கிருர் என்பது அக்கம்மாவின் எண்ணம். அவளுடைய எண்ணம் சரிதான் என்பது கல்லேசனுக்குத் தெரியும். அவளது சகவாசத்தை விட்டுத் தொலைத்தால் கமலா திருந்தி விடுவாள் என்பது அக்கம்மாவின் நம்பிக்கை. ஆனுல் கல்லேசனும் அவள் வந்து போவதைக் கண்டிக்கவில்லை.

கல்லேசன் வெளியேறிய பிறகு புட்ட கௌரி வந்தாள். கமலா தன் படுக்கையறையில் பாய் விரித்துப் போர்த்துக் கொண்டு படுத்து விட்டாள். அடி விழுந்த இடத்திற்கு உப்பு ஒத்தடம் கொடுத்தாள் கௌரி. சினேகிதிக்கு ஆறுதல் சொன் ஞள். பிறகு சாயங்காலம் ஒரு பாத்திரத்தில் குழம்பும் சோறும் பிசைந்து கொண்டு வந்து கொடுத்தாள். ''கல்லேச ஜோசியர் வீட்டிலே, பொண்டாட்டிக்குப் போட சோறு கெடையாது, நான் போய்ச் சோறு கொடுத்திட்டு வந்தேன்'' என்று அக்கம் பக்கத்து நான்கு வீடுகளில் சொல்லிப் பாத்திரத்தையும் காண் பித்துவிட்டுப் போஞள் கௌரி.

கல்லேசன் மறு நாள் காலையில் வீட்டிற்கு வந்தான். அதற்குள் மனைவி எழுந்து முகம் கழுவி காப்பி போட்டுக் குடித்து விட்டு மறுபடியும் படுத்துக் கொண்டிருந்தாள். முந்திய தினம் அவன் அடித்த வேகத்தில் அவளுடைய இரண்டு காது தோடுகளும் உடைந்து சிதறி விட்டன. அந்தச் சிதறல் துண்டு களைக் கிழவி அறியாமல் பெருக்கியெடுத்து எறிந்து விட்டாளோ! அல்லது பேத்தியின் வீட்டிற்கு அனுப்புவதற்காக திருட்டுத்தன மாக எடுத்து வைத்திருக்கிருளோ! ''நான் அப்பிடிப்பட்ட திருடியல்ல'' என்று அக்கம்மா கமலாவிடம் சொல்லிக் கொண் டிருந்தாள். ''கல்யாணத்தில் செஞ்சு போட்ட தோடு போயிட் டுது. இப்ப எனக்கு மறுபடியும் செஞ்சு கொடுக்காட்டா என்

அப்பாவுக்குக் கடிதாசி போடுவேன்'' என்று கமலா மிரட்டிக் கொண்டிருந்தாள். வீட்டிற்கு வரும் வேளையில் கல்லேசனுடைய கோபம் சற்றுத் தணிந்திருந்தது. அக்கம்மா குப்பை கொட்டிய இடத்தில் அவன் தேடிப் பார்த்தான். பேத்திக்குக் கொடுத் தனுப்புவதற்காகப் பாட்டி திருடி வைத்திருப்பாள் என்று சொல்லுவதில் அவனுக்கு நம்பிக்கை கிடையாது. முதுகில் மட்டும் அடித்திருக்க வேண்டும். காதில் படும்படியாக அடித் திருக்கக் கூடாது என்று பச்சாதாபப்பட்டுக் கொண்டான்.

கமலா இரண்டு மாத காலம் காதில் எதுவும் அணிந்து கொள்ளாமலே இருந்தாள். மனைவி அப்படியிருப்பது கல்லேச னுக்குக் கௌரவக் குறைவாக இருந்தது. ஆகையால் எப் படியோ பணத்தைச் சமாளித்து எண்பது ரூபாய் கொடுத்து ஒரு ஜோடி வெள்ளித் தோடு வாங்கிக் கொடுத்தான்.

௨

ஒரு வருடம் கழிந்தது. மழை தவறியதால் குடிநீர் தட்டுப் பாடு ஏற்பட்டுவிட்டது. எப்பொழுதும் ஊர்க்காரர்கள் அரை மைல் தூரத்திலுள்ள ஏரியிலிருந்து குடிநீர் எடுத்து வருவார்கள். ஏரி வற்றிவிட்ட பிறகு அதன் நடுவே நான்கு சிறிய கிணறுகளைத் தோண்டியிருந்தார்கள். கமலா ஒரு நாள் மத்தியானம் ஏரிக்குப் போயிருந்தாள். அன்று ஏகாதசி. அக்கம்மா ஊருக்கு வெளியே யிருந்த கேசவன் கோவிலுக்குப் போயிருந்தாள். கௌரி தலையில் ஒரு குடத்தையும், இடுப்பில் ஒரு குடத்தையும் வைத்துக் கொண்டு கல்லேசனுடைய வீட்டிற்கு வந்தாள். ''கமலா'' என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே வந்தாள். யாரும் இருக்க வில்லை. கொல்லைவரை சென்று பார்த்தாள். யாரையும் காணோம். திரும்பிப் போகலாம் என்று நினைத்து உள்ளே வந்த போது முன்புறக் கதவு சாத்தியிருந்தது. அது எப்படி என்று நினைத்துப் பின்னால் திரும்பிப் பார்த்தாள். கொல்லைப்புறக் கதவும் மூடப்பட்டு விட்டது. உள்ளே இருட்டு. ''அய்யோ அம்மா'' என்று கூப்பாடு போட்டாள். யாரோ வாயைப் பொத்தினார்கள்.

அவள் வீட்டிற்குத் திரும்பிய பொழுது நெஞ்சு அடித்துக் கொண்டது. கல்லேசன் கெட்டவன் என்று எவ்வளவோ பேர் சொல்லிக் கொண்டிருந்தார்கள். ஊருக்கு வெளியே அவன் ஏதோ செய்து கொள்ளட்டும். பகலில் அவன் மனைவி வெளியே போயிருந்த போது வீட்டிற்கு வந்த தன்னிடம் அப்படி நடந்து கொண்டு விட்டானே, என்பதை நினைத்த பொழுது அவளுடைய கை கால்கள் நடுங்கின.

அவள் வீட்டிற்குப் போய்ச் சேருவதற்குள் கல்லேசனுடைய வீட்டருகேயிருந்த நான்கைந்து பேர்கள் கேட்டார்கள். ''நீங்க எதுக்காக அப்படிக் கத்தினிங்க?'' அவளுடைய மாமனார் சியாமண்ணாவும் கணவன் நஞ்சுண்டையாவும் வீட்டிலேயே இருந்தார்கள். ''ஒண்ணுமில்லே, பூனை மேலே விழுந்திட்டுது'' என்று கௌரி சொன்னாள். ''கூப்பாட்டைக் கேட்டு ஓடி வந்தோம். கதவுக்குத் தாப்பா போட்டிருந்திச்சு.'' மறுபடியும் என்ன பதில் சொல்வது என்று அவளுக்குத் தெரியவில்லை. ''கமலா கொல்லைப் பக்கமிருந்தா'' என்றாள். ஜனங்கள் புறப்பட்டுப் போனார்கள். அப்பொழுது கமலா தண்ணீர்க் குடம் எடுத்துக் கொண்டு வீட்டின் முன்புறம் நுழைந்தாள். சியாமண்ணாவுக்கு சந்தேகம் வந்து விட்டது. அவர் உள்ளே சென்று அவளிடம் ''உண்மையைச் சொல்லு. யாராவது போக்கிரித்தனம் செஞ்சிருந்தா அவனை வெட்டிப் புதைக்கிறேன். பயப்பட வேணாம்'' என்றார். ''கமலா இருக்கிறாள்னு நெனைச்சுகிட்டு நான் கொல்லை வரை போனேன் யாரும் இருக்கலே. திரும்பி வந்தேன். எங்க வீட்டுக்கு நீ ஏன் வந்தேன்னு கல்லேச ஜோசியர் கேட்டார். எனக்குப் பதட்டமாப் போச்சு. கூப்பாடு போட்டுகிட்டே பின்பக்க வழியிலே புகுந்து ஓடி வந்துட்டேன். நீ, நான் அப்பிடின்னு அவர் எங்கிட்டே பேசலாமா?''

மருமகள் பேச்சை நம்புவதா? வேண்டாமா? என்று சந்தேகம் வந்தது. அதை நம்பி ரகளை செய்தால் தன்னுடைய குடும்பத்தின் மானம் போய் விடும், என்று அவருக்குத் தோன்றியது. அவருடைய மகன் நஞ்சுண்டையாவுக்கு எதுவும் விளங்கவில்லை. ''அந்தக் கழுதெ அப்பிடியா சொன்னான்? இனிமேலே அவனோடெ வீட்டுக்குப் போக வேண்டாம்'' என்று உத்தரவிட்டான்.

சியாமண்ணா கல்லேசனுடைய வீட்டுக்கு வந்தபோது கமலா இருந்தாள். அக்கம்மா இன்னும் வரவில்லை. சியாமண்ணா கமலாவிடம் ''என் மருமக உன்னைக் கூப்பிடறதுக்காக உன் வீட்டுக்கு வந்தா உன் புருஷன் மரியாதையில்லாம பேசிட்டாரும். அவன் மேலே கேஸ் போட்டு மாட்டிடுவேன். ஏதோ போகட்டும்னு பேசாம இருக்கேன். இனிமே நீ எங்க வீட்டுக்கு வர வேண்டாம். அவ உங்க வீட்டுக்கு வர மாட்டா'' என்று கண்டிப்பான குரலில் சொல்லிவிட்டுப் போனார்.

கல்லேசன் இரண்டு நாட்கள் ஊருக்கு வரவில்லை. மூன்றாவது நாள் இரவு பத்து மணிக்கு வந்தான். அக்கம்மா எழுந்து

சோறும் குழம்பும் செய்து போட்டாள். சியாமண்ணு தன்னைப் பற்றி ஏதாவது ரகளை செய்தானு? என்று கல்லேசன் விசாரித்தான். அக்கம்மா மருமகளுக்குக் கேட்காதவாறு தாழ்ந்த குரலில் சொன்னுள். ''கௌரி இங்கே வந்தப்ப 'நீ ஏன் வந்தே'ன்னு நீ அவகிட்டே கேட்டியாம். 'என் மருமகளை இப்படிப் பேசலாமா? இனிமே அவ இங்கே வரவும் வேண்டாம். கமலா என் வீட்டுக்கு வரவும் வேண்டாம்' அப்பிடின்னு சொல்லிட்டுப் போனுன். சனியன் தொலைஞ்சது. இந்தப் பேச்சை நாலு வருஷத்துக்கு முன்னுடி சொல்லியிருந்தா அவ இங்கே வந்து இந்தக் கொரங்கை ஆட்டி வைச்சிருக்கமாட்டா. நல்லதாப் போச்சு.'' சியாமண்ணு எந்தவித ரகளையும் செய்யவில்லை என்பதையறிந்த கல்லேசன் ஆறுதல் அடைந்தான். புட்ட கௌரிக்கும் கமலாவுக்கும் இருந்த தொடர்பு அறுந்து போயிற்று. ஒரு நாள் அவர்கள் இருவரும் தண்ணீர் எடுக்கப் போனபோது பார்த்துக் கொண்டார்கள். கமலா அவளிடம் பேசினுலும் அவள் முகத்தைத் திருப்பிக் கொண்டு போய்விட்டாள்.

உயிர்த் தோழி ஒருத்தியை இழந்துவிட்டோமே என்று அவளுக்கு வருத்தம் ஏற்பட்டது. அத்துடன் மற்ருெரு கவலையும் ஏற்பட்டது. அதை யாரிடமும் சொல்ல முடியவில்லை. சொல்லாமல் இருக்கவும் முடியவில்லை. மிகவும் இக்கட்டாகப் போய்விட்டது. எட்டு நாட்களுக்குப் பின் ஒரு நாள் காலையில் நேரே சியாமண்ணுவின் வீட்டிற்குப் போனுள். அந்த நேரத்தில் சியாமண்ணுவும் நஞ்சுண்டையாவும் வீட்டில் இருக்க மாட்டார்களென்பது அவளுக்குத் தெரியும். அவள் உள்ளே சென்று கௌரியின் முன்னே நின்று ''அவர் ஏதோ ஒரு வார்த்தை பேசியிருக்கலாம். அதுக்காக நம்ம சினேகம்விட்டுப்போகளமா?'' என்ருள். என்ன சொல்வது என்று கௌரிக்கு உடனே தெரியவில்லை. அவள் கமலாவைப் பார்த்து ''போதும், போதும், உன் சினேகமும் வேண்டாம்; நீ வரவும் வேண்டாம். நீ வந்தது தெரிஞ்சா என் மாமா உன் காலை முறிச்சுப் போடுவார். பேசாமல் நட'' என்ருள்.

''போறேன். என் தோடு, பணம் ரெண்டையும் கொடு.''

''எந்தத் தோடு? எந்தப் பணம்?''

''என்ன அப்பிடிச் சொல்றே? போன வருஷம் என் வீட்டுக்கார் என்னை அடிச்சப்ப தோட்டை உன்கிட்டே கொடுத்தேனே! தண்ணிக்குப் போறப்ப நான் கொடத்திலே போட்டுட்டு வந்து உனக்குக் கொடுத்த அரிசி, காப்பிக் கொட்டை இதுக்கெல்லாம் பதினஞ்சு ரூபாய் வரணும்.''

''கமலா, பொய் பேசினு நாக்கு புளுத்துப் போயிடும். இங்கிருந்து நட. ஒரு நிமிஷமும் நிக்காதே. என் மாமனுர் வருவார்.''

கோபத்தில் கமலாவின் உடம்பு எரிந்தது. உதடுகள் துடித்தன. என்ன பேசுவது என்று தெரியவில்லை. பழைய காலத்து கனமான தோடு. எண்பது ரூபாய்க்குக் குறையாது. அதைத் தவிர பதினைந்து ரூபாய். அவள் பணத்தை ஏமாற்றப் பார்க்கிறுள். அதற்காகத்தான் உன் கணவன் அப்படிச் சொன்னுன், இப்படிச் சொன்னுன் என்று பொய் சொல்லி என்னிடம் பேசுவதை நிறுத்திவிட்டாள். என் பணத்தை நான் வாங்காமல் விட்டு விட்டால் நான் ஹாசன் ஊர்க்காரியல்ல — என்று நினைத்தவாறு சுற்றிலும் பார்த்தாள். கொல்லையில் குளியல் அறையில் இருந்த பெரிய அண்டா கண்ணில் தட்டுப்பட்டது. குளியல் அறைக்குப் போய், அண்டாவிலிருந்த நீரைக் கீழே கொட்டி அதை இரண்டு கைகளிலும் தூக்கிக் கொண்டு ''என் பணத்தைக் கொடுத்து உன் அண்டாவை எடுத்துக்கிட்டுப் போ'' என்று சொல்லியவாறு புறப்பட்டாள். புட்ட கௌரி ''ஐயோ! திருட்டு முண்டை, வீட்டுக்குள்ளே புகுந்து அண்டாவைத் தூக்கிக்கிட்டுப் போறியா?'' என்று சொல்லியவாறு அவளைத் தடுத்தாள். ஆனுல் கமலா அவளை விட பலசாலி. அவள் கௌரியைக் கீழே தள்ளி அண்டாவைத் தலையின் மேல் வைத்துக் கொண்டு தன் வீட்டிற்கு வந்துவிட்டாள்.

கல்லேசனுடைய மனைவி அண்டாவைத் தூக்கிக் கொண்டு போவதைத் தெருவில் ஐந்தாறு பேர்கள் பார்த்து விட்டார்கள், இருந்தாலும் அவர்களுக்கு அது முக்கியமான விஷயமாகப் படவில்லை. கமலா தன் வீட்டிற்கு வந்தபோது அவளுடைய கணவன் இருக்கவில்லை. அண்டாவைச் சமையல் அறையில் வைத்து வீட்டின் முன் கதவைச் சாத்தி விட்டாள். அக்கம்மாவுக்கு எதுவும் புரியவில்லை. ''என்ன இது? யார் வீட்டு அண்டா'' என்று கேட்டாள். ஆனுல் பதில் கிடைக்கவில்லை.

''என் பணத்தை ஏப்பம் விட நாடகம் போடுறீயா? என் வீட்டுக்கார் சுபாவம் தெரியாதா? ஏன் வந்தேன்னு கேட்டிருக்கலாம். ஆனு அதையே ஒரு சாக்குப் போக்கா வைச்சுகிட்டு பணத்தை ஏமாத்தப் பாக்கறு. வீட்டுப் படியேறி வந்து கேக்கட்டும். அப்புறம் பாத்துக்கறேன்'' என்று அவள் முணுமுணுத்துக் கொண்டிருந்தது அக்கம்மாவுக்குக் கேட்டது. ஆனுல் விஷயம் புரியவில்லை.

அரை மணி நேரம் கூட ஆகவில்லை. தெருவில் இரைச்சல் கேட்டது. ''என் வீட்டு அண்டாவைத் திருடிகிட்டு வந்தாயா? திருடி!'' என்று கூச்சல் போட்டுக் கொண்டே சியாமண்ணு வரும் சந்தடி கேட்டது. இருபது, முப்பது பேர்களின் நடமாட்டமும் கேட்டது. சியாமண்ணு கதவைத் தட்டினார். ''அவர் வர்ற வரை கதவைத் தெறக்க வேண்டாம்'' என்று கமலா சொன்னாள். ஆனால் விஷயம் தெரியாத அக்கம்மா கதவைத் திறந்தாள். வீட்டின் எதிரே பெரிய கும்பல் கூடியிருந்தது. சியாமண்ணு அக்கம்மாவிடம் ''உங்க மருமக எங்க வீட்டு அண்டாவை எடுத்துக்கிட்டு வந்திருக்கா. கொடுத்துடுங்க'' என்றார். ''என் பணத்தைக் கொடுக்கற வரை நான் அண்டாவைக் கொடுக்க மாட்டேன்'' என்று கமலா உள்ளிருந்து கத்தினாள். ஒன்றும் புரியாத அக்கம்மா ''எங்க கல்லேசன் ஊருக்கு வெளியே தண்ணிக்குப் போயிருக்கான். யாராவது போய்க் கூட்டி வாங்க. எனக்கு ஒண்ணும் தெரியாது'' என்றாள்.

இரண்டு பேர் ஓடினார்கள். சிறிது நேரத்தில் கல்லேசன் வந்தான். அவனை அழைத்து வந்தவர்களே அவன் மனைவி செய்த வேலையைப் பற்றி அவனிடம் கூறினார்கள். அவன் காரணம் எதுவும் தெரிந்து கொள்ளாமல் நேராக வீட்டிற்குப் போய் மனைவியிடம் ''என்ன இது?'' என்றான்.

''அந்தத் திருடி என் பணத்தை ஏமாத்திட்டா''

''எந்தப் பணம்னு கேளு'' — சியாமண்ணு சொன்னார்.

''என் ஒரு ஜோடித் தோடு. பதினஞ்சு ரூபாய்''

''எந்தத் தோடு?''

''என் தோடு முறிஞ்சு போச்சு. சரி செஞ்சு கொடுக்க றேன்னு சொல்லி உங்க மருமக வாங்கிக்கிட்டா''

''உன் தோடு கெட்டுப் போனா உன் புருசன்கிட்டே கொடுக் கணும். அவகிட்டே ஏன் கொடுத்தே? பதினஞ்சு ரூபாய் எதுக் காகக் கொடுக்கணும்?''

''எங்கிட்டே அவ அரிசியும், காப்பிக் கொட்டையும் வாங்கினா''

''கேட்டீங்களா? யாராவது இதை நம்புவீங்களா?'' சியாமண்ணு தெருவில் இருந்தவர்களைப் பார்த்துக் கூவினார்.

''மத்தவங்க எதுக்காக நம்பணும்? என் பணத்தை ஏமாத்த ணும்னு அவ கண்டபடி பொய் சொல்லி எங்கிட்டே பேசறதை

நிறுத்திட்டா. என் புருஷன் என்ன சொல்லிப்போட்டார்? அவ கொழந்தை மேலே சத்தியம் செய்யட்டும்.''

''கொழந்தையில்லாத மலடியே! நீ யாரை வைச்சுகிட்டு சத்தியம் செய்வே?'' என்று சவால் விட்டார் சியாமண்ணா. பேச்சு எப்படித் திரும்பி விட்டது, என்பதைக் கல்லேசன் கவனித்து விட்டான். சத்தியம் செய்யச் சொன்னால் கௌரி உண்மையைக் கூறி விடுவாள். அதற்காக அவன் பயப்பட்டான். அவன் திரும்பி அக்கம்மாவைப் பார்த்து ''அண்டா எங்கே இருக்கு?'' என்று கேட்டான்.

''சமையல் அறையிலே''

அவன் உள்ளே போய் அண்டாவைத் தூக்கி வந்து சியாமண்ணாவின் எதிரே வைத்தான். ''என் பணத்தையும் தோட்டையும் கொடுக்கற வரை அதைத் தொடக்கூடாது'' என்று கமலா குறுக்கிட்டாள். கல்லேசன் அவளைக் காலால் எட்டி உதைத்தான். ''திருட்டுக் கழுதெ! அவளை செருப்பாலே அடிக்கணும்'' என்று சொன்னார் சியாமண்ணா. பிறகு அங்கிருந்த தலையாரியைப் பார்த்து ''அண்டாவைத் தூக்கி வா'' என்று சொல்லிப் புறப்பட்டார்.

கும்பல் மெதுவாகக் கலைந்தது. ஆனால் இது போன்ற விஷயம் அவர்களுக்குக் கிடைத்துவிட்டால் அதைப் பற்றி விரிவாக அரட்டை அடிக்காமல் விட மாட்டார்கள். கல்லேசனுடைய வீட்டிற்கப்பால் உள்ள தெரு முனையில் மறுபடியும் ஒன்று கூடி வம்பு பேச ஆரம்பித்தார்கள்.

கல்லேசன் வீட்டுக் கதவைத் தாழிட்டான். மாடு கட்டும் தாம்புக் கயிறு ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டு கமலாவை வெளுத்து வாங்க ஆரம்பித்தான். இந்த சமயத்தில் குறுக்கிட்டால் தானும் அடிபடுவோம் என்று தெரிந்து, அக்கம்மா கொல்லைப்புறம் சென்று மாட்டுத் தொழுவத்தில் உட்கார்ந்து கொண்டாள். ''எதுக்காக அவகிட்டே உன் தோட்டைக் கொடுத்தே? சொல்லடி நாயே!'' என்று சொல்லிக்கொண்டே அவன் பத்துப் பதினைந்து அடிகள் கொடுத்த பிறகு அவள் மெதுவாகச் சொன்னாள், என் தங்கை ரங்கமணிக்குக் கொடுக்கறதுக்காக அவகிட்டே கொடுத்து வைச்சிருந்தேன்.''

''அரிசியும் காப்பிக் கொட்டையும் எப்பிடிக் கொடுத்தே?''

''தண்ணிக்குப் போறப்ப கொடத்திலே போட்டுட்டுப் போய்க் கொடுத்தேன்.''

கல்லேசன் கயிற்றை வீசியெறிந்துவிட்டு ஒரு விறகுக் கட்டையையெடுத்து வந்தான். ''அய்யோ! அப்பா! என்னைக் கொல்றானே!'' என்று கூச்சலிட்டாள் கமலா. வீட்டிற்கப்பா லிருந்த கும்பல் அந்த வீட்டெதிரே கூடி விட்டது. பட், பட் என்ற அடிகளின் சப்தமும் அவளுடைய கூக்குரலும் வசை மொழியும் வெளியே நின்று கொண்டிருந்தவர்களுக்குத் தெளி வாய்க் கேட்டது. கதவை உடைத்துக் கொண்டு உள்ளே போய் அடிதடியைத் தடுத்து நிறுத்த வேண்டுமென்று நினைத்துக் கொண்டு தூரத்து வீட்டுக்காரர்கள் சிலர் முன்னே கிளம்பினர். ஆனால் இது தினசரி நடக்கும் ரகளை என்பதைத் தெரிந்திருந்த அண்டை வீட்டுக்காரர்கள், ஜாடை காட்டி அவர்களை நிறுத்தி விட்டனர்.

கல்லேசன் அடிப்பதை நிறுத்தி விட்டான். விறகு முறிந்து விட்டதா அல்லது கை சோர்ந்துவிட்டதா? என்று தெரியவில்லை. அழுவதற்குக்கூட சக்தியில்லாமல் கமலா விழுந்து கிடந்தாள். அவளுடைய முதுகு, கை, தோள் ஆகிய இடங்களில் இரத்தம் கசிந்து கொண்டிருந்தது. அவன் அவளுடைய காதுகளில் இருந்த தோடுகளையும் கழற்றித் தன்னுடைய பெட்டியில் வைத்துப் பூட்டி, சாவியை அரைஞாண் கயிற்றில் மாட்டிக் கொண்டு வெளியே வந்தான். வீட்டின் எதிரே கூடியிருந்த கும்பலைப் பார்த்ததும் அவனுக்கு ஆவேசம் வந்துவிட்டது.

''உள்ளே என்ன ஆட்டம் போடறீங்களா? உங்களுக்கு இங்கே என்ன வேலை?'' என்று சீறினான். அங்கிருந்தவர்கள் மெதுவாக நழுவினர். கமலா இரண்டு மணி நேரம் தேம்பி யழுதாள். கணவனின் கால் முறிந்து போய், கை புழுத்துப் போய், அவன் ஜெயிலில் தூக்கில் தொங்க வேண்டும் என்று சாபமிட்டாள். காலையிலிருந்து நடந்தவற்றை அவள் மனம் எண்ணிப் பார்த்தது. அந்தத் திருட்டு முண்டை என் தோடு களையும் பணத்தையும் ஏமாற்றினாலும் பரவாயில்லை. நான் அவ்ளது அண்டாவைக் கொண்டு வந்திருக்கக்கூடாது. அதைக் கொண்டு வந்ததால் தானே போன வருடம் நடந்ததெல்லாம் தெரிந்துவிட்டது. அதனால் இந்தப் பாவி என்னை அடித்துக் கொல்லுகிறான்'' என்ற சிந்தனையும் வந்தது. ''அவன் என்னை அடித்ததற்கு அவனுக்குச் சரியான பாடம் கற்பிக்க வேண்டும். இல்லாவிட்டால் மறுபடியும் இப்படித்தான் அடிப்பான்; என்று அவள் தீர்மானித்தாள்.

3

அன்று முழுவதும் மருவனஹள்ளி தேவியின் வீட்டிலிருந்து விட்டு மறுநாள் காலையில் கல்லேசன் ஊருக்குப் புறப்பட்டான். தோட்டத்துக் கற்றுழை வேலி ஓரமாக வந்து கொண்டிருந்த பொழுது ஐந்தாறு கற்கள் அவன் மீது வந்து விழுந்தன. நிமிர்ந்து பார்த்த பொழுது மற்றொரு கல் பின்புறமாக வந்து விழுந்தது. ''யாரடா அவன்?'' என்று ஒரு முறை உரக்க அதட்டினான். கற்கள் வந்து விழுவது நின்றது. அந்தப் பக்கமாய்ச் சென்று பார்க்க அவனுக்குப் பயம். நிறைய ஆட்கள் கூடியிருந்து தன் மீது பாய்ந்துவிட்டால் என்ன செய்வது? பேசாமல் நடந்தால் யார், எதற்காக இப்படிச் செய்தார்கள் என்பது தெரியாது. பட்டப் பகல், வெட்ட வெளிச்சம் - தைரியமாகக் கற்றுழைகளை விலக்கிப் பார்த்தால் வேலியின் மறைவில் மறைந்து கொண் டிருந்தவர்களின் முகம் தெரிந்தது. தங்களை அவன் பார்த்து விட்டான் என்று தெரிந்ததும், மறைந்திருந்தவர்கள் ஓட்டம் பிடித்தனர்.

அவர்கள் சியாமண்ணாவின் கையாட்கள். கிராமத்தின் தோட்டி, தலையாரி. தன் மேல் கல் வீசுவதற்குத் தன்னிடம் அவர்களுக்கு யாதொரு விரோதமும் கிடையாது. அது சியாமண் ணாவின் வேலைதான் என்று நினைத்துக் கொண்டான். ''அந்தக் கணக்குப்பிள்ளைக்கு நேரடியாக எதையும் செய்யும் தைரியம் கிடையாது. மறைவாகத்தான் செய்வார். அப்பா இருந்த போது ஒரு தடவை அவனது வீட்டின் மீது கல் வீசச் செய்தார். அதனால் அவனுடைய அப்பா அந்தக் கணக்குப்பிள்ளையின் வீட்டு ஓடுகளைப் பட்டப்பகலில் உடைத்தெறிந்துவிட்டு வந்தார். ஆனால் தனக்கு அப்பாவைப் போல் அவ்வளவு துணிச்சல் கிடையாது என்பது கல்லேசனுக்குத் தெரியும். அந்தக் கணக்குப் பிள்ளை எதற்காக இப்படிச் செய்கிறான்? நேற்று இவள் போய் அண்டா வைக் கொண்டு வந்திருக்கக் கூடாது. அதை நானே திருப்பிக் கொடுத்து விட்டேனே. அவனுடைய மருமகளிடம் நடந்து கொண்டது அவனுக்குத் தெரிந்துவிட்டது. வெளிப்படையாக சண்டைக்கு வந்தால் அவனுடைய மானம் போய்விடும். அத னால் தான் இப்படிச் செய்கிறான். இவனிடம் சற்று தந்திரமாகவே நடந்து கொள்ள வேண்டும். அந்த கௌரியின் வம்புக்குப் போகாமல் இருந்தால் சரி'' என்று நினைத்துக் கொண்டே அவன் வீட்டிற்கு வந்தான். அக்கம்மா அவனைப் பார்த்தவுடன், ''நேத்து நீ எங்கே போயிருந்தே? நான் கெணத்திலே விழுந்துடப் போறேன்னு சொல்லி அவ நேத்து பூரா பயமுறுத்திட்டிருந்தா.

நான் ராத்திரி பூரா கண்ணே மூடலை குத்தகைக்காரனைக் கூப்பிட்டு வீட்டிலே இருக்கச் சொன்னேன்'' என்றாள்.

கமலா இன்னும் ஆத்திரமாகவே இருந்தாள். ''என்னடி கழுதெ'' என்று அவன் கேட்டவுடன் ''உன்னை ஒழிச்சுக் கட்றேன் பார்'' என்று ஆத்திரமாகக் கத்தினாள். மறுபடியும் ஒரு விறகுக் கட்டையை எடுத்து வந்து அவளை அடித்து நொறுக்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. முந்தைய நாள் அடித்ததைப் பற்றிய நினைவு வந்தவுடன் அவன் தன்னுடைய எண்ணத்தைக் கைவிட்டான். முன்பு ஒரு சமயம் அவள் கிணற்றில் விழுந்த விஷயம் நினைவுக்கு வந்தது. உடனே அவனுக்கு ஒரு வழி தோன்றியது. ''கெணத்துலே விழறியா?'' என்று கேட்டான்.

''உம்''

''வா அப்படியானா'' என்று சொல்லி அவளுடைய கைகளைப் பிடித்துக் கொல்லையில் உள்ள கிணற்றுப் பக்கம் இழுத்துக் கொண்டு போனான். ஏதாவது நடந்தால் பழி தன் மீது விழுந்து விடுமோ என்று பயந்து அக்கம்மா குறுக்கிட்டாள். கல்லேசன் அவளையும் தள்ளி விட்டான். கிணற்றின் அருகிலிருந்த புதிய கயிற்றால் அவளுடைய இரண்டு தோள்களையும் கட்டி ராட்டினத்தின் வழியாக கயிற்றைப் போட்டு அவளை மெதுவாக கிணற்றினுள் இறக்கினான். ''அய்யோ, அப்பா'' வென்று அவள் கத்தினாள். தண்ணீர் மெதுவாகக் கால், முழங்கால் இடுப்பு வரை வந்துவிட்டது. அவள் ''அய்யோ, அப்பா'' என்று கதறிக் கொண்டேயிருந்த பொழுது அவன் மேலேயிருந்த கயிற்றை ஒரு முறை விட்டு அவளைத் தண்ணீருக்குள் மூழ்கச் செய்து மறுபடியும் தோள் மட்டம் வரும் வரை கயிற்றை இழுத்துப் பிடித்தான். அவள் நடுங்கிக் கொண்டே கத்தினாள்.

''கெணத்துலே விழுவியா?'' அவன் சத்தம் போட்டுக் கேட்டான்.

''இல்லை. இல்லை''

''நீ, நான் அப்பிடின்னு மரியாதையில்லாம பேசுவியா?''

''இல்லை. இல்லை. உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன். மேலே தூக்கி விடுங்க.''

கல்லேசன் இரண்டு கால்களையும் உறுதியாகத் தரையில் ஊன்றியபடி கயிற்றை இழுக்கத் தொடங்கினான். ஒருவன் மாத்திரம் இழுக்க முடியாது என்று மனதில் பட்டது. இன்னொரு ஆண் பிள்ளையும் வேண்டும். ஆனால் வெளி ஆட்களைக் கூப்பிட்டால் பெரிய ரகளையாகிவிடும். அப்போது யாரோ வெளிக்

கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. ''பொறு-கதவைத் தெறக்க வேண்டாம்'' என்று அக்கம்மாவிடம் அவன் கூறினான். ''அக்கம்மா! கல்லேசா! கதவைத் தெற'' என்று வெளியிலிருந்து குரல் கேட்டது. அது தன் மகன் கண்டிதான் என்பது குரலைக் கேட்டவுடன் அக்கம்மாவுக்குத் தெரிந்துவிட்டது. எழுந்து போய்க் கதவைத் திறந்து, அவர் உள்ளே வந்தவுடன் கதவைத் தாளிட்டாள். அவர் தன் தோளிலிருந்த கனமான கோணிப் பையையும், கையிலிருந்த பையையும் கீழே வைத்தார். உடனே அக்கம்மா'' இங்கே கொஞ்சம் வா, ஒண்ணும் பேசாதே!'' என்று சொல்லியபடி அவரைக் கிணற்றருகே அழைத்து வந்தாள். தந்தையும் மகனும் சேர்ந்து கமலாவை மேலேயிழுத்துப் போட்டனர். அவள் ஈரப்புடவையுடன் பேசாமல் அறைக்குள் சென்றாள். பிறகு ரகளை செய்யவில்லை.

ஜோசியர் சாமியாரைப் போல தாடி வளர்த்திருந்தார். இவ்வளவு காலம் காசியில் தங்கியிருந்ததாகச் சொன்னார். ஆனால் அங்கே ஏன் போனார் என்பதைச் சொல்லவில்லை. அவர் கிராமத்திற்குச் சமீபமாக வந்ததும், சியாமண்ணா உயிரோடு இருக்கிறானா? இல்லையா என்பதை விசாரித்துத் தெரிந்து கொண்டார். ''ஏன் இப்பிடி தாடி வைச்சிருக்கே? சாமியாராப் போயிட்டியா?'' என்று அக்கம்மா கேட்டாள். ''இல்லை. இல்லை. டேய்! கல்லேசா, அம்பட்டனைக் கூட்டிட்டு வாடா.'' நாவிதன், முகத்தை நன்கு மழித்தவுடன் முன் போலவே மாறிவிட்டார். பன்னிரண்டு வருட காலத்தில் அவர் இளைத்துப் போயிருக்க வில்லை. குளியல் முடித்து விட்டு சந்தியா வந்தனம் செய்தார். சமையல் முடிந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது அக்கம்மா சொன்னாள், ''கண்டி! நீ போய்ப் பன்னெண்டு வருசமாச்சு. அதனாலே ஏதாவது ஒரு கோவில்லேதான் உன்னை மொதல்ல பாத்திருக்கணும்.''

''காசியிலேயிருந்து கங்கை நீர் கொண்டு வந்திருக்கேன். அதனாலே பரவாயில்லை. கங்கா சமாராதனை செஞ்சு சாப்பாடு போடணும்.''

''இந்தக் காலத்திலே சமாராதனை செய்யறதுன்னா எவ்வளவு கஷ்டம்? போன வருஷமே மழை இருக்கலை. வீட்டிலேயும் எந்த சாமானும் கெடையாது'' என்று கவலைப்பட்டான் கல்லேசன்.

''நான் பணம் கொண்டு வந்திருக்கேன். என்ன பெரிய செலவு?''

கண்டி ஜோசியர் திரும்பி வந்திருப்பதையறிந்து ஊர்க்காரர்கள் எல்லோரும் வந்து அவருடன் பேசிவிட்டுப் போனார்கள்.

அவர் பன்னிரண்டு வருடம் காசியில் இருந்ததால் முன்னைவிடப் பெரிய பண்டிதராகிவிட்டார். பலர் அவர் காலைத் தொட்டு நமஸ்காரம் செய்தார்கள். சில நாட்களில் கங்கா சமாராதனை விமரிசையாக நடந்து முடிந்தது. சமாராதனைக்கு எல்லோரும் வந்திருந்தார்கள். ஆனால் சியாமண்ணாவும் அவர் வீட்டுக்காரர் களும் வரவில்லை.

ஜோசியர் அதற்குள் பல இடங்களுக்குச் சென்று பழைய நண்பர்களைக் கண்டு பேசி ஊர் விஷயத்தை எல்லாம் தெரிந்து கொண்டார். சமாராதனை முடிந்த அன்று இரவு நிலா வெளிச் சத்தில் கொல்லையில் கிணற்றுப் பக்கத்தில் உட்கார்ந்து மகனிடம் பேசினார். ''கல்லேசா! நீ அடிச்சேன்னு கோபப்பட்டு அவ தன் தோடுகளைத் தங்கைக்குக் கொடுக்கணும்னு நெனைச்சாளாம். அந்த சியாமண்ணாவோட மருமக அதுக்குத் துணையா இருந் தாளாம். உண்மைதானா?''

''ஊம்''

''அவளை நீ அவமானம் செஞ்சிட்டியாம். வீட்டுக்கு வர வேண்டாம்னு சொன்னியாம். இங்கே பார், நான் காசிக்குப் போயிட்டு வந்த உன்னைப் பெத்த அப்பன். உண்மையைச் சொல்லு. வரவேண்டாம்னு சொன்னியா? வேறு ஏதாச்சும் நடந்ததா?''

''உங்கிட்டே யார் என்ன சொன்னாங்க?''

''ஊர்க்காரங்க எல்லோரும் வேறு விதமாகப் பேசிக்கறாங்க. உண்மையை வெளியே சொல்ல சியாமண்ணாவுக்கு அவமான மாயிருக்காம்.''

''ஊம்'' கல்லேசன் தலைகுனிந்தவாறே சொன்னான்.

''இவ புத்தியைக் கெடுக்கறதுக்காக அந்த சியாமண்ணா மருமகளை இங்கே அனுப்பிகிட்டிருந்தான். அப்படிப்பட்டவர் களுக்கு வேறே என்ன செய்யணும்?''

''இங்கே பார். ஆம்பளை வீரத்தைக் காட்டி ஜெயிக்கலாம். ஆனா இந்த விஷயத்திலே உறுதியா இருக்கணும். நீ செஞ்சது தப்புத்தான்.''

கல்லேசனுக்கு அவமானமாய்ப் போய்விட்டது. ஆனால் அவன் தான் செய்ததை நியாயப்படுத்துவதற்காகச் சொன்னான். ''நீ இங்கே வந்த அன்னிக்கு நான் மருவனஹள்ளியிலேயிருந்து வந்துகிட்டிருந்தேன். சியாமண்ணா தன் ஆட்களை விட்டு என் மேலே கல் வீச வைச்சான். அவன் அதைச் செய்யலாமா?''

''அப்பிடியா சங்கதி? நம் வீட்டு மேலே கல் வீச வைச்சதுக்காக அவனுக்கு நான் நல்லா செஞ்சுவிட்டேன். கண்டி செத்துப் போயிட்டான்னு நெனைச்சுகிட்டிருக்காஞ? நான் பாத்துக்கறேன், விடு'' என்று சொல்லி விட்டார். ஆனால் தான் என்ன செய்யப் போகிறேன் என்பதைச் சொல்லவில்லை. பேச்சு முடிந்த இரண்டாம் நாள் வெள்ளிக்கிழமை நாகலாபுரத்தில் சந்தை கூடும் நாள். சுற்றுப்புற கிராம மக்கள் எல்லோரும் சந்தைக்கு வருவார்கள். மத்தியானம் சுமார் மூன்று மணிக்கு கணக்குப் பிள்ளை சியாமண்ணா தன் வீட்டிலிருந்து புறப்பட்டு சந்தைக்குப் போய்க் கொண்டிருந்தார். வெள்ளை வேஷ்டியில் கச்சம். உடம்பின் மேல் சட்டை. ஒரு மேல் துண்டு. நெற்றியில் கருப்புச் சாந்து. திடீரென்று கண்டி ஜோசியர் எங்கிருந்தோ வந்து அவர் முன்னே நின்றார். கச்சம் போட்டு உடுத்திய வேஷ்டி, காவிச் சட்டை, நெற்றியில் சந்தனம், கழுத்தில் ஜபமாலை, கையில் பெரிய சட்டி, அதிலிருந்து கிளம்பிய நாற்றம் மூக்கைத் துளைத்துக் கொண்டிருந்தது. ''என் மகன் மேல் கல் வீச வைச்சியாமே, ஏண்டா பேடிப் பயலே'' என்று சொல்லிக் கொண்டே அவர் கையிலிருந்த சட்டியை சியாமண்ணாவின் தலைமேல் கவிழ்த்து, அதிலிருந்தவற்றை மளமளவென்று கொட்டினார். அதன் நாற்றத்தையும், நிறத்தையும் பார்த்தவுடனேயே அங்கே கூடியிருந்தவர்களுக்கு அது என்னவென்று தெரிந்துவிட்டது. அது மலம். அவ்வளவு மலத்தையும் அவர் எப்படி எங்கே சேகரித்தார், அதை எப்படி ஒரே பதமாகக் கலந்து கொண்டு வந்தார் என்பது யாருக்கும் தெரியாது. அது சியாமண்ணாவின் முகம் சட்டை முழுதும் வழிந்து அப்பிக் கொண்டிருந்தது. அந்தச் சட்டியை சியாமண்ணாவின் தலையின் மேல் பட்டென்று போட்டு உடைத்து விட்டு கண்டி ஜோசியர் அங்கிருந்து சென்றார்.

4

பிறகு ஒரு மாத காலம் கண்டி ஜோசியர் நாகலாபுரத்தில் இருக்கவில்லை. அவர் எந்த ஊருக்குச் சென்றார் என்பது யாருக்கும் தெரியவில்லை. கல்லேசன் மூன்று நான்கு நாட்களுக்கொரு முறை ஏதோ ஊருக்குச் சென்று வந்தான். அப்பாவைப் பார்த்து நிலவரத்தைச் சொல்லிவிட்டு வருவதற்காகத் தான் அவன் போகிறான் என்று பலபேர் யூகித்தார்கள். அவன் இரவு வேளையில் சென்றதால் அவனைப் பின் தொடர்வதற்கு மற்றவர்களுக்குத் தைரியமில்லை. ஆனால் பகல் வேளையில் திரும்பிவந்து விடுவான். கடந்த பன்னிரண்டு வருடங்களில் கண்டி ஜோசியர்

ஒரு பெரிய புராண வீரராக மாறியிருந்தார். சமாராதனை முடிந்த மூன்றாவது நாள் அந்தச் சுற்று வட்டாரத்தில் யாரும் செய்ய முடியாத வீரச் செயலைச் செய்து விட்டார். சியாமண்ணா உடனே வீட்டிற்குப் போய் வேஷ்டி சட்டையை அவிழ்த்தெறிந்தார். பிறகு தண்ணீர் விட்டு சீயக்காய்த் தூள் போட்டு தேங்காய் நாரால் உடம்பு முழுதும் தேய்த்துக் குளித்தார். அவருக்கு நேர்ந்ததை நேராகப் பார்த்தவர்கள் பத்து இருபது பேர் மட்டுமே. வீட்டிற்கு ஓடி வந்த போது அவரை அடையாளம் கண்டு கொண்டவர்கள் மூன்று நான்கு பேர் மட்டுமே. ஆனால் ஊர்க்காரர்கள் எல்லோரும் தாமே நேரில் கண்டவர்கள் போல், கண்டி ஜோசியர் கொட்டியதையும், சியாமண்ணாவின் வாயில் மலம் விழுந்ததையும், கை கால் முழுதும் அது வழிந்து ஒட்டிக் கொண்டதையும் மிகுந்த ரசனையுடன் விவரித்துக் கொண்டிருந்தார்கள்.

கண்டி ஜோசியரின் மேல் வழக்குப் போடலாமா, என்று சியாமண்ணா யோசித்தார். ஆனால் அது நடக்கும் போது அங்கே நேரடியாக இருந்தவர்கள் யார் என்பது அவருக்குத் தெரியவில்லை. 'அவன் எனக்கு இப்படிச் செய்தான்' என்று தானாகவே வலியப் போய் மற்றவர்களிடம் சொல்வது மகா அவமானம். அவர் முன்னே யாரும் இதைப் பற்றி அவரிடம் பேசுவதில்லை. தானாகவே அந்த விஷயத்தைக் கிளறிப் பிரசாரம் செய்வது புத்திசாலித்தனம் அல்ல என்பது அவர் எண்ணம். மேலும் முன்பு ஒரு தடவை இந்த கண்டி ஜோசியரின் மேல் வழக்குப் போட்டு, நரசிபுரத்துக்குப் போய் வழக்கு தோற்று விட்ட பிறகு அவரிடம் அடி வாங்கியது, அவருக்கு நினைவுக்கு வந்தது. 'இந்தக் களவாணிப் பயல் செத்துப் போய் விட்டானென்று நினைத்திருந்தேன். கல்லேசனுடைய மனைவியின் மூலம் ரகளை கிளப்பாமல் இருந்தால் எதுவும் ஆகியிருக்காது. இந்த வயதான காலத்தில் ஏன் கண்ட தொல்லைகளில் அகப்பட்டுக் கொள்ள வேண்டும்' என்று யோசித்துக் கொண்டிருக்கும் போதே அவர் மனதில் மற்றொரு விஷயமும் பளிச்சிட்டது. 'கண்டி ஜோசியரின் மகன் கல்லேசனும் அப்பனைப் போலவே கெட்டிக்காரன். கஷ்ட காலம் வந்தால் அதைச் சமாளிக்கும் அளவு தைரியம், தந்திரம் இரண்டும் உள்ளவன். என் மகன் நஞ்சுண்டன் வடிகட்டிய பேடிப் பயல். நாமாக சண்டைக்குப் போய் சமாளிக்கும் காலம் முடிந்துவிட்டது!'

ஒரு மாதத்திற்குப் பிறகு கண்டி ஜோசியர் ஊருக்கு வந்தார். அவரிடம் அந்த விஷயத்தைப் பற்றி யாரும் நேரிடை

யாகக் கேட்கவில்லை. அவரும் அதைப் பற்றிப் பேசவில்லை. கழுத்தில் ஜபமாலை போட்டுக் கொண்டு, நெற்றியில் சந்தனப் பட்டை தீட்டிக் கொண்டு அவர் வீதியில் நடந்து செல்லும் போது, ஜனங்கள் எல்லோரும் மிகவும் மரியாதையாகக் கும்பிட்டு விலகிச் சென்றார்கள்.

# பன்னிரண்டு

## 1

அந்த வருடம் பருவமழை சற்றுத் தாமதமாக ஆரம்பித் தாலும் ராகி விளைச்சல் பாதிக்கப்படவில்லை. ஐரோப்பா கண்டத்தில் இங்கிலீஷ்காரர்களுக்கும் ஜெர்மானியர்களுக்கும் பெரிய சண்டை நடந்து கொண்டிருந்தது. பர்மா தேசத்துக்கு அருகிலும் சண்டை நடந்துகொண்டிருந்தது. அரசாங்கம் உணவு தானியத்தை ரேஷன் செய்து விட்டார்கள். ஒரு நாள் ஷேக்தார், ராமஸந்திர கிராமத்துக்கு வந்து ரேஷனைப் பற்றி நஞ்சம்மாவுக்கு விளக்கிச் சொன்னார். இனிமேல் விளைச்சல் கணக்கு எழுதும் போது தானியத்தின் அளவு மதிப்பீடு செய்யக் கூடிய முறையைப் பற்றியும் விளக்கினார். ஒரு ஏக்கர் நிலத்தில் ஆறு கண்டி ராகி விளைச்சல் இருந்தால் பதினாறு அணா, நாலரை கண்டிக்கு பன்னிரண்டு அணா, மூன்று கண்டிக்கு எட்டணா. இவ்வாறே ராகி, நெல், கரும்பு அவரை முதலிய எல்லாப் பயிர்களுக்கும் விளைச்சல் மதிப்பீட்டை எழுத வேண்டும். அரசாங்கத்தினர் அதன்படி ஒவ்வொரு குடியானவருடைய விளைச்சலையும் தீர்மானித்து அவன் குடும்பச் செலவுக்கும் விதைக்கும் வேண்டிய தானியம் போக மீதியை, அரசாங்கம், நிர்ணயித்த விலையில் வாங்கிக் கொள்வார்கள். அதாவது கணக்குப்பிள்ளைக்குப் புதிய அதிகாரம் கிடைத்தது.

ஒரு தடவை நஞ்சம்மா குருபரஹள்ளிக்குப் போய் புதிய கணக்கு விஷயத்தை குண்டே கவுடரிடம் தெரிவித்தாள். ''நாங்க கஷ்டப்பட்டுப் பயிர் செஞ்சதை அவங்களுக்கு எதுக்காகக் கொடுக்கணும்?'' என்று அவர் நியாயம் கேட்டார்.

''அரசாங்கம் சட்டம் போட்டிருக்கு. இல்லாட்டா போலீஸ் காரங்க வருவாங்க.''

குருபரஹள்ளிக்கு எந்தவிதத் தொல்லையும் ஏற்படக் கூடாது என்று நஞ்சம்மா நினைத்தாள். அந்த ஊருக்குத் தொல்லை

வந்தால் குண்டே கவுடரின் வேலைக்கு இழுக்கு. தன் குடும்பத்தைக் காப்பாற்றிய கிராமத்திற்குத் தொல்லை ஏற்படுவதை அவள் எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்? ஊர்க்காரர்கள் எல்லோருமே ஆட்டுமந்தை உடையவர்கள். ஒவ்வொரு வருடமும் நிலத்தில் ஆட்டு மந்தையைக் கட்டிப் போடுவதால் நிலம் செழிப்பாகி ஏக்கருக்கு ஆறு கண்டியை விட அதிகமாக விளைந்து கொண்டிருந்தது. மதிப்பீட்டைக் குறைத்து எழுத வேண்டும். ஆனால் கணக்குப்பிள்ளையின் மதிப்பீட்டை தணிக்கை செய்ய தாசில்தார் அவர்களே வருவார் என்று ஷேக்தார் சொல்லி இருந்தார்.

நஞ்சம்மாவும் குண்டே கவுடரும் கலந்தாலோசித்து ஒரு முடிவு செய்தார்கள். சாதாரணமாக எட்டு அணா விளைச்சல், ஒன்பது அணா விளைச்சல் என்று அவள் மதிப்பீடு எழுத வேண்டும். கிராமத்தில் மொத்தமாக நூறு ரூபாய் வசூல் செய்து ஷேக்தாருக்கும் மேலதிகாரிகளுக்கும் கொடுத்துச் சரிகட்டி விட வேண்டும். அரசாங்கத்தினர் தான்யம் வாங்க வரும் போது அரசாங்க விலையிலேயே பத்து, பன்னிரண்டு கண்டி தந்து விடுவது என்றெல்லாம் முடிவு செய்தார்கள்.

அதே வருடம் அப்படியே நடந்தது. நூறு ரூபாய் கொடுத்து பன்னிரண்டு கண்டி ராகியை விலைக்குக் கொடுத்து, நாற்பது வீடுகள் இருந்த குருபரஹள்ளிக்காரர்கள் சமாளித்துக் கொண்டார்கள். அதுவரை அந்த ஊர்க்காரர்கள் கணக்குப்பிள்ளைக்கு 'மை' காணிக்கை கொடுத்து வந்தார்கள். ரேஷன் முறை வந்த பிறகு ஒவ்வொரு வீட்டினரும் 'மை' காணிக்கையுடன் பத்துப் படி ராகியும் கொடுக்க ஆரம்பித்தார்கள். உணவுக் கட்டுப்பாடு உத்திரவினால் ராமஸந்திர கிராமத்துக்கும், லிங்கபுரத்துக்கும் பாதிப்பு ஏற்பட்டது. விளைச்சல் மதிப்பீடு எழுதுவது எப்படி என்பதைப் பற்றி ராமஸந்திர கிராமத்து மணியக்காரர் சிவே கவுடருக்கும் லிங்கபுரம் மணியக்காரருக்கும் தெரிந்திருக்கவில்லை நஞ்சம்மா அந்த இரண்டு கிராமத்தின் வரிக் கணக்கையும் உள்ள படியே எழுதினாள். அறுவடை காலம் முடிந்தவுடன் ஒரு நாள் ஷேக்தார், இரண்டு பியூன்கள், இரண்டு போலீஸ்காரர்கள் ஆகியவர்கள் கிராமத்துக்கு வந்தார்கள். ஷேக்தார் உத்தரவுப் படி பியூன்கள் ஒவ்வொரு வீட்டிற்குள்ளும் நுழைந்தார்கள்.

பரண், பெட்டி, களஞ்சியம், பானை ஆகிய எல்லாவற்றையும் சோதனை போட்டார்கள். நீளமான மூங்கில் குச்சியைப் பெட்டியில் இருந்த ராகிக்குள் விட்டுப் பார்த்து, பெட்டியின் நீள

அகலத்தை மதிப்பீடு செய்தார்கள். வீட்டில் சுமாராக இவ் வளவு தானியம் இருக்கும் என்று கணக்குப் போட்டு, அதில் தேவையானவற்றை அவர்கள் மூட்டை கட்டி மாதேவய்யாவின் கோவிலுக்கு முன் குவித்தார்கள். பரண் மேல் ஏறிய ஷேக்தார ரின் பியூன்கள் அங்கேயே வீட்டுக்காரரிடமிருந்து பத்தோ, இருபதோ, ரூபாய் வாங்கிக் கொண்டு ''ரெண்டு மூட்டை ராகி தான், சார்'' என்று சொல்லி சமாளிக்கும் வழக்கம் ஏற்பட்டு விட்டது. பிறகு அதில் ஷேக்தாருக்குப் பங்கு கொடுத்தது, தானே வைத்துக் கொண்டது, எல்லாம் வேறு விஷயம். ஷேக்தார் தனக்குக் கிடைத்ததில் போலீஸ்காரர்களுக்கும் பங்கு கொடுக்க வேண்டி இருந்தது.

ஒரே நாளில் ராமஸந்திர கிராமத்திலிருந்து நானூறு மூட்டை ராகியும் லிங்கபுரத்திலிருந்து நூறு மூட்டை ராகியும் திரட்டிக் கொண்டு ஷேக்தார் போனார். மணியக்காரரும் கணக் குப்பிள்ளையும் கொடுத்த ரசீதை அதிகாரிகளிடம் கொடுத்து அவர்களுக்கும் லஞ்சம் கொடுத்து, குடியானவர்கள் அரசாங்கத் திடம் தான்யத்திற்கான பணத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டி யிருந்தது. ராகியைப் பியூன்கள் தாங்கள் கொண்டு வந்திருந்த படியால் அளக்கும் போது ஒரு மூட்டைக்கு ஏழெட்டுபடி அதிக மாக இருக்கும்படி அளந்து விடுவார்கள்.

பதினைந்து நாட்களுக்குப் பிறகு ஒரு நாள், மணியக்காரர் சிவே கவுடர், நஞ்சம்மாவைக் கூட்டிக் கொண்டு வரும்படி தலையாரியை அனுப்பினார். மணியக்காரர் கூப்பிட்டவுடன் கணக்குப்பிள்ளை போக வேண்டுமா, கணக்குப்பிள்ளை கூப்பிட்ட வுடன் மணியக்காரர் போக வேண்டுமா என்பது அவரவர் அந்தஸ்தையும், கௌரவத்தையும் பொறுத்தது. அதுவரை சிவே கவுடர் சொல்லி அனுப்பிய உடன் சென்னிகராயர் போய் வருவார். அப்படியே வழக்கமாகப் போய்விட்டது. அவர் நஞ்சம்மாவை வரச் சொல்லி அனுப்பியதைக் கேட்டவுடன் நஞ்சம்மாவுக்குக் கோபம் வந்தது. ''ஏதாச்சும் கேக்கணும்னு அவரை இங்கே வ்ந்து கேக்கச் சொல்லு'' என்று அவள் தலையாரி யிடம் சொல்லி அனுப்பினாள்.

சற்று நேரம் கழித்து மணியக்காரர் வந்தார். அவருக்குப் பின்னே வந்த தலையாரி கதவு அருகே நின்று கொண்டான். தூணின் அருகே போட்டிருந்த ஈச்சம்பாயில் அமர்ந்த கவுடர் பேச்சை எப்படி ஆரம்பிப்பது என்று தெரியாமல் ஐந்து நிமிடம் பேசாமல் உட்கார்ந்திருந்தார். பிறகு ''குருபரஹள்ளியிலே பன்னெண்டு கண்டி எடுத்துக்கிட்டு போனாகளாம். நம்ம ஊரிலே

இருந்து நானூறு மூட்டை ஏன் எடுத்துக்கிட்டு போனுங்க?'' என்று விளக்கம் கேட்டார் ''அது எனக்கு எப்பிடித் தெரியும் மணியக்காரரே? ''கணக்கு எழுதறது நீ தானே? நீ தான் அதைப் பத்திச் சொல்லணும்.''

''நீ, நான் அப்பிடின்னு மரியாதை இல்லாமல் பேச வேண்டாம். நான், உங்க வீட்லே பிச்சை எடுக்க வரலே, மரியாதை கொடுத்துப் பேசுங்க'' என்று சொல்லிவிட்டு நஞ்சம்மா சமையல் அறைக்குச் சென்றாள்.

''சென்னிகராயரை சின்னப் பையனாக இருக்கும் போதே எனக்குத் தெரியும்''

''அப்பிடியானு அவரையே கேளுங்க. உங்க வீட்டுக்கு வரச் சொல்லி தலையாரிகிட்டே சொல்லி அனுப்பினிங்களே! மணிய காரன்னு மகாராஜான்னு நினைப்பா?''

சிவே கவுடரின் முகம் பேய் அறைந்தாற் போல் ஆயிற்று. அவர் அதுவரை அவளிடம் நேரடியாகப் பேசியது கிடையாது. 'வீடு வாசல் எல்லாவற்றையும் இழந்து விட்டு, இலை தைத்து விற்று, கணவனின் கணக்குப்பிள்ளை வேலையைச் செய்து வரும் இவளுக்கு எவ்வளவு திமிர்?' என்பதை நினைத்து அவர் உடம்பு கோபத்தால் கிடுகிடுத்தது.

''நம்மூர் கணக்கு எழுதறப்ப மதிப்பீட்டை ஏன் கொறைச்சு எழுதலே?''

''அதைக் கேக்க நீங்க யார்?'' என்று நஞ்சம்மா உள்ளே இருந்தபடியே சொன்னாள்.

''பொம்பளேங்க அரசாங்க கணக்கு எழுதலாமான்னு நான் அரசாங்கத்துகிட்டேயே கேட்டுக்கறேன்'' என்று சொல்லிவிட்டு சிவே கவுடர் எழுந்து போனார். தான் ஊருக்கு எசமான் என்று எண்ணியிருந்த அவருக்குப் பெருத்த தோல்வி. தலையாரியின் எதிரே அப்படிப் பேசி விட்டாளே என்பதை நினைத்தவுடன் ஆத்திரம் பொங்கியது. தன் மைத்துனன் சிவலிங்கனையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு கம்பனகெரெய்க்குப் போய் ஷேக்தாரைப் பார்த்தார். ''பொம்பளேங்க அரசாங்கக் கணக்கு எழுதலாமா?'' என்று விசாரித்தார். அந்தக் கேள்வியின் பின்னணி அவருக்குத் தெரியும். அவர் அந்த பிர்க்காவுக்கு வந்து ஆறு மாதங்கள் தான் ஆயிற்று. ஆனால் அவருக்கு முந்தி இருந்தவர் அரசாங்க உள் விஷயங்களைப் பற்றி அவரிடம் சொல்லியிருந்தார். அவர் சிவே கவுடரிடம் மெதுவாகப் பேச்சுக் கொடுத்து அவர் வந்த காரணத்தை அவர் மூலமாகவே தெரிந்து கொண்டார்.

கணக்குப் புத்தகத்தில் மதிப்பீட்டை அதிகமாக எழுதி விட்டா லும் அவருக்கு ஆதாயம் உண்டு. குறைவாக எழுதினாலும் அவருக்கு ஆதாயம் தான். ஆகையால் அவர் கணக்குப் பிள்ளையை விட்டுக் கொடுத்துப் பேசமாட்டார்.

''இங்கே பாருங்க கவுடரே, அந்த அம்மா கணக்கு எழுத றார்னு ஜில்லா கமிஷனருக்கே தெரியும். தும்கூர் ஜில்லாவிலே யாரும் இவ்வளவு ஒழுங்கா கணக்கு எழுதலேன்னு அவரே சொல்லியிருக்கார். பொம்பளைங்க கணக்கு எழுதக் கூடாதுன்னு சட்டம் ஏதும் கெடையாது'' என்றார் ஷேக்தார்.

சிவே கவுடரும் சிவலிங்கனும் முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு ஊருக்குத் திரும்பினார்கள். வரும் வழியில் சிவே கவுடர் தன் மைத்துனனிடம் ''அந்த ஷேக்தார் நம்ம கிராமத் துக்கு வரும்போதெல்லாம் இந்த முண்டை காபி, உப்புமா, செஞ்சு கொடுக்கறா. அதான் அவன் பரிஞ்சு பேசறான்'' என்று அங்கலாய்த்தார்.

''உப்புமா காப்பி மட்டுமா? அவங்கூட இவளும் படுத்துக்குவா தேவடியா முண்டை'' என்று குமுறினான் சிவலிங்கக் கவுடன். ''தேவடியா முண்டை, தேவடியா முண்டை......'' என்று சொல்லிச் சொல்லி அவர்கள் மன ஆறுதல் அடைந்தார்கள். ஆனால் ஊருக்கு வந்த பிறகு அப்படிப் பேச அவர்கள் இருவருக்கும் தைரியம் இருக்கவில்லை.

சிவே கவுடரின் ஆணவத்தைக் கண்டு நஞ்சம்மாவின் மனம் குமுறியது. மணியக்கார வேலை மட்டும் அவருடைய ஆணவத் துக்கு காரணம் அல்ல. வட்டிக் கடைக்காரனிடம் உள்ள பணம் அவருடையது தான் என்பது ஊர் முழுக்கத் தெரிந்துவிட்டது. அந்தப் பணமும் அவருடைய ஆணவத்துக்கு மற்றொரு காரணம். வெளியூர்க்காரனான வட்டிக் கடைக்காரனுக்கு அந்த ஊரில் சொந்த வீடு தேவையிருக்கவில்லை. அவன் தன் பங்கு வட்டியை தன் சொந்த நாடான மலையாள தேசத்துக்கு அனுப்பிக் கொண் டிருந்தான். ஆரம்பத்தில் தங்கம், வெள்ளி, பித்தளை, தாமிரம் ஆகியவைகளின் பேரில் கடன் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். பாத்திரம் பண்டங்களை இழந்தவர்கள் நிலத்தை அடமானம் வைத்துக் கடன் வாங்கினார்கள். சிவே கவுடரின் பேரில் தான் அடமானப் பத்திரம் எழுதினார்கள். மூன்று மாத வட்டியை முன்கூட்டியே எடுத்துக் கொண்டு மீதிப் பணத்தை மட்டுமே கடனாக கொடுப்பது வழக்கம். அதாவது ஆயிரம் ரூபாய்க்கு அடமானப் பத்திரம் எழுதினால் ஐநூறு ரூபாய் கைக்கு வரும்.

அதற்குப் பிறகு பன்னிரண்டு சதவீத வட்டியில் கோர்ட்டில் வசூல் செய்தாலும் அசலுக்கு குறைவராது. மழை தவறிப் போன கடந்த இரண்டு வருடங்களில் சிவே கவுடர் மிக வேகமாக வளர்ந்து விட்டார். அவரிடம் பணம் ஏராளமாகச் சேர்ந்து விட்டது. அவரை மட்டம் தட்டுவது என்பது அந்த ஊரில் நடக்காத வேலை. அந்த விஷயம் நஞ்சம்மாவுக்குத் தெரியும். ஆனால் தன்னிடத்தில் அவர் அதிகாரத்தைக் காண்பிக்க வந்த போது அவள் சரியானபடி பேசி அவரை விரட்டி விட்டாள். உணவுக் கட்டுப்பாடு வந்த பிறகு ஷேக்தார் அடிக்கடி வந்து கொண்டிருந்தார். மணியக்காரர் ஷேக்தாரை பார்க்கப் போய் அவமானப்பட்டு வந்தான், என்பது அவர் மூலம் அவளுக்குத் தெரிந்தது.

௨

மழை வந்த பிறகு விளைச்சல் நன்றாக இருந்த போதிலும் விலைவாசி குறையவில்லை. யுத்தம் நடந்து கொண்டேயிருந்தது. கணக்குப்பிள்ளையின் மாமூல் கணக்கு வழக்குகளுடன், உணவுக் கட்டுப்பாடு, விளைச்சல் மதிப்பீடு, தானியம் வாங்குதல் முதலிய வேலைகளையும் அதிகப்படியாக செய்ய வேண்டியதாயிற்று. ஆகையால் அரசாங்கம் சம்பளத்துடன் அலவன்சு பணமும் கொடுத்தது. நஞ்சம்மாவுக்குப் பழைய சம்பளமான நூற்றிருபது ரூபாயுடன் கூடுதலாக நூறு ரூபாய் கிடைத்தது. புதிய கணக்கு கள் அதிகமாகி விட்டதால் அவள் இலை தைக்க முடியவில்லை. பார்வதி வீட்டு வேலைகளைச் செய்து, மற்ற நேரத்தில் இலை தைத்து, காய்கறிச் செடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சி வந்தாள். குண்டே கவுடரிடமிருந்து திரும்ப வாங்கி வந்த பசுக்களையும் அவள் கவனிக்க வேண்டியதாயிற்று. ராமண்ணன் நடுநிலைப் பள்ளியில் மூன்றும் வகுப்பு படித்துக் கொண்டிருந்தான். அவன் தான் வகுப்பிலேயே முதல் மார்க் வாங்கிக் கொண்டிருந்தான். நஞ்சம்மாவின் கணக்குப் புத்தகங்களுக்கு அவன் கோடு போட்டுக் கொடுப்பான். அத்துடன் படி, வள்ளம் கணக்குகளையும் மொத்தமாகக் கூட்டி எழுதுவான். அம்மா எழுதிய கணக்கு களில் பிழைகளைக் கண்டு பிடிப்பான். ஒரு முறை ஷேக்தாரரே அவனுக்குச் சொல்லியனுப்பி ஒரு கணக்குப் புத்தகத்தின் நகல் எடுக்கச் சொன்னார். மகன் புத்திசாலி என்பதில் நஞ்சம்மா விற்குப் பிடிபடாத பெருமை. ராமண்ணன் கணக்குப்பிள்ளைத் தொழில் பார்க்க வேண்டாம். உயர்நிலைப் பள்ளி படிப்பையாவது முடிக்க வேண்டும். குறைந்த பட்சம் ஷேக்தார் வேலையாவது பார்க்க வேண்டும். ஆண்டவன் அருள் இருந்தால் எல்லாமே நடக்கும் என்று அவள் மனதில் நினைத்துக் கொண்டாள்.

விசுவன் கன்னடப் பள்ளிக் கூடத்தில் மூன்றும் வகுப்பு படித்துக் கொண்டிருந்தான். அவனைப் போல் போக்கிரி அந்த ஊரிலேயே கிடையாது. ஆனால் மிகுந்த தைரியசாலி. ஏரியில் பெரிய ஆண்பிள்ளைகளுடன் ஐம்பது, அறுபது கஜ தூரம் நீந்து வான். ஒருவனாகவே மயானத்தருகே சென்று தேன் கூட்டைக் கலைத்து, பிழிந்து வெற்றிலைப் பாக்குப் பெட்டியில் தேனை நிரப்பிக் கொண்டு வருவான். பேச்சு, மிடுக்கு, தைரியம், வேலை எல்லாவற்றிலும் அவன் கண்டி ஜோசியரைப் போலவேயிருந் தான். அவனிடம் மாதேவய்யாவுக்கு அதிக பிரியம். அவர் பாடிக் கொண்டிருக்கும் போது அவன் தம்புராவை மீட்டுவான். அவருடன் சேர்ந்து சாப்பிடுவதும் உண்டு,

நஞ்சம்மாவின் குடும்பத்தில் சாப்பாட்டுக்குக் கவலையில்லை. உணவுக் கட்டுப்பாடு கணக்குகளை எழுத ஆரம்பித்த பிறகு, மற்ற கணக்குப்பிள்ளைகளைப் போலவே, அவளுடைய வருமான மும் அதிகரித்தது. வீட்டில் ஒவ்வொருவருக்கும் இரண்டு ஜோடி ஆடைகள் இருக்கின்றன. குளிர்காலங்களில் இரவில் போர்த்துக் கொள்ள கம்பளிகளும் உண்டு. ஆனால் அவளை ஒரு கவலை வாட்டி வந்தது. பார்வதிக்கு பதின்மூன்று வயதாகி விட்டது. அவள் அதுவரை நன்றாகச் சாப்பிட்டிருந்தால் தற்பொழுது பெரியவ ளாகி இருந்திருக்க வேண்டும். அவள் வயிற்றிற்குச் சரிவர சாப்பிடாமல் குச்சி போல் இருந்தாள். வருமானம் உயர்ந்த பிறகு இரண்டு வேளையும் சாப்பாடு, காலையில் ரொட்டி, தயிர் சாப்பிடுகிறாள். அவளுக்குத் திருமணம் ஆக வேண்டும். திரு மணத்திற்கு முன்னதாகவே பெரியவளாகி விட்டால் என்ன செய்வது என்பதைப் பற்றி நஞ்சம்மாவுக்கு மிகுந்த கவலை. திருமணம் என்றால் லேசான வேலையா? எவ்வளவு சிக்கனமாகச் செய்தாலும் எழுநூறு, எண்ணூறு ரூபாய் வேண்டும். நல்ல பையனைத் தேடி ஏற்பாடுகள் செய்ய வீட்டில் சரியான ஆண் பிள்ளை கிடையாது. தன் கணவனைப் பற்றி அவளுக்கு நன்றாகத் தெரியும். எப்படித்தான் நடக்கப் போகிறதோ என்று அவள் கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள்.

திப்டூருக்கு அருகே திருமகொண்டனஹள்ளி கிராமத்தில் ஒரு பையன் இருக்கிறான் என்று யாரோ சொன்னார்கள். அந்தப் பையனைப் பார்த்து விட்டு வர கணவனையும் அந்த ஊருக்குப் புதிதாக வந்திருந்த ஆசிரியர் வெங்கடேசய்யாவையும் அனுப்பி னாள். இரண்டு நாட்களுக்குப் பிறகு அவர்கள் திரும்பினார்கள். ஆசிரியர் நஞ்சம்மாவிடம் ''இந்தக் கணக்குப்பிள்ளையைக் கூட்டிக் கிட்டுப் போனா, கல்யாணம் பேசி முடிக்க முடியுமா? நாங்க

அவங்கிட்டே போய் பையன் ஜாதகத்தைக் கேட்டோம். மொதல்லே பெண் ஜாதகத்தைக் கொடுங்கன்னு அவங்க கேட்டாங்க. நாங்க கொடுத்தோம். சாப்பிடச் சொன்னுங்க. 'நாங்க உங்க வீட்டிலே கல்யாணப் பேச்சுக்காக வந்திருக்கோம். கல்யாணம் முடியற வரை நாங்க உங்க வீட்டிலே தண்ணி கூட குடிக்கக் கூடாது'ன்னு சொன்னேன். ஆனு சென்னிகராயர் கேக்கலே. சட்டையை அவிழ்த்துவிட்டு கைகால் அலம்பிக் கொண்டு சாப்பிட உக்காந்துட்டார். அவர் சாப்பிட்டதுக்கப் புறம் பையனேட தகப்பனுர் வெளியே வந்து, 'பொண்ணேட தகப்பனுரே எங்க வீட்டிலே சாப்பிட்டாச்சு. இனிமே கல்யாணப் பேச்சு வேண்டாம். உங்களுக்கு சாஸ்திரம் தெரியாது'ன்னு சொல்லிட்டார்,'' என்று குறைபட்டுக் கொண்டார்.

ஆசிரியரின் பேச்சைக் கேட்டு, நஞ்சம்மாவுக்குக் கோபமும், வேதனையும் ஏற்பட்டன. பாயில் படுத்துக் கொண்டிருந்த கணவனைப் பார்த்து, ''வாத்தியார் சொன்னதுக்கப்புறம் ஏன் அப்பிடிச் செஞ்சீங்க?'' என்று கோபமாகக் கேட்டாள். ''பசிச்சா என்ன செய்யறது?'' என்று அவர் அலட்சியமாகச் சொல்லி விட்டார். அவரிடம் மறுபடியும் பேசினல் வம்பு வளரும் என்று நினைத்து அவள் பதில் சொல்லவில்லை.

அன்று பார்வதி பெரியவளாகி விட்டாள். நஞ்சம்மாவுக்கு மறுபடியும் கவலை அதிகமாகிவிட்டது. பெரியவளான பெண்ணை யார் திருமணம் செய்து கொள்வார்கள்? திப்டூர் போன்ற பெரிய ஊர்களில் பெரிய மனிதர்களின் வீட்டில் பெரியவள் ஆன பெண்களைத் தான் திருமணம் செய்து கொள்கிறார்கள் என்று கேள்விப் பட்டிருந்தாள். ஆனல் அது பெரிய மனிதர்களின் வீட்டுச் சமாசாரம் தம்மைப் போன்ற பட்டிக்காட்டுக்காரர்கள் அப்படியிருக்க முடியுமா? என்று நினைத்து வேதனைப் பட்டாள். தன்னையும், தன் குழந்தைகளையும் சாதியிலிருந்து விலக்கி வைத்திருக்கிறார்கள். ஒரு வேளை திருமணம் ஏற்பாடாகி விட்டாலும் கூட தன்னிடமிருந்து அபராதம் வாங்காமல் திருமணத்தை நடத்த விடமாட்டார்கள். பெண் பெரியவளாகி விட்ட விஷயம் தெரிந்துவிட்டால் பெரிய அமர்க்களம் செய்து விடுவார்கள். ஊர்க்காரர்களுக்குத் தெரிந்து விட்டால் திருமணம் பேச வரும் பையன் வீட்டுக்காரர்களையும் கலைத்து அனுப்பி விடுவார்கள். நஞ்சம்மா ஒரு மணி நேரம் பேயறைந்தாற் போல் உட்கார்ந்து விட்டாள். சென்னிகராயர் ஆனந்தமாய்த் தூங்கிக் கொண்டிருந்தார். அவரிடம் சொல்வதற்குப் பதில் தண்டோரா போட்டு விடலாம். அவ்வளவு கெட்டிக்காரர்.

அவள் ஒரு முடிவு செய்தாள். யாரிடமும் சொல்லக் கூடாது என்று பார்வதியிடம் சொல்லி தங்களுடனேயே படுத்துக் கொள்ளச் செய்தாள். காலையில் அவளை வீட்டு வேலைகள் செய்ய விடவில்லை. வயிற்று வலி என்று சொல்லி ஒரு பக்கமாகப் படுக்கை விரித்துப் படுத்துக் கொள்ளும்படி சொல்லி விட்டாள். ராமண்ணாவிடம் மட்டும் செய்தியைச் சொன்னாள். அவன் புத்திசாலி. யாரிடமும் சொல்லக் கூடியவன் அல்ல.

விசுவனுக்கு விவரம் போதாது. ஆகையால் அவனிடமும் சென்னிகராயரிடமும் சொல்லவில்லை. குழந்தைகள் எக்கேடு கெட்டாலும் அவர் அதைப் பற்றிக் கவலைப்படக் கூடியவர் அல்ல. ஆனால் விசுவன் அக்காவைத் தொட்டு ''வயித்து வலி எப்பிடி இருக்குது?'' என்று விசாரித்தான். தன் பெண் வீட்டு வேலைகளைச் செய்ய ஆரம்பித்த பிறகு நஞ்சம்மா மாத விலக்கு சமயத்தில் ஒதுங்கியே அமர்ந்திருந்தாள். அக்காவைத் தொட்டு விட்டு விசுவன் சமையலறைக்கு வந்து விட்டான். நஞ்சம்மா உடனே சுவாமியை எடுத்து பலகையின் மேல் வைத்து விட்டாள்.

ராமண்ணன் தினசரி கம்பனகெரெய்க்குப் போய்க் கொண்டிருந்தான். அவன் கம்பனகெரெயிலிருந்து எள் வாங்கிக் கொண்டு வந்தான். நஞ்சம்மா தானே ஒரு நாள் குருபரஹள்ளிக்குப் போய் சுவாமி காரியம் என்று சொல்லி நான்கு வீடுகளில் இருபது கொப்பரைகளை வாங்கி வந்தாள். யாருக்கும் தெரியாமல் பார்வதியைச் சமையலறையில் உட்கார்த்தி வைத்து வெல்லம் போட்ட எள் உருண்டை, தேங்காய், வெல்லம், வெந்தயம் போட்ட மாவு உருண்டை ஆகியவைகளைத் தினமும் சாப்பிடச் செய்தாள். வெண்ணெய் விலை சேர் பத்து அணா. ராமண்ணன் அதையும் கம்பனகெரெயிலிருந்து வாங்கி வந்து கொடுத்தான். நஞ்சம்மா தினமும் பார்வதி சாப்பிடும் போது சாப்பாட்டில் நெய் ஊற்றி வந்தாள்.

அக்கம் பக்கத்தவர்களுக்கு எந்தத் தடயமும் தெரியாதபடி ஐந்து மாதங்கள் கழிந்து விட்டன. ஆனால் பார்வதியின் உடம்பைப் பார்த்தவர்களுக்கு அவள் பெரியவளாகிவிட்டாளோ என்ற சந்தேகம் ஏற்பட்டது. தாயைப் போலவே நல்ல உடற்கட்டு. முன்னைப் போல் கீரைக்குத் தண்ணீர் பாய்ச்ச வெய்யிலில் போவதில்லை. ஆகையால் உடல் நிறமும் கூடி இருந்தது. மகளின் உடற்கட்டைப் பார்த்து சில வேளைகளில் சந்தோஷம் ஏற்பட்டாலும் அத்துடன் கவலையும் ஏற்பட்டது. உண்மையாகவே இவளுக்குக் கல்யாணம் நடக்குமா என்ற மன வேதனை அவளை அரித்தது.

தாயின் வேதனை மகளுக்குப் புரிந்தது. 'மகளுக்குக் கல்யாணம் ஆகவேண்டுமே' என்று தாய் கவலைப்படுகிருள் என்பதை அவள் புரிந்து கொண்டாள். எப்படியோ கல்யாணத்தை நடத்தி விடுவார்கள். ஆனல் எப்படிப்பட்ட கணவன் வாய்ப்பான். தன் தகப்பனைப் போலவா அல்லது சிற்றப்பனைப் போலவா அல்லது மாமனைப் போலவா? தனக்கு அப்படிப்பட்டவர் கணவனுக வரக் கூடாது. தன் விருப்பத்தைப் பற்றி அம்மாவிடம் சொல்லலாம். ஆனல் தன் விருப்பம் போல் நல்ல பையனைத் தேடிக் கல்யாணம் செய்யும் அளவுக்கு வசதி இல்லை என்பதும் அவளுக்குத் தெரியும். தான் செத்துப் போவதே மேல்' என்ற அவளது எண்ணம் தாய் மற்றும் தம்பியரை நினைத்தவுடன் மறைந்தது. 'எப்படிப்பட்ட கணவன் வாய்த்தாலும் குடும்பம் நடத்த வேண்டியது தான். அம்மா குடித்தனம் செய்யவில்லையா?' என்ற சிந்தனை வந்தது. பீடி வெற்றிலைப் பாக்கு முதலிய கெட்ட பழக்கங்கள் இல்லாமலும் மனைவியை அடிக்காமலும் இருக்கிற ஆசிரியர் வெங்கடேசய்யா போன்ற ஆண்பிள்ளை கிடைத்தால் பரவாயில்லை என்ற விருப்பமும் எழுந்தது. ஒரு நாள் சென்னிகராயர் வந்து மனைவியிடம் ''பார்வதி பெரியவளாகிவிட்டாளா?'' என்று கேட்டார்.

நஞ்சம்மாவுக்குக் கோபம் வந்தது. ''உங்களுக்குப் புத்தி இல்லியா? யார் அப்படிச் சொன்னுங்க?'' ''உன் மக ஏன் இப்ப கீரைத் தோட்டத்துக்கு வர்றதில்லே? பெரியவளாயிட்டாளான்னு ஜோசியர் எங்கிட்டே கேட்டார்.''

''நீங்க என்ன சொன்னீங்க?,'' ''எனக்குத் தெரியாது பெண்டாட்டிகிட்டே கேக்கணும்னு சொன்னேன்.''

''இல்லைன்னு சொல்லியிருக்கக் கூடாதா?''

''எனக்கு என்ன தெரியும்?''

''இன்னும் ஆகலே. வீட்டிலே இலை தைக்கிறதுக்கே நேரம் போதலைன்னு சொல்லுங்க.''

ஊரில் இருந்த மற்றப் பிராமணர்களுக்குச் சந்தேகம் வந்து விட்டது. எவ்வளவுதான் மறைத்து வைத்தாலும் இது போன்ற விஷயங்களை வெகுநாட்கள் மூடி வைப்பது கஷ்டம். கொடியில் மல்லிகை மொட்டு மலரும் போது எவ்வளவு மூடி வைத்தாலும் எல்லோருக்கும் தெரிந்து விடுவது போல, வயதுக்கு வந்து உடலுக்கும் சிசுருஷை செய்து கொண்ட பெண்ணின் விஷயமும் தெரிந்து விடுகிறது.

3

இரண்டு நாட்களுக்குப் பிறகு ஒரு வில் வண்டி அவர்கள் வீட்டுமுன் வந்து நின்றது. அதிலிருந்து உயரமான நல்ல உடற் கட்டுடைய ஒருவர் இறங்கினார். நெற்றியில் சந்தனமும் கழுத்தில் ஜப மாலையும் அணிந்திருந்தார். அதுவரை பார்வதி அவரைப் பார்த்தது கிடையாது. பின்னால் அக்கம்மா இறங்கினாள். அக்கம்மா இங்கே ஏற்கனவே வந்து நான்கு வருடங்களுக்கு மேலாகி விட்டிருந்தன.

"அம்மா அக்கம்மா வந்திருக்கா" என்று பார்வதி உட்புறம் திரும்பிச் சொன்னவுடன் நஞ்சம்மா எழுந்து ஓடிவந்தாள். அவள் எதிரே தகப்பனார் நின்று கொண்டிருந்தார்.

"நஞ்சா, நீ இப்ப இளைச்சுப் போயிட்டியே! இவதான் அங்கே பெறந்தவளா?" என்று விசாரித்தார்.

தாத்தாவைப் பற்றிக் குழந்தைகள் கேள்விப்பட்டிருந்தார்கள். அக்கம்மா சீடை, முறுக்கு, எல்லாம் கொண்டு வந்திருந்தாள். மகளுக்கு ஒரு புடவையும் பேத்திக்கு ஒரு புடவையும், குழந்தைகளுக்குச் சட்டையும் தாத்தா வாங்கி வந்திருந்தார். அத்துடன் ஒரு சிறு செம்பில் கங்கை நீரும் இருந்தது. பள்ளியிலிருந்து திரும்பிய விசுவனுக்கு ஓரே கொண்டாட்டம்.

"அப்பா நீ ஊருக்குப் போய் பன்னெண்டு பதிமூணு வருஷம் ஆச்சே! மொதல்லே ஒரு கோவிலுக்குப் போய் அங்கே எங்களைக் கூப்பிட்டுப் பார்த்திருக்கக் கூடாதா?"

ஏன் காசிக்குப் போனார் என்பதைப் பற்றி கண்டி ஜோசியர் சரியாகக் கூறவில்லை. "ஏதோ விசுவநாதனைத் தரிசிக்க வேணும்னு மனசிலே பட்டது, போயிட்டேன்." என்று விளக்கம் சொன்னார்.

அக்கம்மா நாள் முழுவதும் ஊர் விஷயங்களைப் பற்றிப் பேத்தியிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். கண்டி ஜோசியர் அய்யா சாஸ்திரியாரையும், அண்ணா ஜோசியரையும் பார்த்து காசிப் பயணத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்.

வந்த விஷயத்தைப் பற்றி அக்கம்மா பேச ஆரம்பித்தாள். "அந்த மலட்டு முண்டை வயித்துலே கொழந்தைகளே பெறக்காது. கல்யாணம் ஆயி பதினாறு வருஷம் ஆச்சு. வம்சம் வளராட்டா எனக்குத் திதி செய்யறது யார்? அதனாலே கல்லேசனுக்கு இன்னொரு கல்யாணம் செஞ்சிடலாம்னு முடிவு செஞ்சிருக்கோம்."

''அண்ணு ஒத்துக்கிட்டாரு?''

''ஏன் ஒத்துக்க மாட்டான்? அவன் தான் மாட்டு வண்டி பூட்டி ரெண்டு பேரையும் அனுப்பி வைச்சான்?''

''அதுக்கு நான் என்ன செய்யணும்?''

''பார்வதியைக் கொடுத்துடு. ஒரே நாள்லே கல்யாணத்தை முடிச்சுடலாம்.'' அப்பொழுது பார்வதியும் அங்கே நின்று கொண்டிருந்தாள். இதைக் கேட்டவுடன் நஞ்சம்மாவுக்கு ஒன்றும் புரியவில்லை. அக்கம்மாவே மறுபடியும் சொன்னுள்.

''காசியிலிருந்து கண்டி வந்தப்ப மூவாயிரம் ரூபாய், இருபது தங்க மோதிரம் எல்லாம் கொண்டு வந்திருக்கான். அதெல்லாம் பொண்ணுக்கே வந்துடும். ராணியைப் போல் இருக்கலாம்.''

''அக்கம்மா, பார்வதிக்கு என்ன வயசு? அண்ணுவுக்கு என்ன வயசு? அவன் மாமா, இவ மருமக. அவனுக்கு மகன் பெறந் திருந்தா இவளைக் கொடுத்திருக்கலாம்'' என்ருள் நஞ்சம்மா.

''மகன் பொறந்திருந்தா மறுபடியும் கல்யாணம் எதுக்கு? எத்தனையோ பேர் மாமனைக் கல்யாணம் செஞ்சுக்கரு. அவனுக்கு என்ன பெரிய வயசு? முப்பத்தாறு, முப்பத்தேழு இருக்கும். ராஜ குமாரன் போல திடமா இருக்கான்.''

''அண்ணி சும்மா இருப்பாளா?''

''சும்மா இருக்காம வேறென்ன செய்யறது? இவளுக்கு ஒரு கொழந்தை பெறந்துட்டா இவளோட வேலையைச் செஞ்சுட்டு இருக்கட்டும். இல்லாட்டா அப்பன் வீட்டுக்குப் போகட்டும்.''

உடனடியாக என்ன பதில் சொல்வது என்று நஞ்சம்மா வுக்குத் தெரியவில்லை. மனம் கலவரப்பட்டது.

''ஊரிலே சாப்பாட்டுக்கு என்ன கொறைச்சல்! கல்லேசனே விவசாயம் செய்யருன். நல்ல வீடு. ரொக்கம் மூவாயிரம் இருக்கு. வேணும்ணு அந்தப் பணத்துலே தங்க நகை செஞ்சு இவளுக்குப் போட்டுடலாம். வம்சம் வளராமப் போனு என் னேட கதி என்னவாகும்? உன் அம்மா வயித்துலே பெறந்தவங் கள்லே நீங்க ரெண்டு பேர் பெளைச்சிட்டீங்க. நானும் உங்களை வளத்தேன். இப்ப நானே வந்து கேக்கறேன். கொடுத்துடு'' என்று நயந்து கேட்டாள்.

நஞ்சம்மாவின் மனம் உருகியது. ஆனுல் அவள் எதையும் பேசவில்லை. அன்றிரவு சாப்பாடு முடிந்ததும் கண்டி ஜோசியரே

அவளிடம் பேச ஆரம்பித்தார். அப்பொழுது சென்னிகராயரும் அங்கே இருந்தார். அவருக்கு மாமனுரைக் கண்டால் எப் பொழுதும் பயம். சிவலிங்கனிடமிருந்து வேலையை வாங்கிக் கொடுத்தவர் அவர்தான். அக்கம்மா சொன்னதையே அவரும் சொல்லிவிட்டு மாப்பிள்ளையின் பக்கம் திரும்பி ''சென்னையா, என்ன சொல்றே? ஊரிலே நிலபுலன், வீடு மேற்கொண்டு மூவாயிரம் ரூபாய் எல்லாம் உன் மகளுக்கே கிடைக்கும். நீ வேறே எங்கே பையனைத் தேட முடியும்? பேசாம சரின்னு சொல்லிடு'' என்று ஊக்குவித்தார்.

''சரி நடக்கலாம் ஆனு இந்த முண்......'' என்று சென்னிக ராயர் சொல்லி சட்டென்று வாயை அடக்கிக் கொண்டார். ''இவகிட்டே நீங்களே சொல்லுங்க. எனக்கு ஆட்சேபனை கெடையாது'' என்ருர்.

''உன் புருஷனும் ஒத்துண்டுட்டான் என்ன சொல்றே நஞ்சா?''

அவளுக்கு எதுவும் சொல்லத் தெரியவில்லை. ''யோசனை செஞ்சு நாளைக்குப் பேசலாம்'' என்ருள்.

''யோசனை என்ன வேண்டியிருக்குது? நாம் எல்லோரும் ஒத்துட்டா முடிவு செஞ்சது போலத்தான். ஊருக்குப் போய் எல்லா ஏற்பாடும் செய்யறேன். இன்னும் எட்டு நாள்லே கல்யாணத்தை முடிச்சுடலாம்'' என்று கண்டி ஜோசியர் முடி வாகச் சொன்ஞர்.

''நீங்க இன்னும் நாலு நாள் இருப்பீங்க இல்லியா? யோசிக்கலாம்.''

''இப்ப நேரம் கெடையாது. ஊருக்குப் போய் கல்யாணத் துக்கு சாமான் எல்லாம் வாங்கணும். நீ ஒரு தம்பிடியும் செலவு செய்ய வேண்டாம்'' என்று அக்கம்மா ஆதரவாகக் கூறிஞள்.

அக்கம்மாவுக்கு உப்புமா. மற்ற எல்லோருக்கும் சாப்பாடு. சாப்பாடு முடிந்த பின் எல்லோரும் படுத்துக் கொண்டார்கள். ஊரில் இருந்து வந்திருந்த இருவரும் சீக்கிரமே தூங்கிப் போஞர் கள். சென்னிகராயர் குறட்டை விட்டுக் கொண்டிருந்தார். நஞ்சம்மாவுக்குத் தூக்கம் வரவில்லை. பார்வதியை அண்ணு விற்குக் கொடுத்தால் சாப்பாட்டிற்குக் கவலை இல்லை. பணமும் கிடைக்கும். இங்கே அவளுக்கு என்ன சுகம்? ஆகையால் பெண்ணைக் கொடுத்தாலும் நல்ல இடந்தான். ஆனல் அண்ணி இருக்கிருளே? அண்ணன் பார்வதியை விட இருபத்தி இரண்டு வயது மூத்தவன். எப்படிக் கொடுப்பது? முப்பது வயது அதிக

மானவர்கள் இரண்டாம் தாரம், மூன்றும் தாரம் கட்டிக் கொள்வதில்லையா? அவனுக்குக் குழந்தை இல்லாததற்கு காரணம் என்ன? அவள் மலடியா? இல்லை அவன் செய்த பாவமா? மகள் அங்கே சென்றால் சுகமாக இருப்பாளா?— நஞ்சம்மாவின் மனதில் பலவித யோசனைகள் எழுந்தன. காலையில் எழுந்தவுடன் அக்கம்மாவிடமும், தகப்பனாரிடமும் இது பற்றிப் பேச வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள்.

'வீடு நிறைய தானியம், ரூபாய் மூவாயிரம் என்றவுடன் கணவனுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. என்ன செய்வது?' அவளுக்குத் திடீரென்று மாதேவய்யாவின் நினைவு வந்தது. அவருடன் கலந்தாலோசித்து ஒரு முடிவு செய்ய வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள் அவள் எழுந்து வெளியே வந்தாள். ஓசைப்படாமல் கதவைச் சாத்திவிட்டு நடக்கும் போது பின்னால் பார்வதி வருவதை உணர்ந்தாள். மகளைக் கண்ட நஞ்சம்மாவிற்கு வியப்பு ஏற்படவில்லை. தாய் முன்னே செல்ல சந்தடியின்றி மகள் பின் தொடர்ந்தாள்.

கோவிலுக்கு வந்து மதேவய்யாவை எழுப்பினாள். அவர் எழுந்து விளக்கேற்றினார். அந்த வெளிச்சத்தில் பார்வதியின் கண்ணீர் பளபளத்தது.

''என்னம்மா, மாமனைக் கல்யாணம் செஞ்சுக்கக் கூடாதுன்னு அழுதுகிட்டிருக்கியா?'' என்று பார்வதியைப் பார்த்து மாதேவய்யா கேட்டார்.

''உங்களுக்கு இது எப்படித் தெரிஞ்சது?'' என்று கேட்டாள். ''சாயங்காலம் உங்க அப்பா வந்திருந்தார். எங்கிட்டே எல்லாத் தையும் சொன்னார். நீ என்ன முடிவு செஞ்சிருக்கே?''

''எனக்கு ஒண்ணும் தெரியலே. அதுக்குத்தான் இங்கே வந்தேன்.''

அப்பொழுது ராமண்ணன் அங்கு வந்தான். ''வீட்டை அப்பிடியே விட்டுட்டு இங்கே ஏன் வந்தே?'' என்று அம்மா கவலையுடன் கேட்டாள்,

''பின்னாடி பூட்டிட்டு மெதுவா வந்தேன். எனக்கும் தூக்கம் வரலே. நீங்க இங்கே தான் வந்திருப்பீங்கன்னு எனக்குத் தெரியும்'' என்று சொல்லிக் கொண்டே அவன் சாவியைக் காண்பித்தான்.

''அக்கா கல்யாணத்தைப் பத்தி என்ன சொல்றே தம்பி?'' என்று அவனைப் பார்த்து மாதேவய்யா கேட்டார்.

''வேண்டாம், அய்யா. மாமா அந்த நரசி. வீட்டுக்கு......'' என்று சொன்னவன் உடனே பெரியவர்களின் எதிரே அதைப் பேசக் கூடாது என்று நிறுத்திவிட்டு ''அவருக்குக் கொடுக்க வேண்டாமய்யா'' என்ருன்.

''அண்ணுன்னு நெனேச்சு பொண்ணு கொடுக்க வேண்டாம். இந்தச் சுத்து வட்டாரத்திலே யாருக்கும் கொடுக்காதே. அரசாங்க வேலேயிலே இருந்தா நல்லது. எப்பிடியோ பாடுபட்டு ஒரு பள்ளிக்கூட வாத்தியாருக்காவது பொண்ணேக் கொடு. மரியாதையா இருப்பாங்க. மத்தவங்க எல்லாம் காவாலிங்க'' என்று அய்யா ஆலோசனே சொன்ஞர்.

நஞ்சம்மா தணிந்த குரலில் கூறினுள். ''பொண்ணுக்கு வயசாப் போச்சே? அவ பெரியவளாயிட்டாளே! என்ன செய்யறது?''

''இப்ப பெரிய ஊர்கள்லே அப்பிடி எல்லாம் கெடையாது. அங்கே உள்ளவங்க யாரையாவது பார்த்துக் கொடு. தானியக் கணக்கு எழுதி உனக்கு இப்ப அதிகப் பணம் கெடைக்குது. நீ கணக்கு எழுதற எல்லா கிராமத்துலேயும் வசூல் செஞ்சாலே ஐநூறு ரூபாய் அறுநூறு ரூபாய் கெடைக்கும்.''

''பெரிய ஊர்கள்ளே நிறைய வரதட்சனே கேக்கருங்களாம். நாம் எப்படித்தான் கல்யாணம் செஞ்சு கொடுக்கறது?''

''அம்மா நான் பெரிய வகுப்பிலே படிக்கிறேன், இல்லியா அக்காவுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கறேன். அவ பிரை வேட்டா லோயர் செகண்டரி எழுதிட்டா பள்ளிக்கூடத்திலே டீச்சர் ஆயிடலாம். கலியாணம் இல்லாட்டா கெடக்குது. அதனுல் என்ன?'' என்ருன் ராமண்ணன்.

''அதை அப்புறம்பாத்துக்கலாம். வேணும்னு வெங்கடேசய்யா வாத்தியார்கிட்டே கேட்டுப் பாருங்க. பெறகு உங்க அய்யாவுக்கு பதில் சொல்லுங்க'' என்ருர் அய்யா.

நஞ்சம்மா கூறியபடியே ஆசிரியர் வெங்கடேசய்யாவை அழைத்து வர ராமண்ணன் போனுன்.

''யாரையும் எழுப்பாதே. யாருக்கும் தெரியக்கூடாது'' — அம்மா எச்சரித்தாள். சிறிது நேரத்தில் ஆசிரியர் வந்தார். பார்வதி எழுந்து போய்த் தூணுக்குப் பின் மறைவாக நின்ருள். நஞ்சம்மா விஷயத்தை விளக்கினுள்.

''அம்மா, அரிசிகெரெ வட்டாரத்திலே பொண்ணு பெரியவ ளாயிட்டா அதை வெளியே சொல்றதில்லே. நீங்க இதுக்காக பயப்பட வேண்டாம். நான் பையனைத் தேடிப் பார்த்துச் சொல் றேன். ஆரம்பப்பள்ளி வாத்தியார்ரு சம்பளம் கொறைவு. அப்படிப்பட்டவங்க கெடைப்பாங்க. நீங்க பணத்துக்கு ஏற்பாடு செய்யுங்க. அறுநூறு இல்லாட்டா ஐநூறு போதும்.''

''பையன் நல்லவனாக இருக்கணும். சம்பளம் கொறைவா யிருந்தா என்ன? என் பொண்ணுக்கு இலை தைக்கத் தெரியும். மாசம் பதினைஞ்சு ரூபாய் எப்பிடியும் கெடைக்கும்.''

''எனக்குத் தெரியாதா அது?. பார்வதியைக் கல்யாணம் செஞ்சுக்க புண்ணியம் செஞ்சிருக்கணும்.''

பிறந்த வீட்டிற்குப் பெண்ணைத் தருவதில்லை என்று முடிவு செய்தார்கள்.

''எனக்கு வேண்டாம்னு பொண் பிடிவாதமா இருக்கட்டும். பொண் இப்பிடிச் சொன்னப்புறம் நான் என்ன செய்யட்டும். அப்பிடின்னு நீங்க சொல்லிடுங்க, பொண் கொடுக்க முடியா துன்னு நேரிடையா சொல்ல வேண்டாம்'' என்று ஆசிரியர் உபாயம் சொல்லிக் கொடுத்தார்.

மூன்று பேரும் ஓசைப்படாமல் கதவைத் திறந்து கொண்டு வந்து படுத்துக் கொண்டனர். காலையில் எழுந்தவுடன் புறப்பட வேண்டும் என்று கண்டி ஜோசியர் புறப்பட்டார். ''நஞ்சா இன்னும் எட்டு நாள்லே ஒரு முகூர்த்தம் இருக்கு. இங்கே உன் வீட்டிலே வைச்சுக்கலாமா? அங்கே செய்யலாமா?'' என்று கேட்டார்.

''அப்பா பொண்கிட்டே ஒரு வார்த்தை கேக்கலாம். நான் மட்டும் பேசினாப் போதுமா?''

''அவளை என்ன கேக்கறது? உன் கல்யாணத்துக்கு உன்னை நான் கேட்டேனா? அடி சின்னம்மா, இங்கே வாடி'' என்று பேத்தியை ஜோசியர் கூவி அழைத்தார்.

''என்னடி சொல்றே நீ?''

பார்வதி உடனே பேசவில்லை. தாத்தா மறுபடியும் கேட் டார். ''எனக்கு வேண்டாம்'' என்றாள் அவள்.

''ஏன் வேண்டாம்?''

''எனக்குப் பிடிக்கல்லெ தாத்தா'' என்று கூறிவிட்டு அவள் சமையலறைக்குள் ஓடிவிட்டாள்.

''என்னடி நஞ்சா இவ இப்படிச்சொல்ருளே?'' ''அவளுக்குப் பிடிக்காட்டா வேண்டாம், அப்பா'' கண்டி ஜோசியருக்குக் கோபம் வந்து விட்டது. பார்வதியின் முன் சென்று ''ஏன் வேண்டாம்?'' என்று மறுபடியும் கேட்டார். ''எனக்குப் பிடிக்கல்லெ. என்னைக் கட்டாயப்படுத்த வேண்டாம்'' என்று அவள் சொல்லியவுடன் அவர் அவள் தலையில் ஓங்கிக் குட்டிஞர். சத்தம் கேட்டு நஞ்சம்மா உள்ளே ஓடி வந்தாள்.

''அப்பா நீ ஏன் அந்தப் பொண்ணை அடிக்கறே? நீ நெனச்சபடி நடக்கணும், அது உன் பிடிவாதம். நாலுபேர் கிட்டே விசாரிச்சு என் கல்யாணத்தை செஞ்சியா? மத்தவங்ககிட்டே விசாரிச்சு அண்ணன் கல்யாணத்தைச் செஞ்சியா? இப்ப கஷ்டப்பட வேண்டியிருக்கு.''

''உனக்கு இப்ப என்ன கொறைச்சல்?'' ''இனி என்ன கொறையணும்? இருந்த நெலத்தையெல்லாம் மாப்பிள்ளையும் சம்பந்தியும் தொலைச்சிட்டாங்க. நான் பாடுபடாட்டா கொழந்தைக வயித்துக்கு இல்லாம செத்துப் போயிருக்கும்.''

''அதனால்தான் சாப்பாட்டைப் பத்திக் கவலையில்லாம இருக்க கல்லேசனுக்குக் கொடுன்னு சொல்றேன்.''

''பொண்ணே வேண்டாமின்னு சொல்லும்போது நான் என்ன செய்ய முடியும்? அவனுக்குக் கட்டாயமாகக் கல்யாணம் செய்யனும்னு வேறே எடத்திலே பொண் பாத்துக்க.''

''நீ மகளும் அல்ல. நான் அப்பனும் அல்ல. தறுதலே நாயே'' என்று சொல்லிவிட்டு அவர் வெளியே வந்து ''அக்கம்மா புறப்படு. இந்தக் களவாணியின் வீட்டிலே ஒரு சொட்டுத் தண்ணி கூடக் குடிக்கக் கூடாது'' என்று அவளை அவசரப்படுத்தி விட்டு தன் துணிமணிகளை எடுத்துக் கொண்டு வீட்டின் எதிரே இருந்த வண்டியில் ஏறிக் கொண்டார். அக்கம்மாவுக்கும் கோபம் வந்து விட்டது. அவள் தன் மூட்டை முடிச்சுக்களைக் கட்டிக் கொண்டு வண்டியில் ஏறிஞள். ''எதுக்காக இப்பிடிக் கோபிச்சுட்டுப் போறிங்க? ஒரு நாள் இருந்துட்டுப் போகக் கூடாதா?'' என்று நஞ்சம்மா சொன்னவுடன் ''உன்னை சீராட்டி வளர்த்து பிள்ளைப் பேறு செஞ்சதுக்கு நீ எனக்கு நன்றி காட்டிட்டே'' என்று அக்கம்மா படபடத்தாள். கண்டி ஜோசியரோ ''நீ எங்கிட்டே பேசாதே. நீ மகளும் அல்ல. நான் உன் அப்பனும் அல்லன்னு சொன்னதை மறந்துட்டியா?'' என்று உறுமிஞர்.

## 4

எட்டு நாட்கள் கழிந்தன. ஒரு நாள் மதிய வேளையில் நஞ்சம்மாவும், பார்வதியும் ராகி திட்டிக் கொண்டிருந்தார்கள். வீட்டில் ஒருவரும் இல்லை. யாரோ வந்ததைப் போல் நிழலாடியது. நஞ்சம்மா திரும்பிப் பார்த்தாள். நரசி நின்று கொண்டிருந்தாள். நரசி அதுவரை அங்கே வந்ததில்லை. அவளுடைய கடையின் எதிரே நஞ்சம்மா நடந்து சென்றாலும் அவளிடம் வலியப் பேச்சுக் கொடுக்கமாட்டாள். அவளாகவே ''என்னக்கா குருபரஹள்ளிக்குப் புறப்பட்டாச்சா?'' என்றால் ''உம்'' என்று சொல்லிவிட்டுப் போவாள். அவ்வளவுதான். இப்பொழுது நரசியே வீடு தேடி வந்திருக்கிறாள். வலிய வந்தவளிடம் பேசாமல் இருக்கக்கூடாது. அவளுக்கும் தனக்கும் தகராறு எதுவும் கிடையாது.

''உக்காந்துக்க, அம்மா'' என்று சொன்னவுடன் நரசி தூணில் சாய்ந்து அமர்ந்து கொண்டாள், பார்வதி சமையலறைக்குச் சென்றாள்? ஏதோ முக்கியமான விஷயமாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவள் வரமாட்டாள் என்று நினைத்தவாறு நஞ்சம்மா அவளிடம் ''என்ன விஷயம்?'' என்று கேட்டாள்.

''உங்ககிட்டே ஒண்ணு விசாரிச்சுட்டுப் போகலாமின்னு வந்தேன். பார்வதியை உங்க அண்ணனுக்குக் கொடுக்கப் போறீங்களாமே? அது உண்மைதானா?''

''உனக்கு யார் சொன்னாங்க?''

''சிங்கேனஹள்ளியிலே என் சொந்தக்காரர் இருக்கிறார். அவருக்கு நாகலாபுரத்திலே சொந்தக்காரங்க இருக்தாங்க. நாகலாபுரத்திலே அப்பிடிப் பேசிக்கறாங்களாம்.''

''அதெல்லாம் பொய்''

''உங்க அப்பாவும் பாட்டியும் வந்திருந்தாங்களே. அதுக்காகத்தான் வந்திருப்பாங்கன்னு நெனைச்சேன். அந்த ஆளுக்குப் பொண் கொடுக்க வேணும். நான் இப்பிடிச் சொன்னதாக நீங்க யார்கிட்டேயும் சொல்லக்கூடாது. அதைப் போல ஆளுகளுக்கு பொண் கொடுப்பதை விட கெணத்திலே தள்ளிப் போடலாம்.''

''என் அண்ணன் இப்ப உன் வீட்டுக்கு வர்றானா?''

''இல்லே. நாலு வருசத்துக்கு முன்னடி நானே வெரட்டி விட்டேன். அந்த ஆளுக்கு விவஸ்தை கெடையாது'' நஞ்சம்மா பேசவில்லே. ''பார்வதி காதிலே விழும்படியா இதையெல்லாம் பேசக்கூடாது'' சரி போகட்டும் விடு. இந்தப் பேச்சு வேண் டாம்'' என்ருள் நஞ்சம்மா.

''நான் கோபப்பட்டு இப்பிடிச் சொல்லலே. பார்வதி என் பொண்ணேப் போல. அதனுலே யாராவது ஒரு நல்ல ஆளுக்குக் கொடுங்க. உங்க அண்ணன் என் வீட்டிலே படுத்துக்கிட்டிருக்கும் போதே நடு ராத்திரியிலே கடைப் பணத்தைத் திருடிச் சட்டைப் பையிலே போட்டுக்குவார். இப்பிடிச் செய்யலாமா?'' தான் வந்த வேலே முடிந்து விட்டதாக நினைத்து நரசி எழுந்தாள். ''நான் போய் வர்றேன். மனசு பொறுக்கலே. இதை உங்க கிட்டே சொல்லிட்டுப் போகலாமின்னு வந்தேன்,'' என்று கூறி அவள் விடைபெற்ருள்.

அவள் சென்றதும் பார்வதி, நஞ்சம்மாவுடன் சேர்ந்து மீண்டும் ராகி தீட்ட ஆரம்பித்தாள். இருவரும் பேசிக் கொள்ள வில்லே. ஆனல் இருவர் மனத்திலும் கல்யாணம் நின்று போனது நல்லதாயிற்று என்ற எண்ணமே இருந்தது.

## 5

எப்படியோ ஒரு நல்ல பையனேப் பிடித்துக் கல்யாணத்தை முடித்துவிட வேண்டும் என்று நஞ்சம்மா உறுதியாக இருந்தாள். கல்யாணம் நிச்சயித்த பின் பணம் இல்லாவிட்டால் அவமான மாகப் போகுமே என்ற யோசனேயும் வந்தது. தானியக் கணக்கு எழுதுவதால் அரசாங்கத்திடமிருந்து நூறு ரூபாய் கூடுதலாய் வந்து கொண்டிருந்தது. மொத்தமாய் இருநூற்று இருபது ரூபாய் இருக்கும் என்ற உறுதியிருந்தது. அனல் வருடக் கடைசியில் கணவன் திப்டூருக்குச் சென்று யாருக்கும் தெரியாமல் சம்பளப் பணத்தை வாங்கிச் செலவு செய்துவிட்டால் என்ன செய்வது என்ற பயமும் இருந்தது. ஒரு நாள் குண்டே கவுடர் வந்திருந்த போது குருபரஹள்ளியில் ஆறுபேர்களுக்கு வரி ரசீது எழுதிக் கையொப்பமிட்டு அவரிடம் கொடுத்து வருமாறு நஞ்சம்மா தன் கணவனிடம் கூறினுள். ''நான் அப்படிச் செய்ய முடியாது'' என்று அவர் அடாவடி செய்தார். ''பொண்ணுக்குக் கல்யாணம் நடக்கணும். இந்தப் பணம் உங்கக்கிட்டேயே இருக் கட்டும். அவருக்கு நீங்களே விளக்கிச் சொல்லுங்க'' என்ருள் அவள்.

குண்டே கவுடர் சென்னிகரராயரைப் பார்த்து, ''என்ன சென்னையா, கையெழுத்துப் போடுறியா, உன் கழுத்தை முறிக்கட்டுமா?'' என்று மிரட்டினார்.

''அவகூட சேந்துட்டு எங்கிட்டே ஒரு காசும் இல்லாம செய்யப் பாக்கறீங்களா? நான்தான் கணக்குப்பிள்ளை கையெழுத்துப் போட முடியாதுன்னு சொன்னா என்ன செய்வீங்க?''

''உன் கழுத்தை முறிக்கறேன். நீ எங்க ஊர்லே எப்பிடிக் கால் வைக்கறே, பாக்கலாம்'' என்று சொல்லிக் கொண்டே கவுடர் தன் கையில் இருந்த தடியுடன் எழுந்து நின்றார். சென்னிகராயர் பயந்து எல்லாவற்றிலும் கையெழுத்துப் போட்டார். ஆனால் அவருடைய கோபம் தணியவில்லை. ''இந்தத் தேவடியா முண்டையை......'' என்று திட்டிக் கொண்டே வெளியே போனார்.

''குடும்பம்னா, நாடகம்தான் இல்லியா?'' என்று சிரித்தார் கவுடர்.

''ஆமா, கவுடரே, உங்களைப் போல ஒருத்தர் இல்லாட்டா இவர் இந்தக் குடும்பத்தையே அழிச்சுப்பிடுவார்'' என்று நஞ்சம்மா அங்கலாய்த்தாள்.

''இங்கே பாருங்க. இப்ப இருநூறு ரூபாய் ஆச்சு. கல்யாணத்துக்கு அறுநூறு, எழுநூறு வேணுமே. இனிமே என்ன செய்றதுன்னு தெரியலே. நீங்கதான் வழி சொல்லணும்.''

''மகாலட்சுமி போல இருக்கா உன் மக. எங்க ஜாதியிலே பொறந்திருந்தா அட்டிகை, தோடு, வளையல், மூக்குத்தி எல்லாம் போட்டுப் பொண்ணையும் கூட்டிக்கிட்டு போயிருப்பாங்க. உங்க சாதி ரொம்பவும் மோசம்.''

''பொறந்தப்புறம் சாதி வழக்கப்படி செய்யத்தானே வேணும்?''

''நீ காய்கறி, பருப்பு இதைப் பத்தி யோசனை செய்ய வேணும். ஒரு பையனை முடிவு செய். எங்க ஊரிலே வீட்டுக்கு அஞ்சு, பத்துன்னு வசூல் செய்யறேன். நாப்பது வீடு இருக்குது. கணக்குப்பிள்ளை வீட்டுக் கல்யாணமின்னா முந்நூறு ரூபாயாவது வசூல் ஆகாதா? மொத்தத்திலே ஐநூறு ஆச்சே! சிக்கனமா செஞ்சு முடி.''

கவுடரின் பேச்சு அவளுக்கு ஊக்க மூட்டியது. மனதில் இருந்த பாரம் இறங்கினாற் போல் ஆயிற்று. இனி எப்படியாவது ஒரு நல்ல பையனைப் பார்த்து முடிவு செய்ய வேண்டும் என்று

தீர்மானித்தாள். கவுடர் புறப்படும் போது அவளை வெளியே அழைத்து ''நல்ல பையன் கெடைப்பான், கவலையை விடு'' என்று ஆறுதல் சொல்லிவிட்டுப் போனார்.

ஒரு நல்ல பையனைப் பார்த்து முடிவு செய்யும்படி அண்ணனிடம் சொல்ல முடியாது. இந்த விஷயத்தில்தான் பாட்டியும் அப்பாவும் கோபித்துக் கொண்டு போய்விட்டார்களே. ஆகையால் திருமண விஷயத்தைக் கவனிக்க ஒரு நம்பிக்கையான ஆள் வேண்டும். ஆசிரியர் வெங்கடேசய்யாவின் நினைவு வந்தது. அவள் அவரிடம் எல்லாப் பொறுப்பையும் ஒப்படைத்துவிட்டு ''நீங்க தான் ஒரு வழி செய்யணும்'' என்றாள்.

ஆசிரியர் நான்கைந்து ஊர்களில் விசாரித்துப் பார்த்தார். அரிசிகெரெய்க்கு அருகில் ஒரு ஜமீன்தாரின் இரண்டாம் மகனுக்கு இந்தப் பெண் வேண்டும் என்று அவர்களே சொல்லி அனுப்பியிருந்தார்கள். ஆசிரியர் நஞ்சம்மாவிடம் ''நான் உறுதியாக ஏதும் அவங்ககிட்டே பேசலே. ஏழைப் பொண்ணைக் கேக்கறாங்கன்னு சொன்னா பையன்கிட்டே ஏதோ குறையிருக்குதுன்னு தோணுது'' என்றார்.

''இருக்கலாம், விவாதம், விவாகம் இவைகளில் இரண்டு பக்கத்தாரும் சம பலமுடையவர்களாக இருக்க வேண்டும் என்று பழமொழியே இருக்கிறதே. அவ்வளவு பெரிய பணக்காரங்களுக்கு நாம் பெண் கொடுக்க வேண்டாம்'' என்று நஞ்சம்மா ஒப்புக் கொண்டாள்.

நான்கைந்து மாதங்கள் கழிந்தன. நஞ்சம்மாவிற்கு கணக்கு எழுதக் கற்பித்த தியாவரசய்யாவின் மனைவி வகையில் ஒரு உறவுப் பையன் இருப்பதாய்த் தெரிய வந்தது. பையனின் பெயர் சூரிய நாராயணன் எஸ். எஸ். எல். சி. படித்து நடுநிலைப் பள்ளி ஆசிரியராக இருக்கிறான். வயது 27. முதல் மனைவி நான்கு மாதங்களுக்கு முன் இறந்துவிட்டாள். மூன்று வயது மகள் ஒருத்தி இருக்கிறாள். பையனுக்குப் பெற்றோர்கள் கிடையாது. பெண்ணைத் தானே வளர்த்துக் கொண்டிருக்கிறான். சம்பளம் அறுபது ரூபாய். தங்கமான குணம். ''அம்மா நீ சந்தேகப்பட வேண்டாம். பொண்ணைக் கொடு. சுகமாக இருக்கலாம். அந்தக் கொழந்தையை மாற்றாந்தாய் கொழந்தைன்னு நெனைக்காமெ வளக்கணும். பையன் நல்ல புத்திசாலி'' என்று தியாவரசய்யா தன் மகன் மூலம் சொல்லியனுப்பினார். தள்ளாமையின் காரணமாக அவரால் வர முடியவில்லை.

தியாவரசய்யா மிகுந்த புத்திசாலி என்பது நஞ்சம்மாவிற்குத் தெரியும். அவரது பேச்சில் நம்பிக்கை வைக்காமல் இருக்க முடியுமா? ''நீங்க பையனைப் பாத்திருக்கிங்களா?'' என்று நஞ்சம்மா கேட்டாள்.

''எங்களுக்குச் சரியாத் தெரியாது. எங்க அம்மா வகையிலே தூரத்து உறவு. இப்ப குப்பி தாலூகா பாளேகெரெ மிடில் ஸ்கூல்லே வாத்தியாரா இருக்காராம். நீங்க சொல்லி அனுப்பினா பொண் பார்க்க வருவார்.''

நஞ்சம்மா வெங்கடேசய்யாவிடம் விஷயத்தைச் சொன்னாள். அவர் தியாவரசய்யாவுடன் திம்மலாபுரத்துக்குச் சென்று பையனைப் பற்றி விசாரித்துவிட்டு வந்தார்.

''அந்தப் பையன் எனக்கும் தெரிந்த ஆள்தான். நான் குப்பி தாலூகா கடபம் பள்ளிக்கூடத்திலே இருந்தப்ப சம்பளம் வாங்கறதுக்கு தாலூகா ஆபிசுக்குப் போவேன். அங்கே பல தடவை பாத்துப் பேசி இருக்கேன். ரொம்பவும் நல்ல ஆள். பாவம் பெண்டாட்டி தவறிப் போயிட்டாள். அந்த விஷயம் எனக்குத் தெரியாது. ரெண்டாம் தாரம்னு நெனைச்சு இதை நழுவ விட்டா இதைப் போலப் பையன் கெடைப்பது கஷ்டம்.''

நஞ்சம்மா பார்வதியிடம் அபிப்பிராயம் கேட்டாள். ''அம்மா நீ ஒத்துண்டா சரி. எங்கிட்டே எதுக்காகக் கேக்கறே?'' என்றாள் அவள். நஞ்சம்மா தலையாரியிடம் சீட்டு எழுதிக் கொடுத்து திம்மலாபுரத்துக்கு அனுப்பினாள்.

பதினைந்து நாட்களுக்குப் பிறகு வண்டி பூட்டிக் கொண்டு தியாவரசய்யா, அவர் மனைவி, மகன் மற்றும் சூரிய நாராயணன் ஆகியோர் பெண் பார்க்க வந்தார்கள். பையன் கம்பீரமாக இருந்தான். அவனுடைய மூன்று வயது மகள் அவனை விட்டு ஒரு நிமிடம் கூடத் தனித்து இருக்கவில்லை. வெங்கடேச அய்யா வும் வந்தார். அவரும் சூரியநாராயணனும் பல்வேறு விஷயங் களைப் பற்றி அங்கு பேசிக்கொண்டு அமர்ந்திருந்தனர். மத்தி யானம் எல்லோருக்கும் பாயசத்துடன் சாப்பாடு. சூரிய நாராயணனின் மகள் நஞ்சம்மாவுடன் ஒட்டிக் கொண்டாள். சற்றைக்கெல்லாம் அவள் விசுவனுடன் விளையாட வெளியே போய்விட்டாள்.

''அவ யார்கிட்டேயும் இவ்வளவு ஒட்டிக்கிட்டது இல்லே. அரைமணி நேரத்திலே இவங்ககூட நெருங்கிப் பழகிட்டா.''

பெண் பார்க்கும் படலம் முடிந்தது. பிறகு சூரியநாராயணன் நஞ்சம்மாவிடம் பேச ஆரம்பித்தான். ''என் ஜாதகத்தையும் கொண்டு வந்திருக்கேன், நீங்க ரெண்டு ஜாதகத்தையும் யார்கிட்டேயாவது காட்டுங்க. எனக்கு அதிலே நம்பிக்கையில்லே. மொதல் தடவை ஜாதகங்களைப் பாத்த ஜோசியர்கள் ரொம்ப நல்லாய்ப் பொருந்துதுன்னு சொன்னுங்க. ஆனு கல்யாணம் நடந்த நாலு வருஷத்திலேயே இப்பிடி ஆச்சு. என்னைப் பத்தி தியாவரசய்யா மாமா உங்ககிட்டே சொல்லியிருக்கார். உங்களைப் பத்தியும் எங்கிட்டே சொல்லியிருக்கார். நீங்க இன்னும் நாலு பேர் கிட்டே விசாரிச்சுப் பாருங்க. வெறும் சோறும் குழம்பும் செஞ்சு கல்யாணத்தை முடிச்சிடலாம். உங்க மக என் பொண்ணையும் சொந்தக் கொழந்தையைப் போல கவனிச்சுக் கணும்'' என்று அவன் சொல்லி முடித்தான்.

வெங்கடேசய்யாவும் தியாவரசய்யாவும் ஓரளவு ஜாதகம் பார்க்கத் தெரிந்தவர்கள். அவர்களிருவரும் கூடிக் கலந்தாலோசித்து விட்டு மிக நல்ல பொருத்தம் என்று முடிவு செய்தார்கள். வெங்கடேசய்யா சூரியநாராயணனைத் தன் வீட்டிற்கு அழைத்துப் போனுர். தியாவரசய்யா சென்னிகராயரிடம் ''நீங்க என்ன சொல்றிங்க?'' என்று விசாரித்தார்.

''நான் என்ன சொல்றது? என்னைக் கேட்டா இவ காரியம் செய்ரு?''

''நீங்க தான் வீட்டு எஜமானர். அவங்க வேலை செஞ்சாலும் பொறுப்பு உங்களோடது தானே?.''

''இவ்வளவு ஆட்டம் போடுருளே! பணத்துக்கு என்ன செய்யறதுன்னு கேளுங்க.''

''நீங்களே உங்க பொண்டாட்டிகிட்டே கேளுங்களேன்'' என்று தியாவரசய்யா சொல்லவும் உடனே சென்னிகராயர் மனைவி பக்கம் திரும்பி ''பணத்துக்கு என்ன செய்யப்போறேடி முண்......... '' என்று சொல்லி உடனே வாயை மூடிக் கொண்டு மறுபடியும் கேட்டார். ''நீ எப்படிப் பணம் சம்பாதிப்பே?''.

''இந்த வருஷ சம்பளம் குண்டேகவுடர்கிட்டே இருக்கு அப்புறம் குருபரஹள்ளியிலே கொஞ்சம் வசூல் செஞ்சு தர்றேன்னு சொல்லியிருக்கார்.''

தன்னிடம் கெடுபிடி செய்து கையெழுத்து வாங்கிக் கொண்டது அவருக்கு நினைவு வந்தது. 'அவன் ஒரு தேவடியா மகன்' என்று குண்டேகவுடரை மனத்திற்குள் திட்டிக்

கொண்டார். நஞ்சம்மா பேசவில்லை. அவருடைய சுபாவம் தெரிந்திருந்த தியாவரசய்யாவும் பேசவில்லை. வெங்கடேசய்யா தன் வீட்டிற்கு மாதேவய்யாவையும் அழைத்து வந்து பையனைக் காண்பித்தார். பிறகு மூவரும் நஞ்சம்மாவின் வீட்டிற்கு வந்தனர். திருமணத்தைப் பற்றி முடிவு செய்தார்கள். ஒரு மாதத்தில் செய்து விடலாம் என்று சூரிய நாராயணன் சொன்னார்.

''நீங்க அதிகப்படியா எந்தச் செலவும் செய்ய வேண்டாம். பொண்ணுக்குக் கொண்டு வர வேண்டிய சீர் வரிசை எல்லாம் நான் கொண்டு வர்றேன். நீங்க ஒரு ஜோடி மில் வேட்டி, தாமிர பஞ்ச பாத்திரம் கொடுத்தால் போதும்'' என்று அவன் தானாகவே சொன்னான். புறப்படும் போது நஞ்சம்மாவிற்கும், சென்னிகராயருக்கும் காலைத் தொட்டு நமஸ்காரம் செய்தான். பிறகு குழந்தையைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டான். பெண்கள் மட்டும் வண்டியில் அமர்ந்து கொண்டனர். சூரிய நாராயணன், தியாவரசய்யா, அவருடைய மகன் மூவரும் ஊர் எல்லைவரை வண்டியின் பின்னே நடந்தே சென்றனர். வெங்கடேசய்யாவும் மாதேவய்யாவும் ஊருக்கு அப்பால் சற்று தூரம் வரை சென்று வழி அனுப்பி வைத்தார்கள்.

## 6

கல்யாணம் நிச்சயம் ஆகிவிட்டது. முகூர்த்த நாள் குறித்துக் கல்யாணத்தை நடத்தப் புரோகிதர்கள் வேண்டும். ஊர்ப் புரோகிதர்கள் இருவரும் நஞ்சம்மாவை சாதியிலிருந்து விலக்கியிருந்தார்கள். அவளுடைய தந்தையையும் அழைக்க முடியாது. அந்தப் புரோகிதர்கள் ஏதாவது தொல்லை செய்ய லாம். இவர்களை சாதியிலிருந்து விலக்கியிருப்பதாக அவர்கள் பையனிடம் சொல்லலாம். பையன் எவ்வளவுதான் நல்லவனா யிருந்தாலும் மனம் எப்படி மாறுமோ, சொல்ல முடியாது.

அந்த இரண்டு புரோகிதர்களையும் கைக்குள் போட்டுக் கொள்வது அவளுக்கு அப்பொழுது பெரிய வேலையாய் இருக்க வில்லை. உணவு தானியச் சட்டம் வந்த பிறகு தங்கள் நிலத்தின் விளைச்சலைக் குறைவாக எழுதும் படி பலர் அவளிடம் கெஞ்சிக் கொண்டு இருந்தார்கள். அந்தப் புரோகிதர்கள் தங்கள் நிலத்தில் வேலை செய்யும் குடியானவர்கள் மூலம் அவளிடம் கேட்டிருந் தார்கள். கணக்குகளையும் பத்திரங்களையும் உண்மையில் அவள் தான் எழுதுகிறாள் என்பது அவர்களுக்கே தெரியும். அவர்

களுடைய வீட்டிற்குத் தான் போக வேண்டுமா என்று யோசித்தாள். பின் தலையாரியை அழைத்து, அண்ணு ஜோசியரையும் அய்யா சாஸ்திரிகளையும் அழைத்து வரச் சொன்னாள்.

சிருங்கேரி மடத்துப் பிரதிநிதிகள் என்று தங்களைத் தாங்களே கூறிக் கொள்பவர்கள் அவர்கள். தலையாரி போன்ற ஏழைகள் அவர்கள் வீட்டிற்குச் சென்றால் முதலில் தரையில் விழுந்து நமஸ்காரம் செய்ய வேண்டும். இவ்வளவு அந்தஸ்து, கவுரவம் பார்ப்பவர்கள் தலையாரியுடன் வரச் சம்மதிப்பார்களா என்பது அவளுக்குச் சந்தேகமாக இருந்தது. பத்து நிமிடத்தில் அய்யா சாஸ்திரிகளும் பிறகு ஐந்து நிமிடம் கழித்து தலையாரியுடன் அண்ணு ஜோசியரும் வந்தார்கள். ''டேய் மாக்கா, வெளியே திண்ணையிலே உக்காரு,'' என்று நஞ்சம்மா அதிகார தோரணையில் தலையாரியிடம் சொல்லிவிட்டு புரோகிதர்கள் உட்கார பாய் விரித்தாள்.

''மகளுக்குக் கலியாணம் நிச்சயமாயிடுச்சாமே. ரொம்பவும் சந்தோஷம்'' என்றார்கள் அவர்கள்.

''அதுக்குத்தான் உங்களைக் கூப்பிட்டேன். முகூர்த்தம் வைக்கணும். என் அப்பா காசியிலேயிருந்து வந்துட்டது உங்களுக்குத் தெரியும். கல்யாண வேலைகளைக் கவனிக்க அவரை இங்கேயே இருக்கச் சொன்னா இருந்துடுவார். ஆனா நீங்க இருக்கறப்ப அவரை எதுக்காகக் கூப்பிடணும்? என்ன சொல்றீங்க?''

''சே சே அவர் எதுக்கு? நம்ம ஊர்க் கலியாணத்தை நடத்தறது எங்க பொறுப்பு. பையன் ஜாதகத்தைக் பாக்கலாம் கொடுங்க'' என்று அய்யா சாஸ்திரி அவசரப்பட்டார். நஞ்சம்மா தானியக் கணக்கு எழுதுகிறாள் என்பது மட்டும் அவருடைய அவசரத்துக்குக் காரணம் அல்ல. கண்டி ஜோசியர் தகராறு செய்து அடிதடி ஆரம்பிப்பார்.

''இருபத்தாறு நாள் கழிச்சு ஒரு முகூர்த்தம் இருக்கு. எந்த யோசனையும் செய்ய வேண்டாம். பையன் வீட்டுப் புரோகிதர் வராவிட்டாலும் கூட நாங்க ரெண்டு பேரும் சமாளிச்சிடுவோம்'' என்று அய்யா சாஸ்திரி உறுதி அளித்தார்.

''பாருங்க கலியாணத்தோட என் பையன் ராமண்ணனுக்குப் பூணூலும் போட்டுடலாம்னு இருக்கேன். அப்பிடிச் செய்யலாமா?''

இருவரும் வெகுநேரம் கணக்குப் போட்டார்கள். கலியாணத்துக்கு மறுநாள் வைத்து விடலாம் என்றூர்கள். புரோகிதரின் வேலை அவ்வளவு சுலபமாக முடிந்துவிடும் என்று அவள் நினைக்கவில்லை. மறுநாள் அவள் குருபரஹள்ளிக்குப் புறப்பட்டுப் போனாள். குண்டே கவுடர் எல்லா வீட்டுக்காரர்களையும் கூப்பிட்டுப் பேசினார். பட்டியல் போட்டபோது இருநூற்று எழுபது ரூபாய் வந்தது. ''மேற்கொண்டு முப்பது ரூபாய் நானே தர்றேன். உன் ரசீதுப் பணத்தை இப்பவே வாங்கிக்க. அந்த முன்னூறு ரூபாயை இன்னும் எட்டு நாள்லே நானே கொண்டு வந்து தர்றேன். தோட்டம் வெச்சிருக்கறவங்ககிட்ட எல்லாம் சொல்லி அஞ்சோ, பத்தோ தேங்காய் போடச் சொன்னால் ஒரு நூத்தைம்பது காய் கெடைக்கும். போருதா?''

''போறும் போறும்''

''திப்டூருக்குப் போய் சாமான் கொண்டு வர மாட்டு வண்டி அனுப்பறேன். வெல்லம் கொஞ்சம் அதிகமா வாங்கிடு.''

நஞ்சம்மா ஊருக்கு வந்து சாமான்களின் பட்டியல் தயார் செய்தாள். பையனுக்கு உறவுக்காரர்கள் இல்லாததால் பதினைந்து பேருக்கு மேல் வரமாட்டார்கள். அவளுக்கு நாகலாபுரத்துக் காரர்களைத் தவிர வேறு உறவினர் இல்லை. உள்ளூரில் உள்ள ஏழு பிராமணர்களைக் கூப்பிட வேண்டும். குருபரஹள்ளியிலிருந்து வீட்டுக்கு ஒருவரையாவது சாப்பாட்டுக்கு அழைக்க வேண்டும். இவைகளை எல்லாம் கணக்குப் போட்டு ஜவுளி, தங்கம், வெள்ளி ஆகியவைகளை வாங்குவதைப் பற்றியும் முடிவு செய்து கொண்டு வண்டியில் நஞ்சம்மா, வெங்கடேசய்யா, ராமண்ணன் ஆகிய மூவரும் திப்டூருக்குச் சென்றனர். ஜரிகைக் கரை வேஷ்டி, அங்கவஸ்திரம், சில்க் சட்டை, கோட்டு ஆகியவைகளையும் வாங்கினார்கள். ராமண்ணனுக்கும், விசுவத்துக்கும் வேண்டிய சட்டை, டிராயர், வேட்டி ஆகியவையும் வாங்கினார்கள். பூணூலுக்கு வேண்டிய ஒரு சிறிய வெள்ளித் தட்டும் வாங்கப்பட்டது. அவளுடைய கல்யாணப் புடவையே இருந்ததால் நஞ்சம்மா தனக்கு எதுவும் எடுக்கவில்லை. ஆனால் சென்னிகராயருக்கு ஒரு வேட்டியும், சட்டையும் வாங்கினாள். ''பணத்தை ரொம்பவும் சிக்கனமாகச் செலவு செய்யணும்'' என்று வெங்கடேசய்யா அறிவுரை கூறினார்.

நஞ்சம்மா தலையாரியிடம் சீட்டுக் கொடுத்து நாகலாபுரத்துக்கு அனுப்பினாள். அவன் ஜாமக் கோழி கூவும் நேரத்தில் புறப்பட்டு இரவு திரும்பி வந்தான். அங்கிருந்து யாரும் வர மாட்டார்களாம் என்ற பதிலையும் கொண்டு வந்தான்.

''அப்பிடி யார் சொன்னுங்க?''

''உங்க அப்பாதான் சொன்னுர்''

''வேறே என்ன சொன்னுர்?''

''நான் பொண் கேட்டதும் முடியாதுன்னு சொல்லிட்டா. வேறே எங்கே கொடுத்தாலும் உருப்படாது.''

தந்தையின் பிடிவாத சுபாவம் அவளுக்குத் தெரியும். அவர் சொன்னபடிதான் எல்லாம் நடக்க வேண்டும். இல்லாவிட்டால் தந்தை மகள், அன்பு, பாசம் என்பனவற்றையெல்லாம் அவரிட மிருந்து எதிர்பார்க்க முடியாது.

''பாட்டி என்ன சொன்ஞ?''

''அவங்க எங்கிட்டே பேசவே இல்லே.''

நஞ்சம்மாவுக்கு மிகுந்த வருத்தம் உண்டாயிற்று. அப்பாவின் சுபாவம் தெரியும். ஆனல் தன்னே வளர்த்து ஆளாக்கிக் கல்யாணமும் செய்வித்த பாட்டி வராவிட்டால் எப்படி? அவள் வயிறு எரிந்தது. தானே ஒரு நடை போய்க் கூப்பிட்டு வந்தால் என்ன என்று ஒரு கணம் யோசித்தாள். வண்டியில் போய் வர இரண்டு நாட்களாகும். ஆனல் கலியாணத்திற்கு இன்னும் இருப்பது பதினேந்து நாள் தான். வேலே நிறைய இருக்கிறது. விறகு கொண்டு வர வேண்டும். முறுக்கு, தேன் குழலுக்கு மாவு இடிக்க வேண்டும். மிளகாய்ப் பொடி இடிக்க வேண்டும். மேளக்காரர்களுக்குச் சொல்லி அனுப்ப வேண்டும்.

''இன்னும் ரெண்டு, மூணு நாள்லே இன்னெரு தடவை நீ போயிட்டு வா. ஆனு அவங்க இப்ப வரமுடியாதுன்னு சொன்னதை யார்கிட்டேயும் சொல்லாதே'' என்று தலேயாரி யிடம் முன்னதாகவே நஞ்சம்மா சொல்லிவிட்டாள்.

தலேயாரி மற்றொரு முறை கூப்பிட்டும் அவர்கள் வரவில்லே. அவனே நன்ருகத் திட்டி அனுப்பி விட்டார் கண்டி ஜோசியர். ''இதை வெளியே சொல்ல வேண்டாம்'' என்று மறுபடியும் நஞ்சம்மா, தலேயாரியிடம் எச்சரித்தாள். அவளுக்கும் அவளுடைய தந்தைக்கும் இடையே மனஸ்தாபம் என்று தெரிந்தால் புரோகிதர்கள் வாலாட்டுவார்கள் என்பதுதான் அவளுடைய கவலே.

நஞ்சம்மாவுக்கு வேறு உறவினர்கள் யாரும் கிடையாது. அதுவரை அவள் மாமியாரிடம் எதற்கும் சென்றதுமில்லே. அழைத்ததுமில்லே. மாமியாரும் இங்கு வருவது கிடையாது.

ஆனால் கங்கம்மாவுக்கு இங்கு நடந்து, இவர்கள் வாங்கிய சாமான்கள் எல்லாம் தெரியும். கல்யாணத்திற்கு முந்தைய சடங்கு செய்ய வேண்டி இருந்தபோது நஞ்சம்மா மாமியாரின் வீட்டிற்குப் போய் ''அம்மா நீங்களும் அப்பண்ணய்யாவும் அங்கே வாங்க. பொண் கலியாணத்தை முன்னாடி நின்னு நடத்தி வைங்க'' என்று கேட்டுக் கொண்டாள்.

''ராட்சசி, சாமான் வாங்க என்னைக் கூப்பிட்டியா? பையனை முடிவு செய்ய என்னைக் கூப்பிட்டியா? இந்த உலகத்திலே வேறே பையனு உனக்குக் கிடைக்கலே? அவனுக்குப் போய் ரெண்டாந்தாரமாக் கொடுக்கறியே!''

''அம்மா உலகத்திலே ஆயிரம் பையன்க இருக்காங்க. ஆனா அவங்களுக்குக் கொடுக்கற அளவு எங்கிட்டே பண வசதி கெடையாது. நீங்களும் அப்பண்ணய்யாவும் வாங்க'' என்று கூறி வாக்குவாதத்தை வளர்க்க விரும்பாமல் புறப்பட்டு விட்டாள்.

சென்னிகராயருக்கும் மனைவி மேல் கோபம் இருந்தது. கல்லேசனுக்குப் பெண் கொடுக்க முடியாதென்று கூறி மாமனாரின் உதவியைக் கெடுத்துக் கொண்டு விட்டாளே! கலியாணத்தை முடிவு செய்த பிறகும் மாமனாரிடம் கேட்கவில்லை. என்னையும் அல்லவா இவள் அலட்சியப் படுத்தி விட்டாள்? இதற்கு எப்படிப் பழி வாங்குவது? சென்னிகராயரின் மனம் இப்படி யோசித்துக் கொண்டிருந்தது.

அப்பண்ணய்யா அன்றே அண்ணியின் வீட்டிற்கு வந்து விட்டான். அண்ணி சொன்னபடி பெரிய அடுப்புப் போட்டான். விறகு அடுக்கி வைத்தான். ஆட்களைப் பிடித்துப் பந்தல் போடச் செய்தான். இரண்டு முறை குருபரஹள்ளிக்குப் போய் வண்டியில் காய்கறிகள் வாங்கி வந்தான். ஆனால் கங்கம்மாவோ எந்த வேலையும் செய்யவில்லை. சமையலறையில் சும்மா உட்கார்ந்திருந்தாள்.

பையன் வீட்டுக்காரர்கள் அதிகம் பேர் கிடையாது. திம்மலாபுரத்து தியாவரசய்யா, அவர் மனைவி, மகன், மருமகள், மூன்று பேரக் குழந்தைகள், மாப்பிள்ளையுடன் வேலை பார்க்கும் இரண்டு பேர், ஒரு புரோகிதர் இவர்கள்தான் மாப்பிள்ளை வீட்டார். இடையூறு ஏதும் இல்லாமல் கலியாணத்தில் எல்லாமே ஒழுங்காக நடந்து கொண்டிருந்தன.

''சென்னையா சீக்கிரம் வந்து மனையில் உட்கார்'' என்று புரோகிதர் கூப்பிட்டார். அவர் வெளியே வரவில்லை. ''நேர மாச்சு, சீக்கிரம் எந்திரிங்க'' என்று நஞ்சம்மா அவசரப்படுத்தினாள். ''உன் மக கலியாணத்தை நீயே செய்'' அங்கே வந்த ஆசிரியர் ''என்னவாச்சு சொல்லுங்க'' என்று கேட்டார்.

''இவதானே எஜமானி, சாமான் வாங்குறப்ப என்னையா கூப்பிட்டா?''

''நீங்கதான் எஜமானர். உங்க பெயர்லேதானே எல்லாம் நடக்குது. நேரமாச்சு எந்திரியுங்க''

''இங்கே பாருங்க இவ எனக்கு எந்த வேஷ்டியை வாங்கி வந்திருக்கா? ஒரு ஜோடி ஜரிகைக் கரை வேஷ்டியாவது வாங்கியிருக்கக் கூடாதா? இதைக் கட்டிக் கொண்டு நான் மனையில் உட்கார வர மாட்டேன்'' சென்னிகராயர் பிடிவாதமாக இருந்தார். கல்யாணத்திற்காகச் செய்திருந்த லட்டு, முறுக்கு, தேன் குழல் முதலிய தின்பண்டங்களை ஓர் அறையில் வைத்துப் பூட்டி அதன் சாவியை ஆசிரியர் மனைவியிடம் நஞ்சம்மா கொடுத்திருந்தாள். செய்ததோ கொஞ்சம். சம்பந்தி வீட்டார் போகும் போது அவர்களுக்குக் கொடுக்க வேண்டும். ஊரில் இருந்த சுமங்கலிகளுக்கும் கலியாணத்தில் ஓடியாடி வேலை செய்பவர்களுக்கும் கொடுக்க வேண்டும். ஆகையால் தின்பண்டங்களைப் பங்கிட்டுக் கொடுக்கும் பொறுப்பை ஆசிரியர் மனைவியிடம் நஞ்சம்மா ஒப்படைத்து விட்டாள். ''அந்த அறைச் சாவியை ஏன் எங்கிட்டே கொடுக்கலே?'' என்று சென்னிகராயர் கேட்டார். ''அதெல்லாம் பொம்பளைக செய்யற வேலே. அந்தச் சாவியை வைச்சுகிட்டு நீங்க என்ன செய்யப் போறிங்க?'' என்று கேட்டாள் நஞ்சம்மா.

''எஜமானன் நான்தான்: எங்கிட்டேதான் இருக்கணும்'' ஆசிரியர் நேரே மனைவியிடம் சென்று சாவியை வாங்கிவந்து சென்னிகராயரிடம் கொடுத்தார். அவர் அறைக் கதவைத் திறந்து உள்ளே இருந்த ஒரு கூடையில் நிறைய லட்டு முறுக்கு ஆகியவற்றைப் போட்டு அதை எல்லோர் முன்னிலையிலும் தூக்கி வந்தார். பின் அக் கூடையை கணக்கு நோட்டுகள் வைக்கும் பெட்டியில் வைத்துப் பூட்டினார்.

''இது எதுக்காக சென்னையா?'' என்று அய்யா சாஸ்திரி கேட்டார். ''கலியாணத்துக்கப்புறம் எனக்குச் சாப்பிட'' என்று சொன்னவர் மீண்டும் ''எனக்கு ஏன் ஜரிகை வேஷ்டி வாங்கி வரலே?'' என்று கேட்டுப் பழையபடி அமர்ந்துவிட்டார்.

''இங்கே பாருங்க மொத்தத்திலே இவ்வளவு செலவாப் போச்சு. நான் புதுப்புடவை எதுவும் வாங்கிக்கலே. உங்களுக்கு எதுக்கு அவ்வளவு பெரிய வேஷ்டி?''

''அப்பிடியானு நான் வர முடியாது'' முகூர்த்த நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. ''பையனை அழைச்சிட்டுப் போக ஏன் இன்னும் பொண்ணோட அம்மா, அப்பா வரலே?'' என்று பையன் வீட்டுப் புரோகிதர் சொல்லி அனுப்பினார். மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் எல்லோரும் ஆசிரியரின் வீட்டில் தங்கியிருந்தார்கள். பெண் வீட்டு சடங்கே முடியாமலிருக்கும் போது மாப்பிள்ளையை அழைத்து வருவது எப்படி? ஆசிரியர் என்ன சொல்லியும் நடக்கவில்லை. மாதேவய்யா வந்து முயற்சித்தார். பலிக்கவில்லை. புரோகிதர்களுக்கு இது பிடிக்கவில்லை. விஷயம் தெரிந்த பின் தியாவரசய்யாவே வந்து சொல்லிப் பார்த்தார். பலன் இல்லை. குண்டே கவுடர் தடியுடன் எழுந்து நின்றார். நஞ்சம்மா பயப்பட்டு அவரை அமரச் செய்தாள்.

அப்பண்ணய்யா வந்து ''டேய் சென்னையா பேசாம வர்றியா?'' ரெண்டு கொடுக்கட்டுமா?'' என்று கேட்டான்.

''இந்த முண்டைப்பயல், இப்பிடிக் கேட்கலாமா? அண்ணன்னு சொன்னு அப்பனுக்குச் சமம். அவன் என் கால்லே விழுந்து மன்னிப்புக் கேக்கணும்'' என்று சென்னிகராயர் புதிய நிபந்தனை போட்டார்.

''அப்பண்ணய்யா, நீங்க சும்மா இருங்க'' என்று நஞ்சம்மா கூறினாள். அப்பொழுது கங்கம்மா குறுக்கிட்டு ''அவன் வீட்டு எஜமான். ஜரிகை வேஷ்டி இல்லாமல் அவன் எப்பிடி வருவான்? உனக்கு அதுகூடத் தெரியாதா? இப்பவே ஒரு ஜோடி வாங்கிக் கொடு'' என்று நியாயம் பேசினாள். தன்னை ஆதரித்துப் பேச ஒரு ஆள் கிடைத்தவுடன் சென்னிகராயர் முறுக்கிக் கொண்டார்.

''உம் இப்பவே யாரையாவது திப்டூருக்கு அனுப்பி வாங்கிக் கொடு. அதுவரை நான் இங்கேயே உட்கார்ந்திருக்கறேன்''. ''பணத்தை எடுத்துக் கொடு பெட்டியிலே வைத்துப் பூட்டி சாவியை இடுப்பிலே சொருகிக்கிட்டிருக்கியே'' என்று கங்கம்மா ஆவேசமாகச் சொன்னாள். அவள் தன்னை ஆதரித்துப் பேசுகிறாள் என்று சென்னிகராயருக்கு நன்றாகப் புரிந்தது.

கோபப்பட்டால் காரியம் நடக்காது. ''கலியாணம் முடிஞ்சவுடன் திப்டூருக்குப் போய் கண்டிப்பாக வேஷ்டி

வாங்கித் தர்றேன்'' என்று நஞ்சம்மா ஆண்டவன் மேல் சத்தியம் செய்து கொடுத்தும் சென்னிகராயர் மசியவில்லை. உடனே வேஷ்டி வேண்டும் என்று ஒற்றைக் காலில் நின்றார். நஞ்சம்மாவுக்கு ஒன்றும் புரியவில்லை. பேசாமல் ஒரு பக்கம் நின்று கொண்டு கண்ணீரைத்துடைத்துக் கொண்டாள். மாதேவய்யாவுக்கு விஷயம் தெரிந்தவுடன் கோவிலுக்குப் போய் விட்டு வந்து உரத்த குரலில் சொன்னார். ''சென்னையா இருபது ரூபாய் இருக்குது, இதை வைச்சுக்குங்க பெறகு வேஷ்டி வாங்கிக் கலாம்.''

சென்னிகராயர் வெளியே வந்து ''எனக்குப் பணம் வேண்டாம், வேஷ்டிதான் வேணும்'' என்று அடம் பிடித்தார். தியாவரசய்யா நஞ்சம்மாவைத் தனியே கூப்பிட்டு, ''நீ ஒரு வேலை செய். மாப்பிள்ளைக்காக வாங்கியிருக்கிற வேஷ்டியை இவருக்குக் கொடுத்துடு. நாங்க பையனுக்குக்-கொடுக்கறதுக்காக வாங்கியிருக்கிற வேஷ்டியை உங்கிட்டே தர்றேன். அதை நீ மாப்பிள்ளைகிட்டே கொடுத்துடு. நீங்க எனக்காக எதுவும் கொண்டு வரலையான்னு பையன் எங்கிட்ட கேட்க மாட்டான்''

''மாமா அப்பிடியே செய்யலாம். ஆனா நமக்கு மரியாதை வேண்டாமா? எப்பிடியோ ஒரு நாள் அவர் நம்ம பொண்கிட்டே உங்க வீட்டுக்காரங்க வெறும் வேஷ்டி கொடுத்தாங்கன்னு சொன்னா சங்கடமாய்ப் போகாதா?.''

''அவன் அப்பிடிச் சொல்றவன் அல்ல. ஒரு வேளை சொல்லிட்டாலும் பொறுத்துக்கணும். உன் புருஷன் விஷயத்தையெல்லாம் அவங்கிட்டே சொல்லியிருக்கேன். இதுதான் வழி. நான் சொல்றபடி செய்.''

நஞ்சம்மா பையனுக்காக வாங்கி வைத்திருந்த வேஷ்டியைக் கணவனிடம் கொடுத்துக் கட்டிக் கொள்ளச் சொன்னாள்.

''ஒரு வேஷ்டியா, ஜோடியா?''

''ஜோடிதான், பயப்பட வேண்டாம்''

ராயருக்குத் திருப்தியாகி விட்டது. எழுந்து ஒன்றை உடுத்திக் கொண்டு மற்றதைக் கம்பீரமாகப் போர்த்துக் கொண்டார். ஒரே கல்லில் இரண்டு மாங்காய்களை வீழ்த்தி விட்டார். மனைவியைப் பழி தீர்த்தாயிற்று. உடுத்த ஜரிகை வேஷ்டியும் கலியாணத்திற்குப் பிறகு சாப்பிட பட்சணமும் கிடைத்து விட்டது.

பெண்ணின் தகப்பனார் புதிய ஜரிகை வேஷ்டி உடுத்திக் கொண்டும், மாப்பிள்ளை சாதாரண வேஷ்டி கட்டிக் கொண்டும் திருமணம் முடிந்தது. சரியாக முகூர்த்த நேரத்தில் ஷேக்தார் சைக்கிளில் வந்து சேர்ந்தார். மாப்பிள்ளை உடுத்தியிருந்த வேஷ்டியையும் மாமனாரின் வேஷ்டியையும் ஷேக்தார் கவனித்து தியாவரசய்யாவைத் தனியே அழைத்து விசாரித்தார். அது சென்னிகராயரின் கல்யாணத்தில் வாங்கிய பழைய வேட்டி என்று சொல்லி விஷயத்தை தியாவரசய்யா மறைத்து விட்டார்.

தாலி கட்டும் நேரத்தில் வீட்டின் முன்பு ஒரு வில் வண்டி வந்து நின்றது. அதிலிருந்து இறங்கிய அக்கம்மாவைக் கண்ட ராமண்ணன் ஓடிப் போய்த் தன் தாயிடம் கூறினான். அதுவரை மனம் குழம்பி நின்ற நஞ்சம்மாவிற்குப் பெருத்த ஆறுதல்.

''நீ கண்டிப்பாகப் போகக்கூடாதுன்னு கண்டியும், கல்லேசனும் சொன்னாங்க. பேத்தியோட கலியாணத்துக்கு நான் போயே தீருவேன்னு பிடிவாதமா வந்துட்டேன். இந்தா இதைப் பார்வதிகிட்டே கொடு'' என்று சொல்லிக் கொண்டே அக்கம்மா தன் மடியிலிருந்து ஒரு தங்க சாமந்திப் பூவை எடுத்துக் கொடுத்தாள். அக்கம்மா சுமங்கலியாய் இருந்த போது அதை வைத்துக் கொண்டிருந்தாள். அவள் உள்ளே போய் ஓர் பட்டுப் புடவை உடுத்திக் கொண்டு முன்னால் வந்து உட்கார்ந்து கொண்டாள். கங்கம்மா அவளிடம் பேசவில்லை. அக்கம்மாவும் பேசாமல் இருந்தாள். நஞ்சம்மா ஏதோ ஒரு வேலையாக உள்ளே வந்த போது அக்கம்மா அவளிடம் தாழ்ந்த குரலில் ‘‘நீ நல்ல வேலை செஞ்சே. இந்தப் பையன் ராஜகுமாரன் மாதிரி இருக்கான். இங்கிலீஷ் பள்ளிக்கூடத்திலே வாத்தியார் வேலைன்னா சாமானியமா? ரொம்பவும் சின்ன வயதுதான். ஒரு கொழந்தை இருந்தா என்ன?'' என்று புகழ்ந்து பேசினாள்.

முகூர்த்தம் முடிந்தது. சூரிய நாராயணனின் மகள் விசுவனுடன் விளையாடிக் கொண்டிருந்தாள். அவங்க ரெண்டு பேருக்கும் இப்பவே கல்யாணம் செஞ்சிடலாம்'' என்று ஆசிரியர் வேங்கடேசய்யா கேலி செய்தவுடன் விசுவன் வெட்கப்பட்டுக் கொண்டு ஓடி விட்டான். ''இன்னிக்கே செஞ்சிடுங்க. அவளை இங்கேயே விட்டுட்டுப் போறேன்'' என்று சூரிய நாராயணன் வேடிக்கையாகச் சொன்னான்.

கல்யாணத்தன்று மாலையில் ஆசிரியரும் அவருடைய மனைவியும் நஞ்சம்மாவைத் தனியே அழைத்து ''நீங்க தப்பா எடுத்துக்க வேண்டாம். பொண்ணு பெரியவளாயிட்டான்னு பையன் வீட்டுக்காரங்களுக்குத் தெரிஞ்சு போச்சு'' என்றார்கள்.

இதைக் கேட்டவுடன் நஞ்சம்மா கலவரம் அடைந்தாள். ''சூரிய நாராயணன் திப்டூர், தும்கூர் போல பெரிய ஊர்களைப் பாத்தவர், ஒரு தடவை மைசூருக்கும் போயிருக்கிறார். பெரிய ஊர்கள்லே பதினாறு, பதினேழு வயசான பெறகுதான் கல்யாணம் செய்யறாங்க. பெங்களூர்லே கல்யாணம். நாகவல்லி சாந்தி முகூர்த்தம் எல்லாத்தையும் ஒரே நாள்ளே செய்யறாங்க. எங்கிட்டே சூரிய நாராயணன் சொல்லியிருக்கிறார். நாளைக்கு ராத்திரி சாந்தி முகூர்த்தம் முடிஞ்ச பெறகு பொண்ணையும் அனுப்பிட்டா கூட்டிட்டு போயிடுவாங்க. அப்பறம் நீங்க அதுக்காகத் தனியே செலவு செய்ய வேண்டாம். இப்பவே செலவு செஞ்சிட்டா நல்லது. வேணும்னு நான் நாளைக்கு கம்பனகெரெய்க்குப் போய் ஒரு ஜோடி மெத்தை வாங்கி வர்றேன்'' என்றார் ஆசிரியர்.

மகளை விட்டுப் பிரிய வேண்டும் என்று நினைத்தவுடன் அவளுடைய உள்ளம் கலங்கியது. மனதில் மற்றொரு பயமும் ஏற்பட்டது. பெண் பெரியவள் ஆன விஷயத்தை அதுவரை அவள் யாரிடமும் சொல்லி இருக்கவில்லை. ஜோசியரோ அல்லது வேறு யாரோதான் பையன் வீட்டாரிடம் சொல்லி இருக்க வேண்டும். நல்ல வேளையாக அதை அவர்கள் தவறாக எடுத்துக் கொள்ளவில்லை. இப்பொழுது சாந்தி முகூர்த்தம் செய்ய ஒப்புக் கொண்டால் பெண் பெரியவளானதை ஒப்புக் கொண்டது போல் ஆகிவிடும். அதை இத்தனை நாளும் மறைத்து வைத்ததை எல்லோரும் தெரிந்து கொள்வார்கள். தெரிந்தால் என்ன என்பதைக் காட்டிலும் தெரியக்கூடாது என்னும் பழைய பயம் அவளிடம் நிரம்பி இருந்தது. உடனடியாக அவளால் பயத்தைப் போக்கிக் கொள்ள முடியவில்லை. கல்யாணம் முடிந்து இரண்டு மூன்று மாதங்களுக்குப் பின் ஒரு தடவை மாதவிலக்கு சமயத்தில் சீர் செய்து விட வேண்டும். பதினாறாவது நாள் சாந்தி முகூர்த்தம் செய்து அனுப்பி விடுவதுதான் புத்திசாலித்தனம் என்று எண்ணிக் கொண்டு இருந்தாள்.

''பாருங்க. பொண்ணு பெரியவளாயிட்டது உண்மைதான். நீங்க சொல்றது போல பெரிய ஊர்கள்லே நடக்கலாம். ஆனா நாம செஞ்சா கஷ்டமாப் போயிடும். இந்த ஊர் புரோகிதர்களோட விஷயம் நமக்கு நல்லாத் தெரியும். எங்க வீட்டுக்காரரைப் பத்தி உங்களுக்குத் தெரியும். நான் அவர்கிட்ட இது வரை சொல்லவில்லே. இப்ப அவருக்குத் தெரிஞ்சா கண்டபடி பேசி ரகளை செய்வார். மூணு மாசத்துக்கப்புறம் செய்யலாம்'' என்று நஞ்சம்மா அவர்களுக்குப் பதில் சொன்னாள்.

''அப்பிடியே செய்யுங்க. அவர் கட்டாயப்படுத்தலே. உங்களுக்குத்தான் ரெட்டைச் செலவுன்னு சொன்னார். அதைத் தவிர இன்னமும் கொழந்தையையும் பார்த்துகிட்டு பள்ளிக் கூடம் போறதுன்னு கஷ்டம்தான்.'' ''கொழந்தையை எங்க வீட்டிலே விட்டுட்டுப் போகச் சொல்லுங்க'' சூழ்நிலையை விளக்கிச் சொன்னவுடன் சூரிய நாராயணன் ஒப்புக் கொண்டான். கிராமத்தில் உள்ள நிலைமை அவனுக்குத் தெரியும். திருமணமானவுடன் குழந்தையை விட்டுச் செல்ல அவனுடைய மனம் ஒப்புக் கொள்ளவில்லை. நடைமுறைக்கு நன்றாக இருக்காது என்று முடிவு செய்தான்.

மறுநாள் நாகவல்லி சடங்கு முடிந்து பெண்ணை ஒப்படைக்கும் போது நஞ்சம்மா அக்கம்மாவைப் போல் ராமண்ணனும் அழுது விட்டான். அவர்கள் இருவரும் ஒன்றாக சேர்ந்து பாசத்துடன் வளர்ந்தவர்கள், ''அம்மா பார்வதி நம்ம வீட்டிலேயிருந்து போயிடுவாளா?'' என்று ராமண்ணன் கேட்டான்.

''பொண்ணுதானே?'' அம்மா பதில் சொன்னாள். திடீரென்று அப்பண்ணய்யாவுக்குக் கண்ணீர் வந்து விட்டது. அவன் அதுவரை அந்த வீட்டிற்கு வந்தது இல்லை. அவன் பார்வதியிடமும் அதிகமாகப் பேசியதும் இல்லை. பழகியதும் இல்லை. அவள் கீரைப் பாத்திக்கு தண்ணீர் ஊற்றும் போது, ''எனக்கும் கொஞ்சம் தண்டங்கீரை கொடுப்பியா?'' என்று அவன் கேட்பதுண்டு, ''உங்களுக்கு வேணுங்கற அளவு எடுத்துக் கோங்க'' என்று அவள் தாராள மனதுடன் சொல்வாள். அவன் தானாகவே கல்யாண வீட்டில் எல்லா வேலைகளையும் தலைமேல் போட்டுக் கொண்டு செய்தான். நான்கு நாட்களாக இரவு பகலாக வேலை செய்தவன் அவன். அவன் என்ன செய்ய வேண்டும் என்பதை அண்ணியும் ஆசிரியரின் மனைவியும் அவ்வப் போது அவனுக்குச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். சோறு வடிப்பதிலிருந்து இலை எடுக்கும் வரை எல்லா வேலைகளையும் அவன் பம்பரமாகச் சுழன்று செய்தான். பெண்ணை ஒப்படைத்த பிறகு பார்வதி அவனருகே வந்து அவன் காலைத்தொட்டு நமஸ்காரம் செய்த போது அவன் பொல பொலவென்று உகுத்த கண்ணீர் அவளுடைய தலையில் விழுந்தது.

மறுநாள் மாப்பிள்ளை வீட்டாரை அனுப்பி வைக்கும் பொழுது ஊருக்கு வெளியே இருந்த அம்மன் கோவில் வரை மாப்பிள்ளையும் பெண்ணும் கை பிடித்துக் கொண்டு நடந்து

போனார்கள். அவர்களுக்கு முன்னே மேளக்காரர்கள். பின்புறம் மற்ற எல்லோரும் வந்து கொண்டிருந்தார்கள். ரத்னாவைக் கையில் பிடித்துக் கொண்டு அவர்களுடன் நஞ்சம்மாவும் வந்து கொண்டிருந்தாள். அம்மன் கோவில் பூசை முடிந்ததும் மாப்பிள்ளையும், பெண்ணும் சுவாமியை வணங்கிவிட்டு வெளியே வந்தனர். சூரிய நாராயணன் வண்டியில் ஏறும் போது அவன் பார்வதிக்கு மட்டும் கேட்கும் தாழ்ந்த குரலில், ''மூணு மாதம் கழிச்சு வந்து அழைச்சிட்டுப் போறேன்'' என்றான். அவள் தலை குனிந்து பேசாமல் இருந்தாள். அவனும் அவளிடமிருந்து பதிலை எதிர்பார்க்கவில்லை.

சூரிய நாராயணன் தன்னுடைய மாமனார், மாமியார் புரோகிதர், வெங்கடேசய்யா ஆகியோருக்கு நமஸ்காரம் செய்தான். அதற்குள்ளாகவே அவனுக்கும் மாதேவய்யாவுக்கும் இடையே ஒரு பிடிப்பு ஏற்பட்டு விட்டது. பார்வதி தியாவரசய் யாவின் வீட்டுக்காரர்களுக்கு நமஸ்காரம் செய்தாள். பிறகு மாப்பிள்ளை வீட்டார் எல்லோரும் வண்டியில் ஏறிக் கொண்டார் கள். சூரிய நாராயணன் திம்மலாபுரத்துக்குப் போய் அங்கிருந்து பாளேகெரெய்க்குச் சென்றான்.

# பதின்மூன்று

## 1

திருமணம் விமரிசையாக நடந்ததைப் பற்றி நஞ்சம்மாவுக்கு மிகுந்த சந்தோஷம். அதற்காக உதவி செய்தவர் களை அவள் நன்றியுடன் நினைத்துக் கொண்டாள். மாப்பிள்ளை வீட்டார் அதிகம்பேர் வராததால் அரிசிபருப்பு, மிளகாய்ப்பொடி முதலியவை அதிகமாக மீந்து விட்டன. கணவனின் பார்வையில் அவை தட்டுப்பட்டால் தினசரி அரிசிச்சோறும், ரசமும் செய்யச் சொல்லி ரகளை செய்வார். மூன்று மாதங்களில் சாந்தி முகூர்த்த சீர் செய்ய வேண்டும். அந்தச் சாமான்கள் அப்போது தேவைப்படும் என்று எல்லாவற்றையும் மூடி வைத்தாள். மிஞ்சியிருந்த அரை டப்பா எண்ணெயையும் மூடி போட்டு ஒரு பக்கமாக, மறைவாக வைத்தாள். சீர் செய்வதற்காக மறுபடியும் சாமான்கள் வாங்க வேண்டி இருந்தால் இருபது ரூபாய்க்கு வாங்கினால் போதும். மெத்தை தலையணைக்கு ஐம்பது ரூபாய் ஆகும். மகளுக்குக் கொடுத்தனுப்ப பாத்திரங்கள் வேண்டும். அவளுடைய பாத்திரங்கள் எல்லாம் கங்கம்மாவின் வீட்டில்

இருந்தன. ஆனால் அவரிடம் சென்று கேட்டால் கிடைக்காது. புதிதாக வாங்கப் பணம் இல்லை. வீட்டில் இருக்கும் பாத்திரங்களி லேயே சிலவற்றைக் கொடுத்து அனுப்ப வேண்டும். பிறகு கொஞ்சம் கொஞ்சமாகக் கொடுத்துக் கொள்ளலாம். சூரிய நாராயணன் பாத்திரம் பண்டம் கொடுக்கவில்லை என்று கேட்கக் கூடியவன் அல்ல. இவ்வாறு நஞ்சம்மா சிந்தனையோட்டத்தில் திளைத்தாள்.

பார்வதி கை நிறையக் கறுப்பு வளையல்களைப் போட்டுக் கொண்டிருந்தாள். கழுத்தில் கருகுமணி, காதுகளில் பெரிய வெள்ளைக்கல் தோடுகள். புதிதாக மூக்கு குத்தியிருந்ததால் மூக்குத்தி எடுப்பாக இருந்தது. அவளுடைய முகம் அவ்வளவு வட்டமானது என்று தோடு மூக்குத்தி அணியும் வரை நஞ்சம்மாவே எண்ணியிருக்கவில்லை. கால் விரல்களில் மெட்டி.

ஒரு நாள் நஞ்சம்மாவின் வீட்டுக்கு வந்திருந்த சர்வக்கா நஞ்சம்மாவிடம் ''பார்வதி இப்ப எவ்வளவு அழகா இருக்கா! அவளை ஏரிப்பக்கம் அனுப்ப வேணும்'' என்று சொன்னாள்.

''தோடு, மூக்குத்தி போட்டுகிட்டப்புறம் அக்கா அழகா இருக்கா. ஷேக்தார் பெண்டாட்டியைப் போல கையிலே தங்க வளையல் போட்டுட்டா இன்னமும் நல்லா இருக்காதா?'' என்று கேட்டான் ராமண்ணன். ''நீ ஷேக்தார் ஆனப்புறம் அதையும் செஞ்சு போடலாம்'' என்று பதில் சொன்னாள் தாய்.

பார்வதிக்குத்தன் முகத்தைக் கண்ணாடியில் பார்க்கும் போதெல்லாம் தன் முகமே அவளுக்கு மாறுதலாய்த் தோன்றி யது. இன்னும் இரண்டு மூன்று மாதங்களில் தாய் வீட்டை விட்டுப் புறப்பட வேண்டும் என்ற உணர்வு வரும்போதெல்லாம் அவளுடைய மனம் கலங்கியது. ''உன் புருஷன் ரொம்பவும் நல்லவர். இவ்வளவு தூரம் அனுசரிச்சு யார்தான் கல்யாணம் செஞ்சுக்குவாங்க? உனக்கு சமையல், வீட்டு வேலை எல்லாம் நல்லாத் தெரியும். அந்தக் கொழந்தையை நல்லாக் கவனிச்சுக்க. தாய் இல்லாத கொழந்தை கண்ணுலே தண்ணி விட்டா நமக்குத் தான் பாவம் வந்து சேரும்'' என்று ஒரு நாள் நஞ்சம்மா தன் மகளுக்குப் புத்திமதி சொன்னாள்.

''நான் அப்படிச் செய்வேனா?''

''கொழந்தை அழகா இருக்கா. அப்புறம் நம்ம விசுவனுக்கே கல்யாணம் செஞ்சிடலாம், இல்லியா?'' என்று ராமண்ணன் கேட்டான்.

''இவன் ரொம்பவும் போக்கிரி. ஒழுங்காப் படிச்சு ஹைஸ்கூலாவது முடிக்காட்டா பார்வதி வீட்டுக்காரர் பொண்ணு கொடுப்பாரா?''

''இல்லேயம்மா! போக்கிரிகளுக்கு அறிவு அதிகம்னு எங்க ஹெட்மாஸ்டர் சொன்னார்''

''நீ சாதுவா இருந்தாலும் உங்க பள்ளிக்கூடத்துலே முதல் மார்க் வாங்கறியே!'' என்று அக்கா இடைமறித்தாள்.

''போக்கிரியா இருந்தா இன்னும் அதிக கெட்டிக்காரனா இருந்திருப்பேனே, என்னவோ'' என்று பதிலளித்தான் தம்பி.

அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் வேளையில் விசுவன் மாதேவய்யாவின் கோவிலில் அவருடைய வெல்லப் பானையைக் காலி செய்து கொண்டிருந்தான்.

கல்யாணம் முடிந்து ஒருமாதம் ஆகிவிட்டது. சூரிய நாராயணன் தன்னுடைய செளக்கியத்தைப் பற்றி மாமனாருக்கு ஒரு கடிதமும் எழுதிவிட்டான். நஞ்சம்மாவுக்கு ஒரு விஷயம் ஞாபகம் வந்தது. பார்வதியின் கல்யாணம் நல்லபடியாக நடந்து முடிந்தால் கிராம தேவதையின் கோவிலில் தயிர் சாதமும், வெல்லச்சாதமும் படைப்பதாகப் பிரார்த்தனை செய்துகொண்டிருந்தாள். கிராம தேவதை காளம்மனுக்குப் பிரார்த்தனை செய்து கொண்டதை அதிக காலம் ஒத்திப் போடக்கூடாது என்று நினைத்து அதைச் சீக்கிரத்திலேயே செய்துவிட வேண்டும் என்று முடிவு செய்தாள். அதைச் செய்வதற்கு அதிகசெலவும் கிடையாது. வீட்டில் அரிசி, பருப்பு, வெல்லம், தேங்காய், தயிர் முதலிய எல்லாமே இருந்தன. அம்மனுக்குச்சாத்த வேண்டிய ஒரு ரவிக்கைத்துண்டும் வீட்டிலேயே இருந்தது. ஆகையால் வெள்ளிக் கிழமை செய்வதாக முடிவு ஆயிற்று. பள்ளிக்கு லீவு போட்டு விடுமாறு நஞ்சம்மா ராமண்ணனிடம் சொன்னாள். ''அம்மன் கோவிலுக்குப் போகணும் வீட்டிலே இருங்க'' என்றவுடன் சென்னிகராயர் உடனே ஒப்புக் கொண்டார். வெல்லச்சாதம், தயிர் சாதம், என்றால் அவருக்கு உயிர்.

கங்கம்மாவும், அப்பண்ணய்யாவும் எட்டு நாட்களாக ஊரில் இருக்கவில்லை. கண்டகி கிராமப் பக்கமாகப் போயிருந்தார்கள். வெள்ளிக்கிழமை கோவிலுக்கு வருவதாக அம்மன் கோவில் பூசாரியிடம் நஞ்சம்மா சொல்லி விட்டாள். அன்று அதிகாலையிலேயே எழுந்து வென்னீர் போட்டாள். அவள் ஸ்நானம் செய்து விட்டுச் சமையலறைக்குப் போன பிறகு பார்வதி குளித்தாள். பிறகு விசுவனையும் குளிப்பாட்டினாள். ராமண்ணன் குளித்து விட்டு வந்த பிறகு, சென்னிகராயர் குளிக்கப் போனார்.

நஞ்சம்மா மூன்று படி அரிசி வடித்து, பாதி சாதத்தை வெல்லப் பாகில் போட்டு ஏலக்காய், தேங்காய், நிலக்கடலை ஆகியவற்றை யும் அத்துடன் கலந்து பக்குவப்படுத்தினாள். மீதியிருந்த சாதத்தில் தாளிப்பு செய்து கொட்டி கருவேப்பிலை ஆகியவற்றையும் போட்டுத் தயிருடன் கலந்து தயிர் சாதம் செய்தாள். இரண்டை யும் இரண்டு தவலைகளில் போட்டுத் துணியால் மூடி இறுகக் கட்டினாள். தட்டில் மஞ்சள் குங்குமம், பூ முதலியவற்றை எடுத்து வைத்தாள். பார்வதியின் கணவன் வாங்கித் தந்திருந்த எண்பது ரூபாய் புடவையை உடுத்திக் கொள்ளும்படி பார்வதியிடம் கூறினாள். மஞ்சள் பூசிய முகம், நெற்றியில் குங்குமம், சீவிப் பின்னிய கூந்தல், முடிந்திருந்த பூ, தோடு, மூக்குத்தி, கால் மெட்டி, விலையுயர்ந்த புடவை, இடதுகையில் மஞ்சள் குங்குமத் தட்டு. பார்வதி தெருவில் நடந்து சென்ற போது அவளையே வைத்த விழி மாறாமல் ஜனங்கள் பார்த்துக் கொண்டிருந்தனர்.

பூசாரி காளன் அவர்களுக்காகக் காத்துக் கொண்டிருந்தான். நஞ்சம்மா மகளை கர்ப்ப கிரகத்தின் உள்ளே அழைத்துச் சென்று அவளை அம்மன் பாதங்களுக்குப் பூஜை செய்ய வைத்தாள். மஞ்சள், குங்குமம், செண்பகம், மல்லிகைப் பூக்களைப் போட்டு பூஜை செய்த போது எல்லோரையும் விழுங்கக் கூடிய காளியைப் போல் காளம்மன் தோற்றமளித்தாள். அவள் காளம்மனின் மடியில் ரவிக்கைத் துண்டை வைத்தாள். பூசாரி புதிதாக ஊது பத்தி பத்த வைத்த பிறகு ஆரத்தி செய்தார். ஆரத்தியை ஒற்றிக் கொண்டபின் எல்லோரும் காளம்மன் முன் விழுந்து வணங்கினர். காளனுக்கும் காணிக்கை கொடுத்தார்கள். கொண்டு வந்திருந்த சாதத்தில் கொஞ்சம் எடுத்துப் பெரிய இலையில் போட்டுக் கொடுத்து விட்டு வெளியே வந்தனர். பிரசாதம் வாங்குவதற்கு வந்தவர்களுக்கு ஒவ்வொரு பிடி பிரசாதம் கொடுத்துவிட்டுக் கோவிலுக்குப் பின்னால் இருந்த குளத்திற்குப் போனார்கள். நஞ்சம்மா கரையில் உட்கார்ந்து கொண்டு மற்ற எல்லோருக்கும் பிரசாதம் கொடுத்தாள். சென்னிகராயர் உட்பட எல்லோரும் தாராளமாகச் சாப்பிட்டார்கள். சென்னிகராயர் ஏரிப்பக்கம் போனார். தாயும் குழந்தைகளும் கோவிலுக்கு வந்து திண்ணையில் சற்று நேரம் அமர்ந்துவிட்டு கதவுத்துவாரத்தின் வழியாக மற்றொரு முறை அம்மனைத் தரிசித்து விட்டு வீட்டுக்குப் புறப் பட்டார்கள். திரும்பி வரும்பொழுது சில பெண்கள் ''அம்மா, கல்யாணம் முடிஞ்ச பெறகு பெரிய புடவையுடுத்தி ஏன் இவளை வெளியே கூட்டி வந்திங்க? கண் படாதா?'' என்று நஞ்சம்மா விடம் கேட்டார்கள். அது உண்மையாக இருக்கும் என்று அவளுக்குத் தோன்றவில்லை.

அன்று மதியம் வீட்டில் சமையல் செய்யவில்லை. கோவிலி லிருந்து கொண்டு வந்திருந்த சாதங்களையே சாப்பிட்டார்கள். வீட்டிற்கு வந்தவுடன் பார்வதி பெரிய புடவையை அவிழ்த்து விட்டு சாதாரணப் புடவையை உடுத்திக் கொண்டாள். நெற்றியில் குங்குமம், காதில் தோடு, தலையில் பூ ஆகியவை அப்படியே இருந்தன. அவளுக்குத் தூக்கம் வருவது போல் இருந்தது. பாயை விரித்துப் படுத்துக் கொண்டாள். ராமண்ணன் இங்கிலீஷ் பாடம் எழுதிக் கொண்டிருந்தான். விசுவன் பள்ளிக் கூடத்திற்குப் போய்விட்டான். சென்னிகராயர் மாதேவய்யா வின் திண்ணையில் படுத்துக் கொண்டார். நஞ்சம்மாவுடன் பேச சர்வக்கா வந்திருந்தாள். பாயில் படுத்திருந்த பார்வதியைப் பார்த்தவுடன் தன் மகள் ருத்ராணியின் நினைவு அவளுக்கு வந்தது. அவள் உயிரோடு இருந்தால் கல்யாணம் நடந்து ஒரு குழந்தையாவது பிறந்திருக்கும் என்று நினைத்துக் கொண்டாள்.

சிறிது நேரத்தில் பார்வதி விழித்துக் கொண்டாள். அவளுடைய கண்கள் சிறிது சிவந்திருந்தன. ''அம்மா! உடம் பெல்லாம் குளிருது. குளிர் காயணும் போல் இருக்குது'' என்று சொல்லிக் கொண்டே எழுந்து உட்கார்ந்தாள். கோடைக் காலம் நெருங்கிக் கொண்டிருந்தது. எப்படிக் குளிர முடியும்? நஞ்சம்மா பார்வதியின் நெற்றியில் கையை வைத்துப் பார்த் தாள். குளிர் காய்ச்சல். சர்வக்கா உடனே சொன்னாள். ''இன்னிக்குக் காலையிலே ஏன் இவளை புது சேலை கட்டி வெளியே கூட்டிப் போனீங்க? ஜனங்களின் கண்ணு ஒரே மாதிரியா இருக்காது. உடனே திருஷ்டி சுத்திப் போடுங்க.'' நஞ்சம்மாவும் கலக்கத்துடன் பார்வதிக்கு திருஷ்டி சுற்றி அடுப்பில் போட் டாள். ''நீங்களே பாத்துக்கங்க. எப்பிடிப் படபடன்னு பொரியுது'' என்று சர்வக்கா தன் பேச்சை நியாயப்படுத்தினாள். பார்வதி உட்கார்ந்து கொண்டேயிருந்தாள். மாலையில் சர்வக்கா போன பிறகு நஞ்சம்மா சமையல் செய்வதற்காக உள்ளே போனாள். பார்வதி கம்பளிப் போர்வையைப் போர்த்துக் கொண்டு சுருண்டு படுத்துக் கொண்டாள். ராமண்ணன் பார்வதியின் தலைமாட்டில் உட்கார்ந்திருந்தான். இரவு நேரத்தில் குளிர் காய்ச்சல் சிறிது அதிகமாயிற்று. சமையல் செய்த நஞ்சம்மா, சமையல் அடுப்பிலேயே சீரகம், குறுமிளகு, லவங்கம், துளசி முதலியவற்றைப் போட்டுக் கஷாயம் செய்து மகளுக்குக் கொடுத்தாள். ''பெரிய புடவையை உடுத்துக் கொண்டு வெளியே பார்வதியை அழைத்துச் சென்றது தப்பு. எல்லோ ருடைய கண்களும் ஒரே மாதிரியாக இருக்காது'' என்பது அவளுடைய மனதில் நன்கு பதிந்தது.

இரவு முழுவதும் பார்வதிக்குக் காய்ச்சல் தொடர்ந்து கொண்டேயிருந்தது. ''உடம்பு வலிக்குது'' என்று சொல்லிக் கொண்டேயிருந்தாள். முகம் சோர்ந்து கண்கள் சிவந்துவிட்டன. நஞ்சம்மா மறுபடியும் கஷாயம் கொடுத்தாள். பார்வதி அதி காலையில் அயர்ந்து படுத்துவிட்டாள். நஞ்சம்மாவும் சற்றுத் தூங்கினாள். காலையில் அவள் விழித்துப் பார்த்த பொழுது நன்கு விடிந்து விட்டது. பார்வதியின் காய்ச்சல் சற்று இறங்கினாற் போல் தோன்றினாலும் முழுதும் குறையவில்லை. உடம்பு, கை, கால் எல்லாம் வலிக்கிறது என்று முனகிக் கொண்டேயிருந்தாள். ''காய்ச்சல் வேகத்திலே அப்படியிருக்கு காய்ச்சல் எறங்கினா சரியாப் போயிடும். போர்வையை இழுத்துப் போட்டுப் படுத்துக்க. வெது வெதுப்பா இருக்கும், வென்னீர் காச்சறேன். பெறகு நீ முகம் கழுவிக்கலாம்'' என்று சொல்லி விட்டு நஞ்சம்மா நகர்ந்தாள். ராமண்ணன் இன்னமும் தூங்கிக் கொண்டிருந்தான். எப்பொழுதும் கோழி கூவும் நேரத்தில் எழுந்து மண்ணெண்ணெ விளக்கைப் பற்ற வைத்துப் படித்துக் கொண்டிருக்கும் அவன், இன்னமும் தூங்கிக் கொண்டிருந்தான். ''கண்ணா! இன்னும் எந்திரிக்கலையா?'' என்று நஞ்சம்மா கேட்டாள். அவன் போர்வைக்குள் முடங்கியபடியே ''எனக்குக் காச்சலடிக்குது'' என்று முனகினான். அவள் திகிலடைந்து போர்வையை விலக்கிப் பார்த்தாள். பார்வதியைப் போலவே அவனுடைய கண்களும் சிவந்து, முகம் சோர்ந்திருந்தது. இரு வருக்கும் ஏன் ஒரே நாளில் குளிர் காய்ச்சல் வந்துவிட்டது என்பதை யோசித்தவாறு நஞ்சம்மா அடுப்பு மூட்டினாள். வெந்நீரில் இருவரையும் முகம் கழுவச் செய்து அடுத்தடுத்து படுக்கையை விரித்து படுக்கச் செய்தாள். அரிசிக் கஞ்சி செய்து சாப்பிடக் கொடுத்தாள். அவர்கள் வேண்டாமென்று சொன் னாலும் வாய் வழிய ஊற்றினாள். பிறகு இஞ்சி மிளகு கஷாயம் செய்து கொடுத்தாள். ''குளிர் காய்ச்சல் வந்து போய்விடும். ஆனால் ராமண்ணாவிற்கு பரீட்சை நெருங்கிக் கொண்டிருக்கிறதே! பார்வதிக்குத் திருஷ்டி பட்டிருக்கலாம். ஆனால் ராமண்ணா விற்கு என்ன வந்தது? அவன் வேஷ்டி கட்டிக் கொண்டு துண்டு போர்த்துக் கொண்டுதானே கோவிலுக்கு வந்தான்? கலியாணத் தில் மிகவும் உழைத்தான். அதற்குப் பிறகு வழக்கம் போல தினசரி வெயிலில் நடந்து பள்ளிக்குப் போய் வருகிறான். இன்னமும் ஒரு மாதத்தில் பரீட்சை முடிந்து விட்டால் கோடை விடுமுறை வந்துவிடும். ஒன்றரை மாதம் சௌகரியமாக இருக்கலாம்'' என்று பலவாறாக நஞ்சம்மாவின் சிந்தனை ஓடியது.

மாலையில் பார்வதிக்கு மறுபடியும் காய்ச்சல் அதிகமாயிற்று. கண்கள் காளம்மனின் கண்களைப் போல் சிவந்து விட்டன. இரு காதுகளிலும் பளபளக்கும் தோடு, மூக்கில் மின்னிக் கொண்டிருந்த மூக்குத்தி, அவளுடைய முகத்தைப் பார்க்க அச்சமடையச் செய்தன. அந்தத் தோடுகளையும் மூக்குத்தியையும் நஞ்சம்மா கழற்றி வைத்தாள். இரவு நேரத்தில் பார்வதி நஞ்சம்மாவிடம் ''என் வலது கால் நெரி கட்டியிருக்கு'' என்றாள். கலியாணத்திற்குப் பிறகு அதிக வேலையும் பார்வதி செய்யவில்லை. அதிகம் நடக்கவுமில்லை. ஊருக்குள் கோவிலுக்குப் போய் வந்தால் கால் வலிக்குமோ? பார்வதி பத்து மைல் நடந்தாலும் ஓய்ந்து விடக் கூடியவள் அல்லவே! சரி எப்படியோ ஆகட்டும்! என்று நினைத்தவாறு காலுக்கு உப்பு ஒத்தடம் கொடுத்தாள் நஞ்சம்மா. மறுபடியும் கஞ்சி, கஷாயம் கொடுத்துப் படுக்க வைத்தாள். ராமண்ணாவின் காய்ச்சலும் குறையவில்லை. சென்னிகராயர் மாதேவய்யா கோவில் பஜனையில் கலந்து கொண்டு இரவு எட்டு மணிக்குத் திரும்பி வந்தார். விசுவனும் அப்போதுதான் வந்து சேர்ந்தான். நஞ்சம்மா அவர்கள் இருவருக்கும் மதியம் செய்து வைத்திருந்ததையே போட்டாள். நஞ்சம்மாவுக்குச் சாப்பாடு இறங்கவில்லை. முதல் நாள் இரவு சரியாகத் தூங்காததால் அவளுடைய கண்கள் சொருகிக் கொண்டிருந்தன. அவள் மறுபடியும் இருவரின் நெற்றியைத் தொட்டுப் பார்த்துவிட்டு அவர்களின் தலைமாட்டுப் பக்கம் படுக்கை விரித்துப் படுத்துக் கொண்டாள்.

தூக்கத்தில் அவள் கனவு கண்டாள். கிராம தேவதை காளம்மனின் முகம் பார்வதியின் முகத்தைப் போல் ஊதிப் பெரிதாகத் தெரிந்தது. கண்கள் நெருப்பைப் போல் இருந்தன. தோடுகளும் மூக்குத்தியும் மினுமினுத்தன. அம்மன் காலை மடக்கிச் சம்மணம் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். மடியில் பார்வதியும் ராமண்ணனும் பிறந்த குழந்தைகள் போலப் படுத்திருந்தார்கள். குழந்தைகளின் உடம்பின் மேல் கம்பளியைப் போர்த்திவிட நஞ்சம்மா முயன்றாள். ஆனால் அவளால் கர்ப்ப கிரகத்தின் உள்ளே போக முடியவில்லை. கதவு திறந்துதான் இருந்தது. ஆனால் அவளை உள்ளே செல்ல விடாமல் ஏதோ ஒரு சக்தி தடுத்துக் கொண்டிருந்தது. 'அய்யோ' என்று யாரோ முனகிய சத்தம் கேட்டது. உடனே கனவு கலைந்தது. ராமண்ணன் முனகிக் கொண்டிருந்தான். அவள் உடனே விளக்கைத் தூண்டி விட்டு அவனுடைய நெற்றியின் மேல் கை வைத்து ''என்னடா கண்ணு?'' என்று ஆதரவாகக் கேட்டாள்.

''ரெண்டு கால் சந்துலேயும் நெறி கட்டியிருக்கு. ரொம்பவும் வலிக்குது'' என்றான் வேதனையுடன். அவளுடைய நெஞ்சம் திடுக்கிட்டது. பார்வதிக்கு வந்திருப்பதும் சாதாரணக் கட்டி யல்ல. ஆனால் சுற்று வட்டாரத்தில் ப்ளேக் நோய் பற்றிய பேச்சே இல்லையே! அவள் உடனே போர்வையை விலக்கித் தொட்டுப் பார்த்தாள். இரு பக்கங்களிலும் பலாக் கொட்டை யளவு கட்டிகள் இருந்தன. அவளுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. உடனே கணவனின் தோளைப் பிடித்து உலுக்கி ''பார்வதிக்கும் ராமண்ணனுக்கும் கட்டி வந்திருக்கு பிளேக்கா இருக்கலாம். கொஞ்சம் எந்திரிச்சுப் பாருங்களேன்'' என்று கெஞ்சினாள். மூன்று முறை உலுக்கியும் அவர் நிதானமாக ''நாளைக்கு காலையிலே பாத்துக்கலாம்'' என்று சொல்லிவிட்டுப் போர்வையை நன்கு இழுத்துப் படுத்துக் கொண்டார். மாதேவய்யாவையாவது அழைத்து வர வேண்டுமென்று நினைத் தாள். அவளுக்கு வெளியே செல்லப் பயமாயிருந்தது. அவள் விசுவனை எழுப்பி ''மாதேவய்யாவைக் கூட்டிட்டு வரணும், நீயும் கூடவா'' என்றாள். அவன் சட்டென்று எழுந்து நின்று ''நானே கூட்டிட்டு வர்றேன்'' என்று சொல்லிக் கொண்டே, தாழ்ப்பாளை நீக்கிக் கதவைத் திறந்து வெளியே பாய்ந்தோடினான். ''நானும் வர்றேன்'' என்று சொல்வதற்குள் அவனைக் காணோம். ஊர் முழுதும் உறக்கத்தில் ஆழ்ந்து கிடந்தது.

சிறிது நேரத்தில் மாதேவய்யா விசுவனின் கையைப் பிடித்த வாறு வந்து சேர்ந்தார். நஞ்சம்மா அவரிடம் விஷயத்தைக் கூறி ''இது பிளேகோ என்னவோ! தெரியலே. நீங்களே பாருங்க. எனக்குப் பயமா இருக்கு'' என்று கலவரப்பட்டாள். மாதேவய்யா இருவரின் நாடியையும் பார்த்தார். ராமண்ண னின் கட்டியைத் தொட்டுப் பார்த்துவிட்டு ''கணக்குப்பிள்ளை கோவிலுக்கு வந்திருந்தப்ப காச்சலைப் பத்தி எதுவும் சொல் லலையே!'' என்றார். ''அவருக்கு இதைப்பத்தி என்ன அக்கறை'' என்று வேதனைப்பட்டாள் நஞ்சம்மா.

''நேத்து சாயங்காலம் கோவில்லே குருவண்ணனும், புட்டையாவும் பேசிகிட்டிருந்தாங்க. அவங்க தெருவிலே ரெண்டு நாளுக்கு முன்னாடி எலி விழுந்ததாம்'' என்றார் மாதேவய்யா.

நஞ்சம்மாவின் நெஞ்சம் உயிர் போய்விட்டதைப் போலத் துடிக்காமல் நின்றுவிட்டது சில விநாடிகள். இரண்டு நிமிடம் பிரமை பிடித்தவள் போல் உட்கார்ந்துவிட்டு, விக்கி விக்கி அழ ஆரம்பித்தாள். ''மனதைத் தேத்திக்க. நீயே இப்பிடி அழுதா கவனிக்கறவங்க யாரு?'' என்று மாதேவய்யா ஆறுதல் கூறியும்

அவளுடைய அழுகை நிற்கவில்லை. ''பிளேக் வந்துட்டா யார் தான் பெழைக்க முடியும்?'' என்று சத்தம் போட்டு அழுதாள். இது ராமண்ணனின் காதில் விழுந்தது. ''மருந்து சாப்பிட்டா குணமாகாதா?'' என்று கேட்டான் அவன். அவளுக்குச் சற்றுத் தெம்பு வந்தது. மாதேவய்யா தொடர்ந்து சொன்னார்: ''பிளேக் வந்தாலும் எவ்வளவோ பேர் பெழைக்கறாங்க. தப்பிப் பெழைச்சா மறுபடியும் பிளேக் வராதாம்.'' அவள் மனம் சற்று ஆறுதலடைந்தது. அவளுடைய அண்ணன் கல்லேசனும் பிளேக் வந்து பிழைத்திருக்கிறானே! அந்த நினைவு வந்ததும் மனதில் சற்று ஊக்கம் பிறந்தது. ''நீ ஏன் உக்காந்துட்டு இருக்கே? படுத்துக்க'' என்று சொல்லி மாதேவய்யா விசுவனைப் படுக்கச் செய்தார். ராமண்ணனுக்கும் தூக்கம் வந்துவிட்டது. ''பேசாமல் உட்கார்ந்து என்ன செய்வது? கோவிலுக்குப் போகலாம்'' என்று மாதேவய்யா நினைத்தார். தான் இங்கேயே இருந்தால் நஞ்சம்மாவுக்கு சிறிது ஆறுதலாகவும் தைரியமாகவும் இருக்கும் என்றெண்ணி அங்கேயே அமர்ந்து கொண்டார். நஞ்சம்மா அவரிடம் சொன்னாள். ''நான் ஒரு கனாக் கண்டேன். காளம்மன் மடியிலே பார்வதியும், ராமண்ணனும் வெறும் உடம்பிலே படுத்துட்டிருந்தாங்க. ஒரு கம்பளியை போர்த்து விடலாம்னு நான் நெனைச்சாலும் என்னை அருகிலே போக விடாம ஒரு சக்தி தடுத்தது. இதுக்கு என்ன அர்த்தம்?'' ''கொழந்தைக ரெண்டும் அம்மன் மடியிலே படுத்திருக்காங்கன்னா அம்மனின் அருள் இருக்குதுன்னு அர்த்தம். இப்ப அம்மன் காச்சல்தானே? அவ காப்பாத்துவா'' நஞ்சம்மாவின் மனம் ஆறுதலடைந்தது. ''என்னை ஏன் உள்ளே விடலே?'' மாதேவய்யாவுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. ''ஆண்டவன் காப்பாற்ற வேண்டிய குழந்தைகளை மனிதர்கள் எப்படிக் காப்பாற்ற முடியும்?'' என்ற விளக்கம் அவர் உள்ளத்தில் எழுந்தாலும் அதை அவர் கூறவில்லை. நஞ்சம்மாவும் யோசித்துக் கொண்டிருந்தாள். ஏதோ கெட்ட சகுனமாகத் தோன்றினாலும் அதை வேறுவிதமாக அர்த்தம் செய்து கொள்ள முயன்றாள். ''என் மடியிலே படுத்திருக்கும் கொழந்தைகளைத் தொட உனக்கென்ன அதிகாரம்? என்கிட்டே இருக்கிறவரை அவங்க சௌக்கியமாகவே இருப்பாங்கன்னு தானே அர்த்தம்?'' — ''ஆமா, அப்படித்தான்.''

''அப்படியானா இவங்களுக்கு ஏதாவது மருந்து கொடுக்க வேண்டாமா?''

''கொடுக்காம இருக்க முடியுமா?''

''என் மடியிலே இருக்கும் கொழந்தைகளுக்கு நீ ஏன் மருந்து கொடுக்கறேன்னு அம்மன் கோபிச்சுகிட்டா?''

இந்தப் பிரச்சினை அவர்கள் இருவரையும் சற்று நேரம் சிந்திக்க வைத்தது.

''அம்மா, சொறி வந்தப்ப நாக பூஜை செஞ்சு குணமாச்சா? ஊசி போட்டு வந்தப்புறம் தானே குணமாச்சு? இப்பவும் அப்படியே செய். நாளைக்கே டாக்டரைக் கூட்டிட்டு வரணும். இல்லாட்டா வண்டியைப் பூட்டிட்டு கம்பனகெரெய்க்குப் போகலாம்'' என்று மாதேவய்யாவே முடிவு சொன்னார்.

''உடனே தலையாரியைக் கூப்பிட்டு வண்டி கொண்டு வரச் சொல்லலாமா?'' என்று அவள் கேட்டாள்.

''இவ்வளவு காச்சல் உள்ளவங்களை வண்டியிலே கூட்டிட்டுப் போறது சரியில்ல. டாக்டரையே இங்கே கூட்டிட்டு வரலாம். வண்டி பூட்டி அனுப்புங்க. வேணும்னு நானே போய் வர்றேன்'' என்று ஆலோசனை கூறினார் மாதேவய்யா.

கோழி கூவும் வரை காத்திருந்துவிட்டுப் பிறகு அய்யாவே போய்த் தலையாரியை அழைத்து வந்தார். அவன் ஒன்றரை ரூபாய் வாடகை பேசி ஒரு வண்டியை ஏற்பாடு செய்தான். பொழுது விடிவதற்கு முன்பே அய்யா வண்டியில் ஏறிக்கொண்டு கம்பனகெரெய்க்குப் புறப்பட்டார்.

காலையில் காய்ச்சல் மறுபடியும் அதிகமாயிற்று. பார்வதியின் இரண்டு அக்குள்களிலும் வலி ஆரம்பித்து விட்டது. முகம் சிவந்து பயங்கரமாக காட்சியளித்தது. அரை நினைவோடு அவள் இருந்தாள். ''சூடாக் கஞ்சி சாப்பிடறியா'' என்று நஞ்சம்மா கேட்டாள். அவள் திக்கித் திணறி ''கால் எல்லாம் சோர்ந்து போச்சு'' என்றாள்.

''காச்சலுக்கு அப்படித்தான் இருக்கும் கண்ணூ. கொஞ்சம் கஞ்சி குடி. சரியாப் போயிடும்''

''வேண்டாம்''

''இல்லாட்டா உடம்பிலே சக்தியிருக்காது. குடிம்மா'' தாய் சொன்ன சொல்லை மறுத்துப் பேசாமல் அவள் கஞ்சியை விழுங்கிவிட்டுக் கண்ணயர்ந்தாள். ராமண்ணனை எழுப்பிய போது அவனுக்கு நினைவு இருந்தது.

''டாக்டர் எப்ப வருவார்?'' என்று அவன் கேட்டான்.

''ஒம்பது, பத்து மணிக்கு வரலாம்''

''வருவாரோ? மாட்டாரோ? பிளேக் வந்த ஊருக்கு வர டாக்டரும் பயப்படுவார். இவர் பழைய டாக்டர் அல்ல.''

''பாக்கலாம்''

அவன் கஞ்சி குடித்துவிட்டுப் படுத்துக் கொண்டான். அவனுடைய இரண்டு கட்டிகளும் வலித்துக் கொண்டிருந்தன. காலையில் எழுந்ததும் ஏரிப்பக்கம் சென்ற சென்னிகராயர் இன்னமும் திரும்பவில்லை. என்ன செய்வது என்று புரியாமல் விசுவன் அங்கும் இங்கும் ஓடிக்கொண்டிருந்தான். அப்போது வேலூரரான் தண்டூரா போட்டுக் கொண்டு போகும் சத்தம் கேட்டது. நஞ்சம்மா திண்ணைக்குச் சென்று பார்த்தாள். ''டும்...டும்...டும்'' என்று தண்டூரா அடித்துக் கொண்டுவந்த வேலூரரான் அவளுடைய வீட்டிற்கு எதிரே வந்து நின்று ''ஊர்லே பிளேக் அம்மன் வந்திருக்கரு. எல்லோரும் ஊரை விட்டு வெளியே போய்க் கொட்டகை போட்டுத் தங்க வேணு மின்னு பஞ்சாயத்திலே தீர்மானம் போட்டிருக்கருங்க. அடுத்த வெள்ளிக்கெளமைக்குள்ளே ஊரைவிட்டு வெளியே போகணும். அடுத்த வெள்ளிக்கெளமைக்குள்ளே......'' என்று சத்தம் போட்டு விட்டு, மறுபடியும் டும்...டும்...டும் என்று தட்டிக் கொண்டு போனன்.

பிளேக் பரவிய செய்தி ராத்திரி வரை நஞ்சம்மாவிற்குத் தெரிந்திருக்கவில்லை. ''என் வீட்டிற்குத்தான் முதலில் வந்திருக் கிறதோ? கோவிலுக்குப் புதிதாகக் கல்யாணமான பெண்ணைக் கூட்டிக் கொண்டு போனேன். அதனால் அம்மனின் பார்வை அவள் மீது விழுந்துவிட்டதோ? ஆனால் கிராம தேவதை காளம்ம னும், பிளேக் தேவதை சுங்கலம்மாவும் வெவ்வேறுதானே? சுங்கலம்மாவைத் தடுப்பதற்குத்தானே காளம்மா இருக்கிருள்? இதெல்லாம் உண்மையா? பொய்யா? ஏன் இந்த பிளேக் நோய் இரண்டு மூன்று வருடங்களுக்கு ஒரு முறை வந்து தொல்லை கொடுக்கிறது? இதைக் குணப்படுத்த மருந்து கிடையாதா?'' என்றெல்லாம் நஞ்சம்மா நினைத்துக் கொண்டாள். ''மருந்து கண்டிப்பாக இருக்கிறது. டாக்டர் வந்தால் உடனே குணப் படுத்தி விடுவார். நாம் சீக்கிரமாகவே கொட்டகை போட்டுக் கொண்டு போக வேண்டும்'' என்று அவளுடைய சிந்தனை மறு படியும் ஓடியது. பதினொரு மணிக்கு அய்யா சென்ற வண்டி திரும்பி வந்தது. டாக்டர் வரவில்லை. ''கம்பனகெரெய்க்குப் பக்கத்திலும் எலி விழுந்திருக்காம். டாக்டர் அங்கே ஊசி போடப் போயிருக்காராம். இப்ப வர முடியாதாம். வியாதிக் காரங்களையே கூட்டிட்டு வரச் சொன்னர்'' என்றர் மாதேவய்யா.

''இப்பிடிக் காச்சலா இருக்கறப்ப எப்படிக் கூட்டிட்டுப் போறது?''

''வண்டியிலே மேல் மறைப்பு இருக்கு. வைக்கோலைப் பரப்பி அது மேலே மெத்தை விரிச்சுப் படுக்க வைக்கலாம் வேறே என்ன செய்ய முடியும்?''

நஞ்சம்மா தாமதம் செய்யவில்லை. வண்டிக்காரன் வைக்கோலைப் பரப்பினுன். நஞ்சம்மா மெத்தை விரித்தாள். மற்ருெரு முறை இருவருக்கும் கஞ்சி கொடுத்தாள். வண்டிக்காரனும், மாதேவய்யாவும் சேர்ந்து, பார்வதியையும், ராமண்ணுவையும் அழைத்துக்கொண்டு போய் வண்டியில் படுக்க வைத்தார்கள். தானும் புறப்படலாமா? என்று யோசித்துக் கொண்டிருந்த சென்னிகராயர் கடைசியில் புறப்பட்டுவிட்டார். ஆசிரியர் வீட்டிலிருக்குமாறு விசுவனிடம் நஞ்சம்மா சொன்னுள். பிறகு வண்டியின் முன்புறம் நோயாளியின் தலைமாட்டில் அமர்ந்து கொண்டாள். அய்யாவும், சென்னிகராயரும் வண்டியின் பின்னே நடந்தனர்.

ஆடிக்கொண்டே குழிகளில் ஏறி இறங்கிக் கொண்டு மெதுவாகச் சென்ற வண்டி கம்பனகெரெயை அடையும் போது மதியம் ஒரு மணியாகிவிட்டது. டாக்டர் அப்பொழுது வீட்டிற்குப் போய்விட்டார். வண்டியை ஆஸ்பத்திரிக்கு முன்னே நிறுத்தி, குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளும்படி சொல்லிவிட்டு மாதேவய்யாவும் நஞ்சம்மாவும் டாக்டரின் வீட்டிற்குப் போனுர்கள். அவர் சாப்பிட்டு ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். முதலில் சற்றுத் தயங்கிய போதும் பிறகு சாவியை எடுத்துக் கொண்டு ஆஸ்பத்திரிக்கு வந்தார். நோயாளிகளை வண்டியிலேயே சோதித்து விட்டு ''வியாதி இவ்வளவு தூரம் பாதிக்கும் வரை ஏன் சும்மா இருந்திங்க?'' என்று கேட்டார்.

''எங்களுக்குத் தெரியலை சார். நேத்து ராத்திரிதான் கட்டியே வந்தது. வெறும் குளிர் காச்சல்னு நெனைச்சு பேசாம இருந்துட்டோம்.''

''இப்ப ஊசி போடக் கூடாது. மருந்து கொடுக்கறேன் எடுத்துட்டு ஊருக்குப் போங்க. பாட்டில் இருக்கா?''

''இல்லை ஸார். கொண்டு வரணும்னு எங்களுக்குத் தெரியாது?''

''ஆஸ்பத்திரிக்கு வர்றப்ப பாட்டில் வேண்டாமா?'' என்று கூறிய டாக்டர் ஆஸ்பத்திரியைத் திறந்து, ஒரு காலி பாட்டிலில் மருந்து ஊற்றிக் கொடுத்தார். ''ரெண்டு பேருக்கும் நாளுக்கு மூணு வேளை கொடுங்க. இன்னிக்கும் நாளைக்கும் இது போதும். அதுக்கப்புறம் வாங்க'' என்ருர்.

அவர்கள் எல்லோரும் ஊருக்கு வந்து சேர்ந்த போது மணி நான்காகி விட்டது. விசுவன் ஆசிரியர் வீட்டுக்குப் போகவில்லை. வீட்டிலேயே படுத்திருந்தான். காலையில் அம்மா செய்து கொடுத்த வறட்டு ரொட்டியைச் சாப்பிட்ட பிறகு வேறு எதுவும் அவன் சாப்பிடவில்லை. அவனுக்கும் லேசாகக் காய்ச்சல் அடித்துக் கொண்டிருந்தது. அவனுடைய கண்களையும் முகத்தையும் பார்த்தவுடன் நஞ்சம்மா ஓடி வந்து நெற்றியைத் தொட்டுப் பார்த்தாள். நோய் அவனையும் தொற்றிக் கொண்டு விட்டது. நஞ்சம்மா உட்கார்ந்தவாறு அவனுடைய தலையைத் தன் மார்பின் மீது சாய்த்துக் கொண்டு சத்தம் போட்டு அழ ஆரம்பித்தாள். ''அய்யா, இந்தப் பாழாப் போன பிளேக்மாரி என் கொழந்தைக எல்லோரையும் பறிச்சுக்க வந்திருக்கா இங்கே பாருங்க, விசுவனுக்கும் காய்ச்சல் வந்தாச்சு''.

பார்வதியும் ராமண்ணனும் வண்டியிலேயே இருந்தார்கள். அந்தக் கரடுமுரடான பாதையில் பத்து மைல் வண்டிப்பயணம் செய்ததால் அவர்கள் மிகவும் சோர்ந்துபோய் அரை நினைவுடன் இருந்தார்கள். மாதேவய்யாவும் நஞ்சம்மாவும் சேர்ந்து பிடித்து இருவரையும் வீட்டினுள் படுக்க வைத்தார்கள். மாதேவய்யா நஞ்சம்மாவிடம் கூறினார்-'அம்மா ரெண்டுபேரையும் கவனிச்சுக்க இந்த மாடுக சோர்ந்து போச்சு. நான் வேறே வண்டியை ஏற்பாடு செஞ்சு விசுவனைக் கம்பன கெரெய்க்குக் கூட்டிட்டுப் போறேன். இவனுக்கு இன்னமும் காய்ச்சல் அதிகமாகவில்லை. இப்பவே போகணும்''.

அய்யா கோவிலுக்குப் போய்த் தன் பெட்டியில் இருந்த பணம் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டார். நஞ்சம்மாவின் வீட்டிற்குப் போய் அவளிடம் பத்து ரூபாய் கொடுத்து மீதி இருபது ரூபாயைத் தன் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டார். அதற்குள் வண்டிக்காரன் வேறு ஜோடி மாடுகளைக் கொண்டு வந்து அதே வண்டியில் பூட்டினான். அய்யா வண்டியில் மற்றொரு மெத்தையை விரித்து அதில் விசுவனைப் படுக்கச் செய்து தானும் வண்டியிலேறிப் புறப்பட்டார்.

கம்பன கெரெய்க்குப் போய்ச் சேர்ந்த போது இருட்டி விட்டது. டாக்டரின் வீட்டிற்கே ஓட்டிக்கொண்டு போனார்கள். ''இந்த பிளேக் வியாதிக்காரங்களை இங்கே ஏன் கூட்டிட்டு வந்தீங்க?'' என்று டாக்டர் மாதேவய்யாவிடம் கோபித்தார்.

''ஆஸ்பத்திரியிலே நீங்க இருக்கலையே ஸார்!''

''ராத்திரியும் பகலும் நான் அங்கே இருக்க முடியுமா? டேய் கருப்பா! ஆஸ்பத்திரிக்குப் போய் மேஜையிலே வலப்பக்கத்

திலேருந்து ரெண்டாவதா இருக்கற மருந்திலே மூணு அவுன்சு இவருக்குக் கொடு'' என்று சேவகனிடம் கூறிவிட்டு உள்ளே சென்றுவிட்டார்.

அய்யாவுடன் ஆஸ்பத்திரிக்கு வந்த கருப்பனுக்கு அவருடைய காவி உடையைப் பார்த்து அவரிடம் பக்தி ஏற்பட்டு விட்டது. ''அய்யா, இந்த மருந்தைச் சாப்பிட்டா குணமாகாது. திப்டூரிலே ஹேமாதி பானகம்னு ஒரு மருந்து கெடைக்குது. ஒரு பாட்டில் மூணு ரூபாய். வெங்கடாசலம் செட்டியார் கடையிலே இருக்குது. கடைவீதியிலே வீடு. முன்னடியே கடை. இந்தப் பையனுக்கு வாங்கிக் கொடுங்க. காய்ச்சல் குணமாயிடும்''

''டாக்டர் அப்படிச் சொன்னரே''

''அவர் அப்படித்தான் சொல்லுவாரு. நான் சொன்னபடி செய்யுங்க. உங்களுக்கு வேணுமின்ன இந்தத் தண்ணியைக் கொடுக்கறேன், இதனலே குணமாகாது.

உடனே திப்டூருக்குப் போக வேண்டுமென்று அய்யா முடிவு செய்தார். கம்பன கெரெயிலிருந்து திப்டூருக்குப் பத்துப் பதினெரு மைல் நல்ல ரஸ்தா இருந்தது. பையனுக்குப் பசித்தால் கொடுப்பதற்காக ஒரு பொட்டலம் பிஸ்கெட் வாங்கிக் கொண்டார். நள்ளிரவு தாண்டிய பிறகு வண்டி திப்டூரை அடைந்தது. வெங்கடாசலம் செட்டியார் கடை அய்யாவுக்குத் தெரிந்த கடைதான். வீடும், கடையும் ஒரே கட்டிடத்தில்தான் என்பது அவருடைய நினைவில் இருந்தது. அவர் கடைக்கு வண்டியை ஓட்டச் செய்து கடைக் கதவைத் தட்டினர். செட்டியாரே வந்து கதவைத் திறந்தார். அய்யா முழு விவரங்களையும் சொன்னபிறகு, ''ஹேமாதி பானகம் ஒண்ணுதான் அதுக்கு ஆயுர்வேத மருந்து. மதராஸ் வெங்கடாசார்லு கம்பெனியிலிருந்து நாங்க நேரடியாத் தருவிக்கிற மருந்து இது. காய்ச்சல் அதிகமாறதுக்கு முன்னடி கொடுத்தா குணமாயிடும். உங்களுக்கு எத்தனை பாட்டில் வேணும்?'' என்று கேட்டார் செட்டியார்.

''காய்ச்சல் வந்தவங்களுக்கு ஒரு தடவைக்கு எவ்வளவு கொடுக்கணும்?''

''ஒரு வேளைக்கு நாலு ஸ்பூன் வீதம் நாலு வேளைக்கு கொடுத்தாப் போதும். ஒரு பாட்டில் மூணு நாளைக்கு வரும். பாட்டில் மூணு ரூபாய்.''

அய்யாவிடம் இருபது ரூபாய் இருந்தது. செட்டியார் பதினெட்டு ரூபாய் வாங்கிக் கொண்டு ஆறு பாட்டில் மருந்து கொடுத்துவிட்டுச் சொன்னர். ''பையனுக்கு இப்பவே நாலு

ஸ்பூன் கொடுங்க. தேன்போல இனிப்பாக இருக்கும். பிளேக் இருக்கிற ஊருக்குள்ளே அழைச்சுகிட்டுப் போகக்கூடாது. நோய் இருக்கற வீட்டுக்கும் போகக் கூடாது. ஊருக்கு வெளியே எங்கே யாவது இருக்கணும்.''

உடனே வண்டி பூட்ட முடியவில்லை. மாடுகள் சோர்ந்து போய் இருந்தன. அய்யாவும் வண்டிக்காரனும் கூட சோர்ந்து விட்டனர். அந்த வேளையில் சாப்பிட வேண்டுமென்றால் ரயில்வே ஸ்டேஷன் ஓட்டலுக்குத்தான் போகவேண்டும். வண்டியை அங்கே திருப்பினார்கள். அய்யா விசுவனுக்குக் காப்பி கொடுத்து மருந்தும் கொடுத்தார். ஓட்டலில் வடை, பக்கோடாவைத் தவிர வேறு எதுவும் இருக்கவில்லை. எட்டணாவுக்கு வாங்கி அவரும் வண்டிக்காரனும் சாப்பிட்டார்கள். வண்டிக்காரன் திடீரென்று நினைவு வந்தவன் போல் சொன்னான். ''அய்யா நாம ஊருக்குப் போய் கொட்டகை போடணும் ஆனாலும் பரவாயில்லை. நிதான மாகப் போவோம்''. ''அதுதான் நல்லது.''

விசுவனுக்குக் காய்ச்சல் அடித்துக் கொண்டிருந்தாலும் நினைவு தவறவில்லை. அய்யா, அவன் தொடை சந்து, அக்குள் ஆகிய இடங்களில் தொட்டுப் பார்த்து ''வலிக்குதா?'' என்று கேட்டுப் பார்த்தார். ''இல்லை'' யென்று அவன் சொன்னான். அவருக்குச் சற்று தைரியம் வந்தது. கட்டி தோன்றுவதற்கு முன்பே மருந்து கொடுத்து விட்டதால் நோய் குறைந்து விடும், என்று நினைத்து அவரும் வண்டியில் சாய்ந்து உட்கார்ந்து சற்றுக் கண்ணயர்ந்தார். மாடுகள் மெதுவாக நடைபோட்டன.

விடியும் நேரத்தில் அவர்கள் பாதி தூரம் கடந்து விட்டனர். சாலை ஓரமாக இருந்த ஒரு குளத்தருகே வண்டியை நிறுத்தி, அய்யா விசுவனை வாய் கொப்பளிக்கச் செய்து பாட்டிலிலிருந்து மருந்தை வாயில் ஊற்றினார், காய்ச்சல் இருந்தது. ஆனால் உடலில் எந்தப் பகுதியிலிருந்தும் கட்டி கிளம்பவில்லை. அவனுக்குச் சாப்பிட இரண்டு பிஸ்கோத்துகள் கொடுத்தார். அவர்கள் இரண்டு பேரும் குளக்கரையில் மறைவாகச் சென்று வந்து, மறு படியும் வண்டியைக் கிளப்பினார்கள். வண்டியில் வந்து கொண் டிருக்கும்போது அவருக்கு ஓர் யோசனை தோன்றியது.

'எல்லோரும் ஊரைவிட்டு வெளியேவந்து விடுவதால் விசுவனை ஊருக்குள் அழைத்துச் செல்லவேண்டாம். ஏரிக்கரை யில் உள்ள கோவில்தான் என் புதிய இருப்பிடம். வண்டியை அங்கேயே ஓட்டிச் சென்று இவனை அங்கேயே படுக்க வைத்து விடுவோம். ஊருக்குள் போய் என் பாய், தலையணை, போர்வை ஆகியவற்றைக் கொண்டு வந்தால் போதும்'.

பதினொரு மணிக்கு வண்டி ஏரிக்கரைக் கோவிலைச் சென்றடைந்தது. அய்யா விசுவனை இறக்கிக் கோவிலில் படுக்க வைத்து விட்டு மறுபடியும் ஒருதடவை மருந்து கொடுத்தார். தான் வரும்வரை அங்கேயே இருக்குமாறு வண்டிக்காரனிடம் சொல்லிவிட்டு நான்கு மருந்து பாட்டில்களை எடுத்துக் கொண்டு ஊருக்குள் சென்றார்.

2

ஊர்க்காரர்கள் எல்லோரும் மூங்கில், மரச் சட்டம் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு கொட்டகை போடுவதற்காகப் போய்க்கொண்டிருந்தார்கள். கொட்டகை வேலை முடியுமுன்பே பலர் பாத்திரம் பண்டங்களையும், தானியத்தையும் எடுத்துக் கொண்டு புறப்பட்டுக் கொண்டிருந்தனர். அய்யா வந்தபோது பார்வதிக்கும், ராமண்ணனுக்கும் முக்கால்பங்கு நினைவு தவறி விட்டது. ஆனால் கட்டி அதிகமாக வலித்ததால் பார்வதி அடிக்கடி 'அய்யோ அம்மா' என்று முனகிக் கொண்டிருந்தாள். அய்யா மட்டும் தனித்து வருவதைக் கண்ட நஞ்சம்மா திகிலடைந்தாள். அதைக் கவனித்த அய்யா, ''பயப்படாதே அம்மா. திப்பூருக்கு வண்டியிலே போனோம். விசுவனுக்கும் அதே காய்ச்சல் தான். ஆனா கட்டி வரலே. நல்ல மருந்து கொண்டு வந்திருக்கேன். பிளேக் உள்ள ஊருக்குள்ளே கூட்டிக் கொண்டு போக வேண்டாம்னு சொன்னாங்க. அதனாலே அப்படி செஞ்சேன். இந்த மருந்தை இவங்க ரெண்டு பேருக்கும் ஒரு நாளைக்கு நாலு வேளை கொடு'', என்று சொல்லி மருந்தைக் கொடுத்தார்.

நஞ்சம்மா அவர் சொன்னபடியே மருந்தைக் கொடுத்தாள். ஆனால் மருந்தைக் குடிக்கும் சக்தியும் நினைவும் அவர்களுக்கு இல்லை. ''இது ஒண்ணுதான் மருந்து. ஆண்டவன் காப்பாத்தினா இது மூலம்தான் காப்பாத்தணும்'' என்று சொல்லிய அய்யா, ''சீக்கிரம் ஊரை விட்டுக் கிளம்பணும். நீங்க தயாராகலியா''? என்று விசாரித்தார்.

''நான் வீட்டிலேயே இருக்கேன். நம்மைக் கவனிச்சுக்க யார் தான் வருவாங்க இந்த அமர்க்களத்திலே?''

''சென்னிகராயர் எங்கே?''

''தெரியாது. காலையிலே எட்டு மணிக்குப் போனவர் இன்னும் வரலே''.

''நான் கோவிலுக்குப் போய் ஏதாவது துணிமணிகளை எடுத்து இட்டு ஏரிக்கரைக் கோவிலுக்குப் போறேன். நீ விசுவனைப் பத்திக்

கவலைப்பட வேண்டாம். இவங்களைக் கவனிச்சுக்க. நான் தலையாரி யைக் கூப்பிட்டு உங்களுக்கு கொட்டகை போடச் சொல்றேன்'' என்று கூறிவிட்டு அவர் விசுவனுக்குக் கஞ்சி போட்டுக் கொடுப் பதற்காக சிறிது அரிசிக் குருணையையும் எடுத்துக் கொண்டு போனார். பார்வதி, ராமண்ணாவைப் பற்றி நஞ்சம்மா நம்பிக்கை யிழந்து விட்டாள். அவர்களுடைய கட்டிகள் வீங்கிவிட்டன. காய்ச்சல் குறையவில்லை. இருவரும் காலையிலிருந்து ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. ''அய்யா கொண்டு வந்து கொடுத்த மருந்து நல்ல மருந்தாய் இருக்கக்கூடும். விசுவனைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்று அய்யா சொல்லி விட்டார். ஆனால் ஒரு முறை போய்ப் பார்த்துவிட்டு வரவேண்டும். நான் போனால் இவர்களைக் கவனிப்பது யார்?'' என்று நினைத்து நஞ்சம்மா குழம்பிக் கொண்டிருந்தாள்.

அந்த வேளையில் ஆசிரியரின் மனைவி வந்தாள். அவளுடைய கையில் ஒரு பாத்திரம் இருந்தது. ''வீட்டிலே செஞ்ச சமையலைத் தனித்தனியாக கொண்டு வந்து வைக்கக் கூடாதுன்னு சாத்திரம். அதனாலே சாதத்தையும் கொழம்பையும் கலந்து கொண்டு வந்திருக்கேன். எங்க வீட்டுக்காரரர் சாமான் எல்லாத் தையும் கட்டிக்கிட்டிருக்கார். இப்ப உடம்பு எப்படி இருக்கு?'' என்று நஞ்சம்மாவிடம் கேட்டாள் அவள்.

''எந்த வித்தியாசமும் இல்லை. காலையிலேயிருந்து பேசலை''.

''உங்க தலையாரியையோ, இல்லாட்டா வேறே யாரை யாவதோ அனுப்புங்க. எங்க வீட்டுக்காரர் உங்களுக்கும் ஒரு கொட்டகை போட்டுருவார். நீங்க கொழந்தைகளோட வாங்க. கொஞ்சம் சாமானை நாங்க எடுத்துட்டுப் போறோம். கணக்குப் பிள்ளை எங்கே?''

''எங்கே போனாரோ தெரியாது''.

அவள் அவசரமாகக் கிளம்பிப் போனாள். கொட்டகை போடு வதற்கு வேண்டிய மூங்கில், சட்டம் ஆகியவை நஞ்சம்மாவின் வீட்டுப்பரண் மேலேயே இருந்தது. ஓலை மட்டும் தேவையாக இருந்தது. தலையாரியை அனுப்பினால் குருபரஹள்ளியிலிருந்து வேண்டிய ஓலைகள் கொண்டு வந்து விடலாம். அந்த ஊரையும் காலி செய்து கொண்டிருக்கிறார்களோ என்று நஞ்சம்மா யோசித்துக் கொண்டிருந்தாள். நஞ்சம்மா எழுந்து மற்றொரு தடவை இரண்டு பேருக்கும் மருந்து கொடுத்தாள். ''கஞ்சி வேணுமா?'' என்று கேட்டாள். அவர்களுக்குப் புரியவில்லை. மருந்து உள்ளே சென்றபிறகு சற்று நேரம் கழித்துப் பார்க்க லாம் என்று எண்ணிக் கொண்டாள். அப்பொழுது சென்னிக

ராயர் வீட்டிற்கு வந்தார். துவைத்த இரண்டு வேஷ்டிகளும் ஒரு சட்டையும் தோளின் மேல் இருந்தன. உடுத்தியிருந்த வேஷ்டி அரை ஈரமாக இருந்தது. நெற்றியில் விபூதி இருந்தது. தோட்டத்தில் உள்ள கிணற்றிற்கோ, அல்லது ஏரிக்கோ சென்று அவர் துவைத்துக் குளித்துவிட்டு வந்திருக்கிறார் என்பதை நஞ்சம்மா தெரிந்து கொண்டாள். அவர் நெற்றியில் தரித்திருந்த விபூதி அவர் சந்தியாவந்தனம் செய்து விட்டார் என்பதைக் கூறியது. அவர் போய்விட்டு வந்த நேரத்தைப் பார்த்தால், அவர் ஆயிரத்தெட்டு தடவை காயத்திரி மந்திரத்தை சொல்லியிருப்பார் என்று உறுதியாகத் தெரிந்தது. ''வீட்டிலே கொழந்தைக சாகக் கிடக்கறுங்க. எல்லோரும் ஊரைக் காலி செய்யறுங்க. துணி துவைக்க இதுதான் நேரமா?'' என்று நஞ்சம்மா ஆத்திரப்பட்டாள்.

''அழுக்கு வேஷ்டியை எத்தனை நாள் கட்டிக்கறது? நீ துவைச்சுக் கொடுத்து நாலு நாளாகுது. நீ பிராமண ஜாதியிலே பெறக்கலியா?'' சென்னிகராயர் சமையலறைக்குள் சென்றவுடன் ஆசிரியர் வீட்டுப் பாத்திரம் கண்ணில் பட்டது. மூடியை எடுத்து அருகிலிருந்த அலுமினியத் தட்டில் சோற்றைப் போட்டுக் கொண்டு, ஐந்து முறை சோற்றை-வாயில் வைத்து விரிவாக மந்திரம் சொல்லிவிட்டுச் சாப்பிட ஆரம்பித்தார். அங்கிருந்த சாப்பாடு அவருக்குப் போதவில்லை. எப்படியோ அதை முடித்துக் கொண்டு வெளியே வரும்போது, மாதேவய்யா மறுபடியும் வீட்டிற்கு வந்தார். பார்வதிக்கு மூச்சு இரைத்தது. நஞ்சம்மா பேசாமல் அவளுடைய பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள்.

''சென்னிகராயரே, நீங்க நேரே ஏரிக்கரைக் கோவிலுக்குப் போய் உக்கார்ந்திருங்க, விசுவன் அங்கே யிருக்கான். மாடு மேய்க்கற நஞ்சன் மகனை அங்கே இருக்கச் சொல்லிவிட்டு வந்தேன். நீங்க போய்ப் பேசாம அங்கே உக்காந்திருங்க'' என்றுர் அய்யா.

''நான் மட்டும் ஒண்டியா இருந்தா சோம்பலா இருக்குமே''

அய்யாவுக்குக் கோபம் வந்தது. ''நீ என்ன மாடா? மனுஷனு?'' என்று கேட்டார். அய்யா யாரையும் கோவிக்கக் கூடியவரல்ல. அவருடைய பேச்சைக் கேட்ட சென்னிகராயர் அடங்கிப் போனுர். ''சரி கொஞ்சம் பொகலை கொடுங்க. சாப்பிட்டப்புறம் பொகலை போடாட்டா எப்பிடியோ இருக்கும்''

''அடே, சாப்பிட்டாச்சா? யார் சமைச்சாங்க?''

''இவ தான் செஞ்சிருப்பா''

''வாத்தியார் பொண்டாட்டி கொஞ்சம் கொடுத்துட்டுப் போனு'' என்ருள் நஞ்சம்மா.

''என் சாமானெல்லாம் கொண்டுபோய் அங்கே போட்டிருக்கேன். வெத்திலே, பாக்குப் பெட்டியும் அங்கேயே இருக்கு. எவ்வளவு வேணும்னுலும் போட்டுக்குங்க'' என்று அய்யா சொன்னபிறகு சென்னிகராயர் உலரப் போட்டிருந்த வேஷ்டியைத் தலைக்கு மேல் பிடித்து உலர்த்தியவாறு நகர்ந்தார்.

''அம்மா உன் கொட்டகைக்கு என்ன செஞ்சே?''

''அது கெடக்கட்டும், இவளுக்கு மூச்சு எறைக்குது. வந்து பாருங்க.''

''அய்யா அருகே வந்து பார்வதியின் மூக்கருகே கைவைத்துப் பார்த்தார். மூச்சு ஒழுங்காக வரவில்லை. ''எப்ப கஞ்சி கொடுத்தே?''

''குடிக்கவேயில்லை.''

''உடம்பு முழுக்க வலிக்குதோ என்னவோ! அதான் இப்பிடி. மொதல்ல கஞ்சி போட்டுக் கொடு. உங்க ஓலைக்காக குருபர ஹள்ளிக்கு ஆள் அனுப்புறேன்.'' என்று சொல்லிவிட்டு அவர் கிளம்பிஞர். ஆசிரியருடைய பையன் விசுவனைக் காட்டிலும் இரண்டு வயது பெரியவன். துடிப்பானவன். அய்யா ஆசிரியரின் வீட்டுக்குப்போய் ''குருபரஹள்ளிக்குப் போயிட்டு வர்றியா?'' என்று ஆசிரியரின் மகனிடம் கேட்டார்.

''ஓ! ஓடிப்போயிட்டு வர்றேன்.''

''குண்டே கவுடர் வீட்டுக்குப் போய்ச் சொல்லு கணக்குப் பிள்ளை வீட்டிலே மூணு பேருக்கு பிளேக் வந்திருக்காம். கொட்டகை போட ஓலை இல்லியாம். ஒரு வண்டி ஓலை உடனே அனுப்ப வேணுமாம். ரெண்டு ஆளும் வர வேணுமாம். நஞ்சம்மா அழுதுகிட்டே உக்காந்திருக்கான்னு சொல்லிட்டு வர்றியா?''

''ஓ! மறக்காம சொல்றேன்''.

சீக்கிரமாகப் போய் வரும்படி ஆசிரியரும் சொன்ஞர். மாதேவய்யா நஞ்சம்மாவின் வீட்டிற்கு வந்தார். அடுப்பில் கஞ்சி கொதித்துக் கொண்டிருந்தது. குண்டே கவுடர் உடனே ஓலையை அனுப்பி விடுவார் என்ற நம்பிக்கை அய்யாவுக்கு இருந்தது. அதற்குள் மூங்கிலை எடுத்து வெளியே போட்டால் நல்லது. இரவுக்குள் கொட்டகை போட்டுவிட்டால் வீட்டைக் காலி செய்து விடலாம். ஊரைவிட்டுக் கிளம்பா விட்டால் காய்ச்சல் குறையாது என்று அவர் நம்பிஞர்.

மூங்கிலை எடுப்பதற்காக அவர் பரண் மேல் ஏறினர். நஞ்சம்மா கஞ்சியை எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள். ''கொழந்தைகளுக்கும் போத்திவிடு. தூசி விழும். நான் கொஞ்சம் மூங்கில் எறக்கி வைக்கிறேன்'' என்று அவளிடம் சொல்லிவிட்டு அதிக சப்தம் செய்யாமல் மெதுவாக மூங்கில்களை இறக்கினர். அவர் அந்த மூங்கில்களை வெளியே கொண்டு போய்ப் போட்டு விட்டு வரட்டும் என்று நஞ்சம்மா கஞ்சியை உள்ளே வைத்து விட்டு வந்தாள். அவர் மூங்கில்களை வெளியே போட்ட பிறகு அவள் உள்ளே போய்க் கஞ்சியை எடுத்துவந்து பார்வதியின் போர்வையை விலக்கிப்பார்த்தாள். மூச்சு மிகவும் மெதுவாக வந்து கொண்டிருந்தது. வாயில் கஞ்சியை ஊற்றினலும் அவள் அதை விழுங்கவில்லை. ''அய்யா! மூங்கில் அங்கேயே இருக்கட்டும். நீங்க இங்கே வாங்க'' என்று நஞ்சம்மா கூவினள். அவர் ஓடி வந்து பார்வதியின் முகத்தைப் பார்த்தார், ''கட்டிக எப்பிடி இருக்குன்னு பாருங்க. நான் கை கழுவிவிட்டு வர்றேன்'' என்று சொல்லிவிட்டுத் தூசி படிந்த கைகளைக் கழுவுவதற்காக அவர் பின்புறம் வேகமாகப் போனர்.

நஞ்சம்மா கட்டிகளைப் பார்த்தாள். வலது காலில் இருந்த கட்டி உடைந்து சீழ் கொட்டிக் கொண்டிருந்தது. ''அய்யா ! வலப்புறக் கட்டி உடைஞ்சு போச்சு. வந்து பாருங்க.''

அவரும் வந்து பார்த்தார். கட்டியிலிருந்து வெண்மையான சீழ் கொட்டிக் கொண்டிருந்தது. அதைச் சுற்றிலும் ரத்தம் போன்ற திரவம் இருந்தது. அவர் மற்ருெரு கட்டியைப் பார்த்தார். அது உடையக் கூடிய நிலையில் இருந்தது. அவருக்குப் புரிந்துவிட்டது. ''என்ன அய்யா ?'' என்று திகிலுடன் கேட்டாள் அவள்.

''ஆண்டவன் சித்தம் எப்படி இருக்குதோ! பார்க்கலாம்.''

பார்வதியின் மூச்சு சற்று வேகமாக இரைக்கத் தொடங்கியது. நஞ்சம்மா அதுவரை சாவை நேரில் கண்டதில்லை. மிகவும் மெதுவாக வந்து கொண்டிருந்த மூச்சு வேகமாக வருவதை அவள் உணர்ந்து கொண்டாள். அய்யாவுக்கு விஷயம் தெரிந்திருந்தது. ஆனல் எதுவும் சொல்லத் தெரியாமல் சும்மா உட்கார்ந்திருந்தார். கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தவரைப் போல் ''உங்கள் அப்பா காசியிலிருந்து கொண்டுவந்த கங்கை நீர் இருக்கா ?'' என்று அவர் நஞ்சம்மாவிடம் தயக்கத்துடன் கேட்டார்.

''ஏன்?''

''பயப்பட வேண்டாம். காப்பாத்தறதா இருந்தா கங்கை நீர் தான் காப்பத்தணும். உள்ளே போய் எடுத்துட்டுவா''

உடனே நஞ்சம்மா உள்ளே ஓடிப்போய் கங்கை நீர் அடைத்திருந்த செம்பைக் கொண்டு வந்தாள். அவர் அதன் மூடியில் துளை போட்டார். பிறகு நஞ்சம்மாவிடம், ''மகளோட தலையை மடியிலே வைச்சுக்க'' என்று சொல்லி கங்கை நீரை அருகேயிருந்த கிண்ணத்தில் மெதுவாக ஊற்றினார். கிண்ணம் நிரம்பியதும் அதை நஞ்சம்மாவின் கையில் கொடுத்து ''மெதுவா மகளோட வாயிலே விடு. நான் தாடையைப் பிடிச்சுக்கிறேன்'' என்றார்.

''நஞ்சம்மாவின் கை நடுங்கியது. அய்யாவே அவளுடைய கையைப் பிடித்துக் கிண்ணத்தைப் பற்களின் இடையே வைத்து நீரை விட்டார். வேகமாக வந்து கொண்டிருந்த மூச்சு தணிந்து வர ஆரம்பித்தது. கண்கள் பாதி திறந்த நிலையில் இருந்தன. மெதுவாக வந்து கொண்டிருந்த மூச்சு கடைசியில் நின்று போயிற்று. திறந்த வாய் மூடவில்லை.''

''அய்யோ!'' என்று கூவிக்கொண்டே நஞ்சம்மா மகளின் மார்பில் சாய்ந்தாள். ஆறுதல் சொல்லிப் பயனில்லை என்பதை அறிந்திருந்த அய்யா மேற்கொண்டு செய்ய வேண்டிய வேலைக்காக ஆசிரியரின் வீட்டை நோக்கி ஓட்டமும் நடையுமாகப் போனார். ஆசிரியர் சாமான்களை வண்டியில் ஏற்றிக் கொண்டிருந்தார். பார்வதி இறந்த செய்தியைக் கேட்டதும் ஆசிரியர் கதிகலங்கி விட்டார்.

''சும்மா நிக்கவேண்டா''. சாயங்காலம் ஆயிடுச்சு. வெறகு கொண்டு வரணும். சாதிக்காரர் நீங்க. உங்க சாதிக்காரர்கிட்டே சொல்லி மேலே ஆகவேண்டிய ஏற்பாடு செய்யுங்க.''

ஆசிரியரும் அவருடைய மனைவியும் ஓடி வந்தார்கள். நஞ்சம்மா இன்னமும் மகளின் மார்பின்மேல் தலைவைத்து அழுது கொண்டிருந்தாள். ''அம்மா, இது உயிர் இல்லாத உடம்பு. இதை விட்டுடு. ராமண்ணனைப் பார். அவனுக்குக் கஞ்சி கொடுக்காம இருக்கியே! அந்தப் பக்கம் திரும்பு'' என்று அய்யா அவளுடைய கவனத்தைத் திருப்பினார்.

''அய்யா...... பார்வதி......''

''பார்வதி ஆண்டவங்கிட்டே போயிட்டா'' என்று அய்யா அவளுடைய தலையை நஞ்சம்மாவின் மடியிலிருந்து கீழே வைத்தார். வெங்கடேசய்யா அடுத்த காரியங்களில் இறங்கினார். நஞ்சம்மா திடீரென்று அழுகையை நிறுத்தி விட்டாள். அவள் சமையலறைக்குச் சென்று கஞ்சியைச் சூடாக்கி, கிண்ணத்தில் ஊற்றி, ராமண்ணனின் தலையைத் தன் மடியில் வைத்துக்கொண்டாள். அவனுடைய வாயில் ஊற்றிய கஞ்சி சிறிதளவு உள்ளே

இறங்கியது. அவளுக்குச் சற்றுத் தைரியம் வந்தது. அந்தக் கிண்ணத்திலேயே ஹேமாதி பானகத்தையும் விட்டு வாயில் ஊற்றினாள். பிறகு அவனுக்குப் போர்த்துவிட்டு அவனுடைய கட்டிகளைக் கையால் தொட்டுப் பார்த்தாள். அவை உடைந்திருக்கவில்லை. பார்வதியின் கட்டிகள் உடைந்தவுடன் அவள் இறந்து போனாள். ராமண்ணனின் கட்டிகள் உடையவில்லை. ஆகையால் அவளுக்குத் தைரியம் பிறந்தது.

ஆசிரியர் இரண்டு புரோகிதர்களிடம் சொல்லிவிட்டு வந்தார். அந்த ஊரில் இருந்த மற்ற மூன்று பிராமணர்களின் வீடுகளுக்கும் செய்தி தெரிவிக்கப்பட்டது. எல்லோரும் ஊரைவிட்டுப் புறப்படும் அவசரத்தில் இருந்தனர். ஆனால், உடலைச் சீக்கிரம் எரிக்காமல் விட்டு வைத்தால் காலை வரை காத்திருக்க வேண்டும். ஆகையால் சாதிக்காரர்கள் ஓடிவந்தார்கள். சென்னிகராயரை அழைத்துவர வேண்டும். விசுவனைக் கோவிலில் தனியே விட்டு வந்தால் அவனுக்குத் துணை யார்? என்ற விஷயங்கள் மாதேவய்யாவின் மனதில் தோன்றின. தான் நஞ்சம்மாவின் வீட்டிலேயே இருக்க வேண்டும் என்று அவர் முடிவு செய்தார். விசுவனின் துணைக்கு யாரையாவது ஏற்பாடு செய்ய வேண்டுமென்று அவர் கோவிலை நோக்கி வரும் பொழுது கடையில் நரசி உட்கார்ந்து கொண்டிருப்பதைப் பார்த்தார். ''கணக்குப் பிள்ளையோட மக போயிட்டாளாமே! உண்மையா?'' என்று அவள் அய்யாவிடம் கவலையோடு விசாரித்தாள்.

அய்யா அவளிடம் விஷயத்தைச் சொல்லி தான் வரும்வரை விசுவனைக் கவனித்துக்கொள்ள வேண்டுமென்று அவளிடம் கேட்டுக் கொண்டார்.

நரசி கடையைப் பூட்டிவிட்டு அய்யாவின் பின்னே நடந்தாள். அய்யாவின் வெற்றிலைப் பையிலிருந்து சுண்ணும்பு டப்பாவை எடுத்து சென்னிகராயர் ஆறுவது முறையாக வெற்றிலையில் சுண்ணும்பு தடவிக்கொண்டு கோவிலில் அமர்ந்திருந்தார். கோவிலுக்குச் சென்றபிறகு அய்யா நரசியிடம், ''இருட்டின பெறகு வெளக்கு ஏத்து. விசுவனுக்கு இந்தப் பாட்டில்லே இருக்கற மருந்தை மூணு மணிக்கு ஒருதடவை கொஞ்சம் கொடு. அவன் பசிக்குதுன்னு சொன்னா இங்கே இருக்கற குருணை அரிசியிலே கஞ்சி வைச்சுக் கொடு'' என்று விளக்கினார்.

''நான் கவனிச்சுக்கறேன். நீங்க போங்க''

விசுவன் படுத்துக் கொண்டிருந்தான். அய்யா சென்னிகராயரைப் பார்த்து, ''பார்வதி போயிட்டா. நீங்க புறப்படுங்க. அடுத்த வேலைக நடக்கணும்'' என்று துயரத்துடன் கூறினார்.

''ஏன் போயிட்டா?''

''அவளைத்தான் கேக்கணும்'' என்று பதில் சொல்லிய அய்யா, அவருடைய கையைப் பிடித்துக்கொண்டு அவசரமாகப் புறப்பட்டார்.

அவர்கள் வருவதற்கு முன்னரே வீட்டின் எதிரே பாடை கட்டிவிட்டார்கள். அண்ணா ஜோசியர் முன் நின்று எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தார். அய்யா சாஸ்திரிகள் தெருவிலே நின்று பேசிக் கொண்டிருந்தார். நஞ்சம்மா தன்மகள் இறக்கவில்லை என்பதைப்போல், நடக்கும் காரியங்களுக்கும் தனக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை என்பதைப் போல் ராமண்ணாவின் முகத்தைப் பார்த்தவாறு பேய் அறைந்தாற்போல் உட்கார்ந்து இருந்தாள்.

''உண்மையான பாத்தியதை இவளுடைய புருஷனுக்குத் தான். அவருக்குத் தெரியாம காரியத்தை முடிக்கறது சரியா?'' என்று சட்டம் பேசினார் அண்ணா ஜோசியர்.

''இப்ப எப்பிடி தெரிவிக்கறது? பிளேக்கினாலே செத்த உடலை அதிக நேரம் வைச்சா உடம்பு பூரா கறுப்பாயிடும். இப்ப தாமதம் செய்ய வேண்டாம். பிற்பாடு நான் அவருக்குக் கடிதம் எழுதறேன். நான்தான் கல்யாணம் செஞ்சு வைச்சேன். இந்த வேலைக்கும் நானே பொறுப்பு ஏத்துக்கறேன்'' என்று ஆசிரியர் ஜோசியரின் வாயை அடக்கினார்.

ஆசிரியரின் மனைவி, பார்வதிக்கு மஞ்சள், குங்குமம் வைத்தாள். அய்யா தன்னிடம் கொடுத்திருந்த பணத்தில் மீதம் இருந்த ஐந்து ரூபாயை நஞ்சம்மா ஆசிரியரிடம் கொடுத்தாள். உடலைத் தூக்கிச் செல்லும்போது ஆசிரியரின் மனைவி கண்ணீர் வடித்தாள். ஆனால் நஞ்சம்மா அழவில்லை. ''இந்த முண்டை ஏன் செத்துப் போனா? என்று சொல்லிக்கொண்டே சென்னிகராயர் கண்ணீரைத் துடைத்துக் கொண்டார்.

அவர்கள் போவதற்குள் ஏரிக்கரையின் பின்னால் இருந்த தோப்பில் விறகு அடுக்கிவிட்டார்கள். அண்ணா ஜோசியர் மங்களம், அமங்களம் ஆகிய இருவகையான புரோகிதங்களையும் அறிந்தவர். எல்லோருடனும் சென்ற அய்யா சாஸ்திரிகள் கரையைத் தாண்டிக் கீழே சரிவில் இறங்குவதற்கு முன்பே ஓரிடத்தில் நின்று கொண்டார். உடல் எரிந்து, இரண்டு ஆள் உயரத்துக்கு சுவாலை தெரிந்தது. அவர் அங்கேயே நின்று கொண்டிருந்தார். அவருக்கு மிகுந்த பயம். தூக்கிச் சென்றவர்கள் மயானத்துக் கிணற்றில் ஸ்நானம் செய்துவிட்டுத் திரும்பி வரும்வரை

அங்கேயே காத்திருந்தார். கடைசியில் எல்லோரும் திரும்பி வந்த பிறகு அவர்களிடம் ''தலே உடைஞ்சு போச்சா?'' என்று விசாரித்தார்.

''உம்''

''சென்னையா, தூக்கிட்டுப் போனவங்களுக்கு எவ்வளவு பணம் கொடுத்தே?''

''ஆளுக்கு எட்டணு''

''இங்கே பார், நானும் அவங்ககூட வந்தவன்தான். இவ்வளவு தூரம் வந்தேன். அங்கே வந்தா இந்த அகால நேரத்திலே பச்சைத் தண்ணியிலே ஸ்நானம் செய்யணும். அது என் உடம்புக்கு ஒத்துக்காதுன்னு வரலே. எனக்கும் பணம் கொடு''.

அதைக் கேட்ட ஆசிரியருக்கு எரிச்சல் வந்தது. ஆனல் அண்ணு ஜோசியர், ''கொடு, கொடு'' என்று தூண்டினர். சென்னிகராயர் தன் இடுப்பிலிருந்து சில்லறைப் பணத்தை எடுத்து ஒரு எட்டணு நாணயத்தை ''அந்தக் கிழட்டுப் புரோகிதருக்குக்'' கொடுத்தவுடன் அவருக்கு மிகுந்த சந்தோஷம் ஏற்பட்டது.

''திதி எங்கே செய்யப் போறே?'' என்று அவர் ஆவலுடன் விசாரித்தார்.

''திதி புருஷன் வீட்டிலே செய்ய வேண்டியதுதானே'' என்று ஆசிரியர் ''பட்''டென்று பதில் சொன்னவுடன் ''சரி, சரி. மறந்து போச்சு'' என்று சொல்லி மற்றவர்களுடன் சாஸ்திரி நடக்க ஆரம்பித்தார்.

3

பார்வதியின் உடலே மயானத்திற்கு எடுத்துச் சென்றபோது வீட்டில் நஞ்சம்மாவுடன் மாதேவய்யா மட்டுமே இருந்தார். ஆசிரியரின் வீட்டுச் சாமான்கள் கொட்டகையில் இருந்தன. இன்னும் சில சாமான்கள் வீட்டில் இருந்தன. அவற்றைப் பார்த்து விட்டு வருவதாகச் சொல்லி ஆசிரியரின் மனைவி சென்ருள். குருபரஹள்ளிக்குப் போயிருந்த ஆசிரியரின் மகன் அவன் வீட்டிற்குச் சென்ற ஐந்து நிமிடங்களில் நஞ்சம்மாவின் வீட்டுக்கு வந்து, ''நாளைக்குக் காலையிலே ரெண்டு ஆளுக ரெண்டு வண்டி ஓலே எடுத்துட்டு வர்ருங்களாம். ''அம்மன் கோவிலுக்குப் பக்கத்திலே அவங்களுக்காகக் காத்துட்டு நிக்கணுமாம். கொட்டகை போடவேண்டிய எடத்தை அவங்களுக்குக் காட்ட வேணுமாம்'' என்று தகவல் சொல்லி விட்டுப் புறப்பட்டான்.

ராமண்ணனின் மூச்சு மிக மெதுவாக வந்து கொண்டிருந்தது. ''இன்னொரு தடவை மருந்து கொடுத்தியா?'' என்று அய்யா விசாரித்தார். பார்வதி இறந்த சற்று நேரத்தில் கொஞ்சம் மருந்து சாப்பிட்டிருந்தான் அவன். நஞ்சம்மா அவனுக்கு மருந்து கொடுப்பதற்காகக் கிண்ணத்தை எடுத்துக் கொண்டு அவனருகே சென்ற 'வுடன் அவன் வாயை மூடிக்கொண்டான். அவள் கட்டாயப் படுத்தி வாயைத் திறந்து மருந்தை ஊற்றினாலும் அது உள்ளே செல்லவில்லை. ''அய்யா அவன் மருந்து குடிக்க மாட்டேங்கறான். காய்ச்சல் எறங்கற மாதிரி தோணுது வந்து பாருங்க'' என்று அவள் அய்யாவைக் கூப்பிட்டாள்.

அய்யா அருகே வந்து அவனுடைய உடம்பைத் தொட்டுப் பார்த்தார். காய்ச்சல் குறைந்து கொண்டிருந்தது. பிளேக் வந்தவர்களுக்குக் காய்ச்சல் அதிகமாவதும், குறைவதும் சகஜம் தான். ஆனால் அப்பொழுது காய்ச்சல் முற்றிலும் குறைந்து விட்டிருந்தது. சூடு குறைவது நோய் குணமாவதன் அடையாள மாக இருக்கும் என்று அவர் நினைத்தார். ''வீட்டிலே ரெண்டு பேருக்கு வியாதி வந்தது. ஒண்ணு போச்சு. ராமண்ணன் பெழைச்சுடுவான் போலத் தோணுது'' என்று அவர் நம்பிக்கை ஊட்டும் வார்த்தைகள் சொன்னவுடன், இறந்துபோன பார்வதியே உயிர் பிழைத்துவந்து விட்டதைப் போல் நஞ்சம்மா வுக்குச் சந்தோஷம் ஏற்பட்டது. ''பெழைச்சிட்டா காளம்மனுக் குப் புதுப்புடவை உடுத்தித் திருவிழா கொண்டாடுறேன்'' என்று நம்பிக்கையோடு சொன்னாள் அவள். உடல் சூடு கணத்துக்கு கணம் குறைந்து கொண்டே வந்தது. இது நல்ல அடையாளம் என்று அய்யா நம்பினார். பிறகு அவருக்குச் சந்தேகம் ஏற்பட்டுப் போர்வையை விலக்கி, கையை உள்ளே விட்டு அவனுடைய கால் களைத் தொட்டுப் பார்த்தார். அவை சில்லிட்டிருந்தன.

''கொஞ்சம் சாம்பல் வேணும். இருக்கா?'' என்று அவர் பரபரப்புடன் அவளிடம் கேட்டார்.

''அடுப்பிலே இருக்குது''

அவரே ஓடிப்போய் ஒரு பிடி சாம்பலை அள்ளி வந்து ராமண்ண னுடைய இரண்டு கால்களிலும் போட்டுத் தேய்க்க ஆரம்பித்தார். ஐந்து நிமிடம் தேய்த்த பிறகும் கால்களில் சூடு உண்டாகவில்லை. அதன் காரணத்தை அவர் வாயைத் திறந்து சொல்லவில்லை. போர்வையை நீக்கிப் பார்த்தார். அக்குள்களில் இருந்த கட்டி கள் வீங்கியே இருந்தன. எதுவுமே உடைந்திருக்கவில்லை. பிறகு போர்வையைப் போர்த்து விட்டு வலது கை நாடியைப் பிடித்துப் பார்த்தார். நாடி மிக மெதுவாகத் துடித்துக் கொண்டிருந்தது.

அவனுக்கும் கங்கை நீரைக் கொடுக்க வேண்டும். ஆனால், அதைப் பற்றி அந்தத் தாயிடம் சொல்லும் மன உறுதி அவருக்கு இருக்க வில்லை. 'இறப்பவனுக்கு வாயில் நீர் ஊற்றினால் என்ன, ஊற்று விட்டால் என்ன', என்று ஒரு கணம் அவர் யோசித்தார். ''என் மகனோட வாயிலே ஒரு சொட்டுத் தண்ணி கூட ஊத்தலையே'' என்று அந்தத் தாய் பிற்பாடு அழுது புலம்புவாளே என்ற எண்ண மும் வந்தது. அவர் தன் அருகே இருந்த கங்கைச் செம்பைக் கையில் எடுத்து மருந்துக் கிண்ணத்தில் இருந்த மருந்தைக் கொட்டி விட்டு அதில் கங்கை நீரை நிரப்பினார். அதை அவளுடைய கையில் கொடுத்து, சிறுவனின் வாயைத் திறந்து, ''அம்மா, இதை வாயிலே விடு'' என்றார். அவளுக்குப் புரிந்து விட்டது.

''ராமண்ணனும் போறானா அய்யா?'' என்று அவள் தொண்டையடைக்கத் தடுமாறியபடியே கேட்டாள். ''அம்மா, இப்பப் புலம்பக் கூடாது. நான் சொன்னபடி கேள்'' என்று உறுதி யாகச் சொல்லிக் கிண்ணத்தை அவளுடைய கையின் மீது படச் செய்து பிறகு தானே நீரை வாயில் ஊற்றினார். அதில் எவ்வளவு நீர் உள்ளே சென்றது, எவ்வளவு வெளியே வழிந்தது என்பதை அவர் கவனிக்கவில்லை. இடது கையை ராமண்ணனின் மூக்கினருகே வைத்துக்கொண்டு வலது கையால் நாடியைப் பிடித்து ராமண்ணனின் முகத்தையே பார்த்தவாறு உட்கார்ந்து கொண்டிருந்தார். நஞ்சம்மா பொறி கலங்கி, தன் மகனையே பார்த்தவாறு இருந்தாள். அவளுடைய பார்வை வெறித்து இருந்தது. இருவரும் மிகுந்த கவனத்துடன் பார்த்துக் கொண் டிருந்த போதிலும் எப்போது மூச்சு நின்றது என்பது அவர்களுக் குத் தெரியவில்லை. அய்யா தன் விரல்களால் தொட்டுப் பார்த் துக் கொண்டிருந்த நாடித்துடிப்பு மெதுவே நின்றுவிட்டது.

அய்யா பேச வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. உண்மை நிலையைச் சொல்லி, பிணத்தின் கை, கால்களைக் கட்ட வேண்டும். அதிக நேரமாகி விட்டால் கை கால்கள் விறைத்துவிடும். அவளிடம் எப்படிச் சொல்வது. அது அவளுக்குப் புரிந்து விட்டா லும் இன்னமும் ஆழமாகப் பதியவில்லை. பார்வதி இறந்தபோது, அழுததைப் போல் அவள் அழுது கொண்டிருக்கவில்லை. ராமண்ணா வின் நெஞ்சின் மீது முகத்தை வைத்துக் கொள்ளவில்லை. அவனுடைய கையையும் பிடித்துக் கொள்ளவில்லை. அவனுடைய தலை மட்டும் அவளுடைய மடிமேல் இருந்தது.

அப்பொழுது மற்றவர்கள் பார்வதியின் உடலை எரித்து விட்டுத் திரும்பிக் கொண்டிருப்பார்கள் என்று அய்யா நினைத்

தார். ''அவர்களுக்கு உடனே செய்தியைத் தெரிவித்துவிட்டு விறகுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். இருட்டி விட்டது. ஆகை யால் இந்த வேளையில் எரிப்பார்களா? அல்லது விடியும் வரை காத்துக் கொண்டிருக்க வேண்டுமோ? எப்படியானாலும் கை, கால் களை உடனே கட்ட வேண்டும்'' என்று அவருடைய சிந்தனை ஓடியது. ''அம்மா உயிர் ஆண்டவங்கிட்டே போனப்புறம் இந்தக் கூட்டிலே என்ன இருக்கு? கை, கால்களைக் கட்டறேன்'' என்று அய்யா அவளிடம் விரக்தியுடன் கூறினார்.

''உங்க வேலையை நீங்க செய்யுங்க'' என்று அவள் சொல்லி விட்டு ராமண்ணாவின் தலையைக் கீழே வைத்துவிட்டு விலகி யமர்ந்தாள். அய்யா உடலைப் போர்த்தினார். அந்த வேளையில் வெளியேயிருந்து ஆசிரியரும் சென்னிகராயரும் உள்ளே வந்தனர்.

''வாத்தியாரே! ராமண்ணாவோட உயிர் போயாச்சு. மேற் கொண்டு நடக்க வேண்டியதைக் கவனியுங்க'' என்றார் அய்யா.

''அட ஆண்டவனே''

''ஆண்டவங்கிட்டேதான் உயிர் போயிருக்கு. இப்ப வேறே எதுவும் பேசமுடியாது. புரோகிதரைக் கூப்பிடுங்க.''

ஆசிரியர் அண்ணா ஜோசியரின் கொட்டகைக்கு ஓடினார். சென்னிகராயருக்கு ஒன்றும் விளங்கவில்லை. அவருடைய கண் களில் நீர் நிரம்பியது. அவர் ராமண்ணாவின் உடலின் அருகே வந்து கண்ணீர் விட்டவாறு அமர்ந்து விட்டார்.

ஆசிரியர் அண்ணா ஜோசியருடன் திரும்பி வந்தார். அய்யா, ஜோசியரைப் பார்த்து ''சுவாமி, இருட்டிப் போச்சே, மேற் கொண்டு காரியம் நடத்தலாமா? காலையிலே வரை காத்திருக்க வேணுமா?'' என்று கேட்டார்.

''ராத்திரி நேரத்திலே எப்பிடிச் செய்யறது?''

''நெருப்புக் காய்ச்சல்னு பெரிய வியாதி வந்திருந்திச்சே? அப்ப பிணம் விழுந்தவுடனே எரிச்சுகிட்டிருந்தாங்க. ராத்திரி, பகல்னு பாக்கலே. ஒவ்வொருத்தருக்கும் தனித்தனியா வெறகடுக்க முடியாதுன்னு இரண்டு, மூணு பிணத்தை ஒண்ணாப் போட்டு எரிச்சுகிட்டிருந்தாங்க. ஊருக்கு பிளேக் வந்திருந்தப்ப சாஸ்திரப் படி நடக்க முடியாது. இப்பவே முடிச்சிடுவோம்'' என்று ஆசிரியர் குறுக்கிட்டுச் சொன்னார். அதை ஜோசியரும் ஒப்புக் கொண்டார்.

முன்பு வந்திருந்த ஆட்களையே மறுபடியும் அழைத்துக் கொண்டு வருவதற்காக ஜோசியர் போனார். வீட்டின் எதிரே

மூங்கில் குவிந்து கிடந்தது. விறகுக்கு ஏற்பாடு செய்ய அய்யா போனார். சென்னிகராயர் மட்டும் அமர்ந்திருந்த இடத்திலேயே அசையாமலிருந்தார்.

ராமண்ணன் பூணூல் போட்ட பையன். ஆகையால் திருமண மான அக்காவுக்குச் செய்ததைப் போலவே அவனையும் முறைப்படி எரிக்க வேண்டும். தூக்கிச் செல்வதற்கான ஆட்கள் வந்து விட்டார்கள். சற்று நேரத்தில் அய்யா திரும்பி வந்து ''சூரே கவுடர்கிட்டே கட்டை, மட்டை, வெறகு நெறைய இருக்கு. அவன் வண்டியும் கொடுத்தான். அவனோட மகனும் வேறே ஆளு களும் வண்டியிலே வெறகு அடுக்கறாங்க. அவங்க அங்கிருந்து நேரா மயானத்துக்கு வந்துடுவாங்க. அதனாலே நீங்க புறப் படுங்க'' என்று தகவல் கூறினார்.

எல்லா ஏற்பாடுகளும் முடிந்து விட்டன. பிணத்தை வெளியே தூக்கி வந்து பாடையின் மேல் வைத்துக் கட்டி வாய்க்கரிசி போட்டு விட்டுத் தூக்கிக் கொண்டு போக வேண்டும். அவ்வளவு தான். ஆனால் அய்யாவின் கண்களில் நஞ்சம்மா தட்டுப்பட வில்லை. ''நஞ்சம்மா எங்கே?'' என்று விசாரித்தார். யாருக்கும் தெரியவில்லை. அவசரத்தில் அவளை யாரும் கவனிக்கவில்லை. ''ஏதாவது குளம், குட்டையிலே தேடிப்பாருங்க. என்னவோ ஏதோ?'' என்று உடனே ஜோசியர் எச்சரித்தார்.

''இங்கேயே எங்காவது தண்ணிப்பக்கமா போயிருப்பா'' என்று ஆசிரியர் ஊகித்தார், அய்யாவுக்கு வேறு விதமான எண்ணம் தோன்றியது. ''நீங்க எங்கு வேணும்னாலும் தேடிப் பாருங்க. நான் ஏரிக்கரைக் கோவில்லே போய்ப் பார்க்கிறேன். கடைசிப் பையன் படுத்திருக்கான். நஞ்சம்மா அங்கே போயிருப்பா'' என்று சொல்லி விட்டு விரைவாக நடந்தார். சிறிது தூரம் ஓட்டமும் நடையுமாய்ப் போனார். கோவிலுக்குப் போய்ப் பார்த்ததில் அவர் ஊகம் சரியாக இருந்தது. விசுவம் கம்பளியின் மேல் படுத்துக் கொண்டிருந்தான். அவனுடைய தலை நரசியின் மடியிலிருந்தது. மூன்று மார் தூரத்தில் தூணுக்கருகே நஞ்சம்மா அமர்ந்து மகனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய கண்களில் நீர் இருக்கவில்லை. வெறித்த பார்வை யுடன் இருந்தாள்.

நரசி அய்யாவைப் பார்த்தாள். ''நஞ்சம்மா இருட்டிலே ஒண்டியா வந்தாங்க. நான் பையனுக்குக் கஞ்சி கொடுத்துக் கிட்டிருந்தேன். வந்தவுடனே பையன் தலையை மடியிலே வைச்சு கிட்டா. பெறகு ஏதோ அவ மனசிலே பட்டது. எங்கிட்டே ''நரசம்மா இவன் எங்கொழந்தையல்ல. எங்கொழந்தைன்னு

சொன்னு அந்தப்பாவி ஆண்டவன் பறிச்சுக்கிருன். உனக்குக் கொடுத்துடறேன். உனக்குக் கொழந்தையில்லே. நீயே வளத்து விடு. இங்கே வா. உன் மடியிலே வைச்சுக்க. இவன் என் மகனுமல்ல. நான் இவனுக்கு அம்மாவுமல்லன்னு சொல்லி பையனை என் மடியிலே போட்டுட்டு விலகிப் போய் அங்கே உக்காந்திருக்காங்க பாருங்க'', என்ருள்.

''அப்படியே செய், நரசம்மா. ராமண்ணனும் போயிட்டான். நாங்க மேற்கொண்டு காரியத்துக்காகப் போருேம். நீ ரெண்டு பேரையும் கவனிச்சுக்க. ஆம்பளேகளே யாரையாவது அனுப்பட்டுமா?''

''நான் இருக்கறப்ப என்ன பயம்? யாரும் வேணும்.''

காய்ச்சல் எப்படியிருக்கு?'' என்று கேட்ட அய்யா பையனின் நெற்றியைத் தொட்டுப் பார்த்தார். பிறகு ''கால் இடுக்குலே வலி ஏதாவது இருக்கா?'' என்று கேட்டார். ''கொஞ்ச நேரத்துக்கு முன்னுடி பேசினுன். நானே கேட்டேன். வலி ஒண்ணும் இல்லேன்னு சொன்னுன். காய்ச்சல் மட்டும் அனல் வீசுது.''

''அப்படியானு சரி. மூணு மணிக்கு ஒரு தடவை மருந்து கொடு'' என்று அவளிடம் கூறினுர். நஞ்சம்மாவை நோக்கி ''நஞ்சம்மா, பயப்படாதே இன்னும் கட்டி வரலே. மருந்து குணப்படுத்துது'' என்று ஆறுதல் கூறி ஊருக்குள் வேகமாக நடந்தார். ஆசிரியர் மட்டும் ஊருக்கு வெளியே பெண்கள் மலஜலம் கழிக்கச் செல்லும் வரப்புப் பக்கம் சென்று ''நஞ்சம்மா'' என்று கூவிப் பார்த்தார். மற்றவர்கள் நஞ்சம்மாவின் வீட்டிலேயே அமர்ந்து அந்த வீட்டிற்கு வந்த நாசத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அய்யா வந்தவுடன் நஞ்சம்மா கோவிலில் உள்ள விவரங்களைக் கூறி மேற்கொண்டு வேலேகளே நடத்த ஆயத்தப்படுத்தினுர். நான்கு பேர்கள் பாடையைத் தூக்கினுர்கள். அவர்களுடன் சென்னிகராயரும் புறப்பட்டார். அய்யா அங்கே மீதமிருந்த ஹேமாதி பானக பாட்டில்களேயும் கையில் அகப்பட்ட ஒரு படுக்கை, இரண்டு கம்பளங்களேயும் எடுத்துக் கொண்டு, வீட்டைப் பூட்டி, ஏரிக்குப் பக்கத்திலிருந்த கோவிலே நோக்கிப் புறப்பட்டார். புதிய பிணத்தை மயானத்திற்குத் தூக்கிச் சென்று வைத்திருப்பார்கள். பழைய பிணம் எரியும் ஜுவாலே தோப்பின் தென்னை மரங்களின் இடையே தெரிந்தது. கரையிலிருந்து கீழே இறங்கக்கூடிய இடத்தில் வயதான புரோகிதர் அய்யா சாஸ்திரிகள் ஒண்டியாக இடுப்பை வளேத்துக் கொண்டு நின்று கொண்டிருப்பது அந்த இருட்டில்

தென்பட்டது. "ஏன் சாமி, இப்படி ஒண்டியா நிக்கறீங்க?" என்று அய்யா கேட்டார். "பெணத்தை எரிக்கறதுக்காக போயிருக்காங்க. அவங்க திரும்பி வரட்டும்னு நிக்கறேன்" அவர்கள் வருகைக்காக இவர் ஏன் நின்று கொண்டிருக்க வேண்டும் என்று அய்யாவுக்குப் புரியவில்லை. அவர் படுக்கை கம்பளிகளைத் தூக்கிக் கொண்டு ஓட்டமும் நடையுமாய்க் கோவிலுக்குப் போனார்.

## 4

காலையில் எட்டு மணிக்கு குருபரஹள்ளியிலிருந்து இரண்டு ஆட்கள் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் காலியான ஊருக்கு வரவில்லை. ராமஸந்திர கிராமத்துத் தலையாரி, கணக்குப் பிள்ளையின் வீட்டின் எதிரேயிருந்த மூங்கில்களைக் கொண்டுவந்து போட்டான். அம்மன் கோவிலுக்குப் பின்புறமிருந்த தோப்பின் அருகே வயலில் மத்தியானத்திற்குள் ஒரு கொட்டகை போட்டு விட்டார்கள். ஆசிரியரே அய்யாவிடமிருந்து வீட்டுச் சாவியை வாங்கிக் கொண்டுவந்து எல்லா சாமான்களையும் வண்டியிலேற்றிக் கொட்டகைக்கு அனுப்பினார். அன்று மாலைக்குள் ஊர் முழுவதும் காலியாகி விட்டது. விசுவனுக்குக் காய்ச்சல் ஒரே மாதிரியாகவே இருந்தது. ஆனால் கட்டிகள் கிளம்பவில்லை. பார்வதிக்கும் ராமண்ணாவுக்கும் காய்ச்சல் வந்த இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் கட்டிகள் கிளம்பிவிட்டன. விசுவனுக்குக் காய்ச்சல் வந்து இரண்டு நாளாகி விட்டபோதிலும் கட்டிகள் வரவில்லை. அது அய்யா கொடுத்த மருந்தின் விளைவாகயிருக்கலாம். அல்லது காய்ச்சல் வந்தவுடன் தாமதிக்காமல் புதிய மருந்து கொடுத்த தன் பலனாகவும் இருக்கலாம். அதுவரை கெட்டது எதுவும் நடக்கவில்லை. பிளேக் மாரியம்மன் வந்த வீட்டில் சாவு அத்துடன் நின்று போய்விடும் என்று யாரும் சொல்ல முடியவில்லை. "நஞ்சம்மா இது சிவன் கோவில். இதுக்குள்ளே மாரியம்மன் எப்பிடி வரமுடியும்? அதான் விசுவனுக்குக் கட்டி வரலே. நீ பயப்படாதே" என்று அய்யா நஞ்சம்மாவுக்கு ஆறுதல் கூறினார்.

நஞ்சம்மா எதுவும் பேசவில்லை. பாறுங்கல்லைப் போல் தூரத்தில் அமர்ந்து, விசுவனைப் பார்த்துக் கொண்டு பொழுது சாயும் வரை கண் மூடாமல் அமர்ந்திருந்தாள். விடியும் நேரத்தில் அய்யாவும் கண்ணயர்ந்தார். முதல் நாளும் முந்திய நாளும் அவர் எதுவும் சாப்பிட்டிருக்கவில்லை. இரண்டு நாட்களுக்கு முன் வண்டிப் பயணத்தின்போது கண்ணயர்ந்ததைத் தவிர அவர் தூங்கவேயில்லை. இரண்டு நாட்களாக உடல் ஓயாமல் உழைத்துக் கொண்டிருந்தது. தூணில் சாய்ந்து உட்கார்ந்திருந்த அவர், தம்மையறியாமலேயே தரையில் உருண்டு விட்டார். அப்படியே

உறக்கம் வந்து விட்டது. ''அம்மா எனக்கு ஆண்டவன் கொழந்தையைக் கொடுக்கலே. கொழந்தை இல்லியேன்னு கவலேப்பட்டுகிட்டிருந்தேன்.'' என்று நரசி நஞ்சம்மாவிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

நஞ்சம்மா பேசாமல் அமர்ந்திருந்தாள். அப்பொழுது ஆசிரியர் வந்து அய்யாவின் அருகே இருந்த நஞ்சம்மாவின் வீட்டுச் சாவியை எடுத்துக் கொண்டார். நஞ்சம்மா அசையாமல் உட்கார்ந்திருந்தாள். சிறுவனின் தலே அவளுடைய மடியிலேயே இருந்தது. சிறிது நேரத்தில் ஆசிரியரின் மனேவி வந்தாள். அவள் கண்ணீர் வடித்தாள். ஆனல் நஞ்சம்மா அழவில்லே. ''எந்திரிச்சு வாங்க கொட்டகைக்குப் போகலாம். குளிச்சு கொஞ்சம் உப்புமா சாப்பிடுங்க. நீங்க நேத்து பூரா ஒண்ணும் சாப்பிடலே.''

தான் வரமாட்டேன் என்று நஞ்சம்மா தலே அசைத்தாள் ஆசிரியரின் மனேவி பேசாமல் திரும்பிப் போய் ஒரு பாத்திரத்தில் உப்புமா கொண்டு வந்தாள். நஞ்சம்மா முகம் கழுவிக் கொள்ளக் கூட எழுந்திருக்கவில்லே. ''சென்னேயா சாமி எங்கே?'' என்று நரசி விசாரித்தாள்.

''ராத்திரி மயானத்திலிருந்து வந்த பெறகு எங்க கொட்ட கைக்கு வெளியே சாக்குப்பையைப் போட்டுக் கிட்டுப் படுத்துட் டார். இப்பதான் அவருக்கு உப்புமா கொடுத்துட்டு வந்தேன்.''

''மகன் எங்கே இருக்கான்னு தெரியாதா?''

''தெரியும். எங்க வீட்டுக்காரரே சொன்னர். அவர் இப்ப வருவார்.''

''அம்மா இந்த நரசி கெட்ட பேச்சு பேசறுன்னு நீங்க சொல்ல வேணும். என்போல வேசிக்குக் கொழந்தை பெறந்தா அவங்களுக்கு உதவிசெய்ய யாரும் முன் வரமாட்டாங்க. யாருக் குப் பெறந்தவங்கன்னு எவனுக்கும் தெரியாம இருக்கறப்ப எதுக் காக வருவாங்க? இந்த சென்னேயா தனக்குப் பெறந்த மகனேப் பார்க்க வராம உப்புமா சாப்புடறுரு.''

பேச வேண்டாம் என்று நஞ்சம்மா நரசிக்குக் கை ஜாடை செய்தாள். ஆசிரியரின் மனேவி நஞ்சம்மாவிடம், ''பாருங்க, இந்த கிராம தேவதை மாரம்மா, சுங்கலம்மா இதுக எல்லாம் நல்லவைக அல்ல. இதுக கெடுதி செய்யுமே தவிர நல்லது செய் யாது. எப்பிடிப்பட்ட கஷ்டமானலும் சிருங்கேரி சாரதா தேவி பரிகாரம் செய்வா. விசுவனுக்குக் குணமாயிட்டா இந்தத் தடவை

நவராத்திரிக்கு உன் சன்னதியிலே குங்கும அர்ச்சனை செய்ய றேன்னு பிரார்த்தனை செஞ்சுக்குங்க. கண்டிப்பா குணமாயிடும். உங்களுக்கு இப்ப நீட்டு நீங்க எதுவும் செய்ய வேண்டாம் நான் வீட்டுக்குப்போய் மடிப்புடவை கட்டி, உங்க பேரிலே நாலணுக் காசு ஒண்ணு துணியிலே முடிஞ்சு சாமி முன்னடி வைக்கறேன்.''

''வேண்டாம்'' என்று நஞ்சம்மா தலையாட்டினுள்.

''ஏன் அப்பிடிச் சொல்றீங்க?''

''எந்தக் கடவுளும் எதுவும் செய்யப்போறதில்லே. கடவுள்னு சொல்றதெல்லாம் பொய். ஆயுசு இருந்தா பெழைக்கருங்க இல்லாட்டா சாகருங்க.''

''நஞ்சம்மா, கோபத்திலே அப்பிடிச் சொல்லாதீங்க. நான் சொன்னது தப்புன்ன சொல்லுங்க. பிரார்த்தனை செஞ்சா கடவுள் நிச்சயமாக் காப்பாத்துவார்.''

''தப்பும் இல்லே, கிப்பும் இல்லே எந்த சாமிக்கும் பிரார்த்தனை செய்ய வேண்டாம்'' என்று நஞ்சம்மா கண்டிப்பாகக் கூறி விட்டாள். மறுபடியும் அவர்கள் இருவரும் வற்புறுத்திய பிறகு ''உங்க இஷ்டம் போல செய்யுங்க'' என்று தயக்கத்துடன் கூறினுள். ஆசிரியரின் மனைவி புறப்பட்டுப் போனுள். அப்போது ஒவ்வொருவராகக் கோவிலுக்கு வந்து நஞ்சம்மாவிடம் துக்கம் விசாரிக்க ஆரம்பித்தார்கள். சிலர் பார்வதியின் அழகையும், குணத்தையும் புகழ்ந்தார்கள். வேறு சிலர் ராமண்ணனின் அறிவை மெச்சிக் கொண்டார்கள். ராமண்ணன் பிழைத்திருந்தால் தாசில்தார் வேலை பார்த்திருப்பான். இவ்வளவு அறிவு உள்ளவர்களை கடவுள் இந்த உலகத்தில் விட்டு வைப்பதில்லை, தன்னிடமே அழைத்துக் கொள்கிறுன். கல்யாணமானவுடன் பார்வதிக்குப் புதுப்புடவை உடுத்தி அவளை வெளியே அழைத்து வந்திருக்கக் கூடாது. அம்மனின் பார்வை அந்தப் பெண்ணின் மேல் விழுந்துவிட்டது. ஒவ்வொருவரும் இப்படித் தமக்குத் தெரிந்தபடி சொன்னுர்கள். முந்தைய தினம் இரவு நான்கு பேரும், அன்று காலையில் இரண்டு பேர்களும் இறந்து போனுர்களாம். ஊருக்கு வெளியே இருந்த கோவிலில் உட்கார்ந்திருந்த நஞ்சம்மாவுக்கும், நரசிக்கும் அந்த விஷயம் தெரிந்திருக்கவில்லை, வந்தவர்கள் ஒருவர் பின் ஒருவராகச் சென்ற பின், சர்வக்கா மட்டும் கோவிலிலேயே இருந்தாள்.

நஞ்சம்மாவும், சர்வக்காவும் சுக, துக்கங்களைத் தங்களுக்குள் பகிர்ந்துகொள்ளும் சிநேகிதிகள், வயதுக்கு வந்த பெண்ணை ஏற்கனவே பறிகொடுத்தவள் சர்வக்கா. அப்போது அவளுக்குத்

தன் மகளின் சாவைப்பற்றிய நினைவுவந்தது. உடனே நரசியைப் பற்றிய எண்ணமும் அவளை அலைக்கழித்தது. அந்த நரசி அவள் எதிரே அமர்ந்திருந்தாள். நஞ்சம்மாவின் குழந்தை நரசியின் மடியில் இருந்தது. அந்தக் குழந்தை தன்னுடையது அல்ல என்பதைப் போல் நஞ்சம்மா விலகி அமர்ந்திருந்தாள். நரசியின் நினைவு வந்தாலே சர்வக்காவின் மனம் குமுறும். ஆனால், அப்போது சும்மா உட்கார்ந்து விட்டாள். நஞ்சம்மாவை விட்டுச்செல்ல அவளுடைய மனம் ஒப்பவில்லை. ஆனால் என்ன பேசுவதென்று தெரியாமல் உட்கார்ந்திருந்தாள்.

அந்தச் சமயத்தில் குழந்தை பலமாக மூச்சுவிட ஆரம்பித்தான். காய்ச்சல் அதிகமாயிருப்பதுபோல் தோன்றியது. ''அம்மா காய்ச்சல் சூட்டிலே என் மடியெல்லாம் சுடுது. பையன் மூச்சு விடும்போது என்னமோ மாதிரி சத்தம் வருது. எனக்குப் பயமா இருக்குது. நீங்களே பாருங்க'' என்று நரசி பதறினாள்.

''நான் என் கையாலே தொடமாட்டேன் நீங்களே பாருங்க'' என்று நஞ்சம்மா சர்வக்காவிடம் சொன்னாள்.

சர்வக்கா குழந்தையின் அருகேசென்று, போர்வைக்குள் கைவிட்டுப் பார்த்தாள் உடம்பு வியர்த்துக் கொண்டிருந்தது. அவளுடைய உள்ளங்கை வியர்வையால் ஈரமாகிவிட்டது- அவளுக்கும் நிலைமை என்னவென்று விளங்கவில்லை. சாதாரண வேளையில் நஞ்சம்மாவுக்குத் தெரிந்திருக்கும். ஆனால் அப்போது அவளுக்குத் தெரியவில்லை. நரசி அய்யாவைக் கூப்பிட்டாள். அவருக்கு ஆழ்ந்த உறக்கம், சர்வக்கா அவருடைய தோளைப் பிடித்து உலுக்கிய பிறகு, அவர் எழுந்து உட்கார்ந்து, ஒரு நிமிடம் கண்ணைக் கசக்கிக் கொண்டார். பிறகுதான் அவருக்கு சர்வக்காவின் பேச்சு புரிந்தது. அவர் குழந்தையின் நெஞ்சைத் தொட்டுப் பார்த்துவிட்டு, ''உடம்பு வேர்க்குது, கொறையற துக்கு முன்னடி இப்படித்தான் ஆகும், கட்டி எதுவும் வரலியே. உயிருக்கு ஆபத்தில்லை. விசுவன் பெழைச்சிட்டான்'' என்று தைரியமூட்டும் குரலில் கூறினார்.

நஞ்சம்மா எதுவும் பேசாமல் ஊமையைப் போல் உட்கார்ந் திருந்தாள். ''இப்பதான் கடவுள் கண்ணைத் தெறந்து பாக்க றான்'' என்றாள் சர்வக்கா. பையனின் உடம்பு வியர்த்துக் கொண்டே இருந்தது. சிறிது நேரத்தில் காய்ச்சல் குறைந்து விட்டது. அப்போது ரேவண்ணசெட்டி அங்கே வந்தான். நஞ்சம்மா அதுவரை ஒரு தடவைகூட அவனுடன் பேசியது கிடையாது. குழந்தையின் உடம்பு வியர்த்துக் கொண்டிருப்

பதைக் கேட்டதும் அவன் குழந்தையின் உடம்பைத் தொட்டுப் பார்த்து விட்டு ''பையன் பெழைச்சிட்டான்'' என்று நம்பிக்கையுடன் கூறினன். ''நஞ்சம்மா, நீங்க இந்த கிராமத்துக்கே புத்திமதி சொல்ற அளவுக்கு விவரம் உள்ளவங்க. உங்களுக்கு யார் என்ன ஆறுதல் சொல்ல முடியும்?'' என்று சொல்லிவிட்டுத் தன் மனைவியின் பக்கம் திரும்பி ''அய்யா ரெண்டு நாளாச் சாப்பிடலைபோலத் தோணுது. வீட்டுக்குப் போய் களி கொண்டு வந்து கொடு'' என்று கூறி அவளையும் உடன் கூட்டிக்கொண்டு புறப்பட்டான். அய்யா நஞ்சம்மாவைக் கட்டாயப்படுத்தி எழுப்பி, முகம் கழுவிக் கொள்ளச் செய்தார். ஆசிரியரின் மனைவி கொண்டு வந்திருந்த உப்புமா அங்கேயே பாத்திரத்தில் இருந்தது. இனிமே நீதான் விசுவனை கவனிச்சுக்கணும் வேலை செய்யச் சக்தி இல்லாட்டா எப்படிக் கவனிச்சுக்க முடியும்? சாப்பிடு'' என்று உப்புமாவை அவள் எதிரே வைத்தார். அவள் சாப்பிடவில்லை. நரசி அவளை மறுபடியும் கட்டாயப்படுத்தினுள். நஞ்சம்மா வேண்டா வெறுப்பாக ஒரு பிடி உப்புமாவை வாயில் போட்டுக்கொண்டு, அதை விழுங்க முடியாமல் எழுந்து போய்த் துப்பி விட்டு வந்தாள். பிறகு பாத்திரத்தை ஒதுக்கி வைத்தாள். அய்யா தன் பொருட்களுக்கு மத்தியில் ஏதோ ஒரு சிறிய டப்பாவைத் தேடி எடுத்து, அதிலிருந்து கறுப்புப் பொடியில் இரண்டு சிட்டிகையை நஞ்சம்மாவிடம் கொடுத்துச் சாப்பிடச் சொன்னர்.

''இது என்ன அய்யா?'' என்று கேட்டாள் நஞ்சம்மா.

''சிவ பெருமானின் பிரசாதம். காசியிலேருந்து கொண்டு வந்தது. இதைச் சாப்பிட்டா உன் கஷ்டமெல்லாம் தீர்ந்து விடும். கொழந்தைக்குக் காய்ச்சல் குறையும்.''

நஞ்சம்மா அதைச் சும்மா விழுங்கினாள். பிறகு தூணின் மேல் சாய்ந்து குழந்தையைப் பார்த்துக் கொண்டே அமர்ந்து விட்டாள். அப்போது சென்னிகராயர் உள்ளே வந்தார்.

''இதுவரைக்கும் என்ன செஞ்சுகிட்டிருந்தீங்க?'' என்று நரசி அவரைப் பார்த்துக் கேட்டாள்.

''வரலாம்னு பொறப்பட்டேன். அதுக்குள்ளே யார், யாரோ துக்கம் விசாரிக்க வந்துட்டாங்க.''

''பரவாயில்லை, நல்ல ஆள்தான்'' என்று குத்தலாகச் சொன்னுள் நரசி.

எதுவும் பேசவேண்டாமென்று அய்யா நரசம்மாவிடம் கூறினர்.

பத்து நிமிடத்தில் நஞ்சம்மா கண் அயர்ந்தாள். தூணில் சாய்ந்து அமர்ந்திருந்த அவள் முழங்காலின் மேல் தலையைச் சாய்த்துக்கொண்டாள். முந்தைய இரவு அய்யாதான் கொண்டு வந்திருந்த படுக்கையை அவளருகே விரித்து அவளுடைய தோளைப் பிடித்துப் படுக்க வைத்தார். ஒரு பழைய போர்வையை எடுத்துப் போர்த்தினார். சற்று நேரத்தில் அவள் உறக்கத்தில் ஆழ்ந்துவிட்டாள்.

''அய்யா நீங்க நஞ்சம்மாவுக்குக் கொடுத்தது என்ன?'' என்று நரசி கேட்டாள்.

''தூக்க மருந்து, காசியிலேருந்து வர்றப்ப கொண்டு வந்தேன்.''

''அப்படியானா எனக்கும் கொஞ்சம் கொடுங்க'' என்றார் சென்னிகராயர்.

''அதை ஆம்பளைங்க சாப்பிடக் கூடாது. நஞ்சம்மாவுக்கு நாளைக்கு வரை விழிப்பு வராது நீங்க இங்கேயே இருங்க உங்களுக்கு இங்கேயே சாப்பாடு கொண்டுவந்து போடறதுக்கு வாத்தியார் பெண்டாட்டிகிட்டே சொல்றேன்'' என்று அய்யா சென்னிகராயரை ஆசுவாசப்படுத்தினார்.

பிறகு அய்யா நரசியைப் பார்த்து, ''இனி பயம் இல்லே. பையனைக் கீழே படுக்க வை, நீயும் வீட்டுக்குப்போய் ஏதாச்சும் சாப்பிடு. ராத்திரி உனக்கும் தூக்கம் இல்லே. வீட்டுக்குப் போய்ப் படுத்துக்க'' என்றார்.

''அய்யா பையன் பெழைச்சிட்டாப் போதும். வேணுமின்னா இன்னமும் ரெண்டு நாள் இப்படியே இருக்கேன்.''

''வீட்டுக்குப் போய் சாப்பாடு, தூக்கம் எல்லாம் முடிச்சிட்டு வா.''

ஒரு கம்பளியின் மேல் விசுவனின் தலையை நகர்த்தி வைத்து விட்டு நரசி எழுந்து வீட்டிற்குப் புறப்பட்டாள். நஞ்சம்மாவுக்கு விழிப்பு ஏற்படவே இல்லை. மதிய நேரத்தில் குருபர ஹள்ளியிலிருந்து குண்டே கவுடரும், அவருடன் பத்துப் பன்னிரண்டு பேரும் கோவிலுக்கு வந்தார்கள். ''உரக்கப் பேச வேண்டாம்'' என்று அய்யா அவர்களிடம் கூறியதால், அவர்கள் சென்னிகராயரை வெளியே அழைத்துப் போய் துக்கம் விசாரித்தார்கள். ''நாங்களும் எவ்வளவோ செஞ்சு பார்த்தோம். அந்த முண்டச்சிப் பசங்க பொழைக்கலே'' என்று சென்னிகராயர் சொன்னபோது அவருடைய கண்களில் நீர் சுரந்தது. ராமஸந்திர

கிராமத்தில் நடந்துவிட்ட துக்க நிகழ்ச்சியைப் பற்றி சூரிய நாராயணனுக்கு ஆசிரியர் கடிதம் எழுதினர். 'ஷேமம்' என்று எழுத வேண்டிய இடத்தில் கருப்பு மையைத் தடவி போஸ்ட் செய்து விட்டார்.

## 5

இரண்டு குழந்தைகளும் இறந்து ஆறு நாட்களாகி விட்டன. நஞ்சம்மா தன் கொட்டகைக்கு வந்துவிட்டாள். கொட்டகையில் அவளும் சென்னிகராயரும் மட்டுமே இருந்தனர். விசுவனுக்குக் காய்ச்சல் முற்றிலும் குணமாகி விட்டது. அவன் பத்து நாட்கள் கோவிலிலேயே இருக்கட்டும் என்று அய்யா கூறினர். அவனைக் கொட்டகைக்கு அழைத்து வர நஞ்சம்மாவும் பயப்பட்டாள். காலையிலும் மத்தியானமும் அவள் கோவிலுக்குப் போய் அவனைப் பார்த்து வந்தாள். தனக்குத் தீட்டு என்ற நினைவு வந்த பிறகு அவள் கோவிலுக்குப் போவதை நிறுத்தி விட்டாள். விசுவனுக்கு எழுந்து உட்காரக்கூட சக்தி இருக்கவில்லை. அய்யா அவனை எப்போதும் படுத்திருக்கச் செய்தார். நஞ்சம்மா கோவிலுக்கு வெளியே நின்று கொண்டே அவனைப் பார்த்துவிட்டுப் போய் விடுவாள்.

'பெற்ற தாயின் எதிரிலேயே குழந்தைகள் ஏன் இறந்து விடுகிறார்கள்?' என்ற கேள்வி நஞ்சம்மாவின் மனதை அரித்துக் கொண்டிருந்தது. எவ்வளவு யோசித்தாலும் விடை கிடைக்கவில்லை. ஒரு நாள் அதைப் பற்றி அய்யாவிடம் கேட்டாள். அவர் கூறினர் : ''அம்மா இது ஆண்டவன் மாயலீலை கிருஷ்ணன் சின்னப் பையனு இருந்தப்ப அவனோட அம்மாவைச் சோதிச்சுப் பார்த்தானும். அவன் பட்டினி கிடந்தா தாயும் பட்டினி கிடப்பாளாம். ஒரு நாள் அவன் அம்மாகிட்டே, 'நான் செத்தா நீ என்ன செய்வே? அப்படின்னு கேட்டான். 'உன்னை விட்டு நான் இருப்பேனு? நானும் செத்துப் போவேன்' அப்படின்னு அவசொன்னு 'உண்மையாவா?' 'உன் மேலே ஆணையா.'

ஒரு நாள் பக்கத்திலே இருந்த ஆத்திலே கால் வழுக்கி விழுந்துட்டான். ஒரு தடவை தண்ணிக்குள்ளே போய் மேலே வந்தவனைப் போல நடிச்சு ''அம்மா என்னை மேலே இழு, நீயும் தண்ணிக்குள்ளே குதி நான் செத்துப் போறேன், என்னைக் காப்பாத்துன்னு அலறினன் கோபி கரையிலேயே நின்னுகிட்டு ''யாராவது ஓடி வந்து என் கொழந்தையைக் காப்பாத்துங்களேன்'' அப்படின்னு கத்தினு. ஆனு யாரும் வரவில்லை. தான் உடுத்தியிருந்த புடவையை அவிழ்த்து ஒரு முனையைப் பிடிச்சுகிட்டு இன்னொரு முனையைத் தண்ணிக்குள்ளே வீசினு அது அவன் கையிலே

அகப்படலே, அம்மா, அம்மா அப்படின்னு கத்திட்டே அவன் தண்ணியிலே முழுகி செத்துப் போனுன், கோபி புடவையைக் கட்டிகிட்டு கரையிலே அழுதபடி உக்காந்திருந்தா. ஆனு அவ செத்துப்போக பயப்பட்டா. தன் மகனைக் கொன்ன கங்கையைச் சபிச்சா. பல நாள் ஆச்சு. கோபி தினசரி ஆத்தங்கரைக்கு வந்து அழுதுகிட்டிருந்தா. திடீர்னு ஒரு நாள் கிருஷ்ணனே ஆத்திலேருந்து எந்திரிச்சு வந்து அம்மா உன் அன்பு இவ்வளவு தானு? நான் செத்தாலும் நீ சாகலே. இனிமேலே பெத்த அம்மா வுக்கு முன்னுடியே கொழந்தைக சாகட்டும்னு அவன் சபிச்சான். அதான் இப்படி நடக்குது.''

அந்தப் பேச்சைக் கேட்ட நஞ்சம்மாவுக்கு கோபியின்மேல் மிகுந்த கோபம் வந்தது. 'அவள் உண்மையான அன்புடன் ஆற்றில் குதித்திருந்தால் உலகத்தில் தாய் இருக்கும்போதே குழந்தைகள் இறந்து போக மாட்டார்கள். ஆனுல் கோபி சாதாரணப் பெண் தானே. கிருஷ்ணன் ஆண்டவன் அல்லவா? மனிதர்களின் அன்பைச் சோதிப்பதற்காகத்தான் அவன் இப்படிச் செய்திருக்கிருன். தேவ லோகத்தைச் சேர்ந்த தாயாக இருந்தால் விழுந்து இறந்திருப்பாளோ என்னவோ! ஆனுல் தேவ லோகத்தைச் சேர்ந்த தாய்க்கும் மகனுக்கும் இறப்பே கிடையாதே! ஆகையால் அப்படி நடக்க முடியாது' என்றெல்லாம் நஞ்சம்மா எண்ணியவாறு இருந்தாள்.

கொட்டகைக்குத் திரும்பி வந்த பிறகும் அவளது மனம் அதைப் பற்றியே யோசித்து வந்தது. அந்தக் கதை உண்மை யாக இருக்குமா என்ற கேள்வியும் எழுந்தது. பார்வதியும் ராமண்ணனும் இறந்தபிறகு தான் ஏன் இறக்கவில்லை என்ற கேள்வியும் எழுந்தது. தானும் இறக்க வேண்டும் என்று மனதில் உறுதி பிறந்தது. அப்பொழுது இரவு மணி எட்டு. சென்னிக ராயர் புகையிலை மென்று கொண்டே கொட்டகையின் எதிரே இருந்த பெரிய கல்லின் மேல் அமர்ந்திருந்தார். நஞ்சம்மா உள்ளே படுத்துக் கொண்டிருந்த போதிலும் அவளுக்குத் தூக்கம் வரவில்லை. தான் அன்று கண்டிப்பாக இறக்க வேண்டும் என்று மனதில் திடமான முடிவு செய்தாள். பார்வதி, ராமண்ணனைத் தொடர்ந்து தானும் இறந்தால் ஆண்டவன் தன்னை உயிர் பிழைக்க வைத்து இறந்து போன குழந்தைகளையும் பிழைக்கச் செய்து விடுவார் என்ற சபலம் உண்டாயிற்று. அவள் பார்த் திருந்த யட்சகான நாடகங்களில், அவள் படித்திருந்த புராணங் களில் எப்படியெல்லாம் நடந்திருக்கிறது. தன் விஷயத்திலும் அவ்வாறு நடக்கக் கூடாதா? ஒரே நாளில் இரண்டு குழந்தைகள்

இறந்தபிறகு அவளுக்குப் புராணம், பகவான் ஆகியவைகளில் நம்பிக்கை போய் விட்டது. கோபி கிருஷ்ணனுக்காக இறக்காமல் பின் வாங்கினாளா? இல்லையா? என்னும் பிரச்சினை வேண்டாம். தன் குழந்தைகள் இறந்து ஆறு நாட்களாக நரக வேதனை அனுபவித்துக் கொண்டிருந்தாள். அந்த வேதனை வேண்டாம் என்று தீர்மானித்தாள்.

அந்தச் சமயத்தில் அவளுடைய கணவர் உள்ளே வந்து படுத்துக் கொண்டு விட்டார். சற்று நேரத்தில் அவருடைய குறட்டை ஒலி கேட்டது. அப்பொழுது மணி பதினொன்று இருக்கலாம். அவள் எழுந்து கொட்டகையின் கதவைச் சாத்தி விட்டு வெளியே வந்தாள். எங்கே போவது? எப்படிச் சாவது? என்பதைப் பற்றிய தெளிவான சிந்தனை இல்லாமல் மயானத்தை நோக்கி நடந்தாள். பிணம் எரிப்பதை அவள் பார்த்திருக்க வில்லை. பெண்கள் மயானத்திற்குப் போகக் கூடாதாம். அவள் நேரே எந்தவித தயக்கமும் பயமும் இல்லாமல் பேய், பிசாசு களைப் பற்றிய அச்சம் இல்லாமல் நடந்து சென்றாள். பிணம் எரித்த இரண்டு இடங்கள் தென்பட்டன. பிராமண ஜாதியில் வேறு எவரும் அப்போது பலியாகவில்லை. ஆதலால் அந்த இடங்கள் தன் குழந்தைகளை எரித்த இடமாகத்தான் இருக்க வேண்டும் என்பது அவளுக்குப் புரிந்தது. ஆனால் ராமண்ண னுடையது எது பார்வதியினுடையது எது என்று அவளால் நிச்சயிக்க முடியவில்லை. மூன்றாம் நாள் சாம்பல் கரைக்கும் சடங்கு முடிந்திருந்தது. அவள் இரண்டு இடங்களிலிருந்தும் ஒவ்வொரு பிடி சாம்பலை அள்ளி எடுத்துத் தன் புடவையில் முடிந்து கொண்டாள். மயானத்தில் ஒரு கிணறு இருந்தது. பிணத்தை எரிப்பதற்காக வந்தவர்கள் மட்டும் அதில் ஸ்நானம் செய்துவிட்டுப் போவார்கள். அதிகப்படியான புழக்கம் இல்லாத காரணத்தால் சற்றுப் பாசி படிந்திருந்தது. அவள் நேரே சென்று அந்தக் கிணற்றின் கைப்பிடிச் சுவர் மேல் ஏறி நின்று கண்களை மூடிக் கொண்டாள். இருள் அவளைச் சூழ்ந்து கொண்டு அவ ளுடைய உடம்பு ஒரு கணம் சுவாதீனம் இல்லாமல் போயிற்று. உடம்பு, கை, கால் எல்லாம் நடுங்கத் தொடங்கியது. சற்று நேரத்தில் மனம் அமைதி அடைந்து உடம்பின் நடுக்கம் குறைந் தது. ஒரு சூன்யமான பேரமைதியில் மனம் திளைத்தது. சாவு என்பது இதுதான். அங்கே பார்வதி, ராமண்ணன் தான் என் னும் பாகுபாடே இருக்கவில்லை. காலைச் சற்று முன்னே வைத்துக் குதிக்க வேண்டியதுதான்.

காலைத்தூக்குவதற்கு முன் ஊரில் இருப்பவர்களைப் பற்றிய சிந்தனை ஒரு கணம் வந்தது. மிஞ்சியிருப்பவர்கள் கணவன்,

விசுவன் ஆகிய இருவர்தான். கணவர் சுயநலத்தைக் கவனித்துக் கொள்பவர். விசுவனைப் பற்றிய எண்ணம் வந்தவுடன் மனம் கலங்கியது. அவன் பிளேக் நோயிலிருந்து பிழைத்து விட்டான். அவனைக் காப்பாற்றுபவர்கள் யார் என்ற கவலை மேலோங்கியது. அய்யாதான் அவனுக்குக் கதி என்று மனம் கூறியது. குழந்தைகள் இறந்த துயரத்தால் நஞ்சம்மாவும் உயிர் விட்டாள் என்று அறிந்து கொண்டு அய்யா அவனைக் கை விடமாட்டார் என்ற நம்பிக்கையும் உண்டாயிற்று. ஆனால் தான் இல்லாவிட்டால் அவன் அனாதையாகி விடுவானே! அய்யா என்னதான் செய்தாலும் தாயைப் போன்று இருக்க முடியுமா? பார்வதிக்கும், ராமண்ணனுக்கும் வியாதி வந்தபோது தனக்கு ஏன் வரவில்லை? விசுவனைக் காத்து வளர்க்கத்தான் ஆண்டவன் தன்னை விட்டு வைத்திருக்கிறான். பார்வதியின் அழகு, ராமண்ணனின் புத்திசாலித்தனம் ஆகிய இரண்டும் விசுவனிடம் இருக்கிறது. அவர்களுக்குப் பதிலாகத்தான் அவன் பிழைத்து விட்டான். தான் உயிர் துறந்து விட்டால் அவனுக்கு என்ன கதி?

இந்தச் சிந்தனைகளுடன் அவள் கைப்பிடிச் சுவரின் மேல் உட்கார்ந்து விட்டாள். திருமணமாகி அந்த ஊருக்கு வந்தது, குழந்தைகள் பிறந்தது மற்ற சுக துக்கங்கள், மழையில்லாமல் பஞ்சம் ஏற்பட்டது ஆகிய எல்லாமே அவளுடைய நினைவில் அசைந்தாடின. கடும்பசியையும் பொறுத்துக் கொண்ட பார்வதியையும் ராமண்ணனையும் ஆண்டவன் தன்னிடமே அழைத்துக் கொண்டுவிட்டான். விசுவன் பசி தாங்காமல் அம்மாவைப் பிடித்து அடிப்பான். அவனுடைய சுபாவமே அப்படி. தைரியம், கோபம், துடுக்குத்தனம், சாப்பாட்டில் உற்சாகம், ஆனால் அப்பாவைப்போல் தன்னை மட்டும் கவனித்துக் கொள்ளும் ஈன புத்தி உடையவன் அல்ல. குப்பைமேட்டில் திரிந்து ஏதாவது பொறுக்கி வந்தாலும் அம்மாவுக்கும் மற்றவர்களுக்கும் தராமல் சாப்பிடமாட்டான். அவனை அனாதையாய் விட்டுவிட்டு எதற்காகச் சாக வேண்டும்? இறந்து அடுத்த உலகிற்குப் போனாலும் அங்கே உள்ள பார்வதியும் ராமண்ணனும் தன்னிடம் ''அம்மா நீ விசுவனை விட்டு விட்டு வந்து விட்டாயே? அவனுடைய கதி என்ன? உனக்குப் புத்தி இல்லையா?'' என்று கேட்டால் என்ன பதில் சொல்வது?

அவள் தன்னை அறியாமல் கிணற்றுச் சுவரிலிருந்து கீழே இறங்கி வந்த வழியிலேயே நடந்து பிணத்தை எரித்த இடத்திற்கு வந்தாள். அங்கே சற்று நேரம் நின்ற பிறகு தோப்பின் வழியாக நடந்து ஏரிக்கரையை அடைந்தாள். அவளுடைய

கால்கள் கொட்டகையை நோக்கி நடக்காமல் ஏரிக்கரைக் கோவிலை நோக்கி நடை போட்டன. மாட்டு வண்டி போகும் அளவுக்கு கரை அகலமாக இருந்தது. கோவிலுக்கு அருகே வந்த போது அய்யா உள்ளே அமர்ந்து பாடிக் கொண்டிருந்தது கேட்டது. அவள் உள்ளே சென்ற பொழுது ஆமணக்கெண்ணை விளக்கு கோவிலில் நடு அங்கணத்தில் எரிந்து கொண்டிருந்தது. விசுவன் படுக்கையில் உறங்கிக் கொண்டிருந்தான். அவன் மேல் கம்பளியைப் போர்த்தி அதே படுக்கையின் ஒரு பக்கமாக அய்யா அமர்ந்து வலது கையால் தம்பூராவை மீட்டிக் கொண்டே பாடிக் கொண்டிருந்தார்.

''ஏற்ற இறக்கப் பாதையிலே
குளிர் வீசி நடுங்கும் போதினிலே
கத்திரிப் பழமொன்றாடியதே
ஆடிய பழம் தரையில் விழ்கையிலே
சொல்லியா வீழ்ந்தது செடியிடமே!''

வாசலில் வந்து நின்ற உருவத்தைக் கண்டதும் அய்யா அவளிடம் ''நீ சாயங்காலம் தானே வந்தே? மறுபடியும் எதுக்காக வந்தே? எந்தக் கவலையும் வேண்டாம். விசுவன் கல்லைப் போல திடமாக இருக்கான். இனி அவனை விசுவண்ணுன்னு கூப்பிடாதே; குண்டண்ணுன்னு கூப்பிடு. அவன் குண்டுக்கல் போல் திடமாக இருப்பான்,'' என்றார்.

'அய்யா சொல்வது தான் சரி. இனி அவனை குண்டண்ணுன்னு தான் கூப்பிடனும்' என்று மனதில் நினைத்துக் கொண்டு அவள், ''ஒண்ணுமில்லை, நான் போயிட்டு வர்றேன்'' என்றாள்,

''இப்ப எதுக்காக வந்தே?''

''சும்மா வந்தேன்.''

''வேணும்னு இங்கேயே இரு. ஆனு ஊர் வாய் பொல்லாதது. நீ வீட்டுக்கே போயிடு''.

''வர்றேன்'' என்று புறப்பட்டாள்.

''கொஞ்ச தூரம் உனக்குத் துணையாக வர்றேன் பொறு.''

''வேண்டாம், வேண்டாம், கொழந்தை தனியாப் படுத்திருக்கான்'' என்று சொல்லி அவள் வேகமாக நடந்து ஏரிக்கரைக்கு வந்தாள். கொட்டகைக்கு அருகே வருவதற்கு முன் புடவையில் கட்டியிருந்த சாம்பலின் நினைவு வந்தது. கரையின் இடது புறமாக இறங்கி புடவையின் முடிச்சை அவிழ்த்து சாம்

பலேத் தண்ணீருக்குள் கொட்டினுள். ''கங்கைத் தாயே, இது உன் வயித்திலே சேரட்டும்'' என்று சொல்லி அங்கிருந்து புறப் பட்டு கொட்டகைக்கு வந்து படுத்துக் கொண்டாள்.

6

ஏழாம் நாள் காலேயில் அவள் கோவிலுக்குப் போய் விசுவனேப் பார்த்துவிட்டு வந்து தன் கொட்டகையில் அமர்ந்திருந்தாள். முறைப்படி சடங்கு செய்வதாய் இருந்தால் அன்று ராமண்ணு வின் திதி ஆரம்பித்திருக்க வேண்டும். என்ன சாஸ்திரமோ! அவள் அதைப்பற்றி அதிகம் யோசிக்கவில்லே. பார்வதியின் கணவன்தான் அவளுக்குச் செய்ய வேண்டும்.

மத்தியாணம் பன்னிரண்டு மணி. நஞ்சம்மா தன் கொட்ட கையில் தலேமேல் கை வைத்துக் கொண்டு அமர்ந்திருந்தாள். சென்னிகரராயர் வெளியே போயிருந்தார், வெள்ளே வேட்டி போத்திக் கொண்டு யாரோ உள்ளே வருவதுபோல் தென்பட்டது நஞ்சம்மா தலேநிமிர்ந்து பார்த்தாள். வந்தவன் சூரிய நாராயணன், பார்வதியின் கணவன். அவன் இடது கையில் குழந்தை ரத்னுவைப் பிடித்துக் கொண்டிருந்தான், அக்குளில் ஒரு பெரிய பை, வலது கையில் கனமான கூடை. நஞ்சம்மா வந்தவனைப் பார்த்து ''உக்காருங்க'' என்று சொல்லவில்லே, மாப்பிள்ளேயைக் கண்டதும் கூச்சப்பட்டு உள்ளே செல்லவில்லே. வந்தவனே குழந்தையை ''பாட்டிகிட்டே போ'' என்று அனுப்பினுன்.

குழந்தை நஞ்சம்மாவை அதற்குள் மறந்திருக்கவில்லே. அவள் நேரே நஞ்சம்மாவிடம் சென்று அவளுடைய தோளேத் தொட் டாள். நஞ்சம்மா குழந்தையை மடியில் வைத்துக்கொண்டாள். சூரியநாராயணன் கூடையைத் திறந்து ''இதை உள்ளே எடுத்து வைங்க. இல்லாட்டா வாடிடும்'' என்று சொல்லி ஒவ்வொன் ருக வெளியே வைத்தான். மணம் வீசும் மல்லிகைச் செண்டு, தளிர் வெற்றிலேக் கட்டு, ஆரஞ்சுப் பழங்கள், வாழைப்பழச் சீப்பு, ஓட்டல் தின்பண்டப் பொட்டலங்கள் அவற்றைப் பார்த்து மனம் தாளாமல் நஞ்சம்மா குழந்தையை அணேத்துக் கொண்டு தேம்பி ஞள். சூரியநாராயணன் ஏதும் புரியாமல் தலேநிமிர்ந்து பார்த் தான். நஞ்சம்மா குழந்தையை அங்கே விட்டுவிட்டு சமையல் அறைக்குச் சென்ருள். அவள் விக்கி விக்கி அழும் சத்தம் வெளியே கேட்டது. அவனுக்கு ஒன்றும் புரியவில்லே.

''அம்மா எதுக்காக அழறீங்க?'' என்று அவன் கேட்டான்.

அவள் பதில் சொல்லவில்லை. தானே எழுந்து போய்க் கேட்க அவனுக்குக் கூச்சமாய் இருந்தது. அவன் அங்கேயே அமர்ந்திருந்தான். அரை மணி நேரம் கழிந்தது. பிறகு அவனே ''அம்மா எங்கிட்டே சொல்லக் கூடாதா?'' என்று கேட்டான். அவள் பேசாமல் வெளியே சென்று கொட்டகையின் அருகே விளையாடிக் கொண்டிருந்த ஒரு பையனைக் கூப்பிட்டு ''தம்பீ, வாத்தியார் கொட்டகைக்குப் போய் நான் கூப்பிட்டதாகச் சொல்லி இப்பவே கூட்டிட்டுவா'' என்று அனுப்பினாள். ஐந்து நிமிடங்களில் ஆசிரியர் வந்தார். ''எதுக்காகக் கூப்பிட்டிங்க?'' என்று அவர் கேட்டதும்'' எங்க கொட்டகைக்குப் போய்ப் பாருங்க'' என்று சொல்லிவிட்டு அவள் அங்கே நிற்காமல் ஏரிக் கரைக் கோவிலை நோக்கி நடந்தாள்.

ஆசிரியர் ஏதும் புரியாமல் கொட்டகைக்கு வந்து பார்த்தார். அங்கே சூரியநாராயணன் பித்துப் பிடித்தவன்போல் உட்கார்ந் திருந்தான். அவன் எதிரே பூ, பழம், வெற்றிலை, திண்பண்டங் கள் ஆகியவை இருந்தன. குழந்தை தன் தந்தையின் தோளைப் பிடித்துக் கொண்டு நின்று கொண்டிருந்தான்.

''எப்ப வந்திங்க? என் கடிதாசு கெடைக்கலியா?''

''எந்தக் கடிதாசு? கெடைக்கலியே?''

''எழுதிப் போட்டு அஞ்சு நாள் ஆச்சே.''

''எங்க ஊருக்கு வாரத்துக்கொருதடவை தான் தபால் வரும்.''

ஆசிரியர் ஒன்றும் சொல்லவில்லை. ''எனக்கு ஒண்ணும் புரியலியே! நீங்க வாய் தெறந்து சொல்லக் கூடாதா?'' என்று சூரியநாராயணன் கேட்டான்.

''வாய் தெறந்து எப்படி சொல்லட்டும்?''

''பரவாயில்லை, சொல்லுங்க.''

''பார்வதி, ராமண்ணன் ரெண்டு பேருமே போயிட்டாங்க. இன்னிக்கு ஏழாவது நாள்.''

''என்ன!'' என்று அவன் திடுக்கிட்டான்.

''பிளேக் ஊருக்கு வந்த வியாதி இவங்க வீட்டிலே புகுந்து அக்கா தம்பி இரண்டு பேரையும் ஒரே நாள்லே பலி வாங்கிட் டுது. விசுவன் தப்பிச்சிட்டான்'' என்று சொல்லி அவர் எல்லா வற்றையும் விவரித்தார்.

கதி கலங்கிய சூரியநாராயணன் அவர் சொல்வதை எல் லாம் ஊமையைப் போல் கேட்டுக் கொண்டிருந்தான். ''தலை

எழுத்து. யாராலும் அதை மாத்த முடியாது'' என்று அவர் சொல்லி முடித்தவுடன் அவனுடைய துக்கம் அவனையும் மீறி வெளிப்பட்டு அவன் விம்ம ஆரம்பித்தான். தந்தை அழுவதைக் கண்டதும் குழந்தையும் அழ ஆரம்பித்தது.

''வெங்கடேசய்யா, நான் படுபாவி'' என்று அவன் குழந்தையை இழுத்து அணைத்துக் கொண்டான்.

மறுபடியும் என்ன பேசுவதென்று ஆசிரியருக்குத் தெரியவில்லை. அவர் பத்து நிமிடம் பேசாமல் இருந்துவிட்டு ''எங்க வீட்டுக்குப் போகலாம், புறப்படுங்க'' என்றார்.

''இல்லே. இப்ப எதுவும் வேண்டாம், நான் திரும்பிப் போறேன்.''

''அப்புறம் புறப்படலாம், கொழந்தைக்குப் பசிக்கும். அவ ஏதாவது சாப்பிடட்டும், வாங்க போகலாம்'' என்று கட்டாயப் படுத்தி கிளம்பச் செய்து கொட்டகைக் கதவை மூடி உரல் மேல் இருந்த பூட்டைப் போட்டு வீட்டைப் பூட்டிவிட்டுக் கிளம்பினார். ஆசிரியரின் கொட்டகையில் ஆசிரியரின் மனைவி ஒரு புரச இலையில் குழந்தைக்கு சாப்பாடு போட்டாள். சூரிய நாராயணன் ஒரு டம்ளர் காப்பி கூடக் குடிக்கவில்லே. குழந்தை சாப்பிட்ட பிறகு அவன் ''புறப்படுங்க, கோவிலுக்குப் போய் விசுவனைப் பாத்துட்டு வரலாம்'' என்று ஆசிரியரிடம் சொன்னான். ஆசிரியர் முன்னே செல்ல அவன் குழந்தையைக் கையில். எடுத்துக் கொண்டு பின் தொடர்ந்தான்.

அவர்கள் கோவிலைச் சென்றடைந்த போது நஞ்சம்மா கொட்டகைக்குத் திரும்பிவிட்டாள். பிறகு ஒரு பையனிடம் ஆசிரியரின் வீட்டிற்குச் சொல்லி அனுப்பி சாவியை வாங்கிப் பூட்டைத் திறந்தாள். அது வரை சென்னிகராயர் ஆசிரியரின் வீட்டிலேயே சாப்பிட்டு வந்தார். ஆசிரியரின் மனைவி நஞ்சம்மாவுக்கு சாப்பாடு கொண்டு வந்து கொடுத்துக் கொண்டிருந்தாள். அவள் சில வேளைகளில் ஒரு கவளம் சாப்பிட்டு விட்டு மிஞ்சியதை நாய்க்குப் போட்டுக் கொண்டிருந்தாள். இப்போது கதவைத் திறந்து உள்ளே வந்ததும் அங்கே இருந்த பூ, பழம் முதலியவற்றைப் பார்க்க மனம் பொறுக்காமல் பார்வையை வலியத் திருப்பி உள்ளே போனாள். கணக்குப் புத்தகங்கள் வைக்கும் பெரிய பெட்டியில் பார்வதியின் கல்யாணப் புடவைகள், சூரியநாராயணன் கொடுத்த தோடு, மூக்குத்தி, வெள்ளி வளையல்கள் முதலியவை இருந்தன. நஞ்சம்மா அவற்றை எல்லாம் எடுத்து ஒரு வெள்ளைத் துண்டில் கட்டி வைத்தாள்.

மதியம் ஒரு மணிக்கு அவர்கள் கோவிலிலிருந்து திரும்பி வந்தார்கள். சூரியநாராயணன் பேசாமல் நின்று கொண்டிருந்தான். ''அவர் புறப்படறாராம். நாளைக்கு எல்லா ஏற்பாடுகளும் செஞ்சிட்டு ஒன்பதாம் நாள்லேருந்து கருமம் ஆரம்பிக்கணும்'' என்று ஆசிரியர் சொன்னார். நஞ்சம்மா ஒன்றும் பேசாமல் தான் கட்டி வைத்திருந்த மூட்டையை அவர்களின் எதிரே கொண்டுவந்து வைத்து ''இது அவளோட புடவை, துணிமணிகள் உங்களுக்குச் சேரணும். பையிலே வைச்சுக்குங்க'' என்றாள்.

அதைக் கண்டதும் அவன் கண்களில் நீர் வழிந்தது. ''அம்மா, முக்கியமான பொருளே போயிட்டப்புறம் இதைக் கொண்டு போய் என்ன செய்யறது? எனக்கு வேண்டாம்'' என்றான்.

''தாலி கட்டினதுமே அவ உங்களைச் சேர்ந்தவ ஆயிட்டா. அவளோட துணிமணிகளை வைச்சிட்டு நாங்க என்ன செய்யறது? அது என் கண்ணிலே படும் போதெல்லாம் மனவேதனை ஆகும்''.

ஆசிரியரும் வற்புறுத்திய பிறகு அவன் அதை எடுத்துத் தன் பையில் போட்டுக் கொண்டான். அவன் தான் நின்றிருந்த இடத்திலேயே தன் மாமியாருக்கு நமஸ்காரம் செய்து விட்டு குழந்தையையும் நமஸ்காரம் செய்யச் சொல்லி அங்கிருந்து புறப்பட்டான். ஒரு கையில் பையும் மற்றொரு கையில் குழந்தையும் வைத்துக் கொண்டு மெதுவாக நடைபோட்டான். அவனை வழி அனுப்புவதற்காக ஆசிரியர் பஸ் பாதை வரை சென்றார்.

அந்தச் சாலையில் மொத்தமாக மூன்று பஸ்கள் ஓடிக்கொண்டிருந்தன. முதலியார் கம்பெனியைச் சேர்ந்த ஒரு மோட்டாரும் சி. பி. சி. (C. P. C.) கம்பெனியைச் சேர்ந்த இரண்டு மோட்டார்களும் ஓடிக் கொண்டிருந்தன. அவர்கள் ரஸ்தாவை சென்றடைந்த பத்து நிமிடங்களில் திப்டூருக்குச் செல்லும் பஸ் ஒன்று வந்தது. ஆசிரியர் அவனை பஸ்ஸில் ஏற்றிவிட்டுத் திரும்பி வந்த போது நஞ்சம்மா ஆசிரியரின் கொட்டகைக்கு வந்திருந்தாள். ஆசிரியர் நஞ்சம்மாவிடம் ''அவர் பார்வதியோட திதியை செஞ்சுக்கறாராம். ராமண்ணன் பூணூல் போட்ட பையன். அதனாலே ஏதாவது சடங்கு செய்யத்தான் வேண்டும். இந்தப் புரோகிதர்ககிட்டே சிக்கிட்டா மொட்டை அடிச்சிடுவாங்க. அவங்க மனுஷனோட கஷ்டத்தைப் பத்தி கவனிக்கறதே கெடையாது. எல்லாத்தையும் எங்கிட்டே விட்டுருங்க. இருபத்தஞ்சு ரூபாயிலே நான் எல்லாத்தையும் முடிச்சிடறேன். இங்கே நாம் செய்யறது எல்லாம் செத்துப் போனவங்களுக்குப் போய் சேர்ற

தில்லே. ஏதோ நம்ம கருமத்தைத் தொலேச்சுக்க நாம செய்ய ரேம்.''

''இப்ப கையிலே பணம் இல்லே. நீங்களே ஒரு நடை குருபரஹள்ளிக்குப் போய் குண்டே கவுடர் கிட்டே சொல்லி வாங்கிட்டு வாங்க. அவர் மறுத்துச் சொல்ல மாட்டார். அடுத்த வருஷ வரியிலே சரிக்கட்டிடலாம்.''

உடனே ஆசிரியர் குருபரஹள்ளிக்குப் புறப்பட்டார். நஞ்சம் மாவும் தன் கொட்டகைக்குப் போனுள்.

7

அன்று மாலேயில் அக்கம்மாவும் கல்லேசனும் வண்டியில் வந்து இறங்கினுர்கள். அக்கம்மா ஓயாமல் அழுது கொண்டே வந்தாள் என்பது அவள் வண்டியில் இருந்து இறங்கிய போதே தெரிந்து விட்டது. கல்லேசனுடைய முகமும் துக்கத்தால் சோர்ந்திருந்தது. அக்கம்மா கொட்டகைக்குள் வந்தவுடன் ''நஞ்சா, நாங்க எல்லோரும் செத்துப்போயிட்டோமா? ஏழு நாள் ஆச்சாமே! எங்களுக்குச் சொல்லி அனுப்பக் கூடாதா?'' என்று அழுது புலம்பினுள்.

இந்த வேளேயில் தன் தாய் வீட்டுக் காரர்களேக் கண்டதும் நஞ்சம்மாவுக்கு அழுகை பொங்கியது. எனினும் அவள் தன்னேத் தானே தேற்றிக் கொண்டு ''உங்களுக்குச் சொல்லி அனுப்பற சந்தோஷ சங்கதியா இது?'' என்று கேட்டாள்.

''நல்லது, கெட்டதுன்னு நாங்க வர வேண்டாமா? நாங்க உனக்கு வேண்டாதவங்க ஆயிட்டோமா? ஒரு ரெண்டு மாசம் நம்ம வீட்டிலே இருந்துட்டு வரலாம். அப்பத்தான் இதெல்லாம் கொஞ்சம் மறக்க முடியும்'' என்று ஆறுதல் சொல்ல முயன்றுன் கல்லேசன்.

நஞ்சம்மா உடனடியாகப் பிறந்த வீட்டுக்குப் போக முடியாது. அப்போதுதான் விசுவன் தேறிக் கொண்டிருந்தான். ராமண்ணனுடைய திதி காரியங்களே ஆரம்பிக்க வேண்டி யிருந்தது. அதையும் தவிர அவளுக்குப் பிறந்த வீட்டுக்குப் போக விருப்பம் கிடையாது. அவள் அங்கே சென்று பல வருடங்கள் ஆகி விட்டன. ஆனுல் கல்லேசன் மிகவும் வற்புறுத் தினுன். அக்கம்மாவும் கல்லேசனும் விசுவனேப் பார்ப்பதற்காகக் கோவிலுக்குச் சென்றபோது பிழைத்துவிட்ட ஒரே பேரக் குழந்தையான விசுவனே அக்கம்மா கட்டிப் பிடித்து அழுதாள்.

பதினென்றும் நாள் நல்லது செய்யும் வரை அவர்கள் இருவரும் அங்கேயே தங்கினர். அக்கம்மாவுக்கும் கல்லேசனுக்கும்

மூன்று நாளிலே திட்டுப் போய் விட்டதால் அக்கம்மா தன் பேத்தியின் கொட்டகையிலேயே சமையல் செய்து கொண்டாள். ரேவண்ண செட்டியின் கொட்டகையைத் தேடிக் கொண்டு கல்லேசன் போனான்.

அக்கம்மா பேத்தியுடன் பேசிக் கொண்டிருந்தாள். ''இங்கே பார். கண்டி இப்பவும் ஊர்லே தங்கறதில்லே. அவங்கிட்டே மொதல்ல இருந்த குதிரை அவன் காசிக்குப் போன நாலு வருஷத்திலே செத்துப் போச்சு. இப்ப இன்னொரு குதிரை வாங்கி எங்கெல்லாமோ சுத்திக்கிட்டு இருக்கான். காசியிலேருந்து வந்தப்புறம் இன்னும் ஏதோ புது மந்திர தந்திரம் கத்துக்கிட்டு இருக்கான். பில்லி, ஏவல், சூன்யம் செய்யறதுக்காக எவ்வளவோ பேர் அவனை சென்னராயன் பட்டினம், சாந்தி கிராமம், ஹாசன் இப்படிப் பல எடத்துக்குக் கூட்டிட்டுப் போறாங்க. அவன் ஊரை விட்டுப் போய் இருபது நாள் ஆச்சு.

குருபரஹள்ளி நிங்கே கவுடன் மகளை நம்மூர் கோளி சிக்கண்ணன் தம்பிக்குக் கொடுத்திருக்கு இல்லியா? நிங்கே கவுடன் நேத்து நம்ம ஊருக்கு வந்திருந்தானாம். இன்னிக்குக் காலையிலே சிக்கண்ணன் வந்து, ''உங்க பேத்தியோட ரெண்டு கொழந்தைகளும் செத்துப் போச்சாமே! எல்லோரும் ஊரை விட்டுக் காலி செஞ்சுட்டாங்களாமே! நீங்க போகலியான்னு கேட்டான். அவன் சொன்னது உண்மையா பொய்யான்னு சந்தேகம் வந்தது. எங்க சம்மந்தியே சொன்னார் அப்படின்னான். உடனே கல்லேசன் ஹொன்னன்கிட்டே வண்டி பூட்டச் சொன்னான்'' என்று அக்கம்மா சொல்லி முடித்தாள்.

''அண்ணாவுக்கு வேறே எங்கேயும் பொண் தேடலியா?''

''கண்டி ஒரு எடத்தை ஏற்பாடு செஞ்சான். ஆனா கல்லேசன் பொண்டாட்டிக்கு அது தெரிஞ்சு போச்சு. அந்தப் பாவி அவளோட அப்பனுக்குத் திருட்டுத் தனமா கடுதாசி எழுதிப் போட்டுட்டா. அவளோட அப்பா ஒருநாள் வந்து கல்லேசன் கையைப் பிடிச்சு 'நீ கஷ்டப்பட்டப்ப உன்னை மகனா நெனைச்சு உதவி செஞ்சிருக்கேன். ஆண்டவன் கொழந்தையைத் தரலே. என்ன செய்ய முடியும்? இன்னொரு கல்யாணம் செஞ்சுக் காதே'ன்னு கண்ணீர் விட்டுக் கெஞ்சினார். அதுக்கப்புறம் அவனோட மனசு மாறிப் போச்சு. கல்யாணமே வேண்டாம்னு அவன் சொல்றான். நானும் கண்டியும் பல தடவை சொல்லிப் பார்த்தோம். அவன் கேக்கலே.''

ஆசிரியர் தீர்மானித்தபடியே ராமண்ணனின் காரியங்கள் இருபத்தைந்து ரூபாயில் முடிந்து விட்டன. திட்டு முடிந்த பிறகு

நஞ்சம்மா கோவிலுக்குப் போய் விசுவனைத் தூக்கிக்கொண்டு வந்தாள். அவன் அப்போது மெதுவாக நடக்க ஆரம்பித்திருந் தான். செழுமையாக இருந்த அவன் குச்சி போல இளைத்து விட்டான். அக்கம்மாவும் கல்லேசனும் வந்த மறுநாளே வண்டியைத் திருப்பி அனுப்பி விட்டார்கள். ''நஞ்சா, ஒரு வில் வண்டியை ஏற்பாடு செய்யறேன். புறப்படு போகலாம்'' என்று கல்லேசன் அவளைக் கட்டாயப் படுத்தினான்.

பிறந்த வீட்டுக்குப் போக நஞ்சம்மா விரும்பவில்லை. ஆனால் வரட்டுப் பிடிவாதமும் பிடிக்க விரும்பவில்லை. 'அண்ணி கெட்டவளாக இருக்கலாம். ஆனால் அண்ணன் எந்தக் கெடுதியும் செய்யவில்லை. பெண்ணைக் கொடுக்க முடியாது என்று சொல்லி விட்டதால் அவர்கள் கோபித்துக் கொண்டு போய் விட்டார்கள். ஆனால் பிறகு கல்லேசனே வந்து கூப்பிடுகிறான். என்ன செய்ய முடியும்? தான் ஊருக்குப் போய் விட்டால் கணவனும் ஊரில் தங்கமாட்டார். அரசாங்க வேலையும் கவனிக்கமாட்டார்.' ஆகையால் கல்லேசனிடம் ''அக்கம்மா இங்கேயே இருக்கட்டும். இந்த வருஷ வரி வசூல் முடிஞ்சப்புறம் நானே அவளைக் கூட்டி கிட்டு வர்றேன். அங்கே பத்துப் பதினஞ்சு நாள் இருந்துட்டுத் திரும்பி வர்றேன்'' என்று கூறினாள்.

கல்லேசன் ஒருவனே கால் நடையாக ஊருக்குப் புறப் பட்டான்.

# பதினொன்று

## 1

அந்தத் தடவை கண்டகி கிராமத்தின் சுற்று வட்டாரங் களுக்குச் சென்று விட்டு ஒன்றரை மாதங்களுக்குப் பிறகு கங்கம்மாவும் அப்பண்ணய்யாவும் ஊருக்குத் திரும்பினார்கள். ஊருக்கு வந்த பிறகுதான் பிளேக் நோயின் காரணமாக ஜனங்கள் எல்லோரும் ஊரை விட்டு வெளியே போயிருக்கிற விஷயம் தெரிந்தது. ஊருக்குத் திரும்பினால் ஓலை முதலியவைகளைப் போட்டுக் கொட்டகை அமைக்க வேண்டும். பாத்திரம், பண்டம் முதலியவைகள் ஊர்க்கோவிலில் இருந்தன. கதவைத் திறந்து எடுத்து வரலாமா, கூடாதா என்று ஒரு சந்தேகம். அந்தத் தொல்லைகள் எல்லாம் வேண்டாம் என்று முடிவு செய்து அவர் கள் மறுபடியும் மேற்கு நோக்கிப் புறப்பட்டார்கள். பிறகு ஹப்பன்கட்டா ஹாரனஹள்ளி வட்டாரங்களில் சுற்றிவிட்டு ஊருக்குத் திரும்பும் பொழுது மூன்று மாத காலமாகி விட்டது. அப்போது எல்லோரும் கொட்டகையை விட்டு ஊருக்குள் சென்றிருந்தனர்.

இரண்டு பேரக் குழந்தைகளும் ஒரே நாளில் இறந்ததைக் கேள்விப்பட்ட கங்கம்மாவுக்கு மருமகள் மேல் கோபம் வந்தது. ஆனால் அவள் எதிரே பேசப்பயம். மருமகளின் வீட்டுக்குப் போன போது தன்னை அறியாமல் அழுது விட்டாள். ''அந்தப் பொண்டாட்டி செத்தவனுக்குப் பெண் கொடுத்தா அவ பொழைப்பாளா? எங்கிட்ட ஒரு வார்த்தை கேட்டிருக்கக் கூடாதா?'' என்று சொல்லித் தன் துயரத்தை வெளிப்படுத்தினாள். இரண்டு பேரும் பிழைத்திருந்த போது அவளுக்கும் அவர்களுக்கும் அதிகத் தொடர்பு கிடையாது. அவள் அடிக்கடி ஊரை விட்டுச் சென்று விடுவாள். ஊரில் இருந்தாலும் அவள் குழந்தைகளைப் பார்க்க வருவது கிடையாது. அவர்களும் அவளுடைய வீட்டிற்குப் போகமாட்டார்கள். சில வேளைகளில் ஏரிக்கரைக்கு அருகிலோ, கீரை பறிக்கச் செல்லும் பொழுதோ பார்வதி எதிர்ப்படுவது உண்டு. அப்பொழுது ''உன் அம்மா வசூலுக்குப் போயிருந்தாளாமே, மசிப் பணம் எவ்வளவு கெடைச்சது?'' என்று விசாரிப்பாள். ''எனக்கு என்ன தெரியும் பாட்டி?'' என்று அவள் பதில் சொன்னவுடன் பேச்சு முடிந்து விடும். ''நீ இங்கிலீஷ் படிச்சு ஷேக்தார் வேலை பாத்து எனக்கு ஒரு செவப்புப் பட்டுப் புடவை வாங்கித் தர்றியாடா?'' என்று அவள் கேட்பாள். ''ஆகட்டும் பாட்டி'' என்று ராமண்ணன் பதில் சொல்லுவான். அவளுக்கு அந்த நினைவுகள் எல்லாம் வந்தன. மூன்று நாட்கள் அவர்களையே நினைத்து நினைத்து மருமகளைத் திட்டுவதன் மூலம் தன் கவலையை அவள் குறைத்துக் கொண்டாள்.

அதிகம் கவலைப்பட்டவன் அப்பண்ணய்யா. பார்வதியின் திருமணத்தில் அவன் இடுப்பு ஒடிய வேலை செய்திருந்தான். ஆதலால் அவனுக்கு அவளிடம் அதிக அன்பு ஏற்பட்டு விட்டது. ராமண்ணன் வகுப்பிலேயே அதிக மார்க்குகள் வாங்குகிறான் என்று கேள்விப்பட்டிருந்ததால் அவனிடமும் பிரியம் இருந்தது. ஷேக்தாருக்கே கணக்குகள் எழுதிக் கொண்டிருந்த பையன். அவன் இங்கிலீஷ் படித்து அவனே ஷேக்தார் வேலைக்கு வந்திருக்கலாம். அவனுடன் அதிகம் பேசி இருக்காவிட்டாலும் அவன் மேல் ஒரு பற்று இருந்து வந்தது. அப்பண்ணய்யா அண்ணியின் எதிரே நின்று ''நாம எல்லோரும் பாவிக! அவங்களைக் காப்பாத்த நம்மால் முடியலியே! நம்ம தலைஎழுத்து இப்படி!'' என்று புலம்பினான்.

அந்தத் தடவை விளைச்சல் நன்றாக இருந்தது. விளைச்சல் கணக்கும் எழுதியாயிற்று. ஒரு நாள் ஆசிரியரின் மனைவி வந்து நஞ்சம்மாவிடம் சொன்னாள். ''பாருங்க, சிருங்கேரி சாரதா

தேவியை தரிசனம் செஞ்சு குங்கும அர்ச்சனை செய்யறதா நான் விசுவன் பேரிலே காணிக்கை எடுத்து வைச்சேன், இல்லையா? அது எங்க வீட்டு சுவாமி மாடத்திலேயே இருக்கு இன்னும் எட்டு நாள்லே நவராத்திரி வருது. அப்ப நீங்க கொழந்தையையும் கூட்டிட்டு போயிட்டு வாங்க. நான் காணிக்கை எடுத்து வைச்ச அன்னிக்கே காச்சல் விட்டுப் போச்சு. சுவாமிக்கு எடுத்து வைச்ச காணிக்கையை நிறுத்தி வைக்கக்கூடாது''.

சிருங்கேரிக்குச் சென்று வர வேண்டும் என்று நஞ்சம்மா நினைத்தாள். ''சுவாமியோட சக்தியை அலட்சியப் படுத்திஞ மறு படியும் என்ன ஆபத்து வருமோ? எனக்கு இருக்கிறது விசுவன் ஒருத்தன் தான், அதனுலே கட்டாயமாப் போகணும்'' என்ருள். அங்கே செல்லும் வழியை ஆசிரியர் அவளுக்குச் சொன்னுர். திப்டூரில் ரயில் ஏறி தரீகெரெயில் இறங்க வேண்டும் இடையே பீரூரில் ரயில் மாற்ற வேண்டும். ராத்திரி தரீகெரெ ஸ்டேஷனில் படுத்து விட்டு காலையில் ரயில் பிடித்து நரசிம்ம ராஜபுரம் போக வேண்டும். அங்கிருந்து சிருங்கேரிக்கு பஸ் இருக்கிறது. அங்கிருந்து நரசிம்ம ராஜபுரத்திற்கு நாலே முக்கால் அணு. மறுபடியும் பஸ்ஸுக்கு இரண்டு ரூபாய். சிருங்கேரியில் சத்திரம் இருக்கிறது. இரண்டு வேளையும் சாப்பாடு போடுகிருர்கள்.

விசுவனுடன் தான்மட்டும் புறப்பட்டுப் போகலாம். ஆனுல் ரயில் பிரயாணம் செய்து பல இடங்களுக்கும் சென்று அனுபவம் உள்ளவர் யாராவது ஒருவர் துணைக்கு வரவேண்டும். அவ்வளவு பணத்தைத் திரட்டுவது எளிதல்ல. அர்ச்சனைக்கு ஐந்து ரூபாய் கொடுக்க வேண்டும், ஒரு நாள் அப்பண்ணய்யா அவளிடம் ''யார் கிட்டேயும் சொல்ல வேண்டாம். எங்கிட்டே இருபது ரூபாய் இருக்கு அதைக் கொடுக்கறேன். அப்புறம் நான் கேக்கறப்பக் கொடுங்க, துணைக்கு வேணும்னு நான் வர்றேன்'' என்று ரகசியமாகத் தெரிவித்தான்.

அவர்கள் ஊர் ஊராகச் சென்று திரட்டிய ராகியை அவ்வப் பொழுது விற்று விடுவார்கள். சில வேளைகளில் அப்பண்ணய்யா கங்கம்மாவுக்குத் தெரியாமல் அங்கும் இங்குமாகச் சிறிது ராகியை விற்றுப் புகையிலைக்குத் தேவையான பணத்தைச் சம்பாதித்து விடுவான்.

இருபது ரூபாயில் எல்லாமே அடங்கிப் போய் விடாது. மகளின் திருமணத்திற்குப் பின் நஞ்சம்மாவுக்குச் செலவு அதிகம். குருபரஹள்ளிக்காரரை எவ்வளவு தடவை கேட்க முடியும்? ''இங்கிருந்து திப்டூருக்கு நடந்தே போகலாம். நரசிம்ம ராஜ புரம் வரை ரயில் இருக்கு. அப்புறம் பஸ் பாதையிலே நடந்து

போகலாம். இருபது ரூபாய் போதும்'' என்று அப்பண்ணய்யா யோசனை சொன்னான்.

நஞ்சம்மா, விசுவன், அப்பண்ணய்யா மூவரும் புறப்படுவது என்று தீர்மானித்தனர். ஆனால் தானும் வருவதாக சென்னிக ராயர் பிடிவாதம் செய்தார். மறுபடியும் பணத்திற்கு எங்கே போவது? மேலும் அவர் மற்றவர்களை போல் வேகமாக நடை போடக் கூடியவர் என்று சொல்லவும் முடியாது. ''நான் எங்கிருந்தோ பணம் கொண்டு வர்றேன். உனக்கு என்ன?'' என்று கேட்டார் அவர். ''வரி ரசீது யாருக்கும் எழுதித் தரக் கூடாது'' என்று உறுதியாகச் சொன்னாள் அவள். ''சரி'' என்று அவர் ஒப்புக் கொண்டார். அவருடைய செலவு தனி, மற்றவர் களுடைய செலவு தனி. நஞ்சம்மா ஐந்து படி மாவு இடித்தாள். அப்பண்ணய்யா எட்டுப் படி நெல் அம்மாவுக்குத் தெரியாமல் கொண்டு வந்து கொடுத்தான். அவல் செய்து அதைக் கட்டிக் கொண்டார்கள். யாத்திரைக்குச் செல்ல கங்கம்மாவுக்கும் ஆசை தான். ஆனால் இந்த மருமகளுடன் போகக்கூடாது. மகனையும் அவள் தடுத்தாள். செலவெல்லாம் அண்ணியுடையது என்று அவன் புறப்பட்டான். கடந்த ஆறு மாத காலமாகவே நஞ்சம்மா விசுவனுக்குப் பால் நெய் எல்லாம் தாராளமாகக் கொடுத்து வந்தாள். அவன் எப்பொழுதும் திடகாத்திரமான பையன்தான். ஒரு நாள் விடியற்காலை ஜாமத்தில் நஞ்சம்மா விசுவன், அப்பண்ணய்யா ஆகிய மூவ்ரும் ரொட்டி கட்டி எடுத்துக் கொண்டு புறப்பட்டனர்.

தான் பஸ்ஸில் திப்டூருக்கு வந்து அவர்களுடன் சேர்ந்து கொள்வதாகச் சென்னிகராயர் கூறினார். ரொட்டிப் பொட்டலம், வறுத்த மாவு, அவல், வெல்லம், புளி, நான்கு தேங்காய்கள் இரண்டு படி அரிசி, இரண்டு பாத்திரங்கள் ஒன்றிரண்டு துணி ஆகியவைகளை ஒரு சாக்கில் போட்டு அதைத் தலைமேல் வைத்துக் கொண்டு அப்பண்ணய்யா புறப்பட்டான். இரண்டு ரவிக்கை, விசுவனின் துணி, இரண்டு போர்வைகள், ஜமக்காளம் ஆகியவைகளை ஒரு சிறு மூட்டையாய்க் கட்டி அதை ஒரு கையில் பிடித்துக் கொண்டு மற்றொரு கையில் விசுவ னின் கையைப் பிடித்தவாறே நஞ்சம்மா நடந்தாள். விசுவன் அம்மாவின் பிடியை உதறிவிட்டு சித்தப்பாவை விட முன்னே ஓடிக் கொண்டிருந்தான். ''அம்மா உன்னை விட எனக்குத் தானே பலம் அதிகம்'' என்று அவன் அடிக்கடி கேட்பான். ஆறு மைல் நடந்த பிறகு ஒரு குளக்கரையில் அமர்ந்து ரொட்டி சாப்பிட்டார்கள். மறுபடியும் இரண்டு மூன்று மைல் நடந்த பிறகு விசுவனின் நடை மட்டுப்பட்டது. அம்மாவின் கையைப்

பிடித்துக் கொண்டு நடக்க ஆரம்பித்தான். அப்போது பஸ் அவர்களைக் கடந்து சென்றது. சென்னையா பின் பக்கத்து சீட்டில் உட்கார்ந்திருந்தார். ''பாத்தீங்களா?'' அப்பண்ணய்யா கேட்டான்.

''இல்லே.''

''அம்மா, பஸ்ஸிலே அப்பாவை உக்காத்திக்கறுளே என்னை யும் ஏன் உக்காத்திக்கக் கூடாது?'' என்று விசுவன் கேட்டான்.

''உம், அவன் உக்காரச் சொல்வானு? அவங்கம்மாவை......'' என்று அப்பண்ணய்யா பதில் சொன்னுன்.

''சரி போகட்டும் விடுங்க'' என்று நஞ்சம்மா சமாதானம் சொன்னுலும் அவன் மறுபடியும் பேசினுன். ''நீங்க என்ன வேணும்னுலும் சொல்லுங்க. சென்னையா ஒரு மட்டமான முண்டை மகன். மொதல்லேருந்தே அப்பிடித்தான், தன் காரியத்திலேயே கண்ணுய் இருப்பான். இவனைப் போல ஆள் களைச் செருப்பாலே அடிக்கணும். அவங்கம்மாவை...''

''அப்பண்ணய்யா! யாத்திரை போறேம். நாம் ஏன் கெட்ட வார்த்தை பேசணும்?'' என்று நஞ்சம்மா அவனை அடக்கினுள். பிறகு விசுவனைப் பார்த்து ''கண்ணு பஜகோவிந்தம் பாடு பார்க்கலாம். சிருங்கேரி மடத்தை ஆரம்பிச்ச சங்கராச் சாரியார் பாடினது அது'' என்றுள்.

விசுவன் நிதானமாகப் பாட ஆரம்பித்தான். அப்பண்ணய்யா வுக்கு அசை போட ஏதாவது தேவையாக இருந்தது. அவன் சட்டைப் பையிலிருந்து வெற்றிலை எடுத்து சுண்ணும்பைத் தடவி ஒரு கொட்டைப் பாக்கையும் வாயில் போட்டுக் கொண்டான். பிறகு வழி நெடுகத் துப்பிக் கொண்டே நடந்தான்.

ரயில் ஒரு மணிக்கு திப்டூர் வந்து சேரும். அவர்கள் பன்னிரண்டு மணிக்கு ஸ்டேஷனுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். மறுபடியும் ஒரு முறை ரொட்டி சாப்பிட்டார்கள். அப்பொழுது மாதவ பட்டர் ஓட்டலில் சாப்பாட்டை முடித்துக்கொண்டு சென்னிகராயரும் வந்து சேர்ந்தார். அப்பண்ணய்யா இரண்டரை டிக்கட் வாங்கினுன். சென்னிகராயர் தனியாக ஒரு டிக்கெட் வாங்கினுர்.

இரவு தரீகெரெ ஸ்டேஷனில் குழாய்த் தண்ணீர் பிடித்து வைத்துக்கொண்டு மூவரும் ரொட்டி சாப்பிட்டார்கள். ஊரைச் சுற்றிப் பார்த்து விட்டு வருவதாகச் சென்னிகராயர் கிளம்பினுர். ''அவன் எங்கே போறுன்னு தெரியுமா?'' என்று அப்பண்ணய்யா கேட்டான். ''எங்கோ போகட்டும் அந்தப் பேச்சு நமக்கு

வேண்டாம்'' என்று நஞ்சம்மா கூறினாள். ஸ்டேஷனில் ஒரு மூலையில் ஜமக்காளத்தை விரித்துக் கொண்டு விசுவனுடன் நஞ்சம்மா படுத்துக் கொண்டாள். அவர்களுடைய தலை மாட்டில் ஒரு சாக்குத் துணியை விரித்துப் போர்வையைப் போர்த்துக் கொண்டு மூட்டையைத் தலையின் அடியில் வைத்துக்கொண்டு அப்பண்ணய்யா படுத்தான். உடனே மூவரும் தூங்கி விட்டனர். திரும்பி வந்த சென்னிகராயர் தம்பிக்கு அருகே ஒரு வேட்டியை விரித்துப் படுத்துக் கொண்டார்.

மறுநாள் காலையில் அவர்களுடைய மூட்டையில் பத்து ரொட்டிகள் மிஞ்சி இருந்தன. அது மிகவும் வறண்டு போய் விட்டதால் தண்ணீரில் ஊற வைத்துச் சாப்பிட வேண்டிய தாயிற்று. ஆனால் சட்னி கெட்டுப் போய் விட்டது. ஓட்டலில் ஒரு அணாவுக்கு சாம்பார் வாங்கி வருவதாகச் சொல்லி அப்பண்ணய்யா கிளம்பிப் போனான். சென்னிகராயர் முகம் கழுவி ஓட்டலுக்குப் புறப்பட்டார். விசுவன் ரகளை செய்தான். நஞ்சம்மா கணவனிடம் ''ஒரு அணாவுக்கு சாம்பார் கொண்டு வாங்க, அப்படியே விசுவனுக்கு ஒரு இட்டிலியும் ரெண்டு சாதா தோசையும் கொண்டு வாங்க'' என்றாள்.

ரயில் கிளம்பியதும் விசுவனுக்குத் தாங்க முடியாத சந்தோஷம். சன்னலுக்கு வெளியே எண்ண முடியாத அளவுக்கு மரங்கள். அவைகளை ஒட்டிச் செடி கொடிகள். அப்பொழுதுதான் மழைக்காலம் ஓயத் தொடங்கி இருந்தது. எங்கே பார்த்தாலும் பசுமையான செடிகள். அப்பொழுது ஒரு பெரிய மிருகம் நடந்து போய்க் கொண்டிருந்தது. தன் புத்தகத்தில் அவன் அதைப் பார்த்திருக்கிறான். அதுதான் யானை என்று கண்டு கொண்டான். ''அம்மா காடுன்னா இது தானே?'' ''ஆமா'' என்றாள் அவள். அவளும் அதுவரை இவ்வளவு அடர்த்தியான மரங்களைப் பார்த்ததில்லை.

அப்பண்ணய்யா சொன்னான். ''இந்தப் பக்கம் எல்லாம் இப்படித்தான். ஷிமோகா தாண்டிப் போனா இன்னும் பயங்கர மான காடுதான்.''

''நீங்க எப்ப ஷிமோகாவுக்குப் போனீங்க?''

''அப்பண்ணய்யா பேசாமல் இருந்தான். உடனே நஞ்சம்மா விற்கு அந்த விஷயம் பளிச்சிட்டது. தான் அப்படிக் கேட்டிருக்கக் கூடாது என்று அவளுடைய மனதில் பட்டது. இதே அண்ணியைக் காலால் உதைத்து விட்டு போலீஸாருக்குப் பயந்து இந்த இடங் களில் சுற்றிக் கொண்டிருந்ததை நினைத்து அவன் ஊமையாகிப்

போனான். சென்னிகராயர் புகையிலையைக் கையில் வைத்துத் தேய்த்துக் கொண்டிருந்தார்.

மதியம் பன்னிரண்டு மணிக்கு ரயில் நரசிம்ம ராஜபுரம் வந்து சேர்ந்ததும் பஸ் ஏஜெண்டுகள் ஓடி வந்து ''சிருங்கேரி, சிருங்கேரி அர்ஜெண்ட் சிருங்கேரி'' என்று கூச்சல் போட்டார்கள்.

''நீங்கள் பஸ்ஸிலே வர்றிங்களா, நடந்து வர்றிங்களா?'' என்று சென்னிகராயர் கேட்டார்.

''பஸ்ஸிலே வரப் பணம் ஏது?'' என்று அப்பண்ணய்யா பதில் சொன்னான்.

''எனக்கு கால் சுளுக்கிட்டது. நான் பஸ்ஸிலே போறேன். உங்களுக்கு முன்னாடி போய்ச் சத்திரத்திலே சொல்லி எடத்துக்கு ஏற்பாடு செய்யறேன். நீங்க பின்னாடி வந்து சேருங்க'' என்று சொல்லிவிட்டு அவர் முன்னால் நடந்தார்.

''சென்னையா, கொஞ்சம் நில்லு. அண்ணியையும் விசுவனையும் கூட்டிட்டுப்போடா, மூணு ரூபாய் ஆகும். விசுவனுக்கு அரை டிக்கெட், நாம் ஏழைக, பையனை மடியிலே வைச்சுக்கறோம். டிக்கெட் வேணும்னு சொன்னா அவங்க ஒத்துக்குவாங்க. நான் பின்னாடியே நடந்து வர்றேன்'' என்று அப்பண்ணய்யா இரைந்தான்.

''எங்கிட்டே பணம் இல்லே. அவகிட்டே பணம் இருந்தா வரட்டும்'' என்று சொல்லிப் பேசாமல் நடந்து போனார். ஜனங்கள் எல்லோரும் முண்டியடித்துக் கொண்டு பஸ்ஸில் ஏறினார்கள். சென்னிகராயரும் ஏறி அமர்ந்து கொண்டார்.

வறண்டு போன ரொட்டிகளைத் தண்ணீரில் ஊறவைத்து மூவரும் சாப்பிட்டார்கள். ரொட்டிகள் தீர்ந்து விட்டன. அவர்களுக்குப் பசியாறவில்லை. நஞ்சம்மா புளிக்குழம்பில் ஒன்றரை ஆழாக்கு மாவைப் போட்டுப் பிசைந்தாள் விசுவனுக்குச் சட்டைப் பை நிரம்ப அவல் கொடுத்து ஒரு துண்டு வெல்லத்தையும் கொடுத்தாள். அப்பண்ணய்யா அண்ணியின் மூட்டையையும் தன்னுடைய கோணிப் பைக்குள் போட்டுக் கொண்டு நடக்க ஆரம்பித்தான். அவள் விசுவனின் கையைப் பிடித்துக் கொண்டு நடந்தாள்.

௨

இதைப் போன்ற காட்டை அவள் அதுவரை பார்த்ததில்லை. மரம், செடி, கொடி என்றால் அவளுக்குப் பிடிக்கும். புரச இலை பறிப்பதற்காக சோளன குட்டவுக்குச் செல்லும் பொழுதெல்லாம்

ஊருக்கு வெளியே உள்ள பசுமையான காட்டைப் பார்த்துக் கொண்டே நிற்பாள். அந்தப் பசுமையைக் கண்டு அவளது மனம் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தது. தேக்கு இலைகள் எவ்வளவு அகன்று இருக்கின்றன. ஒரு இலையிலேயே சாப்பிட்டு விடலாம். புரச இலை இவ்வளவு அகலமாக இருந்தால் தைக்கும் சிரமமே இருக்காது. பெரிய புரசை இலையைக் கண்டு விட்டால் ராமன் உடனே ''அம்மா இந்த இலை எவ்வளவு பெரிசு'' என்று குதிப்பான். இலை மிகவும் பெரிதாக இருந்தால் தைக்கச் சரிப்படாது.

இலை பறிக்கச் செல்லும் பொழுதெல்லாம் பார்வதி ஏதோ ஒரு பாட்டை முணுமுணுத்துக் கொண்டே இருப்பாள். பாட்டு என்றால் அவளுக்குக் கொள்ளை ஆசை. அம்மாவுக்குத் தெரிந்த எல்லாப் பாட்டுக்களையும் அவளும் கற்றுக் கொண்டு விட்டாள். காலை ஜாமத்தில் ராகி வீசிக்கொண்டே அவள் பாடுவதைக் கேட்க மிக நன்றாக இருக்கும். அவளுடைய கணவனுக்குப் பாட்டு என்றால் மிகவும் பிடிக்குமாம். சூரிய நாராயணன் ஆர்மோனியத்தில் சுருதி போட்டு பாரதத்தில் உள்ள பாட்டுக்களைப் பாட ஆரம்பித்தால் கேட்பவர்களின் மனம் உருகிவிடுமாம். எத்தனையோ சுலோகங்கள் தெரியுமாம். அவனுடைய சுபாவம் மிகவும் நல்லது. கோபதாபம் கிடையாது. ஆண்பிள்ளை என்றால் அப்படி இருக்க வேண்டும். அப்படிப் பட்டவனுடன் குடும்பம் நடத்த பார்வதி கொடுத்து வைக்கவில்லை. சூரிய நாராயணனையும் சென்னிகராயனையும் அவள் மனம் ஒப்பிட்டுப் பார்த்தது. ''அதெல்லாம் முன் பிறவியின் பலன்'' என்று நினைத்து மனத்தை வேறு திசையில் திருப்பினாள்.

விசுவனுக்குக் காட்டைப் பார்த்ததும் தாங்க முடியாத சந்தோஷம். ''அம்மா அங்கே பார். நம்ம ஊர்த்தோப்பிலே இருக்கற மாமரத்தை விடப் பெரிசா இருக்கு'' என்று ஒரு மரத்தைக் காட்டினான். உடனே அடுத்த மரத்தைக் காட்டி ''அதோ பார்! அந்த மரம் ஆகாயம் வரை இருக்கு'' என்றான். ''அந்தக் கொரங்கு ஏன் அப்பிடி இருக்கு? நம்மூர் கொரங்கு இதைவிட நல்லா இருக்கே'' என்று கேட்டான் அவன்.

''இது காட்டுக்குரங்கு''

''அப்பிடின்னா நம்மூர் கொரங்கு எது?''

''நாட்டுக் குரங்கு''

ஒன்றிரண்டு பாம்புகள் அவர்களுடைய கண்ணில் தட்டுப் பட்டன. பாம்பு அவர்கள் பார்க்காத பிராணி அல்ல. ராம ஸந்திர கிராமத்திலும் இருக்கிறது. இங்கே காடு நெருக்கமாக

உள்ளதால் பாம்புகள் அதிகம். கவனமாக நடக்க வேண்டும். மலைப் பகுதிகளில் மலைப் பாம்புகளும் இருக்குமாம். பெரிய மரத்தைப் போல் விழுந்து கிடந்து ஒரு மனிதனையே விழுங்கி விடுமாம்.

அம்மாவின் கையைப் பிடித்துக்கொண்டு நடந்த விசுவனுக்கு அலுப்பு ஏற்பட்டது. அவன் கையை உதறிக் கொண்டு தனியே நடக்க ஆரம்பித்தான். சிறிது நேரம் முன்னால் ஓடுவான். சில சமயம் பின்னே மெதுவாக நடந்து வருவான். ஒரு தடவை நஞ்சம்மா ஏதோ யோசித்தவாறு மெதுவாக நடந்து கொண்டிருந்தாள். அப்பண்ணய்யா வழக்கம் போல் பத்து இருபது அடி முன்னே சென்று கொண்டிருந்தான். நஞ்சம்மா திடீரென்று திரும்பிப் பார்த்தாள். விசுவனைக் காணவில்லை. அவள் திடுக்கிட்டாள். காட்டில் புலியும் சிறுத்தையும் திரிந்து கொண்டிருக்கும் என்பது அவளுக்குச் சட்டென்று நினைவுக்கு வந்தது. பாம்புகளின் நடமாட்டமும் அதிகம். ''அப்பண்ணய்யா விசுவனைக் காணோம், கொஞ்சம் பாருங்க'' என்று கூவினாள். இருவரும் தேடிக் கொண்டு பின்னே நடந்து சென்றார்கள். ஒரு பர்லாங் தூரம் சென்றதும் விசுவனின் குரல் கேட்டது. அவன் ஒரு தேக்கு மரத்தின் கிளையில் ஏறி எதிர் மரத்திலிருக்கும் குரங்கைப் பார்த்து ஈ...... ஈ...... என்று நையாண்டி செய்து கொண்டிருந்தான். ''ஏண்டா சொல்லாம கொள்ளாம இப்பிடி செஞ்சே?'' என்று அவள் கேட்டதும் ''அந்தக் கொரங்கு கூட விளையாடத்தான்'' என்று பதில் சொன்னான். அதற்குப் பிறகு அவனை முன்னே நடக்கச் சொல்லி அவள் பின்னே நடந்து வந்தாள்.

அப்பண்ணய்யாவைக் காட்டின் அழகு ஈர்க்கவில்லை. ''இந்தக் காட்டுப் பகுதியை விட நம்மூர் வயல் பகுதியே பரவாயில்லை. இங்கு நெல் மட்டும் தான். ராகி இல்லை. ராகி சாப்பிடாமல் கால்களுக்கு எப்படி சக்தி வரும்? மலைப் பகுதிக்காரர்கள் நம்மைப் போல் சக்தி உள்ளவர்கள் அல்ல'' என்று அவன் நினைத்தான், அப்பொழுது அவனுக்குக் கடந்த கால நிகழ்ச்சிகள் நினைவுக்கு வந்தன. ''மகள் ஜெயலட்சுமிக்கும் பார்வதியின் வயது தான். இரண்டாவது மகன் இராமகிருஷ்ணன் மிகவும் இளையவன். மூன்றுவது என்ன குழந்தை? இராமகிருஷ்ணன் நிஜமாகவே எனக்குப் பிறந்தவன். அப்படிக் கிடையாது என்று அம்மா சொல்லி விட்டாள். அவன் பள்ளிக்கூடம் போகிறானோ என்னவோ! அவனுக்கு மந்திரம் கற்பிக்கிறோம் என்று அவர்கள் சொன்னார்கள். இப்பொழுது அவன் கிராமப் புறங்களில் தானம் வாங்குகிறானோ என்னவோ? அவள் இப்போது எப்படி இருக்

கிருளோ என்னவோ! என்னைப் பற்றி நினைக்கிருளோ இல்லையோ! நான் தாலியைப் பறித்திருக்கக் கூடாது. அவள் இலே, கிலே ஏதாவது தைத்து உப்பு, புளி செலவுக்காவது சம்பாதித்து இருந்தால் இப்படி இல்லாமல் சுகமாக இருந்திருக்கலாம். விடிந்தவுடன் எதற்காக காப்பி? அரிசிச்சோறு, துவரம் பருப்பு ரசம், காபி ஆகியவைகள் தினசரி வேண்டுமென்ருல் என்ன செய்ய முடியும்? அவளுடைய அப்பன் சொத்து வைத்து விட்டுப் போய் இருக்கிருளு? அந்த முண்டை என்னை விட்டுப் போயிருக்கக் கூடாது'' என்றெல்லாம் நினைத்துக் கொண்டான். அவனுக்கு வாழ்க்கையில் ஒரு விதமான வெறுப்பு ஏற்பட்டது போல் இருந்தது. அவன் அண்ணியைப் பார்த்து ''அந்தப் பொண்ணுக்கு இதுக்குள்ளே கல்யாணம் செஞ்சிருப்பாங்களா?'' என்று கேட்டான்.

''யாரைச் சொல்றிங்க?''

பெயரைக் குறிப்பிட்டுச் சொல்ல அவனுக்கு அவமானமாக இருந்தது. ''எந்தப் பொண்?'' என்று அண்ணி மறுபடியும் கேட்டாள். ''அந்த ரேவண்ண செட்டி மக ருத்ராணி நெனைப்பு வந்தது'' என்று சொல்லிச் சமாளித்தான்.

''ருத்ராணி செத்து எத்தனை வருஷமாச்சு? என்ன இப்பிடிச் சொல்றிங்க?'' என்று அண்ணி கூறியதும் அவன் பதில் சொல்ல வில்லை. அவனுடைய பேச்சு அவளுக்குப் புரியவில்லை. அவர்கள் மௌனமாக நடந்தார்கள். அவன் பத்து மார் முன்னே நடந்தான். அவள் பின்னே நடந்தாள். விசுவன் ஏதோ அரட்டை அடித்தவாறு சிற்றப்பாவுக்கு முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தான்.

இடையில் ஒரு தடவை உட்கார்ந்து இளைப்பாறி விட்டு இரவு ஒரு மணி சுமாருக்கு ஓர் கிராமத்தை அடைந்தார்கள். ''ஒரு பாத்திரத்தில் கொஞ்சம் அவலையும் வெல்லத்தையும் போட்டுப் பிசைந்து கொள்ளலாம். மற்ருென்றில் வறுத்த மாவைப் பிசையலாம். இல்லாவிட்டால் ஏதாவது மரத்தின் கீழே மூன்று கல்லை வைத்து சோறு வடித்து ஓட்டலில் ரசம் வாங்கிக் கொள்ளலாம்.'' என்று நஞ்சம்மா நினைத்துக் கொண்டாள்.

''இந்த மலைப் பகுதியிலே எந்த வீட்டுக்குப் போனுலும் சாப்பாடு போடுவாங்க. போய் சாப்பிட்டு வரலாம்'' என்று அப்பண்ணய்யா கூறிஞன். ''எந்த வீட்டுக்கும் போக வேண்டாம்'' என்று அண்ணி கூறிஞள்.

''அப்படியானு நானும் விசுவனும் போய்ச் சாப்பிட்டுட்டு வர்ரோம். நீங்க சாதம் வடிங்க. ஓட்டல்லே கொழம்பு வாங்கி வர்றேன்.''

''யாரும் போக வேண்டாம். ஊர்லேருந்து கொண்டு வந்ததைச் சாப்பிடலாம்.''

கடைசியில் கல்லை வைத்துச் சோறு வடித்தார்கள். இரண்டு அணுவுக்குக் குழம்பு வாங்கி வந்து வயிறுரச் சாப்பிட்டார்கள். ஒரு கடைத் திண்ணையில் இரவு படுத்திருந்து விட்டுக் காலையில் எழுந்து மாவு பிசைந்தார்கள். அப்பண்ணய்யா ஒரு தேங்காயை உடைத்து ஓட்டலுக்குப் போய்த் துருவிக் கொண்டுவந்தான். ஊற வைத்த அவலுடன் தேங்காயும் வெல்லமும் போட்டுச் சாப்பிட்டார்கள். மூன்று பேரும் சாப்பிட்டு முடிந்தபின் மிஞ்சி இருந்த அவலைக் கட்டி எடுத்துக் கொண்டு புறப்பட்டார்கள்.

பல மைல்கள் நடந்து விட்டதால் விசுவனுடைய தொடைகள் இரண்டும் வலித்தன. நஞ்சம்மாவின் கால்களும் வலித்தன. ஆனால் நடக்காமல் வேறு வழி இல்லை. ''கால் வலிக்குதா கண்ணு?'' என்று நஞ்சம்மா கேட்டவுடன் ''ஆம்பளைக்குக் கால் வலிக்காது'' என்று சொல்லி விட்டு விசுவன் முன்னே ஓடினான். வேகமாக நடந்து ஹரிஹரபுரத்தை அடைந்தார்கள். ஆற்றில் குளித்து சுவாமி தரிசனம் செய்த பிறகு மடத்தில் சாப்பிட்டார்கள். இவர்களைப் போலவே நூறு பேர் வந்திருந்த தால் நஞ்சம்மாவுக்குக் கூச்சம் ஏற்படவில்லை. சாப்பாடு முடிந்ததும் விசுவனுக்குத் தூக்கம் வந்தது. சிருங்கேரிக்கு மறுபடியும் ஆறு மைல்கள் நடக்க வேண்டும். நஞ்சம்மாவுக்குக் கால் வலித்தது. ஆகையால் அங்கேயே தங்க முடிவு செய்தார் கள். ஒரு வீட்டுத் திண்ணையில் விசுவனைப் படுக்க வைத்து விட்டு அப்பண்ணய்யாவும் அங்கேயே படுத்துக் கொண்டான். எதிரே ஓடிக் கொண்டிருந்த ஓடையில் உட்கார்ந்து கொள்ள வேண்டுமென்று நஞ்சம்மாவிற்கு ஆசை உண்டாயிற்று. மணலில் நடந்து போய்த் தண்ணீரில் கால்களைச் சற்று நேரம் அளைந்து விட்டு அவள் ஒரு கல்லின் மேல் அமர்ந்தாள். மிகவும் ஆனந்தமாய் இருந்தது. பார்வதி, ராமண்ணனைப் பற்றி நினைவு வந்தது. ''அவர்களும் உயிரோடு இருந்து இங்கே வந்திருந்தால் எவ்வளவு சந்தோஷமாயிருக்கும். பேசிக் கொண்டே நடந்து போகலாம். நான் ஒரு பாவி'' என்று நினைத்துக் கொண்டு கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தாள். சாயங்காலம் விசுவனும் அப்பண்ணய்யாவும் கூப்பிடும் வரை அங்கேயே இருந்தாள்.

3

அவர்கள் போய்ச் சேருவதற்குள் சென்னிகராயருக்கு சிருங்கேரி பழக்கம் ஆகி விட்டது. மடம், உக்கிராணம், சாப்பிடும் கூடங்கள் ஆகிய - ஒவ்வொரு இடத்திலும் எத்தனை பேர் சாப்பிடலாம் என்பதெல்லாம் அவருக்கு அத்துப்படியாகி விட்டன. ஆற்றுக்கு அப்பால் இருந்த நரசிம்ம வனம், கால பைரவன் குன்று ஆகியவைகளையும் பார்த்து முடித்து விட்டார். அவர் வந்து சேர்ந்ததும் சத்திரத்தில் தனி அறைக்கு முயற்சி செய்து பார்த்தார். நவராத்திரி சமயத்தில் எத்தனையோ பெரிய மனிதர்களுக்கே இடம் கிடைக்காமல் திண்டாட்டம் ஆகி விட்ட பொழுது சென்னிகராயருக்கு எப்படிக் கிடைக்கும்? நிர்வாகி யிடம் கெஞ்சிக் கேட்ட பிறகு மாடிப் படியின் கீழ் இருந்த ஓர் இடத்தைக் கொடுத்தார்கள் ஏறி இறங்குபவர்களின் சந்தடி அதிகமாக இருந்தபோதிலும் இந்த இடம் கிடைத்து விட்டதே என்று சந்தோஷம். சத்திரத்தின் காவல்காரர் அருகிலேயே இருந்ததால் அவர்களுடைய மூட்டை, முடிச்சைக் கவலையின்றி வைத்துச் செல்ல முடிந்தது. நஞ்சம்மா காலையில் ஒன்பது மணிக்கு சிருங்கேரி போய்ச் சேர்ந்தாள். சத்திரத்தில் சென்னிக ராயருடைய இடத்திலேயே சாமான்களை வைத்து விட்டு நஞ்சம்மா, விசுவன், அப்பண்ணய்யா ஆகிய மூவரும் மடத்திற்கு வந்தார்கள். நஞ்சம்மா ஆற்றில் குளித்து விட்டு ஈரத்துணியை உலர்த்திக் கொண்டே எல்லாக் கோவில்களையும் சென்று பார்த்தாள். பொழுது ஏறி விட்டதால் மறுநாள் குங்கும அர்ச்சனை செய்யலாம் என்று தீர்மானித்தாள். மத்தியானம் சாப்பாடு முடிந்த பிறகு மூவரும் ஒரு படகில் நரசிம்ம வனத்துக்குப் புறப்பட்டார்கள். சென்னிகராயரும் அவர்களுடன் புறப்பட்டார். ''எங்களை விட்டு நீ மட்டும் பஸ்ஸில் வந்தியே? இப்ப நீ எங்க கூட வரக் கூடாது'' என்று விசுவன் தடுத்தான். அப்பண்ணய்யாவும் அவனுடன் சேர்ந்து கொண்டான். ''யாரும் எதுவும் பேசாதீங்க'' என்று நஞ்சம்மா சமாதானம் செய்தாள்.

நரசிம்ம வனத்தில் எவ்வளவு விதமான ரோஜாப் பூக்கள்! பக்தர்கள் அவற்றைக் கை நிறைய எடுத்துக் கொண்டு சாரதா தேவிக்குச் சமர்ப்பிக்கிறார்கள். கோவிலுக்கும் பறித்துச் செல்லலாம். விசுவன் ஓடிச் சென்று இரண்டு பூக்களைப் பறித்தான். கையில் முள் குத்தியது இருந்தாலும் வலியை மறந்து விட்டு ''நீ வைச்சுக்கம்மா'' என்று நஞ்சம்மாவிடம் கொடுத்தான். ''இதை நாம் வைச்சுக்கக் கூடாது, சுவாமிக்கு'' என்று கையில் வாங்கிக் கொண்டாள். உடனே அவளுக்கு மகளின்

நினைவு வந்தது. 'பார்வதிக்கு அடர்த்தியான நீண்ட கூந்தல். சீவி, சடை பின்னி விட்டால் திருஷ்டி விழுந்து விடும். மகிழம் பூக்கள் பூக்கும் காலத்தில் ராமண்ணன் சீக்கிரமாகச் சென்று ஒரு கூடைப் பூவைப் பறித்து வருவான். பார்வதியே அவற்றைப் பின்னுவாள். அவள் பெரியவள் ஆன பிறகு ஒரு முறை பூ வைத்துப் பின்னி விட்ட பொழுது எவ்வளவு அழகாக இருந்தாள். ராமண்ணன் ஒரு நாள் பள்ளிக் கூடத்திலிருந்து இரண்டு ரோஜாப் பூக்களை அவளுக்காகக் கொண்டு வந்தான். அக்காவும் தம்பியும் ஒருவருக்கொருவர் பிரியமாக இருந்தார்கள்.'

ரோஜாப் பூக்களைப் பார்த்தவுடன் நஞ்சம்மாவின் மனம் அலைபாய்ந்தாலும் அவள் அவர்களுடன் நடை போட்டாள். பெரிய குரு தவம் செய்த குகை, பைரவன் குன்று முதலியவற்றை எல்லாம் சென்னிகராயர் சுற்றிக் காண்பித்தார். திரும்பி வரும் பொழுது ஒரு ஈரத்துணி நிறைய ரோஜாப் பூக்களைக் கட்டிக் கொண்டு வந்து கோவிலில் கொடுத்தாள்.

மறுநாட் காலை குங்கும அர்ச்சனைக்காக சீக்கிரமே கிளம்பினாள். சுவாமி வேலை முடியும் வரை விசுவன் பட்டினியாக இருக்க வேண்டும். அப்பொழுது ஏழரை மணி ஆகி விட்டது. சென்னிகராயர் வெளியே போய் விட்டு சத்திரத்திற்குத் திரும்பினார். வேட்டியில் பதினைந்து, இருபது பாகற் காய்களை முடித்து வைத்திருந்தார்.

"இதை ஏன் கொண்டு வந்தே?" அப்பண்ணய்யா கேட்டான்.

"ரொம்ப நல்லா இருக்கு. ஒண்ணரை அணுவுக்கு இவ்வளவு கொடுத்தான். இதைப் பச்சடி செய்" என்று அவர் மனைவியிடம் சொன்னார்.

"உங்களுக்கென்ன விளையாட்டா? கோவிலுக்குப் புறப்பட்டிட்டு இருக்கோம்."

"சரி வந்தப்புறம் செய் எங்கிட்டே இருக்கிற டிபன் கேரியரில் போட்டு எடுத்துப் போய் அவங்க சாப்பாடு போடும் போது போட்டுக்கறேன். அவங்க கொழம்பு, ரசம் காரசாரமாக இல்லை."

"ஆயிரக்கணக்கா ஜனங்க சாப்பிடறாங்க அவங்க நடுவே போட்டுகிட்டா சிரிப்பாங்க"

"யார் அவன் சிரிக்கறது? அவங்கம்மாவை......"

"புண்ணிய யாத்திரைக்கு வந்திருக்கோம் ஏன் கெட்ட வார்த்தை பேசறிங்க?"

''இங்கே அடுப்பு எங்கே இருக்கு? அரைக்கறது எங்கே? இங்கே வந்தப்புறம் தான் பச்சடி வேணுமா? என்று அப்பண்ணய்யா கேட்டான்.

''சத்திரத்திலே ஆட்டுக்கல், அம்மிக்கல் இருக்கு. இங்கேயே செங்கல் வைச்சு வேக வைச்சிடலாம். காவல்காரங்கிட்டே சொன்னு ரெண்டு வெறகு தருவான்.''

''அம்மா பச்சடி செய்யாதே.'' விசுவன் தடுத்தான்.

''காவாலி நாயே! உங்கம்மாவை......''

காவல்காரனுக்கு இவருடைய பேச்சு கேட்டது. ''இங்கே கெட்ட வார்த்தை பேசாதிங்க. நிர்வாகி காதிலே பட்டா வெரட்டிடுவாங்க. இங்கே அடுப்பு மூட்டி அசிங்கம் செய்யக் கூடாது'' என்று சொல்லி விட்டான். சென்னிகராயருக்கு ஏமாற்றம் ஆகிவிட்டது. பாகற்காய் பச்சடி என்ருல் மிகவும் பிரியம். ''ராமஸந்திர கிராமத்தில் இப்படிப்பட்ட பாகற்காய் கிடைக்காது. இங்கே கிடைத்தும் பிரயோசனம் இல்லே. அந்த நிர்வாகி பாழாய்ப் போகட்டும்'' என்று மனதில் திட்டிக் கொண்டார்.

அர்ச்சனே செய்த பொழுது நஞ்சம்மாவிற்கு ஒரு விதமான மன அமைதி உண்டாயிற்று. அதுவரை அவள் சாரதா தேவியைப் படத்தில் பார்த்திருக்கிருள். நேற்று மத்தியான்னம் வந்தவுடன் கோவிலுக்கு வந்து தரிசனம் செய்தாள். அப்பொழுது அலங்காரம் செய்திருக்கவில்லே. இப்பொழுது பல பக்தர்கள் அர்ச்சனே செய்வதால் அலங்காரம் செய்திருக்கிருர்கள். தேவியின் முகத்தில் தனிக் கஃ, கம்பீரம் ராமஸந்திர கிராமத்தில் காளம்மனின் முகத்தைப் பார்த்தாலே நடுக்கமாய் இருக்கும். ஆனுல் சாரதா தேவியின் முகத்தைப் பார்க்கும் பொழுது எந்தவித பயமும் கிடையாது. தேவியின் கிருபையினுல் தான் விசுவனுவது பிழைத்திருக்கிருன். இனிமேல் கொண்டு எந்தவிதமான கஷ்டம் வந்தாலும் தேவியிடம் பிரார்த்தனே செய்ய வேண்டும் என்று நினேத்துக் கொண்டாள். நான்கணு நாணயம் ஒன்றை உண்டியலில் போட்டு குங்கும பிரசாதத்தை வாங்கிக் கொண்டாள். அப்பண்ணய்யாவும் சுற்றி வந்து வணங்கினுன்.

மறுநாள் காலேயில் அவர்கள் குளிப்பதற்காக ஆற்றுக்குப் புறப்பட்டனர். அப்போது விசுவனேக் காணவில்லே. ''ஆத்துக்குப் போறேன்'' என்று சென்னிகராயர் புறப்பட்டுப் போனுர். எப்போது திரும்பி வருவார் எனத் தெரியாது. ஜனக் கும்பலில் எப்படி விசுவனேக் கண்டுபிடிப்பது? என்பது அப்பண்ணய்யாவுக்

கும் நஞ்சம்மாவுக்கும் கவலையாகிவிட்டது. அப்பொழுது அவனே எங்கிருந்தோ வந்து நஞ்சம்மாவின் புடவையைப் பிடித்துக் கொண்டு ''எனக்கும் தோசை கொடுக்கச் சொல்லு'' என்று அழுதான்.

''குளிச்சிட்டு வந்தப்புறம் மாவு கலந்து தர்றேன்'' என்றாள் அவள். ''உம், அப்பா மட்டும் தோசை சாப்பிடறார். எனக்கும் கொடுக்கச் சொல்லு'' என்று அவன் அடம் பிடித்தான்.

''இப்ப நீ எங்கேடா போனே?'' என்று அப்பண்ணய்யா கேட்டான்.

''அப்பா மட்டும் தனியா ஓட்டலுக்குப் போய்கிட்டிருந்தார். நானும் பின்னாடி போனேன். அவர் ஓட்டல்லே உக்காந்துட்டு அவருக்கு மட்டும் ரெண்டு தோசை கொடுக்கச் சொன்னார். என்னைப் பார்த்து ''நீ ஏண்டா வந்தேன்னார்? எனக்கும் தோசை வேணும்னேன். எங்கிட்டே பணம் இல்லே. அம்மாகிட்டே சொல்லி மாவு கலந்து சாப்பிடு போன்னார்''. முடியாது எனக்கும் தோசை வேணும்னு சொல்லிட்டு ''எனக்கும் தோசை கொடுங்க''ன்னு ஓட்டல்காரர்கிட்டே சொன்னேன்.

இவன் யாரோ பையன். அப்புறம் எங்கிட்டே பணம் கேக்காதிங்கன்னு அவர் ஓட்டல்காரர்கிட்டே சொன்னார். ஓட்டல் காரர் என்னை மிரட்டி அனுப்பிட்டார்''.

''இங்கே வந்து மாவும் அவலும் சாப்பிடறான். திருட்டுத் தனமாய் ஓட்டலுக்குப் போய் சாப்பிடறான். பாத்தீங்களா, அந்தக் காவாலியோட வேலையை'' என்று அப்பண்ணய்யா சொன்னான்.

''சரி எப்படியோ போகட்டும். நீங்க இவனைக் கூட்டிட்டுப் போய் தோசை வாங்கிக் கொடுங்க''.

அம்மா ஒரு அணா கொடுத்தாள். சிறுவனை அப்பண்ணய்யா ஓட்டலுக்குக் கூட்டிக்கொண்டு போய்விட்டு வந்தான். பிறகு மூவரும் ஆற்றுக்குப் புறப்பட்டனர். மீன்கள் இருக்கும் இடத்தில் குளிக்க வேண்டும் என்று விசுவனுக்கு ஆசை. அவனும் நஞ்சம்மாவும் அத்தனை பெரிய மீன்களைப் பார்த்ததில்லை. அதைப் போன்ற மீன்கள் இராமநாதபுரத்தில் பார்த்திருப்பதாக அப்பண்ணய்யா கூறினான். இரையைப் போட்டவுடன் அவை பாய்ந்து வரும் வேகத்தைப் பார்ப்பதே ஒரு தனி ஆனந்தம். விசுவன் தன் கால் சட்டைப் பையில் உள்ள சிறிதளவு அவலை எடுத்துத் தண்ணீரில் தூவினான்.

குளியல் துறைக்கு சற்று அப்பால் மரங்களுக்கு மறைவில் இருந்த இடத்திற்குப் போய் நஞ்சம்மா குளித்துவிட்டு வந்தாள். பிறகு விசுவனும், அப்பண்ணய்யாவும் இறங்கினார்கள். சிறிது நேரத்தில் விசுவன் இருவருடைய பார்வையிலும் தட்டுப்பட வில்லை. அவன் தூரத்தில் தண்ணீரில் செல்வதுபோல் தெரிந்தது. அவனுக்கு நீந்தத் தெரியும். ''கொழந்தை முழுகிடப் போறான். பிடிச்சுக்குங்க'' என்று நஞ்சம்மா உரக்கக் கூவினாள். அப்பண்ணய்யாவும் நீந்திக் கொண்டே வெகு தூரம் சென்றான். அதற்குள் விசுவன் வெகுதூரம் முன்னே சென்றுவிட்டான். அப்பண்ணய்யா ஒரே மூச்சில் வேகமாகச் சென்று அவனைப் பிடித்து விட்டான். அதற்குள் விசுவனுக்கும் கை சோர்ந்து விட்டது. ஆகையால் இருவரும் கரை ஏறினார்கள். நஞ்சம்மா வுக்கு உயிர் வந்தது. அவர்கள் ஏறிவரும் படித்துறையை நோக்கி ஓடி வந்தாள். அதற்குள் அங்கே ஒரு கும்பல் கூடிவிட்டது.

கரையேறிய விசுவன் அம்மாவிடம், ''அம்மா, ஏரியிலே எப்படி வேணும்னாலும் நீந்தலாம். ஆனா ஆத்திலே கொஞ்சம் தவறினாலும் போயிட வேண்டியதுதான்'' என்றான்.

அவளுக்குத் தாங்க முடியாத ஆத்திரம் வந்தது. அவனுடைய முதுகில் ஓங்கி நான்கு அடி போட்டாள். ''எனக்கு நீந்தணும் போல இருந்தது. அதான் விழுந்தேன்'' என்று அவன் சமாதானம் சொன்னான்.

''இன்னும் கீழே போயிருந்தா நீர்ச் சுழல்லே அகப்பட்டிருக்க வேண்டியதுதான்'' என்று அருகில் இருந்த யாரோ ஒருவர் சொன்னார்.

அவர்கள் சிருங்கேரியில் ஆறு நாட்கள் தங்கினார்கள். தினசரி காலை அர்ச்சனையிலிருந்து சிம்மாசன சேவை வரை எல்லாவற்றை யும் பார்த்தார்கள். சண்டிஹோமம் முடிந்த மறுநாள் புறப்பட் டார்கள். ''பணத்தை எண்ணிப் பாருங்க. திப்டூர்வரை ரயிலுக்கு பணம் இருந்தா சென்னையாகூட நீங்களும் விசுவனும் பஸ்ஸிலே புறப்படுங்க. நான் இன்னிக்கே புறப்பட்டு நரசிம்ம ராஜபுரத் துக்கு நடந்தே போறேன்'' என்று அப்பண்ணய்யா சொன்னான். பஸ்ஸுக்கு மூன்று ரூபாய் கொடுத்துவிட்டால் வழியில் விசுவ னுக்கு சாப்பிட ஏதாவது வாங்கித்தர பணம் இருக்காது. மேலும் இவ்வளவு அழகான காட்டைப் பார்க்கப் போகிறோமோ இல்லையோ! விசுவன் கால் வலித்தாலும் நடப்பதற்குப் பின் வாங்க மாட்டான். மூவரும் நடந்தே புறப்பட்டார்கள். அப்பண்ணய்யா மூட்டையைத் தூக்கிக் கொண்டான். தான் வாங்கியிருந்த சாரதா தேவியின் மூன்று படங்களையும் நஞ்சம்மா கையில் எடுத்துக் கொண்டாள்.

வழியில் நஞ்சம்மாவின் மனம் சிந்தித்துக் கொண்டே இருந்தது. தன்னுடைய இரு குழந்தைகளும் இறக்க வேண்டும் என்னும் ஆண்டவனின் விருப்பத்தை யாராலும் மாற்ற முடியாது. விசுவன் ஆற்றில் அகப்பட்டு மறுபடியும் பிழைத்துக் கொண்டான். அவனுக்குக் கண்டம் இருந்திருக்குமோ என்னவோ அது தப்பி விட்டது. ஊருக்குத் திரும்பியவுடன் தந்தையிடம் சொல்லி அவனுடைய ஜாதகத்தைப் பார்க்கச் சொல்ல வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள். அப்பண்ணய்யா மிகவும் மவுனமாக இருந்தான். சிருங்கேரியிலும் அவன் ஏதோ யோசித்துக் கொண்டிருந்தான். அவன் அதிகமாக கங்கம்மாவிடமே இருந்து வந்தவன். ஆகையால் கூச்சப்படுகிறான் என்று நினைத்துக் கொண்டு நஞ்சம்மா சும்மா இருந்தாள்.

நரசிம்ம ராஜபுரம் வந்து சோறு வடித்து ஓட்டலில் குழம்பு வாங்கி வந்து சாப்பிட்டார்கள். மத்தியானம் ஒரு மணி ஆகி விட்டது. மீதி இருந்த சோற்றைப் பாத்திரத்தில் போட்டுக் கட்டிக் கொண்டார்கள். அப்பொழுது சென்னிகராயரும் வந்து சேர்ந்தார். ''அம்மா இவருக்குச் சோறு போடாதே! அவர் ஏன் எனக்குத் தோசை வாங்கித் தரலை?'' என்று விசுவன் உரக்கச் சொல்லத் தொடங்கினான். அந்தப் பேச்சு மற்றவர்கள் காதில் விழுந்து விடுமோ என்று நஞ்சம்மாவிற்குப் பயம். ரயில் புறப்பட இன்னும் நேரம் இருந்தது. சென்னிகராயர் சாப்பாட்டைப் பற்றிப் பேசவில்லை. ஸ்டேஷனுக்கு அருகிலேயே ஓட்டல் இருந்தது.

இரவு தரீகெரெயில் நான்கு பேரும் படுத்துக் கொண்டார்கள். மறுநாள் காலை ஒன்பது மணிக்கு ரயில். அதற்கு முன்னதாக அவள் சோறு வடித்து விட்டாள். அப்பண்ணய்யா குழம்பு வாங்கி வந்தான். சென்னிகராயர் அப்பொழுதும் அவர்களுடன் சேர்ந்து சாப்பிடவில்லை.

அன்று காலையிலிருந்தே அப்பண்ணய்யா தீவிர யோசனையில் ஆழ்ந்து வந்தான். ரயிலில் அமர்ந்த பிறகும் சோர்ந்து இருந்தான். சென்னிகராயர் அவனுக்குப் புகையிலை கொடுத்தாலும் அவன் போட்டுக் கொள்ளவில்லை. பீரூரில் ரயிலை மாற்றிய பிறகு அவனுடைய கவலை அதிகமாயிற்று. அதைப் பற்றி அவனிடம் விசாரிக்க வேண்டும் என நஞ்சம்மா நினைத்தாள். ஆனால் கணவன் எதிரில் கேட்கக் கூடாது என நினைத்து பேசாமல் இருந்து விட்டாள். கடூர் ஸ்டேஷனில் தண்ணீர் நிரப்பிக் கொள்ள ரயில் நிற்கும் என்று அக்கம் பக்கத்தவர்கள் சொன்னார்கள். வடை, போண்டா கிடைக்குமா என்று விசாரித்துப்

பார்க்க சென்னிகராயர் இறங்கிப் போனுர். உடனே அப்பண்ணய்யா அண்ணியிடம் ''திப்டூர்லேர்ந்து நீங்களும் விசுவனும் பஸ்ஸிலே போகப் பணம் இருக்கா?'' என்று விசாரித் தான்.

''ஏன்?''

''நீங்க போங்க. நான் இங்கேருந்து நுக்கிகெரெய்க்குப் போயிட்டு வர்றேன்''

நஞ்சம்மா இதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை. ஆனுலும் அவளுக்குச் சந்தோஷம் உண்டாயிற்று. மனைவியை அடித்து உதைத்து, தாலியைப் பிடுங்கி பல வருடமாகி விட்டது. இப்பொழுது இவர் போனுல் பேசுவார்களா? மாட்டார்களா? அம்மாவின் பேச்சைக் கேட்டு அப்பண்ணய்யா அப்படி எல்லாம் செய்தார். இப்பொழுதாவது குடும்பம் ஒன்றுபட்டால் நல்லது தான் என்று அவள் நினைத்தாள். ''கொழந்தைகளைப் பாத்துட்டு வரணும் போல இருக்குது'' என்ருன் அவன். நஞ்சம்மா பணத்தை எண்ணிப் பார்த்தாள். இரண்டு ரூபாய் இரண்டரை அணு இருந்தது. தானும் விசுவனும் பஸ்ஸில் போக பன்னிரண்டு அணு போதும். அவள் அப்பண்ணய்யாவிடம் ஒரு ரூபாய் கொடுத் தாள். ''போய்ப் பாத்துட்டு வாங்க. இப்ப ஜெயலட்சுமிக்கு கல்யாண வயசிருக்கும். பெத்த தகப்பன் கொழந்தைகளைக் கவனிக்க வேணுமா? ராமகிருஷ்ணன் பள்ளிக்கூடம் போருனு? தானம் வாங்கறதுக்கு கிராமத்திலே சுத்திகிட்டு இருக்கானு? யாருக்குத் தெரியும்? போய்ப் பாத்துட்டு வாங்க'' என்று நஞ்சம்மா கூறினுள்.

கோணிப்பையை அவிழ்த்துத் தன் வேட்டியையும், சட்டை யும் அப்பண்ணய்யா எடுத்துக் கொண்டு இருந்த பொழுது சென்னிகராயர் வந்து விட்டார். ''எங்கேடா போறே?'' என்று அவர் கேட்டார். ''நுக்கிகெரெய்க்கு'' என்று அவன் வாய் தவறிச் சொல்லி விட்டான். அதைச் சொல்லி இருக்கக் கூடாது என்று நினைப்பதற்குள் அவர், ''வெரட்டி விட்ட பொண்டாட்டி யைத் தேடிகிட்டா போறே? சோமாறிப் பயலே!'' என்று கேட் டார். ரயில் புறப்பட்டு விட்டது. அப்பண்ணய்யா பதில் பேசாமல் அவசரமாகக் கீழே இறங்கினுன்.

மத்தியானம் மூன்று மணிக்கு திப்டூருக்குப் போய்ச் சேர்ந் தார்கள். பொழுது சாயும் சமயம் கிராமத்தை அடைந்தார்கள். ராத்திரி சாப்பிட கொஞ்சம் சோறு இருந்தது. அவள் மறுபடி யும் சமைக்கவில்லை. தேவியின் பிரசாதத்தையும் படத்தையும் வாத்தியார் வீட்டில் கொடுத்துவிட்டு வருவதற்காக அவள் புறப் பட்டாள்.

சிருங்கேரியில் இருந்த மன அமைதி அவளுக்கு இப்போது இருக்கவில்லை. அப்பண்ணய்யா பெண்டாட்டியைப் பார்ப்பதற் காகச் சென்ற செய்தியை மறுநாளே சென்னிகராயர் தங்கம்மா விடம் கூறிவிட்டார். அவள் மத்தியானமே ஓடி வந்து ''ஓடிப் போன முண்டையை மறுபடியும் சேத்து வைக்கவா அவனை அனுப்பினே! கழுதெ முண்டை'' என்று நடுத்தெருவில் நின்று இரண்டு மணி நேரம் கூப்பாடு போட்டாள். நஞ்சம்மா எதுவும் பேசவில்லை. ''பாட்டியை மெரட்டிட்டு வர்றேன்'' என்று விசுவன் புறப்பட்டான். நஞ்சம்மா அவனைத் தடுத்து உள்ளே உட்கார வைத்தாள். ''நாம் பேசாமல் நம் வேலையைக் கவனித் தாலும் ஆண்டவன் ஏன் இப்படி சோதிக்கிறான்? நாம் பேசாமல் இருந்தாலும் யாராவது வந்து ரகளை செய்கிறார்கள். மாதேவய் யாவிடம் அதைப் பற்றிக் கேட்டாலும் சரியான பதில் கிடைப்ப தில்லை. நம்மைச் சோதனை செய்வதற்காக ஆண்டவன் இப்படிச் செய்கிறான் என்று அவர் பதில் சொல்கிறார். இது என்ன சோதனை? ஏன் சோதனை செய்ய வேண்டும்? என்று அவள் நினைத்துக் கொண்டாள்.

நான்கைந்து நாட்களுக்குப் பிறகு சர்வக்கா வந்தாள். ''பார்வதிக்கு உங்க பாட்டி கொடுத்த தங்க சாமந்திப்பூ நகை என்னவாச்சு?'' என்று அவள் கேட்டாள். நஞ்சம்மாவுக்கு அதைப் பற்றி நினைவே இல்லை. பார்வதியின் பொருட்களை எல் லாம் சூரியநாராயணனுக்குக் கொடுத்த பொழுது அதையும் கொடுத்திருப்போம் என்ற எண்ணம் வந்தது. ஆனால் அதைக் கொடுக்கவில்லை என்ற சந்தேகமும் வந்தது. வீட்டில் தேடிப் பார்க்க வேண்டும் என்று நினைத்தாள். மகளுடைய எந்தப் பொருளையும் தேடவோ பார்க்கவோ அவள் விரும்பவில்லை. ராமண்ணனின் துணிகளையும்கூட சக்கிலியப் பையனுக்குக் கொடுத்து விட்டாள்.

''எனக்குத் தெரியாது ஏன்?''

''நீங்க சிருங்கேரிக்குப் போறதுக்கு முன்னாடி உங்க வீட்டுக் காரர் அதை வட்டிக் கடைக்காரர்கிட்டே அம்பது ரூபாய்க்கு வித்துட்டாராம்''

''உங்ககிட்டே யார் சொன்னாங்க?''

''சிவே கவுடர் மகள். அந்தக் காலத்து நகை. ரொம்ப நல்லா இருக்குன்னு அவ சொன்னா.''

கணவனின் சிருங்கேரிப் பயணத்திற்கு எப்படிப் பணம் கிடைத்தது என்று அவளுக்குத் தெரிந்து விட்டது. கோபத்தால்

மனம் குமுறியது. ஆனால் இரண்டு நிமிடத்தில் அவள் சமாதானம் அடைந்தாள். 'எப்படியோ நடந்து விட்டது. அவரைத் திட்டி என்ன செய்வது? அவருடைய சுபாவத்தை யாராலும் மாற்ற முடியாது' என்று நினைத்துக் கொண்டே ''போகட்டும் விடுங்க. அது வீட்டிலே இருந்தா எனக்கும் மன நிம்மதி இருக்காது.'' என்று சொல்லி அந்தப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தாள்.

கடூரிலிருந்து நுக்கிகெரெய்க்குச் சென்ற பொழுது அப்பண்ணய்யாவின் மனதில் பலவிதமான எண்ணங்கள் இருந்தன. 'இப்பொழுது குழந்தைகள் எப்படி இருப்பார்கள்? அவள் என்னுடன் பேசுவாளா? வீட்டுக்கு ஒரு ஆண்பிள்ளை வேண்டும், இங்கேயே இருந்து விடுங்கள் என்று சொன்னால் என்ன செய்வது? அவள் போகும்பொழுது கர்ப்பமாய் இருந்தாள். என்ன குழந்தை பிறந்திருக்கிறதோ? அவனுடைய மனதில் ஒருவிதமான பயமே தோன்றியது. இங்கே ஏன் வந்தாய்? திரும்பிப் போ என்று சொன்னால் என்ன செய்வது? இப்போதே திரும்பி விடலாமா?' என்ற எண்ணமும் வந்தது. வந்த பிறகு திரும்பிப் போகக் கூடாது. பார்த்துவிட்டுப் போகலாம் என்று முடிவு செய்து விட்டுத் தொடர்ந்து நடந்தான். அவன் நுக்கிகெரெயை அடைந்தபோது சாயங்காலம் மணி ஆறு ஆகிவிட்டது. ''அவங்க எங்கே இருக்காங்க?'' என்று விசாரித்தான். ஊரைவிட்டுப் போய் மூன்று, நான்கு வருடம் ஆகிவிட்டதாம். கடூரில் கடை வீதி கங்காதரப்பாவின் கடைக்குப் பின்னால் குடி இருக்கிறார்களாம்.

''அங்கே ஜீவனத்துக்கு என்ன செய்யறாங்க?''

''எங்களுக்கு என்ன தெரியும்? நீங்க அவங்களுக்கு என்ன உறவு?'' என்று கேலியாகச் சிரித்துக் கொண்டே கேட்டார்கள்.

தன்னைப் பற்றிச் சொல்லிக் கொள்ள அவன் விரும்பவில்லை. ஆகையால் அவன் மறுபடியும் விசாரிக்காமல் அங்கிருந்து கிளம்பினான். வழியில் ஒரு கிராமத்தில் ஒரு வீட்டில் தங்கி அவர்களிடமிருந்து சோள மாவு வாங்கி ரொட்டி தட்டிச் சாப்பிட்டுவிட்டு இரவு அங்கேயே இருந்தான். மீதி இருந்தவைகளைக் காலையில் சாப்பிட்டுவிட்டுக் கடூரை நோக்கி நடந்தான்.

கடூர் அவன் பார்க்காத ஊர் அல்ல. இதற்கு முன்பே பார்த்திருக்கிறான். காலையில் பத்து மணிக்கு அங்கே வந்து ''கடை வீதி கங்காதரப்பா கடை எங்கே இருக்கு'' என்று விசாரித்துக் கொண்டு போனான். கடையை ஒட்டி ஒரு சிறிய சந்து இருந்தது. அந்தச் சந்துக்குள் சீமை ஓடு போட்ட ஒரு வீடு. வாயிற்படியில் மணிகள் கோர்த்து வரிசையாகத் தொங்கவிடப்பட்

டிருந்தன. அந்த வீடுதாஞ என்று அவன் தயங்கி நின்றபோது உள்ளே இருந்து ஒரு பெண் வந்தாள். பதினென்கு பதினேந்து வயது இருக்கும். அவளுடைய கையில் புத்தகங்கள் இருந்தன. பளபளப்பான புடவை கட்டிக் கொண்டிருந்தாள். முகத்தில் பவுடர். அவளைப் பார்த்தவுடன் அப்பண்ணய்யாவுக்கு அடையாளம் தெரிந்து விட்டது. அவள்தான் ஜெயலட்சுமி தன் மூத்த மகள்.

''இது தாஞ வீடு'' என்று அவன் விசாரித்தான். அந்தப் பெண் அடையாளம் தெரியாதவளைப்போல் ''நீங்க யார்?'' என்று கேட்டாள்.

''அடையாளம் தெரியலையா? உன்னேட அப்பா.''

''எந்த ஊர் அப்பா?'' என்று கேட்டுக் கொண்டே உள்ளே போய்விட்டாள்.

''அடி சக்கை'' என்று மனதில் நினைத்துக் கொண்டே அவன் உள்ளே நுழைந்தான். அவனுக்கு ஒரே பிரமிப்பு. மெத்தை போட்ட நாற்காலி, சுவரில் படங்கள் மேஜைமேல் ரேடியோ. அவனுடைய மனைவி பட்டுப் புடவை உடுத்தி நாற்காலியில் உட்கார்ந்திருந்தாள். முகம் முழுவதும் பவுடர். அவளுடைய மடியில் இரண்டு வயதுப் பெண் குழந்தை. அருகே இருந்த நாற்காலியில் நாற்பத்தைந்து வயது மதிக்கத்தக்க ஒரு பெரிய மனிதன் கையில் சிகரெட் புகைத்துக் கொண்டு உட்கார்ந்திருந் தான். அவனுடைய விரல்களில் மினுமினுக்கும் மோதிரங்கள். கழுத்தில் செயின், கையில் தங்க கடிகாரம்.

''இது தாஞ வீடு? நுக்கிகெரெய்க்குப் போயிட்டு வந்தேன்'' என்றுன் அப்பண்ணய்யா. அவனுடைய மனைவி சாதம்மா ஒரு கணம் திகிலடைந்து அவனையே பார்த்தவாறு இருந்தாள். அவன் மறுபடியும் பேச்சை ஆரம்பிக்குமுன் ''நீங்க யார்? இங்கே எதுக் காக வந்தீங்க?'' என்றுள்.

''என்னைப் பார்த்து யாருன்னு கேக்கறியா?''

இவனை வீட்டிலேருந்து வெளியே அனுப்புங்க'' என்று சொல்லிவிட்டு அவள் அருகில் இருந்த அறைக்குச் சென்றுள்.

''யார்டா நீ'' என்று அந்த மனிதன் அதட்டிக் கேட்டதும் அவன் பயந்துவிட்டான். அங்கே நிற்காமல் ஒரே பாய்ச்சலாகத் திரும்பி ஓடினுன். எங்கே போகிறோம் எந்த திசையில் போகி றோம் என்ற சிந்தனை செய்யாமல் ஓட்டமும் நடையுமாகச் சென்றுன். சற்று நேரம் கழிந்ததும் தூரத்தில் ஒரு ஊர் தென் பட்டது. அது எந்த ஊர் என்று சாலையில் இருந்த ஒருவரிடம்

கேட்டதும் பீருர் என்ருர். பின் வேகமாக நடைபோட்டு அங்கே போய்ச் சேர்ந்தான். திப்டூருக்குச் செல்லும் ரயில் சற்று நேரத்தில் வந்துவிடும் என்று யாரோ சொன்ஞர்கள். அவன் டிக்கட் வாங்கிக் கொண்டு ரயிலில் ஏறி அமர்ந்தான். ரயில் கடூரில் வந்து நின்றது. அந்த மனிதன் தன்னைப் பிடித்து விடுவானே என்று பயந்து தனக்கு அருகில் இருந்த சன்னலை மூடி ரயில் புறப்படும்வரை கூனிக் குறுகி அமர்ந்திருந்தான். திப்டூர் போய்ச் சேரும் வரை அவனுடைய பயம் குறையவில்லை. ஸ்டேஷனில் இறங்கித் தன்னிடம் இருந்த ஐந்து அணுவுக்கு தோசை வாங்கிச் சாப்பிட்டுவிட்டு கிராமத்தை நோக்கி நடைபோட்டான். அந்த மனிதன் யார் என்ற சிந்தனை அப்பொழுது வந்தது. இந்தத் தேவடியாள் அவனை வைத்துக் கொண்டிருக்கிருள் என்று உடனே தெரிந்து கொண்டு விட்டான். அவளைத் துடைப்பத்தால் அடிக்க வேண்டுமென்று அவனுடைய மனம் துடித்தது. ஆனுல் அந்தப் பக்கம் மறுபடியும் போக பயம்.

வழியில் எங்கும் நிற்காமல் நடந்து இரவு பத்து மணிக்கு ஆஞ்சநேயர் கோவிலை அடைந்து கதவைத் தட்டினுன். ''நான் தான்'' என்று சொன்னவுடன் அவனுடைய அம்மா கதவைத் திறந்தாள். சீமை எண்ணெய் விளக்கைப் பற்றவைத்த பிறகு உள்ளே சென்று அமர்ந்தான். ''அந்தத் தேவடியாளைத் தேடிக் கிட்டு போனியா?'' என்று அதட்டினுள்.

அப்பண்ணய்யா பேசவில்லை. அவள் மறுபடியும் ''அறிவு கெட்டவனே, உனக்கு வெக்கமா இல்லையா? சிருங்கேரி யாத்திரைக்குப் போறேன்னு பொய் சொல்லிட்டு அவகிட்டே போயிட்டு வந்தியா? கோவிலுக்கு வந்து உக்காந்திருக்கியே? காலலே அண்ணு ஜோசியரைக் கூட்டியாந்து உன்னைச் சாதியிலிருந்து விலக்கச் சொல்றேன் பார்'' என்று மிரட்டினுள்.

அப்பண்ணய்யாவுக்குப் படுகோபம் வந்தது! சும்மா வாயை மூடிகிட்டு இருக்கப் போறியா இல்லியா? என்று கேட்டான்.

''நான் ஏண்டா வாயை மூடிக்கறேன்? நீ தானே பொண்டாட்டியைத் தேடிக்கிட்டு அவ பின்னுலே போனே? நாய்க்குப் பொறந்தவனே!''

அவள் திட்டிக் கொண்டிருக்கும் போதே கோபத்தால் அவனுடைய உடல் கிடுகிடுத்தது. ''வாயை மூடிட்டு இருக்கப் போறியா, இல்லையா?'' என்று அவன் மறுபடியும் அதட்டினுன். அவள் மறுபடியும் உரக்கத் திட்ட ஆரம்பித்தாள். அவன் எதிரே துடைப்பம் இருந்தது. அவன் சட்டென்று அதை எடுத்து அவளை அடிக்க ஆரம்பித்தான். சரமாரியாக இருபது, முப்பது அடிகள்

போட்டான். ''அய்யோ என்னைக் கொல்றானே இவன்!'' என்று ஓலமிட்டாள். அதைக்கேட்டு ஏழெட்டுப் பேர்கள் கும்பலாகக் கூடிவிட்டார்கள். கங்கம்மா, அண்ணா ஜோசியரை அழைத்து வருமாறு ஒருவரிடம் கூறினாள். அய்யா சாஸ்திரிகளும் வந்தார்.

''பெத்த தாயைத் துடைப்பத்தாலே அடிக்கற மாதிரி பாவம் இருக்கா?'' என்று அய்யா சாஸ்திரி கேட்டார்.

''நூத்தியொரு ரூபாய் அபராதம் கொடுத்துப் பரிகாரம் செய்யணும்?'' என்று அண்ணா ஜோசியர் தீர்ப்புச் சொன்னார்.

''எங்கிட்டே ஒரு மயிரும் புடுங்க முடியாது, போங்கய்யா'' என்று அப்பண்ணய்யா கத்தினான்.

இப்படிப்பட்டவனை எப்படிக் கோவிலில் குடி வைத்திருப்பது? அவனை உடனே சாதியிலிருந்து விலக்கி அங்கிருந்து கிளம்பச் செய்தார்கள். ''இவன் இந்த ஊரை விட்டே போகணும்'' என்று அண்ணா ஜோசியர் சொன்னார். ''என்னய்யா, இந்த ஊர் உன்னோட அப்பன் வீட்டுச் சொத்தா?'' என்று அவன் கேட்டான். அதுவரை அவனுக்கு இவ்வளவு தைரியம் வந்தது கிடையாது. எல்லோரும் பேசாமல் நின்றனர். அவன் தன் துணிமணிகளை எடுத்துக் கொண்டு புறப்பட்டான். ''இவனோட கை புழுத்துப் போகட்டும்'' என்று கங்கம்மா சாபமிட்டாள்.

அண்ணியின் வீட்டுக்குப் போகலாம் என்று அவன் முதலில் நினைத்துக் கொண்டான். ஆனால் நுக்கிகெரெ விஷயத்தைக் கேட்டால் என்ன சொல்வது என்று நினைத்து அங்கே போக வில்லை. சந்தடி இல்லாமல் சென்று மாதேவய்யாவின் கோவில் திண்ணையில் படுத்து இரவைக் கழித்தான். காலையில் எங்கோ சென்றான். பிறகு ஒரு மாத காலம் அவன் ஊர் திரும்பவில்லை.

இரவு நடந்த விஷயம் நஞ்சம்மாவுக்கும் தெரிய வந்தது. அவன் மனைவியைப் பார்க்கப் போயிருக்கிறான் என்ற செய்தியை கங்கம்மாவிடம் சொல்லிய தன் கணவன்மேல் ஆத்திரம் பீறிட்டு வந்தது. ஆனால் அவரைச் சொல்லிப் பிரயோசனம் இல்லை. கங்கம்மா அந்த மகனையும் தன்னையும் பலவாறாகப் பல பேரிடம் திட்டிக் கொண்டிருந்தாள். நஞ்சம்மா மாமியாரை எதிர்த்து வாய் திறக்கவில்லை. ''தெருவிலே பாட்டியைப் பாக்கறப்பகூட அவ ஏதாவது திட்டினா அவளை எதிர்த்துப் பேச வேண்டாம்'' என்று விசுவனிடம் கூறினாள்.

ஒரு மாதம் சென்ற பிறகு அப்பண்ணய்யா அண்ணியின் வீட்டுக்கு வந்தான். அப்பொழுது சென்னிகராயர் வீட்டில் இருக்கவில்லை. ''இந்த முண்டை இல்லாட்டா நான் பொழைக்க

முடியாதா? நானும் எல்லா கிராமத்துக்கும் போய் ஒண்ணரை மூட்டை ராகி, அவரைப் பருப்பு, மொளகா எல்லாம் சம்பாதிச் சேன். என்னோட இருபது ரூபாய் கொடுக்கறிங்களா? கொஞ்சம் பாத்திரம் வாங்கணும்'' என்று அவன் சொன்னான்.

''எங்கே தங்கப் போறீங்க?''

''குருபரஹள்ளி பீரே கவுடன் மாட்டுக் கொட்டகையின் திண்ணையிலே ஒரு ரூம் இருக்குது. அவங்கிட்டே கேட்டேன். தாராளமா இருந்துக்க என்று அவன் சொன்னான்.''

நஞ்சம்மா மூன்று நாட்களில் இருபது ரூபாய் திரட்டி அவனிடம் கொடுத்து விட்டாள். அவன் கம்பனகெரெ சந்தைக்குப் போய் சில பாத்திரங்களை வாங்கிக் கொண்டான். அவன் கிராமத்தில் இருக்கும் போது களி செய்து கொள்வான். ஆனால், குழம்பு வைக்க மாட்டான். அண்ணியின் வீட்டுக்கு வந்து இரண்டு வேளைக்குக் காணும்படி வாங்கிக் கொண்டு போய் விடுவான். சில நாட்களில் அண்ணியின் வீட்டிலேயே சாப்பாட்டை முடித்துக் கொள்வான். அவனை வீட்டிற்குள் சேர்த்துக் கொண்ட குற்றத்திற்காக அவளையும் ஜாதியை விட்டு விலக்க வேண்டும் என்று கங்கம்மா பிரச்சாரம் செய்தாள். ஆனால் அவள் அரசாங்க உணவு தானியக் கணக்குகளை எழுதுபவள். சிருங்கேரிக்கு யாத்திரை சென்று வந்தவள். ஆகையால் அவளிடம் ஜோசியருக்கும் பயம். ஜோசியர்கள் இருவருமே சிருங்கேரியின் பக்கம் எட்டிப் பார்த்தவர்கள் அல்ல.

ஒரு நாள் நஞ்சம்மா அப்பண்ணய்யாவிடம் ''நுக்கி கெரெயிலே என்ன சொன்னாங்க?'' என்று கேட்டாள்.

''அந்த முண்டை அந்த ஊர்லே இருக்கவே இல்லை.''

''எங்கே இருக்காங்கன்னு விசாரிச்சுத் தெரிஞ்சுக்கலியா?''

''தெரிஞ்சுக்கறதென்ன? கடூர்லே ஒரு பணக்காரனை வைச்சு கிட்டிருக்கா அந்த சக்கிலிய முண்டை!'' என்று தான் கண்ட வற்றை விவரித்தான்.

அதைக் கேட்டு நஞ்சம்மாவின் மனம் திடுக்கிட்டது. நாங்கள் இருவரும் ஒரே வீட்டு மருமகள்களாக வந்தவர்கள். அண்ணன், தம்பி இருவரும் மனைவியை ஒழுங்காக நடத்தவில்லை. தாங்களே ஒழுங்காக நடந்து கொள்ளத் தெரியாதவர்கள். மற்றவர்களை எப்படிச் சரியாக நடத்துவார்கள்? ஆனால் அண்ணனை விடத் தம்பி பரவாயில்லை. நல்ல வார்த்தை சொன்னால் கேட்டுக் கொள்கிறார். உடம்பை வளைத்துப் பாடுபடுகிறார் பெண்டாட்டி குழந்தைகளை விசாரித்து விட்டுப் பிறகு சாப்பிடுகிறார். சற்று

அறிவுடன் நடந்து கொண்டிருந்தால் இப்படி ஆகி இருக்காது. ஆனால் கஷ்டம் அனுபவிக்க எல்லோருக்கும் ஒரே மனோ திடம் இருக்காது. இந்தக் கணவன், இந்த மாமியாரின் பேச்சு வார்த்தை இவற்றை எல்லாம் சகித்துக் கொள்ள எல்லோராலும் முடியாது. அம்மாவின் பேச்சைக் கேட்டுத் தான் அப்பண்ணய்யா கட்டிய வீட்டுக்கே தீ வைத்து மனைவியின் தாலியைப் பறித்து விட்டான். அவன் அப்படிச் செய்திருக்கக் கூடாது என்று மனதில் விசனப் பட்டுக் கொண்டே அவள் அப்பண்ணய்யாவிடம் ''இந்த விஷயத்தை யார் கிட்டேயாவது சொன்னீங்களா?'' என்று கேட்டாள்.

''இல்லே.''

''சொல்லவேண்டாம். நம்ம மானம் போயிடும்.''

''அந்த முண்டையைப் பத்தி பேச்சு என் வாயிலே வந்தா பீ தின்னதைப் போல அசிங்கமாயிருக்கு நான் அதைப் பத்திப் பேசமாட்டேன்.''

''சில சமயத்திலே உங்களுக்குக் கோபம் வந்தா எதைப் பேசலாம், எதைப் பேசக் கூடாதுன்னு தெரியறதில்லே. இதைப் பத்தி யார் முன்னாலேயும் சொல்றதில்லேன்னு சாமி முன்னாடி சத்தியம் செய்யுங்க.''

''சிருங்கேரி சாரதா தேவி மேலே சத்தியமாச் சொல்ல மாட்டேன்'' என்று அவன் சுவரில் மாட்டியிருந்த சாரதா தேவி யின் படத்தைத் தொட்டு சத்தியம் செய்தான்.

# பதினைந்து

## 1

அரசாங்கத்தினர் ஆரம்பப் பள்ளிக்கூடத்திற்காக புதிய கட்டிடம் கட்டிவிட்டார்கள். பள்ளிக்கூடக் கட்டிடத்தின் மூலம் சிவே கவுடருக்கு வந்து கொண்டிருந்த வாடகை நின்று போயிற்று. புதிய பள்ளியை ஒட்டிப் பெரிய விளையாட்டு மைதானம். மூன்று பக்கங்களிலும் வயல்கள்.

ஒரு நாள் நஞ்சம்மா அடுத்த ஆண்டிற்கான கணக்குப் புத்தகத்தைத் தைத்துக் கொண்டிருந்தாள். அப்பொழுது ஆசிரியர் வீட்டிற்குள் வந்து, ''உங்க மகன் விசுவன் என்ன வேலே செஞ்சிருக்கான், பாத்திங்களா?'' என்றார்.

ஆசிரியரே வந்து சொல்ல வேண்டும் என்றால் அவன் ஏதா வது போக்கிரித்தனம் செய்திருக்க வேண்டும். ''பள்ளிக்கூடத்

துக்கு முன்னாடி விளையாட்டு மைதானம் இருக்கில்லியா? அதுக்குப் பக்கத்திலே ஒரு புத்து இருக்கறதைப் பாத்திருக்கிங்களா? அதுக்குப் பக்கத்திலே இருந்த வேலியிலே ஒரு பாம்பு இருந்தது. வெய்யில் காயறதுக்கு அது வெளியே வந்திருக்குமோ என்னவோ. இவன் ஒரு பெரிய மட்டையை எடுத்து அதை நல்லா அடிச்சிட்டான்.''

''அப்புறம் என்னாச்சு?''—நஞ்சம்மா பயத்துடன் கேட்டாள். ''நல்ல வேளையா அது கடிக்கலே. 'சர்'ருன்னு புத்துக்குள்ளே ஓடிப் போயிடுச்சு. அப்ப நானும் பாத்தேன். பின்னாடியே அவன் அதைத் துரத்திட்டுப் போறான். நான் அவனைப் பிடிச்சு ரெண்டு கொடுத்தேன்.''

''கையை முறிச்சுப் போட்டிருக்கணும்'' ''இப்ப அவனை அடிச்சுப் பிரயோசனம் இல்லே. பாம்பு பன்னெண்டு வருஷம் காத்திருந்து பழி வாங்குமாம். இவனும் பள்ளிக்கூடத்துக்குத் தினமும் வர்றான். எப்பவாவது காத்திருந்து கடிச்சிட்டா என்ன செய்யறது?''

அவளுடைய நெஞ்சு படபடக்கத் தொடங்கியது. இந்தப் பையன் சுபாவமே அப்படி. படு தைரியம். இப்ப என்னங்க செய்யறது, வாத்தியாரையா?''

''பாம்பு புத்துலேயேதான் இருக்கும். நாலு பேரைவிட்டு அதை அடிச்சுக் கொன்னுடலாம். நேரம் கடத்த வேண்டாம்.''

நஞ்சம்மா உடனே எழுந்து வீட்டைப் பூட்டிக் கொண்டு போய்த் தலையாரியை வரச் சொன்னாள். அவனுடன் தண்ணீர்ப் பையனும் வந்தான். பாம்பு அடிப்பதில் கைதேர்ந்த சஞ்சீவ நாயக்கனுக்கு ஒரு ரூபாய் கொடுப்பதாகச் சொல்லி அவனையும் அவர்களுடன் அனுப்பினாள். அவர்களுக்குப் பின்னே அவள் நடந்து சென்ற பொழுது விசுவன் மைதானத்தில் குட்டிக்கரணம் போட்டுக் கொண்டிருந்தான்.

''பாம்பை ஏண்டா அடிச்சே?'' என்று அவள் கேட்டாள். ''சஞ்சீவ நாயக்கன் அன்னிக்கு திருமலே வீட்டுக் கொல்லேயிலே அடிச்சான், இல்லியா? அதைப் போலத்தான் நானும் அடிச்சேன்'' என்றான்.

சஞ்சீவ நாயக்கன் பெரிய மூங்கில் தடியைப் பிடித்துக் கொண்டு முன்னே நின்று கொண்டான். தலையாரியும், தண்ணீர்ப் பையனும் புற்றை இடித்தனர். புற்று வெகுதூரம் பரவி இருந்தது. அவர்கள் மாலே வரை கவனமாக இடித்துத் தேடிப் பார்த்தார்கள். பாம்பு பிடிபடவில்லே.

''இப்ப அடிச்சுப் போட்டுடுவானுகன்னு தெரிஞ்சுகிட்டு பாம்பு வேறு எங்கோ போய் ஒளிஞ்சுகிச்சு'' என்று சஞ்சீவ நாயக்கன் கூறினான். ''இனிமே அதைத் தேடிக் கண்டு பிடிக்க முடியாது. அது காத்திருந்து எப்பவாவது கடிச்சுடும்'' என்றான் நாயக்கன்.

நஞ்சம்மாவின் கோபம் எல்லை மீறியது. நாயக்கனுடைய கையில் இருந்த மூங்கில் கழியை வாங்கி விசுவன் முதுகில் நான்கு அடி அடித்தாள். அவன் அழுது கொண்டே நின்றான். ''நடந்தது நடந்து போச்சு. இனி அடிச்சு என்ன செய்யறது?'' என்று ஆசிரியர் சமாதானம் சொன்னார். நஞ்சம்மா மகனின் கையைப் பிடித்துக் கொண்டே வீட்டிற்கு வந்தாள். இரண்டு குழந்தைகள் இறந்த பிறகு இருப்பது இவன் ஒருவன்தான். ஏரியில் நீந்தப் போவது, மாதேவய்யாவின் கோவில் மதில் சுவரிலிருந்து குதிப்பது, குதிரைக்குட்டிமேல் ஏறி சவாரி செய்வது, தேன் கூட்டைக் கலைக்க ஒருவனாகச் செல்வது, தனியாக பாம்பை அடிப்பது—இவைகளைப் போன்ற வேலைகளைத்தான் அவன் செய்தான். அவளுக்குத் தன் தந்தையின் நினைவு வந்தது. பாட்டனைப் போலவே பேரனும் பிறந்திருக்கிறான். இப்பொழுது இவன் செய்துவிட்டு வந்திருக்கும் வேலைக்கு என்ன செய்வது? பாம்பு பன்னிரண்டு வருடம் காத்திருந்து பழி வாங்கும். இவன் அந்தப் பள்ளிக்கூடத்திற்குத்தான் போகவேண்டும். அன்று காலையில் அவள் அவனைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பவில்லை. மறுநாளும் அனுப்பவில்லை. பிறகு ஆசிரியர் வந்து ''பள்ளிக்கூடத்துக்கு அனுப்பாம இருக்கறது சரிதான். ஆனா எவ்வளவு நாளைக்கு இப்படியே இருக்க முடியும்?'' என்று கேட்டார்.

''அதுவும் ஒரு கேள்விதான். அவன் ஆரம்பப் பள்ளிக்கூடத்தை முடிச்சிட்டு மிடில் ஸ்கூலுக்குப் போகணும். அப்புறம் திப்டூருக்குப் போய் ஹைஸ்கூல்லே படிக்கணும். அப்படிப் படிச்சாதான் ஷேக்தார் வேலைக்கு வர முடியும். இல்லாட்டா பள்ளிக்கூடத்திலே வாத்தியார் வேலை செய்யலாம். படிப்பே இல்லாட்டா அவனோட அப்பன் போலவோ, சித்தப்பன் போலவோ இருக்க வேண்டியதுதான்.'' என்ன செய்வது என்று அவளுக்குப் புரியவில்லை. மாதேவய்யாவிடம் கலந்து ஆலோசித்தாள். ஒரு நாள் முழுவதும் அவர் யோசனை செய்துவிட்டு அவரே வீட்டிற்குவந்து சொன்னார். ''இப்ப இவன் மூணும் வகுப்பு. கூட்டிட்டுப் போய் அண்ணா வீட்டிலே விட்டுட்டு வாங்க. நாலாவது வகுப்பு அங்கேயே தங்கிப் படிக்கட்டும். அதற்கப்புறம் அவன் இந்தப் பள்ளிக்கூடத்துக்கு வரத் தேவையில்லை. கம்பனகெரெயிலே சாப்பாட்டுக்கு ஏதாவது ஏற்பாடு செஞ்சு அங்கேயே இங்கிலீஷ்

பள்ளிக்கூடத்திலே சேத்துடுங்க. லீவுலே இங்கே வரட்டும். புத்துப் பக்கம் போகாமா இருந்தா சரி. அதுக்குள்ளே பையன் வளர்ந்துடுவான். மனுசங்களுக்கே அடையாளம் தெரியாது. பாம்புக்கு எப்படித் தெரியப் போகுது?''

''அங்கே என்னோடை அண்ணி எப்படிப் பட்டவன்னு உங்களுக்குத் தெரியாதா?''

''அவ எப்படி இருந்தா என்ன? பாட்டி இருக்கா. வேறே கொழந்தையும் கெடையாது. அண்ணு நல்லா கவனிச்சுக்குவார்.''

அதுதான் நல்லவழி என்று அவளுக்கும் தோன்றியது. ஆனால் இருக்கும் ஒரே மகனை அங்கே விட்டுவிட்டு தான் மட்டும் வீட்டில் ஒண்டியாய் இருப்பது சரியா என்று மனதில் ஒரு தவிப்பு. அங்கே விட்டுவிட்டு வந்தால் சாகாமல் எப்படியோ தப்பி விடலாம் என்று ஒரு ஆறுதல். விடுமுறையில் வீட்டிற்கு அழைத்து வரலாம். அவ்வப்பொழுது தானே போய்ப் பார்த்துவிட்டு வரலாம். இன்னும் ஒன்றரை ஆண்டுகளுக்கு அங்கேயே இருக்கட்டும் என்று முடிவு செய்தாள்.

மறுநாள் அவனை எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டினாள். புதிய உடுப்புகளும் தைத்தாயிற்று. முறுக்கு, சீடை செய்தாள். ''நான் இனிமே ஒண்ணும் செய்ய மாட்டேன். என்னை எந்த ஊருக்கும் அனுப்பாதே'' என்று அவன் சிணுங்கத் தொடங்கினான். ''இனி ஒரே வருஷம். அப்புறம் கம்பனகெரெய்க்கு வந்துடலாம். நானே அங்கே இருந்துண்டு சமைத்துப் போடறேன். நீ ஏன் அந்தப் பாம்பை அடிக்கப் போனே?'' என்று கண்ணீர் வடித்துக் கொண்டே அவனுடைய கண்களிலிருந்த நீரையும் துடைக்க ஆரம்பித்தாள். இரண்டு மூட்டை ராகி, இருபது படி அவரைப் பருப்பு, நான்கு படி விளக்கெண்ணெய், ஒரு வீசை சீவக்காய்ப் பொடி ஆகியவைகளை வண்டியில் வைத்துக் கொண்டு விசுவனையும் வண்டியில் ஏற்றிக் கொண்டு புறப்பட்டாள். சென்னிகராயர் அவர்களுடன் போகவில்லை.

தங்கையின் மகனை வீட்டில் வைத்துக் கொள்ள கல்லேசனுக்கு மிகுந்த சந்தோஷம். அக்கம்மாவுக்கும் ரொம்பவும் ஆனந்தம். தண்ணீர் இறைக்க அவளால் முடியவில்லை. தள்ளாமை வந்து விட்டது. ஆனாலும் வாரத்திற்கு ஒருமுறை பேரனுக்கு எண்ணெய் தேய்த்து விடுவதாக அவள் சந்தோஷமாய்ச் சொன்னாள். நஞ்சம்மா கொண்டு வந்திருந்த தானியங்களையும் பொருட்களையும் பார்த்த கல்லேசன், ''இதை எல்லாம் ஏன் கொண்டு வந்தே? என் வீட்டிலே ஒரு பிடிச் சோறு இல்லியா? திரும்ப எடுத்துட்டுப் போ'' என்று கோபித்துக் கொண்டான்.

"எம் மகனோட சாப்பாட்டுச் செலவுக்காக கொண்டு வரலை. அவனுக்குச் சாப்பாடு போட உனக்கு பாத்தியதை இருக்கு. இதெல்லாம் வீட்டிலே இருந்தது. கொண்டு வந்தேன். அவனுக்கும் உன் வீட்டிலே பால், நெய் இந்தக் கவலையே கெடையாது. நீ வேறே எதுவும் செய்ய வேண்டாம். அவனுக்குப் போக்கிரித் தனம் அதிகம். கண்டிச்சு வை. எங்க வீட்டிலே அவனுக்கு ஆம்பளைங்க பயம் கெடையாது. நான் எவ்வளவு மெரட்டினாலும் பொம்பளைதானே. நான் ஏதாவது நெனைச்சுக்குவேன்னு யோசிக்காதே. அடி கொடுத்து மெரட்டி வை. படிப்பிலே அவன் கெட்டிக்காரன்தான். நான் வீட்டிலே அவனுக்கு பாடம் சொல்லிக் கொடுத்திட்டிருந்தேன். இங்கே உனக்கு நேரம் இருந்தா சொல்லிக் கொடு. இல்லாட்டா ஒரு வாத்தியாரை ஏற்பாடு செய். நான் அவருக்கு மாசம் ஒரு ரூபாய் கொடுத்திடறேன்" என்றாள் அவள்.

மேற்கொண்டு கல்லேசன் பேச வேண்டிய அவசியம் இருக்கவில்லை. "நாலு நாள் இருந்துட்டுப் போ" என்று அவனும் பாட்டியும் சொன்னார்கள். "கணக்கு வேலை இருக்கு" என்று அவள் மறுநாளே புறப்பட்டு விட்டாள். "அம்மா, நானும் ஊருக்கு வர்றேன்" என்று விசுவன் அழுதான். நஞ்சம்மாவுக்கும் துக்கம் தொண்டையை அடைக்க அவள் பேசாமல் வண்டியில் உட்கார்ந்து விட்டாள். வண்டி புறப்பட்டு விட்டது.

தகப்பனார் கண்டி ஜோசியரை அவள் பார்க்கவில்லை. அவர் ஊருக்குப் போய் மூன்று மாதம் ஆகிவிட்டதாம்.

## உ

விசுவனை விட்டு விட்டு வந்த பிறகு நஞ்சம்மாவுக்குப் பொழுது போவதே கஷ்டமாய் விட்டது. செய்ய வேண்டிய வேலைகள் நிறைய இருந்தன. ஆனாலும் ஏதோ வெறிச்சென்று இருந்தது. பார்வதி, ராமண்ணாவின் நினைவுகள் அவளை அரிக்கத் தொடங்கின. அவள் அமர்ந்து, கணக்கு எழுதி, வந்தவருடன் பேசி, எல்லா வேலைகளையும் கவனிக்கும் நடுக்கூடத்தில்தான் அவர்கள் இறந்து போனார்கள். இந்த வீட்டை விட்டுப் போய் விட வேண்டும் என்று மனதில் பட்டது. ஆனால் வேறு எங்கே போவது? அந்த வீட்டிற்கு வந்து பதின்மூன்று வருடங்கள் ஆகி விட்டன. குண்டே கவுடரின் வீடு, அவளுடைய சொந்த வீட்டைப் போல் பழக்கமாகி விட்டது. தான் சொந்தமாக வீட்டைக் கட்ட வேண்டும் என்ற ஒரு புதிய ஆசையும் முளைத்தது.

புதிய வீடு எதற்காக? பிற்காலத்தில் இந்த ஊரில் இருக்க வேண்டாம். விசுவன் ஷேக்தார் ஆக வேண்டும். இல்லாவிட்டால் நடுநிலைப் பள்ளி ஆசிரியர் வேலையாவது செய்ய வேண்டும். அவனுடன் தானும் இருக்க வேண்டும். ஆனால் சொந்த ஊரில் ஒரு குச்சு வீடாவது சொந்தமாக இருக்க வேண்டும். விடுமுறையில் நான்கு நாட்கள் இருந்து விட்டுப் போகலாம் என்றெல்லாம் அவள் நினைத்தாள். அந்த சமயத்தில் ஒரு வீட்டுமனை விலைக்கு வந்தது. செக்குக்கார செலுவ செட்டிக்கு அவனுடைய மனைவியின் ஊரில் நல்ல சொத்து ஒன்று விலைக்கு வந்திருக்கிறதாம். ஆகையால் இங்கு இருக்கும் சொத்துக்களை விற்றுவிட்டு மனைவியின் ஊருக்கே போக வேண்டும் என்று தீர்மானித்து இருக்கிறான். அவனுடைய விற்பனைப் பத்திரங்களைத்தானே எழுதிக் கொடுப்பதாய் நஞ்சம்மா ஒப்புக் கொண்டாள். அதாவது எழுத்து சென்னிகராயருடையது. பத்திரத்தின் விஷயம் நஞ்சம்மாவினுடையது. நிலத்தை வாங்குபவர் பத்திரத்துக்காக எழுத்துக் கூலி தர வேண்டியதில்லை. அந்த மொத்த விற்பனையில் வீட்டுமனையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். அதை மட்டும் செலுவ செட்டி நஞ்சம்மாவுக்கு எழுதிக் கொடுத்து விட வேண்டும். அவர்கள் ஐம்பது ரூபாய் கொடுத்தால் போதும். அதில் எல்லாமே அடங்கிப் போய் விடும். அரசாங்க சட்டதிட்டங்களை நன்கு அறிந்த நஞ்சம்மா வீட்டு மனையைத் தன் பெயரிலேயே எழுதி வாங்கிக் கொண்டாள். மற்ற நிலங்களை வாங்கியவர்களுக்கு நிலவரி ரசீது எழுதிக் கொடுத்து, செலுவ செட்டிக்கு நஞ்சம்மாவின் மனைக்காக ஐம்பது ரூபாய் அவர்களே கொடுக்கும்படி ஏற்பாடு செய்தாள். இரண்டு அங்கண திண்ணை. உள்ளே மூன்று அங்கணத்தில் முற்றம். ஒரு அங்கணத்தில் சமையல் அறை. மற்றொன்று தானியம் போட்டு வைக்கும் அறை. கொல்லையில் இரண்டு பசுக்களைக் கட்டி வைக்கும் கொட்டில். மிஞ்சி இருக்கும் கொஞ்ச நிலத்தில் காய்கறி போட்டுக் கொள்ளலாம். கூறைக்கு நாட்டு ஓடு வேய்ந்து விடலாம். கணக்குப் போட்டுப் பார்த்தால் வீடு கட்ட ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் தேவைப்படும்.

இப்பொழுது தானியக் கணக்கு இருக்கிறது. இதில் வரவும் இருக்கிறது. குருபரஹள்ளிக் காரர்கள் மட்டும் அல்லாமல் லிங்கபுரத்துக்காரர்களும் கணக்கு முடிந்த உடன் வீட்டுக்கு இவ்வளவு ராகி என்று கணக்குப் போட்டுக் கொடுக்க ஆரம்பித்திருக்கிறார்கள். முன்பு போல் வீட்டில் அவ்வளவு செலவு இல்லை. ஒரு வேளை சமைத்தால் இரண்டு வேளைக்கும் போதுமானது. கிடைத்த ராகியை எல்லாம் மொத்தமாக விற்று

விடலாம். தொண்ணூறு ரூபாய் விலையில் ராகி விற்கிறது. இரண்டு வருட சம்பளப் பணத்தையும் சேர்த்தால் ஐநூறு ரூபாய் ஆகிவிடும். அடுத்த வருட வரியையும் இப்பொழுதே சேர்த்துக் கொடுங்கள் என்றால் குருபரஹள்ளிக்காரர் மறுத்துப் பேச மாட்டார் என்று நினைத்துக் கொண்டாள்.

அந்த சமயத்தில் ஆசிரியர் ஒருநாள் நஞ்சம்மாவின் வீட்டிற்கு வந்தார். ''பாருங்க, இப்ப அரசாங்கம் முதியோர் கல்வின்னு ஒரு திட்டம் ஆரம்பிச்சிருக்கு. ஆம்பளை, பொம்பளை எல்லோரும் எழுதப் படிக்கக் கத்துக்கணும்னு அரசாங்கம் உத்தரவு போட்டிருக்கு. பதினெட்டு வயசுக்கு மேலே இருக்கறவங்களுக்கு ராத்திரி ஏழு மணியிலிருந்து ஒம்பது மணி வரை படிப்பு சொல்லிக் கொடுக்கணும். அதுக்கு நைட் ஸ்கூல்னு பேர் வைச்சிருக்காங்க. சம்பளத்தைத் தவிர மாசம் இருபத்தஞ்சு ரூபா தர்றாங்க. இந்த ஊர்லே படிச்ச பொம்பளைக யாராவது இருக்காங்களான்னு இன்ஸ்பெக்டர் கேட்டார். உங்க பேரைச் சொன்னேன்.''

''என்னாலே அந்த வேலையைச் செய்ய முடியுமா?''. ''என்ன அப்படிச் சொல்லிட்டீங்க? மொத்தமா எட்டு மாச வேலை. கொஞ்சம் பேருக்கு சொல்லிக் கொடுத்தவுடன் அப்புறம் கொஞ்சம் பேருக்கு சொல்லித் தரணும். அ, ஆ, இ, ஈ, சொல்லிக் கொடுத்து ரெண்டாம் வகுப்பு புஸ்தகம் படிக்கற அளவு வந்துட்டாப் போதும். மேற்கொண்டு அவங்களே வீட்டிலே ஏதாவது பேப்பர் படிச்சு விருத்தி செஞ்சுக்கட்டும். இருபத்தஞ்சு ரூபாய் கொடுப்பாங்க. பொம்பளைகளை மட்டுமே சேர்த்துக்கணும்''

''இந்த ஊர்லே எந்தப் பொம்பளைக்கு படிப்பிலே ஆசை இருக்கு?''

''அரசாங்கத்திலேயே சிலேட்டு, புஸ்தகம், பென்சில் எல்லாம் கொடுக்கறாங்க. நீங்க விளக்கு எரிக்கிற காசு, போர்டு, சாக்பீஸ் எல்லாம் கொடுக்கறாங்க. உங்க வீட்டிலேயே வகுப்பு நடத்துங்க. மொதல்ல ஏழு, எட்டு பொம்பளைகளை சேர்த்துக்கிட்டா அப்புறம் மத்தவங்களும் தானாகவே வந்துடுவாங்க. என்னோட வீட்டுக்காரியையும் படிக்க அனுப்பறேன்''

நஞ்சம்மா முதலில் ஒப்புக் கொள்ளவில்லை. ஒருநாள் ஷேக்தார் ஆசிரியரின் வீட்டிற்கு வந்திருந்தபொழுது மறுபடியும் அவர் அதைப்பற்றிச் சொன்னார். ஆகையால் அவள் ஒப்புக் கொண்டாள். கம்பன கெரெ நடுநிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியர்தான் அந்தத் திட்டத்துக்கு மேலதிகாரி. அவரே ஒரு

நாள் வண்டி பூட்டிக் கொண்டு வந்து சிலேட்டு, புத்தகம், லாந்தர் விளக்கு முதலியவைகளைக் கொடுத்து விட்டுப் போனார். ஆசிரியரின் மனைவிக்கு அ, ஆ, இ, ஈ, முதலிய ஆரம்ப எழுத்துக்கள் தெரிந்திருந்தன. இருந்தபோதிலும் அவர் அவளை அனுப்பினார். சர்வக்கா தானாகவே வந்து சேர்ந்து கொண்டாள். கணவன் தடுத்தபோதும் கேட்கவில்லை. அங்கொன்றும், இங்கொன்றுமாகச் சேர்ந்து மொத்தம் பதினான்கு பேர் வந்து சேர்ந்தார்கள். நஞ்சம்மாவுக்கு அது ஒரு புதிய அனுபவம்.

சிலபேர் ஆர்வத்துடன் கற்றார்கள். சிலபேர் அசட்டையாக இருந்தார்கள். ஆனால் சர்வக்காவுக்கு அவ்வளவு அறிவு இருப்பதாக நஞ்சம்மா நினைத்திருக்க வில்லை. ஒரே நாளில் அவள் எட்டு எழுத்துக்களைக் கற்றுக் கொண்டாள்.

எட்டு நாட்களில் எழுத்துக்களை கூட்டிப் படிக்க ஆரம்பித்து விட்டாள்.

''நஞ்சம்மா! நீங்க முன்னாடியே சொல்லிக் கொடுத்திருந்தா நான் படிச்சிருப்பேனே! நானும் உங்களைப் போல கணக்கு வழக்கு எழுதி இருப்பேன்'' என்றாள் சர்வக்கா. ''ஒரு ஊருக்கு ஒரு கணக்குப் பிள்ளை வேலைதானே இருக்கும்.''

''நீங்க சொல்றதும் உண்மைதான்.''

காலையிலிருந்து மாலைவரை வீட்டு வேலை செய்வதற்கும், கணக்கு வேலை செய்வதற்கும் அவளுக்கு நேரம் இருக்கவில்லை. சிலநாட்களில் மதிய வேளையில் மாதேவய்யா வந்து ஏதோ பேசிக் கொண்டு இருந்தார். இரவு எட்டரை, ஒன்பது மணி வரை வகுப்புகள் நடத்த வேண்டியிருந்தது. அதற்குப் பிறகு சாப்பிட்டு விட்டுப் படுத்தால் உடனே தூக்கம் வந்து விடும். பாடம் கற்றுக் கொடுத்துக் கொண்டிருக்கும் போது அவளுக்கு விசுவனின் நினைவும் அடிக்கடி வரும். அவன் எப்படி இருக்கிறானோ, அம்மாவை நினைத்து அழுகிறானோ? அக்கம்மா பாட்டி இருக்கும் வரை கவலை இல்லை. அவள் அவனைக் கவனித்துக் கொள்வாள்.

இரண்டு, மூன்று மாதங்கள் வகுப்பு நடந்தது. ஆறு பேர் விலகி விட்டனர். எட்டுப் பேர் மட்டும் வந்து கொண்டிருந்தனர். ''படிக்க ஆள் வந்தாலும் வரா விட்டாலும் எல்லோருக்கும் ஆஜர் போட்டுடுங்க'' என்று ஆசிரியர் சொன்னார். ஆண்களின் இரவுப் பள்ளி பரவாயில்லை. இருபத்திரண்டு பேரில் இருபது பேர்கள் வந்து கொண்டிருந்தார்கள். ஒரு நாள் சென்னிகராயர் வீட்டில் இருக்கவில்லை. ஆசிரியர் வந்தார் அவர்

இரவுப் பள்ளியைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். "இவ்வளவு வயசானலுங்கூட நாம் கஷ்டப்பட்டு நாலுநாள் சொல்லிக் கொடுத்தா அவங்க அதை ஞாபகம் வைச்சுக்கறதில்லே. அவங்களுக்குப் படிப்பிலே கவனம் இருந்தாத் தானே? வகுப்பறையிலே பீடி பிடிக்கக் கூடாதுன்னு கேக்கறதும் இல்லே. பீடி புடிச்சுகிட்டே படிக்க முடியுமா? இந்த ஜனங்களுக்கு எப்பத்தான் புத்தி வருமோ? தெரியலே.''

''எங்க அப்பண்ணய்யா நாளைக்கு கொழம்பு வாங்கிட்டுப் போக வர்றப்ப அவர்கிட்டே சொல்றேன். அவரையும் வகுப்பிலே சேத்துக்குங்க. பகல் நேரத்திலே அவர் ஊர்லே இருந்தா நீங்க கொஞ்சம் அவருக்கு எழுத்து சொல்லிக் கொடுங்க. கொஞ்சமாவது படிப்பு இருந்தா அவர் கதி இப்படி ஆயிருக்காது.''

''ஓ! அப்பண்ணய்யா வேறே ஒரு ராத்திரி பள்ளிக் கூடத்துக்குப் போறர்'' என்று அவர் சிரித்தார்.

''என்ன விஷயம்?''

''இப்ப அவருக்கும், நரசிக்கும் சிநேகிதம் இருக்காம்.''

நஞ்சம்மா அதை நம்பவில்லை. அப்பண்ணய்யா பணக்காரனு? அல்லது அலங்காரப் பேர்வழியா? ஊர் ஊராக சுற்றி ராகியும் பருப்பும் வாங்கி வந்து சாப்பிடக் கூடியவன். வேறு பெண்களை தலை நிமிர்ந்து பார்க்கும் சுபாவம் அவனுக்குக் கிடையாது.

''இதெல்லாம் சும்மா வம்புப் பேச்சு'' என்று மறுத்தாள் நஞ்சம்மா.

''இல்லே. உண்மைதானும். இப்ப அவளைச் சீண்டுவார் யாரும் கெடையாது. அவளுக்கு என்ன பணத்துக்கு கொறைச்சல்? அப்பண்ணய்யாவுக்கும் யார் இருக்காங்க? பெண்டாட்டி, கொழந்தைகளும் இல்லே. அம்மாவும் கேக்கறது கெடையாது. எங்கோ பிச்சை எடுத்து இங்கே வந்து சாப்பிடுறர். எப்பிடி சம்பந்தம் உண்டாச்சோ ஆண்டவனுக்குத்தான் தெரியும்.''

நஞ்சம்மாவுக்கு அவமானமாய்ப் போய் விட்டது. அப்பண்ணய்யா தன் மைத்துனன், என்னவாய் இருந்தாலும் ஒரே குடும்பத்துக்காரன். பிச்சை எடுத்துப் பிழைக்க வேண்டும் என்பது அவன் தலை எழுத்து. ஆனல் இத்தனை நாட்களுக்குப் பிறகு இந்தக் கெட்ட பெயர் எதற்கு? அவர் ஊர் ஊராக யாசகம் செய்யப் போகாமல் தன் வீட்டிலேயே இருந்து கொண்டு

இரண்டு பசுக்களைக் கவனித்துக் கொள்ளட்டும் என்று சில நாட்களாக எண்ணி வந்தாள். ஆனால் அப்படிச் செய்தால் கங்கம்மா ரகளை செய்வாள். வீணாக இல்லாத வம்புகளையெல்லாம் கிளப்பி விடுவாள். அப்பண்ணய்யாவுக்கு நிலையான புத்தி கிடையாது. ஊர் சுற்றாமல் கால் ஒரே இடத்தில் நிற்காது. தலை எழுத்து போல் நடக்கட்டும் என்று பேசாமல் இருந்து விட்டாள். ஆனால் ஆசிரியர் புதிய தகவலைச் சொன்ன பிறகு மனம் பொறுக்கவில்லை.

அப்பண்ணய்யாவுக்குப் புத்திமதி சொல்ல வேண்டுமா வேண்டாமா என்று நான்கு நாட்கள் தயங்கிக் கொண்டே இருந்தாள். ஒரு நாள் மதியம் அவன் குழம்புப் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு வந்தபோது சென்னிகராயர் வீட்டில் இருக்க வில்லை. அவள் அவனிடம், ''உங்ககிட்டே ஒரு விஷயத்தைக் கேக்கப் போறேன். நீங்க தப்பா நெனைக்கக் கூடாது'' என்றாள்.

''என்ன சொல்லுங்க ''

''ஜனங்க நாக்கு எப்பவும் பல விதமாப் பேசும். நீங்க நரசம்மா கடைக்கு பொகலை வாங்கப் போறதைப் பார்த்து என்னவெல்லாமோ பேசிக்கறாங்க. நீங்க வேறே கடைக்குப் போகக் கூடாதா? மத்தவங்க கண்டபடி பேசற மாதிரி நாம் ஏன் நடந்துக்கணும்?''

''யார் அவன் அப்பிடிச் சொன்னது? அவங்கம்மாவை...''

''யாரோ சொல்லிட்டுப் போகட்டும். நாம ஜாக்கிரதையா இருந்தா நல்லதுதானே''. அப்பண்ணய்யா அதற்குப் பின் பேச வில்லை. குழம்பு வாங்கிக் கொண்டு போனான். ஆனால் மறுநாள் வரவில்லை. நஞ்சம்மா தினசரி அவனுக்காக அதிகப்படி குழம்பு வைத்தாள். ஆனால் எட்டு நாட்களாகத் தொடர்ந்து வராமல் போகவே அவள் அவனுக்காகச் சேர்த்து குழம்பு வைப்பதை நிறுத்திவிட்டாள். தன்னிடம் கோபப்பட்டோ, அவமானம் அடைந்தோ அவன் வராமல் இருந்திருக்க வேண்டும். ஆண் பிள்ளை ஒருவனே தனியாகக் களி செய்து, குழம்பு வைத்துக் கொண்டு இருப்பது சிரமம்தான். அவனுடைய வினைப்பயன். ஏதோ செய்து கொள்ளட்டும் என்று எண்ணிக் கொண்டாள். ஆனால் அப்பண்ணய்யா ஊரிலேயே இருக்கவில்லை. அப்பொழுது ஊரைவிட்டுக் கிளம்பிய அவன் மூன்று மாத காலம் திரும்பி வரவில்லை.

அவன் நாலேபயலு பக்கமாக போய் இருந்தானாம். அங்கிருந்து திரும்பியபோது அண்ணிக்கு ஒரு மூட்டை நெல் கொண்டு

வந்திருந்தான். அதற்குப் பிறகு தினசரி குழம்பும் ரசமும் வாங்கிக் கொண்டு போக வந்தான்.

ஒரு நாள் ஆசிரியரே சொன்னார், "இப்ப அப்பண்ணய்யா அந்தப் பக்கமே போறதில்லையாம். நாலே பயலுக்குப் போயிட்டு வந்தப்புறம் அவ கடைக்கு முன்னாடி நடக்கிறது கூடக் கெடையாதாம்."

3

தாய் மாமனைக் கண்டால் விசுவனுக்கு உள்ளூர பயம். கல்லேசன் அவனை அசட்டை செய்தது கிடையாது. சந்தைக்கு அழைத்துப் போய் அவனுக்கு பொரி, கடலை, முறுக்கு முதலியவை வாங்கிக் கொடுப்பான். தன்னுடன் வயலுக்கு அழைத்துச் செல்வான். ஆனால் விசுவன் போக்கிரித்தனம் செய்தால் மாமன் முறைத்துப் பார்த்தாலே விகவனுக்கு பயம். ஒரு நாள் பள்ளிக் கூடத்தில் விசுவன் மற்றொரு பையனுடன் சண்டை போட்டதற் காக கல்லேசன் அவனை ஓங்கி அடித்தான். அடித்த வேகத்தில் அவன் சுருண்டு விழுந்து மூத்திரம் பெய்துவிட்டான். கல்லேசனைத் திட்டி, பையனை சமாதானப் படுத்துவதற்குள் அக்கம்மா பாட்டிக்கு பெரும்பாடாகப் போய்விட்டது.

கமலாவுக்கு விசுவன் மேல் அன்போ, பாசமோ கிடையாது. அவன் எது செய்தாலும் தப்பு கண்டு பிடிப்பாள். ஆனால் கணவனிடமும், அக்கம்மா பாட்டியிடமும் அவளுக்கு பயம். ஆகையால் விசுவனை மிரட்டாமல், அடிக்காமல் இருந்தாள்.

இப்பொழுது விசுவன் முன்னைப்போல் அவ்வளவு சுறுசுறுப் பாக இல்லை. படிப்பிலும் அவ்வளவு கெட்டிக்காரனாக இருக்க வில்லை. சரியானபடி மிரட்டாததால் அவன் மந்தமாகி விட்டான் என்று நினைத்து கல்லேசன் மேலும் கெடுபிடிகள் செய்தான். ஆனால் விசுவன் நாளுக்கு நாள் மட்டியாய் வந்தான். பாடம் சொல்லித் தருவதற்காக கல்லேசன் வந்து உட்கார்ந்தால் விசுவன் அவனைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டே விழிப் பான். அக்கம்மாவுக்கு எழுத்து வாசனையே கிடையாது. 'தங்கை மகனை ஒரு கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்கிறேன்' என்று கல்லேசனுக்கு மனதில் ஒரு திருப்தி.

நாகலாபுரத்தின் ஏரி ராமஸந்திர கிராமத்து ஏரியைவிடப் பெரியது. ஏரிக்கு மத்தியில் நடுநடுவே பாறைகள் இருந்தன. நீந்திக் கொண்டே போய் நடுவே உள்ள ஒரு பாறையின் மேல் உடல் ஈரம் உலரும் வரை உட்கார்ந்திருந்துவிட்டு மறுபடியும் தண்ணீரில் பாய்ந்து நீந்தி வர வேண்டும் என்பது விசுவனின்

ஆசை. ஆனால் தண்ணீருக்குள் இறங்கக் கூடாது என்று மாமன் சொல்லி இருக்கிறான். அதை நினைக்கும்போதே கண்களில் நீர் வந்தது அவனுக்கு, இந்த ஊரில் தேன் கூட்டைக் கலைக்க முடியாது, மரம் ஏற முடியாது. தன் ஊருக்கே ஓடிப்போய் விடலாம் என்ற எண்ணமும் இருந்தது. ஆனால் அம்மா தன்னைப் பிடித்து மறுபடியும் கொண்டு வந்து விடுவாளே என்ற பயமும் தோன்றியது. அவன் அம்மாவை மனதிற்குள் திட்டிக் கொண்டான்.

ஒரு நாள் காலை அவன் சிலேட்டுப் புத்தகம் இவைகளைக் கையில் பிடித்தபடி பள்ளிக்கூடத்திற்குப் போய்க் கொண்டிருந் தான். ஏராளமான சிறுவர்களும், பெரியவர்களும் கூட்டம் கூட்டமாக அவனுடைய பாடசாலைக்கு அருகில் போய்க் கொண் டிருந்தார்கள். அந்தக் கூட்டத்தின் முன்னே சென்றவர்கள் வெள்ளைச் சட்டையும் வெள்ளைத் தொப்பியும் அணிந்திருந்தார் கள். அவர்களுடைய கையில் ஒரு கொடி. கொடியைப் பிடித்துக் கொண்டு இருந்தவர் வாய்க்கு நேரே ஏதோ ஒன்றை வைத்துக் கொண்டு, ''பாரத மாதாவுக்கு'' என்று சத்தம் போட்டார். அவர் கூறியது உரக்கக் கேட்டது. பின்னே இருந்தவர்கள் எல்லோரும் ''ஜே'' என்று கோஷமிட்டனர். ''மகாத்மா காந்திக்கு'' என்று அவர் மறுபடியும் ஏதேதோ சொன்னார். மற்றவர்கள் ''ஜே'' என்று கூவினார்கள். தேர்த் திருவிழாவில் பக்தர்கள் 'அரோகரா' என்று உற்சாகமாகச் சொல்வதைப் போல் அவர்கள் கோஷமிட்டார்கள். அதைப் பார்த்ததும் அவனுக்குக் குஷி பிறந்து விட்டது. நான்கு முறை கேட்டதும் முன்னே இருந்தவர் கத்திய கோஷம் எல்லாம் அவனுக்கு மனப் பாடம் ஆகிவிட்டது. அவர் நிறுத்தியவுடன் அவனே ''பாரத மாதாவுக்கு'' என்று கத்தினான். எல்லோரும் ''ஜே'' என்றனர். அவன் மறுபடியும் ஏழெட்டு கோஷங்கள் கூவினான். அவர்கள் ''ஜே'' போட்டார்கள். முன்னே இருந்த ஆள் தட்டிக் கொடுத்து ''கெட்டிக்காரப் பையன். நீயே கோஷம் போடு'' என்று சொல்லி அவனுடைய கையில் கொடியைக் கொடுத்தான். அவனுடைய வாய்க்கு எதிரே அந்தப் பொருளைப் பிடித்தான். அவன்தான் இப்போது தலைவர். அவனுக்கு மிகவும் குஷியாய்ப் போய்விட்டது. கூட்டம் அவனுடைய பள்ளிக்கு மிக அருகில் சென்றது. எதிரே இருந்த மைதானத்தில் எல்லோரும் உட்கார்ந் தார்கள். அவனிடம் கொடியைக் கொடுத்தவன் நின்று கொண் டான். மற்றொருவன் அதைக் கொடிக்காரனுடைய வாய்க்கு எதிரே பிடித்துக் கொண்டான். அவன் பேச ஆரம்பித்தான். ''சகோதரர்களே ! இப்ப நம்ம நாடு சிவப்புக் கொரங்கு கையிலே

அகப்பட்டிருக்குது. அவங்க நம்ம தங்கத்தையும், வெள்ளியையும் கொள்ளை அடிச்சிட்டுப் போறுங்க. நம்ம தாய்நாட்டுக்கு சுதந்திரம் வாங்கிக் கொடுக்க நாம் எல்லோரும் தயாராக வேணும். இப்ப நாம எல்லோரும் போர் வீரங்க.''

அவன் பேசுவது மிகவும் உரக்கக் கேட்டது. அதற்கு லௌட்ஸ்பீக்கர் என்று பெயராம். மற்றும் இரண்டு மூன்று பேர் பேசினார்கள். அவர்கள் அழகாகப் பேசினார்கள். ''இன்று சனிக்கிழமை. சென்னராயன் பட்டணத்தில் சந்தை கூடுகிறது. அங்கே ஒரு பெரிய பொதுக்கூட்டம் நடைபெறுகிறது. நீங்கள் எல்லோரும் அங்கு திரண்டு வந்து நாட்டுப்பற்றைக் காண்பிக்க வேண்டும்'' என்று கடைசியாகப் பேசியவர் கூறினார்.

அவருடன் பல பேர் புறப்பட்டனர். விசுவனுக்கும் அவர்களுடன் செல்ல வேண்டும் என்று ஆசை பிறந்தது. தன்னிடம் கொடி கொடுத்தவனிடம் சென்று ''நானும் வரட்டுமா'' என்றான். ''எட்டுமைல் நடப்பாயா?'' என்று கேட்டான் அவன்.

''ஓ, நான் சிருங்கேரிக்கே நடந்து போயிருக்கேன்.''

கூட்டம் புறப்பட்டுச் சென்றது. அவர்களுடன் அவனும் புறப்பட்டுச் சென்றான். மணல்-பள்ளம், பனங்காடு, ஆலந்தோப்பு, கரடு இவற்றையெல்லாம் தாண்டி நடந்தே சென்றனர். அவனுக்கு குஷியாகி விட்டது. மத்தியான்னம் ஒரு மணிக்கு எல்லோரும் சென்னராயன் பட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள். அவனுக்கு வயிறு பசிக்கத் தொடங்கியது. ''எனக்குப் பசிக்குது'' என்றான் அவன். ''எல்லோருக்கும் சாப்பாடு போடறுங்க. நீயும் வா'' என்று சொல்லி அவனை கையைப் பிடித்துக் கூட்டிக் கொண்டு போனார்கள். ஒரு இடத்தில் பெரிய அண்டாக்களையும், குண்டாக்களையும் வைத்து சமையல் செய்து கொண்டிருந்தார்கள். எல்லோருக்கும் சாப்பாடு போட்டாயிற்று. பிறகு எல்லோரும் சந்தைப் பேட்டை மைதானத்துக்குச் சென்றார்கள். அங்கே மிகுந்த ஜன நெரிசல். அத்தனை பெரிய கூட்டத்தை அவன் சிருங்கேரியிலும் பார்த்ததில்லை. ராமஸந்திர கிராமத்துத் திருவிழாவிலும் பார்த்ததில்லை. நாகலாபுரம் சந்தையிலும் அவ்வளவு கூட்டம் கிடையாது. மைதானத்துக்கு நடுவே இரண்டு ஆள் உயரத்தில் ஒரு மேடை போட்டு அதில் லௌட்ஸ்பீக்கர் வைத்திருந்தார்கள். விசுவனிடம் கொடியைக் கொடுத்து அழைத்து வந்தவன் நரசிம்மபுரத்துக்காரன். அவன் விசுவனைப் பார்த்து ''தம்பி நீ கூட்டத்திலே பேசறியா?'' என்று கேட்டான்.

''அப்படின்னு''

''நாகலாபுரத்திலே நான் செஞ்சேனே அப்பிடித்தான்.''

''ஓ! அப்படியே செய்யறேனே.''

''என்ன பேச வேணும்னு நான் சொல்லித் தர்றேன்.''

''நீங்க பேசியதெல்லாம் எனக்கு நெனப்பு இருக்குது. அதை அப்பிடியே சொல்விடறேன்.''

''சரி. நான் இன்னமும் சொல்லித் தர்றேன்'' என்று சொல்லி அவன் ஏதோ சொன்னான்.

கூட்டம் ஆரம்பம் ஆவதற்கு முன் ஒரு மேடையின் மீது ஏறி லௌட்ஸ்பீக்கரில் 'வந்தே மாதரம்' என்று இனிமையாகப் பாடினார். பிறகு, ''இப்பொழுது பாரத நாட்டின் இளஞ் செல்வன் ஒருவன் உங்கள் முன் பேசப் போகிறான். அவனுடைய பேச்சைக் கேட்டு நாம் எல்லோரும் ஊக்கம் பெற வேண்டும்'' என்று அவர் பேசினார்.

நரசிம்மபுரத்துக்காரன் விசுவனை மேலே ஏற்றி விட்டான். பின்பு தானும் மேலே ஏறி அவனை மைக்கின் முன்னே நிறுத்தினான். விசுவன் தனக்கு எதிரே இருந்த கூட்டத்தைப் பார்த்தான், மாபெருங் கூட்டம். அவனுக்குப் பயமாய்ப் போய் விட்டது, முகம் சிவந்தது. அவனுடன் வந்தவன் ''பாரத மாதாவுக்குன்னு சொல்லு'' என்று மெதுவாகச் சொன்னான். விசுவன் மெதுவாகச் சொன்னான், அது சத்தமாகக் கேட்டது. கூட்டம் 'ஜே' என்று முழங்கியது. அவன் தனக்குத் தெரிந்த ஏழெட்டு கோஷங்களைச் சொன்னான், கூட்டத்தினர் 'ஜே' என்று முழங்கினர். அவன் பேச ஆரம்பித்து விட்டான். ''சகோதர, சகோதரிகளே நமது பாரதத் தாயோட கை, கால்கள்லே சங்கிலி போட்டுக் கட்டி இருக்காங்க. நாம் எல்லோரும் அடிமையாய் இருக்கோம். இந்த செங்குரங்குப் பயல்கள் நம்ம வரிப் பணத்தைக் கொள்ளை அடிச்சிட்டுப் போறாங்க. நீங்க வரிப் பணத்தைக் கொடுக்காதீங்க. நம்மை அவங்க ஏமாத்தறாங்க'' அவர் சொல்லிக் கொடுத்த வார்த்தைகளுடன் தனக்குத் தெரிந்த சில கெட்ட வார்த்தைகளையும் சேர்த்துக் கொண்டான். பேச்சு முடிந்ததும் அருகில் நின்று கொண்டிருந்தவர் அவனுடைய கழுத்தில் சாமந்திப்பூ மாலையைப் போட்டார், எல்லோரும் கைதட்டினார்கள். அவனை இறக்கி விட்டு மற்றொருவர் பேச ஆரம்பித்தார். அவர் விசுவனை மிகவும் பாராட்டிப் பேசினார். ''இப்படிப்பட்ட பையனைப் பார்த்து நமக்கு ஊக்கம் பிறக்க வேண்டும். இவன்

எப்படி சிங்கக் குட்டியைப் போல் தைரியமாக வெள்ளையர்களை எதிர்க்கிறான்? அப்படியே நாமும் எதிர்க்க வேண்டும். இந்த வருடம் நீங்கள் யாரும் வரி கொடுக்காதீர்கள், போலீஸ்காரர்கள் வந்தால் இந்தப் பையனை நினைத்துக் கொள்ளுங்கள், உங்களுக்கு தைரியம் வரும்'' என்று சொல்லி விட்டு அவர் மறுபடியும் ஏதேதோ பேசினார்.

அப்பொழுது திடீரென்று கூட்டம் கலைய ஆரம்பித்தது. காக்கி உடுப்பு அணிந்திருந்த போலீஸ்காரர்கள் நீளமான பிரம்பு களைப் பிடித்துக் கொண்டு உள்ளே புகுந்தார்கள். வெள்ளைத் தொப்பி அணிந்திருந்தவர்களைச் சுற்றி வளைத்துப் பிடித்துக் கொண்டு மைக்கையும் பிடுங்கிக் கொண்டனர். இரு சாராருக்கும் வாக்குவாதம் நடந்தது. பிறகு எல்லோரையும் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கூட்டிக் கொண்டு போனார்கள். அவர்களுடன் விசுவனையும் அழைத்துக் கொண்டு போனார்கள். எல்லோரையும் ஒரு பெரிய அறைக்குள் போட்டு, இரும்புக் கம்பி போட்ட கதவையும் பூட்டி விட்டார்கள். உள்ளே இருந்தவர்கள் ''பாரத மாதாவுக்கு ஜே'' என்று முழங்கினர். சிலர் தங்களுக்குள் ஏதோ பேசிக் கொண்டார்கள். விசுவனுக்கு யாருடைய பரிச்சயமும் கிடையாது, அவனை அழைத்து வந்தவனும் அங்கிருக்கவில்லை. அவன் அழத் தொடங்கினான். ''பயப்படாதே தம்பி! நாங்க இருக்கோம், நீ கெட்டிக்காரன்'' என்று ஆறுதல் சொல்லி அவனைத் தட்டிக் கொடுத்தார்கள். அவன் அழுவதை நிறுத்தினான். ''சாப்பாடு போடாம ஏன் இங்கே அடைச்சு வைச்சிருக்காங்க? இதுதான் ஜெயிலா?'' என்று அவன் கேட்டான்.

''இல்லை தம்பி! இது அரண்மனை'' -ஒருவர் சொன்னார்.

''அப்பிடியானா சிம்மாசனம் எங்கே?''

''வேடிக்கையான பையன்'' என்று எல்லோரும் பேசிக் கொண்டார்கள். ஆனால் யாரும் அவனுடைய கேள்விக்குப் பதில் சொல்லவில்லை.

அப்பொழுது ஒரு போலீஸ்காரர் உள்ளே வந்தார். அவர் அவனுடைய கையைப் பிடித்து ''வெளியே வா'' என்றார்.

''நாங்க அந்தப் பையனை விடமாட்டோம். நீங்க அவனை அடிப்பீங்க'' என்று மற்றவர்கள் சொன்னார்கள்.

''இவ்வளவு சின்னப் பையனை நாங்க ஏன் அடிக்கறோம்? அவனோட வீட்டுக்காரங்க வந்திருக்காங்க'' என்று அவர் அவனுடைய கையைப் பிடித்து அழைத்துச் சென்றார். விசுவனை

ஆபீசுக்கு அழைத்துப் போனதும் அங்கே நாற்காலியில் அமர்ந்திருந்த ஒரு தடித்த போலீஸ்காரர் அவனைப் பார்த்து, ''டேய் பையா! உன்னோட ஊர் எது?'' என்று கேட்டார்.

''ராமஸந்திர கிராமம்.''

''ராமஸந்திர கிராமமா? அது எங்கே இருக்கு?'' என்று நின்று கொண்டிருந்த போலீஸ்காரரைக் கேட்டார்.

விசுவன் பதில் சொன்னான். ''தும்கூர் ஜில்லா. திப்டூர் தாலுக்கா. கம்பனகெரெ பிர்க்காவிலே இருக்கு'' ''பரவாயில்லை உனக்குத் தெரிஞ்சிருக்கு. எந்த வகுப்பு படிக்கிறே?''

''மூணும் வகுப்பு.''

''நீ யாரோட மகன்?''

''கணக்குப்பிள்ளை சென்னிகராயரோட மகன்''

''உன்னை அழைச்சு வந்தது யாருடா? உடனே நின்று கொண்டு இருந்த போலீஸ்காரர், ''சார் ராமஸந்திர கிராமம் வேறொரு ஜில்லா. இவன் அங்கிருந்து வரலை'' என்று சொல்லிவிட்டு,

''எந்த ஊர்லேருந்துடா வர்றே நீ?'' என்றார்.

''நாகலாபுரத்திலேருந்து.''

''அங்கே எதுக்காகப் போனே?''

''அங்கேதான் நான் படிக்கிறேன்.''

''யாரோட வீட்டிலே இருக்கே?''

''ஜோசியர் வீட்டிலே.''

''அவர் உனக்கென்ன உறவு?''

''அம்மாவோட அண்ணன்.''

நின்று கொண்டிருந்த போலீஸ்காரர் அமர்ந்திருந்தவரிடம் ''ஓ! இப்ப தெரிஞ்சிட்டுது, சார். அந்தக் கல்லேசன் எங் கூட பி.சி. ஆக இருந்தவன். இந்த ஊர் மருதிக்குப் பின்புறம் பேய் வீடு இருக்குதில்லியா? அங்கே ஏவல், மந்திரம் செஞ்சுகிட்டு ஒண்டியாக இருக்கிறரே கண்டி ஜோசியர். அவரோட மகன் தான் கல்லேசன்.''

''டேய் பையா, நீ எதுக்காக இங்கே வந்தே?''

தான் காலையில் வீட்டைவிட்டுப் புறப்பட்டதிலிருந்து சென்னராயன் பட்டணம் வந்து சேர்ந்தது வரை எல்லாவற்றை

யும் விசுவன் சொன்னான். ''அந்தக் கண்டி ஜோசியர்கிட்டே அனுப்பிடு'' என்று அந்தத் தடித்த ஆள் சொன்னார். பிறகு அவர் விசுவனைப் பார்த்துக் கண்களை உருட்டி ''டேய்! இன்னொரு தடவை இவங்களோட சேர்ந்து 'ஜே' போட்டா உன்னை பெல்ட் எடுத்து விளாசிப் போடுவேன்'' என்று பல்லைக் கடித்துக் கொண்டே சொல்லி தன் பூட்ஸணிந்த காலால் நிலத்தில் ஓங்கி உதைத்தார். ''இல்லை, இல்லை'' என்று அவன் பயந்து கொண்டே சொன்னான். நின்று கொண்டிருந்த போலீஸ்காரர் அவன் கையைப் பிடித்துக் கொண்டு இருட்டிலேயே அழைத்துச் சென்றார். மசூதிக்குப் பின்புறம் உள்ள ஒரு வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டினார். ''யாரது?'' உள்ளே இருந்து குரல் வந்தது. ''கதவைத் தொறங்க, உங்க பேரன்'' என்று போலீஸ்காரர் பதில் சொன்னார். உள்ளே விளக்கை ஏற்றிக் கதவைத் திறந்தார் ஒருவர். அவர் உயரமாக நல்ல ஆகிருதியாக இருந்தார். ''உங்க பேரன் காங்கிரஸ் காரங்களோடு சேர்ந்து விவரம் இல்லாம வந்து விட்டான். இனிமே வெளியே விடாதிங்க'' என்று சொல்லி விட்டு அவர் சென்றார். விசுவனுக்கு அந்தத் தாத்தாவைப் பார்த்த நினைப்பு வந்தது. அக்காவின் திருமணத்திற்கு முன்னதாக அவர் அக்கம்மாவுடன் ஊருக்கு வந்திருக்கிறார். ஆனால் சரியாக நினைவு இல்லை. அவன் அவருடன் உள்ளே சென்றான். உள்ளே ஒரு பக்கம் புலித்தோல் விரித்து வைக்கப்பட்டிருந்தது. அதற்குப் பக்கத்தில் மண்டை ஓடு, எலும்புகள், கோழிகள், பச்சை நூல், தாமிரத் தகடு, பல ஜோடி செருப்புகள் முதலியவை இருந்தன. விசுவன் பயந்து விட்டான்.

''எனக்குப் பயமாக இருக்கு'' என்றான் அவன்.

''இன்னிக்கு அவ்வளவு தைரியமாகப் பேசினியே, எதுக்காகப் பயம்? நீதான் என் பொண்ணோட மகன்னு தெரியலை'' என்று சொல்லி அவன் கையைப் பிடித்து கீழே உட்காரச் செய்தார்.

மகளின் மேல் இருந்த கோபம் அவளுடைய குழந்தைகள் இறந்த பிறகும் கூட கண்டி ஜோசியருக்குத் தணியவில்லை. அவளுடைய மகளைக் கொடுக்க முடியாது என்று சொல்லி விட்டாளே என்று அவருக்கு ஆத்திரம். அவருக்கும் பேரக் குழந்தைகளுக்கும் எவ்விதத் தொடர்பும் இருக்கவில்லை.

அவர்கள் இறந்து விட்டதால் மகளுக்கு விசனமாய் இருக்கும் என்று அவர் சில வேளைகளில் நினைத்துக் கொள்வதுண்டு. அந்தக் குழந்தைகள் மேல் அவருக்கு இருந்த பாசம் மகளைப் பற்றிய நினைவுகள் வந்ததும் மறைந்து விடும். ஆனால் இப்பொழுது

இந்தப் பேரன் வீரச் செயல் செய்திருக்கிறான். பதினைந்து, இருபதாயிரம் பேருக்கு முன்னால் பயப்படாமல் பேசியிருக்கிறான். சிங்கக்குட்டி என்று மக்கள் சொல்லிக் கொண்டார்கள். அவன் பேசுவதை அவரும் கேட்டார். ஆகையால் அவன் மேல் பாசம் பிறந்தது. ''எந்த ஊர்லேருந்து வந்தே?'' என்று கேட்டார்.

அவன் நாகலாபுரத்தில் தங்கியிருக்கும் விஷயத்தைச் சொன்னான். அவர் சமீப காலத்தில் ஊருக்குப் போய் இருக்கவில்லை. ஹாசன், ராமநாதபுரம் ஆகிய வட்டாரங்களில் சுற்றிக் கொண்டிருந்தார்.

''பசிக்குதோ?'' என்று அவர் கேட்டார்.

''உம்''

''இங்கே பார், வாழைப் பழமும், சர்க்கரையும் இருக்கு. சாப்பிட்டுப் படுத்துக்க. காலையிலே எந்திரிச்சவுடனே ஓட்டலுக்குப் போய் சாப்பிடலாம்''

''தோசையா?''

''உம். உனக்கு எது வேணுமோ அது''

அவரே வாழைப் பழங்களை உரித்துச் சர்க்கரையில் தொட்டுத் தொட்டுக் கொடுத்தார், அவன் வயிறாரச் சாப்பிட்டான். அவருடைய படுக்கையிலேயே படுத்துக் கொண்டான். அவர் தன் போர்வையை அவன் மேல் போர்த்து விட்டு விளக்கை அணைத்தார். அவனுக்குத் தூக்கம் வந்து விட்டது. அவருக்குத் தூக்கம் வரவில்லை. மகளைப் பார்த்துவிட்டு வர வேண்டும் என்று ஆசை உண்டாயிற்று, அவளுடைய குழந்தைகள் இறந்து ஒரு வருடமாகப் போகிறது. எவ்வளவு உருகிப் போய் விட்டாளோ? நான் அந்தப் பெண்ணின் கல்யாணத்திற்கும் போகவில்லை. நல்ல இடத்தில் பெண்ணைக் கொடுத்து விட்டாள் என்று அக்கம்மா சொல்லியிருந்தாள். நஞ்சம்மாவின் புருஷன் ஒரு பேடிப்பயல். சரி பரவாயில்லை. இந்தப் பையன் ஒரு சிங்கக்குட்டி போல் பிறந்திருக்கிறான் என்று பலவிதமாக எண்ணிக் கொண்டே படுத்திருந்தார்.

அப்பொழுது யாரோ கதவைத் தட்டினார்கள். ''கதவைத் தொறங்க'' என்று குரல் கேட்டது. அது கல்லேசனுடைய குரல் என்று கண்டு கொண்டார். விளக்கை ஏற்றிக் கதவைத் திறந்தார். விசுவன் அங்கே படுத்திருப்பதைக் கண்டதும் கல்லேசனுக்கு மன நிம்மதி உண்டாயிற்று. அவன் மத்தியான்னம் வரை விசுவனுக்காகக் காத்திருந்து ஏரி, கிணறுகளில் எல்லாம்

தேடி விட்டான். சென்னராயன் பட்டணத்திற்குப் போகும் கும்பலில் அவனைப் பார்த்ததாக யாரோ இரவு நேரத்தில் சொன்ஞர்கள். உடனே அவன் புறப்பட்டு வந்து விட்டான். சந்தேகப் பட்டு போலீஸ் ஸ்டேசனுக்குப் போய் விசாரித்தான். போலீஸ் வேலை பார்த்த எல்லப்பன் டபேதாராகப் பதவி உயர்வு பெற்று அந்த ஸ்டேஷனில் வேலை பார்த்து வந்தார். அவர் கல்லேச னிடம் விஷயத்தைச் சொன்ஞர்.

பேரனின் வீரச்செயலைப் பற்றி கல்லேசனிடம் கண்டி ஜோசியர் சொன்ஞர். குழந்தைகள் இறந்தபிறகு நஞ்சம்மா சிருங்கேரிக்குப் போனது, அங்கே விசுவன் ஆற்றில் நீச்சல் அடித் தது, கிராமத்தில் பாம்பை அடித்தது, படிப்பதற்காக நாகலா புரத்திற்கு வந்தது ஆகிய விஷயங்களை எல்லாம் கல்லேசன் விவரித்தான்.

மறுநாள் காலையில் எல்லோரும் தாமதமாக எழுந்தார்கள். விசுவன் கண்ணை விழித்துப் பார்த்த போது அவன் எதிரே மாமன் உட்கார்ந்திருந்தான். அவன் பயந்து நடுங்கி விட்டான். எழுந்து கை, கால், முகம் அலம்பி விட்டு ஏரியின் பக்கம் போய்விட்டு வந்தபிறகு மூவரும் ஓட்டலுக்குப் புறப்பட்டார்கள். ''மசாலா தோசை சாப்பிடறியா?'' என்று கண்டி ஜோசியர் கேட்டார். அவன் பதில் பேசவில்லை. மறுபடியும் கேட்டார். ''எனக்கு ஒண்ணும் வேண்டாம்'' என்ருன் அவன். கல்லேசனைக் கண்டு பையன் பயப்படுகிருன் என்று அவருக்குத் தெரியவில்லை. அவனுக்கு இரண்டு மசாலா தோசை, ஒரு மைசூர்பாகு கொடுக் கும்படி அவர் ஓட்டல்காரரிடம் சொன்ஞர்.

கல்லேசனும், விசுவனும் புறப்பட்ட போது அவர் கல்லேச னிடம் ''பையனை நடத்திகிட்டுப் போகாதே, நான் புதுக் குதிரை வாங்கியிருக்கேன், பின்ஞடி கட்டி இருக்கேன். சேணம் போட்டு அவனை அதிலே உட்கார்த்திட்டுப் போ'' என்ருர்.

அவரே குதிரையை அவிழ்த்து, சேணம் பூட்டி அவனை அதில் உட்கார வைத்தார். அவனுக்குச் சந்தோஷமாக இருந்தது. ஊரில் இருக்கும் போது மணியக்காரனின் குதிரைக் குட்டியை அவருக்குத் தெரியாமல் ஓட்டுவது உண்டு. ஆஞல் இவ்வளவு பெரிய சிவப்புக் குதிரையின் மேல் உட்கார்ந்தது கிடையாது. ஒரு கணம் பதட்டம் அடைந்தாலும், கீழே இறங்குவதாகச் சொல்லவில்லை. ஜோசியர் கல்லேசனிடம், ''குதிரையை வீட்டி லேயே பதினஞ்சு நாள் வைச்சுக்க. இவனுக்கும் குதிரை சவாரி யைப் பழக்கிவிடு. ஆம்பளைப் பையனுக்கு குதிரை சவாரி தெரிய வேண்டாமா?'' என்ருர்.

சவாரி மிகவும் இன்பமாய் இருந்தது. வழியில் மாமன் ஒரு வார்த்தையும் பேசவில்லை. 'இந்தக் குதிரை என்னுடையதாக இருந்தால் எவ்வளவு நன்றாய் இருக்கும்? எனக்கே கொடுத்து விடு என்று தாத்தாவிடம் சொல்ல வேண்டும். இதில் உட்கார்ந்து கொண்டு தனியாகவே ராத்திரி நேரத்தில் சவாரி செய்து ஊருக்குப் போய் அம்மாவை எழுப்ப வேண்டும். இனிமேல் நம்மூரிலேயே இருந்துவிட வேண்டும். அம்மா இல்லாமல் தனியாக இருக்க முடியாது. எப்பொழுதும் குதிரையின் மேல் உட்கார்ந்து சுற்றிக் கொண்டிருந்தால் பாம்பு எப்படிக் கடிக்கும்? நம்மூர் பள்ளியிலேயே சேர வேண்டும். 'நான் குதிரையின் மேல் உட்கார்ந்து கொண்டு இருக்கிறேன். 'நீங்கள் அப்படியே பாடம் நடத்துங்கள்' என்று ஆசிரியரிடம் சொல்ல வேண்டும். ஆரம்பப் படிப்பு முடிந்த பிறகு குதிரையில் ஏறி கம்பனகெரெய்க்குப் போய்ப் படிக்க வேண்டும். இந்த மாமா இப்பொழுது இல்லாவிட்டால் இப்படியே இந்தக் குதிரையை ஓட்டிக் கொண்டு ஊருக்குப் போய் விடுவேன். என்னை அடிக்கிறானு? இவனுடைய கை முடங்கிப் போகட்டும்' என்று விசுவன் தனக்குள் எண்ணிக் கொண்டான்.

ஊர் போய்ச் சேர்ந்ததும் வீட்டின் முன்னே குதிரையை நிறுத்தி கல்லேசனும், விசுவனும் இறங்கினார்கள். அக்கம்மா வெளியே ஓடி வந்து, 'எங்கேடா, தங்கமே போயிட்டே?' என்று சொல்லி அவனைத் தழுவிக் கொண்டாள். கல்லேசன் செருப்பைக் கழற்றி வைத்து விட்டு நேரே சமையல் அறைக்குச் சென்றான். விசுவனும் அக்கம்மாவும் உள்ளே வந்து விட்டார்கள். கல்லேசன் கையில் அகப்பட்ட ஒரு விறகுக்கட்டை ஒன்றை எடுத்து வந்து விசுவனை ஒரு கையால் தூக்கிப் பிடித்தவாறு சரமாரியாக அடிக்க ஆரம்பித்தான். ''அய்யோ கொழந்தை செத்துப் போகுண்டா! தேவடியா மகனே'' என்று சொல்லிக் கொண்டு அக்கம்மா தடுக்க ஓடி வந்தாள். அவள் மீதும் அடி விழுந்தது. ''அட யமமுண்டைப் பயலே! கொழந்தையை இப்படியா அடிக்கறது?'' என்று சொல்லிக் கொண்டு இருக்கும் போது மேலும் ஏழெட்டு அடிகள் விழுந்தன.

''தட்டிக் கேக்க ஆள் இல்லாத எருமைக் கடா மாதிரி வளந்துட்டான் படவாப் பயல்! கண்டவன் பின்னடி போறானே, ஏதாவது ஆயிட்டா கெட்ட பெயர் யாருக்கு?'' என்று திட்டிக் கொண்டே பையனைப் பார்த்தான். விசுவன் முதுகிலிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. அவன் நினைவு தவறிக் கீழே விழுந்து விட்டான். அவன் அணிந்திருந்த கால் சட்டை மூத்திரத்தால் ஈரமாகி விட்டிருந்தது. ''அங்கே பாம்பு கடிக்கும்னு

பயந்து இங்கே கொண்டு வந்து விட்டா நீ அடிச்சுக் கொல்றியா?'' என்று அக்கம்மா ஓலமிட்டாள். அக்கம் பக்கத்தவர்கள் ஓடி வந்தார்கள். கல்லேசன் விசுவனைத் தொட்டுப் பார்த்தான். உயிர் போயிருக்க வில்லை. ஓடிப் போய் ஒரு செம்புத் தண்ணீர் கொண்டு வந்து முகத்தில் அடித்தபிறகு நினைவு வந்தது. சட்டை எல்லாம் ரத்தக் கறை. ரத்தம் உறைந்து கருப்பாக மாறிக் கொண்டிருந்தது. கல்லேசன் காயங்களைக் கழுவி விட்டு மருந் தெண்ணை போட்டுத் தடவினன். ''ஐயோ வலிக்குதே'' என்று விசுவன் கத்தினன்.

## 4

ஆசிரியருக்கு ராமஸந்திர கிராமத்திலிருந்து மாற்றலாகி விட்டது. அவர் அந்த ஊருக்கு வந்து ஐந்து வருடமாகி விட்டது. சொந்த ஊரான ஹுளியாருக்கு மாற்றல் வாங்கிக் கொண்டு போக வேண்டும் என்று அவர் முயற்சி செய்து கொண் டிருந்தார். நல்லவேளையாக அவரை அதே ஊருக்கு மாற்றி விட்டார்கள். அவர் சென்றதைப்பற்றி நஞ்சம்மாவுக்கு மிகுந்த வருத்தம். அவளுடைய சொந்த அண்ணனைப்போல் சுக துக்கங் களை விசாரிப்பார். அவருடைய மனைவிக்கும் நஞ்சம்மாவுக்கும் சினேகிதம். ஆறுமாத காலம் நடந்த அவளுடைய இரவுப் பள்ளி முடிந்து விட்டது. கம்பனகெரெயிலிருந்து தலைமை ஆசிரியர் வந்து ''முதல் இரவுப் பள்ளி திருப்திகரமாக நடந்து முடிந்து விட்டது.'' என ரிப்போர்ட் அனுப்பி விட்டு மறுபடியும் இரவுப் பள்ளி ஆரம்பிக்க சிபாரிசு செய்தார். ''சம்பளப் பணம் நூத் திருபது ரூபாயை சீக்கிரத்திலேயே அரசாங்கம் அனுப்பும்'' என்று சொல்லி அவளிடம் ரசீதையும் வாங்கிக் கொண்டு போனர். அந்த ஆசிரியருக்குப் பதிலாக வேறு ஒருவர் வந்தார். ஆனல் அவருக்கும் நஞ்சம்மாவுக்கும் பரிச்சயம் கிடையாது. ஆசிரியர் வெங்கடேசய்யா போய்விட்டதைப் பற்றி மாதேவய்யாவுக்கும் வருத்தம்தான். அந்த சமயத்தில் நஞ்சம்மா புதுவீடு கட்ட ஆரம்பித்தாள். இப்பொழுது அவளுக்கு வேறு வேலை இருக்க வில்லை. மழைக்காலம் ஆரம்பம் ஆவதற்கு முன்னல் ஓடு வேய்ந்து முடித்து விட வேண்டும் என்று விறுவிறுப்பாக வேலையைக் கவனித் தாள். வீட்டைக் கட்டி அவளுக்கு அனுபவம் கிடையாது. எல்லா வேலைகளையும் பொறுப்பாகக் கவனிக்க வேண்டி இருந் தது. இல்லாவிட்டால் வீண்செலவு ஆகும். அவள் சேர்த்து வைத்திருந்த பணம் சுவர் கட்டவும் மரம், மூங்கில் செலவு களுக்குப் போதுமானது. ஓடு வாங்கப் பணம் வேண்டும். சுவர் பூச்சு வேலை சற்று மெதுவாக நடந்தாலும் பரவாயில்லை. ஒவ்வொரு பொருளை வாங்குவதிலும் கட்டுமான வேலையிலும்

மாதேவய்யா ஆலோசனை கூறி வந்தார். நஞ்சம்மாவுக்கு மற்ற வேலைகள் இல்லாததால் அவளும் கட்டுமான வேலையில் ஈடுபட்டாள். கூலி ஆட்கள் கலந்து வைத்திருந்த மண்ணை சுவருக்கு மேல் கொண்டு போய் கொடுப்பாள். மண் கலப்பதற்காகக் குடத்தில் நீர் கொண்டுபோய் கொட்டுவாள். கணக்கு எழுதும் அம்மாள் இதைப் போல வேலை செய்வதைப் பார்த்து ஆட்களுக்கு வியப்பாக இருந்தது. ஆனால் தன் வீட்டு வேலையைத் தான் செய்வதில் அவளுக்குக் கூச்சம் கிடையாது.

ஒன்றரை ஆள் உயரத்திற்குச் சுவர் எழும்பி விட்டது. ஓடு வாங்கப் பணம் சேகரிப்பதுதான் பாக்கி. ஒரு நாள் மாலையில் நஞ்சம்மா மண் பிசைந்திருந்த இடத்தில் அப்பி இருந்த மண்ணை மண் வெட்டியால் வழித்து உருண்டை பிடித்து மேலே உட்கார்ந்து வேலை செய்து கொண்டிருந்தவர்களுக்குக் கொடுத்துக் கொண்டு இருந்தாள். அப்பொழுது அவளுடைய தந்தை அங்கே வந்தார். தோளில் ஒரு கோணிப்பையைப் போட்டுக் கொண்டு வேட்டி உடுத்தி ஒரு சால்வையைப் போர்த்துக் கொண்டு வந்தார். பூட்ஸ், கோட்டு, வெள்ளைக் குதிரை ஆகியவை கிடையாது. நடந்தே வந்திருந்தார். ''நஞ்சா, வீடு கட்டறியா? நல்லதுதான்'' என்றார் அவர்.

மண்வெட்டியை அங்கேயே போட்டு விட்டு மறுநாள் செய்ய வேண்டிய வேலை பற்றி கூலிக்காரரிடம் சொல்லிவிட்டு அவள் தன் தகப்பனுருடன் வீட்டிற்குப் புறப்பட்டாள். கை கால்களை அலம்பிக் கொண்டு அவள் சமையல் அறையில் அடுப்பைப் பற்ற வைத்தாள். ''நஞ்சா, எனக்காகத் தனியா ஏதும் செய்ய வேண்டாம். சோறும் கொழம்பும் செஞ்சாப் போதும்,'' என்று சொல்லிக் கொண்டே அவர் சமையல் அறைக்குப் போனார். ஒரு பலகையை எடுத்துப் போட்டுக் கொண்டு அதில் அமர்ந்த வாறே, ''உன் பையன் பெரிய வீரன். பெறந்தா அப்பிடிப் பெறக்கனும். இருபதாயிரம் பேரும் அவனை சிங்கக் குட்டின்னு சொன்னாங்க'' என்று சொல்லிவிட்டுத் தான் பார்த்தவற்றை விவரித்தார். மகனைப் பற்றிப் புகழ்ந்து பேசுவதைக் கேட்டு அவளுக்கும் சந்தோஷம் ஏற்பட்டது. ஆனால் இந்தப் பையன் போலீஸ்காரனிடம் மண்டையில் அடி வாங்கினால் என்ன செய்வது என்கிற கவலையும் ஏற்பட்டது. ''நான் இந்தப் பக்கம் வந்திருக்க மாட்டேன். நேத்து உன் மகனைப் பார்த்தேன். ராத்திரி வேளையிலே போலீஸ்காரங்க அவனை எங்கிட்டே விட்டுட்டுப் போனாங்க. இன்னிக்குக் காலையிலே அவனையும், கல்லேசனையும் குதிரையிலே ஏத்தி அனுப்பிச்சேன். உன்னைப் பார்க்க வேணும்னு தோணிச்சு, காலங் கடத்த வேண்டாம்னு

நெனைச்சு கோணிப்பையைத் தூக்கிட்டு உடனே வந்துட்டேன்'' என்றார் அவர்.

குழந்தைகள் இறந்து போனது பற்றி அவரும் கேட்கவில்லை. அவளும் சொல்லவில்லை. ''வீடு கட்டப் போறியா? நல்லதுதான். எனக்கு முன்னாடியே தெரிஞ்சிருந்தா நானும் கொஞ்சம் பணம் கொடுத்திருப்பேன். மங்களூர் ஓடு போடு. ஒரு மாசத்துக்கு முன்னாடிதான் எண்ணூறு ரூபாய் கொடுத்து ஒரு புதுக் குதிரை வாங்கினேன். இப்ப எங்கிட்டே இரு நூறு ரூபாய் இருக்கு. வாங்கிக்க'' என்று சொல்லி உள் சட்டைப் பைக்குள் கையை விட்டு ஒரு வெள்ளைத் துணியில் கட்டி வைத்திருந்த நோட்டுக் கற்றையை எடுத்தார்.

''வீடு கட்டப் பணம் வேணுமில்லியா? நான் ஏற்பாடு செய்யறேன்'' என்றார் அவர்.

''வீடு கட்ற செலவுக்கு நான் ஏற்பாடு செய்றேன். பணத்தை நீயே வைச்சுக்க'' என்றாள் அவள்.

''எனக்குப் பணக் கஷ்டம் கெடையாது. நீயே வைச்சுக்க. அதைப் பத்திக் கவலை வேண்டாம்.''

இரவு படுத்த பிறகும்கூட தந்தையும் மகளும் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தனர். அப்பொழுது நஞ்சம்மா தந்தையிடம் ''அப்பா உனக்கும் வயசாயிடுச்சு. கை, கால் திடமா இருக்குன்னு இப்படியா ஊர் ஊரா சுத்தறது? நீ எங்கே போறேன்னு தெரியலைன்னு அக்கம்மா சொல்றா. இனி மேலாவது வீட்டிலே தங்கக் கூடாதா?''

''வீட்டிலே தங்கி என்ன செய்யறது, ஏதாவது வேலை செய்ய வேண்டாமா?'' இந்தக் கேள்விக்கு நஞ்சம்மா பதில் சொல்ல முடியவில்லை. சிறிது நேரம் கழித்து அவரே சொன்னார். ''கல்லேசனோட பெண்டாட்டி யோக்கியதை உனக்குத் தெரியும். அந்த முண்டையை அடிச்சு வெரட்டற வரை யாருக்கும் நிம்மதி கெடையாது. அவனும் அவளை அடிக்கறான், உதைக்கறான். அவளைக் கொலை செஞ்சு வயல்லே புதைக்கிறது கஷ்டமல்ல. அவளைக் கட்டிட்டு கஷ்டப்படணும்னு அவன் தலை எழுத்து. நான் எதுக்காக வம்பு செய்யணும்னு பேசாம இருக்கேன். எந்த ஊர்லே இருந்தா எனக்கென்ன.''

நஞ்சம்மா பேசவே இல்லை. அவள் ''நீ இங்கேயே வந்து தங்கி விடு'' என்று சொல்ல நினைத்தாள். ஆனால் அவர் ஒருகாலும் மகளின் வீட்டில் தங்கமாட்டார். அவர் இங்கே

இருந்தால் கணவன் வெளியே போக வேண்டும். கணவனின் நடவடிக்கையைப் பிடிக்காமல் அடித்தாலும் அடித்து விடுவார் என்னும் சிந்தனை வந்தது. இருபது மைல்கள் நடந்து வந்த களைப்பால் அவர் தூங்கி விட்டார்.

நஞ்சம்மா சற்று நேரம் புரண்டு கொண்டே இருந்தாள். விசுவனைப் போலீஸ்காரர்கள் பிடித்துக் கொண்டு போனதைப் பற்றிய நினைவுகள் தூக்கம் வந்த பிறகும் அந்தக் கனவுதான். அவனைப் போலீஸ்காரர்கள் வெளியே விட்டு விடுகிறார்கள், ஆனால் தன்னைப் பிடித்துக் கொள்ள வருகிறார்கள். அவள் தப்பித்து முன்னே ஓடுகிறாள். கருத்த இரு போலீஸ்காரர்கள் துரத்துகிறார்கள். ஒரு ஆறு குறுக்கிடுகிறது. அவள் அதைத் தாண்டிக் கொண்டு செல்கிறாள். அவள் தங்களிடமிருந்து எப்படித் தப்பித்துக் கொள்ள முடியும்? என்று அலட்சியமாகச் சிரித்தவாறு போலீஸ்காரர்கள் நின்று விடுகிறார்கள். அவளுக்கு அப்பொழுது விழிப்பு ஏற்பட்டது. ''ஏதோ ஒரு கெட்ட கனவு நான் அப்படிப்பட்ட தவறான வேலை என்ன செய்தேன், போலீஸ்காரர்கள் எதற்காகத் துரத்துகிறார்கள்?'' என்று எண்ணிக் கொண்டே மறுபடியும் தூங்க முயற்சித்தாள். நீண்ட நேரம் தூக்கம் வரவில்லை.

கண்டி ஜோசியர் மகளின் வீட்டில் மூன்று நாட்கள் தங்கினார். வீடு கட்டுவதைப் பற்றித் தனக்குத் தெரிந்த ஆலோசனைகளைச் சொல்லி விட்டு அவர் புறப்பட்டார்.

ஓடு வாங்கப் பணம் வேண்டும் என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தபோது அவளுடைய தகப்பனார் இருநூறு ரூபாய் கொடுத்து விட்டுப் போனார். அன்றே அவள் சன்னேனஹள்ளிக்குச் சென்று இரண்டு நாட்களில் ஓடுகளைக் கொண்டு வந்து கொடுத்துப் பணத்தை வாங்கிக் கொண்டு போகுமாறு சொல்லி விட்டு வந்தாள். சுவர் சற்று உலர வேண்டும். அவ்வளவுதான். உடனே கம்பம் வைத்து விட்டம், வெட்டுக்கை, சட்டம் ஆகியவற்றை எல்லாம் போட்டு விடவேண்டும். எல்லாம் தயாராக இருக்கிறது. ஓட்டுக்குப் பணம் போக மீதி ஐம்பது ரூபாய் இருக்கிறது. ஒரே மூச்சில் கட்டி முடித்து விடவேண்டும். கிரஹப் பிரவேசம் செய்வதைப் பற்றிப் பின்னால் யோசித்துக் கொள்ளலாம். அதற்குள் இரவுப் பள்ளிக்கான சம்பளம் வந்து விட்டால் அதில் ஐம்பது ரூபாய் செலவழித்து அந்தச் சடங்கைச் செய்து விடலாம். அதற்கு வரச் சொல்லி தகப்பனாருக்குச் சொல்லி அனுப்ப வேண்டும். இந்த ஊர் ஜோசியர்கள் வேண்டாம். விசுவனையும் கூட்டிக் கொண்டு வரவேண்டும். அக்கம்மா

வும் கல்லேசனும் வருவார்கள். அண்ணியைப் பற்றிச் சொல்ல முடியாது.

கோடைக் காலம் ஆரம்பம் ஆவதற்கு முன்னே வானத்தில் மேக மூட்டம் போட்டு விட்டது. ஓடு வேய்வதற்கு முன்னால் மழை வந்து விட்டால் சுவர் கரைந்து விடும். ஆகையால் சீக்கிரமாக அந்த வேலையை முடிக்க வேண்டும். தச்சர்களிடம் சொல்லி வேலையைச் சட்டென்று முடிக்கச் செய்தாள். சன்னேன ஹள்ளிக்கு மறுபடியும் போனாள். அவள் போகும் பொழுது வீட்டில் குயவன் இருக்கவில்லை. அவன் வரும் வரை அவனுக்காகக் காத்திருந்து அவனிடம் கண்டிப்பாய்ப் பேசிவிட்டு வந்தாள். அடுத்த நாள் ஓடுகள் வந்து சேர்ந்தன. வெய்யில் எரித்துக் கொண்டிருந்தது. மேகங்களும் அடிக்கடி மூட்டம் போட்டுப் பயமுறுத்திக் கொண்டிருந்தன. ஆகையால் கூலிக்காரர்கள் முனைந்து வேலை செய்தார்கள். நஞ்சம்மாவும் அவர்களுடன் சேர்ந்து கொண்டு ஓடுகளை மேலே கொடுத்துக் கொண்டிருந்தாள். மாலை நான்கு மணி அளவில் வேலை முடிந்தது. ''உங்களுடைய வேலையிலே நீங்க எப்பிடியோ ஜெயிச்சிட்டீங்க'' என்று கூலிக்காரர்கள் சொன்னார்கள்.

அங்கேயே நின்று கொண்டிருந்த மாதேவய்யா நஞ்சம்மாவிடம் ''அப்பண்ணய்யா கரும்புத் தோட்டத்திலே நெருப்பு வைச்சதாலே உங்க நெலம் எல்லாம் போயிட்டது. அன்னிக்கு அவனும் சென்னய்யாவும் உங்க வீட்டு ஓட்டை உலக்கை எடுத்து அடிச்சு உடைச்சாங்க. உடைக்கறது சுலபந்தான். வீட்டைக் கட்டி முடிக்கறதுதான் கஷ்டம்.''

அதைக் கேட்டதும் சென்னிகராயருக்குப் படு எரிச்சல். அவர் அங்கிருந்து நகர்ந்தார். மேக மூட்டம் பயமுறுத்தியது. அவ்வளவுதான். மழை பெய்யவில்லை. காலையிலிருந்து ஓடுகளைத் தூக்கித்தூக்கி நஞ்சம்மாவினுடைய வயிறு பசித்தது. அடுப்பு மூட்டிக் கொஞ்சம் சோறு வடித்தாள். மோரில் கலந்து சாப்பிட்டு விட்டு தன் கணவனுக்கும் கொஞ்சம் எடுத்து வைத்து விட்டுப் படுத்து விட்டாள். படுத்துக் கொண்டதும் இறந்த குழந்தைகளைப் பற்றிய நினைவு அவளை அரிக்கத் தொடங்கியது. சொந்த வீட்டில் அவர்களும் ஒருநாளும் இருக்கவில்லையே என்ற மனக்குறை வேறு. விசுவனைப் பற்றிய யோசனை ஒரு பக்கம். அவன் நாகலாபுரம் போய் ஆறு மாதமாகி விட்டது. இன்னும் பதினைந்து நாளில் வரக்கூடிய கோடை விடுமுறையில் அவனை ஊருக்கு அழைத்து வரவேண்டும். அவன் அங்கே இருக்கப் போவது ஒரு வருடம்தான். அதற்குப் பிறகு கம்பனகெரெயில்

படிக்க வேண்டும். ராமண்ணன் தினசரி பத்து மைல் நடந்து கஷ்டப்பட்டான். எதற்காக அதைப் போல் இவனும் கஷ்டப் பட வேண்டும்? கம்பனகெரெயில் ஒரு சிறு வீடு வாடகைக்கு எடுத்துக் கொண்டு அங்கேயே இருந்து விடலாம். அங்கிருந்து ராமஸந்திர கிராமத்திற்கு வந்து கணக்கு வேலைகளைக் கவனித்து விட்டுப் போகலாம். வெகுநேரம் இவ்வாறு யோசித்தபடி புரண்டு கொண்டிருந்தாள். பிறகு உறக்கம் வந்தது.

காலையில் எழுந்த போது உடம்பு, கை, கால் எல்லாம் ஒரே வலி. காய்ச்சல். இரண்டு கை அக்குள்களிலும் வலி. முந்தைய தினம். ஓடு எடுத்துக் கொடுத்து வேலை செய்தாள். அவ்வளவு ஓடுகளைத் தூக்கித் தந்ததால் இரண்டு கைகளிலும் நெறி கட்டி யது போல் இருந்தது. எழுந்து முகம் கழுவி பால் கறந்தாள். ஒரு மாதமாக அப்பண்ணய்யா ஊரில் இருக்கவில்லை. ஆகையால் மோர் அதிகம் மீந்து விடுகிறது. காய்ச்சல் வந்திருந்தாலும் அவள் ஆறு ரொட்டி செய்தாள். தான் அரை ரொட்டி சாப் பிட்டு விட்டு மீதியைக் கணவனுக்கு வைத்து விட்டுப் படுக்கை யில் படுத்து விட்டாள். தூக்கமும். விழிப்பும் கலந்த ஒரு நிலை. மாலை வரை இப்படியே பொழுது கழிந்தது. வீட்டிற்கு யாரும் வரவில்லை. அவளே எழுந்து மிளகுக் கஷாயம் குடித்துப் படுத்து விட்டாள். எப்பொழுது இரவாயிற்று, எப்பொழுது கணவன் வந்து படுத்தான் என்பதெல்லாம் அவளுக்குத் தெரியவில்லை.

நள்ளிரவில் கணவனின் குறட்டை ஒலியால் அவளுடையத் தூக்கம் கலைந்தது. இரண்டு கால் இடுக்குகளிலும் வலி. அவளுக்கு ஒரு சந்தேகம் தோன்றியது. ஓடு தூக்கியதால் கை அக்குள்களில் வலிக்கலாம். ஆனல் கால் இடுக்கில் வலி ஏற்படுவ தாக இருந்தால் காலையிலேயே வலி ஏற்பட்டிருக்கலாமே! பிளேக் நோயாக இருக்குமோ? அப்படியானல் எந்த இடத்திலும் எலி விழவில்லையே! போன தடவை பார்வதிக்கும், ராமண்ணனுக்கும் சந்தடி இல்லாமல் வந்து விட்டது. இப்பொழுதும் அதேபோல் வந்திருக்குமோ, அவள் பதட்டம் அடைந்தாள். மாதேவய்யா விடமாவது இதைப் பற்றிக் கேட்க வேண்டும்.

''உங்களைத்தான், கேட்டதா?'' என்று கணவனுக்கு அருகே நின்று சத்தம் போட்டாள். அவருடைய குறட்டை நிற்கவில்லை. அவருடைய தோளைப் பிடித்து உலுக்கினுள். ''சும்மா விழுந்து கிட, ராத்திரி எதுவும் சமைக்கலை. இப்ப தூக்கத்தையும் கெடுக்கறு'' என்று அவர் கண்களை மூடிக்கொண்டே அதட்டினர்.

அவளுக்கு ஆத்திரம் வந்தது. ''நீங்க மனுஷுரு, மாடா?'' என்று கேட்க வேண்டும் போல் தோன்றியது. அப்படிக் கேட்டு

விட்டால் அவர் மறுபடியும் சத்தம் போட்டு ரகளை செய்வார். ஆகையால் அவள் அப்படிச் சொல்லவில்லை, ''எனக்குப் பிளேக் வந்திருக்கிற மாதிரி தோணுது. மாதேவய்யாவைக் கூட்டிட்டு வாங்க.''

அவர் அசையவில்லை. சற்று நேரத்தில் மறுபடியும் குறட்டை ஒலி கேட்டது. சீக்கிரமாக மருந்து சாப்பிட வேண்டும் என்று நினைத்தாள். அவளே எழுந்து போர்வையைப் போர்த்துக் கொண்டு வெளியே கிளம்பினாள், உடம்பு நடுங்கிக் கொண்டிருந்தது. கைகளைப் போல் கால்களில் அவ்வளவு வலி இருக்கவில்லை. தட்டுத் தடுமாறி கோவிலுக்குப் போய் 'அய்யா' என்று கூப்பிட்டாள். புழுக்கமாக இருந்ததால் மாதேவய்யா திண்ணையில் படுத்துக் கொண்டிருந்தார். 'உம்' என்றார் அவர். "எனக்குப் பிளேக் வந்திருக்கிற மாதிரி தோணுது. எங்க வீட்டுக்கு வாங்க'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டாள். தள்ளாடிக் கொண்டே மறுபடியும் வீட்டை அடைவதற்குள் அவரே வந்து கதவைத் திறந்து விட்டார். உள்ளே சென்று தலையணைக்குப் பக்கத்தில் வைத்திருந்த படுக்கையில் படுத்துக் கொண்டாள். விளக்கு வெளிச்சத்தில் அய்யா அவளைப் பார்த்தார், அவளுடைய முகம் வாடிப் போய் கண்கள் செந்தணலாய் இருந்தன.

''காய்ச்சல் எப்ப வந்தது?''

''நேத்து ராத்திரியே வந்தது. ஓடு தூக்கினதாலே கை வலிக்குதுன்னு பேசாம இருந்துட்டேன். இப்ப கால் இடுக்குலேயும் வலிக்குது.''

ஒரு நிமிடம் யோசித்துவிட்டு அய்யா பேசினார். ''சன்னேனஹள்ளிக்கு ஓடு வாங்கப் போனப்ப ஊருக்குள்ளே போனியா?''

''லக்கையாவோட வீடு ஊருக்கு நடுவிலேதானே இருக்கு. ஏன்?''

''அவனோட வீட்டிலே உக்காந்திருந்தியா?'' ''உம். நான் போனப்ப அவன் வீட்டிலே இருக்கலை. அவன் வர்ற வரை ரெண்டு மணி நேரம் உட்கார்ந்திருந்தேன். ஏன்?''

''அந்த ஊரிலே பத்துப் பதினஞ்சு நாளா எலி விழுதாம். அவங்க மடையனுக. ஊரை விட்டு வெளியே போகாம அங்கேயே இருக்காங்க. நான் இன்னிக்குக் காலையிலே அந்தப் பக்கமாப் போயிருந்தேன். சங்கதி தெரிஞ்சவுடன் ஊருக்குள்ளே போகலை.''

''அப்பிடியாஞ இது பிளேக்குன்னு சொல்றீங்களா?'', ''நாம எதுவும் சொல்ல முடியாது. சீக்கிரத்திலேயே வைத்தியம் செய்யணும்.''

இதைப் பேசி முடிப்பதற்குள்ளாகவே அவளுக்குக் களைப்பாய்ப் போய்விட்டது. சிறிது நேரம் அப்படியே கண்ணை மூடிச் சோர்ந்து படுத்து, ''வீட்டிலே அம்பது ரூபாய் இருக்கு எந்த மருந்து வேணும்ஞலும் வாங்கிக் கொடுங்க. நீங்கதான் உதவி செய்யணும்'' என்ருள். அவளுக்கு என்ன மருந்து கொடுக்கலாம் என்று சிறிது நேரம் யோசித்தார். போன தடவை விசுவனை வண்டியில் ஏற்றிக்கொண்டு கம்பனகெரெ ஆஸ்பத்திரிக்குப் போய் வந்தது அவருக்கு நினைவு வந்தது. டாக்டரிடம் போனாலும் சரிப்படாது. ஹேமாதி பானகம்தான் சரியான மருந்து என்று முடிவு செய்தார். பணம் இருந்த இடத்தை நஞ்சம்மா சொன்ஞள். அப்பொழுது நடுராத்திரி தாண்டி விட்டது. உடனடியாக திப்டூருக்கு நடந்து போய் ஹேமாதி பானகத்தை வாங்கிக் கொண்டு பஸ்ஸில் திரும்பி வர வேண்டும். சென்னிகராயனுக்கு இருட்டில் நடக்கும் தைரியம் கிடையாது. அவர் மருந்துப் பணத்தில் மசாலா தோசையும், மைசூர்பாகும் சாப்பிட்டுவிட்டு அங்கேயே இருந்து விட்டால் ஆபத்தாகி விடும். அப்பண்ணய்யா ஊரில் இல்லை. தானே போகலாம். ஆஞல் ஒரே நடையில் திப்டூருக்குப் போகும் சக்தி தனக்கு இல்லை. அப்படியே போய் விட்டால் இங்கே நோயாளிக்குத் துணையாய் இருப்பது யார்? நெருக்கடி காலத்தில் நரசி எல்லோருக்கும் உதவி செய்வாள். அவள் திப்டூரிலிருந்து அடிக்கடி சாமான்களை வாங்கி வருவதுண்டு. ஆஞல் பெண்கள் இரவு நேரத்தில் நடக்கக்கூடாது. சரி நரசியைக் கேட்டுப் பார்ப்போம். அவள் ஏதாவது உதவி செய்வாள் என்று முடிவு செய்து ஊருக்கு வெளியே இருந்த அவளுடைய கடைக்குச் சென்று கதவைத் தட்டிஞர். அவள் உடனே எழுந்து வந்து கதவைத் திறந்தாள். அவர் சொன்னதைக் கேட்டதும் ''நீங்க பயப்படாதிங்க. லிங்கபுரம் சம்பண்ணன் இங்கே இருக்காரு, நான் சொன்ஞ கண்டிப்பாச் செய்வாரு'' என்ருள். அவள் உள்ளே சென்று அவனைத் தட்டி எழுப்பிஞள். சம்பேகவுடன் அய்யாவுக்குப் பரிச்சயம் உள்ளவன் தான். அவனுடைய வீட்டில் அய்யா ஒரு தடவை சாப்பிட்டிருக்கிருர். தான் இங்கே இருப்பது அய்யாவுக்குத் தெரிந்து விட்டதே என்று வெட்கம் அடைந்து தலை குனிந்து நின்ருன். ''திப்டூர் கடைவீதி வெங்கடாசல செட்டியார் கடை ஹேமாதிப் பானகம் பிளேக் மருந்து'' என்று ஒரு காகிதத்தில் எழுதி இருபது ரூபாயையும் அந்த காகிதத்தையும் கொடுத்தார்

''இப்பவே ஓடிப்போய் வாங்கிட்டு பஸ்ஸிலே வரணும்'' என்ருள் நரசி. அவன் காலில் செருப்புப் போட்டுக் கொண்டு தலையில் உருமால் கட்டிக் கொண்டு காலை வீசிப் போட்டவாறு இருளில் மறைந்தான்.

நரசி அய்யாவிடம் சொன்ஞள். ''அய்யா இந்த ஊரிலே நஞ்சம்மாவைப் போல நல்லவங்க யாரும் இல்லை. அவளைப் போல யாரும் கஷ்டப்பட்டதும் கெடையாது. இப்ப அவளுக்கு பிளேக்கும் வந்தாச்சு. நல்ல தனமா இருந்து என்ன பிரயோசனம்?

மாதேவய்யாவுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. ''இந்த நெலைமையிலே அதை யோசிக்க முடியாது. இன்னொரு நாள் சொல்றேன். இப்ப அவளைக் கவனிக்க ஆள் கெடையாது'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார். ''நான் வரட்டுமா?'' ''வேண்டாம்''

''கொஞ்சம் நில்லுங்க'' என்று கூறிய நரசி அவரருகே வந்து ''பாருங்க, நஞ்சம்மா ராத்திரி வகுப்பு நடத்தினப்ப நானும் வர்றேன்னு சொன்னேன். வேணுமின்னு சொல்லிட்டா, இப்ப நான் வந்தா குணமாயிடும்''

''உன்னைச் சேத்துக்கலைன்னு கோபமா?''

''இல்லை. நான் வந்திருந்தா மத்தவங்க வந்திருக்க மாட்டாங்க''

மருந்து வந்தவுடன் அனுப்புமாறு சொல்லிவிட்டு நஞ்சம்மாவின் வீட்டுக்கு வந்தார். அவள் தூங்கிக் கொண்டிருந்தாள். சீமை எண்ணை விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அவளை எழுப்ப வேண்டாம் என்று அவளது முகத்தைப் பார்த்தவாறே தூணில் சாய்ந்து அமர்ந்து கொண்டார். சென்னிகராயரை எழுப்பலாமா என்ற யோசனையும் வந்தது. அவர் எழுந்திருக்க மாட்டார் என்ற எண்ணமும் தோன்றியது. அவளுடைய முகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அவள் அந்த ஊருக்கு வந்ததிலிருந்து அதுவரை வாழ்ந்த வாழ்க்கை நினைவுக்கு வந்தது. முதலில் மருமகளாய் வந்த சமயத்தில் அவள் யாரிடமும் பேசியது கிடையாது. மாமியாருக்கு அடங்கி நடக்கும் மருமகள். மருமகளைக் கொடுமைப் படுத்தும் மாமியார். யாரைப் பற்றியும் கவலைப்படாத கணவன். நிலத்தைக் காப்பாற்றுவதற்காக அவள் செய்த முயற்சிகள். குழந்தைகளுடன் தனியே வந்து குடும்பத்தை ஆரம்பித்த விதம். மகனின் கல்வி. மகளின் கல்யாணம். இரண்டு குழந்தைகளின் சாவு. நரசி அவரிடம்

கேட்ட கேள்வி. இவையெல்லாம் அவருடைய சிந்தனையில் சுழன்றன. நஞ்சம்மாவைப் போல் நல்லவர்கள் யாரும் கிடையாது. ஆனால் அவளைப் போல் கஷ்டப்பட்டவர்களும் யாரும் கிடையாது. ஏன் நியாயமாக இருக்க வேண்டும்? ஆண்டவன் நல்லவர்களைக் காப்பாற்றுகிறான். கெட்டவர்களைத் தண்டிக்கிறான். ஆனால் நஞ்சம்மா என்ன கெடுதி செய்தாள்? மாமியாரின் அறிவில்லாத போக்காலும், கணவனின் ஈனமான செயலாலும் அவள் கஷ்டப்படுகிறாள். பிளேக் இவளுக்கும் இவளுடைய குழந்தைகளுக்கும் தான் வர வேண்டுமா? உலகில் நெறி தவறியவர்களைத்தான் ஆண்டவன் தண்டிக்கிறான். அதற்காக நோயைக் கொடுக்கிறான் என்று அவர் பல அறநெறிப் பாடல்களில் படித்திருந்தார். இப்பொழுது அந்தப் பாடல்களின் பொருள் அவருக்கு விளங்கவில்லை.

அதே சமயத்தில் நஞ்சம்மா திடீரென்று "அய்யோ, அம்மா" என்று அலறிக் கொண்டே கண்ணை விழித்தாள். ''என்னம்மா, என்ன?'' என்று அவர் விசாரித்தார். அவள் ஐந்து நிமிடங்கள் வெறித்துப் பார்த்து ''நீங்களா'' என்று கேட்டாள்.

''உம், நான்தான், என்னாச்சு?''

''கனாக் கண்டேன். ரெண்டு போலீஸ்காரங்க என்னைத் தொரத்திகிட்டு வந்தாங்க. நான் ஆத்தைத் தாண்டி வந்துட்டேன். எங்கிட்டேயிருந்து அவ எப்படித் தப்புவான்னு அவங்க சொன்னாங்க. இப்ப மறுபடியும் அதே கனா. இப்ப நான் ஆத்தைத் தாண்டறதுக்கு முன்னாடி என்னைப் பிடித்து கயித்தாலே கட்டிட்டு இருந்தாங்க. அப்ப எனக்கு விழிப்பு வந்துட்டுது.

''காய்ச்சல் வேகத்திலே அப்படித்தான் கனா வரும். பேசாம படுத்துக்க.'' ''காய்ச்சலுக்கு அல்ல, அய்யா, நான் இப்ப சாகப் போறது நிச்சயம். எனக்குக் கொஞ்சம் கஞ்சி வெச்சுக் கொடுக்கறிங்களா? பிராமணர் வீடுன்னு தயங்காதிங்க. என் தகப்பனார் வந்திருந்தப்ப உப்புமா செய்யறதுக்காக அரிசி உடைச்சு வைச்சிருக்கேன். கருப்பு டப்பாவிலே இருக்கு. வெல்லம் அகப்படா விட்டா வெறும் கஞ்சியாவது கொடுங்க''

அவர் விளக்கை எடுத்துக் கொண்டு உள்ளே சென்றார். சென்னிகராயர் முதல்நாள் சாப்பிடும் போது சிதறிய ரொட்டித் துண்டுகளின்மீது ஈக்கள் மொய்த்துக் கொண்டிருந்தன. அரிசியும், வெல்லமும் உடனே அகப்பட்டது. உலையைப் பற்ற வைத்து ஒரு பாத்திரத்தில் கஞ்சி வைத்து டம்ளரில் ஊற்றி, கையைப்

பிடித்துத் தூக்கி அவளை உட்கார வைத்து, கஞ்சி கொடுத்த பிறகு மறுபடியும் படுக்க வைத்தார்.

அவள் ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு ''கஞ்சி சாப்பிட்டு கொஞ்சம் தெம்பு வந்திருக்கு. இனிமே கொஞ்ச நேரத்திலே மறுபடியும் நெனைப்பு தவறிடும். இப்பவே உங்ககிட்டே பேசிட றேன்.''

''காய்ச்சல் இருக்கறப்ப அதிகம் பேச வேண்டாம். சும்மா படுத்துக்க''

''இப்பவே பேசிடறேன். நான் பொறந்தவுடனே என் அம்மா செத்துட்டாளாம். நான் ஒரு வருஷக் கொழந்தையா இருந்தப்ப ஒரு நாள் தொட்டில்லே அழுதுகிட்டிருந்தேனும். பெரிசா மழை பெஞ்சுகிட்டிருந்ததாம். மாட்டுக் கொட்டில்லே இருந்த அக்கம்மாவுக்கு நான் அழுதது கேக்கலே. அப்பா ஏதோ ஒரு சமஸ்கிருத மந்திரத்தை மனப்பாடம் செஞ்சுகிட்டிருந்தார். நான் அழுதது அவருக்குத் தொல்லையாய்ப் போச்சு. 'இது ஒரு கடங்காரி முண்டை கத்தித் தொலைக்குதுன்னு சொல்லிட்டே தொட்டிலே 'மளமள'ன்னு எடுத்துகிட்டுப்போய் மழைத் தண்ணி கொட்ற கூரைக்குக் கீழே வைச்சுட்டு மந்திரம் படிக்க ஆரம்பிச் சார். கொஞ்ச நேரத்துக்கப்புறம் அக்கம்மா வந்து பாத்தப்ப கொழந்தை இருக்கலே. கொழந்தை எங்கேடான்னு அப்பா கிட்டே கேட்டதும் கூரைக்கு கீழே பாருன்னு சொன்னுராம். தண்ணி கொட்ற எடத்திலே தலே இருந்திருந்தா அன்னிக்கே செத்துப் போயிருப்பேன்.''

கண்டி ஜோசியர் அப்படிச் செய்யக்கூடிய ஆள்தான் என்பது அய்யாவுக்குத் தெரியும். நஞ்சம்மா சொன்னுள். ''நான் அப்பவே செத்திருக்க வேண்டியவ, ஆனு, இவ்வளவு வருஷம் வளந்து இப்படிப்பட்ட புருஷனைக் கட்டிட்டு, கொழந்தைகளை யும் பெத்து சாகடிச்சு இப்ப சாகறேன். ஏன் இப்படி?''

அய்யா ஒரு மணி நேரமாக இதே கேள்வியைத்தான் யோசித்து வந்தார். நரசியும் நஞ்சம்மாவும் ஒரே கேள்வியைக் கேட்கிறுர்கள். ஏன் இப்படி நடக்கிறது? அய்யா வேதாந்தம் படித்தவர் அல்ல. தத்துவ அறநெறிப் பாடல்களை மட்டுமே அவர் படித்திருக்கிறுர். காசிக்குப் போயிருந்த போது அதைப் போன்ற பிரச்சினைகளைப் பற்றி மடத்திலும், வெளியேயும் வாதங்கள் நடப்பதை அவர் ஆனந்தமாகக் கேட்டிருக்கிறுர். ஆனுல் இப்பொழுது அவர் முன்னே உள்ள கேள்விக்கு அவரிடம் பதில் இல்லே. நஞ்சம்மா அவரைவிட அறிவாளி. படித்தவள்.

அவருக்கே புரியாத மகாபாரத செய்யுட்களை அவள் சரளமாகப் படித்து அர்த்தம் சொல்வாள். ஆனால் அவளுடைய கேள்விக்குப் பதில் என்ன? அவள் குழந்தையாய் இருக்கும் பொழுதே ஏன் இறந்திருக்கக் கூடாது?

அதற்குள் அவளுக்கு மூச்சு வாங்கியது. அய்யாவினுடைய முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். சிறிது நேரத்தில் அவள் கண்ணைத் திறந்து பேச முயற்சித்தாள். ஆனால் அசதி யால் பேச முடியவில்லை. அவள் தன் சக்தியை எல்லாம் ஒன்று திரட்டிப் பேசினாள். ''பார்வதியும் ராமண்ணனும் செத்தப்ப நீங்க கோபியோட கதையைச் சொன்னீங்க. கொழந்தை செத் தப்ப உயிர்விட பயந்து கோபி கரையிலேயே நின்னு. அன்னிக்கு ராத்திரி நான் சுடுகாட்டுக் கெணத்திலே குதிக்கப் போனேன். விசுவனோட கதி என்னவாகும்னு நெனைச்சு மறுபடியும் திரும்பி வந்தேன். இப்ப நானே சாகிறேன். விசுவனோட கதி என்ன? யார் காப்பாத்துவாங்க? அக்கம்மா அவனுக்குக் கஞ்சி ஊத்துவா. என் அண்ணுகிட்டே எனக்கு நம்பிக்கை இல்லை. பையனுக்குக் கஞ்சி கெடைச்சா போதுமா? அவன் புத்திசாலி ஆக வேண்டாமா?''

இதைச் சொல்லி முடிப்பதற்குள் கண்ணை மூடிக் கொண் டாள். மறுபடியும் பேசவில்லை. சற்று நேரத்தில் தூக்கம் வந்தது போலாயிற்று. அய்யா சும்மா உட்கார்ந்திருந்தார். மீனவர் தெருவில் கோழி கூப்பிடும் சத்தம் கேட்டது. அதுதான் அவர் தினமும் எழும் நேரம். ஏரிக்கரைப்பக்கம் போய்விட்டு வர வேண்டும். சென்னிகராயரை எழுப்பிச் சொல்லி விட்டுப் போகலாம் என்று நினைத்தார். ஆனால் அவர் நோயாளிக்கு என்ன உதவி செய்து விடப் போகிறார் என்ற எண்ணம் வந்தது. ஆகையால் எரிந்து கொண்டிருக்கும் விளக்கை அப்படியே வைத்து விட்டுக் கதவை சாத்திக் கொண்டு வெளியே புறப்பட் டார். ஏரியிலிருந்து திரும்பும் போது காகம் கரைந்தது. அப்பொழுது எழுந்து ஏரிப்பக்கம் வந்து கொண்டிருந்த ஜனங்கள் எல்லாம் பேசிக் கொண்டார்கள். ''அக்கம்பக்கத்து ஊர்கள்லே எலி விளுது. இந்த ஊரிலே விளுகறதுக்கு முன்னாடியே ஊரை விட்டு வெளியே போகணும்னு ஊர் பெரிய மனுசங்க நேத்து தீர்மானம் செஞ்சிருக்காங்க. இன்னிக்குக் காலையிலே தம்பட்டம் அடிச்சு சொல்லப் போறாங்களாம். நேத்து சாயங்காலம் கம்பனகெரெ சர்க்கார் ஆபிஸ்காரங்க சொல்லி அனுப்பி இருக்காங்களாம். இன்னிக்குக் காலையிலே அவங்க வரப் போறாங்களாம். அம்மன் கோவிலுக்குப் பக்கத்திலே ஆம்பளைக, பொம்பளைக, கொழந்தைக எல்லோருமே ஊசி போட்டுக்கணும்.

வியாதி பரவுறதுக்கு முன்னாடியே எல்லா கிராமத்துக்கும் ஊசி போடணும்னு சர்க்கார் உத்தரவு போட்டிருக்குதாம்.''

''பிளேக் வந்தவர்களுக்கு ஊசிபோட முடியாது'' என்று போன வருடம் கம்பனகெரெ டாக்டர் சொல்லி இருந்தது அய்யாவின் நினைவுக்கு வந்தது. போன வருடமே நஞ்சம்மாவின் வீட்டில்தான் முதல் முதலில் பிளேக் மாரியம்மன் வந்தாள். இப்பொழுதும் கூட அதைப்பற்றி அடையாளம் தெரிவதற்கு முன்பே நஞ்சம்மாவின் வீட்டிற்கு வந்து விட்டாள் என்று எண்ணிக் கொண்டே அவர் நஞ்சம்மாவின் வீட்டை நோக்கி நடந்தார்.

## 5

எல்லோரும் இரண்டே நாட்களில் ஊரைக் காலி செய்தார்கள். நஞ்சம்மா வீடு கட்டி மிஞ்சியிருந்த மரம், பிரம்பு ஆகியவைகளைக் கொண்டு அய்யா ஒரு கொட்டகை அமைத்தார். அவருடைய சொந்த உபயோகத்திற்காக ஏரிக் கரைக் கோவில் இருக்கிறது. கங்கம்மா நஞ்சம்மாவின் கொட்டகைக்கு வந்து மருமகளுக்கு உதவி செய்து வந்தாள். அது எல்லோருக்கும் ஆச்சரியத்தைக் கொடுத்தது. ''வீடு கட்டாட்டா என்ன கெட்டுப் போகுது? அந்த சன்னேன ஹள்ளிக்குப் போய் மாரியம்மா வந்துட்டுது. பெரியவங்க பேச்சைக் கேட்டிருந்தா இவளுக்கு எதுவும் ஆகி இருக்காது'' என்று கங்கம்மா குறைபட்டுப் புலம்பிக் கொண்டிருந்தாள். அய்யா சொன்னபடி வேளா வேளைக்கு அவளுடைய வாயில் ஹேமாதிப் பானகத்தையும், கஞ்சியையும் வலுக் கட்டாயமாக ஊற்றிக் குடிக்கச் செய்தாள்.

சென்னிகராயர் ஊசி போட்டுக் கொண்டு இடதுகை வலிக்க ஆரம்பித்து விட்டதால் அய்யாவின் ஏரிக்கரை கோவிலிலும் வெளியே இருக்கும் அம்மன் கோவில் திண்ணையிலும் படுக்க ஆரம்பித்தார். ''நான் சாமியார், எனக்கு எதுக்கு ஊசி? நான் செத்தா யார் அழப் போறாங்க?'' என்று அய்யா சொன்னாலும் ''நீங்க சாகறது முக்கியமல்ல. உங்ககிட்டேயிருந்து மத்தவங் களுக்கு வியாதி பரவக் கூடாது.'' என்று அரசாங்க அதிகாரிகள் கட்டாயப்படுத்தி அவருக்கு ஊசி போட்டனர். ஒரு நாள் கை சற்று வலித்தது. ஆனால் ஊர்க்காரர்கள் எல்லோரும் அந்த வலியை மறந்து கொட்டகை போட்டுக் கொண்டிருந்தனர். கங்கம்மா மட்டும் ஊசி போட்டுக் கொள்ள முடியாது என்று பிடிவாதமாகச் சொல்லி விட்டாள்.

நஞ்சம்மா படுத்திருந்த படுக்கையை நாலுபேர் நாலு மூலைகளில் பிடித்துத் தூக்கி வந்து கொட்டகையில் அவளைப் படுக்க வைத்தனர். அவளுக்கு ஒரு நாள் நினைவு வரவே இல்லை. ஆனால் கங்கம்மா மருந்தையும், சற்று கஞ்சியையும் அவள் வாயிலே ஊற்றிக் கொண்டே இருந்தாள். கொட்டகைக்கு வந்த இரண்டாம் நாள் காலையில் சற்று நினைவு வந்ததுபோல் ஆகியது. அவள் பேச முயற்சித்தாள். அருகே அமர்ந்திருந்த அய்யா அவள் முகத்தருகே காதை வைத்து, ''என்ன?'' என்று கேட்டார். ''விசுவா...'' ''பாக்கணுமா'' ''உம்'' என்று சொல்வதைப் போல் அவளுடைய முகபாவம் இருந்தது. ''கூட்டி வர ஆள் அனுப்பறேன்'' என்று சொல்லிவிட்டு வெளியே போனார்.

ஊர்க்காரர்கள் அனைவரும் தங்களுடைய கொட்டகையைச் சரிப்படுத்துவதில் முனைந்திருந்தனர். இப்பொழுது எங்கிருந்து ஆள் கிடைக்கும் என்று எண்ணிக் கொண்டே தலையாரியின் கொட்டகைக்குப் போய் விஷயத்தைச் சொன்னார். ''நஞ்சம்மா சாகக் கெடக்கறா. மகனைப் பாக்கணும்னு சொல்றா. யாராவது நாகலாபுரத்துக்குப் போய் பையனைக் கூட்டிட்டு வரணும்''

''அய்யா நீங்களே பாருங்க, எங் கொட்டகைக்கு கீத்துப் போடணும். கவுடர் தோட்டத்துக்குப் போய் கீத்து கொண்டு வரணும்'' என்றான் தலையாரி.

''அதை நாளைக்குக் கூட செய்யலாம். சாகற அம்மா வாய்க்கு மகன் தண்ணிவிட வேண்டாமா? போப்பா.'' ''சரி'' என்று அவன் ஒப்புக் கொண்டான். உடனே புறப்படச் சொல்லி விட்டு அவர் கொட்டகைக்கு வந்தார். ''அவள் ஏதோ சொன்னா எனக்குப் புரியலே. நீங்களே கேளுங்க அய்யா'' என்றாள் கங்கம்மா.

அவர் அவளுடைய முகத்தருகே சென்று ''என்னம்மா?'' என்று கேட்டார். ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு அவள் ஏதோ முணுமுணுத்தாள். ''கேட்கலே கொஞ்சம் சத்தமாகச் சொல்'' என்று சொன்ன பிறகு அவள் மறுபடியும் முனகினாள். அவள் சொன்னது தெளிவாகப் புரியா விட்டாலும் ''ஊரில் பிளேக் நோய் இருக்கிறது. பையனை அழைத்து வர வேண்டாம்'' என்று பொருள் விளங்கியது. ''சரி, தலையாரிகிட்டே சொல்றேன்'' என்று சொல்லிவிட்டு அவர் வெளியே வந்தார். நோய் பரவிய ஊருக்கு விசுவன் வர வேண்டாம் என்று அவரும் முடிவு செய் தார். நஞ்சம்மா இறக்கப் போவது உறுதி. மகன் வந்து வாயில்

தண்ணீர் விடா விட்டாலும் பரவாயில்லை. ஆனால் அவன் உயிர் பிழைத்து இருந்தால் போதும் என்பது அவளுடைய விருப்பம். ஆனால் அவளை வளர்த்த பாட்டிக்கும், அண்ணாவுக்கும் செய்தியைத் தெரிவிக்க வேண்டுமென்று அவர் ஓடினார். தலையாரி அப்பொழுது தான் களி சாப்பிட்டுக் கொண்டிருந்தான். விசுவனை அழைத்து வர வேண்டா மென்றும், ஆனால் நஞ்சம்மா வின் பாட்டியையும் அண்ணனையும் அழைத்து வரும்படியும் அய்யா அவனிடம் கூறினார். தலையாரி ஓட்டம் பிடித்தான்.

அவன் ஒரே மூச்சாக ஓடினாலும், நாகலாபுரத்தை அவன் அடையும் போது பிற்பகல் இரண்டு மணி ஆகிவிட்டது. அந்த ஊர்க்காரர்களும் ஊரைக் காலி செய்து இருந்தனர். கல்லேசனின் கொட்டகையை விசாரித்துக் கொண்டு தலையாரி சென்ற போது விசுவன் பள்ளிக்குச் சென்றிருந்தான். கல்லேசன் ஊரில் இல்லை. ஹாசனுக்குப் போயிருந்தார். மறுநாள் தான் வருவாராம். அவன் சொன்ன செய்தியைக் கேட்டு அக்கம்மா திடுக்கிட்டுப் போனாள். கல்லேசனும் ஊரில் இல்லாததால் அவனுக்காகக் காத் திருப்பது வீண் என்று தெரிந்து அக்கம்மா மட்டும் முதலில் கிளம்பினாள். கல்லேசன் வந்தால் விஷயத்தைச் சொல்லுமாறு கமலாவிடமும், பக்கத்துக் கொட்டகைக்காரர்களிடமும் சொல்லி விட்டு அவர்களுடைய நிலத்தைக் கவனித்துக் கொண்டிருந்த ஹொன்னனுடைய வண்டியில் புறப்பட்டு விட்டாள். பிளேக் நோய் போன வருடம்தான் அவளுடைய இரண்டு பேரக் குழந்தை களையும் பழி வாங்கி விட்டது. இந்த வருடம் பேத்திக்கு வந்து விட்டது. விசுவனுக்கு வந்த போது சிருங்கேரி சாரதா தேவி யிடம் பிரார்த்தனை செய்த பிறகு குணமாகி விட்டது. இப் பொழுது யாராவது அந்த தேவியிடம் பிரார்த்தனை செய்திருக் கிறார்களோ, இல்லையோ என்பது தெரியவில்லை. வழியில் ஒரு சிறிய குளம் தட்டுப்பட்டது. இரண்டு நிமிடம் வண்டியை நிறுத்தச் சொல்லி அக்கம்மா கீழே இறங்கினாள். அங்கே கை கால் கழுவிக் கொண்டு தன் இடுப்பில் முடிந்து வைத்திருந்த ஒரு வெள்ளி ரூபாய் நாணயத்தை கையில் பிடித்துக் கொண்டு பேத்திக்கு நோய் குணமானவுடன் அவளை சிருங்கேரிக்கு அனுப்பி குங்கும அர்ச்சனை செய்வதாய்ப் பிரார்த்தனை செய்து விட்டு மீண்டும் வண்டியில் ஏறி அமர்ந்தாள்.

இந்தத் தடவை எல்லா ஊர்க்காரர்களும் ஊரைக் காலி செய்திருந்தனர். ஆனால் எல்லா இடத்திலும் அரசாங்கத்தினர். எல்லோருக்கும் ஊசி போட்டிருந்தனர். இராமநாத புரத்தில் விசுவன், கல்லேசன், கமலா ஆகியோர் ஊசி போட்டுக் கொண் டனர் ''நான் கெழவி. எனக்கு ஊசி எதுக்கு?'' என்று அக்கம்மா

ஊசி போட்டுக் கொள்ளவில்லை. இத்தனை வருடங்களாக ஆஸ்பத்திரி மருந்தைக் குடிக்காமல் இருந்த அவள் இனிமேல் எப்படி ஊசி போட்டுக் கொள்ளுவது? பேத்தியின் நிலைபற்றி அவள் தலையாரியிடம் அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தாள்.

அவன், தான் கேள்விப்பட்ட எல்லாவற்றையும் சொன்னான், உயிருக்கு ஆபத்து இல்லை என்று அக்கம்மா தனக்குத்தானே சமாதானம் சொல்லிக் கொண்டு மாடுகளை அடித்து விரட்டும்படி ஹொன்னனிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். எவ்வளவு விரைவாகப் போனாலும் அவர்கள் ராமஸந்திர கிராமத்தை அடையும் போது இருட்டி விட்டது.

## 6

கொட்டகைக்கு வந்து பார்க்கும் போது பேத்தி இருக்கவில்லை. கங்கம்மா வாயில் அடித்துக் கொண்டு அழுது கொண்டிருந்தாள். மத்தியானமே நஞ்சம்மாவின் உயிர் போய் விட்டது. பிளேக் பரவிய ஊருக்கு மகனை அழைத்து வர வேண்டாம் என்பது தான் நஞ்சம்மாவின் கடைசிப் பேச்சு.. பிறகு பேசவே இல்லை. ஐந்து நிமிடம் மூச்சு இழுத்தது. பின் உயிர் பிரிந்தது. அருகே இருந்த கங்கம்மா வாயில் நீர் விட்டாள். பாட்டியின் வீட்டுக்காரர்களுக்காக மாலை வரை உடலை வைத்துக் கொண்டு காத்திருந்தார்கள். இரவு வந்து விட்டால் மறுநாள் வரை காத்திருக்க வேண்டும். உடல் நாற்றம் எடுக்கும் என்பதால் மயானத்துக்கு அனுப்பி விட்டனர். ''அனுப்பி அரைமணி நேரம்தான் ஆச்சு'' என்று அய்யா கூறினார்.

அக்கம்மா ஒரு முறை நெஞ்சின்மீது அடித்துக் கொண்டு அழுதாள். ''நான் முகத்தைக்கூடப் பாக்கலியே!'' என்று ஒப்பாரி வைத்துக்கொண்டு இருட்டிலேயே மயானத்தை நோக்கிப் போனாள். ''பொம்பளைக அங்கே போகக் கூடாது'' என்று அய்யா தடுத்தும் அவள் கேட்கவில்லை. கிழவி இருட்டில் விழுந்து விடுவாளோ என்று பயந்து அய்யா அவளின் கையைப் பிடித்துக் கொண்டு போனார். சிறிது தூரத்தில் அய்யா சாஸ்திரிகள் இடுப்பை வளைத்துக் கொண்டு நின்றிருந்தார். அவளைக் கண்டதும், ''யாரது?'' என்று கேட்டார். ''நஞ்சம்மாவோட பாட்டி'' என்று சொல்லிவிட்டு அய்யா அக்கம்மாவுடன் தோட்டத்துப் பக்கம் சென்றார். அவர்கள் தோட்டத்துப் பாதையில் செல்வதற்குள் உடலைச் சிதையின் மேல் வைத்துத் துணிமணிகளை எடுத்திருந்தார்கள். தன் பேத்தியை அக்கம்மா அப்பொழுது பிறந்த நிலையிலே கண்டாள். சிவப்பாய் இருந்த உடல் கறுப்பாகி விட்டது. அவள் ஓடிவந்து சிதையின் மேல் இருந்த உடம்பைக்

கட்டிப் பிடித்துக் கொண்டாள். அக்கம்மாவைச் சமாதானப் படுத்தி அப்புறப்படுத்துவதற்குள் பெரும்பாடாகி விட்டது. அவளுக்கு எதிரிலேயே விறகை அடுக்கி நெருப்பு மூட்டினார்கள். நெருப்பு மெதுவாகப் பிடித்து, பரவி தகதகவென்று எரியும்வரை அதையே பார்த்துக் கொண்டிருந்த அக்கம்மா திடீரென்று கூவினாள். ''திருட்டு முண்டை, இப்படிச் செஞ்சிட்டியா? உன்னை என்ன செய்கிறேன் பார்''

அவள் என்ன சொல்லுகிறாள் என்று யாருக்கும் புரியவில்லை. அக்கம்மா அங்கிருந்து திரும்பி மளமளவென்று நடந்தாள். இருட்டில் விழுந்து விடுவாள் என்று அய்யா ஒரு கையைப் பிடித்துக் கொண்டார். அவள் அதை விலக்கிவிட்டு முன்னே நடந்தாள். ஏரிக்கரையின் பக்கம் நின்று கொண்டிருந்த அய்யா சாஸ்திரிகள் ''ஏனம்மா இப்பிடி ஓடிப் போறீங்க?'' என்று கேட்டார். அது அவளது காதில் விழவில்லை. நேரே கொட்டகைக்கு வந்தாள். உள்ளே வந்தவுடன் கதவுக்கருகே இருந்த துடைப்பத்தைக் கையில் எடுத்துக் கொண்டு வண்டிக்கருகே வந்து ஹொன்னன் கீழே சுழற்றிப் போட்டிருந்த ஒரு செருப்பை மற்றொரு கையில் எடுத்துக் கொண்டு ஊருக்குள் நுழைந்தாள். கங்கம்மா பிரமை பிடித்து அவளையே பார்த்துக் கொண்டிருந்தாள். ஹொன்னனுக்கு எதுவும் புரியவில்லை. இருட்டில் அவள் போன இடமும் மற்றவர்களுக்குத் தெரியவில்லை. அமாவாசைக்கு முந்தின தினமாதலால் இருட்டு அதிகமாய் இருந்தது. அந்த இருட்டிலும் வீதி அடையாளங்களைத் தெரிந்து கொண்டு அக்கம்மா ஊருக்குள் நுழைந்தாள். நேரே தன் பேத்தி குடியிருந்த வீட்டின் முன்னே நின்று கதவைத் துடைப்பத்தாலும், செருப்பாலும் அடித்தாள். பின்பு உரக்கக் கத்தினாள்.

''ஏண்டி மாரி முண்டை, எல்லோரையும் விட்டுட்டு இந்த வீட்டுக்கே ஏன் திரும்பத் திரும்ப வர்றே? உன் பார்வை அவளோட ரெண்டு கொழந்தைக மேலே விழுந்தது. இப்ப சாரதா தேவிக்குப் பிரார்த்தனை செய்யறதுக்கு முன்னாடியே இவளையும் தொலைச்சிட்டே. உனக்கு பயப்பட்டா மறுபடியும் மெரட்டறியா? பாவி! சண்டாளி! உனக்குச் செருப்படிதான் சரி. உள்ளே ஒளிஞ்சுட்டு உக்காந்திருக்கியா? வா வெளியே நீ. தலை மொட்டையாற வரைக்கும் உன்னைச் செருப்பாலே அடிக்கிறேன்.''

அக்கம்மா கதவைச் செருப்பால் ஓங்கி ஓங்கி அடித்தாள். வாய்க்கு வந்தபடி பிளேக் மாரியம்மனைத் திட்டினாள். பிறகு சோர்ந்து போனாள். அப்படியே திண்ணையில் அமர்ந்து கொண்டாள். செருப்பும், துடைப்பமும் கையிலே இருந்தன. அரை

மணி நேரத்தில் அவளுடைய கோபம் தணிந்தது. போன வருடம் இரண்டு பேத்திகள் இறந்த பிறகு அவள் அதே வீட்டிற்கு வந்து நஞ்சம்மாவிற்கு ஆறுதல் சொன்னாள். அதே வீட்டில் பார்வதிக்குத் திருமணம் நடந்தது. நஞ்சம்மா அங்கே வந்து பதின்மூன்று வருடங்கள் ஆகிவிட்டன. அந்த வீட்டையே தேடிக் கொண்டு ஏன் பிளேக் மாரியம்மன் வர வேண்டும்? அக்கம்மாவிற்கு அழுகை வந்துவிட்டது. விக்கி விக்கி அழ ஆரம்பித்து பின் பலமாக அழத் தொடங்கினாள். சிறிது நேரத்திற்குப் பிறகு மேலே எழுந்தாள். துடைப்பத்தால் கதவை அடிக்க மனம் வரவில்லை. பிளேக் மாரியம்மனைத் திட்டவும் மனம் விரும்பவில்லை. இருட்டில் நடந்தே ஊருக்கு வெளியே வந்தாள். அதற்குள் இருட்டில் அவளைத் தேடிக் கொண்டு வந்த மாதேவய்யா எதிர்ப்பட்டார். ''நாங்க உங்களை எங்கெல்லாமோ தேடறோம். காலி செஞ்ச ஊருக்கு ஏன் போனீங்க?''

''பிளேக் முண்டையைச் செருப்பால் அடிக்கப் போனேன்''.

அதற்குள் மயானத்திற்குச் சென்றவர்கள் திரும்பி விட்டார்கள். சென்னிகராயர் கண்ணீரைத் துடைத்தபடியே அழுது கொண்டு உட்கார்ந்திருந்தார். ''கேடு கெட்ட வீட்டை கட்டாம இருந்தா என்ன? புது வீடு கட்டினவுடனே அம்மன் பிடிச்சுட்டா'' என்று அழுதார் அவர்.

அக்கம்மா இரவு முழுவதும் அழுது கொண்டே இருந்தாள். காலையில் எழுந்தவுடன் ஊருக்குப் போய் விடலாமா அல்லது கல்லேசன் வரும் வரை தங்கியிருக்க வேண்டுமா என்பதைப் பற்றிப் பேச்சு நடந்தது. ''அவர் வர்ற வரை நீங்களும் இருங்க'' என்று அய்யா சொன்னார். ஹொன்னனும் மாட்டு வண்டியுடன் தங்கி விட்டான். மத்தியானம் பன்னிரண்டு மணி அளவில் அக்கம்மா கொட்டகையின் உள்ளே படுத்திருந்தாள். கங்கம்மா தலையின்மேல் கைவைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். சென்னிகராயர் கிராம தேவதையின் கோவில் திண்ணையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார். அப்பொழுது விசுவன் வேகமாக நடை போட்டுக் கொண்டு ஊரை நோக்கிப் போய்க் கொண்டிருந்தான். வரும் வழியில் உட்கார்ந்திருந்த நரசி ஓடி வந்து ''எங்கே போறே கண்ணு?'' என்று கொஞ்சினாள். ''என் அம்மா செத்துப் போயிட்டாளாம், உண்மையா?'' என்று அவன் கேட்டான்.

நரசி அவனைக் கட்டி அணைத்துக் கொண்டாள். ''என்னை ஏன் பிடிச்சுக்கறே? நான் வீட்டுக்குப் போறேன்'' என்று சொல்லி அவன் விடுவித்துக் கொண்டான்.

''போய் என்ன செய்யப் போறே?''

''என் அம்மா இருக்கா. அவ சாகலே''

''இங்கே வா. நான் சொல்கிறேன்'' என்று அவனை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு கடைக்கு இழுத்துச் சென்று உட்கார வைத்தபின் கேட்டாள். ''உன் அம்மா செத்துட்டான்னு யார் சொன்னது?''

''பக்கத்துக் கொட்டகை நாகம்மா''

''அவ சொன்னவுடனே ஓடி வந்தியா ?''

''உம்''

''உனக்குத் தடம் தெரிஞ்சுதா ?''

''வண்டியிலே உக்காந்து போறப்ப பாத்திருக்கேன். அடையாளத்தை ஞாபகம் வைச்சிட்டு வந்தேன்'' நரசிக்கு அழுகை வந்து விட்டது. அவள் மற்றொரு முறை அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள்.

''நீ எதுக்காக அழறே நரசம்மா ? நான் வீட்டுக்குப் போறேன். என்னை விடு'' என்று சொல்லி அவன் ஓடினான். ''நான் கூட்டிப் போறேன்'' என்று சொல்லி அவன் கையை அவள் பிடித்துக் கொண்டு கொட்டகைக்கு அழைத்து வந்தாள். பேரனைக் கண்டதும் அக்கம்மா அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டு ''எங் கண்ணு, அனாதை ஆயிட்டியே!'' என்று கூப்பாடு போட்டு அழுதாள். விசுவனுக்கு அழுகை வந்தது. ''அம்மா செத்துப் போயிட்டாளா ?'' என்று கேட்டு ''கோ'' என்று கதறி மயங்கி விழுந்தான்.

7

சாயங்கால வேளையில் அக்கம்மாவுக்குக் காய்ச்சல் வந்தது. உடம்பு கைகால்கள் எல்லாம் வலித்தன. கண்கள் சிவந்தன. முகம் வாடிப் போயிற்று. அது பிளேக்தான் என்று உடனே அய்யா கூறிவிட்டார். அந்தக் கிழவி பிழைக்கமாட்டாள் என்று அவர் மனம் கூறியது. விசுவனை நோயாளியின் அருகே விடக் கூடாது என்று எண்ணி அவர் அவனை அழைத்துக் கொண்டு போய் நரசியிடம் விட்டுவிட்டார். அவளிடம் ''பாரம்மா, இவனை உன் வீட்டுக்கு வெளியே விடவேண்டாம். சாப்பாடு பலகாரம் எல்லாம் நீயே கொடு. சாதி கெட்டுப் போகாது. கொட்டகையிலே பாட்டிக்கு பிளேக் வந்திருக்கு இவனை அண்ட விடக்கூடாது.''

விசுவன் எதையும் சாப்பிடவில்லை. தன் அம்மாவை நினைத்து அழுது கொண்டிருந்தான். அவனை எங்கும் செல்ல விடாமல் நரசி அவன் அருகிலேயே இருந்து பார்த்துக் கொண்டாள். நஞ்சம்மாவிற்கு என்று வாங்கிய ஹேமாதி பானம் மிஞ்சியிருந்தது அதை வாயில் விட்டுக் கொள்ளும்படி அய்யா சொன்னார். ஆனால் அவன் குடிக்க வாய் திறக்கவில்லை. தானும் இறக்க வேண்டும் என்று அவன் முடிவு செய்தான்.

இரவு பத்து மணிக்கு கல்லேசன் வந்தவுடன் நடந்தவற்றை அய்யா சொன்னார். அவனும் சற்று நேரம் கண்ணீர் வடித்து விட்டு அடுத்தபடியாக என்ன செய்வது என்று யோசிக்க ஆரம்பித்தான். அவனே சொன்னான். ''விசுவனுக்கு ஊசி போட்டிருக்கு நாகலாபுரத்துக்காரர்களும் இந்த ஊர்க்காரர்களும் காலி செஞ்சுட்டாங்க. அவன் இங்கே இருந்தா பயம் இல்லே. அவனோட அம்மா திதி முடியற வரை இங்கேயே இருக்கட்டும். அதுக்கப்புறம் நான் வந்து கூட்டிட்டுப் போறேன். காலி செஞ்ச ஊருக்குள்ளே போய் அவ்வளவு நேரம் அக்கம்மா உக்காந்திருந்தா. அதான் வியாதி வந்திடுத்து. ஊசி போட்டுக்க மாட்டேன்னு அடம்பிடிச்சா. இப்ப வண்டியிலே போட்டு அவளைக் கூட்டிட்டுப் போறேன்.''

பதில் சொல்லக் கூடிய நிலைமையில் யாரும் இருக்கவில்லை. ''அப்படியே செய்யுங்க'' என்று அய்யா சொன்னார். ''நான் அங்கே வரமாட்டேன். என் பேத்தியை எரிச்ச இடத்திலேதான் என்னையும் எரிக்கணும்'' என்று அக்கம்மா முணங்கினாள். கல்லேசன் கேட்கவில்லை. மெத்தென்று இருக்குமாறு வண்டிக்குள் புல்லைப் பரப்பி, அதன் மேல் ஒரு கோணிப்பையையும், புடவையையும் பரப்பி அக்கம்மாவைத் தூக்கி அதில் படுக்க வைத்தான். நஞ்சம்மாவின் கம்பளியை அவள் மேல் போர்த்தி அன்று இரவே வண்டியைக் கிளப்பினான்

மறுநாள் காலையில் அப்பண்ணய்யா ஊருக்கு வந்தான். ஊருக்குள் பிளேக் பரவியதோ, அதனால் அண்ணி இறந்து போனதுவோ அவனுக்கு முதலில் தெரிந்திருக்கவில்லை. கொட்டகையில் வந்து உட்கார்ந்து கொண்டு கண்ணீர் விட்டான். பார்வதியின் கல்யாணத்துக்குப் பின் அண்ணியிடம் அவனுக்கு மதிப்பும் பாசமும் ஏற்பட்டிருந்தது. இரண்டு குழந்தைகள் இறந்த பிறகு அவளுடன் சிருங்கேரிக்குப் போய் வந்தபின் மிகுந்த மதிப்பு ஏற்பட்டது. அம்மாவை விட்டுப் பிரிந்த பிறகு தினசரி அவள் வீட்டிலிருந்து ரசமும் குழம்பும் வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். இப்பொழுது அந்த ஊரில் தன்னுடையவர்கள்

என்று சொல்லிக் கொள்ள யாரும் இல்லை. அவனே நரசியின் வீட்டுக்குப் போய் விசுவனைக் கூட்டி வந்தான். இப்பொழுது அந்த ஊரில் அய்யாவைத் தவிர விசுவனுக்கு நெருக்கமான ஆள் சித்தப்பா ஒருவர் மட்டும்தான். ரேவண்ண செட்டியின் மனைவி சர்வக்காவும், மேலும் பல பெண்களும் கொட்டகைக்கு வந்து அவனுடைய கன்னத்தைத் தொட்டு முத்தமிட்டு கண்ணீர் வடித்துப் போனார்கள். ஆனால் யாராலும் அவனுடைய அம்மாவைத் திரும்பக் கொண்டு வரமுடியவில்லை.

இனிமேல் அண்ணியின் திதி நடந்தாக வேண்டும். அப்பண்ணய்யா தன் அண்ணனிடம் சொன்னான், "எங்கிட்டே அறுபது ரூபாய் இருக்கு. உங்கிட்டே இருக்கறதையும் கொடு. எல்லாத்தையும் போட்டு முறைப்படி செய்யலாம். அவ புண்ணியாத்மா சிரத்தையுடன் செய்யணும்."

உடனே சென்னிகராயர் "கழுதெ முண்டை, இருந்த வரை எல்லாப் பணத்தையும் போட்டு வீடு கட்டிட்டா. எங்கிட்டே பணம் இருக்க நானென்ன எசமானுவா இருந்தேன்?" என்றார்.

"மருந்து வாங்கியது போக மீதி முப்பத்திரண்டு ரூபாய் எங்கிட்டே இருக்கு. அதை எடுத்துக்குங்க. எப்படியோ சிக்கன மாகச் செய்யுங்க. இந்த ஊர் புரோகிதர்களுக்குத் தானம் கொடுத்தாலும் அது அவளுக்குப் போய்ச் சேராது மேல் உலகத்துக்கு வேண்டிய அளவு புண்ணியம் செஞ்சிட்டுப் போயிருக்கா"— அய்யா கூறினார்.

அன்று கம்பனகெரெ தலைமை ஆசிரியர் வந்தார். இரவுப் பள்ளியின் நூற்றிருபது ரூபாய் பணத்தை சென்னிகராயரிடம் கொடுத்தார். பணம் பெற்றுக் கொள்ள வேண்டியவர் இறந்து விட்டதால் அவருடைய கணவனாகிய தான் பணத்தைப் பெற்றுக் கொண்டு விட்டதாக எழுதிக் கையொப்பமிட்டுத் தலைமை ஆசிரியரிடம் கொடுத்தார். அந்தப் பணத்தை திதிச் செலவுக்குக் கொடுக்குமாறு அப்பண்ணய்யா கேட்டான்.

"அதைச் செலவு செய்ய வேண்டாம். படிக்கற பையனுக்கு சட்டை புத்தகம் வாங்கத் தேவையாய் இருக்கும்" என்று மாதேவய்யா கூறினார்.

"அப்படியானா அதை அய்யாகிட்டே கொடு" என்று அப்பண்ணய்யா கூறினான். ஆனால் சென்னிகராயர் அந்தப் பணத்தை ஒரு துண்டுத்துணியில் முடிந்து அதை இடுப்பில் கட்டிக் கொண்டார். பின் அங்கும் இங்குமாகச் சுற்றிக் கொண்டிருந்தார்.

குறைந்த செலவிலே திதி முடிந்தது. தேவையான காய்கறிகள் கேட்டு வாங்கி வருவதற்காக அப்பண்ணய்யா குருபர ஹள்ளிக்குப் போனான். அந்த ஊர்க்காரர்கள் எல்லோரும் கொட்டகை போட்டுக் கொண்டிருந்தனர். அன்று காலையிலே குண்டே கவுடர் இறந்து போய் விட்டார். அப்பண்ணய்யா சென்ற பொழுது அவருடைய உடலைத் தூக்கிக் கொண்டு போய்க் கொண்டிருந்தனர். இறந்து போன குண்டே கவுடருக்கும் அப்பண்ணய்யாவுக்கும் அவ்வளவு பழக்கம் கிடையாது. அவன் சிறு பையனாக இருந்தபோது அவரைப் பார்த்திருக்கிறான். அவரிடம் அவனுக்கு ஒருவிதமான பயம் இருந்தது. அண்ணிக்கு அவர் மிகவும் உதவியாக இருந்தார். ஒரே சமயத்தில் குண்டே கவுடரும் அண்ணியும் இறந்து போனதைப் பார்த்த அப்பண்ணய்யா ''ஆண்டவன் நல்லவர்களை ஒரே சமயத்தில் அழைத்துக் கொள்கிறானே, அவர்களை விட்டு வைக்க மாட்டானா? என் அம்மா, என் பெண்டாட்டி போன்றவர்களையெல்லாம் அதிக நாள் விட்டு வைப்பான்'' என்று நினைத்துக் கொண்டு திரும்பிவிட்டான்.

விசுவனுக்கு இன்னும் பூணூல் போடாததால் அவன் செய்ய வேண்டிய சடங்குகளையெல்லாம் அப்பண்ணய்யா செய்தான். தோட்டத்தின் கிணற்றுப்பக்கம் விசுவனை அழைத்துப் போய் தலையை மழித்து, மற்றச் சடங்குகள் நடக்கும்போது அவனை ஓர் இடத்தில் உட்கார வைத்திருந்தனர். அண்ணா ஜோசியர் சடங்குகளைச் செய்வித்தார். நஞ்சம்மாவின் சொந்தப் பாத்திரங்களே தானம் கொடுக்கப் பயன்பட்டன.

## 8

சடங்குகள் முடிந்த பத்தாவது நாள் கல்லேசன் வந்தான். அக்கம்மா ஊருக்குப் போன இரண்டாவது நாளிலே இறந்து விட்டாளாம். ஹாசன், கௌசிக, மாவினகெரெ, கொரூரு முதலிய இடங்களில் எல்லாம் கல்லேசன் சுற்றிப் பார்த்துவிட்டு அவனுடைய அப்பாவைக் கண்டு பிடித்து அவளுடைய திதியைச் செய்ய வைத்தான்,

விசுவனை அழைத்துப் போக அவன் வந்திருந்தான். அம்மாவின் திவசம் முடிந்ததும் விசுவன் அழுவதை நிறுத்திவிட்டான். ஏரிக்கரையில் உள்ள கோவிலுக்குப் போய் பேசாமல் உட்கார்ந்திருப்பான். அவனுக்குச் சாப்பாடு பிடிக்கவில்லை.. அய்யா கட்டாயப்படுத்தித் தன்னுடைய சாப்பாட்டில் சிறிதளவு அவனுக்கும் கொடுத்து சாப்பிடச் செய்தார். கோவிலுக்குப் போகாவிட்டால் நரசம்மாவின் குடைக்குப் போய் உட்கார்ந்திருப்பான்.

''நரசம்மா ஊருக்குள்ளே போய்ப் பாத்தா என் அம்மா இருக்கமாட்டாளா? இவங்க எல்லோரும் பொய்தானே சொல்றுங்க?'' என்று கேள்வி கேட்டுக் கொண்டிருந்தான்.

''எனக்குத் தெரியாது. இந்த பிஸ்கோத்தைச் சாப்பிடு'' என்று சொல்லி கடையில் இருந்த பிஸ்கோத்தைக் கொடுப்பாள்.

''எனக்கு பிஸ்கோத்து வேண்டாம். என் அம்மா வீட்டிலே இல்லியா? சொல்லு'' என்று கேட்பான். ஒருநாள் யாருக்கும் தெரியாமல் அவன் ஒண்டியாக ஊருக்குள் சென்று பூட்டியிருந்த வீட்டைப் பார்த்தான். மாமன் தன்னை அழைத்துக் கொண்டு போக வந்தபோது தைரியமாக ''நான் வரமாட்டேன்'' என்றான்.

''ஏன்?'' என்று கல்லேசன் கேட்டான். ''நான் இந்த ஊரிலேயே படிக்கிறேன், நீ அடிக்கறே'' இந்த ஊரில் அவனைக் கவனிப்பார் யார்? தான் வளர்ப்பதாக கங்கம்மா சொன்னாள். ஆனால் அவளை நம்பமுடியாது. ''கண்ணு, பேசாம நீ மாமா ஊருக்கே போ'' என்று அய்யா சொன்னார்.

''இல்லே அய்யா, என் மாமன் என்னை மாட்டைப் போல் அடிக்கிறான்''— விசுவன் கூறினான். ''கண்டிப்பாக அடிக்க மாட்டேன்'' என்று கல்லேசன் வாக்குறுதி கொடுத்தான். மற்றவர்கள் எல்லோரும் கட்டாயப்படுத்தினார்கள். வேறு வழியில்லாமல் விசுவனும் புறப்பட்டான். அய்யாவும், சிற்றப்பாவும் ஒரு மைல் தூரம் வந்தார்கள். அவர்கள் திரும்பும் போது விசுவன் அய்யாவைக் கூப்பிட்டு அவரிடம் ஓடிவந்து ''என் அம்மா செத்துட்டான்னு சொல்றீங்களா? எல்லோரும் கொட்டகையை விட்டு ஊருக்குள்ளே போனபிறகு அவ வருவா. நாகலாபுரத்துக்கு வந்து என்னை கூட்டிட்டுப் போகச் சொல்லுங்க'' என்றான். ''சரி கண்ணு'' என்று சொல்லிவிட்டு அவர் அங்கேயே நின்றார். கல்லேசன் அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு முன்னே நடந்தான். அவர்கள் இருவரும் பார்வையிலிருந்து மறையும் வரை அய்யாவும், அப்பண்ணய்யாவும் நின்று பார்த்துக் கொண்டிருந்தார்கள். ''நாகலாபுரத்துக்கு அனுப்பும் போது எவ்வளவு கலகலப்பாக இருந்தான். இப்போது பிரமை பிடித்தவன் போல் ஆகி விட்டான். கை, கால்கள் மெலிந்து போய்விட்டன. அந்த மாமன் மாட்டை அடிப்பது போல் இவனை அடிப்பது உண்மையாகத்தான் இருக்கும். இது வரை பாட்டி இருந்தாள். இனிமேல் அத்தை இவனை எப்படி கவனித்துக் கொள்வாளோ? தங்கை செத்துவிட்டதால் கல்லேசன் இனிமேல் பையனை அடிக்காமல் நன்றாகக் கவனித்துக் கொள்ள

லாம். இனி ஆண்டவன்தான் கதி'' என்று அய்யா சிந்தனை செய்தவாறே ஊரை நோக்கி நடந்தார்.

அப்பண்ணய்யா கொட்டகைக்கு வந்தான். அதுவரை அவன் எதைப்பற்றியும் யோசிக்கவில்லை. இப்பொழுது ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. அவனுடைய சமையல் பாத்திரங்கள் ஊருக்குள் பீரே கவுடனின் மாட்டுத் தொழுவத்தின் அறையில் இருந்தன. தனக்காகத் தனியே ஒரு கொட்டகை போட்டுக் கொள்ள வேண்டும். ஆனால் அது அவனுக்குப் பிடிக்கவில்லை. ''மழை வரும் வரையில் எல்லோரும் கொட்டகையில் இருப்பார்கள். பிறகு ஊருக்குச் சென்று விடுவார்கள். அதுவரை எங்கேயாவது சுற்றிக் கொண்டிருந்து விட்டுப் பிறகு வரலாம். நாளைக் காலையில் புறப்பட்டுப் போகலாம்'' என்று அவன் முடிவு செய்தான்.

அன்றிரவு சாப்பாடு முடிந்த பிறகு கங்கம்மா பேச்சை ஆரம்பித்தாள். ''அவ இருந்தப்ப உனக்குக் கண்டபடி சொல்லிக் கொடுத்து எங்கிட்டே சண்டை போட வைச்சா. இப்ப நீ எதுக்காகத் தனியா இருக்கணும்? சேந்து இருக்கலாம்''

அப்பண்ணய்யாவுக்குக் கோபம் வந்துவிட்டது. ''அவ எனக்கு எதுவும் சொல்லித் தரலே. கெடுத்தது எல்லாம் நீதான், முண்டை'' என்று சீறினான்.

''பெத்த அம்மாளை இப்படிச் சொல்றியாடா? காவாலிப் பயலே?''

''ஆமா, உங்கூட நான் இருக்க மாட்டேன். நீ செத்தா நான் திதியும் செய்ய மாட்டேன்'' என்று படபடப்பாகச் சொல்லி விட்டுத் தன் வேட்டி, சட்டை, போர்வை, சாக்கு முதலியவைகளை எடுத்துக் கொண்டு அவன் கொட்டகையிலிருந்து புறப்பட்டான். வெளியே நிலா வெளிச்சம் இருந்தது. எங்கே போவது என்பது பற்றி இன்னமும் அவன் முடிவு செய்யவில்லை. சற்று நேரம் யோசித்தான். ''இந்த ராகி விளையும் இடங்களில் எல்லாம் ஊரை விட்டுப் போய் இருக்கிறார்கள். நாலேபயலுக்குப் போவோம். அதுதான் சரி, இப்பொழுது நிலா வெளிச்சம் இருக்கிறது. நடந்து கொண்டு போய் ஊருக்கு வெளியே உள்ள கோவில் திண்ணையில் படுத்துக் கொள்ளலாம். காலையில் எழுந்து போகலாம்'' என்று முடிவு செய்து நடை போட்டான்.

குடும்பம் இல்லாத அப்பண்ணய்யா ஊர் சுற்றக் கிளம்பி விட்டபோது சென்னிகராயர் அண்ணு ஜோசியரின் கொட்டகையில் அமர்ந்து குடும்பம் நடத்துவது பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். நஞ்சம்மாவின் வைகுண்ட சமாராதனை முடிந்த உடனே

அவருடைய இரண்டாவது கல்யாணத்தைப் பற்றி ஜோசியர் பேச ஆரம்பித்தார்.

''திப்டூர்லேருந்து மூணுமைல் தூரத்தில் பீமனஹள்ளியில் ஒரு பொண்ணு இருக்கா. ஏதோ ஒரு பிராமணன் கையிலே பொண்ணைக் கொடுக்கணும்னு அவ அம்மாவுக்கு ஆசை. உனக்கென்ன வயசா ஆயிடுச்சு? கல்யாணம் செஞ்சுக்க. புதுசா கட்டின வீடு இருக்கு. பரம்பரை கணக்குப்பிள்ளைத் தொழில் இருக்கு. இதை விட வேறு என்ன வேணும்? பொண்ணும் லட்சணமா இருக்கா. நீ இப்படித் தனியா எவ்வளவு காலம் இருக்கப் போறே?'' என்று ஜோசியர் கேட்டார்.

சென்னிகராயருக்கு சபலம் ஏற்பட்டது. ''பொண்ணு கொடுக்கச் சொல்லுங்க. செஞ்சுக்கலாம்'' என்றார்.

''நான் மட்டும் போய் பொண்ணோட தாயார்கிட்டே பேசிட்டு வரணும். போறப்ப பொண்ணுக்குப் புதுப்புடவை வாங்கிட்டுப் போகணும். பெரிய கணக்குப்பிள்ளைக்காகப் பேச வந்திருக்கேன்னு அவங்க நினைக்கறத்துக்காக நானும் ஒரு அழகான சால்வையைப் போத்துகிட்டு போகணும். மொத்தத்திலே எழுபத்தைந்து ரூபாயாவது வேணும் கொடு'' என்றார் ஜோசியர். பெண் வேண்டும் என்றால் பணத்தைக் கொட்டித்தான் ஆக வேண்டும். நஞ்சம்மா வகுப்பு நடத்தி வந்த பணம் ரூபாய் நூற்றிருபது இருந்தது. அது தெரிந்திருக்காவிட்டால் ஜோசியர் அந்தப் பேச்சை ஆரம்பித்திருக்க மாட்டார். சென்னிகராயர் அவருடைய இடுப்பிலிருந்து பணத்தை எடுத்து எண்ணிக் கொடுத்தார். அவரிடம் எவ்வளவு பணம் மீதி இருக்கிறது என்பதையும் சோதிடர் கவனித்துக் கொண்டார்.

மறுநாள் ஜோசியர் பஸ்ஸில் திப்டூருக்குப் புறப்பட்டார். இருபது ரூபாய் கொடுத்து ஒரு புதிய பச்சை சால்வை வாங்கிப் போர்த்திக் கொண்டு திரும்பி வந்ததை சென்னிகராயரே பார்த்தார். பெண்ணுக்கு ஐம்பது ரூபாய்ப் புடவை ஒன்று வாங்கிக் கொடுத்து வந்திருக்கிறார் என்பதற்கு அதுதான் சாட்சியம். இரண்டு நாட்களுக்குப் பிறகு நல்ல நேரம் பார்த்து அவர்கள் இருவரும் திப்டூருக்கு பஸ்ஸில் புறப்பட்டனர். இரவு ஓட்டலில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு இருவரும் சத்திரத்தின் திண்ணையில் படுத்துக் கொண்டார்கள். ஜோசியர் சொன்னபடி சென்னிகராயர் தன் வேட்டி, ஜமாபந்திக் கோட்டு முதலியவை களைக் கஞ்சி போட்டுத் துவைத்துக் கொண்டு வந்திருந்தார். காலையில் எழுந்ததும் அவைகளுக்கு இஸ்திரி போட்டுக் கொண்டு வந்தார். ஜோசியர் ஏரிக்கரைக்கு ஒரு நாவிதனைக் கூட்டிக்

கொண்டு வந்தார். சென்னிகராயர் மிகுந்த ஆசாரம். ஆதலால் அவர் சலூனுக்குப் போவதில்லே. கரையில் அவரை உட்கார வைத்து முகத்தை நன்கு மழித்துவிட்டு வெள்ளே முடி தெரியாமல் செய்தாயிற்று. தலேயில் இருந்த வெள்ளே முடிகளும் நீக்கப்பட்டு விட்டன. குளித்து முடிந்து பிறகு மடிப்புக்கலேயாத வேட்டி உடுத்தி சட்டை கோட்டு அணிந்து தலேயில் தலேப்பாகை கட்டிக் கொண்டு சென்னிகராயர் சென்ற பொழுது ஜோசியர் சொன்னுர், ''இப்ப ஓட்டலுக்குப் போகலாம் வா, அங்கே பெரிய கண்ணுடி இருக்குதில்லேயா, அதிலே நீ எப்படி இருக்கேன்னு பார்''.

ஓட்டலுக்குச் சென்று உட்கார்ந்த பிறகு மசாலா தோசை வரும்வரை சென்னிகராயர் கண்ணுடியில் தன்னேத் தானே பார்த்துக் கொண்டு இருந்தார். அவருக்கே ஆச்சரியமாகிப் போய்விட்டது. தான் அவ்வளவு அழகாக அதுவரை உடை அணிந்ததில்லே. அவருடைய மனேவியாக இருந்த அந்த முண்டை ஒரு நாளும் கூட இஸ்திரி போட்ட வேட்டி, சட்டை, கோட்டு, தலேப்பாகை ஆகியவற்றை அணிவித்து அனுப்பியதில்லே. மசாலா தோசை, இட்டிலி சாம்பார், மைசூர்பாகு ஆகிய வற்றைச் சாப்பிட்டு, காப்பியும் குடித்தார்கள். சாயங்காலம் வரை தங்களுடனேயே இருந்து தங்களேத் திருப்பி அழைத்துக் கொண்டு வரவேண்டும் என்று வாடகை பேசி ஒரு குதிரை வண்டிக்காரனே ஜோசியர் ஏற்பாடு செய்தார்.

பதினேந்து வீடுகள் கொண்ட ஒரு குக்கிராமம் தான் பீமனஹள்ளி. அந்தக் கிராமத்திலேயே அந்தப் பெண்ணின் வீடுதான் பிராமணருடைய வீடு. அவள் தாய் ஒரு விதவை. சொந்தமாக இருந்த கொஞ்சம் நில புலன்களேயும் குத்தகைக்கு விட்டு விட்டாள். குத்தகைப் பணம் செலவுக்குப் போதாது. ஆகையால் மேற்கொண்டு கடன் வாங்கியும், யாசகம் செய்தும் சமாளித்து வந்தாள். வீட்டின் முன்னே ஒரு குதிரை வண்டி வந்து நின்றவுடன் அவளுக்கு எதுவுமே புரியவில்லே. பெண்ணுக்குப் பதினுறு வயது ஆகிறது. இன்னும் அவள் 'பெரியவளாகவில்லே' என்று சொன்னுள். பெண்ணேப் பார்க்காமல் இருந்தாலும் கூட சென்னிகராயர் சம்மதித்திருப்பார். பார்த்துவிட்ட பிறகு பிரச்சினேயே கிடையாது.

''எங்க சென்னிகராயர் சதா சர்வ நேரமும் கணக்கு எழுதி, எழுதி இப்படி ஆயிட்டார். முப்பத்திரண்டு வயசுக்கு மேல் ஆகலே. சொந்த வீடு. கணக்குப் பிள்ளேத் தொழில். நாலு ஏக்கர் பூமி. இந்தக் காலத்திலே கணக்குப் பிள்ளேத் தொழில் ஒண்ணு இருந்தாப் போதும். நாலு குடும்பத்தைச் சமாளிக்க

லாம். கை கழுவத் தண்ணி வேண்டாம். பாலிலேயே கை கழுவலாம். அவர் வீட்டிலே அவ்வளவு வசதி'' — ஜோசியர் சென்னிகராயரின் பெருமைகளைச் சொல்லிக் கொண்டு இருந்தார்.

திருமணம் நிச்சயமாகி விட்டது. தாமதம் செய்ய வேண்டாம் என்று ஜோசியர் தன்னிடம் உள்ள வெள்ளைக் காகிதத்தில் நிச்சயதார்த்தப் பத்திரிக்கை எழுதிவிட்டார். ''ஜாதகம் பொருந்தி இருக்கு. வைகாசி மாசத்திலே நல்ல முகூர்த்தம் இருக்கு. நீங்க வெறும் சோறும் குழம்பும் செஞ்சு கல்யாணத்தை முடிக்கலாம், எங்களுக்கு ஆட்சேபணை இல்லை'' என்று ஜோசியர் சொன்னாலும் பெண்ணின் தாயாருக்கு அளவு கடந்த சந்தோஷம். அக்கம்பக்கத்தில் கேட்டு வந்து நெய்ச் சோறும் பாயசமும் செய்து பரிமாறினாள். அவர்கள் தாம்பூலம் பெற்றுக் கொண்டு குதிரை வண்டியில் திப்டூருக்கு வந்தார்கள். வரும் வழியில் ஊருக்குப் போகும் பஸ் எதிர்ப்பட்டும்கூட அவர்கள் அவசரப்படவில்லை. ஓட்டலில் ருசிக்க ருசிக்க சாம்பார் செய்கிறார்கள். நாளைக் காலையில் புறப்பட்டால் போதும். ஜோசியர் துணிக்கடைக்குப் போய் ஒரு ஜோடி வேட்டி, ஒரு புடவை வாங்கிக் கொண்டார். ஆனால் அவர் பணம் கொடுக்க வில்லை. சென்னிகராயரே தன் மடியிலிருந்து இருபத்திரண்டு ரூபாய் எடுத்துக் கொடுத்தார்.

சென்னிகராயரின் திருமணச் செய்தி ஊரெல்லாம் பரவி விட்டது. ''அந்த ஆளுக்கு உள்ள திமிரைப் பார். பெண்டாட்டி செத்ததுக்கு உண்மையாகவா அழுதான்'' என்று நரசி சொன்னாள், ''இனி வரப் போற பொண் என்ன பாடுபடுமோ?'' என்று சர்வக்கா அங்கலாய்த்தாள். ரேவண்ண செட்டி ஒருநாள் சென்னிகராயரை வழியில் தற்செயலாகப் பார்த்தான். ''என்ன கணக்குப் பிள்ளைவாள். நீங்க பெரிய ராஜா. நீங்க கல்யாணம் செஞ்சிட்டு அனுபவியுங்க. இல்லாட்டா உங்களுக்குச் சமைச்சுப் போடறது யார்? நல்ல வேலை செஞ்சீங்க'' என்று உற்சாக மூட்டினான். இந்த விஷயத்தில் கங்கம்மா அலட்சியமாக இருந்தாள். ''எந்த முண்டை வந்து எனக்கென்ன பிரயோசனம்? என் வேலையை யார் செய்யப் போறாங்க?'' என்று சொல்லி விட்டாள். சித்திரை மாதம் முடிந்து வைகாசியும் வந்தது.

நிச்சயித்தபடி திருமணம் நடக்க வேண்டும். முதல் பெண்டாட்டியின் தோடும், மூக்குத்தியும் இருந்தது. சுடுகாட்டுச் சாம்பலில் தேடி எடுத்த தாலித் தங்கமும் இருந்தது. மேற் கொண்டு நூறு ரூபாய் புரட்டினால் போதும். சென்னிகராயர் தன் வீட்டில் இருந்த ஒரு பசுவை விற்று நூறு ரூபாய் புரட்டினார்.

ஆனால் மறுபடியும் பேசுவதற்குப் பெண் வீட்டிலிருந்து யாரும் வரவில்லை. இன்னும் பத்துப் பன்னிரண்டு நாட்களில் தங்கள் உறவினரான வெங்கிடராமய்யாவை அனுப்புவதாய்ப் பெண்ணின் தாயார் சொல்லியிருந்தாள். ஆனால் யாரும் வரவில்லை. இன்னும் ஆறு நாட்களே இருந்தன. சென்னிகராயருக்குப் பொறுக்கவில்லை. ஜோசியரிடம் போய் விசாரித்தார். ''என்ன விஷயமோ ஏதோ! எனக்கு நேரமில்லை, நீயே போய் வா'' என்று சொல்லி விட்டார். சென்னிகராயரே மீண்டும் பீமனஹள்ளிக்கு முன்பு போலவே புறப்பட்டார். வீட்டில் வயதான மனிதர் ஒருவர் உட்கார்ந்திருந்தார். சென்னிகராயர் அவரிடம் தன்னைப்பற்றிக் கூறிவிட்டு திருமணப் பேச்சை ஆரம்பிப்பதற்குள் பெண்ணின் தாயார் உள்ளேயிருந்து வந்து படபடவென்று பேசினாள். ''எந்தப் பையனும் கெடைக்காட்டா எங்க பெண்ணைக் கெணத்திலே தள்ளி விடுவோம். உங்களைப் போல ஆள்களுக்கு கொடுக்க முடியாது.'' சென்னிகராயர் விஷயம் புரியாமல் அவளையே விழித்துப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார். அவள் மறுபடியும் பொரிந்தாள். ''அந்தப்பாவி ஜோசியன், எங்களுக்குக் கொஞ்சம் தெரிஞ்சவன். நல்ல பையனை ஏற்பாடு செய்யறேன்னு சொல்லி எங்க கிட்டே இருபது ரூபாய் பறிச்சிட்டான். உங்களைப் போல அரைக் கெழவனைக் காட்டி மோசம் பண்ணிட்டான். ஏதோ ஒரு புண்ணியவான் வந்து விஷயத்தைச் சொன்னார்.''

''எ... எ... எ... என்னோட தப்பா? சொ... சொ... சொல்லுங்க'' சென்னிகராயர் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு பேசினார்.

''தப்பா! முதல் பொண்டாட்டியை எப்படி நீங்க வெச்சிருந்தீங்க? அவ எலே தைச்சுப் பொழைக்கலியா? அவ கணக்கு எழுதிட்டிருந்த வரைக்கும் கணக்குப் பிள்ளை வேலை நடந்தது. எங்க பொண்ணுக்குக் கணக்கு எழுத வராது. உங்களுக்கு நெலம் எங்கே இருக்கு? வீட்டையும் மொதல் பொண்டாட்டிதான் கட்டியிருக்காளாம்! அவ பேரிலே இருக்கற வீடு அவ மகனுக்குப் போகும். உங்களுக்கு ஒரே பையன்னு சொன்னீங்களே. போன வருஷம் பூணூல் போட்ட பையனும், கல்யாணமான பொண்ணும் செத்துப் போனது பொய்யா?''

''ய... ய... யார் சொன்னாங்க? உங்களுக்கு'' அவர் உளறினார்.

''யார் சொல்லுவா? உங்க ஊர்லேயிருந்து வயசான சாமியார் ஒருத்தர் வந்தார். இதெல்லாம் உண்மையா, பொய்யா சொல்லுங்க. உங்க வயசு முப்பத்திரண்டா?''

''அடேய் அவங்கம்மாவை......'' என்று சென்னிகராயர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே மாதேவய்யாவைப் பற்றிப் பொறி தட்டியது. உடனே பெருங்கோபம் வந்தது.

''வாயிலேருந்து வர்ற வார்த்தையைப் பாருங்க. மொதல் பொண்டாட்டிகிட்டே இப்படித்தான் பேசினீங்களாம். உங்களப் போல இருக்கறவங்களுக்கு ஒரு சொட்டுத் தண்ணீர் கூடக் கொடுக்கக் கூடாது. எந்திரிச்சுப் போங்க இங்கிருந்து''

சென்னிகராயர் வெளியே வந்தார். அந்த ஊரில் வேறு எந்த இடத்திலும் உட்கார அவருக்குப் பயம். நேரே திப்டூருக்கு வந்தார். ''இந்த மாதேவய்யா- அவனுக்கு ஏன் இந்த புத்தி? இந்த ஊருக்கு வந்து கோள் சொல்லியிருக்கிறான். ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணம் செய்யவேண்டுமாம். அந்தக் கிழவன் கெடுத்தானே காரியத்தை. அவன் பாழாப் போகட்டும்'' என்று மனதில் திட்டிக் கொண்டே ஓட்டலுக்குப் போய் சாப்பிட அமர்ந்தார். உடனே ஊருக்குப் போக வேண்டும் என்று தோன்ற வில்லை. கல்யாணச் செலவுக்கென்று பசு விற்ற பணத்தில் தொண்ணூறு ரூபாய் மீதி இருந்தது. இருபது நாட்கள் ஆனந்த மாக திப்டூரிலேயே இருந்தார். ஊரில் திவான் சத்திரம் இருந் தது. நிறைய ஓட்டல்களும் இருந்தன.

கையில் இருந்த பணம் முடிந்து விட்ட பிறகு ஊருக்குப் புறப்பட்டார். அப்பொழுது மழைத்துளிகள் விழ ஆரம்பித்து விட்டன. ஜனங்கள் எல்லோரும் ஊருக்குள் போய் விட்டனர். எந்த வீட்டிற்குப் போவது என்பது சென்னிகராயருக்குத் தெரிய வில்லை. நேரே தாயார் குடியிருந்த ஆஞ்சநேயர் கோவிலுக்குப் போனார்.

''உன் கணக்குப் பிள்ளை வேலை போயிடுச்சுடா, முட்டாப் பயலே'' என்று வசை பாடினாள் கங்கம்மா.

''எங்கே போச்சு?''

''உன் பொண்டாட்டி போனதிலிருந்து கணக்கு எழுதலை. இப்ப ரெண்டு தவணையா வசூல் பட்டியலை மணியக்காரனுக்குக் கொடுக்கலை. அன்னிக்கு ஷேக்தார் வந்தப்ப நீ ஊரிலேயே இருக்கலை. மணியக்காரன் சிவே கவுடனும், சிவலிங்கனும் போய் தாசில்தாரைப் பார்த்துட்டு வந்தாங்களாம். ஷேக்தார் போலீசைக் கூட்டிவந்து குண்டே கவுடன் வீட்டுப் பூட்டை உடைச்சு, கணக்குப் புத்தகம் எல்லாத்தையும் சிவலிங்கனுக்கே கொடுத்துட்டார். இப்ப அவந்தான் கணக்குப் பிள்ளை.''

சென்னிகராயர் பிணம் போல் கண்ணை விழித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார்.

''நான் இப்ப வந்திருக்கேன். என் வேலையை எனக்குக் கொடுங்கன்னு போய்க் கேட்டுக்க''

''யார் கிட்டே கேக்கறது? இவ்வளவு நாள் எங்கே போயிருந்தேன்னு கேட்டா என்ன செய்யறது? கணக்கு எழுதறது யார்? இந்த தானியக் கணக்கு படு சிக்கல்.'' அவருடைய கேள்விக்கு கங்கம்மா பதில் சொல்லவில்லை. அவருக்கு ஒரு வழி தோன்றியது. அவரே சிவலிங்கத்தின் வீட்டிற்குப் போனார். அவனுக்குப் பழைய கணக்குகள் தெரியும். புது தானியக் கணக்கு அவனுக்கும் சிக்கல்தான். கம்பனகெரெ கணக்குப் பிள்ளையிடம் கேட்டு எழுதிக் கொண்டிருக்கிறான்.

''என்னய்யா, எதுக்கு இங்கே வந்தே?''- சிவலிங்கன் கணக்குப் பிள்ளையின் அதிகாரத்தோடு கேட்டான்.

''சிவலிங்க கவுடரே, என்னோட கணக்குப்பிள்ளை வேலையை முன்னே நீங்கதான் கவனிச்சுக்கிட்டு இருந்தீங்க. இப்பவும் கவனிச்சுக்குங்க. வருஷத்துக் கொரு தடவை சம்பளத்திலே எவ்வளவு தருவீங்கன்னு ஒரு வார்த்தை சொல்லுங்க.''

''இந்த வேலையை நீ தரலே. போய்யா, அரசாங்கந்தான் எனக்குக் கொடுத்தது''

''அப்படியானா எதுவும் தர முடியாதா?''

''ஒரு பைசாவும் தரமுடியாது. எந்திரிச்சுப் போறயா, இல்லே தலையாரியைக் கூப்பிட்டுக் கழுத்தைப் புடுச்சித் தள்ளச் சொல்லட்டுமா''

அவருக்கு அவமானமாய்ப் போய் விட்டது. அவனைக் கெட்ட வார்த்தையால் திட்டத் தோன்றியது. ஆனால் சிவலிங்கன் தலையாரியைக் கூப்பிட்டு ஏதாவது செய்து விடுவானோ என்று பயமாய் இருந்தது. பேசாமல் வந்து விட்டார். அவர் வரும் வழியில்தான் மாதேவய்யா இருக்கும் கோவில். அய்யா திண்ணையில் உட்கார்ந்தபடி புகையிலைத் துண்டைக் கையில் வைத்துத் தேய்த்துக் கொண்டிருந்தார். அவரைக் கண்டவுடன் சென்னிகராயரின் கோபம் பொங்கி வழிந்தது. அவரும் திண்ணையில் வந்து உட்கார்ந்தார். ''அய்யா, நீங்க நியாயம் தெரிஞ்சவர்னு நெனைச்சேன். ஆனா இந்தக் கோள் சொல்ற புத்தி எப்ப உங்களுக்கு வந்தது?''

''உங்க கல்யாணம் நின்று போனதைச் சொல்றீங்களா?''

அவர் சற்றும் பொறுமை இழக்காமல் பதில் சொன்னவுடன் சென்னிகராயரின் கோபம் அதிகமாயிற்று.

''உம்'' என்றார்.

''சொந்தமா கணக்கு எழுதி வேலை பார்க்க முடியுமா? உங்களுக்கு நெலம் ஏதாவது இருக்கா? வீடு நஞ்சம்மாவின் பேரிலே இருக்கு. அது விசுவனுக்குத்தான் போய்ச் சேரும். உங்க வயசு என்ன? அந்த சின்னப் பொண்ணை எப்படி வெச்சுக் காப்பாத்துவீங்க?

''நாலு வீட்லே பிச்சை எடுத்துக் காப்பாத்துவேன் தெரிஞ்சதா?''

''நஞ்சம்மாவை நீங்க எப்படிக் காப்பாத்தினிங்கன்னு எங்களுக்குத் தெரியாதா? எல்லோரும் அவளைப் போல் இருக்க முடியாது. வர்ற புதுப் பொண்டாட்டி நரசம்மாவைப் போல இருந்தா என்ன செய்விங்க?''

சென்னிகராயரால் பதில் சொல்ல முடியவில்லை. அவருடைய கோபம் மட்டும் குறையவில்லை. அய்யா மறுபடியும் பேச ஆரம்பித்தார். ''உங்களாலே முடியாத விஷயம் உங்களுக்கு எதுக்கு? பேசாம இருங்க. ஏதாவது செய்ய வேணும்னா விசுவனுக்குச் செய்யுங்க. இப்ப சிவலிங்கன் வீட்டுக்குப் போயிருந்தீங்களா? அவர் என்ன சொன்னார்?''

''அவங்கம்மாவை........ சம்பளப் பணத்திலே எனக்கு ஒண்ணும் தர முடியாதுன்னு சொல்லிட்டான்''

அய்யா மேற்கொண்டு எதுவும் பேசவில்லை. மணியக்காரர் சிவேகவுடருக்கு அவருடைய வயது இருக்கும். சிவலிங்கன் அவனைவிட பத்து வயது இளையவன். அவர்கள் இரண்டு பேருக்கும் ஆயுள் குறைவதே கிடையாது. உலகம் இப்படியே இருந்து விடுமா? என்று அவர் யோசிக்கத் தொடங்கினார். சென்னிகராயர் அய்யாவின் பையிலிருந்து வெற்றிலை, பாக்கு, புகையிலை ஆகியவற்றை எடுத்து மென்று கொண்டே தாயின் வீட்டிற்குச் சென்றார்.

சென்னிகராயர் எட்டு நாட்கள் ஊரில் இருந்தார். அதற்குள் வீட்டிலிருந்த மற்றொரு பசுவையும், பாத்திரம் முதலியவைகளையும் விற்று விட்டார். நஞ்சம்மாவின் மூக்குத்தியும், தோடும் வட்டிக் கடைக்காரனிடம் சென்றுவிட்டன. அதற்குப் பிறகு அவர் இரண்டு மாத காலம் ஊரில் இருக்கவில்லை.

''வாழ்க்கையில் என்ன இருக்கிறது? மாதேவய்யாவைப் போல சாமியாராகி விடவேண்டும்'' என்று முடிவு செய்து ஊர் ஊராய்த் திரிந்து கொண்டு மாலைக்குள் திருப்பதிக்குப் போய்ச்

சேர்ந்தார். அரிசிகெரெயிலிருந்து வாங்கி வந்திருந்த காவி வேஷ்டி, சட்டை முதலியவற்றைப் போட்டுக் கொண்டு திம்மப்ப சுவாமியின் முன் விழுந்து வணங்கி மனதிலேயே சந்நியாசம் வாங்கிக் கொண்டார். சாயங்காலம் சாமியாருக்குப் பசித்தது. மலைமேல் சாமியாருக்கு ஆகாரம் கொடுக்கும் குடும்பங்கள் இருக்கவில்லை. மலையிலிருந்து இறங்கி அருகேயிருந்த ஒரு கிராமத்திற்குப் போய் யாசகம் வாங்கிச் சாப்பிட்டார். ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்துக் கொண்டார். அந்த வீட்டுக்கார கவுடன் வெற்றிலை, பாக்கு, புகையிலை ஆகியவற்றைக் கொடுத்தான். சாமியாராக இருப்பது மோசமல்ல என்று மனதில் பட்டது.

இரண்டு மாதத்தில் அந்த வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டது. மேடிகுரிகெ கணகட்டை, ஹுளியார், பூதாளு ஆகிய ஊர்களுக்குப் போய்ச் சுற்று வட்டாரத்தில் ரெண்டு மாதம் அலைந்து விட்டு ஒவ்வொரு ஊரிலும் யாசகம் வாங்கிச் சாப்பிடுவதில் அவருக்கு சலிப்பு ஏற்பட்டது. ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு ஊருக்குப் போக வேண்டும். சாமியார் ஆனதும் பிராமண ஆசாரத்தை விட்டு எல்லா சாதிக்காரர் வீட்டிலும் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். சில வீட்டுக்காரர்கள் ''உழைச்சு சாப்பிடக் கூடாதா?'' என்று கேட்டார்கள்.

ஊர் திரும்ப வேண்டும் என்று அவர் ஒரு நாள் முடிவு செய்தார். ''ஆனால் ஊரில் யார் இருக்கிறார்கள்? என்ன இருக்கிறது? மனைவி என்று சொல்லிக் கொண்டிருந்த அந்த முண்டை பிழைத்திருந்தால் நன்றாய் இருந்திருக்கும். என்னைக் கைவிட்டிருந்திருக்க மாட்டாள்'' என்று நினைத்துக் கொண்டார். பிறகு எப்படியோ வழியை விசாரித்துக் கொண்டு திப்டூருக்கு வந்து அங்கிருந்து கிராமத்திற்குப் போய்ச் சேர்ந்தார்.

கங்கம்மா, ஆஞ்சநேயர் கோவிலிலேயே இருந்தாள். இப்பொழுது அவள் மட்டும் கிராமங்களுக்குப் போக வேண்டியிருந்தது. அவள் எல்லா இடங்களுக்கும் சென்று பொருள்களைத் திரட்டுவாள். ஆனால் அவளால் தூக்கிக் கொண்டு வரமுடியாது. அவள் மிகவும் பிரியமாக வளர்த்த செல்லப்பிள்ளை அப்பண்ணய்யா, அவளிடம் திரும்பி வரவில்லை. ''என் தலைவிதி மோசம்'' என்று குறைபட்டுக் கொண்டிருந்த சமயத்தில் ஒரு நாள் மூத்தமகன் சென்னிகராயர் சாமியார் வேடத்தில் திடீரென்று எதிரே வந்து நின்றார். அழுக்குப் படிந்த காவி வேஷ்டி, அதைவிட அழுக்கான சட்டை— மாதேவய்யாவின் கோலம்தான். மாதேவய்யா தலையையும், முகத்தையும் நன்கு மழித்து வைத்திருப்பார். ஆனால் சென்னிகராயரின் முடி நன்கு வளர்ந்து கீழே இறங்கியிருந்தது. தாடி கருமையும் வெண்மையும்

கலந்து காட்சியளித்தது. ஒரு நிமிடம் அவளுக்கு அடையாளமே தெரியவில்லை. பிறகு அவளே மகனைப் பார்த்து ''இது என்னடா, தேவடியா மகனே, இப்படி மாறிட்டே !'' என்று பாசம் நிறைந்த குரலில் கேட்டாள். அவளுடைய கண்களில் நீர் பொங்கியது.

''இனிமேலே என்ன இருக்கும்மா ? யார் இருக்காங்க எனக்கு? அதான் இப்படி சாமியாராயிட்டேன்.''

''தூத்தேறி, முண்டைப் பயலே! நான் செத்தா போயிட்டேன் ? யாராவது பாக்கப் போறாங்க, உள்ளே வா, அந்தக் காவித் துணியை எறிஞ்சிட்டு வேற வேட்டி கட்டிக்க. நாளைக்கு அம்பட்டனைக் கூப்பிட்டு சவரம் செஞ்சுக்க''

சென்னிகராயர் சாமியார் கோலத்தைத் துறந்தார். தாயும் மகனும் ஒரே குடும்பமாகச் சேர்ந்தனர். அப்பண்ணய்யாவைப் போல் பெரிய மூட்டையைத் தூக்கும் பயிற்சி சென்னிகராயருக்கு இல்லை. இருந்த போதிலும் தாயாருக்கு ஒரு துணை கிடைத்தது. அவள் கிராமத்தில் வீடு வீடாகச் சென்று யாசகம் செய்து பொருட்களைச் சேர்க்கும் போது அவர் ஏதோ ஒரு திண்ணையில் அமர்ந்து வெற்றிலை புகையிலை போட்டு அந்த ருசியை அனுபவித்துக் கொண்டிருப்பார்.

நஞ்சம்மா கட்டிய வீடு இருந்தது. கோவிலில் இருந்தால் தினசரி பூசை செய்ய வேண்டும். குப்பைக் கூளத்தைப் பெருக்கி, சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். ஆகையால் தாயாரும் மகனும் புதிய வீட்டிற்குச் செம்மண் காப்புக் கட்டி நிலைப்படிக்கு கதவு, தாழ்ப்பாள் பொருத்தச் செய்தனர். கங்கம்மாவே புது வீட்டில் பால் காய்ச்சினாள். இரண்டு ஜோசியர்களை அழைத்து ''மருமக செத்து ஒரு வருஷம் கூட ஆகலை. புது வீட்டிலே சாஸ்திரப்படி கிரகப்பிரவேசம் செய்யக் கூடாது. நான் ரொம்பவும் ஏழை இதை ஏத்துக்கணும்'' என்று பணிவாகச் சொல்லி பாயாசத்துடன் அவர்களுக்குச் சாப்பாடு போட்டு ஒவ்வொருவருக்கும் இரண்டு ரூபாய் கொடுத்து காலில் விழுந்து நமஸ்காரம் செய்தாள்.

அதுவரை நஞ்சம்மா குடியிருந்த குண்டே கவுடனின் வீட்டில் இப்பொழுது யாரும் இல்லை. ராமஸந்திர கிராமத்து மாதய்யன். குண்டே கவுடரின் உறவினன். அந்த வீட்டை தான் உபயோகித்துக் கொள்வதாக குண்டே கவுடரின் மகளிடம் சொல்லி வீட்டுச் சாவியை வாங்கி வந்தான். ஆனால் வரிசையாக மூன்று பேர்களைப் பலி வாங்கிய அந்த வீட்டிற்கு வந்து குடித்தனம் செய்யப் பயந்து ஒரு நல்ல ஜோசியரின் மூலம் தேவையான சடங்குகள் செய்யும் வரை பழைய வீட்டிலேயே இருக்கலாம் என்று முடிவு செய்து அந்த வீட்டைப் பூட்டி வைத்திருந்தான்.

# பதினொறு

## 1

ராமதேவய்யா அந்த ஊருக்கு வந்து நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கும் மேலாயிற்று. யாருடைய அறிமுகமும் வேண்டாம், யாருடைய நட்பும் வேண்டாம் என்னும் போக்கில் அவர் அங்கு வாழ்க்கையை ஆரம்பித்தார். ஆனால் நாட்கள் செல்லச் செல்ல பல பேருடன் தொடர்பும், அறிமுகமும் ஏற்பட்டன. சுற்று வட்டாரத்தில் பல கிராமங்களில் இவரை அடையாளம் கண்டு கொண்டார்கள். யாருடனும் வம்புக்குப் போகாமல், யாருடனும் ஒட்டுதல் இல்லாமல் இருந்த அவருக்கு அங்கே அலுப்பு உண்டாகக் காரணம் இருக்கவில்லை. எந்த ஊரில் இருந்தாலும் கசப்பான அனுபவத்தை ஏற்படுத்தக் கூடிய சந்தர்ப்ப, சூழ்நிலை அவருக்கு அமைந்திருக்க இயலாது. ஒரு தடவை அவர் அந்த ஊரை விட்டுக் காசிக்குப் புறப்பட்டுப் போனார். அது பெரிய புண்ணியத்தலமாக இருந்த போதிலும், காசி மாநகரம் அவருக்கு ஒத்துக் கொள்ளாமல் அவர் ஊர் திரும்பினார். ஏன் திரும்பி வந்தோம், காசியில் இல்லாதது இங்கே என்ன இருக்கிறது என்று பிறகு அவர் பலமுறை எண்ணிப் பார்த்ததுண்டு. அந்த ஊர் தட்பவெப்பநிலை ஒத்துக் கொள்ள வில்லை என்பது உண்மையாக இருந்த போதிலும் அந்த ஒரே காரணத்திற்காக மட்டும் அவர் காசியை விட்டுக் கிளம்பவில்லை. அந்த நகரத்து மொழியான இந்தி அவருக்குத் தெரிந்ததுதான். ஜங்கமவாடி மடம் தங்குவதற்கும், சாப்பாட்டுக்கும் வசதியாக இருந்தது. இருபத்து நான்கு மணி நேரமும் பஜனை செய்யவும், பஜனை கேட்கவும் காசியைத் தவிர வேறு சௌகரியமான நகரம் கிடையாது. இருந்த போதிலும், ராமஸந்திர கிராமத்துக்குத் திரும்ப வேண்டும் என்னும் விருப்பம் தோன்றி விட்டது. பல வருடங்கள் வசித்த அந்த ஊரின் கோவில். தெரு, ஏரி, சுற்றி யிருந்த கிராமங்கள் இவையெல்லாம் அவருடைய உள்ளத்தை ஈர்த்தனவோ, அல்லது அந்த ஊர் மக்கள் அவரது சிந்தனையை வயப்படுத்தினரோ, அவருக்குத் தெளிவாகத் தெரியவில்லை. எப்படியோ திரும்பி வந்து விட்டார்.

வந்த பிறகு இங்கேயே ஒன்றிப் போய்விட்டார். சுற்று வட்டாரத்து ஊர்களில் உஞ்ச விருத்தி செய்து சாப்பிடுவது, தம்மால் செய்ய முடிந்த உதவியை ஏதோ சிலருக்குச் செய்வது பஜனை செய்வது ஆகியவைகளில் காலத்தைக் கழித்து விட்டார். ஆனால் சமீப காலமாக அவருக்கு நேரம் போவதே சிரமமாய் விட்டது. அங்கே தனக்கென்று யாருமில்லை என்ற கருத்து அவரிடம் உண்டாகி விட்டது. எப்படியிருந்தாலும் தான் ஒரு

சன்னியாசி. முன்பு தனக்கு யார் இருந்தார்கள்? இப்பொழுது யார் இருக்க முடியும்?-என்று தன்னைத்தானே கேட்டுக் கொள்ளும் மனத்தின் தனிமை போகவில்லை. எந்தவித ஒட்டுதலும் இல்லாமல் அந்த உலகில் ஏன் இருக்க வேண்டும் என்னும் யோசனையும் ஒன்றிரண்டுமுறை வந்ததுண்டு. சில நாட்களாக அந்த யோசனை வலுப் பெற்று விட்டது. இந்த ஊர் வேண்டாம். தும்கூருக்கோ, திப்டூருக்கோ அல்லது வேறு எங்காவது சென்று விட வேண்டும் என்னும் முடிவு மனத்தில் படிந்திருந்தது.

இவ்வாறு யோசித்துக் கொண்டிருக்கும் பொழுது ஒரு நாள் அப்பண்ணய்யா, ஊருக்கு வந்தான். அவனுக்கும் அந்த ஊரில் யாரும் இருக்கவில்லை. அண்ணி இறந்த பிறகு அவனுக்கு ஊரே ''வெறிச்''சென்று தோன்றியது. அது வரை அவன் ஒருவன் மட்டும் நாலேபயலு கிராமத்தில் யாசகம் செய்து வந்தான். அவன் வந்த பொழுது ஒன்றரை வள்ளம் அரிசி, இருபதுபடி பருப்பு, ஒரு சேர் மிளகாய் முதலியவை கொண்டு வந்திருந்தான். எல்லாவற்றையும் பீரேகவுடனின் திண்ணை அறையில் வைத்து, தினசரி தான் மட்டும் தனியே சமைத்துச் சாப்பிடுவான். ஊரில் மாதேவய்யாவைத் தவிர அவனுக்கு வேறு நெருங்கியவர்கள் கிடையாது. சாப்பிட்ட பிறகு பொழுது போக கோவிலுக்கு வந்து உட்கார்ந்து கொள்வான். எந்தப் பேச்சை ஆரம்பித்தாலும் அது அண்ணியைப் பற்றியே சுழன்றது. ''கவலைதான் அவரை விழுங்கிட்டுது'' என்று திரும்பத் திரும்பச் சொல்வான்.

ஒரு நாள் மாதேவய்யா சொன்னார்; ''முடிஞ்ச கதை முடிஞ்சு போச்சு. இப்பவாவது நீ, அண்ணன், அம்மா-மூன்று பேரும் சேந்து இருங்க''

''தூ, அவ பாழாப் போக. அவகூட சேந்து நான் இருப்பேனு? நான் ஆம்பளை நாலேபயலுலெ ஒண்ணரை வள்ளம் வெள்ளை அரிசி சம்பாதிச்சிட்டு வந்திருக்கேன். வேணும்னு, வந்து பாருங்க.''

அய்யா பேசவில்லை. அப்பண்ணய்யா இருபது நாட்கள் ஊரில் இருந்தான். ஒரு நாள்கூட அண்ணன், அம்மாவிடம் போகவில்லை. அவர்களைப் பற்றிய பேச்செடுத்தாலே சீற ஆரம்பித்தான். அவனுக்கு அந்த ஊரே பிடிக்கவில்லை. பேசாமல் உட்கார்ந்து என்ன செய்வது? சுற்று வட்டாரத்து எல்லா கிராமங்களிலும் அண்ணனும், அம்மாவும் யாசகம் செய்திருக்கிறார்கள். தான் சென்றால் ஜனங்கள் இரண்டுமுறை கொடுக்க மாட்டார்கள். ஒரு நாள் பீரேகவுடனின் திண்ணை அறையைப் பூட்டிவிட்டு மறுபடியும் நாலேபயலுக்குப் புறப்பட்டுப் போனான்.

அப்பண்ணய்யா புறப்பட்டுப் போன நாள், மாதேவய்யாவுக்கு நஞ்சம்மாவின் குடும்ப நினைவே வந்தது. சிறிய பெண்ணான அவள் அந்த ஊருக்கு மருமகளாய் வந்தது, மாமியார் வீட்டு அலங்கோலம், அவளுடைய குழந்தைகள், தனிக்குடித்தனம் செய்தது, குழந்தைகளைக் காப்பாற்றி வளர்த்தது, மகனுக்குப் பூணூல் போட்டது, மகளுக்குத் திருமணம் செய்தது, இரண்டு குழந்தைகளின் இறப்பு-இவையெல்லாம் நாடகத்தில் வருவதைப் போல் அவருடைய மனதில் அடுத்தடுத்து எழுந்தன. தான் அந்தக் குடும்பத்துடன் எவ்வளவு ஒட்டி இருந்தோம் என்ற உணர்வு அவருக்கு அப்பொழுது உண்டாயிற்று. அந்தக் குடும்பம் இப்பிடி ஆயிற்றே என்று அவரது உள்ளம் பெருமூச்சு விட்ட பொழுது, அக்குடும்பத்தின் கொடி போன்று இருக்கும் விசுவனை அவருடைய உள்ளம் நினைத்துக் கொண்டது. அவன் அவரது மடியில் அமர்ந்து அவருடைய யாசகச் சோற்றில் ஒரு உருண்டையைத் தின்று, அவரிடம் ஒட்டுதலாக இருந்தான். மிகவும் சுறுசுறுப்பான பையன். புலியைப் போன்று உறுதியான நெஞ்சம். மேற்கொண்டு படித்தால் கெட்டிக்காரனாகி விடுவான். அவனைப் படிக்க வைக்க வேண்டுமென்று நஞ்சம்மா விரும்பினாள். மாமன் வீட்டில் எப்படிப் படித்துக் கொண்டிருக்கிறானோ என்னவோ, துடுக்குத்தனம் குறைந்திருக்கலாம், அத்தை, மாமனுக்குக் குழந்தைகள் இல்லை. ஆனால் அவர்கள் எப்படிக் கவனித்துக் கொள்கிறார்களோ?

தான் இந்த ஊரை விட்டுப் புறப்படுவதற்கு முன் ஒரு முறை நாகலாபுரத்துக்குச் சென்று பையனைப் பார்த்து விட்டு வர வேண்டுமென்று தீர்மானித்தார்.

## உ

இரண்டு நாட்களுக்குப் பின் அவர் மதியம் சாப்பிட்ட பிறகு கோவில் திண்ணையில் உட்கார்ந்து புகையிலை மென்று கொண்டிருந்தார். நரசி அவரைத் தேடிக்கொண்டு வந்தவளைப் போல் வந்து திண்ணையில் அமர்ந்தாள். அவளுடைய முகத்தில் கவலை படர்ந்திருந்தது.

''என்னம்மா, ஏழெட்டு நாளா ஊரிலே இருக்கலை? எங்கே போயிருந்தே?''

''எங்க சொந்தக்காரங்க வீட்டுக்கு சாந்தி கிராமத்துக்குப் போயிருந்தேன்.''

''ஏன் இப்படிச் சோர்ந்து இருக்கே?''

''என்ன சொல்லட்டும் நான்? நேத்து நாகலாபுரத்து ஏரிக் கரையிலே வண்டியிலே வந்துகிட்டிருந்தேன். விசுவன் தென் பட்டான். அவனைப் பாத்து அழுகை வந்திருச்சு'' மாதேவய்யா வுக்கும் உடனே சஞ்சலம் உண்டாயிற்று. ''எப்படி இருக்கான் பையன்?''

''எப்பிடியா? வாழைத் தண்டு போல இருந்த பையன் காஞ்ச குச்சி போல இருக்கான். ஏரியிலேருந்து தண்ணி கொண்டு போறதுக்கான ஒரு கொடம் கொண்டு வந்திருந்தான். அவனைப் பார்த்தவுடனே அடையாளமே தெரியலே. அப்பிடி யிருக்கான். நான் வண்டியை நிறுத்திக் கீழே எறங்கினேன். எப்பிடியப்பா இருக்கறேன்னு கேட்டேன். பையன் ஒடனே அழ ஆரம்பிச்சிட்டான். என்ன செஞ்சாலும் அழுகையை நிறுத்தலே. என்னையும் ஊருக்குக் கூட்டிக்கிட்டு போறியான்னு கேட்டான். நான் எப்பிடிக் கூட்டிக்கிட்டு வர முடியும்? நீங்களே சொல்லுங்க. இன்னும் நெறையச் சொன்னான். நேரமாப்போனா வீட்டிலே அத்தை அடிப்பான்னு சொல்லி தண்ணி எடுத்துக்கிட்டு ஓடிப் போனான். அவ்வளவு சின்னப் பையங்கிட்டே கொடம் கொடுத்து அனுப்பலாமா அந்தக் கொடுமைக்காரி? நீங்களே சொல்லுங்க''

''நீ ஊருக்குப் போய் கல்லேச ஜோசியரைக் கேக்கலியா? உனக்கு அவரை அடையாளம் தெரியாதா? பையன் ஓடிப் போயிட்டான். வண்டியிலே உக்கார், எறக்கி விடறேன்னு நான் சொன்னேன். அங்கே ஒரு பொம்பளை புடவை துவைச் சிட்டிருந்தா, அவகிட்டே போய் 'அம்மா, எங்க ஊர் ராம ஸந்திர கிராமம். இந்தப் பையன் எங்க ஊர்க்காரன். இவனைக் கல்லேசையா எப்படிக் கவனிச்சுக்கறார்னு' கேட்டேன். அந்த அம்மா எல்லாத்தையும் சொன்னா, கல்லேசையா வீட்டுக்குப் பக்கத்துலேதான் அந்த அம்மா வீடு இருக்குதாம். வீட்டு வேலை எல்லாம் பையந்தான் செய்ய வேணுமாம். அவ அரிசி ரொட்டி சாப்பிடுறாளாம். பையனுக்கு ராகி ரொட்டியாம். அதுவும் சில வேளையிலே கொடுப்பாளாம், சில வேளையிலே இல்லியாம். அவ புடவையை அவந்தான் துவைக்க வேணுமாம். கரண்டி எடுத்து நெத்தியிலே அடிக்கிறாளாம்''

''கல்லேச ஜோசியர் பேசாம இருக்காரா?''

''அந்த ஆள் ஒரு பைத்தியக்காரன். குஷி கௌம்பிட்டா பையனைச் சந்தைக்கு அழைச்சுப் போய் மிட்டாய், கிட்டாய் வாங்கித் தருவாராம். கோபம் வந்துட்டா வெறகுக் கட்டை எடுத்து அடிப்பாராம். பொம்பளைக செய்யற உள் விஷயம் எல் லாம் ஆம்பளைகளுக்கு எப்பிடித் தெரியும்?''

மாதேவய்யா மறுபடியும் எதுவும் கேட்கவில்லை. தாயை இழந்த அனாதைப் பையன் விசுவன் மிகச்சந்தோஷமாய் இருப்பான் என்று அவர் நினைத்திருக்கவில்லை. ஆனால் அவன் இவ்வளவு தூரம் அவதிப்படுவான் என்று அவர் கற்பனையிலும் கூட நினைத்திருக்கவில்லை. கல்லேசனுடைய மனைவி மிகவும் கெட்டவள் என்று அவர் கேள்விப்பட்டிருந்தார். ''தங்கையின் மகனிடம் மாமன் மிகுந்த அக்கறை கொண்டிருக்க வேண்டும். அறிவு சரியாக இருந்தால்தானே ஒழுங்கான அக்கறையும் இருக்கும்?''-என்று அவர் சிந்தனை செய்து கொண்டிருந்தார். நரசம்மாவும் தனக்குள் ஏதோ யோசனை செய்து கொண்டு கேட்டாள். ''அய்யா, நான் ஒண்ணு சொல்றேன் கேக்கறீங்களா?''

''என்ன சொல்லு''

''ஆண்டவன் என் வயித்திலே கொழந்தை கொடுக்கலே. அந்தப் பையனை அழைச்சுக்கிட்டு வந்து எங்கிட்டே விடுங்க. என் மகனைப் போலக் காப்பாத்தறேன். எங் கடை, எம் பணம் எல்லாமே அவனுக்குத்தான். உயிர் போயிருக்க வேண்டிய பையன் எம் மடி மேலே படுத்து உயிர் பொளச்சான். அவனோட அம்மாவே 'நரசம்மா, இது எங் கொழந்தை அல்ல உன்னோடது. நீயே வளத்து'ன்னு சொன்னா. நீங்க நாகலாபுரத்துக்குப் போய் கூட்டி வாங்க. அவனோட ஒரு முடியுங்கூட அலுங்காம கவனிச்சுக்கறேன்.''

இந்த வார்த்தைகளை மறுபடியும் சொல்லி-''யோசனை செய்யுங்க'' என்று மீண்டும் நினைவு படுத்திவிட்டுப் புறப்பட்டுச் சென்றாள். மாதேவய்யாவின் மனம் சிந்திக்க ஆரம்பித்தது, அன்று இரவு முழுவதும் அவருக்கு உறக்கம் வரவில்லை. நஞ்சம்மாவைப் பற்றிய நினைவுதான். அவளுக்குக் கட்டி வந்த நாள் நடு ராத்திரியில் மனத்தில் இருந்த எல்லாவற்றையும் அவள் மனம் திறந்து பேசினாள். ''பார்வதி, ராமண்ணா இறந்தப்ப நீங்க கோபி கதையைச் சொன்னீங்க. கொழந்தை செத்தப்ப உயிருக்குப் பயந்து அவ கரையிலேயே நின்னா. அன்னிக்கு ராத்திரி நான் மயானத்திலே கெணத்துலே விழுகறதுக்காகப் போனேன். ஆனா விசுவனோட கதி என்னவாகும்னு யோசிச்சு மறுபடியும் திரும்பி வந்தேன், இப்ப நானே செத்துப் போறேன் விசுவனுக்கு என்ன கதி? அக்கம்மா கொஞ்சம் கஞ்சி ஊத்துவா. அண்ணாகிட்டே எனக்கு நம்பிக்கை இல்லே. பையனுக்குக் கஞ்சி முக்கியமல்ல, அவன் புத்திசாலியாக வேண்டாமா?'' அவளுடைய எல்லா வார்த்தைகளும் அவருடைய நினைவுக்கு வந்தன. அக்கம்மா பிழைத்திருந்தால் பையனுடைய

கஞ்சிக்குக் கவலை இல்லை. ஆனால் பேத்தியுடன் அவளும் இறந்து போனாள். ''பையனை மாமனுடன் அனுப்பும்பொழுது எனக்கு இந்த யோசனையே தோன்றவில்லையே? எனக்கு அறிவே கிடையாது'' என்று அவர் தன்னைத் தானே நொந்து கொண்டார். இப்பொழுது என்ன செய்வது? நரசம்மா சொன்னது போல் பையனை அழைத்துக் கொண்டு வந்து அவளிடம் விட்டு விடலாமா? அவளிடம் பதினைந்தாயிரம் ரூபாய் இருக்கிறதாம், கடை இருக்கிறது. அன்புடன் வளர்த்து வருவாள். தாய் மாமன் வீட்டை விட இதுவே நல்லது-என்று அவருடைய மனம் கூறியது. ஆனால் நஞ்சம்மா பிழைத்திருந்தால் பையனை நரசம்மாவிடம் விட்டிருப்பாளா? ''பையனுடைய கஞ்சி முக்கியமல்ல. அவன் புத்திசாலியா இருக்கணும்'' — என்று அவள் ஆசைப்பட்டது நினைவுக்கு வந்தது. அவனைப் புத்திசாலியாக்குபவர்கள் யார்? பெற்ற அப்பனின் யோக்கியதை தெரியும். சித்தப்பாவுக்குப் புத்தி எங்கே இருக்கிறது? பாட்டி கங்கம்மா விவேகத்துடன் இருந்திருந்தால் இப்படியெல்லாம் நடந்திருக்குமா? இனிமேல் அந்தப் பையனின் கதி என்ன?

ஏழெட்டு நாட்களாக இந்தக் கவலையே அவரை வாட்டி வந்தது. ஒரு நாள் படுத்துக் கொண்டிருக்கும்பொழுது திடீரென்று ஒரு வழி புலப்பட்டது. ''நான் எப்படியோ ஊரை விட்டுப் புறப்படுகிறேன். விசுவனையும் என்னுடன் அழைத்துப் போகலாம். நான் சம்பாதித்த சோற்றில் அவனும் இரண்டு உருண்டை சாப்பிடட்டும். நானே அவனைப் பள்ளிக்கு அனுப்புகிறேன். பையன் கெட்டிக்காரன். இங்கிலீஷ் படிக்கட்டும். அதிர்ஷ்டம் இருந்தால் மேற்கொண்டு படிக்கட்டும். அதுவே நல்லது''-என்று முடிவு செய்தபோது அவருடைய உடம்பு புல்லரித்தது.

ஆனால் மற்றொரு யோசனையும் தோன்றியது. எனக்கு இவ்வளவு வயதாகி விட்டது. அழைத்துக் கொண்டு போய் நானே இடையே இறந்து போனால் அவனுடைய கதி என்ன?'' ஒன்றிரண்டு மணி நேரம் இந்தக் கவலை மனத்தை வாட்டியது. ஆனால் அதற்கும் ஒரு சமாதானம் கிடைத்தது. நான் இறந்து போனாலும் கூட, எங்கேயாவது கூலி வேலை செய்து பிழைக்கட்டும். அந்த அத்தை, மாமன் முன்னே நின்று நடுங்கிக் கொண்டிருக்க வேண்டாம். நான் இப்பொழுதே இறந்து போவேன் என்பது என்ன நிச்சயம்? நஞ்சம்மாவைப் போல் வயதில் இளையவர்கள் செத்தாலும் கூட, நான் குண்டுக்கல் போல் இருக்கிறேன். விசுவன் பெரியவனாகும் வரை நான் இறக்க மாட்டேன்.

கல்லேச ஜோசியர் பையனை அனுப்பா விட்டால் என்ன செய்வது என்னும் யோசனையும் வந்தது ''எப்படியோ, என் முகத்தைப் பார்த்தால் பையன் என்னிடம் ஒட்டிக் கொள்வான். திருட்டுத்தனமாய் அழைத்து வருகிறேன். என்னை என்ன செய்து விட முடியும்''?—என்னும் முடிவுடன் அவர் ஒரு நாள் நாகலா புரத்துக்குப் புறப்பட்டார்.

3

நடுவழியில் கட்டிகெஹள்ளியில் இரவு தங்கி, மறுநாள் காலையில் அவர் நாகலாபுரத்தை அடைந்தபொழுது காலை பத்து மணியாகிவிட்டது. வழியிலிருந்த ஏரியில் குளித்துவிட்டு, காவி வேட்டி சட்டை அணிந்து, தலைக்குக் காவித்துணி சுற்றி, நெற்றி யில் விபூதிப்பட்டை தீட்டி சிவத்தியானம் செய்தவாறு நேரே பள்ளிக்குச் சென்றார். அப்பொழுது பள்ளி கலையும் நேரம். மணி அடித்தவுடன் விசுவன் வெளியே வந்தான், அவனே இவரை அடையாளம் கண்டு கொண்டு, ''அய்யா'' என்று அழைத்துக் கொண்டே அருகில் வந்து, நின்று கொண்டிருந்தவரைக் கட்டிப் பிடித்துக் கொண்டான்.

''இங்கே வா, கண்ணு''— என்று கையைப் பிடித்து, பின் புறமிருந்த ஆலமரத்துக்கு அருகில் அழைத்துச் சென்று அவனை அமரச் செய்தார். நரசம்மா கூறியிருந்ததைப் போல் அவன் உலர்ந்த குச்சியாய் இருந்தான். அவர் கேட்டார் ''எங்கூட வர்றியா?''

''நம்ம ஊருக்கா?''

நம்ம ஊருக்கோ அல்லது வேறு ஊருக்கோ, எங்கூட வா. ஏதாவது பெரிய ஊருக்குப் போவோம். நான் உஞ்சவிருத்தி பஜனை செஞ்சு பெழைக்கிறேன். நீ பள்ளிக்கூடம் போய் நல்லாப் படிக்கலாம். வர்றியா?''

''போங்க அய்யா, நீங்க பொய் சொல்றீங்க''

''இல்லே கண்ணு, நிஜமாகத்தான்''

''அப்படியானு சத்தியம் செஞ்சு சொல்லுங்க''

''உம் மேலே ஆணையா''—என்று அவனுடைய தலைமேல் கைவைத்துச் சொன்னார்.

''அப்படியானு, இப்பவே ஓடிப்போகலாம்''

''வேண்டாம், வீட்டுக்குப் போய் உம் மாமனைக் கேட் போம்'' இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அவனது முகம் அழுகை வந்ததைப்போல் மாறிவிட்டது. ''அவர் அனுப்ப

மாட்டார்'' ''மொதல்லே கேக்கலாம்! அவர் அனுப்ப மாட்டேன்னு நான் நாளைக்கு இங்கே வர்றேன். இங்கிருந்து, இப்படியே உன்னைக் கூட்டிட்டுப் போறேன்'' என்று சொல்லி அவனைச் சம்மதிக்கச் செய்வதற்குள் அவர் தனது மூங்கிற் பெட்டியைப் பிடித்துக் கொண்டு மூன்று முறை சத்தியம் செய்ய வேண்டிய தாயிற்று. அவனை முதலில் அனுப்பிவிட்டு, பத்து நிமிடங்கள் கழித்து அவர் வீட்டை விசாரித்துக் கொண்டு சென்றடைந்தார். ''ஏண்டா, நேரங் கழிச்சு வந்தே, படுவா?''-என்று கல்லேச ஜோசியர் அவனை மிரட்டிக் கொண்டிருக்கும் பொழுது, மாதேவய்யாவைப் பார்த்ததும் வாயை மூடினார்.

அவர்கள் குசலம் விசாரித்து உலக விவகாரங்களைப் பொதுவாகப் பேசி முடிக்கும் பொழுது வீட்டிற்கு முன்பு ஒரு சிவப்புக் குதிரை வந்து நின்றது. கண்டி ஜோசியர் அதிலிருந்து இறங்கினார். தன்னுடைய தாயாரின் திதியை முடித்துக் கொண்டு சென்ற அவர், வீட்டுக்குத் திரும்பி வருவது இதுதான் முதல் முறை. கல்லேசன் விசுவனை அழைத்து வந்து வீட்டில் வைத்துக் கொள்ளப் போகிறான் என்பது அவருக்கு முன்பே தெரிந்திருந்தது. கல்லேசன் அதைப்பற்றி அவரிடம் தெரிவித்திருந்தான். இப்பொழுது வீட்டிற்குத் திரும்ப வேண்டும் என்று ஏதோ ஓர் சபலம் அவர் மனத்தில் எழுந்தது. பேரனைப் பார்க்க வேண்டும் என்ற ஆசையும் அந்த சபலத்துக்கு ஒரு காரணம். உள்ளே வந்த அவர் பேரனை அழைத்து மைசூர்பாகு, வடைப் பொட்டலத்தை அவனிடம் கொடுத்தார். ராமஸந்திர கிராம நிலவரத்தைப் பற்றியும், மகள் கட்டியிருந்த வீட்டைப் பற்றியும் மாதேவய்யாவிடம் விசாரித்தார்.

சிறிது நேரம் கழித்து, கல்லேசன் மாதேவய்யாவை நோக்கிக் கேட்டான். ''சாப்பிடறீங்களா? சமையல் செஞ்சுக்கறீங்களா? உங்க ஜாதிக்காரங்க யார் வீட்டுக்காவது சொல்லி அனுப்பட்டுமா?''

''எங்க ஜாதிக்காரங்க வீட்டுக்குச் சொல்லி அனுப்புங்க'' அந்த ஊர் மல்ல செட்டியின் வீட்டில் சொல்லி விட்டு வருமாறு கல்லேசன் விசுவனை அனுப்பினான். வீட்டிற்கு வந்து மல்ல செட்டி சாமியாரை சாப்பாட்டிற்காக அழைத்துச் சென்றான். அவனுடைய மனைவி சமையல் செய்து கொண்டிருந்தாள். விசுவனைப் பற்றி மாதேவய்யா விசாரித்தார். ''கொளந்தைக இப்படி இருக்க வேணும். செத்துப் போறதே நல்லது''-என்றான் மல்ல செட்டி. உள்ளேயிருந்த அவனுடைய மனைவியும் ''அதான் நல்லது'' என்றாள்.

''செட்டியாரே, கண்டி ஜோசியரைக் கொஞ்சம் அழைச்சிட்டு வர்றீங்களா?''—மாதேவய்யா சொன்னார்.

மல்ல செட்டி பத்து நிமிடங்களில் கண்டி ஜோசியருடன் திரும்பி வந்தான் மாதேவய்யாவுக்கு எதிரே பலகையை மல்ல செட்டி வைத்தான். அதில் கண்டி ஜோசியர் அமர்ந்தார். தான் அங்கே வந்த காரணத்தை விவரித்து விட்டு மாதேவய்யா சொன்னார். ''வேணும்னு இந்த செட்டியாரையும் உள்ளே இருக்கற அவரோட பெண்டாட்டியையும் கேளுங்க. இந்த ஊர்லே யாரை வேணும்னாலும் விசாரியுங்க. அந்தப் பையன் எப்பிடி ஆயிட்டான்னு பாருங்க. உங்க மருமகளோட குணம் சரியில்லே. பையனை எங்கூட அனுப்புங்க. நான் வளத்து அவனை கெட்டிக்காரனாக்குறேன்'', தன் மருமகளின் இடுப்பு எலும்பை முறித்துப் போட வேண்டுமென்று கண்டி ஜோசியருக்குக் கோபம் வந்தது. மாதேவய்யா கூறினார். 'தலை எழுத்து மோசமாக இருந்தா, தலையை மொட்டையடிச்சாலும் அது போகாது. அவனைச் சரிசெய்ய புருஷனாலேயே முடியலே. கொழந்தையை எப்பிடி வளத்துறதுன்னு உங்க மகளுக்கும் தெரியலே. பேசாம எங்கூட அனுப்புங்க.'

ஜோசியர் சிறிது நேரம் யோசித்தார், பிறகு ''நீங்க கூட்டிக் கிட்டுப் போய் என்ன செய்யப் போறீங்க?'' என்று கேட்டார்.

''என்ன செய்வேனோ, எங்கே இருப்பேனோ, எங்கிட்டே நம்பிக்கை இருந்தா அனுப்புங்க.''

அவர் உடனே பதில் சொல்லவில்லை. மனத்தில் கோபம் மூண்டுகொண்டிருந்தது. பையனுடைய பாட்டன்-நான்-உயிரோடு இருக்கிறேன். தாய் மாமன் கல்லேசன் இருக்கிறான், ''நீங்கள் ஒழுங்காக வளர்ப்பதில்லை. என்னுடன் அனுப்புங்கள்''-என்று சொல்லி, இந்தச் சாமியார் வந்திருக்கிறான். இவனுக்கு எவ்வளவு திமிர்? என்று நினைத்தார். மாதேவய்யாவைத் திட்டுவதற்காக வாயைத் திறந்த கண்டி ஜோசியர், ஏதோ நினைவுக்கு வந்தவராய் உடனே தன் வாயை அடக்கிக் கொண்டார். பத்து நிமிடங்கள் ஊமையைப் போல் பேசாமல் கல்லேசனுடைய குடும்பத்தைப் பற்றி நினைத்துக் கொண்டார். அந்த முண்டை நல்லவள் அல்ல. வயிற்றுக்குச் சோறு போடாமல் பையனை சாகும்படி செய்திருக்கிறாள். கல்லேசனும் அடிக்கிறானும்-நானே அழைத்துக் கொண்டு போய் வைத்துக் கொண்டால் என்ன?-என்ற சிந்தனை வந்தது. தான் அழைத்துக் கொண்டு போய் என்ன செய்யப் போகிறோம்? ஓட்டலில் சாப்பாடு, குதிரைச் சவாரி, ஏவல், பில்லி சூனிய, மந்திர

வேலைகள்-சே! இதெல்லாம் வேண்டாம் என்று அவரது உள்ளம் கூறியது, இந்தச் சூழ்நிலையில் அவனை வளர்ப்பவர்கள் யாரும் இல்லை. இந்தச் சாமியாரே நம்பிக்கைக்கு உரியவர். இவர் ஆண்டவனுக்குச் சமமானவர் என்று நஞ்சம்மாவே சொல்லிக் கொண்டிருந் தாளல்லவா?-என்று நினைத்துக் கொண்டு அவர் பேசினார். ''பாருங்க இன்னிக்கு நான் இங்கே வந்தது, ஏதோ ஒரு யோகம். நான் இல்லாமலிருந்தா நீங்க கல்லேசனைத்தான் கேட்டிருக்கணும். அவன் அனுப்பியிருக்க மாட்டான். அப்ப என்ன செஞ்சிருப்பீங்க?''

''இப்ப நீங்களே வந்திருக்கீங்களே, அந்தப் பேச்சு எதற்கு?''

''சும்மாதான். நான் வராமலிருந்தா நீங்க என்ன செஞ் சிருப்பீங்க? உண்மையாச் சொல்லுங்க.''

''உண்மையாச் சொல்லட்டுமா? பையன் பள்ளிக் கூடத்துக் குப் போறபோது அங்கிருந்தே அவனைக் கூட்டிட்டுப் போயிருப் பேன். யாராவது என்னைத் தடுக்க வந்தா பதில் சொல்லி யிருப்பேன்.''

ஜோசியர் அரை நிமிடம் கண் இமைக்காமல், அவரைப் பார்த்தார். பிறகு எழுந்து போய் அவருடைய கையைத் தட்டிக் கொடுத்தபடி சொன்னார். ''சபாஷ், பலே நீங்கதான் ஆம்பளை, அழைச்சிட்டுப் போங்க. கல்லேசங்கிட்டே நான் சொல்லிக்கறேன்''-இவ்வாறு கூறிவிட்டு அவர் வீட்டிற்குப் புறப் பட்டார்.

மாதேவய்யா சாப்பிட்டு முடித்து, சிறிய உறக்கம் உறங்கி விட்டுச் சற்றுத் தாமதமாகவே ஜோசியரின் வீட்டிற்குச் சென்றார். அதற்குள் கண்டி ஜோசியர் தன் மகனிடம் பேசி அவனை ஒப்புக் கொள்ளச் செய்தார். கண்டி ஜோசியர் தானே பள்ளிக்குச் சென்று சர்டிபிகேட் வாங்கி வந்தார். மறுநாள் காலையில் அவனுடைய துணிமணிகளை எல்லாம் மூட்டை கட்டி மாதேவய்யா தனது தோளின் மீது வைத்துக் கொண்டார். ''கண்ணு, தாத்தா, மாமா, அத்தை எல்லோர் காலையும் தொட்டு நமஸ்காரம் செய்''-என்று மாதேவய்யா விசுவனிடம் கூறினார். பையன் நமஸ்காரம் செய்தபொழுது கமலா பாறை யைப் போல் பேசாமல் நின்றாள். கல்லேசனுடைய கண்களில் நீர் சுரந்தது.

முதல்நாள் மாலையிலிருந்தே கண்டி ஜோசியருக்கு மனம் சரி யாக இருக்கவில்லை. இரவு சாப்பிடவில்லை. இரவு மாதேவய்யா

வும் அவரும் ஒரே திண்ணையில் படுத்திருந்தாலும் அவர் அய்யா விடம் ஏதும் பேசவில்லை. இருவரையும் வழியனுப்ப அவர், கடிவாளம் பூட்டிய குதிரையை நடத்தியவாறே கல்லேசனுடன் ஏரியின் அடுத்த கரை வரை வந்தார். ஊர் எல்லையைத் தாண்டியதும் அவர் மகனிடம், ''கல்லேசா! நீ திரும்பிப் போ நான் அரைமைல் தூரம் இவங்க கூட போயிட்டு வர்றேன்'' என்றார்.

திரும்பிச் செல்லுமுன் கல்லேசன் மாதேவய்யாவிடம் கூறினன். ''நான் இவனைக் கொஞ்சம் கண்டிச்சு வைச்சிருந்தேன். இவனுக்குப் போக்கிரித்தனம் அதிகம். கண்டிச்சு வைன்னு நஞ்சம்மாவே எங்கிட்டே சொல்லியிருந்தா இல்லாட்டா. பையன் கெட்டுப்போவான். நீங்களும் மெரட்டியே வைச்சிருங்க.''

''நியாயம், நியாயம். ஆயிரம் அடி போட்டாத்தானே கல் சிவலிங்கமா மாறுது? ஆமா சரியான எடத்திலே பக்குவமா அடிக்க வேணும். நீங்க செஞ்சது நல்லதுதான்''—என்று மாதேவய்யா கூறிய பொழுது, கல்லேசன் தலையைத் தாழ்த்திக் கொண்டான். பிறகு பேசாமல் அவன் புறப்பட்டுச் சென்றான்.

மூன்று பேரும், மறுபடி நூறு தப்படி சென்றபின் அய்யா கண்டி ஜோசியரிடம், ''நீங்க போங்க, நாங்க வேகமா நடந்து போறோம்'' என்றார்.

ஏதோ சொல்வதற்கு ஜோசியர் முயன்ற போதிலும், வார்த்தைகள் அவர் வாயிலிருந்து வெளிவர வில்லை. அவர் குதிரையைப் பிடித்தபடி நின்றார். அருகிலேயே அய்யாவும் நின்றார். அவர்களுக்கிடையே அவர்களது இடுப்பு உயரத்தில் விசுவன். ஐந்து நிமிடங்கள்யாரும் பேசவில்லை. ''நாங்க புறப்படலாமா?'' என்று அய்யா கேட்டபின் அவர் சொன்னார். ''இங்கே பாருங்கய்யா, நீங்கதான் ஆம்பளை. நீங்கதான் ஜெயிச்சீங்க.''

மாதேவய்யாவுக்கு ஒன்றும் புரியவில்லை. ''நீங்க என்ன சொல்றீங்க?''

''ஒண்ணும் சொல்லலே. இதை வாங்கிக்கங்க''-என்று சொல்லிக் கொண்டே தன் உள் அங்கியின் 'ஜே'ப்புக்குள் கையை விட்டு நோட்டுக் கட்டு ஒன்றை எடுத்து அய்யாவின் காவிச் சட்டைப் பைக்குள் போட்டார் ''நூத்தைம்பது ரூபாய் இருக்கு. நீங்க இவனை எந்த ஊருக்காவது அழைச்சிட்டுப் போங்க. அப்புறம் எனக்கு ஒரு கடுதாசி போடுங்க. சென்னராயன் பட்டணம், மசூதிக்குப் பின்னல் பேய்வீடு, நாகலாபுரத்து கண்டி ஜோசியர்னு எழுதினாப் போதும்,'' எனக் கூறிக் கொண்டே தனது பெரிய

உடம்பை வளைத்து பேரனின் இரண்டு கன்னங்களிலும் முத்த மிட்டு, அவனது உடம்பு, முகம், முதுகு இவற்றைத் தடித்த தன் உள்ளங்கைகளால் வருடிவிட்டுப் பின்புறம் திரும்பிக் குதிரை மீது ஏறினார். அவரது விழி முனைகளில் நீர் கோத்திருந்தது மாதேவய்யாவுக்குத் தெரிந்தது. பிறகு குதிரையின் அடிவயிற்றைத் தமது காலால் உதைத்து குதிரையைக் கிளப்பிவிட்டு இவர்களைத் திரும்பிப் பாராமல் தனது ஊரை நோக்கிக் குதிரையை விரைவாக ஓட்டிச் சென்றார். விசுவன் அதனுடைய வேகத்தைக் கவனித்தபடியே திரும்பி நின்று விட்டான். சிறிது நேரம் கழித்து மாதேவய்யா அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டு முன்னே சென்றார்.

அவர்கள் அரைமைல் தூரம் நடந்து சென்றார்கள். விசுவன் ஏதோ யோசித்துக் கொண்டிருந்தான், அவனையறியாமலேயே அவனது உதடுகள் எதையோ பேசிக் கொண்டிருந்தன. ''அதென்ன, யோசனை செய்யறே கண்ணு?'' என்று மாதேவய்யா கேட்டார்.

''தாத்தாகிட்டே இருக்கற மாதிரி எனக்கும் ஒரு குதிரை வாங்கித் தர்றீங்களா?''

''அதெல்லாம் நமக்கெதுக்கு?''

''அதை மாதிரி குதிரையைப் பார்த்தா இப்ப தாத்தா ஓட்டின மாதிரி 'கடகட'ன்னு வேகமா ஓட்டிட்டுப் போகணும்னு ஆசையா இருக்கு''

''வேறே என்ன ஆசை இருக்கு?''

''ரொம்ப தூரம் நீந்தணும்னு இருக்கு''

''படிக்கணும்னு ஆசையில்லியா?''

''இருக்கே! என்னோட வகுப்புலே கணக்கிலே நான்தான் மொதல் மார்க்''

''வேறே எதுலே மொதல் மார்க்?'' மாமன் வீட்டிலே உன்னாலே படிக்க முடியலே. இல்லாட்டா எல்லாத்திலுமே மொதல் மார்க் வாங்கியிருப்பேன்னு வாத்தியாரே சொன்னார்''

''இனிமே நீ வேணுங்கற மட்டும் படிக்கலாம். பை நெறைய சிலேட்டு, புத்தகம் வாங்கித் தர்றேன். நட கண்ணு!''

''நம்ம ஊர்லேருந்து எந்த ஊருக்குப் போகலாம்?''

''நான் இன்னும் யோசனை செய்யலே. குப்பிக்கோ, தும்கூருக்கோ போகலாம்''

''அய்யா, எந்த ஊருக்குப் போனாலும் எனக்கு நீந்தி விளையாட ஒரு கொளம் இருக்கணும், ஒவ்வொரு நாளும் யார்கிட்டிருந்தாவது ஒரு குதிரை வாங்கிக் கொடுங்க. உக்காந்துக்கணம்னு ஆசையா இருக்கு''

''ஆகட்டும், பாக்கலாம். வா கண்ணு'' - என்று கூறி அவர் கழுத்தைத் திருப்பி அவனுடைய முகத்தைப் பார்த்தார். உடனே கண்டி ஜோசியரின் நினைவு வந்தது. ஜோசியர் சற்று நேரத்திற்கு முன் ''அய்யா நீங்கதான் ஆம்பளே. நீங்கதான் ஜெயிச்சீங்க'' என்று சொல்லிவிட்டுப் போனார் அந்தச் சொற்களின் முழுப் பொருள் அவருக்கு இன்னமும் விளங்கவில்லை. அதைப்பற்றி யோசித்துக் கொண்டே அவர் முன்னே நடந்து சென்றார்.

4

அன்றே அவர் ராமஸந்திர கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்தார். கங்கம்மா ஊரில் இருக்கவில்லை. மாதேவய்யா மாலையில் தன்னிடம் இருந்த ராகி, பயிறு, மிளகாய் முதலியவற்றை விற்றுவிட்டார். அதன் மூலம் நூற்று இருபது ரூபாய் வந்தது. அதைத்தவிர அவரிடம் நாற்பது வெள்ளி ரூபாய்கள் இருந்தன. கண்டி ஜோசியர் கொடுத்த நூற்றைம்பது ரூபாய் அவரது உள் சட்டையில் இருந்தது. பணத்தை அவர் இடுப்பில் கட்டிக் கொண்டார். அலுமினியப் பாத்திரங்களையும், கம்பளித்துணிகளையும் சுமந்து வர ஒரு ஆள் ஏற்பாடு செய்தார். காலையில் புறப்படுவதற்கு முன்பு விசுவன் கேட்டான். ''என்னோட அம்மா கண்டிப்பா செத்துப் போயிட்டாளா?''

''ஆமா, கண்ணு''

''நான் எங்க வீட்டுக்குள்ளே பாக்கணும்''

''அங்கே எதைப் பாக்கப் போறே?''

''உம் நான் பாக்கணும்''—என்று அவன் பிடிவாதம் செய்தான்.

அந்த வீடு காலியான பிறகு அந்த வீட்டுச் சாவி ஜூண்டே கவுடனின் உறவினரான குருபரஹட்டி முத்தையனிடம் இருந்தது, மாதேவய்யாவுக்குத் தெரியும். முத்தையனை அழைத்துக் கதவைத் திறக்கச் சொன்னார். ஜன நடமாட்டமும், புழக்கமும் இல்லாத காரணத்தினால் வீடு முழுவதும் தூசிபடிந்து, ஒரு வித வாடை அடித்துக் கொண்டிருந்தது. உள்ளே வந்த விசுவன் சமையலறைக்குள் சென்றான். அங்கிருந்து ரேழி அறைக்குள் வந்து இருட்டில் தடுமாறினான். மச்சின்மீது ஏறிப்

பார்த்தான். கடைசியில் உரக்க ''அம்மா, நீ இல்லையா?'' என்று கூவினான், பதிலே இல்லை. கீழே இறங்கி வந்து'' அய்யா நிஜமாவே அம்மா செத்துப் போனாளா?'' என்று கேட்டான்.

கதவைத் திறக்க வந்த முத்தையன் கல்லாகச் சமைந்து நின்றான். ''ஆமா கண்ணு, அம்மா நிஜமாவே செத்துப் போனா''-என்று அய்யா கூறினார்.

விசுவன் தேம்பித் தேம்பி உரக்க அழ ஆரம்பித்தான். அவனை அணைத்து, சமாதானம் செய்த பிறகு மாதேவய்யா சொன்னார்: 'சரி, நட, போகலாம்.''

அவன் பேசாமல் பின்னே நடந்தான். அலுமினியப் பாத்திரங்களையும், கம்பளித் துணியுள்ள பையையும் தலையின் மீது சுமந்து கொண்டு கூலிக்கார ஆள் முன்னே நடந்தான். தன் தம்பூரா, தாளக்கட்டை இவைகளைப் பிடித்துக் கொண்டு அய்யா நடந்தார். பட்டினியால் மிகவும் இளைத்துப் போயிருந்த தால் அவருக்குப் பின்னால் நடந்து கொண்டிருந்த விசுவனை ஊர்க்காரர்கள் எவரும் அடையாளம் கண்டு கொள்ள வில்லை. தான் அந்த ஊரை விட்டு வெளியேறுவதைப் பற்றி அய்யா யாரிடமும் சொல்லியிருக்கவில்லை. ஏன், எதற்கு என்று எல்லோரும் விசாரிப்பார்கள். எல்லாவற்றையும் விவரித்து எப்படிச் சொல்ல முடியும்?

கம்பனகெரெ நோக்கிச் செல்லும் பாதையில் நடந்து சென்று பஸ் செல்லும் சாலையை அடைய வேண்டும். சாமான்களைத் தூக்கிக் கொண்டு ஆள் மிகவும் முன்னே சென்று கொண்டிருந்தான். அவனது வேகத்திற்கு ஈடு கொடுக்க முடியாமல் அய்யா பின்தங்கி விட்டார். அவர் கையைப் பிடித்துக் கொண்டிருந்தாலும் விசுவன் அய்யாவை விட அதிகமாக தன்னைப்பற்றிய சிந்தனையுடன் பேசாமல் தலை குனிந்தவாறு நடை போட்டுக் கொண்டிருந்தான். அவர்கள் ஊரைக் கடந்து ஒரு மைல்தூரம் வந்து விட்டார்கள். வழியில் ஒரு மரத்தின் கீழ் ஒரு சிறிய ராகி மூட்டையைத் தலைக்கு அடியில் வைத்துக் கொண்டு சென்னிகராயர் படுத்துக் கொண்டிருந்தார். வாய் நிரம்ப இருந்த புகையிலைச்சாறு ஒழுகிவிடாதவாறு வாயை இறுக மூடிக் கொண்டு மல்லாந்து படுத்துக் கொண்டிருந்தார் அவர். அய்யாவும் அவரைப் பார்த்தார். அவர்களிருவரும் நடக்கும் சந்தடியைக் கேட்டு சென்னிகராயர் எழுந்து உட்கார்ந்தார். மாதேவய்யா தானாகவே அவரிடம் பேச்சுக்கொடுக்கவில்லை. அருகில் இருந்த மதகுக்குப் பின்னால் தண்ணீருக்காக கங்கம்மா போயிருக்கலாம். அவள் பார்த்தால் ''என்னோட பேரனை

எங்கே கூட்டிக்கிட்டுப் போறிங்க?'' என்று கேட்பாள் என நினைத்து மாதேவய்யா வேகமாக நடை போட்டார். சென்னிக ராயருடைய வாய் நிரம்ப புகையிலைச்சாறு இருந்ததால் அவர் வலியப் பேச்சை ஆரம்பிக்க முடியவில்லை.

''என்னோட அப்பாதானே அது?'' என்று விசுவன் உடனே கேட்டான். சென்னிகராயருக்கு மகனுடைய அடையாளம் தெரிந்து விட்டது. பேச வேண்டுமென்று அவருடைய வாய் துடித்தது. ஆனால் அப்பொழுதுதான் சாறு ஊறிக் கொண் டிருந்த புகையிலையைத் துப்பி விட்டால், வேறு புகையிலை அவ ரிடம் ஒரு சிறிய துண்டு கூட இருக்கவில்லை. என்ன செய்வது என்று அவர் தீர்மானிப்பதற்குள் அவர்கள் முப்பது, நாற்பது தப்படிகள் முன்னே சென்று விட்டனர். விசுவன் திரும்பித், திரும்பிப் பின்னால் பார்த்துக் கொண்டே நடந்தான்.

''அந்தப் பக்கம் பார்க்காதே, பேசாமல் நட கண்ணு''- என்று மாதேவய்யா சொன்னார்.

சென்னிகராயரால் வாயில் உள்ள சாற்றைத் துப்ப முடிய வில்லை. ஆகையால் அவரால் பேச முடியவில்லை. 'இந்தச் சாமியார் என்னைப் பார்த்தும் கூடப் பேசாமல் போனானே! அவன் இன்னொரு தடவை அகப்படட்டும், நன்றாகக் கேட்டு விடுகிறேன்'-என்று அவருடைய மனம் நினைத்துக் கொண் டிருந்தது. அவர்கள் இருவரும் எதிரே இருந்த மேட்டைக் கடந்து, அப்பால் இறங்கிச் சென்று விட்டதால் அவருடைய பார்வையிலிருந்து மறைந்து விட்டனர்.

